Vol XXV 1950—1951.



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

உ

இருபத்தைந்தாம் சிலம்பு

[illegible]. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளார். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
லிமிடெட்.

வள்ளுவா ஆண்டு
௧௯௮௧—௧௯௮௨

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.
Thirunelveli. Madras.

 [Price Rs. 6-0-0

'செந்தமிழ்ச் செல்வி'

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்

## EDITORIAL BOARD MEMBERS

# உள்ளுறை

பக்கம்


அடிகளாரின் ஆற்றொணு இறுதி ௬0

அடிகளாரின் சில கருத்துக்கள் ௧௧௮

அடிகளாரின் பிரிவும் தமிழகத்தின் கடமையும்
—வித்துவான், சுந்தரராசன், சென்னை ௬௫

அடிகளார் பொன்மொழிகள் ௬௩

அந்தணன் புலவன்—புலவர், சி. சுப்பிரமணியன், கோவை ௧௨௯

அரவிந்தர் மறைவு—செல்லூர்க்கிழார் ௨0௬

அருள் பத்து—சித்தாந்த பண்டிதர், புலவர்,
ப. இராமநாதபிள்ளை ௧௭௯, ௫௮௩

அற ஆட்சிக்கு அன்புமுறை—கௌசல்யா சோமசுந்தரம் ௩௪௫

அறன்வலியுறுத்தல் (இசைப்பாடல்)—தி. ச. வாசுதேவன் ௫௮௨

அறிஞர் திரு. ஜார்ஜ் பெர்னட்ஷா
—சித்தாந்த பண்டிதர், புலவர், ப. இராமநாதபிள்ளை ௧௨௧

அறிவு—செல்லூர்க்கிழார் ௫௪0

அன்பு—செல்லூர்க்கிழார் ௧௫௨

அன்னையின் ஆணை (கவிதை)—முத்தமிழ்மணி ௪௮௭

ஆண்மைச் சர்தார்
—சித்தாந்த பண்டிதர், புலவர், ப. இராமநாதபிள்ளை ௨0௯

இது தகுமோ? (கவிதை)—புதுவை, முத்துகண்ணன் ௪௭௪

இந்தி நல்லெண்ணத் தூதுக்குழு—இனியன் ௧௬௪

இரங்கல் (கவிதை)—செ. வேங்கடராமச் செட்டியார்,
S. V. O. கல்லூரி, திருப்பதி ௨௯௮

இருபத்தைந்தாவது ஆண்டு—ஆசிரியர் ௧

உடையார் கோவில் கல்வெட்டுக்கள்—வித்துவான்,
வை. சுந்தரேசவாண்டையார், திருவையாறு ௪௮௯

உமாபதி தேவரான ஞானசிவ தேவர்—சித்தாந்த கலாநிதி,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை ௩௬௧

எண்பெரு நினைவாற்றல்—இனியன் ௩0௨

எதிரிலிசோழச் சம்புவராயன்—சித்தாந்த கலாநிதி,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை ௨௧௭

எது வேண்டும்? (இசைப்பாடல்)—முத்தமிழ்மணி ௩௪௭

எந்தையாரின் இறுதிநாட்கள்—சித்தாந்த தினகரன்,
வித்துவான், மறை. திருநாவுக்கரசு ௧0௩

எந்நாளோ? (கவிதை)—நாஞ்சில், கா. கணபதி ருஙஉ

எம்முன் எழுந்தருளாய் (கவிதை)
—தென்கருணையூர், வேல்-இளவேந்தன் ஙகக

எழுத்து ஆக்கம்—மயிலை, சீனி. வேங்கடசாமி ஙஙக

எனது கதிர்காமச் செலவு
—செல்வி. எஸ். கமலாதேவி, இரத்தினபுரி ஙஅக

ஐந்திறம்—கணியர், டாக்டர். இ. மு. சுப்பிரமணியபிள்ளை ககசா

ஓடங்கள் ஆற்றில் ஓடுகின்றனவே!—வித்துவான்,
கோ. வே பெருமாள், கோபால சமுத்திரம் ருஅஅ

கடவுள்—செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை உஅஅ

கண்ணுதலைத் தொழும் அன்பு
—தமிழாசிரியர், சுந்தரகுமரன், புதுவை ஙங

கதிரவனும் காலநிலையும்
—சு. குமாரசாமி ஆச்சாரி, பி. ஓ. எல்., மயிலம் உஎரு

கம்பநாடர் காலம்—தி. பொ. பழனியப்ப பிள்ளை, பி.ஓ.எல் கருங

கலைத் தாய் (கவிதை)—புதுவை, முதுகண்ணன் ருஉசா

கலையின் வைப்பே! (கவிதை)—புதுவை, முதுகண்ணன் ருசாஅ

கவிமணி கண்ட பண்டிதமணி—ஆசிரியர் ருசா௦

"களித்தேன்!" என்றாள் (கவிதை)—முத்தமிழ்மணி ருக

காண்பதெங்கே? (வெண்பா)—இனியன் கக

குடியரசுத் திருநாள் (கவிதை)
—செல்லூர்க்கிழார், செ. ரெ இராமசாமி பிள்ளை உஅ௦

குமரகுருபரர் நல்கும் சமயவாழ்வு—சித்தாந்த கலாநிதி,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை க௯

குறியா இழப்பு—ஆசிரியர் உசா௦௧

குற்றாலக் கொழுந்தமிழ்
—செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை ஙசாங

கையறுநிலை (கவிதைகள்) க௦ரு

கோயிலும் குளமும்—இராவ்பகதூர்,
சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல். உஉ

சங்க இலக்கியங்களில் இல்லையா?
—சு. குமாரசுவாமி ஆச்சாரி, பி. ஓ. எல். மயிலம் சஅக, ரு௦ரு

சங்ககாலத்துக் காவிரிப்பூம்பட்டினம்
—மயிலை, சீனி. வேங்கடசாமி சஉ௯

சங்ககாலத்து மதுரை—மயிலை, சீனி. வேங்கடசாமி கஙங

'சித்தாந்த வித்தகர்' மணிவிழா—சித்தாந்த பண்டிதர்,
புலவர், ப. இராமநாத பிள்ளை ககசாச

சித்திரைப் பெண் (கவிதை)—முத்தமிழ்மணி ஙஅஅ

சில பேச்சு வழக்குகள்—பி. ஊர்துசாமி, பி. எஸ்.ஸி. ஙஎக

செந்தமிழ்ச் செல்வி (கவிதை)—புலவர் 'அரசு' சக

செய்திகளும் குறிப்புக்களும்—ரு௩, க௨0, க௬0, ௨0எ, ௨ருசு, ௩0௩, ௩சகூ, ௩கூஅ, சசசு, சகூச, ருச௩; ருஅக

"செல்லரித்தது"—திரு. சி. மகாலிங்கம் ச௨0

சேலங் கல்லூரித் தலைவர் திரு. அ. இராமசாமிக் கவுண்டர் அவர்கள் —க சொ. ௩

சேலங் கல்லூரித்தலைவர் மறைவு—(ஆறுதலுரைகள்) க௨

சொல்லாராய்ச்சிக கட்டுரைகள், மதிப்புரை மறுப்பு —ஞா. தேவநேயன் சருஎ

தமிழகம் வடித்த கண்ணீர் அகூ

தமிழனும் நீ கொலோ? (கவிதை)—நாஞ்சில், கா கணபதி சகூ௩

தமிழில் தாவரப்பெயர்—நா. நல்லொளியன் கசச

தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் —கா. அப்பாத்துரை எம். ஏ., எல். டி. ருசஅ

தமிழ் எழுத்து மாற்றம்—சித்தாந்த பண்டிதர், புலவர், ப. இராமநாத பிள்ளை ருசரு

தமிழ்க் காதல் (இசைப்பாடல்)—முத்தமிழ்மணி ச௨ரு

தமிழ்ச்சொல் (கவிதை)—கா. கணபதி ௨௨ரு

தமிழ் நெடுங்கணக்கு-பெயரும் எண்ணும் —இராவ்சாகிப், சைவப்புலவர், டாக்டர், தி. இரா அண்ணாமலைப்பிள்ளை L C.P S., L.M.S S A., (Lond.) ௨௩௩, ௨அக, ௩அகூ, ச0கூ, ருசுக

தமிழ்ப்பேராண்மைச் சிதம்பரனார்—சித்தாந்த பண்டிதர், கழகப் புலவர், ப. இராமநாத பிள்ளை ௩ரு௩

தமிழ்மலை சாய்ந்தது (கவிதை) —புத்தனேரி, ரா. சுப்பிரமணியன் க0ச

தமிழ்மொழி (கவிதை)—கா. கணபதி ௨அ௭

தமிழ் வளர்ச்சிக் கழக நான்காவதாண்டு விழா—கழகப்புலவர், சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை சசகூ, சகூஎ

தரும சங்கடம—வித்துவான், ஆ. சிவலிங்கனார் ச௨

தனிப்பெரும் புலவர் சலசலோசனர்—சித்தாந்த பண்டிதர், புலவர், ப. இராமநாத பிள்ளை ௨ருஎ

திருக்களிற்றுப்படியார் ஆசிரியர் —தி. பொ. பழனியப்ப பிள்ளை, பி. ஓ. எல். ௩௨சு

திரு. புகழ். முத்துசுவாமிப் பிள்ளை—இனியன் ௨ரு௩

திருப்பாவை ஆராய்ச்சி—பேராசிரியர், கா. ர. கோவிந்தராச முதலியார் ௨சரு, சகரு

தேவாரப் பண் ஆராயச்சி
—புத்தனேரி, ரா சுப்பிரமணியன் உருரு
தேவாரமும் பண்ணும்—தணிகைமணி, இராவ்பகதூர்,
திரு. வி. எஸ். செங்கல்வராய பிள்ளை, எம். ஏ. உநசு
நாஞ்சில் வள்ளுவன்—வித்துவான், கு. நாராயணன் ருகஎ
நாவன்மைமிக்க சி. ஆர். இரெட்டி—சித்தாந்த பண்டிதர்,
கழகப் புலவர், ப. இராமநாத பிள்ளை நருஎ
நான் கண்ட பெருந்தமிழன்—மயிலை, சீனி. வேங்கடசாமி உ0ந
நிலைபெற்ற தமிழ்மலை ருஎ
நுண்ணறிவு—இனியன் கருஅ
நூலகம்—இனியன் ந00
நெருஞ்சி—செல்லூர்க்கிழார், செ ரெ. இராமசாமி பிள்ளை
சசுசு, ருஉக
பட்டர்க்கை 'இ' விருதி—பண்டித புலவ வித்துவான்,
ஞா. தேவநேயன், எம் ஏ, ருசுக
பணி மதி! (கவிதை)
—வித்துவான், புதுவை, முதுகண்ணன் உ0ரு
பண்பு—செல்லூர்க்கிழார் ருநக
பதிற்றுப்பத்து
—வித்துவான், மு: த வேலாயுதனார், புதுவை உசுரு
பம்மல் விசயரங்க முதலியார்—சித்தாந்த பண்டிதர்,
கழகப்புலவர், ப இராமநாத பிள்ளை ச0எ
பரிமேலழகர் உரை—செல்வி எஸ். கமலாதேவி ருஉஎ
பாணர் கைவழி
—திருமந்திரமணி, துடிசைகிழார், அ. சிதம்பரனார் கசுந
பாணர் கைவழி மதிப்புரை (மறுப்பு)
—புலவர், ஞா. தேவநேயப்பாவாணர் உஉஎ, உஅசு
பாண்டியன் சடில பராந்தகன்—சித்தாந்த கலாநிதி,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை ருருந
பாரதிதாசனுர் வெள்ளணிவிழா
—செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை சசச
புலவர்ப் போற்றல்—சித்தாந்த பண்டிதர்,
புலவர், ப. இராமநாத பிள்ளை ந0ரு
புலவர் மாணவர் தேர்வுத் தகுதி விளக்கம்
—தென்னிந்திய தமிழ்ச் சங்கம் சசக
பெயர் அணி விழா அழைப்பு (கவிதை)—தி கலைமணி நநசு
பெரும்புலவோர் பரிவு எரு
பேரறிஞர் பழநியப்ப பிள்ளை—இ. ஆறுமுகம், எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர், திருவேங்கடவன்
கீழ்க்கலைக்கலலூரி, திருபபதி நஉக

பொங்கற் புதுநாள் வாழ்த்து (கவிதை)
—செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை உ௩அ
பொங்குக பொங்கல்! (கவிதை)—முத்தமிழ்மணி உசச
பொது நெறி—இனியன் ௩0௧
பொன்மொழிகள்—மறைமலையடிகள் உ0உ
போமோ துன்பம்? (கவிதை)—புதுவை, முது கண்ணன் உஉ௬
போர் நிகழாமற் காத்த புலவர்
—சு அ. இராமசாமிப் புலவர் ௧௪
மதிப்புரை ௧௫௯, உ0அ, ௩௫௩, ௫௪உ, ௫௯உ
மறைமலை தந்த செல்வம்—ச சொ. ௧௧௩
மறைமலையடிகள்—செய்தித்தாட் குறிப்புக்கள் உ0௩
மனோன்மணீயம்—தமிழாசிரியர், A. மகாலிங்கம ௪எ௫
மாலைப் பொழுதிலே
—செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை ௧அ௫
முத்தமிழ்—பன்மொழிப்புலவர்,
கா. அப்பாத்துரை எம்.ஏ., எல்.டி. ௪௬௫
முத்தமிழ்விழா வரவேற்புரை—திரு. கா. பொ. இரத்தினம்
அவர்கள், பி.ஏ., (ஆனர்ஸ்), பி. ஓ. எல். ௩௩எ
முதுதமிழ்ப்புலவர், மு நல்லதம்பி அவர்களின் பெரும் பிரிவு
—வீர சோம. வீரப்ப செட்டியார் ௫௧௩
முருகு—செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை உஅ
மெய்யுணர்வுச் செல்வர் காஞ்சி, நாகலிங்க முனிவரர்
—சித்தாந்த பண்டிதர், புலவர், ப. இராமநாத பிள்ளை ௪0௧
மேற்புலத்தறிஞர் கண்ட தமிழகம்
—புதுவை, வரத. வீரப்பன் ௫௩௩, ௫எ௫
மொழியாராய்ச்சி—அ. நக்கீரர் ௩௧௩
வசந்த குசுமாகர மாத்திரை—மயிலை, சீனி. வேங்கடசாமி ௫௪௧
வரவேற்பு வாழ்த்திதழ்
—சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் உஎ௩
வளமிகு செல்வம்—நாஞ்சில், கா. கணபதி ௫௫உ
"வாழ்க!" என்றான் (கவிதை)—முத்தமிழ்மணி ௧௯௯
வாழ்க்கைப் பயன்—இனியன் ௪0
விண்ணப்பம்—தென்இந்திய சித்த வைத்திய சங்கம் ௪௩அ
விலங்குகளின் தோற்றம்—N. K. வேலன் ௪௯

## படங்கள்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | காஞ்சி நாகலிங்க முனிவரர் | ௪௦௧ |
| 2. | சங்க காலத்துக் காவிரிப்பூம்பட்டினம் | ௪௨௬ |
| 3. | சங்ககாலத்து மதுரை | ௧௫௫ |
| 4. | சர்தார் வல்லபாய் படேல் | ௨௦௬ |
| 5. | சித்தாந்த வித்தகர் குமாரவேல் பிள்ளை | ௧௬௧ |
| 6. | சி. மு. கோவிந்தராச முதலியார் | ௧௨௮ |
| 7. | தனிப்பெரும் புலவர் சலசலோசனர் | ௨௫௭ |
| 8. | தி. ப. சுப்பிரமணிய தாஸ் அவர்கள் | ௫௦௨ |
| 9 | தி. பொ. பழனியப்ப பிள்ளை | ௨௬௭ |
| 10. | திரு. அ. இராமசாமிக் கவுண்டர் அவர்கள் | ௧ |
| 11. | திரு. ப. சிதம்பரம் பிள்ளையவர்கள | ௫௫௫ |
| 12. | பேரறிஞர் பெர்னார்ட்ஷா | ௧௨௧ |
| 13. | பேராசிரியர் மறைமலையடிகள் | ௫௭ |
| 14. | மறைத்திரு. மறைமலையடிகளார் (பல்வேறு படங்கள்) | ௬௪ |



திரு. அ. இராமசாமிக் கவுண்டர் அவர்கள்,
எம்.ஏ., எல்.டி.

11—7—1899 :: 19—8—1950




சிலம்பு உரு | திருவள்ளுவர் ஆண்டு க௯அக, ஆவணி | பரல் க
செப்டம்பர், 1950

# இருபத்தைந்தாவது ஆண்டு

நம் 'செந்தமிழ்ச் செல்விக்கு' இருபத்தைந்தாவது ஆண்டு தொடங்குகின்றது. இருபத்துநான்கு ஆண்டுகள் தமிழ் வளர்ச்சியும், சிவநெறி வளர்ச்சியுமே சிறந்த குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றி வந்துள்ள நம் செல்வி மீண்டும் அதே குறிக்கோளுடன் தமிழர் நல்னுக்கேற்ற வகையில், புதிய புதிய நுண்ணுணர்வூட்டும் கட்டுரைகளும், கருத்துரைகளும் கொண்டு வெளிவருகின்றது.

இதுகாறும் தங்கள் அரிய பெரிய ஒத்துழைப்பால் எம்மை ஊக்கிவரும் உறுப்பினர்களாந் தமிழ் அன்பர்கட்கும், தம் அரிய இனிய செவ்விய கருத்துரைகளால் செல்வியைப் பேணிவரும் தமிழ் அறிஞர் பெருமக்களுக்கும், எம் உளமார்ந்த நன்றியுரியது. இனியும் மேன்மேலும் அவர்கள் தம் ஆதரவை நல்கித் தமிழ் வளர்ச்சிக்கு உதவுவார்கள் என்ற நம்பிக்கை யொன்றே துணை யாகக்கொண்டு, செல்வி தொடர்ந்து பணியாற்றிவரும்.

இந்தியப் பெருநாடு ஆங்கிலப் பிடிப்பினின்றும் நீங்கி முழு உரிமை பெற்றுவிட்ட இக்காலத்தில், ஒவ்வொருவரும் தம்தம் தாய் மொழியைப் பேணிப் பாதுகாக்க ஆவனசெய்தல் வேண்டு

மென்ற அவாவும், ஊக்கமுங்கொண்டு முனைந்து செயலாற்றும் இந் நாளில், தமிழன்பர்களனைவரும், செந்தமிழ் நலன் கருதிப் பணியாற்றிவரும் செல்விக்குத், தம்மாலான உதவியனைத்துந் தந்து உதவி, நம் தாய்மொழிக்கு ஆக்கம்புரிய வேண்டுகின்றோம்.

செந்தமிழ்ச் செல்வியின் ஆசிரியர் குழுவில் தம் இடையறு அலுவல்கட்கிடையேயும் தமிழார்வத்தால் பங்கெடுத்துக் கொண்டு பணியாற்றிவரும் அறிஞர் பெருமக்கள் பலர்க்கும் நன்றிபாராட்டுங் கடமையுடையோம்.

நம் பண்டைச் சான்றோர் கனிவுமிகு தனித் தமிழ்ச் செய்யுட்கள் பொதுளிய நூற்களையும், ஈடும் எடுப்புமில்லா அன்னவர் தம் பீடுறு நடையினையும் பின்பற்றி நம் தமிழ்நாட்டில் மெய்ம்மையாக உலவும் வெளியீடுகள் ஒரு சிலவேயாம். அவற்றுள் நம் செல்வியும் ஒன்றென்பது யாவரும் அறிந்ததே.

நம் தமிழ்மொழியானது கலை நிலையங்களில் முதன் மொழியாகவும், தமிழ்நாட்டு அரசியல் மொழியாகவும், சீரும் சிறப்பும் பெற்று விளங்கும்வண்ணம் பல்லாற்றானும் வளம்படுத்த வேண்டுவது, தமிழ்மக்கள் அனைவர்தம் கடமையாகும். அதற்கெனவே பணியாற்றிவரும் நம் செந்தமிழ் செல்விக்கு உறுப்பினர் பல்கத் துணைபுரிந்தும் தமிழ் வளர்ச்சிக்கேற்ற பல கட்டுரைகளும், கருத்துரைகளும் வழங்கியும், வேறு பலவகையானும் உதவுமாறு செந்தமிழ்ப் பெருமக்களனைவரையும் வேண்டுகின்றோம்.

—ஆசிரியர்.

சேலங்கல்லூரித் தலைவர்

# திரு. அ. இராமசாமிக் கவுண்டர் அவர்கள்

எக்காலத்தும் மக்கள் பலர் பிறக்கின்றனர். பிறந்து வாழ்கின்றனர்; மறைகின்றனர். அவர்கள் வாழ்வும் பெயரும் அவர்கள் வழியினராலேயே காலப்போக்கில் மறந்துவிடப்படுந் தன்மையன ஆகிவிடுகின்றன. ஆனால், அவர்களிடையே ஒருசில அறிஞர்களும் தோன்றுகின்றனர். அவர்கள் தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்கின்றனர். தந்நலன் கருதாது, பிறர் நலன் சமுதாய நலன் கருதி அயராது அல்லும் பகலும் உழைக்கின்றனர். அவர்களின் ஆன்ம ஒளி அனைவர் உளங்களிலும் கவிந்து நின்று அனைவருக்கும் வழிகாட்டுகின்றது. ஒவ்வொருவரும் அவர்களைத் தம்மவர் என எண்ணுகின்றனர். அவர்கள் அறிவுரைகளைத் தம் உள்ளுணர்வின் முடிபு என ஏற்று நடக்கின்றனர். இத்தகைய பெருமக்கள் மறைந்தனர் எனில், ஒவ்வொருவரும் தம்மைத்தாமே இழந்து பாழ் நிலையடைந்து விட்டாற்போன்று கலங்குகின்றனர்; உளந்துடிக்க உயிர்சோர நின்று வெதும்பிக் கண்ணீர் பொழிகின்றனர்; மறைந்தாரின் ஆன்ம ஒளியும், அறிவுரைகளும், குறிக்கோள் நிறைந்த பெருவாழ்வும் பரவி நின்று நெடுக வழிகாட்டுமேனும், அவர்கள் இழப்பை மக்கள் அனைவரும் தாங்கொணாது கலங்குகின்றனர். நெஞ்சு தடுமாறுகின்றனர்; கண்ணீர் சிந்துகின்றனர்.

சேலங் கல்லூரித் தலைவர், திரு. இராமசாமிக் கவுண்டர் அவர்கள் மறைந்தாரெனச் செய்தித்தாளில் கண்டஞான்று ஒவ்வொரு தமிழர் உள்ளமும் அவ்வாறுதான் கலங்கிச் சோர்ந்தன. தமிழ் நாட்டில் தமிழர்க்கென வாழ்ந்த அப்பெரியார் திடுமென நெஞ்சடைப்பால் மறைந்தாரென்ற செய்தி ஒவ்வொருவர் உளத்திலும் சம்மட்டிகொண்டடிப்பது போன்று கொடுந்துயர் தந்தது. நிலையற்ற இவ்வுலகப் போக்கில் பிறந்தாரனைவரும் இறப்பது உறுதியெனினும் சிறந்த பேரறிஞர் பொதுவாழ்விற்கென உழைத்தலொன்றே கடனென வாழ்ந்த இராமசாமிக் கவுண்டரவர்கள் மறைவு அனைவரையும் கலக்கமடையச் செய்கின்றது. ஈடும் இணையுமற்ற அவர்களின் இடத்தில் இன்னொருவரைப் பெறத், தமிழகம் எத்தனை காலங் காத்திருத்தல் வேண்டுமோ வென எண்ணுந்தோறும் அவர்களை இழந்துவிட்ட துன்பம், அளவுகடந்து ஈடுசெய்தற்கியலாததாகத் தோன்றி, நம்மைப் பெருந்துன்பில் ஆழ்த்துகின்றது.

பொன்னிறங்கலந்த மேனி, புன்முறுவல் தவழும் இன்முகம், தாயினுங் கனிவு காட்டும் இன்மொழி, இத்தனையும் நினைக்க நினைக்க நெஞ்சம் வேகின்றது. ஆங்கிலங்கற்றுப் பேராசிரியராகக்—கல்லூரித் தலைவராக—வாழ்ந்து வந்த அவர்கள், தமிழரென வரும் ஒவ்வொருவரிடமும் காட்டிவந்த உளம் நிறைந்த அன்பும், அவர்களுக்கு விருந்தளித்து அறிவுரை தந்து அளவளாவி மகிழும் பண்பும், எண்ண எண்ண நம்மை நாமே இழந்து நின்றாற்போன்ற துயர் தோன்றி வருத்துகின்றது. சேலம் என்ற எண்ணத்தோடு இணைந்து நம் கண்முன் தோன்றி இதுகாறும் மகிழ்வித்துவந்த பெரியார் அவர்கள் மறைந்து விட்டனர். சேலஞ் செல்லும்பொழுதே இழத்தற்கரிய செல்வத்தை இழந்தாற்போன்ற பாழ்நிலை தோன்றித் தமிழரனைவரையும் வருத்துகின்றது. சேலங் கல்லூரியினைக் காணும்போதோ அதனோடு இணைந்து விளங்கிய பேரொளி மங்கிவிட்டதே யென மனம் மயங்குகின்றது. அவர்கள் வீட்டை நெருங்கும்போது சொல்லவியலாத தளர்வால் உள்ளமும் உடலும் மெலிவடை

வெகுதொலைவிலிருந்து சில சில பொழுதுகளில் நேரிற் காணும் பேறும், அவர்கள் தன்மையைச் செவியாற் கேட்டறிந்து அவர்கள்பால் அளவற்ற அன்புங்கொண்டார்க்கே பொறுத்தற்கியலவில்லையெனின், அவர்களோடு வாழ்ந்து வந்த சேலம் மக்களுக்கும், அவர்கள் இல்வாழ்க்கைத் துணைவியாருக்கும், அவர்கள் தம் குடும்பத்தினருக்கும் ஆறுதல் கூறி யாற்றுவதெங்ஙனம்? ஒருமுறை கண்டார்க்கே உளம் விட்டு மறையாத அவர்களின் இன்முகமும் புன்னகையும் இணைபிரியாது வாழ்ந்து வரும் இல்லத்தினரால் எளிதில் இழத்தற்குரியனவா? தோன்றாத் துணையாயிருந்து வழிகாட்டும் வண்ணம் மறைந்த பெரியாரின் ஆன்மா நம்மிடையே என்றும் பேரொளி வீசிக்கொண்டிருக்கும் என்ற எண்ணமொன்றே ஒருவாறு நம்மனைவருக்கும் ஆறுதல் தருகின்றது.

வடார்க்காடு மாவட்டத்தின் திருப்பத்தூருக்கு அடுத்துள்ள மாடப்பள்ளியெனுஞ் சிற்றூரில் 11-7-1899-ம் ஆண்டு திருவாளர் அநுமந்தராயக் கவுண்டர் அவர்களுக்கும், அங்கம்மாள் அம்மையார் அவர்கட்கும் மூத்தன் மகனாகத் தோன்றியவர் நம் இராமசாமிக் கவுண்டர். ஒவ்வொரு வீட்டிலும் முதல் மகவு, அதிலும் ஆண்மகவென்றால் பெரிதும் சீருஞ்சிறப்பும் நிறைந்ததாக வளர்க்கப்பட்டு வருதல் இயல்பல்லவா? நம் இராமசாமியாரும் பெற்றோரும் மற்றோரும் களிக்கும் வண்ணம் குழந்தைமையால் அனைவருக்கும் மகிழ்வளித்து வளர்ந்துவந்தனர்.

இராமசாமியாரின் பின் தோன்றல்களாகத் தங்கையார் ஒருவரும், தம்பியாரொருவரும் தோன்றினர். தந்தையார் தொழிலிற் சிறந்த உழவுத்தொழிலாற்றித் தம் நிலபுலங்களுடன் வாழ்ந்து வந்தனர். தம் இளமக்கள் இன்முகமும், செம்மை வளர்ப்பும் கண்டு கண்டு மகிழ்ந்துவந்தனர் பெற்றோரிருவரும்.

மாடப்பள்ளியில் தக்க பள்ளி, அக்காலத்து இன்மையின் அடுத்திருந்த திருப்பத்தூருக்குச் சென்று கல்வி கற்றுவந்தார் நம் இராமசாமியார். திருப்பத்தூர் நகராட்சி உயர்நிலைப் பள்ளியிலேயே பள்ளியிறுதி வகுப்புவரை கற்றுத் தேர்ந்தனர். உயர்நிலைப்பள்ளியிற் பயின்று வருங்காலத்தே தமிழார்வம் மிக்கவராக விளங்கினார். கணக்கே அவர் விருப்ப பாடமாக எடுத்தவரெனினும் தமிழ்ப்பற்றும் தமிழார்வமும் அவரிடம் மிகுதியாக வளர்ந்துவந்தன.

இராமசாமியாருக்குப் பன்னிரண்டு பதின்மூன்றும் அகவையிலேயே வில்லிபாரதத்தின் விருத்தச் செய்யுட்களைப் பாடுவதில் பெருவிருப்பம். அவ்விளம்போதில் வில்லி பாரதத்தைச் சுவையுடன் அவர் தந்தையார் பயிற்றுவித்து வந்தார்; அச் செயல் பெரிதும் போற்றுதற்குரியது; நாலைந்து இளமாணவரோடு கூடி நின்று பாரதச் செய்யுட்களை மனப்பாடமாகப் பாடிக்கொண்டிருப்பாராம் நம் இராமசாமிக் கவுண்டர்.

ஒருமுறை இராமசாமியார், தம்மோடொத்த இளமாணவருடன் விளையாடிக்கொண்டிருந்தனர். அதுபோது அங்கு பாரதச் சொற்பொழிவாளர் ஒருவரும், வேறு சிலரும் உரையாடிக்கொண்டிருந்தனர். சொற்பொழிவாளர் இராமசாமியார் பாரதம் பயில்வதை நன்கு அறிந்தவர். இவர் அறிவுத் திறனைக் காண எண்ணினவராக 'இராமசாமி! 'வேட்டகம்' என்றா லென்ன தெரியுமா? உனக்கு,' என்றார். உடனே இராமசாமியார் 'விரும்புதற்குரிய இடம்,' என்று விடையளித்தார். 'ஏனப்பா மாமியார் வீடு என்று சொல்லாமல் இப்படிச் சொல்கின்றாய்,' என்றாராம் சொற்பொழிவாளர். 'அவர்கள் மாப்பிள்ளையின் வருகையைப் பெரிதும் விரும்புகின்றனர்; மாப்பிள்ளையும் மாமனார் வீட்டினை விரும்புகின்றார்; அதனால் தான் 'வேட்டகம்' என்றேன்,' என விளக்கினாராம் இராமசாமியார். கேட்டாரனைவரும் இராமசாமியாரின் நுண்ணுணர்வையும் ஆராய்ச்சித்திறனின் சாயலையுங்கண்டு, பெரிதும் புகழ்ந்தார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

ஐந்தாவது படிவத்தில் படித்துக்கொண்டிருந்தபோது அடுத்தடுத்துத் தம் தந்தையாரையும் அன்னையாரையும் வரந்தி

பேதியெனுங் கொடுநோய்க்குப் பலிகொடுத்துத் தனியராய் நொந்தார் இராமசாமியார்; ஒரு கிழமைக்குள்ளேயே இருவரையும் இழந்துநின்ற இளமக்களைப் பெரிதும் ஆதரவுடன் சிறிய தந்தையார் பார்த்துவந்தனர்.

தம் பதினேழாவதாண்டில் பள்ளியிறுதி வகுப்பில் தேறியதும், வட ஆர்க்காடு மாவட்டத்தின் வேலூரிலுள்ள ஊரிஸ் கல்லூரியிற் சேர்ந்தார். கல்லூரி வகுப்புக்களிலும் கணக்குப் பாடத்தையே எடுத்துப் படித்துவந்தார். தம் கல்வியிற் கவனஞ் செலுத்திப் பயின்றுவந்தாரேனும், எப். ஏ. தேர்விக்குச் செல்லவிருக்கும்பொழுதில் அருமைத் தங்கையாரின் பெருநலமின்மை கேட்டு உளங்கலங்கி ஊர் சென்றார். தங்கையாரும் இறந்துவிட்டனர். உளம் நொந்த இராமசாமியாரால் அவ்வாண்டு அத்தேர்வில் தேர்ச்சியடையவும் இயலவில்லை.

பின்னர்த் திருச்சிசென்று செயின்ட் ஜோசப் கல்லூரியிற் சேர்ந்து பயின்றார்; இன்டர் வகுப்பிலும் தேறினார். திருச்சியிலிருந்தும் சென்னை சென்று கிறித்தவக்கலாசாலையில் மீண்டும் பயின்று வந்தார். கணக்கு நூலில் மிகவும் சிறந்த பேராற்றலுடையவரெனப் புகழ்பெற்ற பேராசிரியர் தாஸ் என்பவரிடம் பயிலும் வாய்ப்புப் பெற்று, பி. ஏ. ஆனர்ஸ் தேர்விலும் வெற்றி பெற்றார்.

கி. பி. 1923-ல் திருக்கோயிலூரில் வணிகராயிருந்தவரான திரு. முருகக்கவுண்டர் அவர்கள் தம் அருமை மகளை இராமசாமியாருக்கு மணஞ்செய்துகொடுக்க இசைந்தனர். திரு. **கனகம்மையார், இராமசாமிக் கவுண்டர்** திருமணம் சிறப்பாக நடந்தேறியது. இல்வாழ்வின் இனிய துணைவியாராக அமைந்த தம்வாழ்க்கைத் துணைவியாருடன் இல்லறம் புகுந்து நல்லறம் ஆற்ற முற்பட்டார் நம் இராமசாமியார் அவர்கள்.

கி. பி. 1924—1925-ல் வாணியம்பாடி இசுலாமியா உயர்நிலைப்பள்ளியிற் கணக்காசிரியர் பணியேற்றுச் சிறப்புறத் தம் கடனாற்றிவந்தனர். வாணியம்பாடியில் பணியாற்றிவந்த காலத்தில் அடுத்துள்ள சிற்றூர்களில் சென்று கம்பஇராமாயணப் பகுதிகள் சிலவற்றை அழகுடன் எடுத்துக்கூறியும், தமிழர் நாகரிகம் முதலியவற்றோடு சில பகுதிகளை ஒப்பிட்டுக் காட்டியும், மக்களுக்குத் தமிழ்ச்சுவை யூட்டிவந்தார்.

கி. பி. 1925—26-ஆம் ஆண்டில் ஆசிரியப்பயிற்சிப் பள்ளியிற் சேர்ந்து எல். டி. பட்டம் பெற்றார். எம். ஏ. எல். டி. பட்டம் பெற்றவுடன் வாணியம்பாடி இசுலாமியக் கல்லூரித்

தலைவராகப் பொறுப்பேற்குமாறு அழைத்தனர். அப்போது இராமசாமிக்கவுண்டர் அவர்கட்கு அகவை இருபத்தேழு. இளவயதிலேயே ஒரு கல்லூரியின் தலைவராகப் பொறுப்பேற்ற அறிஞரின் அறிவுத்திறனையும் செயலாற்றும் தன்மையையும் அனைவருங் கண்டு வியந்து பாராட்டினர்; புகழ்ந்து போற்றினர்.

1927-ம் ஆண்டில் சேலங் கல்லூரியில் தலைவர் பொறுப்பிற்கு ஆள் தேவையென அறிந்து அதனைப் பெறுவதற்குக் கவுண்டர் அவர்கள் விண்ணப்பஞ் செய்தனர். சேலங்கல்லூரி அதுபோது இரண்டாந்தரக் கல்லூரியாயிருந்தது. கல்லூரியையும், உயர்நிலைப் பள்ளியையும் ஒருவரே மேற்பார்த்து வந்தனர். அவரே உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியராயும், கல்லூரித் தலைவராயும் செயலாற்றி வந்ததால் பொறுப்பு மிகவும் அதிகமாக விருக்கும். இப்போதுள்ள சேலம் நகராட்சி அலுவலகத்தின் அண்மையிலேயே இக் கல்லூரியும் இருந்தது.

அதுபோது சேலம் நகராட்சித் தலைவராயிருந்தவர் திரு. தம்மண்ணச் செட்டியார் அவர்கள். கல்லூரித் தலைவர் பொறுப்பிற்குப் பலரிடமிருந்தும் விண்ணப்பங்கள் வந்திருந்தன. இவரோ இருபத்தேழாண்டான இளைஞர். வயதும் பழக்கமும் முதிர்ந்த பலர், தமக்கு அப்பொறுப்பு வேண்டும் எனப் போட்டியிட்டனர். அவர்களுக்கே அப்பொறுப்பை நல்கல் வேண்டுமெனத் தக்கார் பலரும் துணைசெய்து நின்றனர். அப்போது தம்மண்ணச் செட்டியாரவர்கள் ' அவர் இளமையும் ஊக்கமுங் கொண்டவர்; நம்போன்று வணிகராய் விளங்கும் குடும்பத்தைச் சேர்ந்தவர்; இவரை நாம் இப்பொறுப்பிலமர்த்தின் அவர் திறனைக் காட்டி முன்னுக்குவரும் சிறந்த வாய்ப்பை அளித்தவர்களாவோம். பிறரோ, தக்கார் துணையுடன் இருப்பதால் எங்கும் சென்று வேறு நல்ல வேலைகள் பார்த்துக்கொள்ள வியலும்,' என்று எண்ணிப் பல்வித எதிர்ப்புக்களையும் பொருட்படுத்தாது நம் கவுண்டர் அவர்களைக் கல்லூரித் தலைவராக்கினர். அதுமட்டுமன்று; என்றும் கவுண்டர் அவர்கள் பால் பேரன்புடையராய்க் கல்லூரி முன்னேற்றம் அடைவதற்குரிய கவுண்டர் அவர்களின் திட்டங்கள் அனைத்தையும் அன்பு கனிந்து நிறைவேறும் வகையில் உதவியுஞ் செய்து வந்தனர்.

கல்லூரியிற் பொறுப்பேற்றுத் தம் பணியைச் செவ்வனே ஆற்றிவந்தனர் கவுண்டரவர்கள். இருப்பினும் நான்காண்டுகள் சென்று நகராட்சி அவை மாறியதும் தொல்லையேற்பட்டது. திரு. தம்மண்ணச் செட்டியாரவர்களின் அன்புக்குரியவர் என்ற ஒரே காரணத்தால் திரு. கவுண்டர் அவர்களை நீக்கிவிடப் பலத்த

முயற்சிகள் நடந்தன. நகராட்சித் தலைவர் அவர்கள் ஒரு தனி மனிதர்பேரிலுள்ள மனமாற்றத்தால் கல்லூரிக்கே கேடு செய்வதா என எண்ணியதுடன், நகராட்சியால் நடத்தப்படும் ஒரே கல்லூரியென விளங்கிய அந்நிலையத்தைக் கைவிட மன மின்றி யிருக்கவே நிலைமை ஒருவாறு சமநிலைப்பட்டது.

1941-1942-ல் கல்லூரி உயர்நிலைப் பள்ளியிலிருந்து தனி யாகப் பிரிக்கப்பட்டது. இப்போதுள்ள புதிய இடத்திற்கும் மாறியது. அதுபோது முந்நூறு ரூபா ஊதியமே பெற்றுப் பணியாற்றி வருவதற்கிசைந்து கவுண்டரவர்கள், கல்லூரித் தலைவ ராகத் தொடர்ந்து பொறுப்பேற்றார். 150 மாணவர்களோடு இரண்டாந்தரக் கல்லூரியாயிருந்த சேலங்கல்லூரி இராமசாமிக் கவுண்டரவர்களின் தலைமையின்கீழ் அவர்தம் அயரா உழைப் பின் பயனாய் இன்று முதல்தரக் கல்லூரியாக 700 மாணவர் கட்கு மேலுடையதாய்த் திகழ்கின்றது.

தமிழிலேயே எல்லாப் பாடங்களையும் கல்லூரி வகுப்பு வரையும் நடத்துதல் வேண்டுமென்ற ஆர்வமும், குறிக்கோளும் உடையவர் நம் கவுண்டர் அவர்கள். அவர்கள் தமிழிலேயே பாடங்கள் நடைபெறச் செய்த ஞான்று, அதன் செவ்வியைக் கண்டு மகிழ்ந்த திரு. இராசகோபாலாச்சாரியாரவர்கள், 'தமிழில் பாடங்கள் நடைபெற வேண்டுமென்ற என் கனவை நனவாக இங்கு கண்டு மகிழ்கின்றேன். தமிழ்நாட்டின் சிறந்த கல்லூரித் தலைவர் நம் கவுண்டர்,' எனப் பாராட்டிப் புகழ்ந்து கூறினாராம்.

கல்லூரி ஆசிரியர்களோடும் பழகிக் கலந்து கல்லூரிக் காரியங்களாற்றுவித்ததுடன் தமிழ் வளர்ச்சிக்காவன செய்து வருவதில் பேருக்கங் கொண்டு காலமெல்லாம் மாணவருலகிற்குந் தமிழுலகிற்குந் தொண்டாற்றிய பெருந்தகையெனத் திகழ்ந்தனர் நம் கவுண்டரவர்கள்.

தம் இல்வாழ்விலும் அனைவரிடமும் பெரிதும் பேரன்பு காட்டும் பண்புடையவராயும், நாடோறும் ஒரு மணியளவாயி னும் இறைவனை எண்ணி வழிபாடு செய்து வருபவராயும், மனைவியார் மக்கள் அனைவரிடமும் தோழர் போன்று கலந்து பழகிவரும் மனஇளக்கம் உடையவராயும், அவர் விளங்கி வந்தார்.

தமிழ்ப் புலவர்கள் யாராயினும் வரின், அவர்களோடு இரவு 12 மணி வரையும் தமிழ் இலக்கியங்களைப் பற்றியும், தமிழ் வளர்ச்சியைப் பற்றியும், உரையாடி மகிழ்வதில் பெருவிருப்பங்

திருச்சியில் ஒருமுறை திரு. பா. வே. மாணிக்க நாயகர் அவர்களின் 'ஆய்தத்தைப் பயன்படுத்தித் தமிழில் எவ்வொலியையும் எழுதமுடியும்,' என்பது பற்றிய சொற்பொழிவொன்றைக் கேட்டனராம். அதன்பின் அதுபற்றி நன்கு ஆய்ந்து வந்தனர். அதன் விளக்கமான முடிவைப்பற்றித் தெரிந்துகொள்ளும் வாய்ப்பு அவர்களது திடீர் மறைவால் தமிழர்க்கு இயலாது போயிற்று.

தமிழ் முறையிற் சீர்திருத்தத் திருமணங்கள் நடைபெறல் வேண்டுமெனுங் கருத்தால் சீர்த்திருத்தத் திருமணங்கள் பலவற்றைத் தலைமை தாங்கி நடத்தியுள்ளார். அத்திருமண நிகழ்ச்சியின்போது கூறிய அறவுரைகள் பெரிதும் போற்றற்குரியனவாய் விளங்கும். நம் நாட்டுப் பெண்களுக்கு இல்வாழ்க்கைக்கு வேண்டிய கல்விமுறையே வேண்டும் எனப் பன்முறையும் வற்புறுத்திக் கூறுவார்.

வாழ்க்கையில் ஆடம்பரமற்றவராக எளிய முறையைக் கையாண்டு வந்ததுடன் பிறரையும் அவ்வாறு நடத்தலே நலமெனத் தூண்டி வருவார்.

தத்துவ நூற்களைக் கற்பதில் பெரிதும் மனம் ஈடுபட்டவர். கைவல்யம், உபநிடதங்கள், பகவத்கீதை, விவேகானந்தர் சொற்பொழிவுகள், பெசண்டம்மையார் நூல்கள் முதலிய பல நூல்கள் தத்துவவகையிற் பெரிதும் அவர் உளத்தைக் கவர்ந்தன. அவற்றுள், பகவத்கீதையை நன்கு கற்றதுடன், அதன் உண்மைப் பொருளை அறியும் ஆவலுடன் வடமொழிப் பயிற்சியும் பெற்றிருந்தார். வடமொழியிலிருந்தே கீதையை எளிய தமிழ் நடையில் அனைவருக்கும் பயன்படும் வண்ணம் மொழிபெயர்த்துள்ளார்.

நெப்போலியன், நெல்சன், கபிலையின் கதை போன்ற அரிய சில நூல்கள் அவர்தம் தமிழார்வத்தை நன்கு காட்டுவனவாய் விளங்குகின்றன. தமிழர் வரலாறு எனும் நூலொன்று இயற்றத் தொடங்கியுள்ளார். ஆனால் அது முடிவுறாத நிலையிலுள்ளது.

சேலத்தில் திருக்குறள் கழகம் ஒன்றை நிறுவித் திருக்குறள் வகுப்புக்கள் நடைபெறவும், திருக்குறள் பரவவும் வழி செய்ததுடன் பல்வித எதிர்ப்புக்களுக்கிடையிலும் மிகத் தெளிவாகப் பரிமேலழகர் உரையில் தம் கருத்துக்களுக்குப் பிழையெனப் பட்டவற்றைச் சொல்லிவந்தார். திருக்குறள் பற்றிய பல கட்டுரைகளும், சொற்பொழிவுகளும் செய்துள்ளனர். பரிமே

லழகர் உரைபற்றிய இவர்கள் கருத்துக்கள் பெரிதும் சிறப்புடையனவாகும்.

தனித்தமிழ் அவருடைய மூச்சென விளங்கியது. தமிழ் தூய்மையாக வளம் நிறைந்து விளங்கவேண்டுமென்ற விருப்பம் அவர்தம் அசைவுதோறும் இணைந்து நின்றது. இந்திமொழியை மாணவர்க்குக் கட்டாயமாக்கக் கூடாது எனப் பெருந் துணிவுடன்வலியுறுத்திக் கூறிவந்த கல்லூரித்தலைவர் அவர் ஒருவரே எனலாம்.

'தொல்காப்பியத்திற்குப் பலருரைகளுங் கொண்ட பதிப்பு ஒன்று வேண்டும்; குறளையும் கீதையையும் மேனாட்டு நீதி நூல்களோடு நன்கு ஆய்ந்து குறளின் சிறப்பை விளக்கி ஒரு நூல் எழுதப்போகின்றேன்,' என்றெல்லாம் தமிழார்வத்துடன் பேசிக்கொண்டிருப்பார்.

கலைச்சொற் குழு உறுப்பினராயிருந்து தனித்தமிழ்க் கலைச்சொற்கள் அமைக்கவேண்டு மென்பதற்காகப் பெரிதும் போராடி முடிவில் அக்கருத்திற் கியைந்து வராத சிலருடைய போக்கினால் அக்குழுவினின்றே விலகிக் கொண்ட நற்பண்பு வாய்ந்தவர்.

மற்றும் பல ஆண்டுகளாகப் பாட நூற்குழு, பல்கலைக் கழகக் கலைக்குழு (Acadamic Council), செனட் (Senate) முதலியவற்றில் உறுப்பினராயிருந்ததுடன் பல்கலைக் கழக வகுப்புத் தேர்வுகளின் தலைமைத் தேர்வாளராகவும் பணியாற்றியுள்ளார். சேலத்திலுள்ள தமிழ் இலக்கியக் கழகத் (Tamil Literary Society) தின் தலைவராயிருந்து சிறந்த தொண்டாற்றியுள்ளார்.

இவ்வாறெல்லாந் தமிழ்நாட்டின் கலைவளர்ச்சியிற் பெரும் பங்கெடுத்துக்கொண்டிருந்த ஈடிணையற்ற தலைவரை 19-8-50-ம் நாள் இரவு 12 மணிக்குக் காலன் கவர்ந்து சென்றான். நெஞ்சடைப்பால் அவர் மறைந்தாரென்ற கொடுஞ்செய்தி அனைவர் நெஞ்சையும் 'இணரெரி தோய்வன்ன' இன்னலங்கடலுள் ஆழ்த்தியது.

20-8-50-ம் நாள் ஞாயிறன்று மாணவர்கள், ஆசிரியர்கள், வணிகர்கள், தொழிலாளர்கள், பொதுமக்கள் அனைவருஞ் சூழ்ந்து நின்று மறைந்த பெரியாரின் பொன்னுடலுக்குத் தம் கடைசி வணக்கத்தைச் செலுத்திச் சென்றனர். இரவு 7-30 மணிக்குப் பூந்தேரில் ஊர்வலமாகச் சென்று காக்காயன் சுடலையில் தலைவரவர்களின் பொன்னுடலுக்கு எரியூட்டினர்.

உடல், உளம், வீடு, எங்கணும் பைந்தமிழ் பரப்பிவந்த செந்தமிழ்ச் செழுமலர் கருகி மாய்ந்துவிட்டது. வெம்மைத் தழலால் பற்றிக் கொளுவியது செந்தீ. அதன் சாயல் கூடி நின்றார் உள்ளங்களையும் பிரிவெனுங் கொடுந் தீயாய்ச் சூழ்ந்து வாட்டியது. கண்ணீர்சோரக் கலங்கி நின்றனர் அனைவரும். அவர்கள் குடும்பத்தினரின் கவலையைத் தணிக்க ஆறுதல் உரைகள் கூறினர் அறிஞர் பலரும்.

மறைந்த பெரியார் குடும்பத்தினர் அனைவருக்கும், அரிய ஆற்றலும் அன்பும் மிக்க தம் பெறலருந் துணைவரைப் பிரிந்த கனகம்மையாருக்கும், தம் பெறலரிய தந்தையாரை யிழந்த திரு. கண்ணப்பன், கண்ணம்மை, கல்யாணராமன், வெங்கடேசன் முதலியோருக்கும் ஆழ்ந்த எம் ஆற்றொணாத் துன்பத்தைத் தெரிவித்துக்கொள்கின்றோம். அன்னார்க்குத் தண்ணருள் பொழிந்து ஆறுதலளிக்கும் வண்ணம் இறைவனருளை வேண்டு

தமிழகத்தில் தோன்றித் தமிழ் மாணவர் நலன்கருதி அறிவுப் பண்ணையின் தலைவராக 23-ஆண்டுகள் வீற்றிருந்த அவர்தம் பொன்னுடல் 51-வது வயதில் திடுமென மறைந்த தேனும், புகழுடலும் ஆன்ம ஒளியும் என்றும் தமிழகத்திற்கு வழிகாட்டுமென்பது திண்ணம்.

“ நனிபேதையே நயனில் கூற்றம் ”　　—க. சோ.

### காண்பமெதங்கே !

ஆண்மை அழகறிவோ டார்ந்த தமிழ்ப்பற்றும்
காண்பமெதங்கே இராமசீ காத்திலையேல்—பூண்டதமிழ்
ஆக்கம் இழந்ததும்மன் அண்ணல் பிரிந்தனைமன்
காக்குஃபிறை தாளுறல்மன் கற்பு.

—இனியன்.

# சேலங்கல்லூரித் தலைவர் மறைவு

## (ஆறுதலுரைகள்)

**முதலமைச்சர் பி. எஸ். குமாரசாமி ராஜா, சென்னை.**

தங்கள் தந்தையார் திரு. இராமசாமிக் கவுண்டர் அவர்கள் காலமடைந்ததை அறிய வருந்துகின்றேன். தங்களுக்கும், மற்றுமுள்ள தங்கள் குடும்பத்தாருக்கும் என் மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவிக்கின்றேன்.

**அ. சிதம்பரநாதன் செட்டியார், அண்ணாமலை நகர்.**

தங்கள் அருமைத் தந்தையாரும், சிறந்த தமிழறிஞரும், என் நண்பருமாகிய திரு. இராமசாமிக் கவுண்டர் தவறிவிட்ட செய்தி கேட்டுத் திடுக்கிட்டுப் போனேன்.

**மு. வரதராசனார், சென்னை.**

உற்ற துன்பம் கொடியது, மிகமிகக் கொடியது. நினைத்தாலும் நம்ப முடியவில்லை; அவ்வளவு கொடிய செய்தி நேற்றிரவு எட்டியது. மிகமிக வருந்தினேன். என்ன எழுதுவது? இயற்கையின் கொடுங்கோன்மையை எண்ணி நோகின்றேன். தமிழுக்கும தமிழர்க்கும் பெரிய நட்டம். அறிவாலும், திறனாலும், உழைப்பாலும் உயர்ந்த குடும்பத்திற்கு மிகப் பெரிய நட்டம். என் வாழ்க்கையில் அவரைப்பற்றிப் பெரிய பெரிய கனவெல்லாம் கண்டு மகிழ்ந்திருந்தேன். ஏமாந்து கலங்குகிறேன்.

**என். டி. சுந்தரவடிவேல், கல்வியதிகாரி, கார்ப்பொரேஷன், சென்னை.**

அண்ணா அவர்களின் மறைவு ஈடு செய்ய முடியாத பெருநஷ்டமே. அவர்கள் விட்டுப்போயிருக்கும் வேலைகளை ஒரு அளவாவது செய்து முடிக்கவேண்டாமா? அதற்காகவாகிலும் எப்படியாவது மனதைத் திடப்படுத்திக்கொள்ளவேண்டும்.

**வ. சுப்பையா பிள்ளை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,**

என் அருமை உயிரனைய நண்பரவர்கள் இறையடி சேர்ந்த செய்தியறிந்து சிறிதுநேரம் அறிவு என் வயமில்லை நெஞ்சு பொறுக்கவில்லை. சிறந்த தமிழ்க்கொள்கைகளை நிறைவேற்றுவதில் அஞ்சா நெஞ்சமும், சூழ்ச்சித திறனும் மிக்க அறிஞரைத் திடுமென எடுத்துச்சென்ற காலனை என்சொல்லி ஏசுவது?

**ஆ. வரகுணபாண்டியன், தஞ்சை.**

தங்களருந் தந்தையார் மறைவுற்ற தறிந்து பெரிதும் வருந்துகிறேன். அடியேன் மட்டுமன்று; தமிழ்மொழி உலாவும் நல் உலகும் ஆறாத்துயரில் ஆழ்ந்திருக்கிறது. இவர்தம் பிரிவு நமக்கு ஈடு செய்ய முடியாத ஒரு பேரிழப்பேயாகும்.

**புலவர் குழந்தை, ஈரோடு.**

இன்று பத்திரிகையில் நமது கல்லூரித் தலைவர் முடிவைக் கண்டு திடுக்கிட்டேன். மாணவருலகம் தங்கள் முன்னேற்றத் தந்தையை இழந்து விட்டது. என் செய்வது இயற்கையின் முடிவு!

**எஸ். தருமாம்பாள், சென்னை.**

தந்தையாரின் பிரிவைக் கேட்டுத் திடுக்கிட்டுப்போனேம். தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் ஈடுசெய்ய முடியாத பெருந்துன்பம்.

**க. அன்பழகன், சென்னை.**

இயற்கை பல சமயங்களில் கொடுமையின் பிறப்பிடமாகவே ஆகி விடுகிறது. எனினும், இயற்கையை என்ன செய்யமுடியும்? மறைந்த பெரியாரின் புகழ் மறையப் போவதில்லை. அவரது நல்லெண்ணங்களும் நிறைவேறத்தான் போகின்றன. மன ஆறுதல் பெற்று கடமையைச் செய்ய முற்பட வேண்டுகிறேன்.

**எஸ். குருசாமி, ஆசிரியர், விடுதலை, சென்னை.**

இடிபோன்ற செய்தியைப் பத்திரிகையில் படித்தோம்; திடுக்கிட்டோம். இயற்கையின் விபரீத விளையாட்டுக்களான வெள்ளம், பூகம்பம், எரிமலைத் தீக்குழம்பு போன்ற நிகழ்ச்சி. தமிழகம் ஒரு சிறந்த தமிழரை இழந்துவிட்டது.

**C. Perumalsami Reddi,** *Minister for Industries, Madras.*

I am grieved to learn the demise of your father. Please accept my condolences in your bereavement

**Manavala Ramanujam,** *Vice chancellor, Annamalai University, Annamalai Nagar.*

Shocked much grieved at news-pray courage and fortitude at loss.

**Alexander Gnanamuttu,** *Principal, Hindu College, Tirunelveli.*

I am shocked to learn from to-day's papers of the sudden death of your dear husband. He was an esteemed and trusted friend of mine. May his soul rest in peace. Please accept my most sincere condolences.

**S. Cruz Anthony,** *St. Xavier's College, Palayamcottai.*

I deeply regret to hear the death of your beloved father. My heartfelt condolence.

**N. S. Krishnan,** *Madras.*

South lost-scholar-efficient and energetic man.

**'இரங்கல் முடிபுகள்' நிறைவேற்றிய கழகங்கள் :**

சென்னைத் தமிழாசிரியர் கழகம், சென்னை-1; நாட்டார் தமிழ்ப் பேரவை, தஞ்சை; திருவள்ளுவர் சங்கம், பெங்களூர்; மாணவர் மன்றம், சென்னை; பச்சையப்பன் கல்லூரித் தமிழ் மன்றம், சென்னை; தமிழ்மறைக் கழகம், சேலம்; சேலம் கல்லூரி மாணவர் கழகம், சேலம்; பாளையங்கோட்டை நகர் மன்றம்; ஆரம்ப ஆசிரியர் சங்கம், மடவாளம்; சேலம் இலக்கிய மன்றம், சேலம், முதலியன.

# போர் நிகழாமற் காத்த புலவர்

[சு. அ. இராமசாமிப் புலவர்]

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்பவர் ஓர் அறிஞர். அரசர்கள் பலருக்கும் அவர் நண்பராக அமைந்து நின்றார். அவர் ஒருநாள் சேரநாட்டிலுள்ள கருவூருக்குச் சென்றார். அப்பொழுது அந்நாட்டைச் சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறை என்னும் அரசன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் அறிஞர் முடமோசியாருக்கு நண்பன். முடமோசியார் அம்மன்னனுடன் பன்னாள் தங்கியிருந்தார். அவ்வரசனுக்கு நகரின் புறத்திலே, 'வேண்மாடம்' என்னும் மாளிகை ஒன்று அமைந்திருந்தது. ஒருநாள் புலவரும் அரசனும் வேண்மாட மாளிகையிலே அமர்ந்து அளவளா

அக்காலத்தில் சோழநாட்டு உறையூரிலே முடித்தலை கோப் பெருநற்கிள்ளி என்னும் சோழமன்னன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் ஒருநாள் யானையின்மீது ஏறித் தன்னுடைய நாட்டின் எல்லையிலே சென்றான். அவனுடைய யானை தீனியை நன்கு தின்று கொழுத்திருந்தது. அது மதம் பிடிக்கத்தக்க நிலையில் உள்ளதைப் பாகர்கள் உணர்ந்து அதற்கு வாழைத்தண்டைக் கொடுத்து அதன் ஆற்றல் மிகுதியை மாற்ற வில்லை. யானைக்கு மதம் பிடிக்கும்போல் தெரிந்தால், அதற்குச் சிலநாள் வாழைத்தண்டைக் கொடுத்தால் போதும். அஃது அதனுடைய திமிரை அடக்கிவிடும். இதனால்தான், "ஆனைக்கு வாழைத்தண்டு ஆண்பிள்ளைக்குக் கீரைத்தண்டு," என்ற பழமொழியும் வழங்குகின்றது.

கோப்பெருநற்கிள்ளி யானையின்மேல் சென்றுகொண்டிருக் கும்போதே அதற்கு மதம் பிடித்துவிட்டது. பாகர்கள் அதனை அடக்குவதற்கு மிகவும் முயன்றனர்; அதன் விரைந்த செலவும், கட்டுக்கடங்காத செயலும் மட்டுப்படவில்லை. "ஆனை வேகம் அங்குசத்தில் அடங்கும்" என்னும் பழமொழி பொய்யாகப் போய்விட்டது. பாகர்கள் அங்குசத்தால் குத்திய குத்துக்கள் எல்லாம் வீணாகப்போய்விட்டன. அது சேரநாட்டிலே புகுந்து விட்டது. யானைமீது வந்த சோழனுக்கும் வேண்மாடத்திற் புலவரோடு உரையாடிக்கொண்டிருந்த சேரனுக்கும் முன்னரே பகை. ஒருவரோடு ஒருவர் போர்செய்து தோற்கடிக்கவேண்டும் என்று காலம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். மதம்பிடித்த யானையைச் சூழ்ந்து குத்துக்கோல்காரர்கள் பலர் யானையை

அடக்க முயற்சிசெய்துகொண்டு ஓடிவந்தார்கள். முடமோசியாரும் சேரமன்னனும் உரையாடிக்கொண்டிருந்த வேண்மாடத்திற்குத் தெரியும்படியான தொலைவிலே யானை வந்துவிட்டது. சேரன் யானைமீதிருக்கும் சோழனையும் யானையைச் சூழ்ந்து ஓடி வந்துகொண்டிருக்கும் ஆட்களையும் பார்த்துவிட்டான். அரசர்கள், ஒருவர் நாட்டிலே மற்றொருவர் உடன்பாடு பெறுமல் நுழையமாட்டார்கள். தன் பகைவனுகிய சோழன் தன் நாட்டிலே தனக்குத் தெரிவிக்காமலே வருவதைக் கண்ட சேரனுக்கு, அளவுகடந்த சினம் உண்டாகிவிட்டது.

சினத்தால் அறிவு மறைப்புண்ட அரசனுக்கு யாதுந் தெரியவில்லை. "பகையாளி குடியை உறவாடிக் கெடுக்கவேண்டும்" என்கிறார்களே, அதைப்போல உறவாடிக் கெடுப்பதற்காக இவ்வாறு வருகிறானு? அல்லது வெளிப்படையாகவே போர் செய்வதற்கு வருகிறானு? என்று எண்ணமிட்டான். அவனுக்கு யாதும் விளங்கவில்லை. "புலி அடிக்கும் முன்னே கிலி அடிக்கும்." ஆகையால் சேரனுக்கு மிகுந்த அச்சமும் உண்டாகிவிட்டது. அவன் தன்னுடன் இருந்த புலவரைப் பார்த்து மதயானைமீது வரும் சோழனை அவருக்குக் காட்டினன். "அந்த யானையின் மீது வருபவன் யாவன்? அவன் என்னுடன் போர் புரிவதற்காக வருகின்றான்போலும். அவனை நீவிர் அறிவீரா?" என்று கேட்டான்.

சோழமன்னன் வந்துகொண்டிருக்கும் நிலைமை, சினத்தால் மறைப்புண்ட சேரமன்னனுக்கு விளங்காமற்போனுலும், புலவருக்கு நன்கு விளங்கிவிட்டது. அப்புலவர் முடித்தலை கோப்பெருநற்கிள்ளிக்கும் நண்பர்தாம். யானை மதங்கொண்டு பாகர்க்கு அடங்காது வரும் நிலையை அவர் தமது நுண்ணுணர்வால் உணர்ந்துகொண்டார். நமக்கு நண்பர்களாகிய இவ்விருவர்க்குள்ளும் போர் மூண்டுவிடக்கூடாதே என்று எண்ணினர்; பெரிதும் கலங்கினர். அவர் சேரனைப் பார்த்தார். "புலித்தோற் கவசம் அணியப்பெற்றும், மூட்டுவாய் சிதையும்படி பகைவர்கள் எய்த அம்பு பிளந்தமையான் விழுப்புண்பட்டும் உள்ள மார்பினை உடையவனுய்க், கூற்றம்போன்ற இந்த யானையின்மீது வரும் இவன் யார் என்று நீ கேட்பையானுல், வயலில் மயில்கள் உதிர்த்த பீலியை அங்குள்ள உழவர்கள் நெல்லரிகளோடு திரட்டும் நீர்வளம் மிக்க சோழநாட்டிற்கு உரியவன். இவ்வாறு வருகின்ற இவன் நின்னேடு போர்செய்தற்கு வருகின்றான் அல்லன். போர் செய்ய வருகின்றான் என நீ எண்ணற்க. இவன் தன் நாட்டு எல்லையில் யானையூர்ந்து வந்துகொண்டிருந்தான். அப்போது யானைக்கு மதம்பிடித்துவிட்டது.

ஆகவே, அது கடலின்கண்ணே விரைந்துசெல்லும் மரக்கலம் பாகர்க்கு அடங்காது இவ்வாறு வருகின்றது. இவ்வாறு வந்து விட்ட அவன் எத்தகைய துன்பமும் இல்லாமல் தன்னுடைய நாட்டை அடையவேண்டும்,'' என்று கூறினார். புலவர் உரையால் அரசன் சினந் தணிந்தான். போருக்குப் புறப்பட எண்ணிய மன்னன் அந்த எண்ணத்தை ஒழித்தான். ஒருவரோடு மற்றொருவருக்குப் பகையை உண்டாக்கிப் போர் மூட்டி விட்டு, வேடிக்கை பார்ப்பதே இவ்வுலகத்தின் இயல்பு. இதனால் தான், "ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்,'' என்ற பழமொழியும் எழுந்தது. போர் நிகழாமற் காத்த புலவரின் மாண்பு போற்றத்தக்கதன்றோ?

இவன்யார் என்குவை யாயின் இவனே
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
மறலி அன்ன களிற்றுமிசை யோனே

முந்நீர் வழங்கு நாவாய் போலவும்
பன்மீன் நாப்பண் திங்கள் போலவும்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோர் அறியாது மைந்துபட் டன்றே
நோயிலன் ஆகிப் பெயர்கதில் அம்ம
பழன மஞ்ஞை உகுத்த பீலி
கழனி உழவர் சூட்டொடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே. (புறம். கஙு)

(அ - ரை.) மறலி அன்ன - எமனை ஒத்த. நாவாய் - மரக்கலம். நாப்பண் - நடு. மரீஇயோர் - பாகர். மைந்துபட்டன்று - மதம்பட்டது. மஞ்ஞை - மயில்.

## காப்பருமை

கொன்றையால் நற்படைப்பாம் கொல்லேற்றால் காத்தலாம்
நின்ற கறைமிடற்றால் நீள்துடைப்பாம்—மன்றவே
பெண்ணான் மறைப்பாம் பிறையால் அருளலுமாம்
கண்ணுபுற நானூற்றின் காப்பு.

—இனியன்.

# குமரகுருபரர் நல்கும் சமயவாழ்வு*

[சித்தாந்த கலாநிதி, ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்]

தமிழ்ப் பெருமக்களே !

நாட்டின் நலத்தை நினைப்பதிலே நம் எண்ணம் ஊன்றி நிற்கிறது. ஏன்? நாட்டின் பெருமை நமக்கும் பெருமையைத் தருகிறது. ஆதலின், பொதுவாகத் தமிழ்நாடு என்பதை விட்டுச் சிறப்பாக இங்குத் தென்பாண்டிநாட்டைச் சற்று உற்று நோக்குவோம்.

தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் பாண்டி நாட்டின் பழம் பெருமையைத் திறம்படப் பாராட்டினார். "நார் மன்னு சிந்தைப் பல நற்றுறை மாந்தர் போற்றும், பார்மன்னு தொன்மைப் புகழ் பூண்டது பாண்டி நாடு" என்பது அவர் தம் திருவாக்கு. 'தொன்மைப் புகழ் பூண்டது பாண்டி நாடு' என்று போற்றினார். இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சி வல்லுநர், புதைபொருள் ஆராய்ச்சி வல்லுநர் எல்லோரும் ஒருங்கே முதன்முதல் தோன்றிய நிலம் தென்பாண்டி நாடேயெனத் தெளிவுறப் பேசுகின்றனர்

இத்தகைய தொன்மைத் தென்பாண்டி நாட்டின்கண் மிகப் பழமை வாய்ந்ததாய்த் திகழும் தெய்வமலை பொதியிலாகும். சிவன் வீற்றிருக்கும் கயிலையும், செந்தமிழ் முனிவன் தங்கும் பொதியிலும் ஒத்த பெருமை யுடையன. கலையின் வடிவான பெருமுனிவன் அகத்தியன் நிலைபெற்று வாழும் நீடிய பெருமையுடையது இத் தென்பாண்டி நன்னாடு. இங்கே தமிழ்ச் சுவையளிக்கும் தண்பொருநையாறு பொய்யாத நீர் வளத்தைத் தந்துகொண்டிருக்கிறது. ஆற்று வளம் நாட்டிற்கு ஏற்றத்தை நல்கும். சோழநாட்டைக் காவிரி நாடென்றே போற்றுவர். தென்பாண்டி நாட்டைத் தண்பொருநை நன்னாடு என்னலாம்.

கி. பி. 12-ம் நூற்றாண்டிலே சோழநாட்டை யாண்ட இராசேந்திரன் கங்கையாறு வரையிற் படையெடுத்துச் சென்று வென்று இமயத்தில் தனது புலிக்கொடியை நாட்டினான். 'கங்கைகொண்ட புலிகாவலன்' என்று போற்றும் பெருமை யுற்றான்.

கி. பி. 17-ம் நூற்றாண்டிலே தென்பாண்டி நாட்டில் தண்பொருநைக் கரையில் தோன்றிய குமரகுருபரர் கங்கை வரையி

---

*12-8-50 நெல்லையில் ஆற்றிய விரிவுரை. வித்துவான் அ. நவநீத கிருட்டின பிள்ளையவர்கள் கேட்டெழுதியது.

லும் தம்மை எதிர்த்த கவிஞரையெல்லாம் சொல்லாற்றலால் வென்று, காசிமன்னனையும் தன்னடிப்படுத்தினர்.

> "மண்கண்ட வெண்குடைக் கீழாகமேம் பட்ட மன்னரும் என்
> பண்கண்டளவில் பணியச் செய்வாய்"

என்று கங்கைக்கரையில் நின்று முழங்கினர்.

கங்கைகொண்ட புவி காவலனாகிய சோழ வேந்தன் இமயத்தில் பொறித்த புலிக்குறி இன்று உண்டோ? இன்றோ? அறியோம். ஆனால், கங்கைகொண்ட கவி காவலராய குமர குருபரர் காசியில் அமைத்த குமாரசாமிமடம் இன்றும் நின்று தமிழின் பெருமை பேசுகிறது; சைவத்தின் தெய்வ மாண்பைத் தெரிக்கிறது; குமரகுருபரரின் பேராற்றலைக் கூறுகிறது.

ஒரு நாட்டுக்குப் பெருமை அந்நாட்டில் தோன்றிய சான்றோரால் ஆகும். திருமுனைப்பாடி நாட்டின் சிறப்பைக் குறிப்பிடப் புகுந்த சேக்கிழார் பெருமான்,

> "மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
> அறந்தருநா வுக்கரசு மாலால சுந்தரரும்
> பிறந்தருள உளதான தம்மளவோ பேருலகில்
> சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு"

என்று வியந்து போற்றினர். 'நாவுக்கரசரும் சுந்தரரும் பிறந்தருளும் பெருமையுற்றது திருமுனைப்பாடி நாடு', என்று பாராட்டினர்.

நம் தென்பாண்டி நன்னாடோ குமரகுருபரரும், சிவஞான முனிவரரும் திருவவதாரம் செய்த பெருமையுடையதாகும். இருவரும் சைவத் தெய்வக் கவிஞர் பெருமக்கள். பிற்காலத்தில் குமரகுருபரரைப் போன்று கொழிதமிழ்ப் பாடல் பாடினர் எவருமிலர். அவர் வாக்கே தெய்வவாக்கு என்று சொல்லத்தகும். அவரைப் போன்று பிற்காலத்தில் சிவஞான முனிவரே உரைவல்ல பெரியாராக விளங்கினர். அவர்தம் உரைபோன்று உரை வரைந்தார் பிற்காலத்து எவருமிலர். ஆகவே இவ்விரு பெரும் புலவர்களும் முறையே பாட்டாலும் உரையாலும் தமிழுலகுக்கு நிகரற்ற பணியாற்றினர்.

குமரகுருபரர் தோன்றிய காலத்தில்தான் மேனாட்டவரும் நம் நாட்டில் புகத் தலைப்பட்டனர். தென்பாண்டி நாட்டில் தான் முதன் முதலில் கிறித்தவ மதத்தைப் பரப்ப முற்பட்டனர். இத்தாலிய நாட்டினின்று நம் நாடு போந்த வீரமா முனிவர் (Fr. Joseph Beski) கிறித்தவம் பரவச் சீரிய பணியாற்றத் தொடங்கிய காலம். இவர், நம் குமரகுருபர அடிகளாரிடம் மாணவராக இருந்து தமிழ் பயின்றார் என்றும் கூறுப.

இவர் காலத்தில் தென்பாண்டி நாட்டின் ஊர் பெருங்கோயில்கள் எழுந்தன. பிற்காலப் பாண்டியர் பல சிவன் கோவில்களை ஆங்காங்குத் தோற்றுவித்தனர். திருப்புடைமருதூர், அத்தியான நல்லூர், அரிகேசரி நல்லூர் முதலிய இடங்களிலெல்லாம் திருக்கோயில்கள் தோன்றின. அப்போது திருநெல்வேலியை ஆண்ட மன்னன், 'வென்று மண்கொண்ட பூதலவீர வீரமார்த்தாண்ட மாறவர்மன்' எனப்படுவான். இவன் தன் பெயரால் நெல்லைத் திருக்கோவிலில் 'வீரமார்த்தாண்ட மண்டபம்' என்றொரு மண்டபத்தை நிறுவினான். சோபான மண்டபம் ஒன்றைக் கட்டுவித்தான். அதுவே இன்று சோமவார மண்டபம் என்று வழங்கப்படுகின்றது. இம் மன்னன் காலத்தில்தான் நெல்லைத் திருக்கோவிலில் அறுபத்து மூவர் திருவுருவங்கள் வெண்கலத்தால் அமைக்கப்பெற்றன என்று கல்வெட்டொன்று சொல்கின்றது.

இவன் காலத்தில் நெல்லையில் சமயப்பணியாற்றும் திருமடங்கள் இரண்டு சிறப்புறத் திகழ்ந்தன. தெற்குத் தேர்த் தெருவில் சேக்கிழார் மடமும், வடக்குத் தேர்த்தெருவில் மெய்கண்டார் மடமும் விளங்கின. சேக்கிழார் மடத்தில் இருந்து பயின்றவரே மெய்கண்டார் மடத்துக்குத் தலைவராய் வருதற்குத் தகுதி பெறுவர். அத்தலைவரின் தீக்கைப் பெயர் 'சத்திய ஞான தரிசினி' என்பதாகும். சத்தியஞான தரிசினி யென்பது மெய்கண்டாரைக் குறிக்கும் திருப்பெயரே. இச் செய்தியை நெல்லைக்கோவில் கல்வெட்டொன்று சுட்டுகின்றது.

இங்ஙனம் மன்னரும் செல்வரும் கோவில்களையும் மடங்களையும் நிறுவி, அவற்றின் வாயிலாகச் சமயப்பணியும் கலைப்பணியும் ஆற்றிவந்தனர். கோவில்களில் மக்கட்குச் சமய ஞானம் நல்கும் வியாக்கியான மண்டபங்கள் விளங்கின. ஆதலின், தென்பாண்டி நாட்டில் மக்கள்பால் மனமொழி மெய் மூன்றினும் சைவமணம் கமழ்ந்த காலம் அது. இத்தகைய நலங்கள் நிறைந்த காலத்தில்தான் ஞானசூரியனைப்போலக் குமரகுருபரர் திருவவதாரம் செய்தருளினார். பிறந்த குழந்தை அழுகிறது; ஆனால் ஓசையில்லை. ஐந்தாண்டு வரைக்கும் ஊமையாகவே யிருந்து செந்தில் கந்தவேள் கருணையால் வாய் திறந்து பேசலுற்றார். வாயினைத் திறக்கும்போதே 'முருகா' எனத் திறந்தார். முருகன் திருவருளால் திருவாய் திறக்கப் பெற்ற குமரகுருபரர், முருகன்மீது மனமுருகிப் பாமாலை தொடுத்தார். முதன்முதல் அவர் பாடியது 'கந்தர் கலிவெண்பா' என்னும் செந்தமிழ்ச் சிறுநூலாகும். ஐந்தாண்டுப்

பருவத்தில் அருங்கவிதை பாடினார் என்று சொல்லுதல் எங்ஙனம் பொருந்தும்?

பால் தோன்றிய ஞானசமபந்தர் மூன்றாண்டுப் பருவத்தில் முத்தமிழ்ப்பாடல் இசைக்கவில்லையா? இரண்டாண்டுப் பருவத்தில் மெய்கண்டார் திரண்ட சித்தாந்த உண்மைகள் பொதிந்த சிவஞான போதத்தைச் செப்பவில்லையா? அகத்தியர் அருள் வரத்தால் உதித்தருளிய சிவஞான முனிவர் ஐந்தாண்டில் செந்தமிழ்ப்பாடல் பாடவில்லையா? இன்றும் பர்மாவிலே நாலாண்டுக் குழந்தையொன்று பெருங் கணக்குகளை யெல்லாம் சொல்லியவுடனே விடை பகர்கின்றதே! இவை யெல்லாம் அரிதில் வாய்க்கப்பெற்ற திறங்கள். முந்தை நல் வினைப்பயனால் முன்னவன் தந்தருளிய அருட்டிறமாகும்.

நக்கீரன் நல்கிய திருமுருகாற்றுப் படைக்குக் குமர குருபரரின் கந்தர் கலிவெண்பாவில் பொருள் காணலாம். அரிய சித்தாந்த உண்மைகள் நிறைந்த தத்துவநூல் கந்தர் கலிவெண்பா. சைவாகமங்களில் அத்துவப் பிரகரணத்தில் பேசப்படும் அத்வாப் பகுதிகள் மிகமிக அருமை வாய்ந்தன; எளிதில் எட்டமுடியாதன. அத்துவாக்களைப்பற்றி யறிவது, கந்தபுராணம் அண்டகோசப் படலத்திற்கு உரை காண்பது போலத்தான். சிறந்த சித்தாந்த வல்லாரும் அத்துவாக்களைப் பற்றிக் கேட்டால் சொல்ல அறியார். அத்தகைய அத்துவாக் களின் இயல்பைத் தெளிவுறத் தம் கந்தர் கலிவெண்பாவில் குமரகுருபரர் கூறுகிறார். தெய்வத் திருவருள் கைவந்தமையின் அங்ஙனம் எடுத்துக்காட்டும் ஆற்றல பெற்றனர்.

குமரகுருபரர், திருமுருகனைக் கண்களால் தரிசித்தார். அவனது திருக்கோலத்தை இனிய பாட்டால் தந்தார்.

யான் எனது என்பது அற்ற இடமே அவனது திருவடி, மோன பரமானந்தம்—முடி, ஞானம்—திருவுரு, இச்சை செயல் அறிவு—கண்கள், அருள்—செங்கை, இருநிலமே சந்நிதி, இங்ஙனமாக விளங்கும் தனிச்சுடர் என்று கண்டு கூறினார். தம்மைப் பேசுவித்த செயல் முருகனுக்கு அத்துணைப் பெருஞ் செயலன்று. ஆதலின் அதற்கு நன்றி செலுத்தல் முறைமை யன்று என்று கருதிய கவிஞர், அவன்பால் வேண்டும் விண்ணப்பத்தைப் பாருங்கள்!

“ஆயும் பழைய அடியாருடன் கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்டு
அடியேற்கு முன்னின் றருள்”

குமரகுருபரர் தம் காலத்துச் சமயநிலை, மொழிநிலை, ஆட்சிநிலை இவைகளையெல்லாம் அறிவிக்கும் நோக்குடன் அழகிய பாக்களைத் தம் நூல்களில் இடையிடையே தந்துள்ளார். எடுத்துக்காட்டாக ஒரு பாட்டைக் காண்போம்.

யர் நம் நாட்டில் புகத் தலைப்பட்டார்கள், புறச் சமயக்கொள்கைகளை மக்கள் உள்ளத்தில் புகட்டினர். மதுரையில் தோன்றிய சிவாகமங்களும் செந்தமிழ் இலக்கியங்களும் அழிந்துவிடுமோ என்ற அச்சம் ஏற்பட்டது. கீழ்நாடு, மேல் நாட்டினர் ஆட்சிக்குட்பட்டுவிடுமோ என்ற பயம் மக்களிடையே எழுந்தது. களப்பிரர் என்னும் கலிப்பகைஞர் தமிழ்நாட்டைக் கைப்பற்ற முயன்றனர். மறச்செயல்கள் நாட்டில் தாண்டவமாடத் தலைப்பட்டன. தமிழ் மன்னரின் அரசியலும் பெருங்குடியும் அழியத் தலைப்பட்டன. தமிழ் மன்னர் மூவருள் தலைசிறந்து விளங்கிய பாண்டியர், சோழருக் கொப்பாவர் என்று உணராதாரும் ஓத முற்பட்டனர். இத்தகைய கேடுகள் எல்லாம் தமிழ்நாட்டைச் சூழாவண்ணம் பாண்டிமகளாகத்தோன்றி அங்கயற்கண்ணி அரியாசனம் அமர்ந்து, மதுரைப்பதி தழையத் தழையுங்கொடியாய்த் திகழ்ந் தார் என்று குறிப்பிடுகிறார்.

முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ்
 நூல்பாழ் போகாமே
முளரிக் கடவுள் படைத்த வசுந்தரை
 கீழ்மே லாகாமே
அதிரப் பொருது கலிப்பகை ஞன்றமிழ்
 நீர்நா டாளாமே
அகிலத் துயிர்க ளயர்த்து மறநகடை
 நீணீர் தோயாமே
சிதைவுற் றரசிய னற்றரு மங்குடி
 போய்மாய் வாகாமே
செழியர்க் கபயரு மொப்பென நின்றுணர்
 ராதா ரோதாமே
மதுரைப் பதிதழை யத்தழை யுங்கொடி
 தாலோ தாலேலோ
மலயத் துவசன் வளர்த்த பசுங்கிளி
 தாலோ தாலேலோ.

கருவிலே திருவருள் வாய்த்த குமரகுருபரர், சமயஞானியாய்—தத்துவஞானியாய் — இலக்கிய ஞானியாய் — முற்றும் துறந்த முனிபுங்கவராய்த் திகழ்ந்து தெய்வத் தமிழ் மணம் கமழும் சைவத் திருக்கொடியைக் காசிமாநகரில் சென்று நாட்டிச் சிவனருள் பரப்பிய பெருமையை என்னென்பது!

# கோயிலும் குளமும்*

[இராவ்பகதூர், சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.]

க. முன்னுரை

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பது தமிழ் அன்னையின் முதுமொழி. அதனைத் தமிழ் மக்கள் நன்கு பாராட்டியுள்ளார்கள்.

ஓர் ஊர் கட்டுவதற்கு முந்தி, முதலில் கோயிலைக் கட்டுவார்கள். தமிழ்நாடு முற்றிலும் சுற்றிப் பார்க்கலாம். கோயிலில்லா ஊரைப் பார்க்கவே முடியாது. கோயில் இருந்தால் அதனோடு குளமும் இருக்கும். ஒரு சிறிய குளமோ, சின்னஞ் சிறு குட்டையோ இல்லாத ஊரையும்—சிறு சேரியையுங்கூடக் காண இயலாது. கூடியமட்டில் குளம் என்ற பெயராலே ஒரு சிறு நீர்நிலையாவது இருக்கும். குளத்துநீர் உடலின் அழுக்கைப் போக்க முடியும். கோயிலோ உடலிற்குள்ளே உள்ள உயிரின் மலத்தைப் போக்க இயலும். மனிதனுடைய இந்த இரண்டு அழுக்குகளையும் போக்கடித்து அவனைத் தூய்மையாக ஆக்குவதற்காகத்தான் கோயிலும் குளமும் தமிழர்கள் உண்டாக்கினார்கள்.

ஆகவே, தமிழனுடைய வாழ்க்கையிலே இந்த இரண்டும் இன்றியமையாத நிலையங்கள் ஆகிவிட்டன. முன் காலத்தில் தமிழன் தன்னுரிமையோடு சகல பண்பாடுகளிலும் சிறந்து விளங்கிக் கொண்டிருந்த நாளில், அவ்வாறு இவ்விரண்டு நிலையங்களையும் இன்றியமையாத பொருள்களாக வைத்து வாழ்ந்திருந்தான். இந்த நாளிலும் அவ்வாறே அவ்விரண்டு பொருள்களையும் தனது பண்பாட்டின் உரிமைச் சின்னங்களாக வைத்து வாழ்ந்து வருகிறான். இவ்விரண்டையும் உண்டாக்கினதேயன்றிச் சிறப்பாக அவைகளைப் பாதுகாத்தும் வருகிறான். அவைகளுக்கு வேண்டிய பாதுகாப்பும் பொருளும் உதவி வருகிறான். அதனால் கிடைக்கும் முழுநன்மையும் பெற்று வருகிறான். இந்த வகைகளில் இவ்விரண்டும் அவனுக்கு இன்றியமையாத பொருள்கள் ஆகி விளங்குகின்றன அல்லவா?

உ. பண்பாடு

ஒரு பெரிய நகரத்திற்குச் செல்லுவோம். அந்த நகரம் பண்டைய நகரமாக இருந்தால் அதன் இடையில் உன்னதமாகக்

*சென்னை வானொலி நிலையத்தில் 13-7-50 அன்று பேசியது. இசைவு பெற்று வெளியிடப்படுவது.

கோபுரம் தெரியும். அதனைச் சுற்றிலும் சதுரம், சதுரமாக மாடவீதிகள் செல்லும். அவைகளைச் சுற்றிலும் மக்கள் குடியிருக்கும் வீடுகள் இருக்கும். கோபுரத்தை ஒட்டி அருகே அழகிய குளம் தோன்றும். அக்குளத்து எதிர்க்கரையில் நின்று கொண்டு கோயிலின் நெடிய கோபுரத்தைக் கண்டால் அதன் சாயல் (பிரதிபிம்பம்) எப்படிப்பட்ட கல் மனத்தையும் கரைத்து இழுத்துச்செல்லும். ஒரு ஓவியனே அங்கே அமர்ந்து படம் பிடிக்கத் தொடங்குவான். என்ன அற்புதமான காட்சி! அக் காட்சிகளின் அழகினிலே பண்டைத் தமிழன் ஈடுபட்டுக் கணக்கில்லாத செல்வத்தையும், நேரத்தையும், மூளையையும் அதில் கழித்தான். இவை எல்லாம் வீணோ? இக்காலத்தில் சிலர் அவ்வாறு நினைக்கிறார்கள். உயர்ந்த கலைப்பண்பாட்டில் திகழும் மேல் நாட்டு ஆசிரியர்கள் இச்செயல்கள் வீண் அல்ல என்றும், பண்டைத் தமிழரின் உயர்ந்த பண்பாட்டை விளக்குகின்றன என்றும் புகழ்கிறார்கள். அவைகளிலே நாம் மகிழ்ச்சியுற வேண்டாமா? பெரிய நகரம் கிடக்கட்டும். அதில் காணும் காட்சி செயற்கை வடிவில் மட்டும் தோன்றினது ஆகும்.

சின்னஞ்சிறு கிராமத்திற்குச் செல்லுவோம். அது நாட்டுப் புறத்தில் உள்ளது. சுற்றிலும் தோப்புகள், வயல்கள், தோட்டங்கள், பச்சைப் பசேல் என்று விளங்கு இனிமை தரும். நீர் வடியும் கால்வாய்கள் சிலிர்சிலிர்த்துக்கொண்டு ஓடும். அருகிலே நன்செய்களுக்கு இடையே சிறியதொரு மேட்டிடத்தில் பெரும் மரப்பொழில்களிடையே ஒரு கிராமம் தோன்றும். அங்கு எல்லாவற்றிலும் முதலிலே அக்கிராமத்திற்குள் நுழையும்போதே எதிரே தோன்றுவது ஒரு அழகிய தெளிநீர்க் குளம். அது நீர் நிரம்பியிருக்கும். அதன் ஒரு புறத்திலே அழகிய படிக்கட்டுகள் தோன்றும். அவைகளில் மக்கள் குளித்துக்கொண்டிருப்பார்கள். சில பெண்மணிகள் குடங்களில் நீர் முகந்துகொண்டு நிற்பார்கள். அக்குளத்தின் பரப்பிலே பச்சைத் தாமரை இலைகள் மிதந்துகொண்டிருக்கும். இடை இடையே நண்டுகளின் கண்களைப்போல, தாமரை மொட்டுகள் கதிரவனை நோக்கி நிற்கும். சில மலர்கள் அழகிய வர்ணத்துடன் மலர்ந்து அவனை வரவேற்றுச் சிரிக்கும். இந்தக் காட்சிகளைக் காட்டிலும் அதில் தோன்றும் கோபுரத்தின் சாயல் வெகு கவர்ச்சியாக நீர்க்குள் தெரியும். தலையை நிமிர்ந்து பார்ப்போம். எதிரே வானை அளாவிநிற்கும் கோபுரம் நம்மை வசீகரிக்கும். அதன் பிம்பமோ நீரில் தோன்றி அசையும். இந்தவிதம் குக்கிராமத்தில் ஊர்க்கட்டில் இயற்கைக் குளமும், செயற்கைக் கோபுரமும், சிறந்த பண்பாடுகளைத் தோற்றுவிக்கும் நிலையங்கள்

ஆகும். விடியற்காலையில் நன்னீர் ஆடிக் குளக்கரையில் வழிபாடு செய்துகொண்டு நிற்கும் எந்த ஆடவனும் பெண்மணியும் கோபுரத்தின்மீது இளங்கதிர்கள் படிய, அத்தூய்மை ஒளி நீரிடையே தோன்ற, அக்காட்சியைக் கண்ணாரக் கண்டு மனவெழுச்சி பொங்கிக் கசிந்துருகி நிற்காமலிருப்பார்களா? அதுபோலவே மாலை நேரத்திலும் கதிரவன் மறையும்போதும் நீரில் கோபுரச்சாயல் தோன்ற அதனைப் பார்க்கும் எவனும் இருப்பானா? சற்று ஆராயுங்கள்.

## ௩. கவிகள் ஆர்வம்

இவ்வற்புதக் காட்சியைக் கண்டார் ஒருநாள் வாதவூர் அடிகள். இயற்கைக் காட்சியில் கடவுள் காட்சியைக் கண்டார். நெஞ்சு கனிந்தது. உவமைகள் பொங்கி எழும்பின. அவ்வுணர்ச்சியே வழங்கிய பாடலாக மாறி அன்புமயமாகப் பொழியத் தொடங்கியது.

"பைங்குவளைக் கார்மலரால்
செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தால் பின்னும் அரவத்தால்
தங்கள் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்."

(திருவாசகம், திருவெம். ௧௩)

என்று அருமைக் கவியாக மலர்ந்தது. "இதோ நீலோற்பலம். அது எம் அம்மையின் தோற்றம் அல்லவா? இதோ செந்தாமரை, அது என் அப்பனின் வடிவம் அல்லவா? இதோ நம்பியர்களும், நங்கையர்களும் நீராடி மலங்கழித்துத் தூய்மையர் ஆகின்றார்கள். அது எம் அம்மையப்பர்களின் அருள் நோக்கினால் அல்லவா? இந்த நறும்பொய்கை எம் அம்மையப்பரை நினைவு படுத்துகின்றதே," என்று வியந்து பேசுகின்றார். பின்னும்,

"காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாம்ஆடச்
சீதப் புனல்ஆடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளாம் மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடி
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்."

(திருவாசகம், திருவெம். ௧௪)

இதன்கண் மகளிர் நீர்விளையாடலை எத்தனை அருமையாக வரு ணிக்கிறார். மகளிர் நீர்விளையாடலில் எத்தனை ஆர்வம் காட்டுகிறார் களோ, அத்தனைக்கத்தனை அம்மையப்பரிடம் மக்கள் அன்பு காட்டுகிறார்கள். தாங்கள் காணும் இயற்கைக் காட்சிகளிலும், செயற்கைக் காட்சிகளிலும் எத்தனை மகிழ்ச்சி கொள்ளுகிறார் களோ அத்தனைக்கத்தனை ஆர்வம் நீர்விளையாடலிலும் கொண் டார்கள் போலும். வாதவூரடிகள் தாம் பெற்ற பேரின்பத்தைத் தம் அடியார்களின் நெஞ்சுகளிலும் உணர்த்திவிடுகிறார்கள் அல்லவா?

### குறிஞ்சிக் காட்சி

இவ்வாறு நகரங்களிலும் கிராமங்களிலும் காணும் காட்சி களைக் காட்டிலும், குறிஞ்சி நிலங்களில் காணும் கோயில் குளங்களின் காட்சிகள் மிக இனிமையாக இருக்கும். மலைச் சரிவின் அடிப்பகுதியில் வளைந்து வளைந்து செல்லும் இயற்கைக் குளத்துத் தெளிநீர் அம்மலையின் கரும்பாறைகளில் சிறு திவலைக ளாகப் படிந்து மேர்தி நுரைகளைக் கக்கிவரும் காட்சி எங்கும் காணலாம். திருப்பரங்குன்றத்துச் சாரற்பொய்கை, திண்டுக்கல் பாறை அடிவோரத்து நன்னீர் வாவி, நாமக்கல் சிங்கப்பெருமாள் தீர்த்தப்பொய்கை, சிவகிரி முருகன்காட்டு வளைகுளம், கழுகுமலை அடிவார நீள்குளம் இவைகளின் அழகுகளை வியவாதார் யாரே? பாறைகளுக்கு அடுத்திருக்கும் அமைப்பைப் பெறுதிருந்தும் குன்றுகளுக்குச் சிறிது தொலைவி லிருக்கும் குளங்களின் காட்சிகளும் கண்கொள்ளாக் காட்சிகளே யாகும். திருக்கழுக்குன்றச் சங்கதீர்த்தம், திருத்தணி அடிவாரத் தெப்பக்குளம், சிவாய்த்து வாட்போக்கிப் பாறைக் குளம் இவைகளைக் கண்டோர், கோயிற்குளங்கள் மலைகளின் உறவால் அளவுகடந்த பெருமை அடைவதை நன்கு கண்டு மகிழலாம். இக்குளங்களால் அம்மலைகளுக்கு அருகில் உள்ள குடிகள் அடையும் நன்மைகளோ மிகப்பல. கிராமங்களின் அமைப்பும் குளங்களுக்கு ஏற்றாற்போல் பெருமை பெறுவதை யும் காணலாம்.

## ரு. பழக்கப் பண்பாடு

கிராமங்களிலே குடியிருப்பவர்கள் பெரும்பாலும் உழவுத் தொழிலிலே ஈடுபடுகிறவர்கள். அவ்வப்பருவங்களை அனுசரித் துத் தங்கள் வேலைகளைச் செய்வார்கள். பகல் முழுவதும் வயல்களில் நெற்றிவேர்வை விழ வேலை செய்வார்கள். மாலை நேரங்களில் வீடுவந்து சேர்வார்கள். இரவு முழுவதும் குடும்

பத்தாருடன் உறவாடிக் களித்து மீண்டும் காலையில் வேலைக்குச் செல்வார்கள். அவ்வாறு வேலைக்குச் செல்லும் முன்னர் ஊருக்கு வெளியிலே சென்று காலைக்கடன்களை முடித்துக்கொண்டு குளக் கரைக்குச் செல்வார்கள். அப்போது விடிந்து கதிரவன் தோன்றுந்தறுவாயில் இருப்பான். காலையில் குளத்து நீர் ஊற்றுநீராகத் ததும்பி 'வெது வெது' என்றிருக்கும். அதில் படிந்து நீராடுவார்கள். சிலர் நீந்தியும் விளையாடுவார்கள். அது உடலுக்கு மிகவும் ஆரோக்கியமாக இருக்கும். பிறகு உடலை நன்ருகத் தேய்த்து உலர்ந்த உடைகளை உடுத்தித் திரு நீரோ திருமண்ணே அணிந்துகொண்டு கோயிலை வலம் செய்து கொண்டு தொழுதுவிட்டு வீடு செல்வார்கள். பிறகு சிற்றுண்டி அருந்திவிட்டு, தம் வயல்களுக்குச் செல்வார்கள். இந்த முறையே நாளுக்குநாள் செய்யும் பழக்கம் ஆகும். இந்த முறைகள் தவருது செய்து வருகையில் உடல் தூய்மை, உடற் பயிற்சி, மனதில் உற்சாகம், நெஞ்சில் அன்பு, வழக்கத்திஞல் பொறுமை முதலான நற்குணங்கள் தாமாகவே தோன்றிவிடும். இந்த வகையில் கிராமங்களில் பழக்கத்திஞலேயே பண்பாடு ஏற்பட்டு மன உறுதி, அறிவு முதிர்ச்சி, அனுபவசீலம் இவைகள் விளைந்து மிளிர்ந்துவிடுகின்றன. நீராடுகையில் பல அன்பர்களும் கூடுவ திஞல் நட்பும், கூட்டுறவின் உணர்ச்சியும் ஏற்படுகின்றன. இந்த முறை இந்த நாளிலும் கிராமங்களில் போகாமல் இருப்பதே நாட்டிற்கு நன்மை பயப்பது ஆகும்.

**சு. கலை உணர்ச்சி**

ஆண்மக்களே அன்றிப் பெண்மக்களும் கோயில் குளங் களுக்குச் செல்லும் பழக்கம் கிராமங்களிலே உண்டு. சாதா ரணமாகக் குடிநீர் எடுத்துவருவதற்குப் பெண்களே குளங் களுக்குச் செல்லுவது வழக்கம். அவர்கள் காலையில் எழுந்து குடத்தைக் கக்கத்தில் ஏந்திச்சென்று அதனை நன்ருகத் தேய்த்து நீர் மொண்டு வருவார்கள். அதஞல் அவர்களுக்கு உடற்பயிற்சி மிகுதியும் ஏற்படும். நகரப் பெண்டிர் அவ்வாறு செய்யாத வகையில் பலவீனத்திற்கு உள்ளாகிருர்கள். பெண்கள் பல ருடன் பழகித் தங்கள் அறிவை அதிகரித்துக்கொள்ள இட முண்டு. இளங்காற்றில் உல்லாசமாகப் பேசிக்கொண்டு சென்ருலே மன அமைதி மிகவும் ஏற்படும். இல்லாமற்போஞல் நகர மங்கையர்போலக் கூண்டில் அடைபட்ட கிளிகள்போலா கிப் பெருமூச்சுவிட்டு நோய்க்கு அடிமையாக வேண்டிவரும். மேலும், நீர்விளையாடும்போது தெளிநீர்த்திரைகளில் கைகளைக் குடைந்து ஆடுவதிஞல் இன்னிசையின் இன்பமும் துய்ப்பார்கள். அதனைக் கண்டன்ரோ சம்பந்தப்பெருமான் அச்செயலைக்

குறித்து வியந்து வெகு இனிமையாகப் பாடுகிறார். பண்ணுக்கேற்ற சொல்லமைதியும் அப்பாசுரத்தில் இருக்கக் காணலாம்.

"மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்" (திருஞான)

என்ற புனிதப் பாசுரத்தில் காணும் இன்னிசை நீர்ஆடலுக்கு ஏற்றவாறு அமைந்திருக்கிறதைக் காண்கிறோம் அன்றோ?

இவ்வாறு நீராடி ஆலயம் தொழுதுவிட்டு நன்னீர் ஏந்திக் கொண்டு செல்லும் மங்கையர்கள் தங்கள் வீட்டிலும் இன்னிசை, நல் உறவு, நல் ஒழுக்கம் முதலிய பண்புகளில் சிறந்திருப்பார்கள் எனலாம்.

## எ. தற்காலக் கோலம்

தற்காலம் பலவிதங்களிலும் மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. நகரங்களில் கோயில்களும் குளங்களும் திருப்பணி செய்த செய்கைகளினால் அழிந்து செயற்கைக் காட்சிகளாக மாறி விட்டன. திரு அல்லிக்கேணியில் அல்லி இல்லை. பொன் தாமரைக்குளத்தில் தாமரை இல்லை. அவற்றிற்கு மாறாகப் பாசமும், நாற்றமுமே மிளிர்கின்றன. ஆனால் கிராமங்களில் அத்தனை சீர்கேடு வரவில்லை. நீர்வளம் மிகுந்திருக்கும் பொன்னி நாட்டில் கிராமங்களில் இன்றைக்கும் குளங்கள் தூய்மையாக இருக்கின்றன. ஆணும், பெண்ணும், அவைகளிலே நீராடுகிறார்கள். திருப்பணி செய்யப்பட்ட குளங்களில் மட்டும் நீர்ப்பூ மலரும் கொடிகள் மறைந்துபோய்ப் பாசப் புற்களும் குழித்தாமரைகளும் முளைத்துவிட்டன. குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொள்ளும் நிலையும் சில இடங்களில் ஏற்படும் என்றால், நாட்டுப் போக்கு எவ்வாறு இருக்கிறது என்று அறியலாம்.

கிராமங்களிலே எளியவர்கள் மிகுதி. அவர்கள் வசிக்கும் இல்லங்களில் வேண்டிய நன்னீர் வசதிகள் கிடையா. வீடுகளிலும் இன்பம்தரக்கூடிய வீட்டு அமைப்பும் இல்லை. ஆகவே அப்படிப்பட்டவர்களுக்குக் கோயிலும் குளமும் அக்குறைகளை நிவர்த்தி செய்வன ஆகும். இவைகளே பொது இடங்கள் என்க. எல்லா மக்களும் அவைகளில் பழக உரிமை உண்டு. இன்னிசை, சிற்பம், ஆடல் முதலிய நற்கலைகளில் எளியவர்களும் தொடர்பு பெற்று வாழ்க்கையில் இன்பம் துய்ப்பார்கள். அவைகளை அறவே கெடுப்பது சரி அல்ல. ஆகவே, கோயில் குளங்களை நல்ல நிலைமையில் வைத்து, நம் பண்டை வழக்கங்களைப் போக்கடிக்காது அவைகளால் நன்மையும் பெருமையும் அடைவதே நாம் செய்யவேண்டிய கடமையாகும்.

# முருகு

[செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை]

'முருகு' என்பது பண்டைக்காலந்தொட்டே வழங்கி வரும் ஓர் அரும்பெருஞ் சொல்லாகும். இம் முருகு என்னும் சொல், மணம் இளமை அழகு என்னும் பலபொருள் தருவ தாகும். 'திருமுருகாற்றுப்படை' என்னும் சீரிய நூலில் இறைவன் திருவுருவத்தைக் குறிக்குங்கால், 'மணங்கமழ் தெய்வத்து இளநலம்' (உ௯௦) என்று மணமும் இளமையும் அழகும் ஒருங்கே அமைந்த திருவுருவாக அந் நூலாசிரியராகிய நல்லிசைப்புலமை நக்கீரனாரால் நன்கு எடுத்து மொழியப்

இம் மணம் என்பதுதான் என்ன? அஃது என்றும் அழியாது ஒரே தன்மைத்தாய் இருக்கும் இயற்கை மலரில் தோன்றும் மணம், மலரும் பருவத்திலுள்ள பூவில் பொதிந் திருக்கும் இயற்கை நுண்பொருள். அப் பூ விண்டவுடன் அது காற்றுடன் கலந்து வெளிவந்துலாவுகின்றது. அப் புதுப் போது நாழிகை செல்லச்செல்ல அதன் செவ்விய நறுமணம் சிறிது சிறிதாக அகன்றுபோய் வேறொரு மணமாக மாறிக் காய்ந்து உலர்ந்து நிறந்திரிந்து போகின்றது. பின் அதன் வடிவமும் அழிந்து சிதைந்தொழிகின்றது. எனவே, இப் பூவில் தோன்றிய மணமும் இளமையும் அழகும் நிலையின்றி இருப்பதைக் காண்கின்றோமன்றோ?

இம் மணமும் அழகும் இளமையும் வெவ்வேறு வகை மணங்களாக அழகுகளாக இளமைகளாகப் பலப்பல மலர்கள் தோறும் மரம் செடி கொடி இலை மலை யாறு கடல் முதலிய எல்லாப் பொருட்களிலும் கலந்து வேறுபிரித் தறியாவண்ணம் இலங்கி மிளிர்வதை அறியலாம்.

மலர்களில எ

நிறங்களா; எதததன எதததன அழகுகளா; எ;

வேறுபாடுகள்; வெண்ணிறம், செந்நிறம், பொன்னிறம், கரு நிறம், பசுநிறம் எல்லாம் எங்கிருந்துவந்தன? முல்லையின் மணம் ஒன்று, அதன் அழகு வேறு ஒன்று; இருவாட்சியின் மணம் மற்றொன்று, அதன் அழகும் மற்றொன்று; சண்பகத்தின் தனி மணம் வேறொன்று, அதன் அழகும் வேறொன்று; குரவு கடம்பு வெட்சி மரவம் கோங்கு வேங்கை குடசம் தான்றி தோன்றி கொன்றை தாழை சந்தனம் குருக்கத்தி பாதிரி நாகம் தாமரை

அல்லி குவளை முதலிய பூக்களிலெல்லாம் பொருந்தியுள்ள அழகு மணம் இளமைத் தன்மையெல்லாம் வேறு வேறு இவைகட்கெல்லாம் இவை யாண்டிருந்து கிளைத்தன? இவை யெல்லாம் ஒரே தன்மைத்தாய் இருக்காத காரணம் யாது?

மயிலின் சாயலில்—அதன் தோகைகளில்—தங்கியிருக்கும் அழகு எத்தகைத்து? கண்ணையும் மனத்தையும் கவர்ந்து நெஞ்சை அள்ளி உள்ளுறைபோக்கும் உயர்ந்த அழகன்றோ? அன்னத்தின் தூவியில் மென்மையும் வெண்மையும் யாண்டிருந்து கிடைத்தன? கிளியின் மூக்கில் செம்மையும் இறகில் பசுமையும் இன்னும் பன்னிறமும் எவணின்றும் போந்தன? குயிலுக்குக் கருமையும் புள்ளிகளும் எங்கிருந்து வந்தன? கோழிக்குப் பளபளப்பான வால்மயிரும் தாடியும் கொண்டையும் எப்படி வளர்ந்தன? பாம்புக்குப் படம் எப்படிக் கிடைத்தது? நஞ்சு அவைகட்கு ஏன்? மானுக மருள்வதும், புலியாகக் குமுறுவதும், யானையாகப் பிளிறுவதும் ஏன்? இவைகளுக்குள்ள நட்பும் பகையும் அச்சமும் அஞ்சாமையும் யாண்டிருந்து வந்தன? ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறு குணங்கள் இருக்கின்றன என்னை?

'மயிலே நீ ஏன் ஆடுகின்றாய்! குயிலே நீ ஏன் பாடுகின்றாய்! அன்னமே நீ ஏன் நடைபயில்கின்றாய்! கிளியே நீ ஏன் பேசுகின்றாய்! கோழியே நீ ஏன் கூவுகின்றாய்! பாம்பே நீ ஏன் சீறுகின்றாய்!' என்று அவைகளை வினவின், அவை அதற்கு விடை தரா! அவைகளின் இயற்கையில் படிந்து நினைவை ஒருமுகப் படுத்தப் படுத்த அவை தம்மி[illegible]த்தினின்று தானே விடை கிடைக்கும்.

மாதர்களின் மங்கைப் பருவத்தின் மாண்பு கண்டு மயங்குவதேன்? இம் மாதரார்க்குத் தனிச் சிறப்பென்ன? ஏன் ஆண் வடிவம் இப்பெண்மை கண்டு மயங்குகின்றது? ஏன் ஆண் வடிவு கண்டு பெண்வடிவம் அலமருகின்றது? அவர்கள் குடரும் கொழுவும் குருதியும் என்பும் தொடரும் நரம்பொடு தோலும் இடையிடையே வைத்த தடியும் பெற்ற உடலினரன்றி வேறெத்திறத்தர்? இப் புன்புலால் யாக்கையை நச்சுவானேன்? மருட்சியா! என்றால், இல்லை! இல்லை! பருமை! பருமை! நுண்மையன்று! அவ்வுடலில் அடங்கிக்கிடக்கும் நுண்மை ஒன்றுளது! அதுவே பல்லில் வெண்மையும், இதழில் செம்மையும், முகத்தில் ஒளியும், கூந்தலில் மினுமினுப்போடுகூடிய கருமையும், அடக்கமும் ஆண்மையும் கொண்டு விளங்குவது. இதைக் கண்டால் யார்தான் மயங்காதார்? யார்தாம் முயங்காதார்?

மேகத்தின் குமுறலும் கடலின் அசைவும் மரங்களின் மாண்பும் குளிர்வும் கொழுமையும் வற்றி உலர்ந்த மனத்திற்கு இன்னீரன்றோ? இவைகளே இன்னீர் உலகத்திற்கு இன்னுயிர் யாம் என்றுணர்த்தும் இயற்கையன்றோ?

“திங்கள் மதிமுகத்த சேலும் பவளமும்
சிலையும் முத்தும்
கொங்குண் குழலாள்மெல் ஆகத்த கோங்கரும்பும்
கொழிப்பில் பொன்னும்
அங்கை குழியா அரக்கீத்த செந்தளிர்நெய்
தோய்த்த போலும்
மங்கை மலரடியும் தாமரையே” (சீவகசிந்: ௬௪௩)

என இருந்த மெல்லியலார்தம் நல்வனப்பு நாட் செல்லச் செல்லக் கரைந்து போகின்றது. அவ் அழகு—இளமை—யாண்டுற்றன கொல்லோ! அவர் கோல் காலாகக்கொண்டு நடப்பது ஏனோ? போன இளமை—அழகு—ஏன்! மீண்டு வருவதில்லை? பகைமையா! விளையாட்டா? இதை உற்று உற்று நினைந்து நினைந்து கண்ட தொடித்தலை விழுத்தண்டினார் என்னும் பழங் காலத் தமிழ்ப்புலவர் ஒருவர்,

“இனிநினைந் திரக்கம் ஆகின்று திணிமணல்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு
உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படுகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணல்கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி நடுக்குற்று
இருமிடை மிடைந்த சிலசொல்
பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே.” (புறம்: ௨௪௩.)

என, இளமைச் செவ்வியைத்—தாம் இளைஞராய் இருந்த காலத்து நிகழ்ந்த நிகழ்ச்சியை நினைந்து ‘அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ’ என்று வருந்துகின்றார்.

இவ் இளமைக் காலத்தில் எந்தப் பொருளைப் பார்த்தாலும் நமக்கு இன்பக் காட்சியளிக்கின்றன. இளங் குழந்தை இளங்காளை இளம்பறவை இளம்பயிர் இளஞ்செடி இளந்தளிர் இளங்கொடி இளம்பிஞ்சு இளங்காய் இளந்தென்றல் இளம்பருவமென்று காண்பன எல்லாம் எவ்வளவு சிறந்ததாய்—எவ்வளவு அழகிய தாய்—பார்க்கப் பார்க்கத் தெவிட்டாததாய்—கண்ணையும்

கருத்தையும் கவர்ந்து நிற்கின்றன. ஆ! இளமைக் காட்சிதான் என்னே! என்னே!

இந்த மணமெல்லாம் — இந்த அழகெல்லாம் — இந்த இளமையெல்லாம் ஒருங்கே தன்னிடத்தே கொண்டுள்ள பொருள் ஒன்றுள்ளது. அதைப் பழந்தமிழர், முருகு! முருகு! என அழைத்தனர்; மகிழ்ந்தனர்; அதன் உள்ளொளியில் மூழ்கினர்.

அம் முருகு: இளமை, அழகு, மணம் என்னும் இவைகள் வெயிலிற் புலர்வதில்லை: வேனிலில் திரிவதில்லை; பனியில் பாறுவதில்லை; மழையில் மாறுவதில்லை; அது வாடாது; வதங்காது; தேம்பாது; தியங்காது; என்றும் புலராது; யாணர்நாள் செல்லுகினும் நின்றலர்ந்து தேன் பிலிற்றும் நீர்மையுடையது. அது கட்புலனாற் காணவொண்ணாதது; செவித்துளையிற் சேராதது; நாவால் நாடாதது; மூக்குத் துளையை முட்டாதது; கைக்கும் எட்டா மெய்யுடையது. மனநிலையையும் கடந்துநிற்கும் வான் மணம்—அழகு—இளமை. அது மனவொருமைக் காட்சியில் வந்து தோன்றுவது. இயற்கையில் தலைக்கூடும் அன்பர்க்கே அதை நுகரமுடியும். அது கட்டுக்கு அடங்காதது! காலவெல்லையைக் கடந்து நிற்பது! அது காலாய் நீராய்க் கனலாய் மண்ணாய் வானாய் மலர்வது. இப் பெரும்பொருளினின்றே வெவ்வேறு வகை மணங்களாக அழகுகளாக இளமைகளாக இலங்குவதைக் காணலாம்.

இம் முருகை யாழிடைப் பிறவா இசை யென்பேன்! மலரிடைப் பிறவா மணமென்பேன்! பூவிடைத் தோன்றாத் தேனென்பேன்! இம் முருகு யாண்டும் பரந்து உலகைக் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி வருகின்றதன்றோ? இவை முருகு ஒன்றிலிருந்தே இயங்குகின்றன. அதனால் நாம் ஆட்டுவிக்கப் பெறுகின்றோம். அஃதொன்றால் இயக்கப்பெறாவிட்டால் நாம் கட்டையாய்—மண்ணாய்—கல்லாய் அசைவற்று இயங்காப் பொருளாய்க் கிடக்கின்றோம். அது என்றும் செவ்விமாறாச் சேயாயிருந்து அருள் தருகின்றதன்றோ?

அதை ஒருகால் 'முருகெ'ன்பேன்! ஒருகால் 'இயவுள்' என்பேன்! ஒருகால் 'கடவுள்' என்பேன்! ஒருகால் 'அன்பெ'ன்பேன்! ஒருகால் 'அருள்' என்பேன்! அது, மறைமொழிகளாலும், அல்லை ஈதல்லை ஈதென அன்மைச் சொல்லினால் துதித்து இளைக்கும் சொன்னலங்கடந்த தூய 'வான்பொரு'ளென்பேன்! என்ன கூறினும் அன்ன தன்மைத்தாய் நிற்கும். அதுவே, முருகு, முருகு, முருகு என்னும் முதற்பொருள் ஆகும். இம் முதலைக்

கூறிக்கூறி விழைவுகூரக்கூரக் குழுறிக் குமுறி இன்பங் கொட்டு கின்றது, என் குளிர் மனம்!

இம் முருகே! முருகனாய்—வெளியாய்—செவ்வானாய் ஞாயிறாய்—திங்களாய்—நாண்மீனாய்த் திரிதந்தான்! இவ் வுருவங்கள் மக்கள் மனத்தை ஈர்த்து ஈர்த்து என்னையும் உருக்கின. இவ் இயற்கைக்கு உருவங் கற்பித்தனர். இயற்கைப் பொருள்களில் பல்வகைய உருவுங் கண்டு கண்டு அவ் வுருவைக் கல்லில் செதுக்கினர்! துணியில் எழுதினர்! அவைகளை மனத்திரையில் வைத்து வைத்து மகிழ்வுறத் தீட்டி மகிழ்ந்தனர்! தொழுதனர்! விழவு எடுத்தனர்! கதை கண்டனர்! புராணம் புகன்றனர்!

"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயின்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறியயர் களனும்
காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்."

(திருமுருகு: உஉ அ - உ௩)

இம் முருகன் திருவுருவை வைத்துக் கொட்டி முழக்கிக் கூத்தாட்டெடுத்து, வழிபாடு செய்து மலைமீது வைத்து வணங்கினர். இக்காட்சியைச் "சேயோன் மேய மைவரை உலகம்" (பொருள். ரு) மென்று தொல்காப்பியனாரும் விரித்துரைத்தார். திணை பால் கடந்த செம் முருகை ஒருமை ஆண்பாற்படுத்தி,

'அருவமும் உருவ மாகி அனாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி ஆகிக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய"

(கந்தபு. திரு அவ: ௯உ)

எனப் போற்றி வருவாராயினர். அதுவே முருகன் வழிபாடாய்—மலைத் தெய்வமாய்—தமிழ்நாட்டுக் கடவுளாய் நின்று நிலவி என்றும் எங்கும் உலவி வரலாயிற்று.

இம் முருகு: இளமை மணம் அழகு! வளர்க! வளர்க! தழைக்க! தழைக்க!

அம் முருகால் உலகிற்கு மழைத்தொழில் உதவ! மாதிரம் கொழுக்க! தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய! நிலனும் மரனும் பயன் எதிர்பு நந்த! நோயிகந்து நோக்கு விளங்குக! வாழ்க! வாழ்க! உலகெல்லாம் வாழ்க!

# கண்ணுதலைத் தொழும் அன்பு

[தமிழாசிரியர், சுந்தரகுமரன், புதுவை]

மக்களால் விரும்பப்படுவது இன்பமே. இன்பங்கள் உலகத்துப் பலவுள்ளன. அவற்றுள் தலைசிறந்தது காம இன்பமே. இதனன் அன்றோ போசராசனும் 'சுவை பல என்று கூறுவார் கூறுக; யாங் கூறுவது இன்பச்சுவை ஒன்றனையுமே' எனக் காம இன்பத்தை மிகுத்துக்கூறக் காரணம் என்னென நோக்குவாம்.

மக்கள் இன்பம் துய்க்க இறைவனால் உண்டாக்கப்பட்ட வாயில்கள் ஐந்து. அவை முறையே மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவாம். அவற்றுள், மெய்யினால் ஊற்றின்பமும், வாயினால் சுவை இன்பமும், கண்ணினால் காட்சி இன்பமும், மூக்கினால் நாற்ற இன்பமும், செவியினால் ஓசை யின்பமும் மக்கள் துய்க்கின்றனர். துய்க்கப்படு பொருள்கள் யாவும் மென்மையுடையனவாக இருத்தல்வேண்டும். இன்றேல் இன்பம் உண்டாகாது.

> "சேந்தொத் தலர்ந்த செழுந்தா மரையன்ன வாட்கண்
> பூந்தொத் தலர்ந்த பசும்பொற் கொடியன்ன பொற்பின்
> ஏந்தொத் தலர்ந்த முலையின் னமிர்தன்ன சாயல்
> வேந்தற் கமுதாய் விளையாடு தற்கேது வாமே." (சீவ. ப. 8)

என்னும் சிந்தாமணிச் செய்யுளில் குறிக்கப்பட்ட அமிர்தன்ன சாயல் என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர், அமிர்தம் கட்கினிதாகிய மென்மையும், தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமற் றடுக்கும் மென்மையும் உடைமையின் அமிர்தன்ன சாயல் என்றார் என்று கூறிச் "சாயன் மென்மை (தொல். உரி. 27) என்று பொதுப்படச் சூத்திரம் செய்தது ஐம்பொறியானும் நுகரும் மென்மையெல்லாம் அடங்குதற்கு, 'மயிலன்ன சாயல்' (ஏலா. 28) 'சாயன் மார்பு' (கலி. 65) என ஒளிக்கும் ஊற்றிற்கும் வந்தன. பிறவும் காண்க" என மேலும் கூறுவனவற்றானறிக.

இத்தகைய ஐம்பொறிகளானும் நுகரப்படும் மென்மையவாய ஐந்து பொருள்களும் ஒண்டொடியார்பால் உள. அவற்றை ஒருகாலத்தே ஒருசேர நுகர்தலானன்றே காம இன்பம் சிறந்ததாயிற்று. இதனை,

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள." (திருக்குறள், 1101)

எனத் திருவள்ளுவர் கூறுவதனான் அறிக. அற்றேல், அஃதாக. ஒண்டொடியார் அவ்வைந்தின்பமும் ஆடவர்பால் ஒருசேர

எய்துதலுண்டோ? இன்றாயின், அவர்கட்குக் காம இன்பம் சிறவாதால் எனின் கூறுதும்: பெண்டிரும் ஆடவர்பால் ஒரு சேர ஐம்பொறிகளானும் இன்பம் துய்த்தல் உண்டென்றே கொள்ள இடனுண்டு. அதனைக் கீழ்க் கூறுவதனான் அறிக.

"இதுமற் றெவனோ தோழி முதுநீர்
புணரி திளைக்கும் புள்ளிமிழ் கானல்
இணரவிழ் புன்னை எக்கர் நீழல்
புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கன்
கண்டன மன்னெங் கண்ணே அவன்சொற்
கேட்டன மன்னெஞ் செவியே மற்றவன்
மணப்பின் மாணலம் எய்தித்
தணப்பின் நெகிழ்பஎன் தடமென் தோளே" (குறுந். 299)

என்னும் இக் குறுந்தொகைப் பாட்டு, தலைவன் களவொழுக்கில் பெருவிருப்பினனாய் மணஞ்செய்துகோடலைக் கருதாது சிறைப் புறத்து வந்துநின்றபோது தலைவி, தலைவனுக்கு வரைதல் வேண்டும் என்னும் குறிப்பு வெளிப்படத் தோழிக்குச் சொல்லு வாள்போன்று சொல்லியது. இப்பாட்டின் பொருள் வருமாறு:

தோழி! நிலத்திற்குப் பழையதாகிய கடலின் அலைகள் அளாவுகின்ற பறவைகள் ஒலிக்கின்ற கடற்கரைச் சோலையில் உள்ள பூங்கொத்துக்கள் மலர்ந்த புன்னை வளர்ந்தமேட்டிலுள்ள நீழலில் புணர்குறியைப்பெற்ற ஞான்று எம் கண்கள் தலைவனைப் பார்த்தன; எம் காதுகள் அவன் சொற் கேட்டன; என் பரந்த மெல்லிய தோள்கள் அவன் என்னை மணந்தால் மாட்சிமைப் பட்ட அழகைப்பெற்று அவன் பிரிந்தால் சோருவன இது என்ன வியப்பு! என்பதாம்.

இதனால் கண், செவி, மெய் மூன்றினானும் தலைவி தலைவன் மாட்டு ஒருசேர இன்பந் துய்த்தனள் என்பது போதரும். ஒழிந்த நாவும் மூக்கும் இன்பந் துய்த்தமையைக் கூறச் சோர் வுற்றனள் எனக் கொள்க. சோர்வுற்றவாறென்னையெனிற் கூறுதும்:

தலைவன் களவொழுக்கம் நீங்கித் தன்னை வரைந்துகொள்ள வேண்டும் என்ற நினைவோடிருந்தனள் தலைவி. எனவே, தலைவி கலக்கமுடையவளாய் இருந்தனள் என்பது ஒருதலை. ஆயினும் இன்பம் துய்த்த பொறிகளைக் கூறத் தொடங்கி இன்பம் துய்த் தும் தனக்கு ஊறு செய்யாத கண், செவி இரண்டையும் கூறும் பொழுது கிளர்ந்த உள்ளத்தினளாயிருந்து, பின்னர் இன்பம் துய்த்துத் தனக்கு ஊறு செய்யும் தோளைக் கூறும்பொழுது கூம்பிய உள்ளத்தினளாய்விட்டனள். அதனான் சோர்வுற்றனள் என்க. அக் காரணத்தானே மற்றை இரண்டு பொறிகளும்

துய்த்த இன்பத்தைக் கூற இயலாது விட்டனள். கண், செவி இவற்றைக் கூறுங்கால் கிளர்ந்த உள்ளத்தினளாய் இருந்தனள் என்பதை எம் கண், எம் செவி எனத் தன்னைத் தன்மைப்பன்மை யாற் கூறியதும், தோளைக் கூறும்வழிக் குவிந்த உள்ளத்தின ளாய் இருந்தனள் என்பதை என் தோள் எனத் தன்னைத் தன்மை யொருமையாற் கூறியதும் வலியுறுத்தும். எனவே சோர்வின்றி இருந்திருப்பாளாயின் ஒருகாலத்தே ஒருசேர ஐம்பொறிகளும் இன்பம் துய்த்தமையைக் கூறியிருப்பள் என்பது புலனும்.

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள." (திருக்குறள், 1101)

எனத் தலைவன் கூறியதும் புணர்ச்சி நிகழ்ந்தபின்றை மகிழ்ச்சி யில் இருந்தபொழுது என்பது நினைவுகூர்தற்பாலது.

ஆயின், ஆசிரியர் பரிமேலழகர் "ஒண்டொடி கண்ணே யுள," என்பதிலுள்ள தேற்றேகாரம் வேறிடத்தின்மை விளக்கி நின்றது எனக் கூறினால் எனின், தலைவன், தலைவிமாட்டுத் தனக்குள்ள அன்பின் பெருக்கை அவள் உள்ளம் உவக்குமாறு கூறினன் என்பதை விளக்க அங்ஙனம் கூறினர் எனக் கொள்க. ஆசிரியர் பரிமேலழகர் கருத்து இஃதே என்பதைக் காமத்துப் பாலின் தொடக்கத்தில் இன்பம் என்பது, ஒருகாலத்தே ஒருவன் ஒருத்தியின் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாய காம இன் பத்தினை என்னுது, ஒருகாலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாய காம இன்பத்தினை எனப் பொதுப் படக் கூறுவதனால் நன்கறியலாகும்.

ஐம்பொறிகளானும் நுகரப்படும் பொருள் யாவும் மென்மை யுடையனவாக இருக்கவேண்டும் என்பது முன்னர்க் கொள்ளப் பட்டதன்றோ? ஆகவே, வன்மையுடைய ஆடவர்பால் உள்ள புலன்கள் மென்மையுடையனவாய்ப் பெண்டிர்க்கு இன்பந் தரத் தக்கனவோ எனின் கூறுதும்: மென்மைத் தன்மையுடைய மகளிரோடு கலந்தவழி ஆடவரும் தம் வன்மையிழந்து மென்மையுடையவராவர். ஆகவே, அவர்பால் உள்ள புலன் களும் மகளிர்க்கு மெல்லியனவாய் இன்பம் தருவனவேயாம் என்க. இதனைக் காஞ்சிபுராணத்துத் தழுவக்குழைந்த படலத் தானும் இறைவனைத் 'தளிரியற்குக் குழைந்தவன்' என அறிஞர் கூறுவதனானும் வேறு பலவற்றானும் நன்கு அறியலாகும்.

இத்தகைய இன்பம் துய்த்தற்குரிய தலைவன் தலைவியர்கட் குள் உண்டாகும் அன்பே காதல் எனப்படும். காதல் என்னும் சொல் பெரும்பான்மையும் தலைவன் தலைவி இவர்க்குள் உண் டாகும் அன்பையே குறிக்கும். அது காதலன் காதலி என்

பதனானும், "காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம்," என்று ஔவையார் கூறுவதனானும், திருக்குறள் காமத்துப்பாலில், தலைவன் தலைவி இவர்கள் அன்பின் மிகுதியைக் குறிக்கும் அதிகாரத்திற்குக் 'காதற் சிறப்புரைத்தல்' எனத் திருவள்ளுவர் பெயர் ஈந்தமையானும் அறியலாகும். எனவே, காதலில்லார்க்கு இவ்வுலக இன்பம் இல்லையென்பது தேற்றம்.

இனிக், கண்ணுதலைத் தொழும் அன்பைப்பற்றிக் கூறுவாம்.

மக்களால் எய்துதற்குரிய இன்பம் அழியக்கூடியதும் அழியாததும் என இருவகைப்படும். முற்கூறிய காதலால் உளதாகிய இன்பம் அழியக்கூடியதாம். அதனைச் சிற்றின்பம் எனவும் ஆன்றோர் கூறுவர். துன்பத்திற்குக் காரணமாகிய பிறவி நீங்கப்பெற்று, இறைவனோடு இரண்டறக் கலந்து துய்க்கும் இன்பமே அழியாததாகும். இதனை ஆன்றோர் பேரின்பம் எனவும் கூறுவர். இவ்வின்பத்தை யடைவதே மக்கட் பிறவியின் பயனுமாகும்.

> "வீடொழியப் பேறில்லை என்றென்று வேதங்கள்
> நாடியறை யும்பொருளை ஞானகுரு—நாடுமருட்
> கண்ணாலே சொன்ன கருணைப்பிரான் றனையான்
> எண்ணாதே உண்டிருப்ப தேன்."

என்பதனா னறிக.

இவ்வீட்டின்பத்தை அடைய இறைவனை வழிபடுதற்குரிய அன்பே கண்ணுதலைத்தொழும் அன்பாகும்.

கண்ணுதலைத் தொழுமாறெவ்வாறெனின்? அதனை,

> "நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
> நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
> புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
> பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
> தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
> சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
> அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதீ யென்றும்
> ஆரூரா என்றென்றே அலறா நில்லே." (ஆளுடைய அரசு, 3)

என்னும் இதனான் அறிக.

இக்கண்ணுதலைத் தொழும் அன்பு என்றும் மக்கள் உள்ளத்தில் நிலைத்திருத்தல்வேண்டும். திருமூலரும் கண்ணுதலைத் தொழும் அன்பை எப்பொழுதும் கொண்டிருந்தனர் என்பதை,

"பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை
துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே." (திருமந். 270)

என்னும் இதனான் அறிக.

எனவே, காதலில்லார்க்கு இவ்வுலக இன்பமும், கண்ணுதலைத்தொழும் அன்பில்லார்க்கு வீட்டின்பமும் இல்லையென்பது தெளிவு.

ஆயின், வீட்டின்பம் விழைவோர் காதலை யொழித்துக் கண்ணுதலைத்தொழும் அன்பையே கைக்கொள்ளவேண்டும் போலும் எனின் அற்றன்று. கண்ணுதலைத் தொழும் அன்பிற்கு ஊறுநேராவழிக் காதலும் கொள்ளுதற்குரித்தேயாம். அற்றேல், காதலும் கண்ணுதலைத் தொழும் அன்பும் உடையராக வாழ்தலுங் கூடுங்கொல் எனின், கூடும் என்க. அதனைக் கீழ்வருவனவற்றா னறிக.

சுந்தரர், காதலும் கண்ணுதலைத் தொழும் அன்பும் ஒருசேர அமையப்பெற்று வாழ்ந்தவர். அஃது அவர் வரலாற்றை உற்று நோக்குவார்க்குப் புலனாம். அன்றியும், அவர் திருவாய் மலர்ந்தருளிய,

"பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும்
பற்றாய பெருமானே" (ஆரூருடைய நம்பி, கக)

என்னும் சொற்றொடரே சான்று பகராதோ? நிற்க.

அருங்கலை வாதவூராகிய மாணிக்கவாசகர் திருக்கோவையாரில்,

"ஈசற்கு யான்வைத்த அன்பின் அகன்றுஅவன் வாங்கியஎன்
பாசத்திற் காரென் றவன்தில்லை யின்ஒளி போன்றவன்தோள்
பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த்தை யிற்பெரு நீளம் பெருங்கண்களே."
(திருக்கோவையார், 109)

எனக் கூறிய செய்யுளுள் காதலும் கண்ணுதலைத் தொழும் அன்பும் கலந்து செல்லுதலைக் கண்டின்புறுக.

அற்றேல், அஃதாக இம்மையின்பமாகிய காம இன்பம் துய்த்த பின்னர் வீட்டின்பத்திற்கு முயல்வாம் எனின், அது தவறு; என்னை? இவ்வுடல் இத்துணைநாட்கள் நிலைத்திருக்கும் என்பது கூறவியாலது ஆகலான். பரிமேலழகரும்,

"நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்" (திருக்குறள், 335)

என்ற திருக்குறளில் அதுதான் (மரணவேதனை) இன்னபொழுது வரும் என்பது இன்மையின், மேற்சென்று என்றுங் கூறினார்

எனக் கூறுவதனால் அறிக. ஆகவே, கண்ணுதலைத் தொழும் அன்பைப் பின்னர்க்கொள்வாம் எனல் தவறே.

காதலையும் கண்ணுதலைத் தொழும் அன்பையும் உடையராய் வாழும் காலத்தும் காதலினும் கண்ணுதலைத் தொழும் அன்பே மிக்குடையராக வாழவேண்டும். இங்ஙனம் வாழ்வாரே மக்களுள் மக்கள் எனப்படுவாராய் இறைவனுக்கு அணுக்கத் தொண்டராய்த் தெய்வப்புலவர்களால் புகழப்படுவர். இதனைப் பின்வருவனவற்றானறிக.

திருவாரூரில் சுந்தரமூர்த்திகள் ஓர்நாள் புற்றிடங்கொண்ட பெருமானை வழிபட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தார். அதே சமயத்தில் உருத்திரகணிகையர் மரபில்வந்து தோன்றிய பரவையார் என்னும் அம்மையாரும் கண்ணுதலைத் தொழ ஆலயத்திற்குச் சென்றனர். திருக்கைலையில் தமக்குள் காதலித்த தொடர்பால் ஈண்டும் காதலித்தனர். அது,

" கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன்என்று அதிசயித்தார் "

எனச் சுந்தரர் பரவையாரை நோக்கிக் கூறுதலானும்,

" முன்னேவந் தெதிர்த்தோன்றும் முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேஎன் மனந்திரித்த இவன்யாரோ எனநினைந்தார்."

எனப் பரவையார் சுந்தரரை நோக்கிக் கூறுதலானும் அறியப்படும்.

இவற்றுள்ளும், "சிவனருளோ?" என்பதும், "மின்னேர் செஞ்சடையண்ணல் மெய்யருள் பெற்றுடையவனோ" என்பதும் காதலினும் கண்ணுதலைத்தொழும் அன்பு கலந்திருந்தமையைத் தெரிக்கும். நிற்க,

கண்ணுதத் தொழவந்த அம்மையார் அங்கேயே நின்று விட்டனரா? இல்லை. அவரிடத்திருந்த கண்ணுதலைத் தொழும் அன்பானது அவரை ஆண்டு நிறுத்தாது "தன் கைக்கொண்டு" திருக்கோயிலுள் செல்லுமாறு செய்தது. இதனைத் தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமானார்,

" அண்ணலவன் றன்மருங்கே அளவிறந்த காதலினால்
உண்ணிறையுங் குணநான்கும் ஒருபுடைசாய்ந் தனவெனினும்
வண்ணமலர்க் கருங்கூந்தல் மடக்கொடியை வலிதாக்கிக்
கண்ணுதலைத் தொழும்அன்பே கைக்கொண்டு செலவுய்ப்ப,"

என நயம்படக் கூறுமாற்றானறிக.

இப்பாட்டின் பொருள் வருமாறு: பெருமை பொருந்திய சுந்தரமூர்த்தி நாயனார் இடத்தில் அளவிலாத வேட்கை மிகுதியால் தனதுள்ளத்தில நிறைந்த நாணம் முதலிய நான்கு குணங்களும் ஒருபுறத்தே தடையின்றி விலகினவாயினும், நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானைத் தொழுதற்குக் காரணமாகிய அன்பே அழகிய மலர்மாலையைத் தரித்த கரிய கூந்தலையுடைய பரவையாரை அவ்வேட்கையினின்றும் நீக்கித் தன்வசமாக்கித் திருக்கோயிலுக்குப் போகும்படி செய்தது என்பதாம்.

எனவே, காதலும் கண்ணுதலைத் தொழும் அன்பும் உடையராய காலத்தும் கண்ணுதலைத் தொழும் அன்பே மிக்குடையராகவேண்டும் என்பது துணிவு இத்தன்மையுடையார் வேறு பலரும் உளராலோவெனின், உளர் என்க. அவராவார்: திருநீலகண்டர் முதலியோர்.

திருநீலகண்டர் காதலில் எளியராய் இருந்து ஓர்நாள் ஒரு பரத்தையை அணைந்து நண்ண, அதனை யுணர்ந்த அவர்தம் மனைவியார் எம்மைத் தீண்டுவீராயின் 'திருநீலகண்டம் ஆணை' யெனக் கூற, நாயனார் கண்ணுதலைத் தொழும் அன்பிற்கு ஊறு வருதல் நோக்கி, 'மற்றை மாதரார்தமையும் என்றன் மனத்தினும் தீண்டேன்' எனக் காதலை வெறுத்துக் கண்ணுதலைத் தொழும் அன்பையே கைக்கொண்டார். கூர்ந்து நோக்கின், அவர் மனைவியார்க்கும் கண்ணுதலைத் தொழுதல் முதலிய நல்லொழுக்கத்திற்கு ஊறு வருமாயின், காதலைக் கடக்கும் ஆண்மை இருந்தமை புலனும். கழற்சிங்கர் முதலியோரிடத்தும் இதனைக் கண்டறியலாம்.

அற்றேல் அஃதாக, சுந்தரர்க்குக் காதலினும் கண்ணுதலைத் தொழும் அன்பு விஞ்சி இருந்ததில்லையோவெனின், இருந்தது. அதனை,

> "செல்வநல் லொற்றி யூரன் செய்யசங் கிலியா லார்த்து
> மல்லலம் பரவை தன்கண் மாழ்குற அமிழ்த்து மேனும்
> அல்லுநன் பகலு நீங்கா தவன்மகிழ் அடியில் எய்தி
> நல்லஇன் படைந் திருப்பன் நம்பியா ரூரன் தானே."

என்று சிவப்பிரகாசர், காதலினும் கண்ணுதலைத் தொழும் அன்பையே மிக்குடையராய் அதனான் வரும் இன்பத்தையே துய்த்திருந்தனர் எனச் சொற்சுவையும் பொருட்சுவையும் அமையக் கூறியதனான் அறிக. அன்றியும், கண்ணுதலார் கைலைக்கு வருமாறு சுந்தரர்க்குக் கட்டளை அனுப்ப, அதனை யேற்று, அடிகளார் திருக்கைலைக்குச் செல்லும்போது, தாம் நினைத்தது பரவையாரையா? அல்லது சங்கிலியாரையா? இவ

ருள் இருவரையும் அன்று; தாம நினைந்தது கண்ணுதலைத் தொழும் அன்பு நிறைந்த சேரமான் பெருமாளையே அன்றோ? சங்கிலியாரை மணம்புரியக் கருதிய அடிகளார் ஒற்றியூர்த் தியாகேசரை 'நீர் மகிழின்கீழ்ப் போய்த் தங்கியிரும். நான் சங்கிலியாருக்கு உன்னைவிட்டுப் பிரியேன் என்று ஆலயத்திற் சூளுறப்போகின்றேன்' என்று வேண்டிக்கொண்டது எதற்கு? இறைவர் முன்னர்ச் சூளுற்றால் பின்னர்ப் பிரியாதிருத்தல் வேண்டும். அதனால் பலவிடங்களிலும் சென்று இறையை வழிபடல் இயலாது என்ற இக்காரணத்தினாலன்றோ? ஆகவே, சுந்தரர்க்குக் காதலினும் கண்ணுதலைத் தொழும் அன்பு மிக்கிருந்ததென்பது ஒருதலை. காதலின்பம் துய்க்கும் கருத்துற்ற சுந்தரரைக் கைலையினின்றும் போய்ப் பூவுலகில் பிறக்குமாறு இறைவன் கட்டளையிட்டபொழுது யான் செல்லேன் என அடிகளார் கூறியது உலகில் வந்தவுடன் இறையை மறக்க நேருங் கொல் என்னும் அச்சமே யன்றோ? இதனானும் சுந்தரர்க்குக் காதலினும் கண்ணுதலைத் தொழும் அன்பு மிக்கிருந்ததென்பது அறியப்படும்.

இத்துணையும் கூறியவாற்றானே காதல் இன்னதென்பதும், கண்ணுதலைத் தொழும் அன்பு இன்னதென்பதும் இவ்விரண்டும் மக்கள் உடையராகல்வேண்டும் என்பதும், அவ்வாறு உடையராயகாலத்தும் கண்ணுதலைத் தொழும் அன்பை மிகுதியுமுடையராகல்வேண்டும் என்பதும், கண்ணுதலைத் தொழும் அன்பிற்கு ஊறு உளதாயவிடத்துக் காதலை விடுத்துக் கண்ணுதலைத் தொழும் அன்பையே கைக்கொள்ளல்வேண்டும் என்பதும் விளக்கப்பட்டன.

## வாழ்க்கைப் பயன்

"எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால், மனித்தப் பிறவியும் வேண்டுவதேயிந்த மாநிலத்தே" என்னும் ஆளுடைய அரசின் திருப்பாட்டின்படி பெறுதற்கரிய மக்கட் பிறப்புச் செந்தமிழும் சிவனெறியும் சேர்ந்தியலும் இத் தென்னாட்டின்கண் பெறுவதே சாலச் சிறந்தது. அம்மட்டோ அப் பிறப்பினை எய்துமுயிர்கட்கு அகத்தும் புறத்தும் உருக்கொளிருக்கையும் உறையுளும் அமைத்துக் கொடுக்கக் கருவியாகக் குடும்ப வாழ்க்கை வாழ்வதும் பெரும் பேறேயாம். இவ்வுண்மை,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த மக்கட்பேறல்ல பிற" என்னும் தமிழ்மறை, ௬௧-ஆம் திருப்பாட்டான் வலியுறுதல் காண்க. குடும்ப வாழ்க்கையின் பயன் "எண்குணத்தான் தாளை வணங்குதல்" என்க.

—இனியன்.

# செந்தமிழ்ச் செல்வி !

[புலவர் 'அரசு']

செந்தமிழ்ச் செல்வி, நந்தம் ஆக்க
நலந்திக ழணங்கு, புலம்பெறும் அரிவை,
புலமைபெற் ரோரும் வளமையுற் ரோரும்
அணிபல அணிந்து பணிபல புரிந்து
காதல் வளர ஆதல் அறிந்தே
இருபதும் நான்கும் மருவிய ஆண்டுகள்
வளர்த்தனர் ! வளர்ந்தாள் ! வளம்பல நிரம்பினள் !
பைந்தமிழ்க் கவிதையும் சிந்தை விருந்தாம்
ஆய்வுசெய் உரையும் வாய்மைசெய் துறையும்
நகைமகிழ்ச் சுவையும் வகைபெறப் பெற்றுள் !
இதுவரை நந்தம் முதுதமிழ் நாட்டினர்
இளந்தமிழ்ச் செல்வியின் வளந்தரும் உரையால்
உள்ளங் களித்தனர் ! தெள்ளந் துறைப்புனல்
நீந்தினர் ! மடமை தேய்ந்திட மாந்தினர் !
இனியும்,
ஆக்கம் விரும்பும் மீக்கொளுஞ் செல்வர்
உழைப்போர் உழைப்பின் உறுநலன் அறிந்து
தழைத்திடத் தமர்போல் விழைப்புறப் போற்றவும்,
வேளாண் மையெனுந் தாளாண் மையினர்
எளியருக் கிரங்கிக் களிதருங் கள்ள
எண்ணம் விடுத்து நண்ணுறும் உணவைப்
பதுக்கல் விடுத்து மிதக்க ஈந்திடவும்,
கள்ள வணிகமாங் கொள்ளையன் நமது
கொடைத்தமிழ் நாட்டி னிடைத்திடங் கொளாமல்
காலெடுத் தோடவும் மாலெடுத் தணியுந்
தலைவர்கள் தந்நலப் புலைமையை விடுத்து
நாட்டுப் பணியில் நாட்டங் கொளவும்,
எளியரின் செந்நீர்த் துளியினல் தமது
செல்வம் ஓம்பும் பல்வகைக் கொடியரும்
வஞ்சம் ஒழிந்து நெஞ்சந் தெளிந்து
தஞ்சம் நாடெனத் தகவுபெற் றிடவும்
புலவரின் புலமை விலைபெறும் இழிவு
நீங்கவும் புலவர் ஓங்கவும் இவைபோல்
பல்வகை நலனும் நல்கிட நமது
செந்தமிழ்ச் செல்வியின் சேவை சிறக்க
அறிவுசால் மக்களைப் பெற்று
நெறிபல மேம்பட நீடுவா ழியவே.

# தரும சங்கடம்

[வித்துவான், ஆ. சிவலிங்கனுர், மயிலம்]

"நாம் யாருக்கென்று பரிந்து பேசுவது? இவரும் வேண்டியவரே; அவரும் வேண்டியவரே; நியாயம் இருப்ப தால் இவர்பக்கம் பேசலாம் என்ருலோ, அவருக்கு வருத்தம் வரும்; அவர்பக்கம் பேசுவோம் என்ருலோ இவருக்கு வருத்தம் வரும்; என்னடா இது பெரிய தருமசங்கடமாகப் போச்சு."

இவ்வாறு, பலர் பல சந்தர்ப்பங்களில் கூறக் கேட்டிருக் கின்ருேம். இருவருக்கும் வேண்டிய ஒருவர், தம்மாலான சொல், செயல், பொருள் உதவிகளை யாரேனும் ஒருவர்க்கே செய்யவேண்டும் என்ற நிலை தோன்றும்போது அவர் படும் மன வேதனை சொல்லி முடியாது. அவ்வேதனை கொண்ட அவர், அவ்விருவருள் ஒருவர் தம்முதவியினைப் பெறும் தகுதியினர் என்பதை உணர்ந்தும், மற்ருெருவரின் உறவு, செல்வாக்கு முதலியவற்றைக் கருதியும் வேதனைப்படுவர். இந்த நிலையைத் தான் தருமசங்கடமான நிலை என்கின்ருேம்.

இத் தருமசங்கடம் வடசொல்லாயிருந்தும் தமிழ்நாட்டில் பெரிதும் வழக்காறுள்ளதாயிற்று. தமிழ் வழக்கில் இதற்கு ஒத்த சொல் வழக்கில்லை. 'இருதலைக் கொள்ளி யெறும்பு' என்ற சொல்வழக்கு இருந்துவருகிறது: ஆனல், இது, தருமசங் கடம் என்பதற்குரிய பொருள் அனைத்தையும் தரும் ஆற்றல் உள்ளதன்று. ஒரு நீள மூங்கிற் கம்பின் இருதலைப்புக்களிலும் தீப்பற்றிக்கொள்ள இடைப்பட்ட எறும்பு எப்பக்கமும் சாராது அவதியுறுவதைத் தெரிவிப்பது, 'இருதலைக் கொள்ளி யெறும்பு' என்பது. எறும்பு எப்பக்கமும் சாராது துன்புறு தற்குத் தீப்பற்றியதாகிய ஒரே காரணம்தான் உண்டு. முடிவில் அவ்வெறும்பு இருபக்கத் தீயாலும் நெருக்கப்பட்டு இறந்து படும். எறும்புக்குப் பிழைப்பு என்பதில்லை. இவ்வளவும் அடக்கி எப்பக்கமும் சார இயலாது. அவதியுறும் ஒருவர்க்கு உவமையாக 'இருதலைக் கொள்ளி எறும்பு' என்பது கூறப் படுவதில்லை. ஆனல், மனவேதனையை மட்டும் குறிக்கக் கூறப் படுகிறது. தருமசங்கடம் என்பதும் அத்தகைய மன வேதனைக்கே கூறப்படுவதெனினும், அம்மனவேதனை கொண் டோர் பின் ஒருவாறு அதனை நீக்கி, ஒருபால் சார்தற்கும் இடம் கொடுக்கிறது. அன்றியும், இருபக்கமும் சாரவும் சாரா திருக்கவும் தனித்தனிக் காரணங்களையும் கொண்டிருக்கும்.

ஒரு பக்கம் தருமம் நிற்கும். மற்றொரு பக்கம் உறவு முதலிய காரணமாகவரும் பற்று நிற்கும். இவற்றினிடைப்பட்ட மன வேதனையைத்தான் தருமசங்கடம் என்பர். இதனைக் கம்பர் அழகாக விளக்கியிருத்தலைக் காணலாம்.

அயோத்தியிலிருந்து பல்லாண்டுகள் ஆண்ட தசரதன் ஒரு நாள் கண்ணாடியின்முன் நின்று தன்னை யணிந்துகொண்ட காலத்தில் தன் தலையில் ஒரு நரையினைக் கண்டான். உடனே மந்திரி முதலியவர்களை அழைத்து அரசவை கூட்டி, "நான் பல ஆண்டுகளாக இவ்வரசினை மேற்கொண்டு நன்முறையிலேயே ஆண்டுவந்தேன்; என் முன்னோர்கள் சென்ற நெறியில் ஒரு சிறிதும் மாறுபட்டேனில்லை; தமக்கு மூப்பு வந்த காலத்தில் தம் புதல்வர்களிடம் அரசினை ஒப்பித்துத் தாம் தவத்தினை மேற்கொண்டது போலவே எனக்கு மூப்பு வந்த இக்காலத்தில் இராமனுக்கு முடிசூட்டித் தவத்தினை மேற்கொள்ள எண்ணு கிறேன்; உங்கள் கருத்து யாது?" எனக் கூறிக் கேட்டனன்.

இதனைக் கேள்வியுற்ற அவையிலிருந்தார் அனைவரும் ஒரே துக்கத்தில் சிறிது ஆழ்ந்தனர். அவர்கள் துக்கம் எல்லாம் தசரதன் துறவுகொள்ள நம்மைப் பிரியப்போகின்றானே என்பதிலேயே பொருந்தியது. ஆனால், அடுத்து இராமன் முடிபுனையப் போகின்றான் என்பது நினைவுக்கு வரவே பெரு மகிழ்வடைந்தனர். அரசன்பால் கொண்ட அன்பு அவனை இழக்க இடம் தரவில்லை; ஆனால், இராமன்பால் கொண்ட அன்பு இராமன் முடிசூட வேண்டுகின்றது. இதனால் யாது சொல்வது என ஒன்றுமறியாது திகைத்தனர். இதனைக் கம்பர்,

> "திரண்ட தோளினன் இப்படிச் செப்பலும் சிந்தை
> புரண்டு மீதிடப் பொங்கிய வுவகையார் ஆங்கே
> வெருண்டு மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால்
> இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென இருந்தார்."

எனக் கூறினார். தலைக்கன்றை யீன்றபசு அக்கன்றினிடத்து மிக்க அன்புகொண்டு பாலூட்டி அதனைப் போற்றி வந்தது. சில காலம் கழித்து இரண்டாம் கன்றினை யீன்றது. இனி இரண்டாங் கன்றினுக்குப் பாலூட்டவேண்டும்; முதல் கன்றினைத் தள்ளி வைக்கவேண்டும். முதல் கன்றினிடத்து முன்வைத்த அன்பு அதனைத் தள்ளிவைக்க மனம் தரவில்லை. ஆனால், அதனைத் தள்ளியே இரண்டாங் கன்றினுக்குப் பாலூட்டவேண்டும். என் செய்யும் பசு? மிக வருந்துமன்றோ? அந்த நிலையிலேயே அவையோர் இருந்தனர். அரசனைத் துறக்க நேர்வதுபற்றிய துன்பமும், இராமன் முடிசூடுவது பற்றிய மகிழ்வும் கொண்ட அவையோர் நிலைக்குக் கம்பரின் உவமை பொருத்தமன்றோ?

இவ்வாறு அவர் மனநிலையைத் தெரிவித்த கம்பர், அத்துடன் அமையாது, மந்திரிகளின் கருத்தினைத் தான் எடுத்து மொழிய வந்த சுமந்திரன் என்பவன் வாயிலாகவும் நன்கு தெரிவித்தார். சுமந்திரன் சொல்லில்தான் தருமசங்கடம் என்பதற்குரிய பொருளைத் தெளிவாகக் காணலாம்.

> "உறத்த கும்மர சிராமற்கென் றுவக்கின்ற மனத்தைத்
> துறத்தி நீயெனும் சொற்சுடும் நின்குலத் தொல்லோர்
> மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கன்று
> அறந்தி னூங்கினிக் கொடிதென லாவதொன் றியாதோ"

இது சுமந்திரன் கூற்று. "இராமனுக்கு அரசாட்சி அமைதல் தகுதியே என மனம் மகிழ்கிறது; ஆனால், அம்மனத்தை நீ துறவினை மேற்கொள்ளுகின்றாய் என்ற கொடிய சொல் சுடுகின்றதே! என் செய்வோம்! நின்னைத் துறக்கவேண்டாம் என்று தடுத்து விடுவோம்; அது அறமல்லவே! நின் குல முன்னோர் தம் முதுமைக் காலத்தில் அரசினைத் தம் புதல்வர்களுக்கு அளித்துத் தாம் துறந்தனர். அம்முறையினை-அறத்தினை இதுவரை யாரும் மறந்தனர் இலர். நீயும் மறத்தல் நன்றன்றுதான். அதனாலேயே நின்னைத் தடைசெய்தற்கில்லை. இத்தகைய அறம் இல்லையென்றால் தடுத்து விடுவோம். இதனால் அறத்தைப்போலக் கொடுமையுள்ளது வேறொன்றில்லை," என்பது இப்பாடலின் விளக்கம்.

இக்கூற்றால் அவையிலுள்ளோரைத் தருமமே துன்பத்திற்குள்ளாக்கியது என உணரலாம். அறவழியை மேற்கொள்பவர்களைச் சிலகாலங்களில் அவ்வறமே சங்கடத்திற் குள்ளாக்கி விடும். அதனைத்தான் தருமசங்கடம் என்பர். எனவே, தருமசங்கடம் என்பது 'தருமத்தால் விளையும் சங்கடம்' எனப் பொருள் கொள்ளும் இதன் நேரிய மொழிபெயர்ப்பாகக் (கம்பர் கூறியதற்கேற்ப) அறக்கொடுமை என்பதைக் கொள்ளலாம்.

இத் தருமசங்கடத்திற்குப் பெரியபுராணத்திருந்தும் ஓர் எடுத்துக்காட்டுத் தருகின்றோம்.

செங்காட்டங்குடி என்னும் ஊரில் இருந்து சிவனடியார்கட்கு வேண்டும் வழிபாடுசெய்து உணவருத்தி யனுப்பும் தொண்டில் ஈடுபட்ட சிறுத்தொண்டர்க்கும் அவர் மனைவி வெண்காட்டுநங்கை என்பார்க்கும் சீராளன் என்னும் அருமை மகன் தோன்றி, ஐந்தாண்டுக் குழந்தையாக இருந்தனன். அடியார்க்கு [illegible] ருத்திப் பின்னுண்ணும் சிறுத்தொண்டர்க்கு ஒருநாள், சிவனருளால் அடியார் கிடைத்திலர். அடியாரைத் தேடித் தொண்டர் வெளிச்சென்ற சமயத்தில், சிவன், தானோர்

வடநாட்டுப் பயிரவ வேடங்கொண்டு தொண்டர் வீடடைந்து, வெண்காட்டு நங்கை இருக்கவேண்டவும், "ஆடவரில்லா வீட்டில் இருக்கமாட்டோம்; பக்கத்துள்ள கணபதீச்சரத்து ஆத்திமர நீழலில் இருப்போம்; அடியார் வந்தால் அறிவிக்க," எனச் சொல்லிச் சென்றார். பின்னர்த் தொண்டர் அடியவரை எங்கும் காணாது வருத்தமுடன் வீடுவர, மனைவியாரால் பயிராகி வந்து சென்ற செய்தி கேட்டுச் சென்று பயிராகியை யழைக்க, அவர், "ஒரு குடிக்கு நல்ல சிறுவன் ஒரு மகனைத் தாதை யரியத் தாய் பிடிக்கும் பொழுதில் தம்முள் மனம் உவந்தே, ஏதமின்றி அமைத்த கறி யாம் இட்டுண்பது," என மொழிய, அதற்கும் உடன்பட்ட தொண்டர் மீண்டு மனைவந்து, மனைவியாரிடம் பயிராகி கூறியதைக் கூறினார். மனைவியார், "அத்தகையதொரு சிறந்த பிள்ளையை எவ்வாறு பெறுவேம்?" என்றார். அதற்குத் தொண்டர்,

> "மனைவி யார்தம் முகம்நோக்கி மற்றித் திறத்தால் மைந்தர்தமை
> நினைவு நிரம்ப நிதிகொடுத்தால் தருவார் உளரே நேர்நின்று
> தனையன் தன்னைத் தந்தைதாய் அரிவார் இல்லைத் தாழாமே
> எனையிங் குய்ய நீபயந்தான் தன்னை அழைப்போம் யாமென்றார்."

"ஒரு குடிக்கு ஒரு மகனை-அழகனை உள்ள சிறுவனைப் பொருள் மிகுதியாக—அதாவது ஒருவர்க்கு மனம் நிறையும் படி கொடுத்தால் கொடுத்துவிடுவார் உலகில் உளர். ஆனால், அவனைத் தந்தை அரியமாட்டானே! தாயும் பிடிக்கமாட்டாளே! தாய் பிடிக்கத் தந்தையரியினும் இருவரும் மனம் மகிழ்ந்து அக்காரியத்தைச் செய்யமாட்டார்களே! என் செய்வது? காலம் தாழ்க்காமல் நம் பிள்ளையைத்தான் நாம் அவ்வாறு கறி சமைக்கவேண்டும்," என்றார் தொண்டர்.

தொண்டர் கூற்றாக உள்ள மேற்பாடலில், சேக்கிழார் தரும சங்கடத்தை நன்றாக விளக்கிவிட்டார். தருமசங்கடமான நிலை வெண்காட்டுநங்கைக்கு உண்டாகிவிட்டது. "நான் பிழைக்க நீ பெற்ற பிள்ளையை நாம் அழைப்போம்," என்றார் தொண்டர், அடியார் உணவில்லை யென்றால், தாமும் உண்ணார் ஆதலின். "எனையிங்கு உய்ய(=யான் பிழைக்க)" என்றார். பிள்ளையிடத்துத் தந்தையைக் காட்டிலும் பெற்று வளர்த்த தாய்க்கே பெரிதும் பற்றுதல் இருக்கும் ஆதலின், "நீ பயந்தான் தன்னை" என்று கூறினார். இருவரும் மகிழ்வுடன் கறி சமைக்கவேண்டும் ஆதலின், "யாம் அழைப்போம்," என்றார். தன் சொல்வழி நின்று அடியாரை உண்பித்துத் தன்னைக் காக்கு- பொறுப்பு அவர்க்கு உண்டென்பதை, "எனையிங்குய்ய" என்பதால் விளக்கியும், 'நீ பயந்தான்' (=நீ பெற்ற பிள்ளை) என்பதால்,

பிள்ளையை அரிய மனம் ஒருப்படாத தாயன்பின் திறத்தைச் சுட்டியும் கூறியது தருமசங்கட நிலையை நன்கு விளக்குகின்ற தன்றோ? அடியார்க்கு அமுது செய்வித்துக் கணவனைக் காக்க வேண்டுமானால் பிள்ளையை மகிழ்ச்சியோடு கறி சமைக்க வேண்டும். பிள்ளையைத் துறக்க மனம் இல்லையென்றால், அடியார்க்கமுதுசெய்விக்க இயலாதுபோகத் தொண்டரும் அமுதருந்தாது இறப்பர். ஒருபால் கணவனை வேண்டிய கற்புநிலையும், மற்றொருபால் பிள்ளையை வேண்டிய அன்பு நிலையும் வெண்காட்டுநங்கையை அலைக்கழிக்கின்றன. இந்நிலையே அவர்க்குற்ற அறக்கொடுமை—தருமசங்கடம். இரண்டு கன்றினுக்கிரங்கும் ஓர் ஆவின் நிலை—இருதலைக் கொள்ளியின் எறும்பு நிலை.

இருதலைக்கொள்ளி எறும்பு பிழைப்பதில்லை. ஆனால், இரண்டு கன்றினுக்கிரங்கும் ஓர் ஆ எப்பொழுதும் இரங்கிச் சாவதில்லை. ஒருவாறு மன அமைதிகொண்டு தலைக்கன்றினை நிறுத்தி இரண்டாங் கன்றினை யூட்டி வளர்க்கும். தருமசங்கடம், தன்னையடைந்த ஒருவனை அப்படியே ஆழ்த்திவிடாமல் அவன் சிறந்ததான அறத்தின்வழிநின்று ஒருபால் சார இடம் தரும் இத் தருமசங்கடத்தினை எவ்வாறு நீக்கிக்கொள்ள முடியும்? வாழைப்பழம் மாம்பழம் இவ்விரண்டினும் பெருவிருப்புள்ள ஒருவனிடம் அவ்விரண்டனையும் வைத்து, ‘இவற்றுள் ஏதேனும் ஒன்றனை எடுத்துக்கொள்’ என்றால், அவன், உடனே ஒன்றனையும் எடுக்காமல் சற்று நின்று பின், தனக்கு அப்போது, உடல்நிலைக் கேற்பவும், விருப்பத்திற்கேற்பவும் பொருத்தமான ஒன்றனை எடுத்துக்கொள்வதுபோல, இருபக்கத்திலும் எப்பக்கம் சார்வது சிறந்தது என்று படுகிறதோ, அப்பக்கம் சார்வதே தர்ம சங்கடத்தை நீக்கிக்கொள்ளும் வழியாகும். கம்பரும், சேக்கிழாரும் தாங்கள் காட்டிய தருமசங்கடங்களை எவ்வாறு நீக்கி விட்டார்கள் என்பதைக் காண்போம்.

தசரதன்பால் வைத்த அன்பு அவனைத் துறக்கவிட இடம் தரவில்லை. இராமன் முடிசூடுவதால் உண்டான மகிழ்ச்சியும், முன்னோர் நெறியே பின்னோரும் சேறல்வேண்டும் என்னும் அறநூல் விதியும் அவனைத் துறக்கவிட இடம் தருகின்றன. அதனால் சுமந்திரன்,

> “புரசை மாக்கரி நிருபர்க்கும் புறத்துறை வோர்க்கும்
> உரைசெய் மந்திரக் கிழவர்க்கும் முனிவர்க்கும் உள்ளம்
> முரச மார்ப்பநின் முதல்மணிப் புதல்வனை முறையால்
> அரச னாக்கிப்பின் அப்புறத் தடுத்தது புரிவாய்.”

என்றான். அரசனைவிட மனமில்லை என்பதனால், ‘இராமனை அரசனாக்கி நீ துறந்து தவத்தை மேற்கொள்க’ என்னாமல்,

'இராமனை அரசனுக்குப் பின் அப்புறத்து அடுத்தது செய்க' என்றான். இவ்வகையில் தருமசங்கடத்தை ஒருவாறு நீக்கிக் கொண்டான் சுமந்திரன்.

கணவனைக் காக்கவேண்டிய கற்புநிலை ஒருபாலும், பிள்ளைப் பாசம் ஒருபாலுமாக ஈர்க்கப்பட்ட வெண்காட்டுநங்கையார், கணவன் வழிநின்று அவனைக் காப்பதே அறம் என எண்ணி, அப்போது பள்ளியில் இருக்கும் தன் பிள்ளையினைக் 'கறிசமைக்க அழைத்து வருக' எனக் கணவனிடம் கூறினார்.

"..................எம்பிரான் தொண்டர்
இன்று நாழா தமுதுசெயப் பெற்றிங் கவர்தம் மலர்ந்தமுகம்
நன்று காண்ப தெனநயந்து 'நம்மைக் காக்க வருமணியைச்
சென்று பள்ளி யினிற்கொண்டு வாரும்' என்றார் திருவனையார்"

வெண்காட்டுநங்கையார் 'நம்மைக் காக்க வருமணியை' என்று கூறியது கவனிக்கத்தக்கது. முன்னர் சிறுத்தொண்டர், "எனையிங் குய்ய நீ பயந்தான் தன்னை அழைப்போம் யாம்" என்றார். தம் பிள்ளையைக் கறிசமைப்பதால் தாம் மட்டும் உய்வதாக 'எனை' என ஒருமையில் கூறினார் தொண்டர். வெண்காட்டுநங்கையோ, தன் மகன் கறியாகச் சமைக்கப் பயன்பட்டு அடியாரை அமுது செய்விப்பதால் தந்தையையும், தந்தை உய்வதால் தாயையும் காப்பவனாதலின், 'நம்மைக் காக்க வரும் மணியை' எனப் பன்மையில் கூறினார். இவ்வகையில் தமக்கு வந்த தருமசங்கடத்தை நீக்கிக்கொண்டார் ஆவர்.

மேற்காட்டிய இரண்டு வரலாறுகளிலிருந்தும் தருமசங்கட விளக்கம் அறியலாம். இதற்குச் சங்க இலக்கியம் ஒன்று காட்டி இக்கட்டுரையினை முடிக்கின்றேம்.

ஒரு தலைவனும் ஒரு தலைவியும் பிறர் அறியாமல் ஒரு பொழிலகத் தெதிர்ப்பட்டு இன்பம் துய்த்து வந்தனர். இவர்கள் ஒழுக்கம் சில நாட்களாக மறைவாகவே இருந்தது. ஆனால், தலைவியின் தோழிக்கும் தலைவன் தோழனுக்குமே இது தெரியும். பின் சிலநாட் சென்றதும் அயலார்க்கும் தெரிந்தது. அவரும் பலவாறு தூற்றினர். இந்நிலையில் தலைவியின் வீட்டில் அயலார் பெண் கோடற்காக மணம் பேசி வந்தனர். இதனைத் தோழி தலைவனிடம் தெரிவித்தாள். உடனே தலைவன், 'செய்வ தற்கு வேறொன்றுமில்லை' என்றுரைத்து, 'நான் என் தலைவியை யாரும் அறியாதபடி உடன் அழைத்துச் சென்று விடுகிறேன்' என்றான். தோழியும் அதற்குத் துணைபுரிவதாகக் கூறித் தலைவியிடம் சென்று தெரிவித்தாள். தலைவி அதற்கு இணங்கி உடன்போக விரும்பினாள். ஆனால், உடனே நாணம்

தடுத்தது. 'தலைவனுடன் போய்விட்டால் இப்போதே அதிகமாகப் பழிதூற்றும் ஊரார், இன்னும் மிகையாகத் தூற்றுவர். அன்றியும், நாணம் நீங்கிவிடும். உயிரைவிட நாணமே சிறந்ததன்றோ?' என எண்ணிப் போக உடன்படவில்லை. ஆனால், 'அந்நாணினைவிடக் கற்புதானே மிகச் சிறந்தது? உடன் போகவில்லையென்றால் தலைவன் சொல்லை மதியாதவளாகித் தலைவன் வழி நடக்கும் கற்புத்தன்மையை இழந்தவளாவோம்' என எண்ணி உடன்போக உடன்படுகிறாள். உடன்படுதலும் உடன்படாமையுமாகிய இரண்டு நிலைகளும் அவளைத் தொல்லைப் படுத்தின. என்செய்வாள் பேதை! ஒன்று நாணை விட வேண்டும்; ஒன்று கற்பினை யிழக்கவேண்டும். இந்நிலைதானே தருமசங்கடமான நிலை! இதனை எப்படி அவள் தீர்த்துக் கொள்வது?

அவள் நினைக்கிறாள்: "உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும், செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" என்பது ஆன்றோர் வாக்கு. ஆம்! நாணம் கற்பு ஆகிய இரண்டனுள் கற்பே சிறந்தது. ஆதலின், அதற்கு இழுக்கு நேராதபடி காத்துக்கொள்வது நம் கடன்' என்று எண்ணி நாணத்தை விடத் தீர்மானிக்கிறாள். பிறகு தன் தோழியிடம் பின்வருமாறு கூறுகின்றாள்; தருமசங்கடம் நீங்குகிறாள்.

"தோழீ! நாணம் என்ற ஒன்று மிகவும் இரங்கத் தகுந்தது. நம்மோடு நெடுங் காலமாகத் தொடர்ந்து வந்தது. நம்மைத் துன்பக் காலத்தும் பிரியாதிருந்தது. ஆனால், இனி அது, கரும்புப் பாத்தியின் மணற் கரையானது மிகுந்த நீர் அலைக்கச் சிறுகச் சிறுகக் கரைந்தழிவதுபோல (கற்பைக் காக்கும்) காமம் அதிகமாக நெருக்க நம்மிடம் நில்லாது ஓடி விட்டது"

> அளிதோ தானே நாணே நம்மொடு
> நனிநீ டுழந்தன்று மன்னே இனியே
> வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறைத்
> தீம்புனல் நெரிதர வீந்துக் காஅங்குத்
> தோங்கு மளவை தாங்கிக்
> காமம் நெரிதரக் கைநில் லாதே. (குறுந்தொகை, 149)

காமம் நெருக்க நாணம் ஓடியது என்று கூறியிருப்பினும், காமம் காரணமாக (அதாவது கற்பை இழக்காததால்) நாணத்தைக் கைவிட்டேன். இனி உடன்போக ஒருப்படுகின்றேன் என்பது இதன் கருத்தாகக் கொள்ளவேண்டும்.

# விலங்குகளின் தோற்றம்

[N. K. வேலன்]

மிகப் பழைய காலத்தில் இருந்த விலங்குகள் இக்காலத்தில் நாம் காணும் விலங்குகளைப் போன்றன அல்ல. இப்பொழுது காணப்படும் நாய்கள் அக்காலத்தில் இல்லை. குதிரை நாயின் அளவுதான் வளர்ந்தது. அதன் குளம்பு பிளவுபட்டு இரண்டாக இருந்தது. பூமியில் எங்கே பார்த்தாலும் காடுகளும் சதுப்பு நிலங்களும் நிறைந்திருந்தன. அவற்றில் மிகப் பெரிய விலங்குகளும் பாம்புகளும் குடி இருந்தன. பூமியின் நிலை மாறுபட்டதால் இவ் உயிர்கள் அழிந்துபோயின. பாறைகளிலும் களிமண் நிலங்களிலும் பழைய விலங்குகளின் எலும்புகள் காணப்படுகின்றன. இவற்றிலிருந்து பண்டைக்காலத்திய உயிர்களைப் பற்றி நாம் ஒருவாறு தெரிந்துகொள்கிறோம்.

நடப்பனவற்றிலும் ஊர்வனவற்றிலும் பல்வேறு வகைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பூமியின் வடமுனையிலும் தென் முனையிலும் யானைபோன்ற மிகப் பெரிய விலங்கு ஒன்று இருந்தது. இதன் உடல் பனிக்கட்டியில் உறைந்து தோலும் தசையும் கெடாமல் பல்லாயிரம் ஆண்டுகளுக்குப்பின்னும் அப்படியே முழு உருவத்துடன் காணப்பட்டது. அக்காலத்திய புலி இப்போதைய புலியைப்போல் மூன்று அல்லது நான்கு மடங்கு பெரியதாக இருந்தது. யானைபோன்ற பெரிய விலங்குகளையும் எதிர்த்துநிற்கும் ஆற்றல் உடையதாக இருந்தது.

அக்காலத்தில் ஊர்ந்துசெல்லும் உயிர்களே மிகுதியாகக் காணப்பட்டன. பல்லியைப்போன்ற உருவமும், முதலைபோன்ற தலையும், 32 அடி நீளமும் உடைய பெரிய விலங்குகள் இருந்தன. இவைகள் எல்லாம சதுப்பு நிலங்களில் வசித்திருந்தன. சில வேளைகளில் கரையில் வந்து உலவின. பின்கால்களால் நடந்து சென்றன. முன்னங்கால்களை உணவு எடுப்பதற்குப் பயன் படுத்திக்கொண்டன. கிழக்குஆப்பிரிக்காவில் கிடைத்த எலும்புக்கூடொன்றில் தலையும்கழுத்தும் நாற்பதடி நீளமும் வால்மட்டும் எண்பதடி நீளமும் இருந்தது. இவ் விலங்குகளின் கழுத்து நீண்டும் குறுகியும் முதலையின் உருவததையே ஒத்திருந்தன.

உடல்மட்டும் பருத்திருந்தது. இரண்டு கால்களால் நடக்கும் பொழுது பூதங்களைப்போல் தோன்றின. 80 அடி உயரத்துடன் அச்சம் விளைவிக்கும் தோற்றம் உடையனவாக இருந்தன. 1923-ஆம் ஆண்டில் மங்கோலியாவில் இவ்விலங்கின் முட்டைகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவை மணலில் ஆழமாகப் புதைந்து கிடந்தன. ஒரு முட்டையின் உள்ளே குட்டியின் முழு உருவம் நன்றாகத் தெரிந்தது.

விலங்கினத்திலும் பறவை இனத்திலும் சேராமல் வௌவால்போன்ற விலங்கு ஒன்று அக்காலத்தில் இருந்தது. இதன் முன்னங்கால்கள் நீளமாகவும் இறக்கைகள் தடிப்பாகவும் அமைந்திருந்தன. இது நீந்தவும், நடக்கவும், பறக்கவும் கற்றிருந்தது. வானத்தில் வட்டமிடும்பொழுது பெரிய யானை பறப்பதைப்போல் தோன்றியது.

நெடுங்காலத்திற்குமுன் பூமியில் எங்கே பார்த்தாலும் எரிமலைகள் நெருப்பைக் கக்கிக்கொண்டிருந்தன. கொதிநீர் ஊற்றுகள் பெருக்கெடுத்து ஓடின. பூமியில் பெரிய வெடிப்புகள் காணப்பட்டன. ஒவ்வொரு நாளும் பூமி அதிர்ச்சி ஏற்பட்டது. அடர்ந்த காடுகளும் மிகப் பெரிய மரங்களும் செடி கொடிகளும் நிறைந்திருந்தன. எப்பொழுது பார்த்தாலும் வானத்தில் மேகங்கள் படர்ந்திருந்தன. ஞாயிற்றினைக் காண்பதே அரிதாக இருந்தது. மழை ஓயாமல் பெய்துகொண்டிருந்தது. இந்நிலைமையில் பூதங்களைப்போன்ற விலங்குகளும் முதலைபோன்ற பல்லிகளும் அலைந்து திரிந்துகொண்டிருந்தன. இவைகள் ஒன்றை ஒன்று கொன்று தின்றன.

அக்காலத்திய பறவைகளும் வேறுவகையாகத் தோற்றம் அளித்தன. பறவையின் வால் நீளமாக இருந்தது. இறக்கைகளில் விரல்கள் காணப்பட்டன. கடலில் வசிக்கும் பறவை ஒன்று இருந்தது. அதற்கு நீந்துவதற்குத் தெரியும்; பறக்கத் தெரியாது. அதன் வாயில் பற்கள் அமைந்திருந்தன. தென் கெரோலினு (South Carolina) என்னும் இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட எலும்புக்கூடு ஒன்று எண்பது அடி நீளம் இருந்தது. அதில் இருநூறு பற்கள் காணப்பட்டன.

பண்டைக்காலத்தில் மிகப் பெரிய பறவைகள் இருந்தன. மனிதரையும் பெரிய விலங்குகளையும் எளிதாய்த் தூக்கிச் செல்லும் ஆற்றல் உடையனவாக இருந்தன. மெடகாஸ்கர் (Madagascar) என்னும் இடத்தில் இப்பறவைகளின் முட்டைகளும் எலும்புக்கூடுகளும் அகப்பட்டன. நியூஜீலாந்து (Newzealand) என்னும் இடத்தில் கிடைத்த எலும்புக்கூடு மிகவும் பெரியது. இது வான்கோழியைப்போன்று ஐந்து அல்லது ஆறு மடங்கு பெரிதாக இருந்தது.

மனிதன் நாகரிகம் அடைந்து எழுதப்படிக்கக் கற்றுக் கொள்வதற்குள், பெரிய விலங்குகளும் பறவைகளும் அழிந்து போயின. வரலாற்றுக் காலத்திற்கு முன்னமேயே அவைகள் மறைந்துபோனமையால், அவைகளைப்பற்றிய வரலாற்று நூல்கள் ஒன்றும் எழுதப்படவில்லை.

# "களித்தேன்!" என்றாள்*

[முத்தமிழ் மணி]

1 கலையுலகம் கண்டிடுவோம்; காண்போம் என்றே
கருத்தழிந்தேன் ; உருக்குலைந்தேன் ; கால்கள் நோக
நிலைதிரிந்த சிந்தையுடன் நெகிழ்ந்தே உள்ளம்
நெடுந்தூரம் தான்நடந்தேன் ; நினைவே இன்றி
அலையெறிந்த கடலனைய குமுறும் எண்ணம்
அகன்றதிலை ; அயர்வுடனோர் ஆற்றோ ரத்தில்
மலையருகில் தருநிழலில் அமர்ந்தேன் சற்றே
மருள்நீக்கும் உண்மைநிலை கண்டே னில்லை.

2 ஒண்கதிரும் மறைந்ததனால் உயர்வான் எங்கும்
ஒளிகுன்றிச் செங்குருதி வெள்ளம் பாய்ச்சிக்
கண்குளிரும் இயற்கையெழில் நலமே தந்த
கவின்வான அழகினிலும், கலந்து புட்கள்
விண்ணதிர இடுமொலியில், மலர் மணத்தில்,
விரைந்தோடும் தேனாற்றின் சலச லப்பில்,
தண்கதிரைத் தாங்கிவிண் ணகமே போந்த
தகுவட்ட மதியொளியி லுளந்தி ரிந்தேன்.

3 பிறைவட்ட ஒளிநுதலோ டிணைந்த ஓர்பெண்
பெருநோக்கோ டெனைநோக்கி வந்தாள் ; வந்து
நிறைவட்ட முழுநிலவாய் என்முன் தோன்றி
நெகிழ்ந்தவுளம் சரிந்தகுழல் தாங்கிச் சோர்ந்து,
"தரைமட்ட மாக்கிவிட்டார் ; தளரா தென்னைத்
தகர்க்கின்றார் தான்றோன்றிச் சூரர் சில்லோர்;
திறம்கெட்ட நாடோடிக் கூட்டத் தாரென்
திகழ்கற்பு நிலைமாற்றத் துணிந்தா," ரென்றாள்.

4 "பெற்றமகார் உமக்கிலையோ? காக்கும் பேறு
பெற்றவர்க ளவர்களலோ? பேதாய் நானோ
உற்றமன நோய்போக்க இயற்கை நாடி
உற்றவனென் பால்உன்குறை உரைத்தல் நன்றோ?
நற்றவத்தால் நீபெற்ற கொழுந ரெங்கே?
நலமிழந்தா லவர்கடமை யன்றோ காத்தல்?
குற்றமெலா மிழைத்துவரும் கொடுமை யாளர்
கொட்டமெலா மடக்குவித்தல் நன்றே," என்றேன்.

* 3-9-50-ல் சென்னையில் திரு. அ. சீனுவாசராகவன் அவர்கள் தலைமையில் நடந்த கவியரங்கில் அரங்கேற்றப்பெற்று, தலைவரின் பாராட்டுதல் பெற்றது.

5 "அடுபோரில் தடுமாற்ற மடையா வீர
அரிமாக்க ளொத்ததமிழ்ச் செல்வர் சில்லோர்
திடமிழந்தார்; குருளேயராய்த் திரிந்து விட்டார்;
திண்புயத்தின் வலியிழந்தார்; நலங்கு றைந்தார்
படுமோசக் காரர்களின் வால்பி டித்துப்
பகட்டுடனே தமிழரெனத் தமையும் சொல்லி
இடமளித்து விட்டார்க ளன்னார்க் கின்னர்;
என்செய்வே னென்விதியின் நிலைமைக்," கென்றாள்.

6 "தெள்ளமுதைப் போற்சொற்கள் அள்ளிப் பாக்கள்
தெவிட்டாமல் வரைந்துநிதம் அணிகள் செய்து
உள்ளத்தோ டென்னைமகிழ் வித்தென் னாற்றல்
உலகெல்லாம் பரப்பிவரும் துணைவர், கால
வெள்ளத்தி னிடைப்பட்டு நிலைமை கெட்டு
வெளிவேடக் காரருடன் குலவி என்னைத்
தள்ளிவிட முயல்கின்றார்; காக்கும் வன்மை
தறுகண்மை தன்மான மிழந்தார்," என்றாள்.

7 "நிலையல்லா தனவற்றைக் கலைக ளென்றே
நெடிதுயர்த்திப் பணம்குவித்துப் புரளு கின்றார்;
உலைவில்லா திந்நாட்டில் மலர்ச்சி வேண்டி
உழைத்திட்டால் 'ஆர்ப்பாட்டம்' என்றே சொல்லி
விலையல்லா தனவற்றை விலையுண் டாக்கி
விழைந்துசுய நலமென்னும அரண மைத்து
மலைவின்றிச் செல்வாக்குக் குண்டா லென்றன்
மைந்தர்தம் மார்புபிளந் திடுகின் றார்கொல்!"

8 நரிகளெலாம் தமிழ்நாட்டில் பரிகளாக,
நாடோடிக் கூட்டத்தார் நன்றுவாழ,
அரிகளெலா மென்மக்கள் போல்நடித்து
அயர்வின்றி யென்பெருமை குலைக்கின் றார்கொல்!
வரிப்புலிகள் மதக்கரிகள் வாழ்ந்த நாட்டில்
வன்மையிலா நரிக்கூட்டம் வாழ்வ தென்றால்,
எரிகிறதென் நெஞ்சமெலாம் அன்ப! மாற்றம்
என்செய்ய வில்லையிது நேர்மை கொல்லோ?

9 "விழலுக்கு நீர்பாய்ச்சி மேவிப் புன்மை
விளைவிக்கும் வேற்றுமையாம் களையை நீக்கி,
தழலிட்டுப் பொசுக்கியதைத் தனித்தி யங்கும்
தமிழினிமைச் செம்பயிரைத் தரணி தன்னில்
உழவிட்டுத் தழைத்திடவே உழைக்கும் செல்வர்
உறுதுணையை நாடியிவண் அடைந்தேன்," என்றாள்;
கழலிணைகள் பற்றிஉளம் வாடி, "அன்னாய்!
கடமையுணர்ந் தேன்" என்றேன்; "களித்தேன்" என்றாள்.

# செய்திகளும் குறிப்புகளும்

## சித்தாந்தப் பேராசிரியர், எஅ-ம் பிறப்பு விழா

தூத்துக்குடி சித்தாந்தப் பேராசிரியர், உயர்திரு. ந. சிவகுருநாத பிள்ளை அவர்களின் எழுபத்தெட்டாம் யாண்டுப் பிறப்பு விழாவை அவ்வூர் சைவ சித்தாந்த சபையாரால் மிகவும் சிறப்பாக 15-8-50-இல் சபையின் மண்டபத்தின்கண் கொண்டாடப்பெற்றது. திரு சிவ. ந. சின்னக்கண்ணுப் பிள்ளை B.A., B.L., அவர்கள் வேண்டத் திரு. டாக்டர் D. R. அண்ணாமலைப் பிள்ளையவர்கள் (விடுதி பெற்ற சிவில் சர்ஜன், சைவப் புலவர்) தலைமை பூண்டார்கள். "இறைவனது படைப்பின் அருமை" என்னும் பொருள் பற்றி விரிந்ததோர் விரிவுரை ஆற்றினார்கள்.

பேராசிரியரவர்களின் மாணவி 'சித்தாந்தச் செம்மணி' திருமதி. சிவகாமி அம்மையாரவர்களால், உரை எழுதி அச்சிட்டுப் பிறப்புநாள் வெளியீடாக வெளியிட்ட "நால்வர் நான்மணி மாலை" என்னும்நூல் யாவருக்கும் வழங்கப் பெற்றது. வெளியூரிலிருந்து வந்துள்ள வாழ்த்துக்கள் பலவும் படிக்கப் பெற்றன. தலைவரவர்களையுள்ளிட்டுச் செந்நாப்புலவர்கள் பலரும் பேராசிரியரவர்களின் கைம்மாறு கருதாது செய்துவரும் இருபெருந் தொண்டும் எடுத்துரைக்கப்பெற்றது. செம்பொருள் அருளால் ஆசிரியரவர்கள் பல்லாண்டு வாழ்ந்து பெருந்தொண்டியற்றி மாணவ மாணவியர்க்குச் செந்தமிழும் சித்தாந்தமும் போதித்துத் திகழப் பொன்னடி வாழ்த்தி வேண்டுதல் செய்தனர்.

திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ ஆதீன கர்த்தரவர்களின் நல்லாசித் திருமுகமும், வெண்பொன் நூறு நன்கொடையும், ஆசிரியரவர்களுக்கு அளிக்கப் பெற்றன. ஆதீனகர்த்தரவர்களுக்கு நன்றிசேர் வணக்கம் நவிலப் பெற்றது. ஆளுடைய பிள்ளையார்க்கு வழிபாடியற்றப்பெற்றது.

இருபாலாரும் பெருந்திரளாய்க் கூடியிருந்தனர். பேராசிரியரவர்களால் யாவர்களுக்கும் நல்லாசியும் வெண்ணீறும் நல்கப்பெற்றன. திரு. அட்வகேட் வெண்ணிமாலைப் பிள்ளை யவர்களால் நன்றி கூறப்பெற்றன.

வரிசை நோக்கி வழங்கப்பெற்ற சித்தாந்தப் பட்டங்கள் பதின்மூன்று. பேராசிரியரவர்கள் தெரிந்துணர்ந்து சிறந்த பட்டங்கள் வழங்குவித்துச் சித்தாந்தச் செல்வர்களை ஊக்குவிக்குஞ் செம்மை சீரியது.

### பட்டம் பெற்ற அறிஞர்களின் பெயர்களும் பட்டங்களும்

1. "சித்தாந்த வித்தகர்"
   திரு. வீ. குமாரவேலுப் பிள்ளை, ஆசிரியர், பண்டாரச் சிவன்பள்ளி, குலசேகரன் பட்டினம்.
2. "சித்தாந்த சைவ புராணிகர்"
   திரு. ச. முத்துக்குமாரசாமிப் பிள்ளை, தமிழ் அகம், குலசேகரன் பட்டினம்.
3. "சித்தாந்த ரத்னாகரம்"
   திரு. முத்து. சு. மாணிக்க முதலியார், தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்நிலைப்பள்ளி, ஆரணி.
4. "சித்தாந்த திருநெறித் தொண்டர்"
   திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார், தலைமைத் தமிழாசிரியர், பச்சையப்பன உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம்.

5. "சித்தாந்தச் செம்மல்"
திரு. க. வெள்ளை வாரணனார், ஆராய்ச்சித் துறையாளர், அண்ணா மலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

6. "சித்தாந்த கலாவல்லி"
திருமதி S இராஜேஸ்வரி அம்மையார், அண்ணாமலை நகர், இராமசாமி செட்டியார் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர், திரு P. R. சாமி நாதன், M. A., L. T. அவர்களின் இல்லக்கிழத்தியார்.

7. "சித்தாந்த பூஷணம்"
திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளை, ஆசிரியர், திருநெல்வேலி.

8. "சித்தாந்த சைவமணி"
திரு. த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, திருவாவடுதுறை ஆதீன வித்து வான், கும்பகோணம்.

9. "சித்தாந்த வித்தகி"
திருமதி. ஈசுரவடிவம்மையார், திரு. C. E. நாயகம், B.A., L.T. அவர் களின் இல்லக்கிழத்தியார், தூத்துக்குடி.

10. "சித்தாந்த சைவப் புலவர்"
விடுதி பெற்ற உதவி சிவில் சர்ஜன், டாக்டர் திரு. D. R. அண்ணா மலைப் பிள்ளை, குற்றாலம்.

11. "சித்தாந்த சிரோன்மணி"
திரு. T. S. கந்தசாமி முதலியார், M. A., வழக்கறிஞர், சாத்தூர்.

12. "சித்தாந்த தினகரன்"
திரு. மறை. திருநாவுக்கரசு, தலைமைத் தமிழாசிரியர், திருவருள் உயர்நிலைப் பள்ளி, குலசேகரன் பட்டினம்.

13. "சித்தாந்த பண்டித பூஷணம்"
திரு. ஆ. ஈசுரமூர்த்தியா பிள்ளை, ஆசிரியர், போர்டு உயர்நிலைப் பள்ளி, சங்கரன்கோயில்.

விவேகானந்தர் பெருமை

கல்கத்தா ஸ்காட்டிஷ் சர்ச் கல்லூரியில் 1881-ஆம் ஆண்டு ஒரு வகுப்பில் ஆங்கிலப் பாடம் நடந்துகொண்டிருந்தது; அக் கல்லூரிப் பேராசிரியர், திரு. வில்லியம் ஹேஸ்டி என்பவர் வோர்ட்ஸ் வொர்த்தின் 'எக்ஸ்கர்ஷன்' என்ற செய்யுளைப் படித்துக் காட்டி அதன் தத்துவக் கருத்துக்களையும், ஆன்ம ஒருமை நுணுக்கங்களையும் எடுத்து விளக்கிக் கொண்டிருந்தார். அதன் நுண்பொருட் கருத்துக்களை மாணவர்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. தம்மால் ஆனமட்டும் விளக்கம் கூறி விளக்கியும் மாணவர்கட்குத் தெரியுமாறு செய்ய இயலாததால் அவர் மிக வருந்தி, 'மனம் தூயதாக இருந்து ஒரே எண்ணத்துடன் மனத்தைச் சிதறவிடாமல் கட்டுப்படுத்தினால்தான் கவிகளின் கருத்தை உணர முடியும்; அத்தகைய உணர்வுபெற்ற ஒரே ஒருவரை இந்தியாவில் பார்த்திருக் கிறேன். அவர் பெயர் தட்சிணேச்சுரத்திலுள்ள இராமகிருஷ்ண பரம ஹம்சர் என்பதாகும்; அவரை நேரில் கண்டால் நான் சொல்வது உங்கட்கு விளங்கும்' என்றார்.

இவ்வுரையை மிக நுணுகிக் கேட்டுக்கொண்டிருந்த மாணவர் ஒருவர் உடனே இராமகிருஷ்ண பரமஹம்சரைக் காணப் புறப்பட்டார். பின் கண்டார்; அவரின் முதன் மாணவரானார். அவரே 'நரேந்திரநாத் தத்தா' என்னும் பெயர் பெற்ற சுவாமி விவேகானந்தா என்பவராவர். அவர் அமெரிக்கா சிகாகோ நகருக்குச் சென்று நம் ஆன்மநேயத் தத்துவங்களை, அம் மேல்நாட்டினர் நன்குணர உணர்த்தி நம் இந்து மதத்தின் உயரிய நிலையை அவர்கள் கடைப்பிடித்தொழுகச் செய்துவந்தார். அப் பெருமை என்றும் நம் இந்திய நாட்டிற்கு உரியதாகும்.

### சென்னைப் பேராசிரியர் மறைவு:

சென்னையில் புகழ்பெற்று வாழ்ந்த கணிதப் பேராசிரியர் திரு. டாக்டர், என். சிவசங்கர நாராயண பிள்ளை யவர்கள் 31-8-50-ல் வான வூர்தியில் செல்லும்போது, கெய்ரோவுக்கு அடுத்து அவ்வூர்தியின் சீர் கேட்டால், இறக்கைகள் தரையில் மோதி, அதன் காரணமாக அவர் மறைந்த செய்தி கேட்டு வருந்துகின்றோம்.

அவர் கணிதத் துறையில் மிக வல்லுநர்; கணித ஆராய்ச்சியில் முதன்மையாக விளங்கும் அமெரிக்காப் பகுதி பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்துக்கு அக் கழகத்தினரால் அழைக்கப்பட்டுச் செல்லும்போதுதான் இக் கொடிய நிலைக்கு உள்ளாகி அவர் ஆவி பிரிந்தது.

அவர் கணிதப் புள்ளிகள் வகுப்பதில் மிக வல்லுநர்; அவர் ஏறத்தாழ நூறு புள்ளி வெளியீடுகள் வெளியிட்டுள்ளார்; அடக்கம் மிக்கவர்; புகழை விரும்பாதவர்; நடுநிலையான குணம் பெற்றவர்; மக்கட்குரிய சிறந்த பண்புகள் அவரிடம் விளக்கமுற்றிருந்தன. ஈடு செய்யவொண்ணாத அவர்கள் மறைவு, பொதுவாக நம் இந்திய நாட்டுக்கும் சிறப்பாக நம் தமிழ்நாட்டுக்கும் மிகமிக மறக்கவொண்ணா வருத்தந் தருவதாகும். அவர்கள் உயிர் இறையடியில் திளைத்து இன்புறுவதாக.

### அஸ்ஸாம் நில நடுக்கத்தின் கொடுமை!

15-8-50-ஆம் நாள் நம் இந்தியநாட்டு விடுதலை விழாக் கொண்டாட்டத் தன்று, அஸ்ஸாம் திப்ருக்கர் ஊரில் இரவு 7-மணிக்கு நிலம் அதிர்ந்தது; ஆடியது; மக்கள் வெருண்டு ஓடினர்; இரவு முழுதும் தூங்காது வெளியிடங்களில் போய் இருந்தனர்; அடுத்தடுத்துப் பல நாட்கள் ஏற்பட்ட நில நடுக்கத்தால் ஆயிரக்கணக்கான வீடுகள் இடிந்தன. இலட்சக்கணக்கான மக்கள் மடிந்தனர்; எஞ்சிய மக்கள் வீடின்றி, உணவின்றித் தத்தளிக்கின்றனர். எங்கும் துன்பக் காட்சி; பள்ளங்கள்; நீர்ப் பெருக்குகள் எங்கணும் ஏற்பட்டு மக்கள் வாடி வதங்குகின்றனர்; நம் இந்திய அரசினர் வானூர்தியிற் பறந்து சென்று, உணவு கொடுத்து உதவி வருகின்றனர். பொதுமக்களும் ஆங்காங்கே பணம் திரட்டி உதவ முன்வந்திருக்கின்றனர்.

உரிமை பெற்ற நம் நாட்டில் பஞ்சமும், பட்டினியும் ஒருபால் வருத்த, நில நடுக்கம், பெருவெள்ளம் போன்ற இயற்கைக் கொடுமையும் சேர்ந்து வருத்துதல் மிகமிக வருந்துதற்குரியது.

"நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்
இன்நிழல் நிழற்றும் நிழலும் இல்லை." —புறம், டுக.

அன்றோ?

# மறைத்திரு மறைமலையடிகளாரின் நலமின்மை

பல்லாவரம் பொதுநிலைக்கழக ஆசிரியரும் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும்மொழிகளில் பெரும்புலமையுடையவராக விளங்கித் தனித்தமிழ் பேணிப் பல்வகைய அரிய தமிழ் ஆங்கில நூலாசிரியராகத் திகழ்ந்து வருபவருமான மறைத்திரு மறைமலையடிகளார் மூன்று வாரங்களாக நுரையீரல், இருதய நோயினால் பெரிதும் நலமின்றிப் படுத்தபடுக்கையாக இருந்து வருகின்றனர்.

தமிழ்நாட்டில் இன்றிருந்து வரும் தமிழ் ஆர்வத்திற்கும் தமிழ் உணர்ச்சிக்கும் தமிழ் வளர்ச்சிக்கும் முதன்முதல் தமிழகத்தில் தம் நுண்ணிய ஆய்வுரைகளாலும் நூல்களாலும் வித்திட்டவர்கள் அவர்களேயாவர்.

தம் சொந்தத்தில் ஆயிரக்கணக்கான அரிய ஆங்கில தமிழ் நூல்கள் அடங்கிய பெரிய நூலகமொன்றை வைத்திருக்கும் சிறந்த பேரறிஞர். அவர்கள் நூல்களைப் படித்தும் அவர்கள் ஆய்வுரைகளைச் செவி மடுத்தும் தமிழ் உணர்வுடையராய் தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்ற முனைந்து விளங்குபவர்கள் தமிழ்நாட்டில் பலராவர்.

சைவத்திற்கு ஊன்றுகோலாக விளங்கித் தொண்டாற்றி வரும் பல்வகைக் கழகங்கள் சங்கங்கள் நம்நாட்டில் ஏற்படக் காரணமாக விளங்கிய பெருந்தகையார் அவர்கள். மிகவும் நலமின்மையாயிருக்கும் அடிகளார் இந்நிலையினின்று விரைவில் நலம்பெற்றுத் தமிழ்மொழிக்கும் சிவநெறிக்கும் பண்டுபோல் தொண்டாற்றுமாறு துணைசெய்ய இறைவனருளை வேண்டுகின்றோம். அன்பர்களும் ஆண்டவன்பால் வேண்டுதல் செய்வார்களாக.

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




ம்பு ௫ } ர் ஆண்டு ககஅக, புரட்டாசி { பரல் ௨
அக்டோபர், 1950

தமிழ் பேசித் தமிழ் எழுதித் தமிழ்க்கெனத் தமிழர் நலமொன்றே குறிக்கோளாகக்கொண்டு தனித்தமிழின் உருவாக உயிராக விளங்கிய மறைமலை, நம்மோடு வாழ்ந்து குயிலினுமினிய மென்குரலால், தேனின் இனிக்கும் தீந்தமிழால் அறிவுரை வழங்கிய தமிழ்மலை, நாமெலாங் கதறிக் கண்ணீருகுக்க மறைந்துவிட்டது!

நற்றமிழ் பேசித் தனித்தமிழ் எழுதுவார்க்கெலாம், தமிழ்நடை பயிலுவார்க்கெலாம் அருட்குரவராக விளங்கிய அடிகள்!

ஆயிரக்கணக்கான மக்கள் குழுமி, ஆர்வமுடன் கேட்டுப் போற்றிப் புகழ்ந்து கொண்டாட, யாண்டுஞ்சென்று தமிழும் சைவமும் வளர விரிவுரையாற்றிய பெருந்தகை!

வடமொழிக் கலப்பால் தனித்தகையிழந்த தமிழன்னையின் மாசுநீக்கிப் புத்துணர்வும் புதுமெருகுந் தந்த தலைவர்!

சைவ சிந்தாந்தக் கொள்கைகளில் முனைந்து நின்று செய்த அரும்பெரும் சீர்திருத்தங்களைப் பலர் வாய்மையறியாது, மனம்போனவாறெல்லாம், மாறுகொண்டு எதிர்த்த போதினும், அவையே வேண்டற்பாலவும் தக்கவுமாமென அஞ்சா நெஞ்சத் துணிவுடன் பறைசாற்றி நிலைநாட்டிய செம்மல்!

அழகொழுகும் ஆற்றொழுக்கான இனிய தமிழ் நடையில் பல்வேறு துறைகளிலும் மாணிக்கங்களாக விளங்கும் அரிய தமிழ்க் கருவூலங்களை வழங்கிய வள்ளல்!

நாட்டின் பல்வேறு கோணங்களிலுமுள்ள சீர்திருத்த நோக்கங்கட்கெல்லாம் தோன்றாத்துணையாய் நின்று ஊக்கமும் வழிவகைகளும் உயிர்ப்புடன் நல்கிய ஒருவர்!

மொழியின் வளம் பிறமொழிப் பரவலால் கெடும் எனத் துணிவுடன் கூறி, இன்றுவரை எவரும் மறுத்துரையா வண்ணம் நிலைநிறுத்திய பெருந்தகை!

உயிரோடுலவும் கலைக்களஞ்சியமாக விளங்கித் தானும் ஒரு கலைக் களஞ்சியத்தைத் தொகுத்து வைத்திருந்த பேரறிவாளர்!

எத்தகைய சூழல்களிலும் என்ஞான்றும் எக்காரணம் கொண்டும் எவர்க்குமஞ்சாது தான்கண்ட உண்மையினைக் கலங்கா உறுதியுடன் ஆணித்தரமாக் கூறிய குணக் குன்று! நாம் அனைவரும் கலங்க மறைந்துவிட்டது.

உளம் நொந்து உயிரிழந்து வாடுகின்றது தமிழர் உள்ளம். 'அவர் வாழ்ந்த நாளில் வகையுடன் பேணிப் பல்லாற்றானும் பயன்பெறும் பேறு பெற்றோமில்லையே' என ஏங்குகின்றது. 'இத்தகைய ஒரு பெருமலை! அருள்மலை! அறிவு மலை! மறைமலை! இனி என்று தோன்றப்போகின்றது?' என அலமருகின்றது. மும்மொழி யாற்றலுடன் எம்மொழிக்கும் முதன்மையாய், என்ஞான்றும் நிலைத்ததாய் இயற்கையோடிணைந்ததாய் உள்ள தமிழ் மொழியே உயிரென வாழ்ந்த பொன்னுடலும், மென்குரலும், புன்னகையும் மறைந்த தென்று எண்ணும்போது ஆற்றொணத் துயர் நம்மைப்பற்றி வருத்துகின்றது. பழந்தமிழ் நூல்களைப், பரப்பைப், பண்ணை அன்று வாரி விழுங்கியது கடல்; இன்றோ? காலம் தமிழ் மலையையே விழுங்கிவிட்டது!

அடிகள் மறைந்தாலும் அவர் தந்த அறிவுரைகள் நம்மிடையுள்ளன. அவர் காட்டிய செந்நெறிகள், அவர் விளக்கிய வரலாற்றின் செழுமை முதலியவை நம்முடன் நம்முளத்துடன், நம்முயிர்ப்புடன், நம்மறிவுடன், நம்முயி

ருடன்தானுள்ளன. மாபெரும் வலிவெலாம் ஒருருவாய்த் திகழ்ந்த மலை மறைந்ததெனினும், அதன் மாண்பு அறிவியல் நுண்ணுருவாய் மக்கள் உளமெலாம் நிறைந்து நின்று வழி காட்டும். அரிய நூலகத்தை அடிகள் தமிழகத்திற்கு வழங்கி யுள்ளனர். அதனை ஒரு பெருமாளிகையிற் சென்னை நகரில் நிறுவத் தமிழகம் முனையவேண்டும்.

அழகி மும்தாசுக்கு உலகு போற்றும் தாஜ்மகால் அமைந்திருக்கின்ற நாட்டில், அறிவுஞாயிறு மறைமலைக்கு அவர் தகுதிக்கும் தமிழர்களின் உணர்வுக்கும் ஏற்ற உயரிய நினைவுச் சின்னங்கள் ஏற்படவேண்டும். தலைநிமிர்ந்து நின்று 'எம் மறைமலையின் நினைவு' என்று கூறி, இறுமாந்து வருங் காலத்தும் தமிழ்வீறு கிளர்ந்தெழச் செய்யவேண்டும்.

அவர் பெயரால் நினைவுக்குறிகள் கழகங்கள் கலை நிலையங்கள், தெருக்கள், மாளிகைகள், ஊர்கள், ஊர்க் கோபுரங்கள், சோலைகள், சாலைகள் நாடெல்லாம் மலிகித் 'தமிழ்! தமிழ்!' என்று யாண்டும் முழங்கவேண்டும்.

தமிழகம் ஆவன செய்யுமாக!

அடிகளின் நூல்கள் நாடெங்கும் அனைவர் கைகளிலும் விளங்குமாக!

வாழ்க மறைமலை யடிகள் புகழ் !

வளர்க தனித்தமிழ் !

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே.

—திருமூலர்.

# அடிகளாரின் ஆற்றொணா இறுதி

6—9—50-ஆம் நாள் மாலை திரு. வித்துவான் வை. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகச் சென்னை நிலையத்தில் தொலை பேசிவழி அடிகளாரின் நலமின்மை பற்றிய செய்தியைத் தெரிவித்தனர். அடுத்த நாட் காலை பல்லாவரத்திற்குச் சென்றோம். பொலிவு நிறைந்த பொன்மேனி வாடி வதங்கிப் படுக்கையில் கிடந்த காட்சியைக் கண்டு வருந்தினோம்.

அந்நிலையிலும் வந்தவர்களை இன்னாரென அறிந்து, இரண்டொரு சொற்கள் பேசினர் அடிகள். தெய்வீக அறிவின் களை அவர்கள் பேச்சில் சிறிதுங் குறையவில்லை. எனினும் உடல் பெரிதும் தளர்வுற்றே யிருந்தது.

ஒன்பதாம் நாள் (9—9—'50) தனக்குப் பின்னர், தன் உரிமைப் பொருள்களைப் பிரித்து வழங்கவேண்டியதற்குரிய ஏற்பாடுகளை அடிகள் செய்தனர். தான் இனிப் பிழைத்தெழுவது இயலாது என்று முடிவுகொண்டிருந்தவர் போன்று காணப்பட்டனர்.

தாம் அரிதில் முயன்று சேகரித்தனவாகிய தமிழ், ஆங்கிலம், வடமொழி யெனும் மும்மொழி நூல்கள் செறிந்த, தம் அரிய நாலாயிரத்துக்கு மேற்பட்ட நூல்களடங்கிய மணிமொழி நூலகத்தினைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரிடம் ஒப்புவித்து, அவர்கள் அதனை, அவர்கள் செலவிலேயே சென்னையில் அடிகள் பெயரால் பொதுமக்களுக்குப் பயன்படும்வண்ணம் நடத்திவருவதென்றும்; அடிகளாரின் நூல்களையும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் ராயல்டி முறையில் வெளியிடுவதென்றும்; ராயல்டி மூலம் வரும் தொகைகளையும் அடிகளின் எஞ்சிய சொத்துக்களையும் அடிகள் குடும்பத்தினர்க்கு இன்னின்னவாறு பிரித்துக் கொடுப்பதெனவும் தெளிவாகத் தம் இறுதிமுறியினை அடிகள் வகுத்துள்ளனர்.

மருத்துவர் திரு. டாக்டர் ஆனந்தர் அவர்களும், திரு. வ. சுப்பையாப்பிள்ளை யவர்களும் மிகவும் கவலையோடு எவ்விதமும் இந்நிலையினின்று அடிகள் மீண்டு, தமிழ் மொழிக்குத் தொண்டாற்றவேண்டுமே யென்று உன்னிப்பாக அடிகளுக்கு

வேண்டிய மருந்து முதலிய நல்வழிகளைச் செம்மையுற ஆற்றினர்.

அடிகளின் குடும்பத்தினர் அனைவரும், தொண்டரும் சூழ இருந்து அடிகள் பிழைத்தெழ அருளுமாறு இறையடி நினைந்து வேண்டினர். அடிகளுடனிருந்து பணிசெய்தனர்.

கணக்கற்ற பெரியார்களும் அன்பர்களும் அடிகளை வந்து கண்டு வருந்திச் சென்றனர்.

அந்தோ! அனைவரும் ஏங்கும்வண்ணம் அடிகளின் ஆன்மா புனிதப் பொன்னுடலை நீத்து 15—9—'50-ம் நாள் வெள்ளியன்று மாலை 3-30 மணிக்கு இறையடி சேர்ந்தது.

மக்கள் அரற்றினர்; மாணவர் புலம்பினர்; தொண்டர்கள் கதறினர். காட்டுத் தீப்போன்று பரவிய செய்தியைக் கேட்டார் அனைவரும் அங்கங்கே உளநைந்து உருகி அலமந்தனர்.

இரவோடிரவே அடிகள் மறைவு, வானொலி மூலமும், சுவரொட்டிகள், துண்டு அறிக்கைகள், செய்தித்தாள்கள் முதலியவற்றின் மூலமும் எங்கும் பரவுவதற்கான ஏற்பாடுகளைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் செய்தனர்.

அடுத்த நாள் 16—9—'50 சனியன்று பெருமக்கள் யாவரும் பல்லாவரத்திலுள்ள அடிகள் இல்லத்திற்கு வந்து குழுமி அடிகளுக்குத்தம் இறுதிவணக்கத்தைச் செலுத்தினர்.

திரு. T. M. நாராயணசாமிப் பிள்ளை, சி. எஸ். இரத்தின சபாபதி முதலியார், பேராசிரியர் முத்தையா, கார்ப்பரேஷன் கல்வியதிகாரி சுந்தரவடிவேலு, இளவழகனார், 'தினசரி' ஆசிரியர் சொக்கலிங்கம், 'கல்கி' ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி, பிரசண்டவிகடன் ஆசிரியர் நாரணதுரைக்கண்ணனார், டாக்டர் மு. வரதராசனார், பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள், கி. ஆ. பெ. விசுவநாதம், ஷாபிமுகமது மற்றும் பெருமக்கள் பலர் அடிகளுக்குத் தம் இறுதி வணக்கத்தைச் செலுத்த வந்திருந்தனர். ஆயிரக்கணக்கான அன்பர்களும் தமிழ்ப் புலவர்களும் கூடினர்.

அடிகளின் பொன்னுடலம் நறுமண நீரால் நீராட்டப் பெற்றுப் பூம்பல்லக்கில் அமர்த்தப்பெற்றதும், கலங்கி யழுத

பண்டைச் செந்தமிழ்ச் சான்றோர் இயற்றிய நூற்பாக்களும், இடைக்காலத்துப் பெரியார் இயற்றிய நூற்பாக்களும் பெரும்பாலும் இடர்ப்பாடின்றிப் பொருள் சென்றவழியே சொற்சென்று தம்மை யோதுவார்க்கும் பயில்வார்க்கும் அறிவும் இன்பமுமாகிய பெரும்பயன்றந்து பிறங்குவனவாக, பிற்காலத்துப் புலவர்கள் இயற்றிய நூற்பாக்களோ சொற்செருகப்பட்ட புழைவழியே பொருள் துறுத்தப்பட்டுத் தம்மை யோதுவார்க்கும் பயில்வார்க்கும் பொருட்பயன் தருவன வல்லவாய் இருண்டு கிடத்தல் பகுத்தறிந்துகொள்ளற்பாற்று. ௭

உடம்பின்கணுள்ள ஐயும் பித்தும் வளியுமாகிய முதற்பொருள்களை ஒப்பவைத்துக் கொள்ளுதற்கும், நுரையீரலை வலுப்படுத்தி இரத்தத்தைத் தூயதாக்குதற்கும், நாடோறும் ஒன்பான் புழைகளின் வழியாக வெளிப்படும் தூவா நச்சுப் பொருள்கள் உடம்பிற் சிறிதும் தங்காமல் வெளிப்படுதற்கும், நமது அறிவை விரிவுசெய்து விளக்குதற்கும், உடம்பிற் றட்ப வெப்பங்கள் என்றும் ஒருநிலையாக இருத்தற்கும் கட்டாயமாகச் செயற்பாலது மூச்சுப் பழக்கமேயாகும். ௮

நமதுடல் எண்ணிறந்த கோடி உயிர்த்துகள்களால் அமைக்கப்பட்டிருக்கின்றது. ஒவ்வோர் உயிர்த் துகளும், மிகச் சிறியதோர் உடம்பும், அதனுள் ஓருயிரும் பொருந்தப்பெற்றனவாகும். பலகோடி குடிமக்களையும் தன்னுள் அடக்கிவைத்து ஆளும் ஒரு மன்னவன்போல, எண்ணிறந்த கோடி உயிர்த் துகள்களையும் தன்னுள் அடக்கிவைத்துக்கொண்டு ஒவ்வொரு மக்கள் யாக்கையிலும் ஒவ்வோருயிர் தன்னரசு நடத்திவருகின்றது. ஓர் அரசன் கீழிருந்து வாழுங் குடிமக்களிற் பலர் காலந்தோறும் மடிந்துபோக, வேறு பலர் அடுத்தடுத்துத் தோன்றுதல்போல, நம்முடம்பின்கண்ணும் பழைய உயிர்த்துகள்கள் ஒவ்வோர் இமைப்பொழுதும் வெளியே கழிந்துபோக, வேறு பல புதிய உயிர்த்துகள்கள் ஒவ்வொரு நொடியும் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. ௯

இன்பவழிப்பட்டு நிற்பதாகிய பத்திமார்க்கமே அறிவின் வழிப்பட்டு நிற்பதாகிய ஞானமார்க்கத்தினும் சிறந்தது. ௧௦

சிறுபொருட் சேர்க்கையால் சிற்றின்பமும், பெரும்பொருட் சேர்க்கையால் பேரின்பமும் வரும். ௧௧

# மறைத்திரு மறைமலையடிகளார்



தோற்றம் :
*1876—ஜூலை 15.*

மறைவு :
*1950—செப்டெம்பர் 15.*




நோயுற்றிருக்கும் அடிகளார்



அமைதி நிலவும் மனை



பொன்னுடலம் நீராட்டப்படுகிறது



மலர் சூடினார் அன்பர்கள்



மக்கட்கடல் சூழ்ந்து செல்கிறது



பற்றி எரியுது செந்தீ



அம்பலவாணர் அடி சேர்ந்தனர்

இயற்கை நிகழ்ச்சி

அண்மையில் வடநாட்டிற் சில பகுதிகளில் நில நடுக்கமும் அதிர்ச்சியும் நிகழ்ந்ததும், இமயமலையின் கொடுமுடிகள் சில மறைந்தொழிந்ததும், தென்னாட்டில் இங்ஙனம் ஒரு பெருந் தமிழ்மலை—மறைமலை சாய்ந்து மறைதற் கறிகுறியாகவே நிகழ்ந்தனபோலும்! அடிகளாரின் பிரிவால் தமிழர் உள்ளங்களெல்லாம் அதிர்ச்சியுற்று நடுங்கியவாறுபோல, இயற்கை தானும் அடிகளாரின் பிரிவறிந்தஞ்சி நடுங்கி அதிர்ந்தது போலும்!

> " வடதிசை யதுவே வான்பேர் இமயம்
> தென்றிசை ஆய்குடி இன்றாயிற்
> பிறழ்வது மன்னோவிம் மலர்தலை யுலகே." (புறம். கஉ)

எனப் புறநானூற்றுப் புலவர் ஒருவர் பாடுவதுபோல, வட இந்திய நாட்டிற்கு ஒரு வான்பேரிமயமும், நம் தென்றமிழ் நாட்டிற்கு ஒரு சான்றோர் மறைமலையுமாக, இருதிறத்தும் நிகரொப்ப நின்று உலகை நிலைதளர்ந்து நெறிதிறம்பாவகை செய்துவந்தன.

வான்பேர் இமயம் தன் கொடுமுடிகள் சிலவற்றை மறைத்துக் குறைத்துக்கொண்டது, மறைமலை தளர்வுற்று மறையுநிலை எய்தியது குறித்தே எனலாம்!

> " கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
> திருநுதற் கில்லை இடம்." —திருக்குறள், ககஉ௩.

என்றபடி, மறைமலையைத் தன் கைலைமலைக்கு அழைத்துக் கொள்ளக் கருதிய சிவபெருமான், அங்கு இவர் பொருட்டுச் சில மலைகளை இலவாக்கி, இடமமைத்துக்கொண்டு எதிர்போந்து இனிது வரவேற்றனரோ என்னவோ நாமறியோம்!

எனினும் இவ்வியற்கை நிகழ்ச்சிகட்கும், அடிகளாரின் மறைவுக்கும் ஏதேனும் ஒரு தொடர்பும் உட்பொருளும் இருக்கக்கூடும். "இரவலர்கள் இறக்குப்போது வால்விண் மீன்கள் ஏதும் காணப்படுவதில்லை; அரசிளைஞர்கள் இறக்கும் போதோ துறக்கமே பேரொளிவீசிப் பிறங்குகின்றது."

" When beggers die, there are no comets seen:
The heavens themselves blaze forth the death of princess."

எனவும், "அவரது வாழ்க்கை பெருந்தகவினதாய் இருந்தது; இயற்கையே எழுந்து நின்று, 'இதோ, ஒரு மனிதன் இருந்தான்' என்று உலகுக்கெல்லாம் எடுத்துக் கூறத்தக்கவாறு சிறப்பியற்கூறுகள் பல அவரிடம்

"His life was gentle, and the elements
So mix'd in him, that Nature might stand up
And say to all the world, "This was a Man!"

எனவும் வரும் ஆங்கிலப் பெருங்கவிஞர் செகப்பிரியரின் வரிகளை ஈண்டு நாமும் நினைந்து வியக்கவேண்டும் நிலையில் இருக்கின்றனம் அல்லமோ?

### அடிகளின் அருமை பெருமைகள்

உள்ளின் உள்ளம் வேகும் அடிகளின் பிரிவினை உள்ளுங்கால் எல்லாம். "இங்கே ஒரு சீசர் இருந்தான். இனி எப்பொழுது அத் தகையவன் வரப்போகின்றான்" (Here was a ceaser, when Comes such another?) என்னும் செகப்பிரியர் வரியே மீண்டும் மீண்டும் நம் நினைவுக்குப் போதருகின்றது; அடிகளாரைப்போல வேறொருவர் இனி யாவர் "அசைவில் செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறை வெல்லத்" தோன்றப் போகின்றனர் என்னும் கவலையே நமக்கு மிகுகின்றது. "இனி யார் உளரோ? முன்னும் இல்லை!" என்னும் பதிற்றுப் பத்தடியே நம்மனோர் உணர்வுச் செவிகளில் பல்காலும் எதிரொலி புரிகி

தொன்றுதொட்டு இன்று வரையிற் றண்டமிழ் நாட்டிற் றோன்றி மறைந்த புலவர் பெருமக்கள் பல்லாயிரவருள்ளும் தலைமையும் முதன்மையும் தொல்காப்பியனார் ஒருவர்க்கே உரித்தாதல் போலவும், செகப்பிரியர் இயற்றிய "புயல்" (The Tempest) என்னும் நாடகத்துள், "நீ பேசுவது என்னுடைய மொழியோ? என்ன வியப்பு! இம்மொழி வழங்கும் நாட்டில் மட்டும் நான் இருந்திருந்தால், அம்மக்களுளெல்லாம் யானே தலைசிறந்தவனாவேன்."

My language! heavens!
I am the best of them all, that speak this speech
Were I but where 'its spoken.

எனப் ஃபெர்டினண்ட் (Ferdinand) கூறுவது போலவும், கோடிக்கணக்கான இஞ்ஞான்றைத் தமிழ் வழங்கும் மக்களுள்ளே "தலைசிறந்த தனிப்பெரு முதற்றமிழர்" அடிகளாரைத் தவிர வேறு பிறர் யார் இருத்தல் இயலும்!

சேக்கிழார் பெருமானின் கூற்றில் வைத்துச் சொல்லலுறின், அடிகளைத் "தமிழ்மொழித் தலைவர்" எனவே சுருங்கக் கூறலாம்.

"ஓவியம்—நான்முகன் எழுதவொண்ணுமை, உள்ளத்தால்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ"

எனச் சேக்கிழார் 'பரவையாரைப் பாராட்டுதல்போல, கோடிக் கணக்கான தமிழர்களைப் படைத்த இறைவன், அடிகளைமட்டும் ஆய்ந்தாய்ந்து அறிவு திருவுருஆற்றல் ஆராய்ந்த கல்வி முதலிய எல்லா நலங்களும் அமைந்து நிரம்பிக் குறைவறச் சிறப்புறப் படைத்தனன் போலும்!

தொல்காப்பியரையும் திருவள்ளுவரையும் மெய்கண்ட தேவரையும் ஒருசேர அடிகளார் திருவுருவிற் கண்டு மகிழ்ந்து வந்தோம்! அப்பொன்னிறம் மிக்க அழகிய மேனியை இனி எப்பொழுது காண்பேம்! "குழலும் யாழும் அமிழ்தும் குழைத் தன்ன" அடிகளின் குயிலினும் இனிய தமிழ்க்குரலை இனி என்ஞான்று கேட்பேம்?

அடிகளின் வரலாற்றுச் சுருக்கம்

"அவ்வக் காலநிலைக்கேற்ப இறைவன் திருவருளால் ஞாலத்திற் சான்றோர்கள் தோன்றி மன்பதையை உய்விப்பர்" எனத் திரு. வி. க. அவர்கள் அடிக்கடிக் கூறுவர். அங்ஙனமே, கொலை வேள்வி மலிந்திருந்த காலத்தில் கொல்லா அறத்தின் விழுப்பம் உணர்த்தப் புத்தரும், வெறும் சடப்பொருளுண்மைமட்டும் பரவிவந்த காலையில் அறிவுப்பொருளின் உண்மையை வலியுறுத்தச் சங்கரரும், பிரமப்பொருள் தவிரப் பிறிதொன்றில்லை என்னும் கொள்கையால் இறைவழிபாட்டுக்கு இடர் நேர்ந்த பொழுது இராமாநுசரும், சாதிசமயப் பூசல்களும் பிணக்கும் மேற்பட்ட காலத்து அவை போக்கி ஒருமைப் பொதுநெறி வகுக்க இராமலிங்கரும் தோன்றியவாறுபோல, தமிழும் தமிழினமும் தமிழகமும் பல்லாற்றானும் சீர்கேடுற்றுச் சிதைந்திருக்கும் நாளில், அவை தம்மைப் பண்டைப் புகழ்நிலையிற் கொண்டு சென்று நிறுவிச் செழிப்பிக்கும் பொருட்டு,

"சென்றகாலத்தின் பழுதிலாத் திறமும்
இனிஎதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால்
எற்றைக்கும் திருவருள் உடையோம்"

எனத் தமிழரெலாம் வாழ்த்த அடிகளார் தோன்றினர்.

அடிகளார் தோன்றிய நன்னாள், 1876 ஜூலைத் திங்கள் 15-ஆம் நாளாகும். "நீ வாழியர்! நின் தந்தை தாய் வாழியர்! நிற்பயந் திசினோரே," எனத் தமிழகமெல்லாம் வாழ்த்துமாறு, அறிவறிந்த சான்றோராகிய திருஞானசம்பந்தச் செம்மலார்

போலும் அடிகளாரை, மகன்மை முறையிற் பெற்றெடுக்கும் பெருந்தவப்பேறு வாய்க்கப்பெற்ற பெருமக்கள், சிவபாத இருதயரும் பகவதியாரும் போலும் சொக்கநாதப் பிள்ளை என்னும் தந்தையாரும், சின்னம்மை என்னும் அன்னையாருமாவர். "பெற்றால் நினைப்போற் பெறலும்" என்று சிவப்பிரகாசர் கூறியவாறு, 'அறிவறிந்த மகப்பேறு' அடையப்பெற்றவர்கள் அவர்களே! அடிகள் தோன்றிய தலம், நாகபட்டினத்திற்கடுத்த காழிப்பதியனைய காடம்பாடி என்னும் சிற்றூராகும்.

தமிழே தாயாகவும், சிவமே தந்தையாகவுமுடைய அடிகளார், தம் குழவிப் பருவத்தேயே தந்தையாரை இழக்க நேர்ந்தமையின் அன்னையாரின் பாதுகாவலிலேயே இருந்து கல்வி பயின்றனர். நாகையில் இருந்த உவெஸ்லியன் மிஷன் கல்லூரியே (Wesleyan Mission College) அடிகளார் பயின்ற கல்லூரி. 'விளையும் பயிர் முளையில் தெரியும்' என்னும் முதுமொழிக்கேற்ப, அடிகளார் தம் இளமையிலே ஆசிரியர்களாலும் மாணவர்களாலும் தம் கூர்த்த மதிநுட்பங் குறித்துப் பாராட்டப்பெற்றுப் பற்பல பரிசுகளும் பெற்றுவந்தார். 'இந்து மதாபிமான சங்கம்' என்னும் கழகத்தினையும் தம் மாணவப் பருவத்தில் அடிகளார் தொடங்கித் திறம்பட நடத்திவந்தார். குடும்பச் சூழ்நிலைகளால் அடிகளார்க்கு 17-ஆம் ஆண்டில் 'சவுந்தரவல்லி' என்னும் நங்கையார் மனைவியாராக மணம் பொருத்தப்பட்டார். 18-ஆம் ஆண்டில் 'சிந்தாமணி' என்னும் பெண்குழவியும் பிறந்தது. அதனாற் றம் கல்விப்பயிற்சியை விடுத்து, அடிகளார் ஏதேனும் ஓர் அலுவலில் புகவேண்டியவரானர். அடிகளார்க்குத தம் இயற்றமிழாசிரியர் நாகை. புத்தகக் கடை நாராயணசாமிப் பிள்ளையவர்களால், அவர்தம் மாணவர் பேராசிரியர் 'மனோன்மணீயம்' சுந்தரம் பிள்ளை அவர்களுடைய தொடர்பு வாய்த்தது. தம் 18-ஆம் அகவைக்குள்ளாகவே சிறப்பாகத் தொல்காப்பியம் திருக்குறள் பத்துப் பாட்டு கலித்தொகை திருவாசகம் திருக்கோவையார் சிவஞான போதம் சிவஞானசித்தியார் முதலிய அரும்பெறல் நூல்களை முழுதும் பொருளறிந்து முறையே நன்கு நெட்டுருச் செய்து முடித்து, பொதுவாக அகம் புறம் முதலிய நூல்களிலும், சிலப்பதிகாரம் மணிமேகலை சிந்தாமணி பெரியபுராணம் நாலடியார் பழமொழிநானூறு முதலிய நூற்களின் சொற் பொருட் சுவையுணர்வுகளிலும் மிகுந்த ஈடுபாடுடையராய் விளங்கிய அடிகளாரின் சிறு முதுக்குறைவுடைமை (Old head on young shoulders) கண்டு மிகப் பெரிதும் வியந்து திரு. சுந்தரம் பிள்ளை அவாகள் அளிதத சான்றிதழால் 1894-ஆம்

ஆண்டில் அடிகளார் கிறித்தவக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாள ரானார். 1911-ஆம் யாண்டுவரை, அவ்வலுவலில் இருந்து, பின்னர்த் துறவுநெறி புகுந்து, தம் இறுதிநாள் அளவும் பல்லவ புரம் பொதுநிலைக்கழக மாளிகையில் வாழ்ந்துகொண்டு, அடிக ளார் பற்பல நூல்கள் எழுதியும் விரிவுரைகள் நிகழ்த்தியும் அளப்பருந் தமிழ்த்தொண்டுகள் இயற்றிக்கொண்டு வந்தார்.

**அடிகளார் தொண்டின் விளைவுகளும் விளக்கங்களும்**

நாவலர், சோமசுந்தர பாரதியார், M A., B L, முன்னைத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர்; S. வையாபுரிப் பிள்ளை, B A, B.L., கிறித்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்; த. சற்குணர் B.A, ரசிகமணி, டி. கே. சிதம்பரநாத முதலியார், B A, B.L, C. N. முத்துரங்க முதலியார் முதலிய எண்ணிறந்த பெருமக்கள் பலர், அடிகள்பால் கிறித்தவக் கல்லூரியில் தமிழ் பயின்ற பெருமக்களேயாவர். இங்ஙனம் கல்லூரியிற் பயிலாது தனியே அடிகள்பால் பழகித் தமிழ் பயின்றவர்களுள், திரு. வி. க., மணி. திருநாவுக்கரசு முதலியார், பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலி யார், ஆசிரியர், இளவழகனார், நாகை. தண்டபாணிப் பிள்ளை, நாகை. கோபால கிருட்டினர் முதலானோர் சிறப்பாகக் குறிப் பிடத் தக்கவர்களாவர். இவையெல்லாம் கருத்துறின், இஞ் ஞான்றைத் தமிழறிவுலகம் முழுவதுமே அடிகளாரின் மாணவ உலகமாகும் எனலாம். பொதுமக்களால் அறியப்படாவிடினும் சிறந்த அறிஞர்களெல்லாம் மதித்துத் தலைவணங்கிப் போற்றத் தகுந்த அடிகளின் தமிழ்த் தொண்டின் அளப்பரிய சிறப்பின் விளக்கத்திற்கு இத்தகைய மிகச் சிறந்த மாணவர்குழாம் ஒன்றே போதுமன்றோ? இங்கிலையில்,

"He had not the great public with him; but he had the noble Johnson, and the admirable Raynolds, and the great gibbon, and the great Burke, and the great Fox—friends and admirers illustrious indeed as famous as those who, fifty years before, sat round pope's table"

என வரும் தக்கரே (Thackeray) என்னும் ஆசிரியர் கூற்றினை நாம் நினைவுகூரவேண்டும் நிலையில் இருக்கின்றனம் அல்லமோ?

இம்மட்டோ! பேராசிரியர், சுந்தரம் பிள்ளை; சைவ சித்தாந்த சண்டமாருதம் சோமசுந்தர நாயகர்; மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவிய "பாலவநத்தம்" பாண்டித்துரைத் தேவர், கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர், செந்தமிழ்ப் புரவலர், தமிழவேள், த. வே உமாமகேசுவரம் பிள்ளை; திருப்பாதிரிப்

புலியூர் ஞானியார் அடிகள்; பா. வே. மாணிக்க நாயக்கர்; அரசஞ் சண்முகனார்; யாழ்ப்பாணம் சர் P. அருணாசலம் முதலானோர்களெல்லாம். அடிகளாரை எங்ஙனம் போற்றி வந்தனர் என்பது அறிந்து வியக்கத்தகும் செய்தியாகும். பல விரித்துப் பாரித்துரைப்பதென்னை? அண்மைக்காலத்தில் தமிழ்த் தொடர்புடையராகப் பெருமக்கள் எவரெவர் இருந்த னரோ-இருக்கின்றனரோ, அவரெல்லாம், கருத்து—கொள்கை வேறுபாடுகள் எவ்வளவு உடையராயினும், அடிகளின் அளவற்ற புலமை நலத்திற்கும், சிறந்த தொண்டுகட்கும், உயர்ந்த பண் பாடுகட்கும் தலைவணங்கியவரேயாவர் என்பதில் ஐயமில்லை.

அடிகளார் இத்தென்றமிழ்நாடு மட்டுமன்றி வடநாடும் யாழ்ப்பாணமுமெல்லாம் சென்று சுற்றி ஆங்காங்கே செந் தமிழிலும் ஆங்கிலத்திலும் அரும்பெரும் விரிவுரைகள் நிகழ்த் தித் தமிழ்ப் பண்பாடுகளை யெல்லாம் பரப்பிவந்தனர். விவேகானந்தரைப்போல மேனாடு சென்று சைவசித்தாந்தத்தை யும் தமிழ்மொழிச் சிறப்புக்களையும் பற்றி விரிவுரை செய்து வரல்வேண்டும் என்னும் பெருவிருப்பம் இறுதிவரையில் அடிக ளார்க்கு இருந்துவந்தது. 'சைவசித்தாந்த மகா சமாசத் தினரும்' அடிகளையும், வேறு சிலரையும் வெளிநாடுகட்கு அனுப்புதல் வேண்டுமென மாநாடொன்றில் முடிபு செய்தனர். ஆனால், அம் முடிபு ஏனை யெல்லா முடிபுகளும்போலவே வெறும் ஏட்டளவில் நின்றொழிய நேர்ந்தமை தமிழ்நாட்டின் தவக் குறைவேயாகும். அடிகளைப்போல், ஷில்லர் (F. C. S. Schiller) போன்ற மேனாட்டறிஞர்களும் வியந்து புகழ்ந்து பாராட்டும் மும்மொழிப் புலமையும் பன்னூற் பயிற்சியும் உடையார் பிற ரெவர் இனித் தோன்றப் போகின்றனர்?

அடிகளார் ஐம்பதுக்கு மேற்பட்ட பல அரும்பெரும் நூல்களை இயற்றியுள்ளார். அவைகள் ஒவ்வொன்றும் தனித் தனியே பெருஞ் சிறப்புடையவை. 'ஆங்கில எழுத்தாளர்க ளுள்ளே மிகவும் விரும்பப்படுபவராக இருப்பது என்பது, ஒரு மனிதனுக்கு எத்துணைச் சிறந்த பெருமபெயர்' (To be the most beloved of English writers, what a title that is for a man) என, தக்கரே (Thackeray) என்பார் கூறுவதுபோல, தமிழ் எழுததாளர்களுள் எல்லாம்—நூலாசிரியர்களுள் எல்லாம் தலைசிறந்த புலவர் பெருமானாக விளங்குவதென்பது எத்துணைப் பெரிய பெறலரும் நிலை! அதனைப் பெற்றவர் நம் அடிகளார். லார்டு செஸ்டர் பீல்டு (Lord Chester field), ஜான்சனை (Johnson)ப் புகழ்ந்து கூறியதுபோல, நாமும் அடிகளாரைத் தமிழ்மொழியின் அனைத்துரிமை ஆட்சியாளர் (Dictator of

the Tamil Language) என்று கூறலாம். இத்தகைய சிறந்த வித்தகராய அடிகளாரின் நூல்களால் தமிழகத்திற்குப் பல துறைகளிலும் விளைந்த நலன்கள் பல. திரு. மு. சி. பூரண லிங்கம் பிள்ளை அவர்கள் கூறியவாறு, அடிகளாரின் நூல்கள் "ஆயிரம் உள்ளங்களை ஆராயுமாறும், பதினாயிரம் நாக்களைப் பேசுமாறும், குறைந்தது ஒரு நூற்றாண்டளவேனும் திறமை மிக்க எழுதுகோல்களை எழுதுமாறும் செய்விக்கவல்லன" ("His works are sure to set a thousand minds a-thinking, ten thousand tongues a-talking, and at least a century of able pens a-writing"). இங்ஙனம் செய்விக்கவல்ல அறி வாற்றல் மிக்க சீர்திருத்தக்காரர்; அமைதி மிக்க புரட்சியாளர்; அரிய இலக்கிய மறுமலர்ச்சியாளர் வேறு பிறர் யாவர் இனித் தோன்றப்போகின்றனர்?

அடிகளார் தம் 16-ஆம் அகவை தொடங்கிப் பல தொண்டு களை 60 யாண்டுகளாக ஆற்றி இருக்கின்றார். அவரே, முதன் முதல் தமிழுலகில் பல புது நெறிகள் வகுத்தவர் (Precedent-breaker), அஞ்சாத சிந்தனையாளர் (Fearless-thinker), இயற் கையே ஆராய்ச்சியுணர்வு படைத்தவர் (Original-researcher), தமிழ்ப் பண்பாடு காத்துநின்ற கடமை மறவா ஆண்மையாளர் (Dutiful-champion), தமிழ்க் கொள்கைகளை விளக்கவல்ல திறமை மிக்க விரிவுரையாளர் (Able-expositor), தமிழ்த்தாயை உண்மையாகவே வழிபட்டவர் (Sincere adorer), தமிழ் நாட்டில் முதன்முதற்றோன்றியன எனப் புகழ்ப்பெறும் இராஜம் ஐயர் எழுதிய 'கமலாம்பாள் சரித்திரம்' வேத நாயகம் பிள்ளை அவர்கள் எழுதிய 'பிரதாப முதலியார் சரித் திரம்' என்னும் நூற்களையும், அடிகளார் எழுதிய 'கோகிலாம் பாள் கடிதங்கள்', 'குமுதவல்லி அல்லது நாகநாட்டரசி' என்னும் நூற்களையும் ஒத்திட்டுப் படித்துப் பார்ப்பவர்கள் அடிகளின் பெருமைகளை எளிதில் உணர்ந்துகொள்ளலாம். அடிகளின் தனித்தமிழ் இயக்கத்தின் வெற்றிபற்றித் தமிழுணர்ந்த யாவரும் நன்கு அறிவர்.

"நீளும்இத் தொண்டின் நீர்மை நினைக்கிலார் அளக்க வல்லார்!"

**அடிகளின் தமிழ்த் தோண்டும், அவர்க்குத் தமிழகத்தின் கடமையும்**

தமிழ்க்கும் தமிழர்க்கும் எத்துணை அரும்பாடுபட்டு அடிகள் தொண்டாற்றியுள்ளனர் என்பதனைத் தமிழகம் நன் குணரவில்லை என்றே சொல்லவேண்டும். கீழ்வரும் பகுதியினை அடிகளாரின் உண்மைத் தமிழ்த்தொண்டின் திறனையும், அதனால் அவர்க்கு நேர்ந்த இடுக்கண்களையும் விளக்க, 'ஒருகுழிசிச்

சொன்றிக்கு ஓரவிழ் பதமாம்' என்னும் முறைமைபு காட்டுகின்றேன்.

"இந்நூலை (தமிழர் மதம்) எழுதி வெளியிடுவதற்கு எமக்குண்டான வாழ்க்கைச் செலவு ரூ 1500 ஆகும்; இந்நூலின் அச்சுச் செலவு, காகிதச் செலவு, கட்டடச் செலவெல்லாம் ரூ. 750 ஆகும்; ஆக இந்நூற் செலவு மொத்தம் ரூ 2250 ஆகும்; இந்த ரூபா 2250 முன் பணமாகச் செலவழித்தால் அல்லாமல் இந்நூல் வெளிவருவதற்கு வேறு வழியில்லை. இப்பெருந்தொகையை முன்னதாகச் செலவழித்தலால் முதலும் வட்டியும் கரைந்து விடுகின்றன; பிறகு இத்தொகையைக் காண்டலும் இயலாது; இந்நூலின் 1000 படிகளில் 900 படிகளே விற்பனையாகும்; எஞ்சிய நூறும் பல வழிகளில் வீண் செலவாய்ப்போம். இத்தொல்லாயிரம் படிகளும் விற்கச் சிறிதேறக்குறைய 12 ஆண்டுகளாகும். இதன் படிகளை அவ்வப்போது விற்றெடுக்கும் சிறு சிறு தொகைகளோ உடனுக்குடன் செலவாய்ப்போதலால் இதற்கென்று முன்பணமாகச் செலவழித்த தொகையையும் வட்டியையும் திரும்பப் பெறுதலும் இயலாது. இங்ஙனமே எம்முடைய நூல்களை வெளியிடுதற்குச் சிறிதேறக்குறைய ஐம்பதாயிரம் (50000) ரூபாய் ஆகும்; இத்தொகை முழுமையாய்க் கையில் இப்போதிருந்தால், எமக்குத் திங்கள்தோறும் 200 ரூபாய்க்குக் குறையாமல் வருமானம் கிடைக்கும்" என அடிகள் எழுதி இருப்பது கன்னெஞ்சமும் கரைக்கத்தக்கதாகும். கீழ்த்தரச் சுவடிகள் பல எத்தனையோ ஆயிரக்கணக்கில் விற்கும் இந்நாட்டில், 'சிந்தனைக் கட்டுரைகள்' 1500 படிகள் விற்க 17 ஆண்டுகள் ஆயிற்றும். கொழும்புப் பல்கலைக் கழகத்திலும், கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திலும் அடிகளார் நூல்கள் பாடமாக வைக்கப்பெற்றாலும், நம் நாட்டுப் பல்கலைக் கழகங்கள் அவற்றைப் பாடமாக வைத்தால் மாணவர்க்கு அறிவு மிகுதியாகிவிடுமே என அஞ்சிப் பாடமாக வைப்பதில்லை. (Outside the circle of University Students, it is not possible to get a good sale for high class Tamil books—poetry or prose, ancient or modern for the tide of Vernacular education in this country is at its very lowest ebb. Even one in thousand knows not to read and write Tamil—அடிகள்.) இந்நிலைகளாலெல்லாம் அடிகளார் எவ்வளவு துன்புற்று இருப்பார் என்பதனைத் தமிழகம் கருதிக் காண்பதாக!

எனவே, ஒழிந்தனவெல்லாம் ஒழிக! இனியேனும் தமிழகம் தவறுணர்ந்து—பிழைபாடான கருத்துக்களை (Prejudices)த் திருத்திக்கொண்டு, அடிகளார் செய்துள்ள பல தொண்டுகட்கும்

தன் நன்றியுணர்வைக் காட்டுதற்கு விரைவதாக! தாமே தம் நூலுட் குறித்திருப்பதுபோல, அடிகளார் வேறெங்கேனும் வெளிநாடுகளிற் பிறந்திருப்பின், அவர்க்கு எத்துணைச் சிறப்பும் பெருமையும் உண்டாகியிருக்கும்! 'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என வழங்கும் முதுமொழிபோல அடிகளார் தாம் மறைந்த பின்னரும் தமிழகப் பொதுமக்கட்குப் பயன்படும் பொருட்டு இஞ்ஞான்றை விலைமதிப்பிற்கேற்ற நூறாயிரங் காணம் பெறத்தக்க மிக அரிய பெரிய தம் நூலகத்தை மன மூவந்து இலவசமாக வழங்கி இருக்கின்றார். அடிகளின் வள்ளன்மையையும் தூய துறவுள்ளத்தினையும் என்னென்பது? அடிகளாரைப்போன்று, புலவர் பிறரெவரும் புரவலராக விளங்கியதனை யாம் கேட்டறியோம். இந்நிலையில், இனியேனும் தமிழகம் அடிகளாரை விழித்துணர்ந்து போற்றுவதாக! அவர்க்குத் தக்க நினைவுக் குறிகளும் பிறவும் அமைத்துப் புலமைக்கும் தொண்டுக்கும் வணக்கம் செலுத்துவதாக! அவர் தம் விருப்ப ஆவணத்திற் குறித்திருக்கும் ஏற்பாடுகள் யாவும் நன்கினிது நடைபெறத் தமிழகம் உதவி செய்வதாக!

அடிகளார் தமது உறவினரின் பாதுகாப்புக்கென விட்டுச் சென்றிருக்கும் மாளிகையினைப் பொதுமக்கள், எவ்வகையா லேனும் தக்க விலை கொடுத்து வாங்கித் தனி ஒருவர் உடைமை யாகிவிடாவண்ணம் காப்பாற்றி அவ்விடத்தே அடிகளார் பல காலும் தம் அன்பர்கள்பால் கூறிவந்தவாறு தனித்தமிழ்க் கல்லூரியோ, பிற நல்ல அமைப்புக்களோ நிறுவி நடைபெறு மாறு செய்ய முயலுவராக! அடிகளார் கருத்தின்படி, அவர் நிறுவிய பொதுநிலைக் கழகமும் தக்க முறையில் வளர்ந்து தொண்டாற்றச் செய்தலும் தமிழகத்தின் கடமையாகும். இவைகளையெல்லாம் செய்தலே, அடிகளார்க்கு நாம் செய்யும் நன்றியும் வணக்கமுமாவதோடு, தமிழகத்திற்குப் பல்லாற்றானும் நலம் பயப்பதாகும். அடிகள் புகழ் வளர்க! தொண்டு வெல்க!

வல்ல புலவரெலா மாய்ந்தொழிந்தார் நீயொருவன்
வெல்லும் புலவனாய் வீற்றிருந்தாய்—அல்லலுற
இங்கிருந்து சென்றா யின்சொல் மறைமலையே
எங்கிவர்ந்து காண்போ மினி.

பண்டித. நாராயண சுவாமிகள், திருவையாறு.

# பெரும்புலவோர் பரிவு

## அவர் புகழ் என்றும் இறவாதது!

[ச. சச்சிதானந்தம் பிள்ளை]

(பதிவாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.)

உம்பருலகெய்திவிட்ட அடிகளார் நம் செந்தமிழ் மொழிக்குச் செய்துள்ள அரும்பெரும் பணிகள் அளவிடற்பாலன வல்ல; பண்டைப் பெருநூல்களின் நலங்களை இன்றைய அறிவாராய்ச்சிமுறைக் கருவிகொண்டு எடுத்துக்காட்டியும், தனிப்பொலிவும் இன்பமும் பொதுளிய தீந்தமிழ் நூல்பல வெளியிட்டும் அவர்கள் தமிழை வளம்படுத்தியுள்ளார்கள். இந்நாளில், தமிழ் நூலாராய்ச்சி முறைக்கும் திருந்திய செந்தமிழுரைநடைக்கும் அவர்கள் சிறந்த வழிகாட்டியாய் இலகுகின்றார்கள். பல நூற்றுக்கணக்கான மேனாட்டு நூல்களைக் கற்றுப் பாராட்டும் நம்மடிகள், நம் பண்டைச் சிவநெறியினையும், அதனை விளக்கத் தோன்றியருளிய திருஞானசம்பந்தர் முதலிய திருநெறித் தலைவர்களையும் தாமே பெரிதும் போற்றி வந்ததோடு, பிறர்க்கும் அவ்வுணர்வை ஊட்டிவந்துள்ளார்கள். தமிழ் மொழி வரலாற்றில் அடிகளார் பெயர் நிலைத்த இடம் பெற்றுள்ளது. அவர்களது அறிவுத் தொண்டினால் இயல்பான் விளைந்த புகழ் என்றும் இறவாதது. தமிழகத்தின் நன்றி அவர்கட்கு என்றும் உரியது. அவர்கள் அன்புடன் வழிபட்டுவந்த அம்பலவாணர், தம் தூக்கிய திருவடியின்கீழ், அவர்கட்குத் தக்க இடமளித்து இன்பநிலையில் இருத்தியருளுவர்.

அடிகள் பெரும்பொருட் செலவில் தொகுத்த பெரிய நூல் நிலையத்தை அவர்கள் தமிழ்மக்கள் யாவர்க்கும் பயன்படுமாறு தந்தருளிச் சென்றமையும் தனியே பாராட்டுதற்குரியது. அடிகள் பல்லாண்டுகளாய் வாழ்ந்து தம் தொண்டுகளை யாற்றி வந்த மாளிகையையும், தனிமனிதர் கைப்பட்டுச் சாமானிய வீடாகி ஒளியிழந்துபோகாமல் காத்து, இத் தலைமுறையினரும் இனிவருந் தலைமுறையினரும் அடிகளார் நினைவுடன்—அறிவன்புத்தொண்டு வளர்க்கு நோக்குடன்—ஒன்றுகூடிச் செந்தமிழும் சிவநெறியும் பேணும் நிலையமாக அமைத்துப் பேணிவருதல் நிரம்ப அழகியதாகும். அங்ஙனம் நிகழ அன்பர்கட்கு ஊக்கமும் ஆக்கமும் அம்பலக்கூத்தர் அருளவேண்டுமென்று அவரைச் சிந்தித்து வந்திக்கின்றேன்.

# தமிழ் காத்த பெரியார்!

[டாக்டர், க. கணபதிப்பிள்ளை,]

(இலங்கைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்.)

இப்பெரியாரின் காலத்திற்கு முன்பு ஆரியம் முதலிய பிற மொழிகள் தமிழ்நாட்டில் தலைவிரித்தாடின; தமிழ் மொழியைச் சீர்குலைத்தன. வட சொல்லையும் தமிழ்ச் சொல்லையும் கலந்து எழுதும் மணிப்பிரவாள நடை கற்றோரின் பற்றுக் கோடாக அமைந்தது. சங்க காலத்திருந்த தமிழின் தூய்மையும் அழகும் கெட்டன. இவ்வுருக்குலைந்த வடிவத்தில் தமிழ் மொழியை வழங்குவதில் அக்காலத்திருந்த போலிகள் வீண் பெருமை அடித்தனர். இந்த நிலை சிறிது நீடித்திருக்கின் தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய ஏனைய திராவிட மொழிகள் போலத் தமிழும் தனது பண்டைய உரு மாறி ஆரிய மயமான மொழியாக இன்று இயங்கவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும். அன்றியும, ஆசிரியர் தொல்காப்பியனார் தமிழ் மொழியில் வடமொழிக் கலப்பு வந்தபோது வட எழுத்தை விடுத்துத் தமிழ் எழுத்தையே வழங்கல் வேண்டும் என ஆணை தந்தார். இவ்வாணையைப் புறக்கணித்துத் தமிழை நன்கு படித்த பண்டிதர்கள், வித்துவான்கள், மகாமகோபாத்தியாயர்கள், தாட்சிணாத்திய கலாநிதிகள், பெரும் பேராசிரியர்கள் யாவரும் வடசொற்களைத் தமிழில் வழங்கும்போது நேருக்கு நேராக வட எழுத்திலேயே அவற்றை எழுதுவதிற் பெருமை கொண்டனர். இம்மகா பண்டிதர்கள் எழுதிய மொழி நடையை இக்காலத்து நோக்கின் நகைப்பை விளைக்குமன்றோ! இவர்செய்கை தமிழ் அணங்குக்குச் செம்புள்ளி கரும்புள்ளி குத்தியதை ஒக்கும். உண்மையான தமிழர் இவற்றைக் கண்டு துயரும் வெறுப்பும் கொள்வர்.

இவ்வகையான ஊழல்கள் யாவற்றையும் மறைமலை அடிகள் கண்டார். ஊன்றிநோக்கினார். உண்மையை உணர்ந்தார். உள்ளம் உடைந்தார். அதனால் அடிகளின் அறம் மறமாய் மாறியது. இச்சீர்கேட்டினின்று தமிழைக் காப்பாற்ற முனைந்தார். அக்காரணத்தால் தூய தமிழில் எழுதவும் பேசவும் தொடங்கினார். ஆரியம் முதலிய பிற சொற்களைக் கலந்து தமிழில் எழுதுவதும் பேசுவதும் முறையன்று என்று தமிழ்மக்களுக்கு இடித்துரைத்தார். இம்முயற்சியினால் தமிழ் மொழியைப் பண்டைக்காலத்திருந்த தூய நிலைக்குக் கொண்டுவந்தார். வட மொழியும் தமிழ் மொழியும் முறையே தாய்மொழியும் சேய்மொழியுமென்றும், வடசொல்லில்லாது

தமிழ்மொழி இயங்குதல் அரிது என்றும் கூறிக்கொண்டிருந்த அறிவிலாப் பெரியார் கூற்றுப் பொய்யாயிற்று மறைமலை அடிகள் இவ்வளப்பரிய தொண்டினால் தமிழுக்குப் புத்துயிரும் புதுவாழ்வும் அளித்தார்.

தமிழுக்கும் தமிழருக்கும் இவராற்றிய தொண்டு தலைசிறந்தது. இவராற்றிய தொண்டினும் சிறியதொண்டினைத் தமிழ் மொழிக்காற்றிய பெரியோர்களின் நினைவுக்காக மண்டபங்கள் கட்டியும், விழாக்கள் எடுத்தும், சங்கங்கள் கூட்டியும் அவர் தொண்டினைத் தமிழ்மக்கள் பெருமைப்படுத்துகின்றனர். இவரின் செய்கை போற்றத்தக்கதே. எனினும், தமிழரின் பெருமையைக் காத்து அவரின் மொழியையும் சிறப்புறச் செய்த இத்தமிழர் பெருந்தகை, மறைமலை அடிகளுக்கும் இவ்வாறு நினைவு நிலையங்கள் ஏற்படுத்திப் பெருமை செய்ய முன் வருதல் தமிழ் மக்கள் கடன். இவ்வரும் பணியில் ஈடுபடத் தமிழ்மக்கள் ஒன்று சேருவாராக. மறைமலை அடிகளுக்கு எடுக்கும் விழா தமிழன்னையைப் போற்றுதற்காகச் செய்யும் விழா எனக் கூறுதல் மிகையாகாது.

இப்பெரியாரின் உயிர், இறைவன் திருவடி நீழலில் அமைதியோடு நிலவுவதாக.

## நினைவுச்சின்னம் அமைப்போம்

[ஜே. சிவசண்முகம் பிள்ளை]

(சட்டமன்ற அவைத் தலைவர்)

மறைமலையடிகள் ஒரு தவப்புத்திரர். அவர் தாயார் திருக்கழுக்குன்றத்தில் நாறபதுநாள் உண்ணு நோன்பு மேற்கொண்டு கடவுளை வழிபட்டு அவரருளால் அடிகளை ஈன்றார். இமயமலை, பொதியமலை, இவற்றையெல்லாம்விடப் பெரிய மலை நம் மறைமலை. இந்து சமுதாயத்தில் யாவரும் சமமாய் இருக்க வேண்டும் என்னும் நல்லெண்ணத்துடன் இந்து மதத்தைப் புனிதமாக்க, இந்து மதம் நல்வழிப்பட அரிஜனங்கள் முன்னுக்கு வரவேண்டும் என்று அவர் விரும்பினார். அவர் தமிழுக்குச் செய்த தொண்டு அளவற்றது. தமிழ்மொழி மாத்திரமல்லாமல் ஆங்கிலம், வடமொழி மூன்றும தெளிந்து சிந்தித்துச் சீர்தூக்கி ஆராய்ந்த பேரறிஞர். நம் அனுதாபத்தை அவர் சந்ததியார்க்குத் தெரிவிப்பதுடன் அவருக்கு ஒரு சின்னம் அமைப்பது முக்கியம்.

## தமிழ் மலை சாய்ந்தது!

[திரு ரா. பி. சேதுப்பிள்ளை, பி.ஏ, பி எல்.,]

மறைமலை சாய்ந்ததென்றபோது தமிழகமே சாய்ந்தது; தமிழ் மலை சாய்ந்தது; சைவ மலை சாய்ந்தது. இனி எக்காலும் தமிழ் இறவாதிருக்க வேண்டுமானல் மறைமலையடிகள் திருவடிகளைத் தமிழர்கள் மறவாதிருக்கவேண்டும்.

நாற்பது வருடங்களுக்கு முன்னே முதன்முதலாக பாளையங்கோட்டையில் அவரைக் கண்டேன். கண்டபொழுதே கவர்ச்சிக்கும் உடல் நலம். பேசினதும் அவர் தமிழுக்கு எல்லோரையும் அடிமையாக்கும் மொழி நயம் குயில் கூவுகிறதோ அல்லது குழல் ஒலியோ என்று ஐயுறும்வண்ணம் இருக்கும் அவர் குரல். வீட்டில் பேசும்போதாயினுஞ்சரி, வெளியே மேடைகளில் பேசும்போதாயினுஞ்சரி, வடித்த தமிழே அவர் நாவினின்று வெளிவரும்.

அப்பெரியாருக்கு ஞாபகச்சின்னம் எழுப்பவேண்டியது அவசியம். ஆனல், அது அவருடைய பெருமைக்கு உகந்த முறையில் அமைக்கப்படவேண்டும்.

---

## ஒப்புயர்வற்ற தொண்டு!

[கவிமணி, தேசிகவிநாயகம் பிள்ளை.]

மறைமலை அடிகளைத் தெரியாத தமிழர்கள் இல்லையென்றே சொல்லலாம். அடிகள் தமிழுக்காகச் செய்துள்ள தொண்டு ஒப்புயர்வற்றதாகும். அவர்கள் எழுதி வெளியிட்டுள்ள நூற்றுக்கு மேற்பட்ட புத்தகங்கள் அன்னாரின் பெருமையை தமிழுள்ளளவும் எடுத்துக்காட்டும் என்பது உறுதி.

சைவசமய வளர்ச்சிக்காக அடிகள் அல்லும் பகலும் அயராது உழைத்துவந்துள்ளார். தனக்கு நேர்மாறான கொள்கையுடையவர்களுடனும் தோளோடு தோள்நின்று இந்திஎதிர்ப்புப் போராட்டங்களில் அடிகள் ஈடுபட்டது அன்னாருக்குத் தமிழ்மொழியின்மீதுள்ள அளவுகடந்த பற்றுதலை நன்கு விளக்குகிறது. ஆங்கிலத்திலும் தமிழிலும் தேர்ச்சியுள்ள பேராசிரியர் மறைமலை அடிகளாரது பிரிவு தமிழ் நாட்டுக்கு ஈடுகட்டமுடியாத ஒரு பெரும் நட்டமாகும் என்பதற்கு ஐயமில்லை அடிகளின் ஆத்ம சாந்திக்காக நாம் இறைவனைப் பிரார்த்திப்போமாக!

## மாண்புகழ் ஒளிவீசி நிற்கும் !

[டாக்டர், S. G. மணவாளராமாநுசம்,]
(துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.)

மறைமலையடிகள் மறைந்தமை யறிந்து மனம் வருந்து கிறேன். அடிகளின் பிரிவு தமிழ்நாடு அனைத்தையுமே துயர்க் கடலில் தள்ளிவிட்டது தமிழ் மொழிக்கும் சிவநெறிக்கும் அடிகள் ஐம்பது ஆண்டுகளுக்குமேலாக அரும்பணி யாற்றியுள் ளார்கள். தமிழ் மொழியைப்போலவே, அடிகள் ஆங்கிலத்தை யும் வடமொழியையும் நன்கு கற்றவர்கள். சாந்துணையும் கற்க வேண்டும் என்ற சாதனை படைத்தவர்கள் அடிகள். ஆகவே, தாம் தேடிய பொருளையெல்லாம் ஒரு பெரிய நூல் நிலையமாகத் திகழும்படி செய்து வைத்தார்கள். அடிகளின் தமிழ் உரை நடை நூல்கள் தமிழின் தனித்தூய்மை நிலைக்குச் சான்றாக மிளிர்கின்றன. எண்ணற்ற சொன்மாரிகள் பொழிந்து மக் களுக்கு உணர்ச்சியை ஊட்டிவந்த அடிகள் மறைந்துவிட்டனர். தமிழ் உள்ளளவும் மறைமலை யடிகளின் மாண்புகழும் மங்காது ஒளிவீசி நிற்கும்.

## இனித் தோன்றுவது அருமை !

[S. வையாபுரிப்பிள்ளை, பி.ஏ., பி.எல்.,]
(சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.)

மறைமலையடிகளாரது கல்விப் பெருக்கத்தையும், நுணுகிய ஆராய்ச்சித் திறத்தையும் மிக நெருங்கி அனுபவித்தவர்களுள் நானும் ஒருவன். அவர்கள் பாடஞ்சொல்லும்போது மாணவர் அனைவரும் மிக்க குதூகலத்தோடு கேட்டு மகிழ்வர். அவர்க ளது சங்க இலக்கியப் பயிற்சி எங்களையெல்லாம் மிகவும் வசீ கரித்தது. பிற உரைகாரர்களோடு மாறுபட்டுத் தமது கருத்தை அவர்கள் வெளியிடும் பெருமிதத்தை இன்று நினைத் தாலும் எனது உள்ளம் உருகுகிறது. அவர்களைப்போன்ற பேராசிரியர்கள் இனித் தமிழ்நாட்டில் தோன்றுவது மிகமிக அருமை என்றே சொல்லலாம். உயர்ந்த குறிக்கோளும், சிரிய தமிழ்ப் பண்பும், ஆழ்ந்தகன்று நுணுகிய தமிழாராய்ச்சி யும், சைவ ஒழுக்கமும், சைவ சமயப் பற்றும், சைவ நூல்களில் தெளிந்த உணர்ச்சியும் அவர்கள்பால் நான் கண்டதுபோல வேறு எவரிடத்திலும் கண்டதில்லை அவர்களுடைய பேச்சின் இனிமையும் வன்மையும், எழுத்தின் அழகும் வன்மையும்

தமிழ் மக்களை வசீகரித்துவந்தன என்பது யாவரும் அறிந்த ஓர் உண்மையே. நான் படித்துவருங்காலத்தில் என்பால் அவர்கள் தனியன்பு காட்டிவந்தார்கள் என்பதை நினைக்குந் தோறும் என் மனம் பெரிதும் வருந்துகிறது. அவர்களுடைய நினைவைத் தமிழ் மக்கள் என்றும் பாராட்டும் கடமையுடையர்.

## தமிழ்த் தலைவர்!

[டாக்டர், மு. வரதராசனர்,]
(பச்சையப்பன கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்.)

தமிழ்த் தலைவர் மறைமலை யடிகள் செய்துள்ள தொண்டு, குறிப்பிட்ட ஒரு காலத்திற்கு உரிய தொண்டு அன்று; தமிழின் நிகழ்காலத்திற்கும் எதிர்காலத்திற்குமாக நெடிதுநின்று பயன்தரும் தொண்டு செய்துள்ளார் அடிகள். தமிழ் மெல்ல மெல்ல மணிப்பிரவாள மொழியாக மாற இருந்த தறுவாயில், தன் செம்மையும் சிறப்பும் இழந்து சிதைவுற நேர்ந்த நெருக்கடியான நிலையில், அதற்கு உறுதுணையாய் முன்னின்று தனித் தமிழியக்கம் தோற்றுவித்து வளர்த்த பெருந்தொண்டு அவர் ஆற்றியது ஆகும். இனித் தமிழ்மொழி தலைநிமிர்ந்து வாழும் என்று நம்பக்கூடிய நிலையில் தமிழை வாழவைத்த பெருமை அவரைச் சார்ந்தது ஆகும. எதிர்கால மொழிவரலாற்றில் இந்த அரிய தொண்டு பொன்போல் போற்றப்படும் என்பதை உணர்ந்தால்தான், அடிகளைப் பிரிந்த பிரிவு ஆற்றொணுத பிரிவு என்பது உணரப்படும்.

ஆயிரக்கணக்காகப் புத்தப் புதிய, உயரிய நூல்களை வாங்கி எழுத்தெழுத்தாகக் கற்று ஏடேடாகக் காத்துவந்தார் அடிகள். அவர்தம் வாழ்க்கையில் மிளிர்ந்த செம்மை, செழுமை, ஒழுங்கு என்னும் உயரிய பண்புகளை அந்த நூல்களின் ஏடுகள் ஒவ்வொன்றும் நமக்கு இன்னும் அறிவுறுத்தி நிற்கின்றன.

வடமொழியை நன்குகற்றுத் தமிழ்மொழியின் பெருமையை விளக்கியவர் மறைமலை அடிகள். ஆங்கில அறிவு நூல்களை ஆராய்ந்து தோந்து, பழந்தமிழ்ச் சான்றோரின் புலமைத் திறனைத் தெளியச் செய்தவர் அடிகள். உலக வளர்ச்சியையும் முற்போக்கையும் கூர்ந்து உணர்ந்து தமிழரின் நல்வாழ்விற்கு ஆசிகூறித் தட்டி எழுப்பியவர் அடிகள். அவர்தம் புகழ் ஓங்குக! அவர்தம தொண்டு விளங்குக!

## தமிழுக்கு ஒரு வயிரத்தூண்!

[தணிகைமணி, வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம்.ஏ.]

என் ஆசான் மறைமலை அடிகள் மறைநிலையரானார் எனக் கேட்டுத் துடிப்புற்றேன். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தமிழ்ப்பாடங்களைப் போதிக்க மும்மணிகள் போன்று மூன்று ஆசிரியர்கள் இருந்தனர். ஒருவர் செம்மணி; அவரே தலைமைத் தமிழ் ஆசிரியர், பரிதிமாற்கலைஞன் எனப் புனைவுப் பெயர்கொண்ட வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார். பிறிதொரு ஆசிரியர் நீலமணி; நீனிறக்கடவுளின் அடியார்—இசைஞானம் கொண்ட திரு. கோபாலாசாரியார், பிறிதொரு ஆசிரியர் வெண்மணி; இவரே செந்தமிழின் ஊற்றெழுகு செந்நாவினர். இவரே வேதாசலம் பிள்ளை—இவரே சுவாமி மறைமலையடிகள். 1901—1902 ஆம் ஆண்டுகளில் பி. ஏ. வகுப்பில் இவரிடம் பாடம் கேட்கும் பேறு பெற்றேன். பின்னர் 1903-ஆம் ஆண்டில் இவரது இல்லத்துக்குச் சென்றும் பாடங் கேட்டிருக்கிறேன். ஐம்பது ஆண்டுகளாய், சைவத்துக்கு ஆணிபோலவும், தமிழுக்கு ஒரு வயிரத் தூண்போலவும் பிறங்கி ஆக்கம் அளித்தவர் மறைமலை அடிகள்.

தமிழ்ப் பண்டிதராயிருந்தும் கணக்கிலாத அருமை வாய்ந்த ஆங்கில நூல்களை ஆய்ந்தாய்ந்து அறிந்த பேரறிவாளர். பல்லாண்ற கேள்விப் பயன்பெற்ற பண்பினர். கல்வி, உய்த்துணர்வு, சொல்வன்மை மூன்றும் வாய்ந்த மூதறிவாளர். செந்தமிழ் நடையின் சுவை காணவேண்டில் இவரது பேச்சில், இவரது எழுத்திற் கண்டு களித்திருந்தேன். மலரவன் செய்த வெற்றுடம்பு மறைந்தது. இவர் புகழ்கொண்டு செய்துள்ள உடம்பு தமிழ் உள்ள அளவும் தரணியில் ஒளிவீசிப் பிறங்கும் என்பதில் ஐயம் சிறிதளவேனும் இல்லை.

> மதியிலா விசும்பென்கோ! மணமிலா மலரென்கோ!
> நதியிலா ஊரென்கோ! நரம்பிலா யாழென்கோ!
> நிதியிலா வாழ்வென்கோ! நெய்யிலா உணவென்கோ!
> துதிகுலாம் மறைமலையார் தோற்றமிலாத் தமிழுலகை.

---

# மறைமலையின் மறைவு!

[கி. ஆ. பெ. விசுவநாதம்.]

தமிழ்நாடு ஒரு அறிஞரை இழந்தது. தமிழர் தம் தலைவரை இழந்தனர். தமிழ் தன் மகனை இழந்தது. தமிழுக்காகவே பிறந்து, தமிழுக்காகவே வாழ்ந்து, தமிழுக்காகவே உயிர்நீத்தவர் அடிகள் ஒருவரே ஆவர்.

இத்தகைய சிறந்த அறிஞரை தமிழ்நாட்டு மக்களிற் பலர் அறிந்துகொள்ளவேயில்லை. வாழ்ந்தபோது அவர்களின் அறிவுரைகளைப் பின்பற்றி வாழத் தவறிய மக்கள், அவர்கள் மறைந்த பிறகேனும் தங்கள் தவறை உணர்ந்து, அவர்களின் அறிவுரைகளைப் பின்பற்றி வாழ்ந்தாகவேண்டும். இன்றேல் நாடு வாழாது!

அவர்கள் நடத்திவந்த பொதுநிலைக்கழகம் தமிழ்நாட்டின் பொதுநிலைக்கழகமாகத் திகழவேண்டும். அவர்கள் வாழ்ந்து வந்த கட்டிடத்திற்குரிய விலையை அதற்குரியவர்களிடம் கொடுத்துவிட்டுக் கட்டிடத்தைப் பொதுநிலைக் கழகத்திடம் ஒப்புவிக்கவேண்டும். கட்டிடமும் கழகமும் அடிகளின் நினைவுச் சின்னங்களாக ஒளிவீசவேண்டும். கழகம் தமிழ் நாட்டிலுள்ள தமிழ்க் கழகங்களையெல்லாம் தம்முள் இணைத்துக்கொண்டு தமிழ்த்தொண்டு செய்வதாகவும், கட்டிடம் தமிழை ஆராய்வதற்குப் பயன்படுவதாகவும் இருக்கவேண்டும். இதனைச் செய்து முடிப்பதற்குத் தமிழ் இளைஞர்களின் தொண்டும், அடிகளுடைய குடும்பத்தாரின் ஒப்பமும், தமிழ் மக்களின் ஒத்துழைப்பும் தேவை.

பிற நாட்டினருக்கும், பிற மொழியினருக்கும், பிற மக்களுக்கும் பெரும் பணச்செலவில் நினைவுச் சின்னங்களை வைத்துப் போற்றிவருகின்ற தமிழ்நாடு, தன் தலைவனுக்கு இதனை இச்சிறு செலவில் செய்துமுடிக்கத் தவறாது என்பது கருத்து.

## பெறலரும் பெரியார் !

[திரு. B. R. கிருஷ்ணமூர்த்தி நாயுடு அவர்கள்]

தமிழ் வளர்த்த தந்தையை இழந்து தமிழகம் கண்ணீர் வடிக்கின்றது. மறைமலை யடிகளைப்போல அரிய புலவரை இனித் தமிழகம் பெறமுடியுமா? நனவிலும் கனவிலும் தமிழையே நினைந்து அதைத் தம் உயிரினும் போற்றி வளர்த்த பெறலரும் பெரியார் அல்லவா! அடிகள். தம் வடமொழிப் புலமையினையும் ஆங்கிலப் புலமையினையும் தமிழ் ஆக்கத்திற்கே பயன்படுத்தி அதன் பெருமையை வெளிநாட்டவரும் உணரச் செய்த பெருமை அவருக்கு உண்டு.

அடிகள் மறைந்தார் எனினும், அவருடைய வீர உணர்ச்சி மறையவில்லை. அவருடைய சொற்பெருக்குகளும் நூல்களும் அவ்வுணர்ச்சியைத் தமிழகத்திற்கு ஊட்டிக்கொண்டிருக்கும்.

---

## தனித்தமிழ் நடையின் தந்தை

[பேரறிஞர், அ. சிதம்பரநாதச் செட்டியார், எம்.ஏ.,]

அவர்கள் ஏறத்தாழ ஐம்பதாண்டுகள் தமிழ்மொழியின் ஆக்கத்திற்காகவும், தமிழ்மக்களின் முன்னேற்றத்திற்காகவும் என அரும்பெருந் தொண்டுகள் ஆற்றிய பெரியார்களுள் தலை சிறந்தவர்கள். தமிழ்மொழி தனித்தியங்கவல்லது என்பதைத் தங்கள் எழுத்தாலும் பேச்சாலும் உலகறியச்செய்த பெருமை அவர்களுக்கே உரியது.

நாட்டில் "மறைமலையடிகளார் நடை" என ஒன்று உரு வெடுத்துத் தோன்றிப் பரவியுள்ளது. எனவே, அவர்கள் "தனித்தமிழ் நடையின் தந்தை" எனற்பாலர்.

அடிகளார், தமிழ்மக்கள் அனைவரும் தம் பழம்பெருமையை உணரவேண்டும் என்று விரும்பியவர்; இக்காலத் தாழ்ந்த நிலையையும் உணரவேண்டும் என்று விழைந்தவர்; அவை காரணமாக இனி வருங்காலத்தில் தம்மை உயர்த்தி நிறுத்த வேண்டித் தமிழர் பெருமுயற்சி செய்யவேண்டும் என்றும் அறிவுறுத்தியவர். இந்தி பொதுமொழியாகித் தமிழர்க்குக் கட்டாய மொழியாகும் பெற்றி உடையதன்று என்பதைத் தக்க காரணங்களோடு எடுத்துக்காட்டி வெளிப்படைக் கடிதம் எழுதியவர்.

# மலை மறைந்ததே!

[வித்துவான், மே. வீ. வேணுகோபால பிள்ளை, காஞ்சிபுரம்.]

மறைமலை யடிகளார் நோய்வாய்ப்பட்டு வருந்திக்கொண்டிருந்தபோது செய்தியறிந்து கச்சியம்பதியிலிருந்து போந்து அடிகளாரில்லமடைந்தேன். அங்கு யான் கண்ட காட்சி, என்னைத் திடுக்கிடச்செய்தது! யாக்கையின் நிலையாமையை நினைந்து நெஞ்சு நெக்குருகி, அடிகளாரை நோக்கினேன். கவலை தோய்ந்த கருத்துடன் அடிகளார் பார்வை என்மீது திரும்பியது. அடிகளார்—எப்பொழுதும் என்னுடன் நெடு நேரம் மலர்முகத்துடன் அளவளாவும் அன்பினர்—பேச இயலாது சோர்ந்த முகத்துடன் தோற்றமளித்தார். அந்தோ! அப்பேசாப் பேச்சிற் பிறங்கிய பொருளை வருந்திய என் மனம் வாழ்நாள் இறுதிவரையில் மறவாது!

'மக்கள் நூறாண்டு உயிர் வாழ்வது எப்படி?' என்னும் சீரிய நூலைச் செந்தமிழால் இயற்றித் தமிழ் நாட்டிற்களித்த தனிப் பெருந் தமிழர்—உடலோம்புதலிற் கண்ணுங் கருத்துமாயிருந்த ஒழுகலாறுணர்ந்த உத்தமர்—எழுபத்தைந்தாவதாண்டின் எல்லையைக் கடவாமுன்னரே வாழ்வைத் துறந்து வானெய்தினரென்றால், ஊழின் பெருவலியை என்னென்றியம்புவது! 'வினைப்பயனை வெல்ல வேதம் முதலாம் அனைத்தாய நூலகத்துமில்லை,' என்பது எத்துணை உண்மை விளக்கும் உரையாய் விளங்குகிறது!

அடிகளார் வாழ்ந்தது முக்கால் நூற்றாண்டேயாயினும், அவரால் தமிழ்நாடு அடைந்த பயன் அளப்பரிது எனக் கூறுதல் மிகையாகாது. அடிகளார் வரன்முறை வழாது மும்மொழிப் புலமை பெற்ற முதுபெரும் புலவர்; சைவ சித்தாந்தத்தின் திட்பநுட்பங்களை நன்கு பயின்று, மேனாட்டறிஞரும் மெச்சும் வகையில் 'Mystic Mina' என்னும் ஆங்கில வெளியீட்டின்மூலம் எங்கும் பரவச்செய்தவர். அடிகளார் புலமையிற் பழமையும் புதுமையும் பங்கு பெற்றோங்கின. அடிகளார் பயின்ற நூல்கள் கணக்கற்றன என்பதை, மறைந்தன ஒழிய இருந்தனவா யொளிரும் நூல்களையுடைய அவர்களது நூற் கருவூலமே இனிது விளக்கும்.

அடிகளார் நுண்மாண் நுழைபுலச் செல்வராய்—நாவீறுடையராய்—எழுத்தாற்றலில் எவரும் வியக்கத்தக்க எழுத்தாளராய் இலங்கியும், அவர்கள் அவ்வாற்றல்களை அடிமை வாழ்விலீடுபட்டு விழலுக்கிறைத்த வீணீராக்காமல், உரிமை

வீறுடன் தனிமையிலுழைத்துப் பொருளும் புகழும் ஈட்டி, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த வகை பெரிதும் பாராட்டத் தக்கது. அவ்வகையில் 'அடிகளார்' மாபெருங் கலைவீரர் எனப் போற்றுதற்குரியார்.

> 'உறங்குவது போலும் சாக்கா டுறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு'

என்னும் உண்மையை உளங்கொண்டு, கழிந்ததற்கிரங்காது, நம்மைப் பிரிந்த நல்லவர் இன்னுயிர் அவர்தம் வழிபடு கடவுளின் மரைமலரடிகளின் மன்னி வற்று இன்பம் உற்று விளங்கவென மனங்கொளலன்றி மற்றென்செய வல்லோம்!

---

## என்றும் அணையா விளக்கு !

[திரு கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்]
(அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

தமிழ் அன்னையின் இயல்பான அழகு முகத்தை மக்களுக்குக் காட்டினவர் மறைமலை அடிகள். தூசு படிந்து தூகள் நிறைந்திருந்த அன்னை முகத்தை அலம்பிக் கழுவித் தூய்தாக்கித் தமிழின் உண்மை எழிலை உலகுக்குக்காட்டிய தமிழின் தலைத் தனித் தவப்புதல்வர் நமது அடிகளார் பிறமொழியின் துணையின்றித் தமிழ் தானே தனித்தியங்கித் தலைசிறக்கவல்லது என்பதை உலகுக்குக்காட்டிய பெரியார் நமது அடிகளார். சொற்பொழிவுத்திறனை ஒரு கலையாக வளர்த்துக் கற்போல்வார் நெஞ்சிலும் உணர்ச்சியைப் பாய்ச்சி அறிவுகொளுத்திய பெரியார் நமது அடிகளார். உலகிற்குகந்த உயர்நெறி தமிழ்நெறியாகிய சித்தாந்தச் செந்நெறியே என்பதை பறையறைவது போல் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதி நூல்களாக வெளியிட்டும், பல்லிடம் சென்று திரளான மக்களுக்குப் பேசியும் தெளிவுபடுத்திய பெரியார் நமது அடிகளார். தமிழ்நாட்டு மக்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் தடையேதுமின்றித் தனியாட்சிபூண்டு அரசுவீற்றிருந்த செம்மலார் மறைமலை அடிகள் இன்று உலகினை நீத்தனர். அவர்களின் ஆவி நிலைத்த அவ்வுடலும் காவி நனைத்த கல்லாடையும் இனி நாம் காண்பதரிது. ஆனால், அவர்களின் புகழ் உடம்பு உலகிற் பொன்றாது நிலை நிற்கும். தமிழ் உள்ளத்திலே அவர்கள் ஏற்றிவைத்த விளக்கு என்றும் அணையாது இருள்கடிந்து ஒளி பெருக்கும் என்பது திண்ணம்.

## தமிழர் தவச் செல்வர்!

[ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை, அண்ணாமலைநகர்.]

தமிழ் இலக்கியங்களின் காலம், பொருள் முதலிய கூறு களை ஆராயும் முறை ஆங்கிலநாட்டு முறையை அடியொற்றி வருவதொன்று. காலம் பற்றியும் ஒப்புமை பற்றியும் (Historical method and Comparative method) ஆராய்ச்சி நிகழும். இதனை முதற்கண் தமிழ் இலக்கியத்துறையுட் புகுத்தி இனிய உரையில் எழுதிக்காட்டிய பெருமை அடிகட்கே உரியதாகும். இவ்வாராய்ச்சிக்கு நாட்டின் சமய சமுதாய அரசியல் வரலாறு பற்றிய அறிவு அடிப்படையாக வேண்டுவதொன்று. இதனைத் தமிழ் வகையில் ஆராய்ந்து தமிழ் நாட்டுத் தமிழ் மக்களின் அரசியல் மொழி, சமயம், ஒழுக்கம் முதலியவற்றின் வரலாறு களை ஆராய்ந்து அடிகள் நிகழ்த்திய சொற்பொழிவுகளும் எழுதிய கட்டுரைகளும் பலவாகும். மாணிக்கவாசகர் வர லாறும் காலவாராய்ச்சியும் என்ற பேருரை நூல், மாணிக்கவாச கரைப் பொருளாகக்கொண்டு எழுந்ததெனினும் அதன்கண் தமிழ் நூல்கள் பலவற்றின் காலமும் கருத்தும் ஆராய்ந்து காட்டி, அறிஞர் பலரை அத்துறையில் ஈடுபட்டுச் சிறப்புறச் செய்தவகையில் அடிகள் **தமிழிலக்கிய ஆராய்ச்சிநெறித் தந்தை யாகின்றார்.**

---

## தனித்தமிழியக்கங்கண்ட தவச் செல்வர்!

[க. வெள்ளைவாரணனார்]

(அண்ணாமலைநகர்.)

அடிகளார் தம் நுண்ணுணர்வால் தோற்றுவித்த தனித் தமிழியக்கமானது தமிழ் மக்களது சமயத்துறையிலும் சமுதாயத்துறையிலும் அரசியற்றுறையிலும் நன்கு கவடுவிட்டுக் கிளைத்து நற்பயன்தருஞ் செவ்வியினைக் கண்கூடாகக் கண்டு மகிழும் பேறு நமக்குக் கிடைத்துளது. அடிகளாரவர்கள் எல்லையில்லாத பேரருட்கடலாகிய முழுமுதற் கடவுளிடத்துப் பேரன்புபூண்டு எவ்வுயிர்க்கும் அன்புடையராயொழுகிய அருட் செல்வராவார்.

திருவருளின் துணைகொண்டு 'திசையனைத்தின் பெருமை யெலாம் தென்றிசையேவென்றேற அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல'த் தமிழன்னையின் திருக் கோயிலுக்குக் கடைகாலமைத்து விட்டார்கள்.

தமிழ் வளர்ச்சிக்கு அடிகளாரமைத்த அடிப்படையினை நன்குணர்ந்து தமிழ்மொழிக்குப் பல துறைகளிலும் தொண்டு புரிவதே தமிழ்ப்பெருந்தகையார் மறைமலையடிகளார்க்கு நாம் செய்தற்குரிய நன்றிநிரம்பிய வழிபாடாகும்.

---

## மறைந்த அடிகளார்!

[விந்துவான், அ கிருஷ்ணமூர்த்தி, B. O. L., 2-Lient NCC]
(துணைத் தமிழ்ப்பேராசிரியர், அரசினர் கல்லூரி, குடந்தை.)

### தமிழ் ஞாயிறு

சென்ற நூற்றாண்டின் இறுதியில், இந்நூற்றாண்டின் தொடக்கத்தில், இரண்டு நூற்றாண்டுக்கும் ஒரு பேரொளியாய்த், தமிழ் வானத்தில் சுடர்விட்ட, ஒரு முளையிள ஞாயிறு எந்தம் அடிகளார்!

உலகத்தின் உயர்ந்த நூல்களெல்லாம், அழகொளிவீச, அணியணியாய்க் கொலுவீற்றிருக்கும் தமிழ்க்கலை மன்றம் அவர் இல்லம். அவ்வகை நூல்கள் பல பதினாயிரம்!

அவர்க்கு அச்சம் தெரியாது; இச்சகம் பேசமாட்டார்!

ஆங்கிலம், ஆரியம், தீந்தமிழ்—என்ற மூன்றையும் துறைபோக முற்றக்கற்ற ஒரு மூதறிஞர் எந்தம் அடிகள். மும்மொழிகளையும் ஒருசேர இவ்வாறு தமிழுலகில் மாசறக் கற்ற நல்லாசிரியர் இவர்க்கு முன்னுமில்லை; இவர்க்குப் பின்னுமில்லை. இது தமிழ் வரலாறு.

வடமொழியும் தமிழும் வேறுவேறு என்பதை விளக்கிக் காட்டினார் ஆசிரியர் சிவஞானமுனிவர். (18-ஆம் நூற்.) வடமொழியை அறவே யகற்றிவிட்டுத் தமிழ் தனித்து இயங்க வல்லது என்பதை ஆராய்ந்து சொன்னார் டாக்டர் கால்டுவெல். (19-ஆம் நூற்.) அவ்வாறு பல்லாயிரம் ஏடுகள் தமிழில் எழுதிக் காட்டினார் ஆசிரியர் மறைமலையடிகள். (20-ஆம் நூற்.) மொழி வரலாற்றில் இந்த மூன்றும் மூன்று மாணிக்க உண்மைகள்.

அடிகளார் ஏற்றிய விளக்கு இன்னும் எரிகின்றது; சான்றோரே! "எம்மை மறந்தாலும் யாம் மறக்கமாட்டேமால்," நீவிர் அடிவைத்து நடந்த அவ்வழியை எமது நெஞ்சு நாடுகிறது. அடிகள் மறைந்த அத்திசை நோக்கி எந் தலை தாழ்வதாக!

## நிலைபெற்ற கலை!

[புத்தனேரி, ரா. நடராசன்]

தமிழ்ப்பொழில், தமிழ்த்தென்றல், தமிழ்க்கடல், தமிழகத்தின் தனிப்பெருந் தலைவர், தமிழுக்காக வாழ்ந்த தந்தை. அவரின் மறைவு ஒவ்வொரு தமிழனுடைய உள்ளத்தையும் உலுக்கிவிட்டது—உருக்கிவிட்டது. நினைக்க நினைக்க நெஞ்சு நெகிழ்கிறது. தமிழன்னை ஈடும் எடுப்புமற்ற ஒரு அறிஞரை இழந்துவிட்டாள்.

மலையையொத்த உயர்ந்த உள்ளம்—மேம்பட்ட மேதை—கடலைப்போன்ற கரையற்ற—ஆழ்ந்த ஞானம்—தமிழைமட்டும் முழுதும் உணர்ந்த தமிழ்த் தாத்தாவல்ல; வடமொழி வல்லுநர்—ஆங்கில அறிஞர். அவர் மறைந்தார்—? அல்ல; அவருடைய பொய்யுடல் மறைந்தது. மனம் எரியிட்ட வெண்ணையாகிறது! கண்கள் நீர் சொரியும் அருவியாகிறது! காதுகள் உண்மைதானா என்ற ஐயப்பாட்டை எதிரொலிக்கின்றன! வாய் ஐயோ! என்ற குரல் கொடுக்கிறது. நா தளதளக்கிறது! மனிதனின் மறைவு இயற்கை என்ற 'பொது உலக வழக்கையும்' மறந்து தமிழகமே துடி துடிக்கிறது.

அவரின் மறைவுகுறித்து தமிழ் துடிக்கிறது. தமிழ்நாடு துடிக்கிறது. தமிழ் உள்ளங்களெல்லாம் ஆற்றுவாரற்றுத் துடிக்கின்றன!

அவர் உள்ளம் அமைதியடையட்டும்! அவரை நம்மிடமிருந்து யாராலும் பிரிக்கமுடியாது! தமிழ் உள்ளளவும்—தமிழகம் உள்ளளவும் அவர்—(அவர் புகழ்) மறையவே மாட்டார்! அவர் தமிழகத்தின் நிலைபெற்ற கலை.

—

## ஏனோ அறியேன்!

[ப. கோவிந்தசாமிப் பிள்ளை, பி.ஏ., எல்.டி.,]

உள்ளம் நெக்குருகுகின்றது; உயர்துயரால் வருந்துகிறது. இடுக்கண் வருங்கால் நகுவதா? முடியவில்லையே!

நூற்றுக்கணக்கான நூல்களைத்தந்த தமிழ்க்களஞ்சியம்—பேரவைகளிலே 'கருத்து மாரி' பொழிந்த தமிழ்மழை—தூய தமிழைச் சுவைசொட்ட விளைத்த குணக்குன்று—தமிழ் மறைமலை, எங்கே? இன்று எங்கே எதிர்பாராது மறைந்தது? 'பட்ட காலிலேயே படும்' நிலைமை, ஏனோ? அறியேன்.

# தமிழகம் வடித்த கண்ணீர்

I

அவருக்குத் தமிழின்பால் இருந்த அன்பு பெரிது. அவர் செய்த சேவையும் பெரிது. அவர் செய்த சேவை நம்மையும் தமிழ்ச்சேவை செய்ய ஊக்குமாக.

தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார்.

அடிகள் தமது அளப்பரிய தொண்டின்மூலம் தமிழர் உள்ளத்தில் என்றென்றும் குடிகொண்டுள்ளார்.

C. A. அய்யாமுத்து, கோவை.

தமிழ்நாடு, தமிழ்மொழி இரண்டும் தமக்காதரவான மலையை யிழந்து தவிக்கின்றன.

அருளானந்த தேசிகர், கொரடாச்சேரி.

தமிழ்ப்புலவர் பெருமானார்; பழந்தமிழர் நாகரிகம் பறை சாற்றிய பாவலர்; தமிழ்த்தாய்க்குத் தன்னுடல் பொருள் ஆவியையும் தந்தருளிய எந்தை.

டாக்டர், இராம. அண்ணாமலைப் பிள்ளை, குற்றாலம்.

தமிழ் மாண்பையும், தமிழர் தனிப்பெருமையையும் உலகுக்கு எடுத்துக்காட்டிய பேரறிஞர்.

ரேவரண்டு, அருள் தங்கையா, சென்னை.

தமிழ்மறை மறைந்தது. தமிழ்த்தூண் சிதைந்தது.

சைவர். ஆனால் உண்மைச் சைவர். அடிகளார் பின்பற்றி உணர்த்திய சைவம் அறிவியலுக்கு ஒத்தது.

கோ. அ. அப்பாய் செட்டியார், சேலம்.

அன்னார் திறம் புகலுதற்கெளிதோ!

K. ஆறுமுக நாவலர், நாகர்கோயில்.

தமிழ்த் தாயின் தலைமகனார் தமிழகத்தின் தலைமைப்புலவர் சைவத்தின் தனிச்சிகரம், சீர்திருத்தச் செம்மல், தனித்தமிழியக்கத் தந்தை, முத்தமிழ்ப் புலமையில் மூத்தவர், மும்மொழி வல்லுநர் ஆய அடிகளார்—மறைமலையடிகளார்—மறைந்தார் என்ற செய்தி மனத்தை மருட்டியது. தமிழகமே பெருந் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் இந்நேரம் இதற்கு எவர் தேறுதல் கூறுவர்.

சி. இராமசாமி.

தமிழுக்கும், சைவத்திற்கும் அடிகள் ஆற்றியிருக்கும் தொண்டு அளவிட அரிது. தமிழ்நாட்டில் தனித்தமிழ் இயக்கத்தை ஆரம்பித்துத் தமிழுக்கும், தமிழருக்கும் ஊக்கமும் தந்தவர் அவரே என்றால் மிகையாகாது.

அவருடைய கல்வியறிவு கடலினும் அகன்றது. அவரது ஆராய்ச்சித்திறனையும், தேர்வையும், எவருக்கும் அஞ்சாத ஆண்மைத் திண்மையையும் கண்டு வியந்து போற்றுகிறவர்களில் நானும் ஒருவன்.

சி. எஸ். இரத்தினசபாபதி முதலியார், கோவை.

தமிழ்நாட்டிலே மற்ற எல்லாப் புலவர்களைக்காட்டினும் உண்மையிலே ஒரு புரட்சி செய்த பெரியார் அடிகள்தான். கூசாத நெஞ்சு; அஞ்சாத மனம் வேறு எங்கு காணமுடியும்.

சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், கோவை.

ஒப்புயர்வற்ற தமிழ்ப் பெருந்தகையார்.

கீ. இராமலிங்க முதலியார், எம். ஏ., நகராட்சி ஆணையாளர்.

உடல் மறைந்தாலும்—அவர்களது ஆவி நம்முடன் வாழும்—நூல்கள் வழிகாட்டி விழிப்படையச் செய்யும்.

மீ. சு. இளமுருகு பொற்செல்வி, பெரியகுளம்.

மலை மறைந்தது. தமிழகம் தன் தனிப்பெருஞ் செல்வத்தை இழந்தது.

சி. உ. கூ. ப உடையப்பா, தலைவர், இராமநாதபுர மாவட்டக் கழகம்.

தமிழ்ப்பெரும் புலவராகிய மறைமலை அடிகள் உரைநடை எழுதல், செய்யுள் யாத்தல், சொற்பொழிவியற்றல், ஆராய்ச்சியாகிய இத்துறைகளில் சிறந்த ஆற்றல் படைத்தவர்கள்; வேற்றுமொழி கலவாத நிலையில் தமிழுக்குத் தனிச்சிறப்பு உண்டென்னும் உறுதி கடைப்பிடித்து அதற்கு வேண்டிய தொண்டுகளை இடையறாது செய்துவந்தவர்கள்; தமிழும் சைவமும் தம கண்களெனப் போற்றி ஒழுகியவர்கள்; சங்கத்துச் சான்றோர் இலக்கியங்களில் சுவைநலத்தைத் தமிழன்பர்கள் துய்க்கச் சிறந்த ஆராய்ச்சிநூல் வெளியிட்டவர்கள். இத்தகைய அடிகளின் மறைவு தமிழ்நாட்டிற்குநேர்ந்த குறையாகும்.

பண்டிதமணி, மு. கதிரேசன் செட்டியார், மகிபாலன்பட்டி.

அறிவின் பெருக்கத்தையும் ஆற்றல் வன்மையையும் குணநலங்களையும் அவர்களது பிரிவுத் துன்பங்களையும் போதுமானபடி வெளியிட்டுரைப்பதற்கு இப்போதைய துயர் உற்ற நிலைமையில், நெஞ்சும் நாவும் கையும் செயலற்றிருக்கின்றன.

கரந்தைத் தமிழ்ச்சங்கத் தலைவர், தஞ்சை.

தமிழ் உலகிற்கு ஈடுசெய்யமுடியாத வருத்தத்தை யுண்டாக்கியது.

கிருபானந்தவாரியார், சென்னை.

அவர்தம் சிறப்பும் ஆற்றலும் அளவிடற்கரியன.

U. S. குஞ்சிதபாதம், கும்பகோணம்.

பெருமைவாய்ந்த ஒரு நல்லறிஞரை உலகம் இழந்து விட்டது.

ப. தி. சோ. குமாரசாமி செட்டியார், கும்பகோணம்.

தமிழ்த்தாய் தமது தவப்புதல்வர்களில் ஒருவரை இழந்தாள். அன்னார் மறைவின் துயர் ஆற்றொணாதது.

இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன், மதுரை.

உலகோரால் போற்றப்பட்டு விளங்கும் காளிதாசர் இயற்றிய சாகுந்தல நாடகத்தை ஆராய்ந்து அதிலுள்ள குறைபாடுகளை அஞ்சா நெஞ்சினராய் வன்மையாகக் கண்டித்தவர் அடிகளார். அவர்கட்குச் செய்யும் நினைவுக்குறிகள் பலவற்றுள்ளும் சிறந்தது, அவர் குறிக்கோளாகிய தமிழ் இடப்பெயர், பொருட்பெயர், மக்கட்பெயர் முதலியவற்றில் தனித்தமிழ் மிளிரச் செய்வதேயாகும்.

ஔவை டி. கே. சண்முகம்.

இம் முதல்வாமட்டில நன்றிகெட்ட இத்தமிழகத்தில் அதுவும் தமிழரிடைத் தோன்றுது, வேறெங்காவது தோன்றியிருந்தால் உலக ஆராய்ச்சியாளர்களின் பட்டியலில் என்றோ சேர்க்கப்பட்டிருப்பார்.

இரண்டாம் இளங்கோ அடிகளான இத் தமிழ்ப்பெரியாரின் பொன்மொழிகளை எங்கும் பரப்பவேண்டும்.

ப. உ. சண்முகம், தலைவர், நகராட்சி, திருவண்ணாமலை.

மறைமலை அடிகள் என்ற பெயர்த்தொடரிலேயே அந்தப் பெரியவர்களது வாழ்க்கையின் நெறியும் நிலையும் தொகுத்து ஒலிக்கின்றன. தமிழார்வம் பேரோடு நில்லாமலும் எதை எழுதினாலும் எதைப்பேசினாலும் எவ்வளவு மிகுதியாக எழுதினாலும் பேசினாலும் மறந்தும் பிறசொல் நிகழாமல் தூய தமிழ்ச் சொற்களையே ஆண்ட அடிகளது பேரார்வத்தையும் பேராற்றலையும் தமிழன் மறக்கமுடியாது.

ரா. சண்முகசுந்தரம் பிள்ளை,
அறநிலையப் பாதுகாவற கழகத் துணை ஆணையாளர்.

*தமிழ் மக்கட்கு அடிகள் மறைவு ஓர் பெரும் நட்டம்.*

கண. மு. மு. சாத்தப்ப செட்டியார், *பாகனேரி.*

*தமிழ்நாட்டில் அவர்களைத் தெரியாதவர்கள் இல்லை. பலருக்கும் தமிழ் ஆர்வம் அவர்களாலேயே உண்டாயிற்று. அதைத் தமிழுலகம் மறக்க இயலாது.*

டி. கே. சிதம்பரநாத முதலியார், *திருக்குற்றாலம்.*

*தனித்தமிழ் இயக்கத்துக்கு அவர்தான் அடிகோலியவர்.*

துடிசைகிழார், அ. சிதம்பரனார், கோவை.

*நாம் நமது அருட்செல்வத்தை இழந்தோம். தமிழுலகம் பெருஞ்செல்வத்தை இழந்தது. சைவ உலகம் தனிப்பெரும் தலைவரை இழந்தது.*

சித்தாந்தப்பேராசிரியர், ந. சிவகுருநாத பிள்ளை, *தூத்துக்குடி.*

*எனது உள்ளம் ஏக்கம் அடைகிறது. ஆற்றொணாத் துயர் எய்துகிறது.*

சி. ந. சுப்பிரமணியம், *மனிகை, ஆரல்வாய்மொழி.*

*பல ஆண்டுகளாகத் தமிழிற்கும் சைவத்திற்கும் தவப் பணியாற்றிவந்த தமிழ்மலை மறைந்தது. அடிகளாரின் உணர்ச் சிப்பொலிவு சித்தாந்த சாத்திரங்கட்குப் புத்துணர்ச்சியளித்து வந்தது. மிக இனிய செந்தமிழ் நடையில் ஞானக்கடல் வழியாக சித்தாந்த அமுதமும் வெளிவந்துகொண்டிருந்தது.*

பண்டார சந்நிதி அவர்கள், *தருமபுரம்.*

*கஸ்தூரிபா அன்னை முன்னரே விண் சென்று மகாத்மா வுக்கு இடம் தயாரித்து வரவேற்றதுபோல், நம் அம்மையாரும் பருவுடம்போடு பணி செய்ததோடல்லாமல் நுண்ணுடம்பிலும் விண்ணில் வரவேற்றுப் பணிசெய்ய முந்தினரோ! என்னே நிலையாமை!*

ரா. ம. ப. சேந்திலாறுமுகம் பிள்ளை, குலசை.

*தமிழர் தமிழ் அரசரை இழந்து தனித்து ஏங்குகிறார்கள்.*

பெ. சி. சேதுராமசாமி, *தலைவர், பொள்ளாச்சி நகராட்சி.*

*அடிகளாரது நூல்கள் வாயிலாக அவர் அமரராகிறார். அடிகளாரின் அன்பிற்குகந்த தமிழ் அன்னையை ஆட்சி மொழி யாக அரசினர் ஏற்க உழைத்து அரியாசனத்தில் ஏற்றி அமர்த் தல் நம் அனைவரின் கடமையும் அடிகளார் நினைவை நிறுத்தும் பணியும் ஆகும்.*

ஈ. வே. சோமசுந்தரம், *நகராட்சி ஆணையாளர்.*

அறிவொளியாய், அன்புருவாய், தமிழ்த்தந்தையாய்த் தோன்றினர் அடிகளார்.

ஞானசிகாமணி, இளங்கோ மன்றம், மன்னார்குடி.

பல்லாவரம் வரும்போது "மறைமலையடிகளார் ஞாபகார்த்த மண்டபத்துக்கு இங்கே இறங்கவும்," என ரெயில்வே நிலையத்தார் எழுதவேண்டியிருக்கிற அளவுக்குத் தமிழ்த்தலைவர்கள் ஒருமித்துக் கலந்து பல்லாவரத்தில் ஒரு மண்டபம் எழுப்புவார்களாக!

வ. பா. தாமரைக்கண்ணி, சென்னை.

தமிழுக்கே ஒரு பெரிய நட்டமாகும்.

பே. தூரான், கலைக்களஞ்சியம், சென்னை.

தமிழ்மொழி வளர்ச்சிக்கும், திராவிடக் கலைவளர்ச்சிக்கும், அடிகள் செய்த தொண்டை அளக்க முடியாது. மறைமலை தமிழர் உள்ளத்திலிருந்து மறையாது, என்றும் தளிர்விட்டு வாழும் வகை செய்யவேண்டும்.

டாக்டர். பா. நடராசன், எம். ஏ., பொருளாதார ஆலோசகர்.

யாழ்ப்பாண மக்கள் அடிகளின் பிரிவைக்கேட்டு ஆறாத் துயருறுகின்றனர்.

P. நவரத்தினம், யாழ்ப்பாணம்.

தமிழ்த்தாய் தன் அரும்பெறல் வீரப்புதல்வனைப் பறிகொடுத்தாள். சைவ உலகம் ஒரு தனிப்பெருங் குரவனை இழந்தது. பிள்ளைகள் தம் அன்புருவான தந்தையை இழந்தனர். நாம் எம் அருட்குருமணியை இழந்தோம்.

வழக்கறிஞர், வே. நாகலிங்கம், வட்டுக்கோட்டை.

தமிழர் ஒரு கலங்கரை விளக்கத்தை இழந்துவிட்டனர். சைவம் தன் கண்மணியைப் பறிகொடுத்துவிட்டது.

வல்லை, பாலசுப்பிரமணியம், சென்னை.

தற்கால அகத்தியர் ஒருவரைத் தமிழ்நாடு இழந்தது.

கே. எம். பாலசுப்பிரமணியன், தஞ்சை.

கடந்த ஐம்பது ஆண்டுகளாகத் தனித்தமிழுக்கும், சிவநெறிக்கும் தொண்டாற்றிய அஞ்சா நெஞ்சுபடைத்த தமிழ் மறை.

R. பெருமாள் பிள்ளை, சானிடெரி இன்ஸ்பெக்டர், திருச்சி.

வேதனை தாங்காது தேம்பி நிற்கும் நமக்கு ஆறுதல் கூறுவது யார்? சி. மன்னூர், செவ்வாய்ப்பேட்டை, சேலம்.

திருவள்ளுவனுக்கு அடுத்து ஏற்பட்ட ஒரு பெரும் இழப்பை ஈடுசெய்யத் தமிழ்த்தாய் யாது செய்வளோ?

தி. சி. பொன்னன், நேமத்தான்பட்டி.

அத்தமிழ்க்கடலின் பணி அணையா விளக்கு; அறிவமுதம் அவர் நூல்கள். அவரை நினைக்கும்பொழுது, அவர் நூல்களைப் படிக்கும்பொழுது மனத்தில் புத்தெழுச்சி உண்டாகிறது.

முத்தமிழ் வளர்ச்சிக் கழகம், வடுகபாளையம், பொள்ளாச்சி.

சைவசித்தாந்த சமயம் தன் உண்மைத் தலைவரை இழந்தது. தனிச் செந்தமிழ்த்தாய் தன் தனி இளங்குமரனைப் பறிகொடுத்தாள். வேளாளர் சமூகம் தன் உண்மைப் புரட்சி வீரரைப் புற உலகத்திற்கு அனுப்பியது.

ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை, தென்காசி.

நம் தமிழுலகம் முழுவதுமே தன் தமிழ்த்தனித் தலைவரை இழந்து ஆருத்துயரில் மூழ்கிக் கிடக்கிறது.

ஆ. அ. வரதணபாண்டியன், தஞ்சை.

மறைமலை மறைவிலே புத்துலகம் பூக்கவேண்டும். அன்புலகம் தோன்றவேண்டும். தமிழ் ஆட்சி நடைபெறவேண்டும்.

ஆ. வெற்றி வீரன், வடசிறு வேலூர், திண்டிவனம்.

மறைமலையடிகளை இறைவன் தமிழ் வளர்ப்பதற்கென்றே தான் தோற்றுவித்தான்போலும். அன்னூர் நாகையில் தோன்றி சிறுபிராயமுதலே சைவசித்தாந்தத்திற்கு ஆற்றிய தொண்டும் இறுதிவரை தமிழன்னைக்குச் செய்த சேவைகளையும் தமிழுலகம் என்றும் மறப்பதற்கில்லை. சர்தார் வேதரத்னம் பிள்ளை, எம். எல். ஏ.

அடிகளின் அரிய நூல்கள் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அவர்கள் தமிழர்களுக்கு ஆற்றிய உதவியை என்றும் மறக்கமுடியாது. N. K. வேலன், சென்னை.

II

அடிகளின் தமிழ்நாட்டுத் தொண்டின் நுட்பம், 'வேதாசலத்'தை 'மறைமலை' என்று மாற்றியதில்தானிருக்கிறது. எனவே, இனி நாமெல்லோரும் நம் குழந்தைகளுக்குத் தமிழ்ப் பெயர்களை வைத்தால், அதுவே அவரைப் பின்பற்றுவதாகும்; அதுவே நாம் அவருக்குச் செய்யும் கைம்மாறுமாகும்.

ந. அன்பு கணபதி, சென்னை.

தமிழ் நாட்டில் சங்கநூல்களைப் பரப்பிய பெருமையும், தனித்தமிழ் நடையில் தம் நூல்களை வெளியிட்டு, தனித்தமிழ் நடைக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த தனிப்பெருமையும் அடிகளுக்கே உரியதாகும்.

பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம். ஏ., தாம்பரம்.

தமிழையும், தமிழரின் சமயத்தையும், ஆரியத் தொடர்பி னின்றும் நீக்கித் தனித்தியங்கச்செய்த தனிப்பெருமை அடிக ளாருக்குரியதேயாகும். தனித்தமிழ் இயக்கத்தின் தந்தையாகிய அடிகளார் பன்னூறு ஆண்டுகளாகத் தமிழர்கள் தமிழ்த் தாய்க்குச் செய்துவந்த கெடுதிகளை நீக்கித் தமிழன்னை என்றும் தனியரசு செய்யவல்லவள் என்பதை உலகறியச் செய்து விட்டார்.

பண்டிதர், கா. போ. இரத்தினம், பி. ஓ. எல். (ஆனர்ஸ்.) கொழும்பு.

பல்லாண்டுகளாக அடிகள் செய்த தமிழ்த் தொண்டுகள் என்றும் போற்றப்பெறும்.

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், அண்ணாமலை நகர்.

தமிழ்மலை மறைந்தது. தமிழ் என்னும் சொல்லுக்கு இனிமை என்னும் பொருளும் உண்டு என்பதை நிரூபிக்கத் தோன்றிய பெரியார் இவர் என்று சொல்லும்படித் திகழ்ந்தவர் நம் மறைமலையடிகள்.

இராஜரத்தினம் அம்மையார், லேடி வில்லிங்டன் கல்லூரி, சென்னை.

தமிழ் பாதுகாவலர்; பெருநாவலர். அவர்கள் மறைவு தமிழுலகிற்கு ஈடு செய்யமுடியாத பேரிழப்பாகும்.

சி. இலக்குவனார், விருதுநகர், கல்லூரி.

அடிகளின் மறைவு எதிர்பாராத செய்தி. தமிழினத்தின் வரலாறு ஒழுங்கான முறையிலே வரையப்பெறின், மறைமலை யடிகளின் பெயர் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் பெறும்.

போ. குருசாமி, பி. எஸ். ஜி. கல்லூரி, பீளமேடு, கோவை.

முப்மொழிப் புலமையும் முத்தமிழ்த் துறைபோய வித் தகத்திறலும் கேட்டார்ப் பிணிக்கத் தேனினுமினியதாய்ச் சொற்பெருக் காற்றும் விறலும், கொழுவிய தீஞ்சொற்கெழும எழுதும் உரைநடை ஒண்மையும், மாற்றாரோடு வன்மலைபோல் நின்று சொன்மலைவு செய்யும் திண்மையும,பிசிராந்தையார்போல் தமிழமிழ்தம உண்டமையால் மாறாத இளமையும் முதலாய பல்வகைப் பாண்மையும் பழுநிய மாபெரும புலவர் மறைமலை யடிகளார்.

ஆ. கார்மேகக் கோன், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

தமிழ்க் கோயில் தலை மறைந்தது. தமிழ்த்தாய் தன் கலையை இழந்தனள். அந்தோ! மறைமலையடிகள் மறைந்தார்கள்; தனித்தமிழ் கண்ட தந்தை மறைந்தார்கள்; சிவநெறிச் செல்வர் சென்றார்.

ச. துரூஸ் அந்தோணி, புனித சவேரியர் கல்லூரி, பாளையங்கோட்டை.

மறைந்த பெரு வீரர்க்கு வீடுதோறும்—வீர வழிபாடு—தேவை; அவ்வழிபாடு அவர் படத்திற்கல்ல—அரை நூற்றாண்டாக அவர் பாடுபட்டு வளர்த்த தனித்தமிழ் இயக்கத்திற்கே அவ் வீரவழிபாடு தேவை

ந. சஞ்சீவி, பச்சையப்பன் கல்லூரி, காஞ்சி.

அவ் வீரருக்குக் கல்நட்டு வழிபாடாற்றுதல் தம் கடமையும் உரிமையுமாகும்.

வித்துவான் த. சிவப்பிரகாசச் சேதிராயர், திருவையாறு கல்லூரி.

மறைமலை—இரு பெயர் ஒட்டுப் பண்புத்தொகை. ஆனால், இன்று இறந்தகால வினைத்தொகையாயிற் றென்பதை நினைக்க மனம் மிகவும் துன்புறுகிறது. ஆம்! அவர் "அளக்கலாகா அளவும் பெருமையும் துளக்கலாகா நிலையும் தோற்றமும்" கொண்ட மலையாகவே விளங்கினர்.

வித்துவான். ஆ சிவலிங்கன், மயிலம்.

சுருங்கக்கூறின், ஒரு தமிழ் மகனுக்கிருக்கவேண்டிய நற்குணங்கள் யாவும் அமையப்பெற்றவர்கள் எனலாம்.

சுந்தரகுமரன், கல்வே கல்லூரி, புதுவை.

அடிகளார் திருமேனி தமிழ்மேனி, அவர் உள்ளமும் தமிழ்; உயிரும் தமிழ்.

தா. ஏ. ஞானமூர்த்தி, பி. ஓ. எல்., பி. எஸ். ஜி. கல்லூரி, பீளமேடு.

சுருக்கமாகக் கூறின், மறைமலையடிகள் ஒரு கலைக்கடலாகப் பல்லாவரத்தில் வீற்றிருந்தனரெனக் கூறலாம்.

உ. பழனி, கரந்தைப் புலவர் கல்லூரி.

அடிகளின் கலைத்தன்மை, ஆராய்ச்சித்திறன், மனோநிலை வியத்தொறும், வியத்தொறும் வியப்பிறந்து செல்கிறது. தமிழில் பேச, எழுத முன்வந்த இளைஞர்களைக் கைதூக்கிவிட்டவர் நம் அடிகளாரேயாவர்.

திரு. அ. ஞானசம்பந்தம், சென்னை.

அடிகளார் தொடாத் துறையில்லை. தொட்டவை யத்தனையும் துலங்கச்செய்த பெருமை அவர்களைத் தவிர வேறு யாருக்குமில்லை.

ஐ. சுப்பிரமணியம், பி.ஏ. ஆனர்ஸ், இந்துக் கல்லூரி, நெல்லை.

தமிழ்இலக்கிய வரலாற்றில் ஒரு புதியகாலத்தையே தோற்றுவித்த பெரியார்! தமிழுக்கும், சைவத்துக்கும் தம் வாழ்நாளை ஈந்த வள்ளல்.

தி. வை. சோக்கப்பா, சேலம் கல்லூரி.

மறைமலையடிகள் தமிழ்மொழிக்குச் செய்த நன்மை அளவிடமுடியாதது.

சி. பன்னிருகைப்பெருமாள் முதலியார், எம்.ஏ. பி.எல்., திருவாங்கூர்.

இருள் திணிந்து கிடந்த ஞான்று தமிழ் நாட்டிலே ஒளிவிடு சுடர்விளக்காய் நாகையில் தோன்றி, நூல்பல கற்றுத் தமிழ் உரை வரம்பாகி கிறித்துவக் கல்லூரியில் நன்னூற் புலவராய்ச் சுடு சொல்லும் கடுமுகமும் நீக்கிப் புன்முறுவல் தவழும் இன் முகனுடே, தேனினும் கனிவந்த சொல்லுடையராய்க் கேட் பாரைத் தம் வயமாக்கிக் கேளாரையும் பிணிக்கவல்ல ஆற்றல் கைவரப்பெற்றவராய் "மாட்டு" எனும் பொருள்கோள் வகை யால் உரையாசிரியர் நலிந்தும் வலிந்தும் பொருள் கூறித் தாம் தாம் இடர்ப்படுதலுடன் மாணுக்கர்களையும் இடர்ப்படுத்தி வருதலைக்கண்டு உளம் நொந்து நைந்துருகித் தெள்ளிய தீந் தமிழில் உரை பல கண்டு தமிழ்த் தொண்டாற்றிவந்தார்.

B. முருகன், எம். ஏ. அரசினர் கலைக் கல்லூரி, சென்னை.

முன்னைய நக்கீரரும் பின்னைய மாதவச் சிவஞான சுவாமி களும் ஒருருவெடுத்தாற்போன்று திருவவதரித்திருந்த மறை மலையடிகள், தமிழ் மொழிக்கும், சைவத்திற்கும் ஆற்றிய அரிய தொண்டு என்றும் நின்று நிலவும். தனித்தமிழ் வரையவும், தனித்தமிழ் விரிவுரையாற்றவும், நடுநிலைமை பிறழாமல் சீரிய ஆராய்ச்சி புரியவும் இனியொரு புலவரை யாம் காணவொண் ணுமோ? S. ருத்திரபதி, தமிழ் விரிவுரையாளர், பெங்களூர்.

தமிழ்நாட்டு உண்மை வரலாற்றை, தமிழர் வழிபாட்டை, தமிழர் மெய்யுணர்வை எடுத்துரைத்த பெருமை மறைமலை யடிகட்கே உரியது. திரு க. வெள்ளைவாரணனர், அண்ணமலை நகர்.

III

தமிழ் நாட்டில் உள்ள அறிஞர் அனைவராலும் உயர்ந்த அறிவாளி என்று போற்றப்பட்டவரும், மும்மொழி (தமிழ், வடமொழி, ஆங்கிலம்) வல்லுநர்.

வித்துவான், M. குஞ்சிதபாத தேசிகர், நன்னிலம்.

தமிழ் மாபெரும் புலவர் மறைமலையடிகளின் மறைவை யறிந்து பெரிதும் வருந்துகின்றேன்.

V. M. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், சென்னை.

தமிழிலக்கிய வரலாற்றில் அடிகளுக்கு ஓர் தனியிடம உண்டு. இதற்கு அடிகளார் எழுதிய 'மாணிக்கவாசகர் காலமும் வரலாறும்' என்ற ஒரு நூல் போதும். எளிய, தூய, தமிழ் நடை எல்லோரையும் பிணிக்கும் தரமுடையது.

ந. மு. கோவிந்தராய நாட்டார், தஞ்சை.

தமிழ்த்தந்தையை இழந்தோம்! தவிக்கின்றோம்! அளப்பரிய துன்பக்கடலில் ஆழ்கின்றோம். அடிகளாரை நினைக்கும் பொழுது இனிய பண்ணார்ந்த குரலும் ஆராய்ச்சி பொதுளும் கட்டுரையும் மெய்கண்ட அறிவுச் சைவமும் இன்னபிறவும் நம் மனக்கண்முன் தோன்றுகின்றன.

வித்துவான், A. சங்கரநாராயணன், B.A., திருவண்ணாமலை.

தமிழ்நாட்டு தவப்புதல்வரும், தமிழன்னைக்குச் சிறந்த தொண்டாற்றியவரும், தனித்தமிழியக்கத்தினை தமிழ்நாடு காண முயன்றவரும், எங்கள் தமிழ்த்தந்தையருமான உயர்திரு மறைமலையடிகளார் காலஞ்சென்றமை குறித்து கட்டுக்கடங்கா வருத்தமுறுகிறோம்.

வித்துவான், தெ. சண்முகவேல், வித்துவான் மா. குற்றலம், தென்காசி.

அடிகளார் ஓர் கல்விக்கடல்; தமிழ் மலை; ஆராய்ச்சிக் கருவூலம்; அறிவுப் பேராறு; அன்பின் ஊற்று; தனித்தமிழ்க் கலங்கரை விளக்கம்.

வித்துவான், வி. சிவக்கொழுந்து, பெரியகுளம்.

அவர்களது நினைவு என்றும் தமிழ் மக்கள் ஒவ்வொருவருடைய இதயத்திலும் நின்று நிலவும்.

T. S. சிவசைலம் பிள்ளை, சென்னை.

மும்மொழிப் புலவராய் விளங்கிய மூதறிஞரை யிழந்தோம். தனித்தமிழியக்கங்கண்ட தலைவரை யிழந்தோம். அறிவியக்கத்தை நூல்களின்வழிப் பரப்பிய முதல்வரை யிழந்தோம்.

புலவர், நா. சுந்தரராசன், கோவை.

சித்தாந்தத் தெளிவும் முத்தமிழ் வித்தகமும் செறிந்து நாவீறு நிறைந்து உரையும் செய்யுளும் ஆகிய இருவகை நடைகளிலும் இணையற்றபுலமை சிறந்து தமிழுலகுக்கொரு மாபேராசிரியராக விளங்கியவர்.

புலவர், ஆ. மா. சிவஞான முதலியார், ஆம்பூர்.

மறைந்தார் எனக் கேட்டு இம் மண்ணுலகம் விம்மியது.

T. K. சின்னையன், வேலூர், சேலம்.

மறைமலையடிகள் மறைவு தமிழுலகத்தை மலைக்கவைத்து விட்டது.

பெரும்புலவர், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, சங்கரன் கோயில்.

அன்பே சிவமென்பதனைத் துமறிந்தகன்ற ஆர்வலார்.

புலவர், சி. சுப்பிரமணியன், கோவை.

மொழி, கலை, நாகரிகம், பண்பாடு, எண்ணம், இச்சை முதலிய எல்லாவகைகளிலும் தளர்நிலையுற்றிருந்த தமிழகத்தை ஒப்ப நிறுத்தும் மலையாக—மறைமலையாக விளங்கியவர் அடிகளார்.

புலவர், வை. சுப்பிரமணியம், சேலம்.

தமிழன் இதயத்திற்கும் சைவசமயத்திற்கும் மறைபோலும் மலைவிளக்குப்போலும் இருந்த அடிகள் மறைந்தார்கள்.

வித்துவான், N. சுப்பு ரெட்டியார், மதுரை.

அன்னார் புகழுடம்பு நீடித்து நிற்க ஆவன செய்யவேண்டு மென ஆவல்கொள்கின்றேன்.

G. சுப்பையா, தமிழாசிரியர், கொச்சி.

பழமைக்குத் தாயகமாக விளங்கியவர்; புதுமைக்குப் புது வனப்பை ஊட்டுபவராகவும் வாழ்ந்துவந்தார். தமிழ் மக்கள் யாவரும் அடிகளாரின் வாழ்க்கை முறையைப் பின்பற்றி நடப்பது சிறந்த கடமையாகும்.

புலவர், T. S. சேதுராம ஐயர்.

அன்னார் ஆற்றிய தமிழ்ப்பணிகள் என்றைக்கும் நின்று நிலவுவனவாம்.

K. V. சேஷாசல சர்மா, தமிழாசிரியர்.

நூல் வாயிலாகக் கலைக்களஞ்சியம் காண விழையும் அரசிய லாரும், மக்களும் உயிரோடு நடமாடும் கலைக்களஞ்சியமாகத் திகழ்ந்த ஒருவரைப் பயன்படுத்தாதது வருந்தத்தக்கது.

வித்துவான், ந. தண்டபாணி, புதுவண்டிப்பாளையம்.

மூச்சு போகும்வரையில் தமிழன்னைக்குச் சிறந்த பணி செய்துகொண்டிருந்த செம்மல்.

நா. ப. தணிகை அரசு, வாலாஜாபாத்.

உயிரோடு வாழ்ந்த கலைக்களஞ்சியம்.

புலவர், ந. தண்டபாணி, கூடலூர்.

தமிழுக்கே தாம் தொண்டுபுரிதலையும், தனித்தமிழையே ஓம்புதலையும், தமிழ்மக்கட்குப் பற்பல துறைகளில் பேரறிவைப் புகட்டுதலையுமே விழுமிய நோக்கமாகக்கொண்டவர்.

மணி. திருஞானசம்பந்த முதலியார், சென்னை.

சைவசமயத்துக்கும், தமிழகத்துக்கும் அறிவுலகனைத்துக்குமே மறைமலையாக விளங்கிய மறைமலையடிகளும் ஆனந்தக் கூத்தர் திருவடி எய்தினர் என்ற செய்தி இன்றைய செய்தித்தாளில் தெரிந்து பேரிடிவாய்ப்பட்டோம்.

ப. திருஞானசம்பந்தன்.

நெஞ்சம் நீராயுருகுகின்றது. துயரம் உள்ளத்தைப் பிளக்கின்றது. என்செய்வேன்! பிரிவையாற்றகில்லேனே!

வித்துவான், திம்மப்ப அந்தணனூர், தாராபுரம்.

மொழியிலே அடிகளார் செய்துள்ள இவ்வரிய புரட்சியை, ஆக்கவழியைப் பின்பற்றத் துடிக்கும் ஆயிரமாயிரம் காளைகள் கல்லூரிகளிலும், அதற்கு வெளியிலும் நிற்கிறார்கள். அவர்கள் உள்ளங்களிலும் தாம் எழுதிய அரிய நூல்களிலும் அடிகளார் நின்று நிலவுகிறார்.

பொன்னினும் சிறந்த உடலையும் கனியினும் இனிக்கும் சொற்களையும் இனிக் காண்பதும் கேட்பதும் எந்நாள் என்று நினைக்கும்போது என்னுள்ளம் அலமருகிறது நாமெல்லாம் நின்று அலமருவது கண்டு அடிகளாரின் மனம் எவ்வாறு அமைதியுறுமோ? நான் அறிகிலேன். மீண்டும் தமிழகத்திலே அடிகளார் பிறக்கவேண்டும் என்பதே என் அவா.

வித்துவான், வி. சு. திருநாவுக்கரசு, புதுக்கோட்டை.

தமிழணங்கு இன்று, தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாது தனிப்பெருஞ் சோதியாய்த் திகழ்ந்து விளங்கிய, தன் தவப்புதல்வரை இழந்து தவிக்கிறாள். அணியணியான கலையணிகளைத் . தாய்க்கு அணிந்து அழகுபார்த்துப் போற்றி மகிழ்ந்தவர் மறைத்திரு மறைமலையடிகளார்.

கே. டி. தேவர், பம்பாய்த் தமிழ்ச்சங்கம், மாதுங்கா.

அவர்கள் அருளிய அத்தனை நூல்களும் தமிழரின் தனிப்பெருங் களஞ்சியங்கள்; அழியாத அறிவுக் கருவூலங்கள்.

புலவர், அ. க. நவநீதகிருஷ்ணன், நெல்லை.

தமிழ்நாட்டில் தலைசிறந்த தலைவர்.

வித்துவான், தி. படுச்சாமி ஓதுவார், திருச்சி.

தமிழ்நாட்டின் வாழ்வே தன் வாழ்வென வாழ்ந்த அண்ணல் மறைமலை.

அ. மு. பரமசிவானந்தம், எம். லிட், சென்னை.

அந்தோ! இமயமலையே மறைந்ததுபோலிருக்கிறது அன்னாரின் மறைவு.

பாரதி சுப்பையா, விளாத்திக்குளம்.

எண்ணரிய நற்செயல்கள் செய்த எங்கோமான் எங்களை விட்டுப் பிரிந்தாலும், என்றென்றும் எங்கள் உள்ளத்தில் வாழ்வார்.

வித்துவான் க. பெரியசாமி, தமிழாசிரியர், சேலம்.

தமிழ் மக்கட்கும் தமிழ் நாட்டிற்கும் அடிகளார் உயிர்ப்பாய்—உயிராய்—கண்ணாய்—மணியாய்—ஒளியாய்—அறிவாய்—கருவூலமாய்—நெறியாய்—அரணாய்—வாழ்வாய் — தமிழாய் இலங்கியவர்.

புலவர், வை. பொன்னம்பலனார், சேலம்.

அடிகள் உடல் ஒளிந்தும், அவர் ஒளிர்ந்து விளங்குதலையுணர்த்தும் உயரிய செந்தமிழ் நூல்கள் அறிஞர் நூலகங்களை என்றும் அணிசெய்துகொண்டு திகழும்.

வித்துவான், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், ஆரணி.

நினைக்கின் உள்ளம் வெதும்பும்; உரை தடுமாறும்.

வித்துவான், மு. முத்தணைந்த பெருமாள், திருநெல்வேலி.

தமிழ்மொழியின், தமிழ் மக்களின், உயர் உயிர்ப்பண்புகளையும்,பண்பாடுகளையும் அகில உலகத்திற்கும் அறிவுறுத்திய— அள்ளி ஈந்த தமிழ்த்தந்தை.

புலவர், நா. முனிசாமி, கெட்டி, நீலகிரி.

அயன்மொழிச் சொற்களையெல்லாம் அப்படி யப்படியே கடன்கோடலே கடமையெனக் கருதிக் கண்மூடித்தனமாய்த் தமிழ்க்கொலை புரிந்துவந்த காலத்தில் அவர் தோன்றியிரா விடின் தமிழ் தலைதடுமாறி யிருந்திருக்கும்.

சாமி. வேலாயுதம் பிள்ளை, பி.எ., எல்.டி., தஞ்சை.

அவர்கள் தமிழ் மொழிக்கும் நாட்டிற்கும் செய்துள்ள தொண்டு மிகமிகச் சிறந்தது. எவராலும் மறக்கமுடியாதது.

அ. மெய்யப்பன், கலைமகள் கல்லூரி, கொப்பனபட்டி.

தமிழையே உயிராகவும், உணர்வாகவும், மூச்சாகவும், பேச்சாகவும் கொண்டு வாழ்ந்த பெரியார் மறைவு ஈடுசெய்ய முடியா ஒரு இழப்பாகும்.

பி. லூர்துசாமி, பி. எஸ். ஸி., திண்டிவனம்.

புலமையில் அடிகளாரை ஒப்பாரும் மிக்காரும் இக்காலத்து இலர். பண்டைக்காலத்தும் அரியரென்றே சொல்லுதல் கூடும்.

க. வச்சிரவேல் முதலியார், காஞ்சிபுரம்.

மாணிக்கம் ஒன்று தமிழ் மக்கள் மனம் உருக மறைந்தது.

M. N. வடிவேலு முதலியார், B.A., L.T., தலைமையாசிரியர், செய்யாறு.

பளிங்குபோன்ற தூய உள்ளமும், ஆழ்ந்து நுணுகி ஆராயும் பான்மையும், தமக்குத் தெற்றெனத் தோன்றும் உண்மையை ஆற்றலுடன் வெளியிடும் வன்மையும், பேச்சிலும், எழுத்திலும் உயிர்ப்பு விளங்கும் மேன்மையும் இனி எவரிடத்தில் காணப் போகின்றோம்.

இராம. விசுவநாதன்.

தமிழ் நாட்டில் தமிழ், ஆங்கிலம், வடமொழி இம்மூன்றிலும் சிறந்த புலமை வாய்ந்தவர் உயர்திரு. மறைமலையடிகளொருவரே.

வித்துவான் வேங்கடராஜுலு ரெட்டியார், மயிலை.

தனித்தமிழுக்கு இனித்த தலைமைத் தளபதியாய் நிலைத்திருந்த அடிகள்.

சேகவீரபாண்டியன், மதுரை.

## குறிப்பு

மறைந்த மறைத்திரு. மறைமலையடிகளாரைப் பற்றி தமிழகம் வடித்த கண்ணீர் ஆறெனக் கடலெனப் பெருககெடுத்தோடும் அளவுக்கு ஆகிவிட்டது. தமிழகத்தின் ஒவ்வொரு மூலை முடுக்குகளிலிருந்தும் நம் செல்விக்கு வந்து குவிந்துள்ள ஆறுதலுரைகள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. மேலும் தமிழ்ப் புலவர்களின் இரங்கற்பாக்கள் ஏறக்குறைய மூந்நூறு நானூறுக்கு மேற்பட வந்துள்ளன. இவையனைத்தும் செல்வியில் இடம்பெற இயலாமற் போனதுபற்றி வருந்துகிறோம். அவையனைத்தும் தனி நினைவு மலராகத் தொகுக்க எண்ணியுள்ளோமாதலால் கைவரப்பெற்றுள்ள எல்லா ஆறுதலுரைகளும், கவிதைகளும் அம்மலரில் இடம்பெறும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

அன்றியும், தமிழகத்தின் எல்லாப் பகுதிகளினின்று ஏறக்குறைய நானூற்றுக்கு மேற்பட்ட கழகங்கள் இறங்கல் தீர்மானங்கள் அனுப்பியுள்ளன. அவையனைத்தும் செல்வியில் வெளியிடின் பக்கம் மீறுமென்று கருதி விடப்பட்டுள்ளன. ஆயினும் மலரில் வெளிவரும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# எந்தையாரின் இறுதி நாட்கள்

[சித்தாந்த தினகரன், வித்துவான், மறை. திருநாவுக்கரசு]

செந்தமிழ்ப் பேரறிஞரான எந்தையாரின் (மறைமலையடிகள்) ஆருயிர் எங்ஙனம் மறைவுற்றது என ஆர்வமுடன் நேரிலும் கடிதவழியாகவும் பலர் கேட்கின்றனர். அவர்களின் பிறப்புக் குறிப்பாலும், கைவரையாலும் அகவை எழுபத்தைந் தென்றே குறிக்கப்பட்டுள்ளது. அடிகளார் அக்குறிப்பில் மிகவும் நம்பிக்கையும் உறுதியும் உடையவராகவே இருந்தனர். இடையிடையே அதைப்பற்றி அடிகளார் கூறுவதும் உண்டு.

15-8-1950-ஆம் நாளன்று படுக்கையுற்றார்கள். சிலநாட்கள் கஞ்சியும் பழச்சாறும் அருந்தினார்கள். ஏழு நாட்கள் இவ்வாறு நிகழ்ந்தபின் சிறிது நலங்கண்டு வெந்நீராடி மூன்றுநாட்கள் சோற்றுணவு உண்டார்கள். பின்னர் மீண்டும் படுத்தனர். சென்னையில் மிகப்பெரும் மருத்துவப் புலவரும், உலகம் போற்றும் ஒப்பிலாத் திறனோருமான டாக்டர். குருசாமி முதலியாரவர்கள் வந்து பார்வையிட்டனர். டாக்டர். சீனிவாசலு நாயுடு அவர்களும் பார்த்தனர். "அடிகளின் நெஞ்சுப் பை வீங்கி விட்டது; பிழைப்பது அருமையே," என்று கூறினர்.

அடிகளார் விருப்பப்படி சித்த மருத்துவர், பண்டிதர், எஸ். எஸ். ஆனந்தர் அவர்கள் 31-8-50 முதல் இறுதிகாறும் மருந்து நல்கினர். என் தமையனார் திரு. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள், 5-9-50-ல் எழுதிய அஞ்சற்சீட்டும், திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் கொடுத்த கம்பிச்செய்தியும் கிடைத்தன. 11-9-50-ல் புறப்பட்டு வந்து பார்த்தேன்; கலங்கினேன்; என்னைத் தெரிகின்றதா என்று கேட்டேன். தழுதழுத்த குரலில் "ஆம்; என் மகன்," எனக்கூறினர். மூச்சு வாய்வழியாகச் செல்வதும், அதுவும், திணறித் திணறி வருவதுமே பெருந்துன்பமாக இருந்தது. படுத்த நாள்முதல் இரவுபகலாகக் கண்ணுறக்கமின்றிப் பெருந்தொண்டுபுரிந்த பேரன்பர்கள், திரு. கூத்தரசு, எம். பி. சிவப்பிரகாசம் முதலியோராவர். அடிகளின் குடும்பத்தாரனைவரும் வேண்டும் தொண்டுபுரிந்து உடனிருந்தனர்.

அவர்கள் படுக்கையில் அவர்கள் கண்ணெதிரே தோன்றுமாறு அம்பலவாணர் திருவுருவப்படம் அமைக்கப்பட்டிருந்தது. அவர்கள் அத்திருவுருவையே அடுத்தடுத்து நோக்குவதும், உச்சிக்கூப்பிய கையராய் வணங்குவதும் செய்துகொண்டிருந்தனர். நல்லுணர்ச்சியுடனேயே இறுதிவரையும் இருந்தனர். 15-9-50 பகல் $3\frac{1}{2}$ மணிக்கு அடிகளார் அம்பலவாணர் தூக்கிய திருவடி நீழலெய்தினர்.

---

# தமிழ்மலை சாய்ந்தது!

வளர்அறி வொளிப ரப்பும் ஞாயிறு மறைந்த தேயோ!
தளிர்மொழி அரணாய் நின்ற தமிழ்மலை சாய்ந்த தேயோ!
ஒளிர்கலை நுணுக்கம் ஓங்கும் கோபுரம் உடைந்த தேயோ!
குளிர்தமிழ்க் கடலைச் செந்தீ கொளுத்திடுங் கொடுமை யுண்டோ?

செம்மைசால் ஓசை முந்தத் தேன்மழை கொட்டி னாற்போல்
மும்மொழிப் புலமை யாலே முத்தமிழ்ப் பெருமை நாட்டிச்
செம்மல்நம் அடிகள் நாட்டிற் சிறப்புரை நிகழ்த்தும் போழ்தில்
மெய்ம்மறந் திருப்பர் மக்கள் "வென்றது தமிழ்!" என்பாரே!

"இரவலோ இகழ்ச்சி என்பீர்! பிறமொழிச் சொற்கள் ஏற்று
விரவலேன் தமிழில்?" என்று வீறுடன் கேட்ட வீரன்;
அருவிபோற் சொற்கள் பொங்கும் அருந்தமிழ் தனித்தி யங்கும்
உரிமையை எழுதிப் பேசி உயர்ந்தபே ரறிஞ னன்றோ?

வானெனப் பரந்துயர்ந்து வாரிதி யென்ன ஆழ்ந்து,
தேனென இனிக்கும் நூல்கள் செய்துசெந் தமிழர்க் கீந்த
'ஞானசா கரமே!' பெற்ற நாட்டினை மறந்து பொல்லா
வானகம் தமிழ்முழக்கும் காதலால் மறைந்திட் டாயோ?

புலவர்கள் அலறி நிற்க அரசியற் புதுமை தேடுந்
தலைவர்கள் மலைத்து நிற்கத் தமிழகப் புகழ்ப ரப்பும்
கலைஞர்கள் கலங்கி நிற்க அன்னையோ கண்ணீர் வார்க்க
உலகினை வெறுத்த தேனோ? அடிகளே! உரைத்தி டீரோ?

குறைவற மக்கள் நூறாண் டுறைவழி கூறி வாழ்ந்த
மறைமலை யடிக ளாரின் வாழ்வதும் எழுபத் தைந்தில்
மறைவுறக் கண்டோம்! ஞாலத் தியற்கையை மதியால் வெல்லும்
துறைநிறை வெற்றி காணும் சூழ்நிலை தோன்றி டாதோ?

புத்தனேரி. ரா. சுப்பிரமணியன், 23, நாகப்ப முதலி தெரு,
கோமளீஸ்வரன்பேட்டை, சென்னை-2.

# கையறுநிலை

எங்கண் போனாய் ?

இனிய முகமு மின்சொல்லி னெழிலு மிறைவன் றிருவடியிற்
கனியு முளமுந் திருநீறுங் கண்ணின் மணியுந் திகழுடம்பிற்
றினையு மகலா வடிவழகுஞ் செழிய தமிழி லறிவுறைநூல்
புனையுங் கரமும் விட்டெங்கண் போனாய் நீதான் மறைமலையே !

து. அண்ணாமலைப் பிள்ளை, சேக்கிழார் தமிழ் மன்றம், சின்னமனூர்.

தமிழின் தீஞ்சுவை

தனித்தமிழின் தீஞ்சுவையும் சைவத்தின் நறுஞ்சுவையும் தாழ்வி லாமல்
இனித்திட்ட நடையினிலே எமக்களித்த மறைமலையார் இல்லா ராகப்
பனித்திட்ட தமிழ்நாட்டின் பாவலரும் நாவலரும் படர்வ தெங்கே ?
இனித்திட்டம் எதுண்டு தமிழரசு பெறுவதனுக் கென்னே ! என்னே ! !

புலவர் "அரசு", பூவிருந்தவல்லி.

தமிழ்ப் பண்பு

மறைமலையைக் கலைக்கடலை மதிக்கொழுந்தை அக்கொழுந்தின்
வனப்பை வைப்பை
முறைதிறமபாச சிவபபணியை முதுநூல்கள்
முகத்தை அன்பின்
உறையுளைநற் றமிழ்ப்பண்பை உணர்ச்சியினை ஊக்கத்தை
ஊதியத்தைக்
குறைவின்றி யினிப்பெறுநாள் கூடுங்கொல் அறிவுடையீர்
கூறு வீரே!

வித்துவான். மு. அருணாசலம் பிள்ளை, அண்ணாமலைநகர்.

கலை மலையே !

மறைமலையே ! கலைமலையே ! மாபுலவோர் மனமகிழத்
தறைமலைபோல் எஞ்ஞான்றும் தழைத்துலகில் மிளிராமல்
இறைமலைக்கு ஏகினையோ ஈரைம்ப தாண்டுலகில்
துறைமிகுந்த தமிழ்வளர்ப்பான் துணிந்திருந்த பெருமானே.

சு. அ. இராமசாமிப் புலவர், கருப்பக்கிளர்.

மேன்மை நலம் விளக்கினையே !

புன்மைமிகு குழுவினர்கைப் போய்ப்புகுந்த தமிழன்னை
வன்மையிலள் வளமுமிலள் வடமொழியின் துணையின்றேல்
நன்மையிலள் இறந்தொழிவள் எனக்கரைந்த நவையகற்றி
மென்மையவள் தனித்தியங்கும் மேன்மைநலம் விளக்கினையே!

விளக்கியவாய் எழுதியகை வெந்தழலில் போய்ப்புகுத
அளக்கலா ஆய்வுரை நூல் அலைகடந்தும் அகம்புறமும்
விளக்கெனவே நின்றுலகை விழுமநிறை கடலழுத்த
இளக்கத்தால் புலவரெலாம் எங்கிநனி இளைந்தனரே!

சித்தாந்தபண்டிதர். புலவர். ப. இராமநாத பிள்ளை.

### நீயோ மறைந்தாய்!

நீயோ மறைந்தாய்! நிறைவுறு தமிழின்
சாயல் மறைந்தது; தனித்தமிழ் குறைந்தது!
சைவக் கொண்டல் சாய்ந்து வீழ்ந்தது!
ஐயகோ! ஐயகோ! அருள்மறை மலையே!
வையக மெல்லாம் மாழ்க மறைந்து
ஐயநீ சென்ற இடன்அறி கில்லேம்!
சிவபரம் பொருளின் திருவடி நீழல்
உவந்தினி திருக்கும் உயர்குணக் குன்றே!
உன்புகழ் நிலைக்க! உலகெலாம் பரவுக!

சேல்லூர்க்கிழார், சே. ரே. இராமசாமி பிள்ளை.

### இந்நாள் பிசிராந்தை!

பண்டன்பு மிகவாழ்ந்த பிசிராந்தை எனவிந்நாள் படியிற் றோன்றி
வண்டமிழோ டுயர்சைவம் வளர்ந்தோங்கும் குறிக்கோளை வாழ்விற் கொண்டு
தொண்டயரா தினிதாற்றித் தூயமனை யறவாழ்வில் துறவைப் போற்றி
விண்டலத்திற் சிவமயமாய் ஓதுமறை மலையடிகள் மேவி னாரே!

வித்துவான். கோ. இளையபெருமாள், ஆரணி.

### கண்ணிழந்த ஆய்வுலகம்!

தமிழன்னை தலைமகனைத் தானிழந்தாள் சைவமகள் தானும் அன்னள்
தமிழ்மக்கள் பெருந்தலைவன் தனையிழந்தார் புலவர்பெருந் தந்தை யற்றார்
தமிழ்க்கலையின் ஆய்வுலகம் தன்கண்ணை யிழந்ததெனத் தளரும் இன்றே
தமிழ்த்தலைவன் மறைமலையைத் தானிழந்தே இவ்வுலகம் தனித்த தாலே!

புலவர் வே. ஐயா நாயக்கர், போர்டு உயர்பள்ளி, ஆரணி.

### கலைகளெலாம் அறிந்த தெய்வம்!

ஏரணத்தில், இலக்கணத்தில், இலக்கியத்தில், சான்றோர்தம் இனிய பாவில்
காரணத்தை நுதலிவரும் சித்தாந்த முதலான கலைகள் தம்மில்,
ஆரணத்தைத் தலையாக்கொள் ஆரியத்தில், சங்கதத்தில், ஆங்கி லத்தில்
சீரணைத்த கலைகளெல்லாம் அறிந்ததெய்வம் நீயன்றித் தெரியக் காணேம்!

புலவர். வீ. உலகவூழியனார், சேலங் கல்லூரி, சேலம்.

### வடித்த தமிழ் தந்தாய்!

வடித்ததமிழ் மிகத்தந்து வடவர் சூழ்ச்சி
வருமுறைகள் நன்கெடுத்துக் காட்டி நீக்கிப்
பிடித்தமுள தமிழொன்றே பிறங்க மூச்சுப்
பெருக்கெடுக்க உடல்வாடி உளமும் சோர்ந்து
எடுத்தவொரு சைவத்தை நிலையாய் ஊன்றி
எல்லார்க்கும் எல்லாமாய் நின்ற வள்ளால்!
படுத்தவொரு கணத்தினிலே பறந்தா யென்றால்
பாவியேன் என்றினிநான் காண்பே னையா!

கா. கணபதி.

**மொழிக்கடல் !**

தேரும் மொழிக்கடலாய்ச் செந்தமிழின் நன்மணியாய்
ஆரும் மறைமலையை ஐயகோ !—ஈரமிலா
மணனே விழுங்கியதோ மாகடல்தான் கொண்டதுவோ
கண்ணே அவன்தமிழ்க்குக் காண்!

வித்துவான் மு. ரா. கந்தசாமி, அம்பாசமுத்திரம்.

**தமிழின் அழகே !**

தனித்த தமிழின் அழகே உலகில் தழைக்கவென
இனித்த நடையின் எழிலுறு நூல்கள் இனிதளித்தாய்!
நினைத்த தெவர்க்கும் ஒளியா துரைக்கும் நிறைபுகழோய் !
பனித்த சடையான் அருளிற் குளித்தாய் பகர்தலென்னே?

பாரிப்பாக்கம், கண்ணப்ப முதலியார்.

**முத்தமிழ் வல்லாய் !**

மும்மொழியும் முத்தமிழும் வல்ல மறைமலையே !
செம்மைநெறி ஆர்ந்திட்ட செம்மலே !—அம்மையப்பர்
இன்ப அடிமலர்க்கீழ் இன்பம் நுகர்ந்தென்றும்
அன்புடனே வாழ்க அமர்ந்து.

பாலூர்க்கிழார் கண்ணப்ப முதலியார்.

**அமிழ்தளிக்கும் மலை !**

தமிழகத்தி லெஞ்ஞான்றுந் தனித்தமிழைப் பேசிவந்த
தக்கான யாரோ,
அமிழ்தனைய தமிழ்ச்சுவையை அயல்நாட்டார்த் தெரிவித்த
அறிஞன் யாரோ,
தமிழ்வேந்தர் மூவரைப்போல் தமிழ்ப்புலவர் மூவருளும்
தலைவன் யாரோ,
அமிழ்தளிக்கும் அம்மலைதான் அகன்றுநமைப் பிரிந்ததிந்நாள்
அந்தோ ! அந்தோ !

வித்துவான். கே. குஞ்சிதபாதனர், மயிலம்.

**வண்டமிழ்க்குயர்வு தந்தாய்!**

துறைமிகு தமிழ்த்தாய் மாண்பைத் தொன்மையை நீகற் றுய்ந்து
முறைமையின் மொழிந்தாற் போன்றிங் கியாவர்முன் மொழிந்தா ரம்மா !
மறைமலை யடிகாள்! தோன்றி வண்டமிழ்க் குயர்வு தந்தாய்!
குறைகளை யொழித்தாய் ; எந்தாய் ! கொடிதுனைக் கொண்ட கூற்றே!

வித்துவான். பெ. கோவிந்தனர், ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**கலைக்கடலே!**

அம்பலவன் சந்நிதியொன் றுங்கமைததே அதன்கண நாளும்
செம்பவள வல்லிசிவ காமியொடு சேர்ந்த பூசை
இம்பருக்குள் நினைப்போல இயற்றியரார் எந்தா னீயே
கம்பனருள பெற்றுயர்ந்தாய் கலைக்கடலே! அந்தோ வந்தோ!

மு. சடகோபராமாநுசம் பிள்ளை, கரந்தை.

**உணர்வு கொள்வீர் !**

உலைவின்றித் தமிழ்மொழிக்கே உழைத்தா ரென்றோம்
உண்மையிது ; ஊக்கமுடன் தமிழின் ஆக்கம்
கலையென்றே தன்வாழ்நாள் கழித்த அண்ணல்
கண்டதிலை தமிழ்நாட்டில் தன்னே ரில்லா
மலையென்றோம் ; மாகடல்,மா ணிக்க மென்றோம்,
மஞ்சுதமிழ் வளம்பெறவே வாழ்ந்தா ரென்றோம்,
இலையிந்த உலகெங்கும் இவர்போல் சிந்தித்
தியற்றிடும்நூல் வல்லார்க ளென்றோ மின்றே.

இனித்தமொழி எங்கள்தமிழ் ஆரி யத்தின்
இடைச்செருக லால்பெருமை குன்றிற் றேனும்,
தனித்தமிழின் சுவைததும்பும் நடையால் பேச்சால்
தமிழர்தலை நிமிர்ந்திடவே செய்தா ரென்றோம் ;
கனித்தஅருள் சொல்செயலால் பணிக ளாற்றிக்
கயவர்குழாம் கவிழ்ந்தோடச் செய்தார் ; பின்னும்
நினைத்தபடி செயலாற்றித் தமிழர் உய்ய
நிலைக்களனாய் ஒளிர்ந்தாரிந் நாட்டி லென்றோம்.

காலமெலாம் அவர்பெருமை பேசிப் பேசிக்
கழிப்பதுவோ நம்கடமை ? அன்று ; இன்றே
ஓலமெலாம் விட்டொழித்து அடிகள் பேரால்
உகந்ததமிழ்க் கல்லூரித் தோற்று விப்போம்
சாலவுமோர் மண்டபமு மமைத்து அன்னார்
சரிதத்தைப் பொன்னெழுத்தில் பொறிப்போம் வாரீர் ;
ஞாலமெலாம் அடிகள்புகழ் நிலவ வேண்டின்
நம்கடமை அதுவன்றோ ? உணர்வு கொள்வீர் !

முத்தமிழ்மணி.

**இசைநிறுத்தி எங்கொளித்தனை ?**

கலையெ னத்தமிழ் மொழியை யம்மொழிக் கதிர்ம திப்பொடு விளைவளக்
கழனி யைப்பெரு வயிறு வீங்கிடக் கதுவி யுண்டதென் மாக்கடல்
அலையெ னத்தமிழ் வழியை யவ்வழி யலர்த னித்தமிழ் மரபையுண்
டமையு மவ்வட கடல லையிவ ணணுகி டாதுகாத் துயர்மறை
மலையெ னத்தமிழ் மக்கள் நம்பியே வாழ்வு கூரவவ் வடகடல்
வருகை யற்றதோ டழிவு பற்றியே வற்ற நின்றநந் தமிழ்மலை
ரத்தமிழ் மக்க ளேங்கிட, இனிந மக்கிலைத் தடையென
இகல வக்கடல், எங்கொ ளித்தனை இசைநி றுத்தியெம் மெந்தையே !

புலவர். குழந்தை, பவானி.

**நல்வுலகை வாழவைத்தாய் !**

தண்டமிழின் துறைகண்டாய்! வடமொழியுந் தகவுணர்ந்தாய்!
அண்டநிறை ஆங்கிலத்தின் அருநூல்கள் பலகற்றாய் !
எண்டருநூல் பலஇயற்றி இவ்வுலகை வாழவைத்தாய்
மண்டுபுகழ் மறைமலையே! மறைந்தனையே என்செய்வோம்!

"சித்தாந்தப் பேராசிரியர்", ந. சிவதருநாத பிள்ளை, தூத்துக்குடி.

பண்ணார் மறைமலையே !

மண்ணுலகிற் செந்தமிழை மக்கட் குரைத்ததுபோல்
விண்ணுலகுஞ் சென்று விரித்தற்குப்—பண்ணார்
மறைமலையே மாய்ந்தனையோ! மாறாக் கதியாம்
இறைவனடி சேர்ந்தா யியம்பு?

திருக்குறட் களஞ்சியம். தி. ப. சுப்பிரமணியதாஸ், மதுரை.

வாழ்க !

கலைமகளும் தமிழ்மகளும் கதறியழப் புலவருளம் கனிந்து தேம்ப,
நிலைதவறிச் செயல்மறந்து நெஞ்சமெலாம் புண்பட்டு நெகிழ்ந்து மாழ்கி
அலைகடலிற் றுரும்பென்ன அருந்தமிழர் உள்ளமெலாம் அலைந்து விம்ம
மலைசரிந்த தெனயாமகள் வாட்டமுற வானுலகம் கண்டான் வாழ்க !

பு. ரா. சுவாமிநாதன், தலைமை ஆசிரியர், இராமசாமி செட்டியார்
உயர்நிலைப்பள்ளி, அண்ணாமலைநகர்.

கீரன் றுணி வென்கோ !

கீரன றுணிவிளங் கோவின னேர்மையுங் கெழுமிய வுருவென்கோ!
கிடையிறொல் காப்பிய னருளொடு வள்ளுவன் கேழுறு வாழ்வென்கோ !
வாரமுன் பாடிய வானவர் நால்வரின் வளவிய வுளமென்கோ!
மாபா டியசிவ ஞானமு னீந்திரன் மதிதிர ளுறுவென்கோ !
கூரறி வொடலகி னூலுரை யருளிய குழுவினர் திருவென்கோ !
கோவிலுண் மேவருட் பாவருள் வள்ளனது குருவடி வேயென்கோ !
மாரனை யெரியுமை பாகனி னெருமொழி மண்ணிடை வரலென்கோ !
மறைமலை யெனுமொரு பெயரொடு நிலமிசை வந்தவெம் மிறைநினையே !

திரு. சி. சொக்கலிங்கனார், தலைமைத் தமிழாசிரியர், சி. எஸ். எம்.
உயர்நிலைப்பள்ளி, அரக்கோணம்.

தமிழுக்குயிர்

............ ..... ....... ..... ..............
உடலிம் மண்ணுக்(கு) உயிர்தமி ழுக்கென
உழைத்துப் பெற்ற ஒண்புகழ்க் குரிசில் !
......... .......................................

சு. ப திலகவதியம்மாள், கலைமகள் கல்லூரி, கொப்பனாப்பட்டி

கூற்றுமிக உலந்திடாதோ !

உயர்தனிச்செம் மொழிதமிழில் உரைநடைநூல் பலவியற்றி
யுலகி லுள்ளோரா
உயர்தமிழின் அரும்பண்பை உணர்ந்துமகிழ் வெய்திடவும்
உரைசால் சீலம்
உயர்தமிழ்நா டெய்திடவும் உழைத்துமகிழ் தூயோனே !
ஒளியே ! உன்றன்
உயர்உயிரை உடல்பிரித்தான் உயிருண்ணும் கூற்றுமிக
உலந்தி டாதோ.

சி. துரைசாமி, தலைவர், தமிழ்க் கல்லூரி, மயிலம்.

### செந்தமிழ் நன்மலை!

செந்தமிழ்நல் லாரியநதோ டுலகுபுக ழாங்கிலமுஞ் சிறக்கக் கற்று
செந்தமிழ்க்கே பணிபூண்டு செம்மைபெறு வதனபெருமை திகழ வென்றும்
செந்தமிழ்நூ லந்தமிக, பலகுயிற்றிச் செந்தமிழை வளர்த்து வாழ்ந்த
செந்தமிழ்நன் மலையந்தோ! செம்மைநிறக் கடவுளடி சேர்ந்த தம்மா!

வித்துவான். சு. நாகராஜன், சேலம்

### தமிழ்க் கதிரோன்!

*மலைநிலைத்துத் தலையோங்கி வளம்படைத்து வற்றாநீர*
*வாரி தன்னாற்*
*புலம்பருக்கி நிலமக்கள் பொலிவுறவே வாழ்வுறுதலும*
*பொற்ப தாகும்*
*கலைநிலைதத மறைமலையே! தமிழ்நிலைத்துத் தலையோங்கிக்*
*கவினசேர்த தாகிப்*
*புலம்புதுக்கு நற்றுறையிற் புக்குழைத்து நனைாற்றிப்*
*போன தென்னோ?*

*தமிழ்ததாயின் தவப்புதல்வ! தமிழாய்ச்சிப் புதுநெறியிற்*
*றகவோ டோங்கி*
*யிமிழ்த்தாய்பற் பலமுறைக ளொழுந்தாபற் பலாபுலமை*
*யேற்றங் கொண்டே*
*அமிழ்த்தாய்நீ துயர்க்கடலு ளாழ்ந்தோமே யண்ணையிழந்*
*தலறு சேய்போற்*
*சமழ்த்தோம்யாந் தமிழ்க்கதிரோன் சாய்ந்தனனென் றேய்ந்தனமித*
*தமிழ கத்தே!*

தி. பொ. பழநியப்ப பிள்ளை, பி.ஓ எல். திருப்பதி.

### மறைமொழி அடிகள்!

*மதியணிந்த சடைககடவுள் திருவருளின் நல்வினையின்*
*வையமீ டேறிவாழத*
*துதியணிந்த பாடலுரை நாடகநூல சொல்வசியம்*
*அறிவியல்நூல் துலங்கச செயதாய்!*
*மதியணிந்த தமிழ்மலைநம் மறைமலைநல் அடிகள்என்றும்*
*புலவா வரததார் என்றும்*
*மதியணிந்த பாவலாசொல் பொதுநிலையக கழகத்தாய்!*
*விதியிறையும மாறறப் போமோ!*

*இறைமொழி யாகும் நந்தமிழ் மொழியின் இயல்இசை*
*நாடகம என்னும*
*துறைபொலி தூய செம்பொருள் உலகோர் துணிந்துறச்*
*செய்நலமீ காணும்*
*மறைமொழி அடிகள் எழுபானைந் தாணடில் விகிர்தியா*
*வணிமுப்பான வெள்ளி*
*இறையடி நீழல் எய்தினா் பின்னோர் இரங்கிநின்*
*றேங்கிவாழ்த திடவே!*

பெருநாவலர். பு. சி. புன்னைவ ாநாத முதலியார், நெல்லை

பைந்தமிழ்த் தந்தை !

அந்தோ ! செந்தமிழ் அடிகளை யிழந்து
எந்த நெறிகொடு இனியீ டேறுமோ ?
பைந்தமிழ்த் தந்தையைப் பாதியில் இழந்ததே !
இந்த நிலைமை ஈடுறல் என்றோ ?

வி. பொ பழனிவேலன், திருத்துறைப்பூண்டி.

மலைக்குப் பெருமை !

அலைக்குப் பெருமை கடல்சேர்ந்து பெற்ற தழகியபொற
சிலைக்குப் பெருமை சிவன்கரஞ் சேர்ந்தன்றோ ? செந்தமிழ்த்தாய்
நிலைக்கப் பெருமையும் நீதந்த தன்றோ ? நிலைகலங்கா
மலைக்குப் பெருமையும் நின்பெயர் கொண்டதால் வந்ததுவே !

வித்துவான். S. மன்னமுத்துக் கவுண்டர், பொள்ளாச்சி.

தனித்தமிழ் வேந்தர் !

இன்பம் நிறைந்த இனிய தனித்தமிழில்
பின்னர்க் கலந்த பிழையொழித்து—இன்னமுதாய் !
ஈந்த மறைமலை என்றும் தனித்தமிழின்
வேந்தரென வாழ்ந்தார் விளம்பு.

நா. மாதவன், (செயலாளர்), பரதவர் சங்கம், திருவான்மியூர்.

கன்னித்தமிழ் வளர்த்த காவலன் !

மன்னுபுகழ் பூத்த மறைமலையே ! தென்னாட்டுக்
கன்னித் தமிழ்வளர்த்த காவலனே !—தன்னிகரில்
வள்ளலே ! இந்நாளில் வான்புகுந்தாய்! என்னுஞ்சொல்
உள்ளினும் வேமே உளம்.

வித்துவான். மயிலுசாமி, பி.ஓ.எல்., 'தமிழகம்', பழனி.

செந்தமிழ் மாதவர் !

வேற்றுமொழி யாதும் விரவாமற் பேச்சுநடை
நாற்றிசையி லும்பயில நன்குணற்றிப்—போற்றிடச்செய்
செந்தமிழ்கொள் மாதவரே! சென்றதெங்கே? யாம்மகிழ
வந்தருள்க மீண்டுமிங்கு வந்து.

ப. மர்சிலாமணித் தேசிகர், காரைக்குடி.

அறிவுருவே !

மறைகள்பல அடுக்கியவை மனத்தினுள்ளே மயக்கமின்றி மணந்த தன்மை
நிறைதருநல் லுருவகமாய் நிகழ்த்தியது நனியூழி நிலைக்கும் வண்ணம்
மறைமலையாம் பெயருலகில் மதிப்புடனே அறிஞராது மனத்தில் நிற்க
மறைந்தனையே அறிவுருவே! மலையாத கருத்துரைகள் மறைந்த இன்றே!

இராம. மீனாட்சிசுந்தரம், எம்.ஏ., அரசினர் கலைக் கல்லூரி, சென்னை.

**மறக்கப்போமோ?**

கற்றறிந்த பெரும்புலவர் வடமொ ழிக்குக்
காலவருடிக் கிடந்திட்ட மடமை கண்டு
நற்றமிழைத் தனித்தமிழை எழுதிப் பேசி
நல்லுணர்வை வளர்த்திட்டீர்! விழிப்பைச் சேர்த்தீர்!
பெற்றெடுத்த தமிழ்நாட்டின் அறத்தைப் பண்பைப்
பெரும்புகழை நிலைநிறுத்தி வைத்தீர்! கண்கள்
பெற்றிழந்தோர் போலானோம்; பிரிந்தோம் உம்மை!
மறைமலையே! உமைநாங்கள் மறக்கப் போமோ?

கவிஞர் "வாணிதாசன்" புதுவை.

**புலவர் கூடிய தோற்றம்!**

புலவரெல் லாருங் கூடிப் பொருந்திய தோற்றம் போல்வாய்!
கலைமகள் உருவாய் வந்தே கவின்மிகு கலைக ளீந்தாய்!
நிலவுல கதனில் நின்போல் நேர்பட எழுதத் தக்க
புலவரும் புகலில் லுண்டோ? புகழ்மறை மலையே போல்வாய்!

புகழ். முத்துசுவாமிப் பிள்ளை, உடன்குடி.

**ஆ! கொடிதே!**

பண்டைத் தமிழர் நாகரிகம் பண்பா டோங்கும் பெருந்தகைமை
கொண்ட தமிழ்ப்பா வினியநயம் கூறி யவர்தம் தனிப்பெருமை
எண்டிக் கினுஞ்சேர்ந் திடநூற்கள் எழுதுங் கையும் கருத்துமுடன்
கொண்டு சென்றாய் ஆகொடிதே! கூற்றன் துணிந்த கொடுஞ்செயலே!

புலவரேறு. அ. வரதநஞ்சையனார், தோரமங்கலம், சேலம்.

**மாண்பு சான்ற மறைமலை!**

தனித்தமிழ் உணர்ச்சி கொண்ட தகவுடை யுருவ மென்கோ?
நுனித்தரு நூல்க ளாய்ந்த நுண்புல வரம்ப தென்கோ?
பனிசசடைக் கூத்தற் கண்ட பத்தியின் படிவ மென்கோ?
மனித்தரில் மாண்பு சான்ற மறைமலை யடிகாள்! நும்மை.

வித்துவான். சே. வேங்கடராமச் செட்டியார், திருப்பதி.

இன்பாருந் தமிழ்க்கலைக ளினிறசிறந்தாய் ஆங்கிலமு மினிது கற்றாய்
அன்பார வடமொழியு மறிந்துயர்ந்தாய் பலசமய வறிவு சான்றாய்
துன்பாக்கும் புவிவலயத் தொடர்பென்றே நிலவாழ்வு துறந்தா யேனும்
வன்பாரு முளத்தினை நீ மறைமலையே தமிழ்ப்பயிரை வளர்ப்பார் யாரே.

E. S. வரதராசய்யர், பி. ஏ., அண்ணாமலைநகர்.

மும்மைத் தமிழ்ச்சங்க மொண்டெழுந்து மூதறிவாஞ்
செம்மைக்குன் றேறிச் செழுநூல் பலபொழிந்த
மும்மை மொழிப்புயலே! முரணிலா வெம்மடிகேள்!
இம்மையில்யாம் நும்மை யிழந்தேம் இழிந்தேமால்.

சி. து. கன்னிசாமி, கண்டாச்சேரி, மதுராந்தகம்.

# மறைமலை தந்த செல்வம்

திருவொற்றி முருகன் மும்மணிக்கோவை யென்னும் செழுந் தமிழ்ச் செய்யுள் நூலானது அடிகள் தமது உக-ஆம் ஆண்டில் மிகக் கடுமையான வயிற்றுவலி நோய்கண்டு, முருகப்பிரானது திருவருளால் அது தீரப்பெற்றமையின், அவனது பேரருளை வியந்து யாக்கப்பெற்று அடிகளது உடு-ஆம் ஆண்டு முதலில் முடிக்கப்பட்டதாகும். அதற்குமுன் ஓராண்டுவரையிற் பல நன்முயற்சிகளிடையே கிடைத்த ஒழிவு நேரங்களிலேயே இதன் செய்யுட்கள் யாக்கப்பட்டு வந்தன. தமக்கு இருபதாம் ஆண்டு நிரம்பும் முன்னமே மறைமலையடிகள் நன்னூல், யாப்பருங்கலக் காரிகை, இறையனாரகப்பொருள், தண்டியலங்காரம் முதலான சிற்றிலக்கணங்களையுந் தொல்காப்பியம் என்னும் பேரிலக்கணத் தையும் பத்துப்பாட்டு, கலித்தொகை, திருக்குறள், நாலடியார், சிலப்பதிகாரம், திருச்சிற்றம்பலக்கோவையார், கல்லாடம், சீவகசிந்தாமணி, சூளாமணி, பெரியபுராணம், சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலான அரிய பெரிய நூல் களையுந் துறைபோகக் கற்று, உரை எழுதுதலினுஞ் செய்யுள் இயற்றுதலினுஞ் சொற்பொழிவுகள் ஆற்றுதலினும் மிக வல்ல ராய் விளங்கினார்கள். அக்காலத்தில் அடிகளாரின் உள்ளம் பழைய செழுந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் தோய்ந்து ஊறி அவ்வண்ணமாய்க் கிளர்ந்து திகழ்ந்தமையால், அப்போது இயற்றப்பட்ட இவ்வருந் தமிழ் நூலில் அப்பழைய நூல்களின் சொற்களும் சொற்றொடர்களும் இனிய பொருள்களும் இடை யிடையே மிகுந்து விரவி மிளிர்கின்றன. பழைய தமிழ் நூல்களைப் பயின்று தமிழ்ப்புலமை நிரப்ப விரும்பும் மாணவரும் பிறரும் இதனை யுரையுடன் கற்பராயின், பின்னர் அவர் அப் பழைய நூலுணர்ச்சியை எளிதிலே பெறுவர்.

சைவசமய முதலாசிரியராகிய மாணிக்கவாசகப்பெருமான் வரலாறு, தன்னைக் கூறும் புராண நூல்களில் முன்னொடுபின் முரணாகப் பலவாறு பிறழ்ந்து கிடத்தலால், அஃது அடிகள் அருளிச்செய்த திருவாசகந் திருக்கோவையார் என்னும் நூல் களினின்றுந் திரட்டப்பட்ட மெய்ச்சான்றுகள் கொண்டே ஆராய்ந்து சிக்கறுத்து தெளிவுபடுத்தி **மாணிக்கவாசகர் வரலாறுங் காலமுமென்னும்** அடிகளது விரிந்த ஆராய்ச்சி நூலின்கண் எழுதப்பட்டிருக்கின்றது. அதனோடு மாணிக்கவாசகப் பெருமா

னது காலம் சைவசமய ஆசிரியனமார் ஏனை மூவாகரும் முற்பட்டதாலும், அதனுண்மையுணராது அவரது காலம் அம்மூவருக்கும் பிற்பட்டதென்று கூறிய சிலர் கூற்றுகள் நடுநின்று நன்காராய்ந்து காண்பார்க்குப் பொருந்தாவாய் ஒழிதலும் இதன்கண் விரித்து விளக்கப்பட்டிருக்கின்றன.

உலகத்திலுள்ள நன்மக்களின் அன்பையும் உதவியையும் பெற்று அவற்றால் திரண்ட செல்வத்தையும் கல்வியறிவையும் மனவலிமையையும் அடைந்து இம்மை மறுமைக்குரிய எல்லா இன்பங்களையுந் தாமுந் துய்த்துப் பிறரையும் துய்க்கச் செய்தற்குரிய வழிகளைத் தெள்ளிய இனிய எளிதான தனிச் செந்தமிழ் நடையில் விளக்கிக் காட்டும் அரிய தமிழ் நூல் **மனிதவசியம்.**

கட்புலனுகாத பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் கண்டுணர்தலும், தீராநோய் தீர்த்தலும், தீய பழக்கங்கள் உடையாரை அவற்றினின்று விடுவித்தலும், பின்வரும் நன்மை தீமைகளை முன் அறிதலும், மறதியை ஒழித்து நினைவை வலுப்படுத்தலும், தாம் விரும்பியவர்களைத் தம்வழிப்படுத்தலும், இறைவனருளைப்பெற்று இப்பிறவியிலேயே இன்பத்தையடைதலுங் கூறிநிற்கும் அடிகளார் அருளிய **யோக நித்திரை.**

நாகரிகத்திற் சிறந்திருந்த பழந்தமிழ்க் குடிகளாகிய வேளாளரின் இயல்புகளைப் பழைய நூல்களின் சான்றுகள் கொண்டு ஆராய்ந்து காட்டும் முகததால், தமிழர் ஆரியர் என்னும் இருபெரு வகுப்பினரின் பண்டைய வழக்கவொழுக்கங்களைத் தனித் தமிழ் நடையில் தெளிய விளக்கித் தமிழர்க்கு அறிவு தெருட்டுவது **வேளாளர் நாகரிகம்.**

ஆரியர் இந்திய நாட்டுக்குள் வரும்முன், நாகரிகத்தில் ஓங்கியிருந்த தமிழர்களின் வரலாறும், அவர்க்குட் சாதிகள் உண்டான வகையும், சாதி வேற்றுமைகளால் இப்போது அவர்கள் அடைந்திருக்குந் துன்பம் நிறைந்த நிலைமையும், அவற்றை அவர்கள் ஒழித்து ஒற்றுமையும் உயர்ச்சியும் அடைதற்குரிய வழிதுறைகளும் **சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்** எனும் தேனினுமினிய தீந்தமிழ் நூலின்கண் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

ஆங்கிலத்தில் அடிசன் என்னும் நல்லிசைப் புலவர் பெருமானார் எழுதிய தீஞ்சுவைக் கட்டுரைகள் ஆறின் இனிய தமிழாக்கம் **சிந்தனைக் கட்டுரைகள்.**

பட்டினப்பாலை என்னும் அருந்தமிழ்ச் செய்யுளிலுள்ள பல அரும்பெரும் பொருள்களை விரித்துப் பாட்டின் மெய்ப்

பொருளை நன்கு விளக்கி, நச்சினார்க்கினியர் உரை பொருந்தாமை தெளிவித்துச் செந்தமிழ் மொழிக்கு ஒரு பொன்னுரை கற்போல் திகழ்வது **பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை.**

செந்தமிழ்ச் செய்யுள் உண்மை யாராய்ச்சியினை முதன் முதல் விளக்கிய பெருமைக்குரியது **முல்லைப்பாட்டாராய்ச்சி.**

**தமிழர் மதம்**—1940, அக்டோபர், 19, 20-இல் சென்னைமா நகரிற் கூடிய அனைத்திந்திய தமிழ்மாநாட்டுக்குத் தலைவராய் அமர்ந்து ஆசிரியர் மறைமலையடிகள் நிகழ்த்திய தலைமைப் பேருரையாகும். ஆரியர் இவ்விந்திய நாட்டிட் புகுந்து கலத்தற்குமுன், எல்லாத் துறைகளிலும் நாகரிகத்திற் சிறந்தாராய் வயங்கிய தனித்தமிழ் மக்களுக்கே யுரியனவாயிருந்த இம்மை மறுமைக் கொள்கைகளைப் பண்டைத் தமிழ் நூலான தொல்காப்பியம் முதலியவைகளைக்கொண்டு தெளித்தெடுத்து விளக்கும் பேராராய்ச்சித் தனிச் செந்தமிழ் நூல். மறைமலையடிகள் சச-ஆண்டுகளாகத் தமிழ் ஆங்கில வடமொழி நூல்களில் ஆராய்ந்து கண்ட அரும்பொருள்கள் அத்தனையும் இதன்கண் அடங்கியுள்ளன.

மக்களாய்ப் பிறந்தவர்கள் தமக்குள்ள பகுத்தறிவு கொண்டு நோய் இன்றி அறிவும் இன்பமும் பெருகி நீண்ட காலம் உயிர் வாழ்தற்குரிய முறைகள், 25 ஆண்டுகளாக ஆராய்ந்து செய்து பார்த்து இனிய எளிய செந்தமிழ்நடையில் எழுதப்பட்டிருக்கின்றன **மக்கள் நூறுண்டு உயிர் வாழ்தல் எப்படி?** என்னும் அரிய நூலில்.

வடமொழியில் நல்லிசைப்புலவராய் விளங்கிய காளிதாசரின் இன்சுவை நாடகத்தின் தமிழாக்கம் **சாகுந்தல நாடகம்.** அடிகள் பரந்த வடமொழிப் புலமையையும் தமிழாக்கும் எளிமையையும் உணர்த்தும் சிறந்த நூலாகும் இது.

**தமிழர் நாகரிகம் அல்லது வேளாளர் யாவர்?**—நாகரிகத்திற் சிறந்த பழந்தமிழ்க் குடிகளாகிய வேளாளரின் இயல்புகளைப் பழைய நூல்களின் சான்றுகள் கொண்டு ஆராய்ந்து காட்டும் முகத்தால், தமிழர் ஆரியர் என்னும் இரு பெருவகுப்பினரின் பண்டைய வழக்க வொழுக்கங்களைத் தனித்தமிழ் நடையில் தெளிய விளக்குவது. தமிழ் வேத ஆரிய வேதங்களின் வேறுபாடும், சாதிப்பாகுபாட்டின் தோற்றமும் உண்மையும் இது காறும் வெளிவராத பல புது ஆராய்ச்சி முறைகளால் நன்கெடுத்துக் காட்டுவது. தமிழர் ஆரியரின் வரலாறுகளை உள்ளவாறு உணர்தற்கு இன்றியமையாதது.

**சைவசித்தாந்த ஞானபோதம்**—சைவசித்தாந்தம் என்னும் அரிய பெரிய சைவசமய ஆராய்ச்சி முடிபுகளைத் தனிச் செந்தமிழ் உரைநடையில் மிக விரிவாக ஆராய்ந்து விளக்குஞ் சிறந்த நூல். சைவ சித்தாந்த உண்மைகளை விளக்கமாகத் தெரிந்து, தம் உள்ளத்தில் ஆணித்தரமாகப் பதித்து பெறற்கரும்பயனைப் பெறுதற்கு இந்நூலினும் சிறந்த கருவி வேறு இல்லை. கடவுள் நம்பிக்கை யில்லாதவரும் இந்நூலைப் பயில்வாராயின் அந் நம்பிக்கை வரப்பெற்றுப் பெருநலம் எய்துதல் திண்ணம். அடிகளின் நாற்பதாண்டுச் சொற்பொழிவுகளிற் சில இதன் கண் அமைந்துள்ளன.

**தொலைவிலுணர்தல்**—ஒருவர் நினைக்கும் நினைவும், நினைவின் உருவங்களும், பிறர் ஒருவர் அல்லது பலர் உள்ளத்தில் தோன்றுதலும், பிறருடைய கண்களுக்கெதிரே அவை உருவமாய்த் தோன்றுதலும், அல்லது அவருடைய செவி முதலான புலன்களுக்குப் புலனுதலுமாகிய உண்மை நிகழ்ச்சிகளை உண்மையாக நிகழ்ந்த வரலாறுகளால் நன்கு விளக்கும் அரிய செந்தமிழ் நூல். இத்தகைய நூல் தமிழில் வேறெவராலும் இதுகாறும் எழுதப்படவில்லை. இந்நூல் உணர்ச்சியாலும், இந்நூலிற் சொல்லிய முறைகளைப் பழகுதலாலும் நம்மனோர் தாம் எண்ணிய நலங்களை எண்ணியவாறே பெறலாம்.

**கடவுள் நிலைக்கு மாறுன கொள்கைகள் சைவம் ஆகா**—உண்மைச் சைவக் கோட்பாடும், அதற்கு மாறுன போலிச் சைவக் கோட்பாடும் பிரித்து விளக்கும் அரிய நூல்.

**சிறுவர்க்கான செந்தமிழ்** எனும் இனிய தமிழ்நூல், வெறும் பொய்க்கதைகளை நிறைத்து, அழகில்லாக் கலப்புப் பிழைத் தமிழில் எழுதப்பட்டு உலவும் பாடநூல்கள் போலாது, சிறார்க்குஞ் சிறாரினும் தாழ்ந்த அறிவு நிலையில் நிற்குந் தமிழ்ப் பொது மக்கட்குந் தனித்தமிழறிவையும், உலக இயற்கை மக்களியற்கையிற் காணப்படும் அரும்பெரும் உண்மைகள் புதுமைகளைப் பற்றிய மெய்யறிவையுந் தருவதாகும். இனிய எளிய திருத்தமான தனித்தமிழில் எழுதப்பட்டது.

**சாகுந்தல நாடக ஆராய்ச்சி**—நாடகக் காவியம் இன்னதென்பதும், அதன் கதையமைப்பும் அதில் வரும் நாடக மாந்தரின் இயற்கையும், பிற நயங்களும் இன்னவென்பதை விளக்குவது.

**கோகிலாம்பாள் கடிதங்கள்**:—பெண்டிரும் சிறு பிள்ளைகளுங் கற்றவர்களும் படித்து இன்புறத்தக்க சிறந்த கதைநூல். காதைகள், நாடகங்கள், காவியங்களைப்பற்றிய நுண்ணிய ஆராய்ச்சி முகவுரையோடு கூடியது.

அறிவுரைக்கொத்திலுள்ள பதினெட்டுக் கட்டுரைகள் அவ்வளவும் எளிதில் அறிந்துகொள்ளத்தக்க தனித்தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. பெண்டிர் பிள்ளைகள் முதல் ஆண்டில் முதிர்ந்தார் ஈறான எல்லாருங் கட்டாயமாகத் தெரிந்து அறிவு விளங்கப் பெறுதற்குரிய சிறந்த கட்டுரைகள் அவை.

பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம் எனும் நறிய தமிழ் நூலில் செந்தமிழ் மொழியில் மிகப் பழைய நூலாய்த் திகழும் தொல்காப்பியத்திற் காணப்படுங் குறிப்புக்களைச் சான்றாகக் கொண்டு, இக்காலத்திற்கு எல்லாத் துறைகளிலும் வேண்டப்படும் எல்லாச் சீர்திருத்தங்களையும் தமிழ் முதுமக்கள் முன்னமே யுடையவராயிருந்த வரலாறுகள், தனித்தமிழ் நடையில் விளக்கப் பட்டிருக்கின்றன

பொருந்தும் உணவும் பொருந்தா உணவும் என்னும் நூல் மக்களுக்கு இசைந்த நல்லுணவு ஈதெனக் காட்டுவது.

இஃதன்றியும், அமைந்துள்ள அடிகளின் பிற தமிழ் ஆங்கில நூல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விலைமதிப்பற்ற மாணிக்கக் குவையாகும்.

அளப்பரு நூல்கள் பற்பல அடிகள் அருளியதோடமையாது கை எழுத்துப்படியாகத் தம் அருமைத் திருக்கையால் பொன்னெழுத்தோ? புனையா ஓவியப் பொறியெழுத்தே யாவரும் போற்றிப் புகழும்படியாக இருப்பனவும் பலவாம். அவை எல்லாம் நம் தமிழ் மக்கள் நற்றவப்பயனு நிற்பன.

அவையும் விரைவில் வெளிவருதல் கூடும். அடிகளார் மொழிநடையின் இனிமையும் சிறப்பும், தூய்மையும் வாய்மையும், எளிமையும் தெளிவும், திண்மையும் வண்மையும், நுண்மையும் தனிமையும், அகலமும் ஆழமும், நம் தமிழ்நாடெங்கும் ஆண் பெண், பெரியார் சிறியார், எல்லார் உளத்திலும் உரையிலுப், எழுத்திலும் வழுத்திலும், கனவிலும் நனவிலும் ஓவாது பயிலுவதே அன்னார்க்குச் செய்யும் அருச்சனை வழிபாடாகும். அம்மட்டோ அடிகளார் நூன்முறைகளை மறையோதுமாறு மாந்தர் ஓரிடத்து ஒருங்குகூடி ஓதிவருதலும் இன்றியமையாக் கடப்பாடாக் கொள்ளுதல்வேண்டும். அஃதொன்றே தமிழ் ந்னிலையெய்தி நாடும் பண்பும் மக்களும் ஓங்கிச் சிறப்புற்று வாழும் செந்நெறியாகும்.

—க. சொ.

# அடிகளாரின் சில கருத்துக்கள்

## கடவுள் நிலை

அருவாய் அறிவாய் இன்பமாய் யாண்டும் பரந்துநிற்கும் முழுமுதற் பெரும்பொருளைக் கறைகெழுமிய அறிவும், முறை தழுவாச் செயலுமுடைய உயிர்கள் அறிந்தடைதற்கு இருதிறப் பட்ட நிலைகளிருக்கின்றன. அவை அறிவுநிலை உணர்வுநிலை என்பனவாம். இவற்றுள், அறிவுநிலை என்பது, காணப்பட்ட வுருவான இவ்வுலகியற் பொருள்களின் வியத்தகு அமைதி களைக் கண்டு இவைதம்மை இங்ஙனம் அமைத்தவனான பேரறி வும் பேராற்றலுமுடைய முதல்வன் ஒருவன் உளன் என்று அதன் இருப்புமட்டும் அறிவிப்பதாம். மற்று அம்முதல்வனின் உண்மைத் தன்மையோ அவ்வறிவுக்கு ஒருசிறிதாயினும் புலப்படமாட்டாதாம். உயிர்களின் அறிவு உலகியற் பொருள் களை ஒற்றுமைப்பட்டு நின்று அறிதற்குக் கருவிகளான மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் புறக்கருவிகளைந்தானும், மனம், உள்ளம், அறிவு, முனைப்பு என்னும் அகக்கருவிகள் நான்கானும் நடைபெறுவதொன்றாம். அகம் புறம் என்னும் இக்கருவிகளின் துணைகொண்டன்றி அவ்வறிவு வேறு தனித்து நடைபெறக் காணாமையானும், அங்ஙனம் நடைபெறுமிடத்தும் அவ்வறிவாற் பற்றப்படுவன மண், புனல், அனல், கால், விசும்பு என்றற்றொடக்கத்து ஐம்பெரு முதற்பொருள்களும், அவற்றின் சேர்க்கையாற் பிறந்த பொருட்டன்மைகளுமேயன்றிப் பிறி தின்மையானும், முழுமுதற் பெரும்பொருளான கடவுள் இவ்வாறு அறியப்பட்ட பொருள்களுள் ஒன்றன்றாய் இவற்றிற் கெல்லாம் அப்பாற்பட்டதாய் விளங்குவதொன்றாகலானும், அவ்வறிவுக்கு அம்முதற்பொருள் ஒரு சிறிதாயினும் புலப்படற் பாலதொன்றாய் நிற்றல் பெரிதும் பொருத்தமாவதேயாம். க

## சிவன்

சிவன் என்னும் பெயர் மாயையைக் கடந்து நிற்கும் முழு முதற் கடவுட்குரிய சிறப்புப் பெயராகும். இதனாலன்றே அயல நாட்டவரிற் பழைய நாகரிக மக்களாகிய எபிரேயரும் எல்லாம் வல்ல இறைவனைச் 'சிகோவா' என்றும், கிரேக்கர் சியூஸ் (Zeus) என்றும், உரோமர் 'சுபிதர்' (Jupiter) என்றும் தொன்றுதொட்டு வழங்கிவருகின்றனர். இப்பெயர்களெல்லாம் அம்மக்கள் தத்தம் மொழிகளிற் 'சிவன்' என்னும் பெயரைத் திரித்துப் பேசினமையாற் பிறந்தனவாகும். உ

## தமிழ் நிலை

இக்காலத்துள்ளவர்களோ, அழிவில் பெருஞ்செல்வமாகிய தமிழ்க்கல்வியைப் பாராட்டாதும், தமிழ் கற்றவர்களைப் பாது

காவாதும், தமது செல்வத்தையே தெய்வமாகக் கருதி அதனை மேன்மேற் பெருக்குதற்கும், தம்முடம்போடு அழிந்து மாய்வன வாகிய அரசியல் நிலைகளும் போலிப்பட்டங்களும் அடைதற் கும், தமது நினைவை அல்லும் பகலும் ஈடுபடுத்தி அதன்கண் மட்டுமே முயற்சியுடையராய் முனைந்து நிற்கின்றனர். இதனால் தமிழ்க்கல்வி வளஞ்சுருங்கி வருவதோடு, தமிழ் கற்ற அறிஞர் களும் தமது வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் வருவாய் இன்றி மிடிப்பட்டுத் துன்புறுகின்றனர். நந்தமிழ் நாட்டவர்கள் தமது தாய்மொழியை நிரம்பக் கற்றுத் தேர்ச்சிபெறுதற்கு இடனின் றித் தத்தளிக்கையில், நம் செல்வர்கள் அயல்நாட்டு மொழி யாகிய ஆங்கிலத்தின் பயிற்சி மிகுதற்கும், ஆங்கிலக் கல்விச் சாலைகள், வடமொழிக் கல்லூரிகள், இந்திமொழிக் கல்லூரிகள் நாட்டுதற்கும் பொருளுதவி செய்கின்றனர். ௩

## அறம்

இம்மை இன்பம் விழைந்து தாம் காதலன்பு பாராட்டிய மனைவி மக்களோடொருங்கிருந்து நடாத்திய அன்பு வாழ்க்கை யும், மறுமையின்பம் விழைந்து மனைவி மக்கள் தமக்குத் தொண்டுசெய்ய இம்மை முயற்சியைவிட்டு இறைவன் றிருவரு ளிற் றமது உணர்வினைத் தோய்வித்திருக்கும் தவவாழ்க்கையும் ஓர் அறத்தினுள்ளேயே அமைந்த இருநிலைகளாகுமல்லாமல், அவ்விரண்டும் ஒன்றோடொன்று மாறுபட்டன ஆகா. ௪

## அறமும் மறமும்

ஒருவன் தான்பெற்ற இன்பத்தை இவ்வையகத்துள்ள எல்லா உயிர்களும் பெறுதல் வேண்டுமென விழைந்து, அதற் கேற்ப முயலும் முயற்சியே அறம் எனப்படும். பிறவுயிரின் இன்பத்தைக் கருதாது செய்யும் முயற்சிகளெல்லாம் அறத் துக்கு மாறான மறமெனப்படும். ௫

## தீண்டாமை

தமிழ்நாட்டவரிற் பெரும்பாலாரைத் தீண்டாதார் என ஒதுக்கிவைக்கும் சாதிச்செருக்கர்கள், அத் தீண்டாதவர்பால் எல்லாவகையான உதவிகளையும் பெற்றுக்கொண்டு, மூன்று நான்கு வேளை கொழுக்க விலாப்புடைக்கத் தின்று உயிர் வாழ்ந்து வருபவராய்த், தமக்கு அவ்வுதவிகளைச்செய்யும் அவ் வேழை எளியவர்களுக்கு ஒருவேளை நல்லுணவுகூடக் கொடா மல் அவர்கள் பட்டினியும் பசியுமாய்க்கிடந்து துன்புறச் செய்வ துடன், அவர்கள் கடவுளை வணங்குதற்குக் கோயில்களினுள்ளே வருதலும் ஆகாதென்று கொடுமை செய்வதும் தெய்வத்துக்கு அடுக்குமா? ௬

# செய்திகளும் குறிப்புகளும்

## சென்னையில் மாபெரும் நினைவுக்கூட்டம் :

மறைந்த மறைமலையடிகளார்க்கு கடந்த மாதம் 17-ம் நாள் ஞாயிறன்று, சென்னையில் அரண்மனைக்காரத் தெருவிலுள்ள கோகலே மன்றத்தில் மாலை 4-30-க்கு மாபெரும் நினைவுக்கூட்டம் தொடங்கப் பெற்றது. அவ்வமயம் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப் பொறுப்பாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள், சென்னை சட்ட அவைத்தலைவர் ஜே. சிவசண்முகம்பிள்ளை யவர்களைத் தலைமைதாங்கிக் கூட்டத்தை நடத்துமாறு கேட்டுக்கொண்டனர். தலைவர் முன்னுரைக்குப் பின் மு. வரதராசனார், கல்கி, அ. திருஞானசம்பந்தம், வ. பா. தாமரைக் கண்ணி அம்மையார், ரா. பி. சேதுப் பிள்ளை, க. வெள்ளைவாரணனார், டி. கே. சண்முகம், முருகேச முதலியார், நடேச முதலியார், அன்பு கணபதி, கிருட்டினவேணி அம்மையார், தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், மறைத் திருநாவுக்கரசு, ஆடலரசு முதலிய அறிஞர் அடிகளாரைப்பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். புத்தனேரி. ரா. சுப்பிரமணியம் அடிகள்மீது இரங்கற் பாடல்கள் பாடினர்.

இறுதியில் தமிழ்ப் பெருந்தகையின் மறைவுக்கு வருத்தம் தெரிவித்தும், அவர் குடும்பத்திற்குக் கூட்டத்தின் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டும் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

பின்னர் அடிகளார்க்கு நினைவுச் சின்னமமைக்க, ஜே. சிவசண்முகம் பிள்ளை அவர்களைத் தலைவராகவும், வ. சுப்பையா பிள்ளையவர்களைச் செயலாளராகவும் கொண்ட ஒரு நினைவுச் சின்ன அமைப்புக் குழு தோற்றுவிக்கப்பட்டது.

தமிழ் மக்கள் தம்மாலியன்ற அளவு பொருளுதவி, மறைந்த தமிழ்ப் பெருந்தகையின் புகழ் என்றும் நிலைத்துநிற்கச் செய்வார்களாக. அன்னார்க்குத் தமிழகம் செய்யவேண்டிய கடமை, அவர்தம் புகழை நினைவுச் சின்னம் அமைப்பதோடல்லாமல் உலகெங்கும் பரவச்செய்வதேயாகும் என்பதை ஒவ்வொரு தமிழரும் உணர்வார்களாக.

## கலியாணசுந்தர ஐயர் காலமானார் :

திரு. சா. கலியாணசுந்தர ஐயர் தம் எழுபதாம் அகவைக்கண் இம் மண்ணுலகை நீத்தமை யாவர்க்கும் மிக்க வருத்தத்தைத் தருவதொன்றாம். இவர்கள் தந்தையார் பழந்தமிழ் நூல்களைப் பதிப்பித்துப் பேறும் புகழும் பட்டமும் பெருமதிப்பும் பெற்ற திரு. டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரவர்களாவர். இவர்களும் அவர்கள் பதிப்பித்த நூல்களை மீட்டும்மீட்டும் பதிப்பித்துத் தமிழோம்பி வந்த சிறந்த தமிழறிஞர்.

இவர்களின்னுயிர் இறைவனடியி லின்புற்றிருக்குமாறருளப் அன்னவனைப் பன்முறையும் பணிகின்றாம்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



பேரறிஞர் பெர்னாட்ஷா

*தோற்றம்:*
**1856 ஜூலை 26.**

*மறைவு:*
**1950 நவம்பர் 2**




சிலம்பு ௨௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௧, ஐப்பசி
நவம்பர், 1950 | பரல் ௩

# அறிஞர் திரு. ஜார்ஜ் பெர்னுட் ஷா

[சித்தாந்த பண்டிதர், புலவர் ப. இராமநாத பிள்ளை]

இந்த நூற்றுண்டில் மிகப்பெரும் பெயரும், புகழும், பெரும் பொருளும் பெற்றுத் திகழ்ந்தவர் அறிஞர் பெர்னுட் ஷா ஆவர். அவர் இயற்றிய சிறந்த நாடகங்கள் ஐம்பதுக்கு மேலாகும். அந் நாடகங்கள் அவர் வாழ்நாளிலேயே உலகில் பல பாகங்களிலும் கற்றோர்களாலும் மற்றோர்களாலும் விழைவுடன் ஏற்றுக் கொண்டாடப்பெற்றன — பெறுகின்றன — பெறும். நாடகங் களைக் காண்பவர் கருத்து விழுமிய நோக்கம் பெற்று விழிப் பெய்தும். முன்னேற்ற வழியில் தன்னேரின்றித் தழைத்துச் செல்லும். ஆக்கப் பணியில் மக்கட்குப் பேரூக்கம் ஊட்டும்.

நகைச்சுவைகளில் ஈடும் எடுப்புமற்றுத் திகழ்கின்றன எனினும் கருத்துக்கள் திட்பநுட்பஞ் செறிந்தன. வல்விரைவில் மக்கள் உள்ளத்தை மாற்றித் தம் வழியில் ஈர்க்கும் திறத்தன. பழமையென்று ஆராயாது கிழமை கொண்டாடி அப்படியே ஏற்பதும், புதுமையென்று பொருளுணர்வின்றிப் புறக்கணிப் பதும் அறிஞர் ஷா விடம் காணமுடியா. பழமையின்கணுள்ள மூடப் பழக்கவழக்கங்களை அஞ்சாது ஒதுக்கித் தள்ளுவர். புதுமையின்கண் காணும் பொருந்தாதன போக்கிப் பொருந்து வனவேகொள்ளுவர்.

அவர் மனச் சான்றுக்கு மாறுக எழுதவோ, சொல்லவோ, நடக்கவோ செய்திலர். 'தன்நெஞ்சறியத்' தாங்கண்ட உண்மை களை எவர்க்கும் அஞ்சாது எடுத்துக்கூறும் வன்மையர். உழைப் பின் பயனும் இன்பமும் ஓயாது உழைப்பதே என்னும் உயரிய நோக்க உறுதிப்பாடுடையர். வேறு ஊதியமோ இன்பமோ விழையாத இயல்பினர்.

"இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்." —திருக்குறள், சுகரு.

என்னும் தமிழ்மறையின் மெய்ம்மைக்கு எடுத்துக்காட்டாவர். மேலும், உழைப்பின் களைப்பே உண்மையின்பம் எனக்கொண்டு ஒழுகும் ஒண்மையர்.

செல்வ வறுமைகளால் களிப்போ, கவற்சியோ ஒரு சிறிதும் உளங்கொளாச் செருக்கினர். தம்மைத்தாமே பெரியவ ரெனக் கூறிக்கொள்ளுந்தகையினர். தம்மைப் பேரறிவினர் எனப் பாராட்டிக்கொள்வதில் பெரு வேட்கையுமுடையர். ஒருவர் தம்பாலுள்ள பொன்னும் மணியும் பொருவில் பல் அணி யும் நெல்லும் பல்பொருளும் இத்தகைய, இன்ன மதிப்பின என்று கூறிக்கொள்வதை எவரும் குறையாகக் கருதவில்லை. மருத்துவரும் வழக்கறிஞராகிய மன்முடியும் தம் பெருமையும் அதனால் தங்களுக்கு வேண்டும்பொருள்களும் பாராட்டிக் கொள்வதில் மாறுகொள்வார் எவருமிலர். அலுவலாளர்களும் அரசியல் முதன்மையரும் வினைவலபாங்கரும் பிறரும் தம் பீடும் பொருளும் பெரிதெடுத்துக் கிளந்துரைப்பவும் ஏற்றுக்கொள் கின்றனரன்றோ? இவைபோலவே இயலிசை நாடகப்புலமை வல்லுநரும் தம்மைப் புகழ்ந்து நருக்கிப் பேசுதலும் சால் புடைத்தேயாம். இவ்வுண்மை அரும்பெரும் செந்தமிழ் அரசி யல் மறைநூலாம் புறநானூற்றின்கண் விழைவுவிடுத்த விழுமிய வுள்ளத்து வேளாண் மிகுசெல்வர், கோவூர்கிழார் என்னும் புலவர் பெருமானார் பாடிய பொருண்மொழியாலும் காணலாம். அது,

"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ரு ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே, திறப்பட
நண்ணார் நாண வண்ணாந் தேகி
ஆங்கினி தொழுகி னல்லது ஓங்குபுகழ்
க0 மண்ணாள் செல்வ மெய்திய
நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே." என்பதாம். —புறம், சஎ.

இப்புனையா ஒவியப் பொருண்மொழிப் பாட்டு அறிஞர் ஷா என்னும் துரை மகனார் வரலாற்றுடன் பெரிதும் ஒத்துத் திகழ்வது உய்த்துணர்வார்க்கெல்லாம் உள்ளங்கை நெல்லி யெனப் பொள்ளெனப் புலனாம்.

இப்புலவர் பெருமான்பால் புகழும் இகழும் ஒப்பக்கொள் ளும் செப்பம் இருந்தது. குற்றம் எவர்பாலுளதெனினும் மறை

யாது சுற்றமும் துணையும் நற்றிறம் படர்தற்காம் நடுக்கெய்த நகைச்சுவைபட நன்கெடுத்து மொழிவர்.
எடுத்துக்காட்டாக :

"என் தந்தை குடிப்பதில் எவ்வளவு வல்லவரோ அவ்வளவு உழைப்பதில் வல்லவன் நான்."

"இஸிடோரா டங்கன்" என்று புகழ்பெற்ற அழகி ஒருத்தி இருந்தாள். அவள் ஒருமுறை ஷாவைக் கண்டபோது, தான் அழகில் சிறந்திருப்பதாலும், ஷா அறிவில் சிறந்திருப்பதாலும் இருவரும் மணந்தால் அழகிலும் அறிவிலும் இணையற்ற குழந்தை பிறக்கும் என்று கூறினளாம். அதற்கு உடனே ஷா, "ஆனல், என்னுடைய அழகும் உன்னுடைய அறிவும் அந்தக் குழந்தைக்கு அமைந்துவிட்டால் என் செய்வது?" என்று கேட்டுத் திணற வைத்தாராம்.

"ஏன் குடியை வெறுக்கின்றீர்கள்?" என்பதற்கு விடையாக ஷா கூறியது அவருடைய திறனைக் காட்டுவதாகும். "என் குடும்பத்தில் இருந்த முன்னோர் என்போல் பலருடைய பங்குகளையும் சேர்த்துத் தாங்களே குடித்துவிட்டிருக்கிறார்கள். ஆகையால் எனக்கு மதுவில் பங்கு இல்லாமல் போயிற்று" என்பதே.

(அறிஞர் பெர்னட் ஷா.—டாக்டர். மு. வ.)

ஆகுலம் (ஆடம்பரம்) அற்ற வாழ்க்கையர். தம்மை வறண்டிருந்தபோதும் திரண்டிருந்தபோதும் பயனற்ற வீண் ஆகுலப் பொருள்களைக் கண்டும் தாம் வாங்காது வீடு திரும்புவதே தம் வழக்கமென்று பெருமையுடன் பகர்வர். சோம்பல் வாழ்க்கை வாழும் செல்வர்போல் சில பகல் கழித்துப் பார்த்து அதனல் தமக்குத் தோன்றிய துன்பநிலையும் தற்கொலைக்கொப்பான வெறுப்பும் சொல்லொண்ணுதன என்றுரைப்பர்.

அளவிலாப் பெருஞ்செல்வம் தமக்கும் தம் அருமை மனைவியார்க்கும் வாய்த்திருந்தும் தாம் மிக்க எளிய வாழ்க்கை நடத்தி உலகினர் இவ்வாறு நடப்பதே உண்மையும் ஒண்மையும் வாய்ந்த உறுதிவாழ்க்கையும், பிறர்க்கு உதவாமலுதவும் ஒப்புரவும், உயிராற்றலாம் ஒரு பெரும் பொருளின்வழி ஒழுகியுய்வதற்காம் கடப்பாடும் என்று நாட்டியவர்.

"தம் அறிவாற்றலால் உலகத்தைக் கலக்கும் வகையில் ிகண்ட ஷா, தனிப்பட்ட முறையில் எளியவராகவும் இனியவராகவும் அமைதியானவராகவும் மென்மையானவராகவும் விளங்குகின்றார். அவர் உண்ணும் உணவு, உடுக்கும்

உடை முதலியவற்றில் எளிமையும் விளங்குகின்றது; புதுமையும் விளங்குகின்றது. அவர் தம் உடலில் சோப்பும் தேய்த்துக் கொள்வதில்லை உணவில் எந்தவகையிலும் புலால் சேர்ப்பதே இல்லை. காய்கனிகளும் ரொட்டியுமே அவருடைய வழக்கமான உணவு தம் சொந்தத் தோட்டத்துக் காய்களையே பெரும் பாலும் உணவாகக்கொள்கின்றார். சுருட்டு முதலிய புகைகளை அறவே வெறுப்பவர் அவர். மதுவகைகளைத் தொடுவதே இல்லை. புட்டிகளில் அடைத்துவரும் பழச்சாறுகளையும் அவர் பருகுவதில்லை. அவற்றில் மது கலக்காவிட்டாலும், இரசாயனப் பொருள்கள் கலந்துள்ளன என்று விலக்கிவிடுகின்றார்."—(டாக்டர் மு. வ.)

மரக்கறி உணவே மனத்தெளிவு வாய்ந்த மாபெரும் புலவர்கட்கும் மெய்யுணர்வு கைவந்த தவத்திருவினர்க்கும் வாய்ப்புடைத்தாம் தூய்மையும் துப்பும் ஒருங்கமைந்த செப்பமான உணவென்பது அவர்தம் கருத்து. அம்மட்டோ! நீண்டநேரம் களைப்பின்றி உழைக்கவல்லவர்கள் மரக்கறியுணவு உண்ணும் மாண்பினரென்றும், அதனால் களைப்பின்றி நெடுநேரம் மற்போர் செய்வதற்கும் தக்கவரென்றும் "நாக்கடிப்பாக வாய்ப்பறை யறைந்து" நாளும் சாற்று நல்லார்.

தம்மாலியலும் வேலைகளைத் தாமே விரும்பிச் செய்வதல்லால் ஏவலர்களைக்கொண்டு செய்விப்பது என்ஞான்றுமின்று. கடிதங்களை எல்லாம் தாமே எழுதியும், அஞ்சலில் கொண்டு சேர்த்தும் வருவது வழக்கம். நாளும் உடற்பயிற்சி செய்வர். உடற்பயிற்சியுள்ளும் ஒவ்வொரு நாளும் தவறாமல் ஆறு கல் தொலைவு நடப்பார். அகவை தொண்ணூறுக்கு மேலும் ஒருவர் ஆறு கல் தொலைவு நடப்பதென்றால் எத்துணை வியத்தகு செயல் நோக்குமின்! உடல் நலமும் உறுதியும் கேடுறின் அறிவும் ஆற்றலும் கேடுறும். அதனால், உடலோம்புதலே அறிவாற்றல் நிலைப்புக்கும் வளர்ச்சிக்கும் தக்க வாயிலாகும் என்பது அறிஞர் ஷாவின் ஆழ்ந்த கருத்து. இசையிலும் வல்லுநர். பொதுநலத்தொண்டில் மிக்க ஆர்வம் உடையவர். பெண்கள் முன்னேற்றத்தில் பெருவிருப்புடையவர். உயிராற்றல் பெண்ணின் தாய்மை வடிவுகொண்டு ஆண்களைப் படைத்து வளர்த்து ஆட்கொண்டு வாழ்விக்கின்றது. எல்லாத்துறையிலும் பெண்கள் செம்பாகம்பெற்றுத் திகழுங்காலமே நாட்டின் நல்வாழ்வுக் காலமாகும் என்பது அறிஞர் ஷாவின் ஆழ்ந்த எண்ணம்.

அறிஞர் ஷா "ஓதுவது ஒழியா" ஒருவர். உண்ணும் போதும் புத்தகமும் கையுமாகவே இருப்பர். ஒன்பது யாண்டு

மிக்க வறுமையுடன் உடையும் ஒன்று நடையும் ஒன்று என்று இருக்கநேர்ந்த காலத்தும் உள்ளக்கவலை ஒருசிறிதுமின்றி ஓதுவதும் எழுதுவதும் உழைப்பதும் ஒழியாதவர். முதற்கண் ஐந்தாண்டுகளில் ஐந்து நாவல்கள் எழுதி முடித்தனர். எவ்வாறெனில், நாடொறும் இலண்டன் பொருட்காட்சி நூல்நிலையத்தில் படிப்பதும், ஐவைந்து பக்கம் தவறாமல் எழுதி முடிப்பதும் அவர்தம் பெருங்கடைமைகளாகக் கொண்டமையால் கல்லூரியில் கற்றது சிறிதேயாயினும் தம் நுண்மாண் நுழைபுலத்தால் இடைவிடாதுழைத்து ஈட்டிய இயற்கைக் கல்வி எண்ணிலாதன.

அறிஞர் ஷா சமயப்பற்றும் வழிபாடும் மிக்குடையவர். சமயத்தின் பேரால் கொள்ளப்படும் மூடப் பழக்கங்களைக் கடிந்தொதுக்குபவர். அதேநேரத்துச் சமயம் வேண்டாமென்று கூறித் தருக்கித் திரியும் பாழ்ங் கொள்கைகளையும் கண்டிப்பவர். "சமய நெறியால் வாழ்க்கையும் ஆட்சியும் செம்மையுறும்" என்னும் சீரிய நோக்கமுடையவர். "கொலை கடிந்து அறத்தினர் வாழ்வர்." இவ்வுண்மையை அவர் தாம் இயற்றிய 'ஆன்ட்ரகில்ஸும் சிங்கமும்' என்னும் சிறந்த நாடகத்துள் "வேட்டை, விளையாட்டு, போர், வாணிகம் முதலிய எக்காரணம் பற்றியும் கொலை கூடாது,' என்று வற்புறுத்துக் கூறியுள்ளார்.

இசைக்கலையில் உள்ளது போன்று ஓவியக்கலையிலும் சொல்லரும் திறலர். தாமியற்றும் நாடகங்களுள் சிலவற்றிற்குத் தாமே ஓவியம் வரைந்துள்ளார். தம் அருமைத் தாயாரின் முழு உருவ ஓவியம் வரைந்து வைத்துள்ளனர்.

1926-ல் அறிஞர் ஷா அவர்களுக்கு இலக்கிய நோபல் பரிசு கிடைத்தது. பரிசுப்பொருள் ஏழாயிரம் பவுனையும் இலக்கியத் தொண்டிற்கே இன்புடன் உவந்து ஈந்துள்ளார்.

இப் புலவர் பெருமான் அயர்லாந்தின் தலைநகர் டப்ளினில் 1856, சூலை—26-ல் பிறந்தனர். ஜார்ஜ் பெர்னட் ஷா என்பது அவர் திருப்பெயர். அவரின் தந்தையார் குடிப்பழக்கமுள்ளவர். தாயார் மிகவும் நல்லவர். தந்தையாரின் குடிப்பழக்கமே தாயாரையும் பிரித்துவிட்டது. தம்முடன் பிறந்தார் பெண்கள் இருவர். தந்தையாரின் பொருந்தாச் செயலால் அரும்பெரும் குடும்பம் மதிப்புடன் பொருந்தி வாழ முடியவில்லை. தம் மாண்பு மிக்க தாயார்க்கு இசைப்பயிற்சியும் திறமையும் இருந்தன. அவ்வம்மையாரின் வருவாயே குடும்பத்தை வடுவின்றி வாழ வழிசெய்தது.

தாயார் 1872-ம் ஆண்டில் தம்மிரு பெண் மக்களுடன் இலண்டன்மாநகரம் வந்து குடியேறினர். தாயார்பால் தாங் கற்ற இசையைத் தாமே பயின்று வளர்த்தனர். கல்லூரிப் படிப்புக்கு வழியில்லாமற் போகவே, தம் கூர்த்த மதியால் ஆங்கில நூல்களையும் செய்யுட்களையும் கற்று வல்லரானார். கற்றவற்றுள் ஷெல்லி ஒருவரே அவர் தம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவர். ஒரு குறுநில மன்னர்பால் நன்மதிப்புடன் கணக்கராக வேலை பார்த்தனர். திறமையால் வேலையும் படியும் உயர்ந்தன. எனினும், 1876-ம் ஆண்டில் அத்தொழிலை விட்டகன்றனர்.

1876-ல் இலண்டன்மா நகர் வந்து சேர்ந்தார். முதன் முதலில் இசைக்கலைஞர் ஒருவர்க்குத் துணையாளாகப் பணி புரிந்தனர். 1881-ல் தேர்தல் நடந்தபோது குடவோலை (ஓட்டு) எண்ணும் அலுவலிலமர்ந்தனர். அவ்வேலை இரண்டொரு நாட்களே. 1885-வரை வேலையற்றவராக விளங்கித் தாயின் உதவியால் காலங் கழித்தனர். 1885-ம் ஆண்டு முதல் எழுத்தாளராகத் திகழ்ந்தார். அவ்வாண்டில் நூற்றுப்பன்னிரண்டு பவுன் வருவாய் வந்தது. அது முதல் 1914-18. உலகப்போர் வரையில் பணமுட்டின்றி வாழ்ந்தார். போர் முடிந்தபின் வருவாய் பெருகி எல்லையின்றிக் குவிவதாயிற்று.

அறிஞர் பெர்னாட் ஷாவின் நாற்பதாம் அகவையில் (1898) அயர்லாந்தின் பெரும்பொருள்நிலக்கிழார் ஒருவரின் திருமகளாரைத் திருமணம் புரிந்துகொண்டனர். அவ்வம்மையார் அறிவும் அடக்கமும் அமைதியும் அன்பும் அழகும் ஓர் உரு வெடுத்தனையவர். பொறையும் நிறையும் புகழும் பூணெனப் பூண்டவர். பெரும்பொருட்கு உரியவர். அவர் தம் பொருள் மதிப்பு ஒருநூறாயிரத்து ஐம்பதினாயிரம் ஸ்டர்லிங் ஆகும். அதன் வருவாய் ஆண்டொன்றுக்கு இருபத்தையாயிரம் ஸ்டர்லிங்காகும். அதற்குக் கட்டவேண்டிய வரி இருபதினாயிரம் ஸ்டர்லிங்காகும். அவ்வம்மையார் திருப்பெயர் சார்லட் பிரான்சிஸ் டவுன்ஷென் என்ப. மக்கட்பேறொன்றொழிய மற்றெல்லாப் பேறும் பெற்றுச் சிறந்தவர். அவ்வம்மையார் 1943-ல் பெரும் பிறிதுறலாய்த் துறக்கமுற்றனர்.

அதுமுதல் ஷா, இலண்டன்மாநகரிலிருந்து முப்பதுகல் தொலைவிலுள்ள செயின்ட் அயாட்லாரென்ஸ் என்னும் சிற்றூரில் வாழ்ந்துவந்தனர். கவலையின்றித் தம் வேலைகளைத் தாமே குறிக்கொண்டு நோக்கி நெறிப்படச் செய்துவந்தனர். கூர்ந லறம் என்னும் கொள்கையில் தினைத்தவர். இறப்பிற்கஞ்சாச்

சிறப்பினர். இலண்டன்மாநகர்த் தெருவில் மழையெனக் குண்டு வீழும்பொழுதும் அஞ்சா நெஞ்சுடன் உலவிச் சென்ற ஆண்மையர்

சென்ற செப்டெம்பர்த் திங்களில் இடறி வீழ்ந்து காலில் அறுவை மருத்துவம் செய்யப்பெற்றனர். காலும் குணப்பட்டு வந்தது. 'இதில் உய்வேனேல் நெடுவாழ்வு எய்துவேன்' என இசைத்தனர். உலகு நடுங்க, உற்றுர் வருந்த, புலவர் புலம்ப, எழுத்தாளர் ஏங்க, கூத்தர் குலைய, ஆசிரியர் அலற நவம்பர் 2-ம் நாள் தம் இல்லத்தில் பொய்யுடல் நீத்து மெய்யுடல் பெற்று மேலுலகெய்தினர்.

அறிஞர் ஷாவின் பொன்னுடல் திங்களன்று இலண்டன்மா நகரில் எரியூட்டப்பட்டது. பிரித்தானியப் பெருமக்களே வழக்கமாக அடக்கம் செய்யப்படும் வெஸ்ட் மின்ஸ்டர் அபேயில் அல்லது டப்ளினிலுள்ள செயிண்ட் பாட்டிரிக்ஸில் அவர்தம் என்பும் சாம்பரும் அடக்கம் செய்யப்பெறும். அத்துடன் அவர்தம் அருமை மனைவியர் என்பும் சாம்பரும் சேர்த்தே அடக்கம் செய்யப்பெறும்.

அவர்தம் பெரும்பொருட் குவியல் உடைமைகள் இரண்டரை இலட்ச முதல் ஏழரை இலட்சம் பவுன் ஆகும். இன்னும் ஐம்பது ஆண்டுகள் வரை அவர்தம் நூற்களுக்குப் பங்கு ஊதியம் வந்துகொண்டிருக்கும். இவைகட்கெல்லாம் இறுதி முறி (Will) ஒன்று எழுதி வைத்துள்ளனர். அதன் விளக்கம் இனிமேற்றுன் வெளிவரும். அதில் அவருக்குத் தொண்டு செய்த பணியாளர்க்குத தகுந்த நன்கொடை அளிக்கப்பெற்றிருக்குமெனவும் தெரிகிறது.

அவர்தம் பிரிவுக்குக் கையற்றும் பரிவுகூறுப் பெருமக்கள் எவரும் இலர். அவருட் சிறந்தோர் ராஷ்ட்ரபதி ராசேந்திர பிரசாத், முதலமைச்சர் நேருஜி முதலானவர்களாவர். நம்முடைய ஆழ்ந்த பரிவும் அறிஞர் ஷாவுக்கு உரியதாகுக. அவர்தம் ஆவி பேரா இயற்கைபெற்று என்று மின்புறுக. அவர்தம் நூல்கள் நின்று நிலவி இளைஞர்கட்கும் முதியவர்கட்கும் எல்லாத் துறைகளிலும் ஊக்கமும் ஆக்கமும் அளித்து அவர்தம் உட்கோளாகவுள்ள உலக ஒருமை நோக்குடன் வாழ்வளித்து வாழ்வனவாக.

# அப்பர் அச்சக மேலாளர் மறைவு

திரு. சி. மு. கோவிந்தராச முதலியாரவர்கள் 'அப்பர் அச்சக' மேலாளராவர். இவர்கள் திருத்தந்தையார் சிறுமணவூர் முனிசாமி முதலியாரவர்களாவர். அவர்கள் 'சிவகாமி அச்சுக்கூடம்' ஒன்று நிறுவிச் செந்தமிழும் சிவநெறியும் சிறக்க அரும்பெருந் தொண்டாற்றினர். அடியார்க்கு அன்புடன் அமுதூட்டி இன்புறும் இயல்பினர். தந்தையார் சிவத்தொண்டுக்குக் கருத்தொத்த சிலராய்த் தாயாரும் அமைந்திருந்தனர். தந்தையார் செய்யுளாலும் உரைநடையாலும் பல நூல் இயற்றி வெளிப்படுத்தியுள்ளனர்.



சி. மு. கோவிந்தராச முதலியார்
மேலாளர்,
அப்பர் அச்சகம், சென்னை.

அந்நாட்களில் திரு. முதலியாரவர்களும் உடனிருந்து உழைத்து வந்தனர். அதனால், இவர்களுக்கும் தனித்தமிழ்ப் பற்றும் சிவநெறிப்பற்றும் இயல்பாகவே அமைந்துள்ளன. அந்நாள் தொட்டே அச்சக உழைப்பாளர்களாக உழைத்து வந்தனர். எல்லாரிடமும் அன்பும் நண்பும் பூண்டொழுகினர். உள்ளத்தூய்மையின் உறுப்பாக உடலும் உடையும் எந்நேரமும் தூய்மையுடனே காணப்படுவர். இசையிலும் வல்லவர். திருமுறைத் திருப்பாட்டுகளைத் தம் இனிய குரலில் இன்னிசையுடன் ஓதுங்கால் எல்லாரும் உருகி இன்புறுவர்.

உழைப்பாளிகளுடன் தாமும் ஓர் உழைப்பாளியாக உழைத்துவந்த ஒண்மையர். அதனால் உழைப்பாளிகள் அனைவரும் முதலியாரவர்களைப் பெற்றோரினும் மிக மதித்துப் பேணி உழைத்து ஒழுகிவந்தனர். காலமல்லாக் காலமாகிய தம் ஐம்பத்திரண்டாம் ஆண்டில் சின்னாள் உற்ற சிறுபிணியால் தம் மில்லத்தில் 31-10-50-ல் இறையடி எய்தினர். அவர்கள் ஆவி என்றும் இன்புறுக.

# அந்தணன் புலவன்

[புலவர், சி. சுப்பிரமணியன், கோவை.]

சேயோன் மேய மைவரை யுலகைச் சிறக்கப்பாடி, ஏழை யரையும், ஏந்தலரையும் இன்புறுத்தும் எழிற்புலவராயமைந்து, உலகம் போற்றும் பாரியின் உயிர்த்துணைவராயிருந்து, "குறிஞ்சிக் கபிலன்" என்னும் பெரும் பெயரினைப்பெற்ற வாதவூரரே ஈண்டு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்படுவார். இவரைச் சிலர் அந்தண வருணத்தினரென அறைவர். எதுகுறித் தோவெனின் (புறம் கஉ௬.) "புலனழுக் கற்ற வந்த ணாளன்" என்னும் நப்பசலையார் கூற்றும், (புறம். உ00). "யானே பரிசிலன் மன்னும் அந்த ணாளன்," (புறம் உ0க.) "அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே" எனும் அவர் கூற்றுங் குறித் தென்க.

உண்மையில் சங்க நாளில், சாதி வேற்றுமையில்லா நாளில், அதுவும் புலனழுக்கற்ற, செறுத்த செய்யுள் செய்செந் நாவின், வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன் இவ்வாறு சாதியால் தம்மை யுயர்த்திக் கூறியிருப்பாராவென்ப தாராயத்தக்கது.

பண்டையில் அந்தணன், பார்ப்பான் என்னும் சொற்கள் அருளொழுக்கமுடையார், பிறர் நலமே பார்ப்பார், முக்காலமும் முடியப் பார்ப்பார் என்னும் தவ இலக்கணமாகிய,

> " உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
> யற்றே தவத்திற் குரு." (திருக்குறள், உ௬க)

எனும் வள்ளுவர் வாய்மொழிப்படி ஐயன், இறைவன், முனிவன், நீத்தான், குரவன், ஆசிரியன் (ஆரியன்) என்னும் பொருளையே புலப்படுத்தச் சங்கச் செய்யுள் பலவும் சான்று பகரக் கீழ்க் காண்பாம். தொல்காப்பியத்துள்,

> " நூலே கரகம் முக்கோல் மணையே
> ஆயுங் காலை யந்தணர்க் குரிய" (தொல். பொருள். ௬உ௫)

என்பதும்,

அதற்குப் பேராசிரியருரையும் பிறப்பினான் அல்ல, செய் தொழிற் சிறப்பினான் இப்பெயர் பெற்றாரென்பதனை யுணர்த் தும். குறுந்தொகையில்,

> "படிவ வுண்டிப் பார்ப்பன மகனே" (க௫௬)

என்பதும்,

"பார்ப்பன மகனே பார்ப்பன மகனே"

என்பதும் ஒழுக்காலுயர்ந்த தவவடிவத்தானையே குறிக்கக் காணலாம். அன்றியும், (தொல். புறத். எ௫) "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்னும் அடியும், உரையும் தொழிலால் பெற்ற பெயரினைக் குறிக்கக் காணலாம்.

நீத்தார் பெருமையில்,

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்." (குறள். ௩o)

என்பதும், இல்லறம் நீங்கிய துறவறத்தாரையே அதிகாரத்தானும், அறவோரென்னுஞ் சொல்லானும், செந்தண்மை பூண்டொழுகும் பொருளானும், தொழிலானும் உணர்த்தக் காணலாம். இதுவும் முன்னைய "உயிர்க்குறுகண் செய்யாமை"யோடு ஒக்கக் காண்க. புறத்தில்,

"இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை யெதிரே." (புறம்)

என்பதில், முனிவர் நான்மறை வல்லார் என்பது பெறப் பட்டது. எனவே, மறைவல்லார் அந்தணரென்பது முன்னமேயே யறியக்கிடந்தமையின், அந்தணர் முனிவர் என்பது ஈண்டும் செயலாற் பெறப்படுதல் காண்க.

பதிற்றுப்பத்துள்,

"ஆறுபுரிந்தொழுகும்
அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி."

என்பதும், மறைவல்லவர் தொழிலாய வேள்வி (வேள் - உதவி) முதலிய தொழிலால் பெற்ற பெயரென வறிக.

அன்றியும், புறம். க-இல் "மறைநவி லந்தணர்" என்பது நான்மறை முனிவர் என்பதனோ டொத்திருத்தல் காண்க. இச் செய்யுளிலேயே,

"நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே."
(புறம். கடவுள் வாழ்த்து)

என்பது, அந்தணர்க்குத் தொல்காப்பியர் கூறிய இலக்கணமாகிய கரகமமைந்த இறைவனாகிய சிவபிரானைத் தவத்தோன் எனக் கூறியதனையும் எண்ணி மேல்வருவதனோடு சேரப்பண்ணி யுணர்க.

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்."
(குறிஞ்சிக்கலி-உ)

என்பது மேலதாகிய கரகமேந்திய தவத்தோனை அந்தணன் என்றமை, இறைவனையும் உணர்த்தக் காண்க.

" பாக முண்ட பைங்கட் பார்ப்பான்
உமையொடு புணர்ந்த காம வதுவையுள்."
(பரிபாடல், ஞ-ல் உஎ)

என்பதும், பார்ப்பான் என்பது இறைவனை யுணர்த்தல் காண்க. எனவே, சுடலையாடு மியல்புடைய இறைவனே பார்ப்பான், அந்தணன் எனப் பெயரேற்றமையால், மலரோன் பிறப்பாலாகிய பார்ப்பாராகிய வருணத்தைக் குறியாமை யறிக.

மேலும்,

" எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயல்மாலைக் கொளைநடை யந்தணீர்!"
(பாலைக்கலி-௬)

என்பதும், தமிழ்நாட்டுத் தவத்தொழிலில் ஈடுபட்ட நல்லொழுக்குடைய—பலகால் பல தலைவர்க்கு உசாத்துணையாயமையும் குறிப்பேவல் செய்யும் இயல்புடைய—சிறப்பானமைந்த அந்தணரை யுணர்த்திற்று.

" நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவைவெடுத்
தறவினை யின்புறூஉ மந்தண ரிருவரும்" (மருதக்கலி-௩௪)

என்பதில் வியாழ வெள்ளிகளையே அஃதாவது சுர, அசுர தலைவரிருவரையுமே அந்தணர் என்றார்.

" ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றமாக
மன்னர் ஏவல் செய்ய......"
(புறம்-உ௬)

என்பதில், ஆன்ற கேள்வியும், அடங்கிய கொள்கையும், கபிலர்க்குரிய வெறுத்த கேள்வியையும், புலனழுக்கற்றமையையும் உணர்த்தக் காண்க. செல்ல,

" பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும் " (புறம்-௩௪)

என்பதின் வேற்றுச்சாகக்,

" குரவர்த் தப்பிய " எனக் காண்கின்றமை ஆசிரியன் என்னும் பொருளையுணர்த்தக் காண்க.

இன்னும், பரிபாட்டில் "நாவலந்தண ரருமறைப் பொருளே" "விரிநூ லந்தணர்". "புரிநூ லந்தணர்" என்பனவும் பலவும் மேற்கூறிய பொருட்களையே சங்கத்துச் சான்றோர் செய்யுள் பல்லிடத்தும் குறித்துச் செல்லக் காண்க. அமைய,

நக்கீரர், கபிலர், பரணர் மூவரும் ஒரு கூட்டத்தாரென்பது வழக்கானும், செய்யுளானுமறியலாம். இவரெல்லாரும் குடும்ப

மிலாதார் என்பது அவரவர் செய்யுளான் அறியக்கிடக்கின்றது. பரணரும்,

"பசித்தும் வாரேம் பாரமு மிலமே" என்றனர்.

எனவே, இதுகாறுங் கூறியவற்றானும், கபிலர் யாண்டும் குடும்பத்தோடு வாழ்தல் காணப்படாமையானும், தானே "அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே" என்றமையான் பிறப்பு குறித்துக் கூறின் பேரறிவினைக் குறியாதாகலானும், 'அந்தணன் புலவன் முனிவன் புலவன் கொண்டுவந்தேன்' எனவேநீ அஞ்சாதேகொள்; என்றே பொருள்படக் காண்க. நக்கீரரும்,

"சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானின்
உரிவை தைஇய வூன்கெடு மார்பின்
என்பெழுந் தியங்கும் யாக்கையர் நன்பகல்
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர் இடும்பை
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர்." (முருகு, ௧௨௬-௧௩௭)

என்றமையும், முனிவரியல்பினையும் அவரியல்பினையும் ஒருவாறுணர்த்துகின்றது.

"இருபிறப் பிருபெய ரீர நெஞ்சத்
தொருபெய ரந்தண ரறனமர்ந் தோயே." (பரிபாடல்-௧௪)

என்று முருகனைக் கூறியதையும் மேலனவற்றோடு ஒட்டியுணர்க.

முடிவாக, அந்தணராகும் முனிவரர் இல்லறப்பிறப்பில் இயற்பெயரும், துறவறமாகிய உண்மையுணரும் பிறப்பில் சிறப்புப்பெயரும் 'முனிவனகத்தியன்' என்பதுபோலப் பெற்றமையாலேயே 'இருபிறப் பிருபெய'ரென்றார். ஈரநெஞ்சம் அருளொழுக்கைக் காட்டுகின்றது. எனவே, இயற்கையிலேயே புலவராகிய கபிலரும் 'முனிவனகத்தியன்'போல 'அந்தணன் புலவன்' என்று கூறியிருக்கலாமென்றே நினைந்தறியக் கிடக்கக் காண்க.

"முரணில் பொதியில் முதற்புத்தேள் வாழி
கபில பரணரும் வாழி........."

என்றதும் மேலது குறித்தேயாம் என்க.

# சங்ககாலத்து மதுரை

[மயிலை, சீனி. வேங்கடசாமி]

சங்ககாலத்திலே, நாகரிகமும் சிறப்பும் செல்வமும் பெற்று விளங்கிய நகரங்களிலே மதுரைமாநகரமும் ஒன்று. பாண்டிய நாட்டின் தலைநகரமான இந்த மதுரை, தென்மதுரை என்றும், தக்கிணமதுரை என்றும், கூடல் என்றும், நான்மாடக்கூடல் என்றும் பெயர்பெற்றிருந்தது. சங்ககாலத்து மதுரைமாநகரம், இப்போதைய மதுரை நகரம் இருக்கிற இடத்தில் இருக்கவில்லை; அது வையையாற்றின் தென்கரையிலே, திருப்பரங்குன்றத் திற்குக் கிழக்கே இருந்தது.




இதனை,

"மாடமலி மறுகிற் கூடற் குடவயின்........குன்று'

என்று திருமுருகாற்றுப்படை கூறுவதிலிருந்தும்,

"கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய
ஓடியா விழவின் நெடியோன் குன்றம்"

என்று நாயங்கண்ணனார் (புறம்-149) கூறுவதிலிருந்தும் அறியலாம். திருப்பரங்குன்றத்திற்குக் கிழக்கே, வைகையாற்றின் தென்கரையிலே இருந்த சங்ககாலத்து மதுரைமாநகரம் எவ்வாறு அமைந்திருந்தது என்பதை ஈண்டு ஆராய்வோம். நமது ஆராய்ச்சிக்குப் பழைய சங்க நூல்கள் உதவிசெய்கின்றன. இந்நூல்களின் துணைகொண்டு ஆராய்வோம்.

அமைப்பு:

மதுரைமாநகரம் தரையமைப்பில் (Plan) வட்டவடிவமாகவும், தாமரைப்பூ போன்ற உருவத்துடனும் அமைந்திருந்தது என்று பழைய பரிபாடல் செய்யுள் கூறுகிறது.

"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர்; பூவின்
இதழகத் தனைய தெருவம்; இதழகத்து
அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்;
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்;
தாதுண் பறவை யனையர் பரிசில்வாழ்நர்."

பழைய மதுரைமாநகரம், தாமரைப் பூப்போன்று வட்ட வடிவமாக இருந்தது. வட்டவடிவமான நகரத்தின் நடுமத்தியில், (தாமரைப்பூவின் நடுவில் உள்ள பொகுட்டு போன்று) பாண்டியனுடைய கோயில் (அரண்மனை) அமைந்திருந்தது. தாமரைப் பொகுட்டைச் சூழ்ந்து இதழ்கள் பொருந்தியிருப்பதுபோல, அரண்மனையைச் சுற்றிலும் தெருக்கள் தாமரை இதழ்களைப் போன்று அமைந்திருந்தன என்று இச்செய்யுள், மதுரையின் அமைப்பைப் படம் வரைந்து காட்டுகிறது.

தாமரைப்பூ, நந்தியாவட்டப்பூ, வில், சுவத்திகம் முதலிய உருவங்களைப்போன்று நகரங்களை அமைப்பது பண்டைக் காலத்து வழக்கம். அவ்வழக்கத்தையொட்டி பண்டைக்காலத்து மதுரை நகரமும் தாமரைப் பூப்போன்று அமைந்திருந்தது. மதுரைமா நகரத்தைப்போன்றே, மகதநாட்டின் தலைநகரமாயிருந்த இராசகிரியம் என்னும் நகரமும் 'தாமரைப்பூவின் உருவமாக அமைந்திருந்தது', என்று பெருங்கதை என்னும் நூல் கூறுகிறது. அதாவது:

பெருப்படைச்சேரி திருந்தணி எய்திக் கைபுனை வனப்பினோர் பொய்கையாகவும், போகச்சேரி புறவிதழாகவும், பெருங் கடியாளர் அருங்கடிச்சேரி புறவிதழ் மருங்கிற் புல்லிதழாகவும்

பல்விலை வாணிகர் நல்விலைச்சேரி புல்லிதழ் பொருந்திய நல்லித ழாகவும், அந்தணர்சேரி அகவிதழாகவும், அருமதி அமைச்சர் திருமதிற்சேரி ஆசின் பன்மலர் அல்லியாகவும், அரசனுடைய கோயில் கொட்டையாகவும் அமைந்து, இராசகிரியநகரம் தாமரைப் பூப்போன்று இருந்தது என்று பெருங்கதை கூறுகிறது. (மகத காண்டம், இராசகிரியம் புக்கது: 1-123)

இதனால், பண்டைக்காலத்திலே தாமரைப் பூப்போன்று நகரங்களை அமைப்பது இந்தியநாட்டில் வழக்கம் உண்டென்றும், சங்ககாலத்து மதுரைமாநகரமும் அவ்வாறே தாமரைப்பூப் போன்று அமைந்திருந்ததென்றும் பழைய செய்யுள்களினாலே அறிகிறோம். ஆனால், அந்த அமைப்பின் உருவப்படம் நமக்குக் கிடைக்கவில்லை. தாமரைப்பூப்போன்ற நகர உருவத்தை அறிஞர் சிலர் படம் எழுதிக் காட்டியுள்ளார்கள். அப் படங்கள் பொருத்தமானவை என்று எமது கருத்துக்குத் தோன்றவில்லை. ஆகவே, எமது கருத்துக்குப் பொருத்தமெனத் தோன்றியபடி, மதுரைமாநகரத்தின் தரையமைப்பை (Plan) இங்கே வரைந்து காட்டியுள்ளோம். (படம் காண்க.) பண்டைக் குறிப்புகளுடன் இப்பட அமைப்பை ஒப்பிட்டுப்பார்த்து அறிஞர் உண்மை காண்பாராக.

மதுரைமாநகரத்தைப்பற்றிய செய்திகளைச் சங்கநூல்களி லிருந்து ஆராய்ந்து காண்பாம்.

மதுரைமாநகரம், வையையாற்றின் தென்கரையில் இருந் தது என்பது, கோவலனும் கண்ணகியும் கௌந்தியடிகளுடன் மதுரைக்குச் சென்றபோது வையையாற்றை ஓடத்தினால் கடந்து தென்கரை சென்று மதுரை யடைந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறுவதிலிருந்து அறியலாம். இதனை,

> " மாதவத் தாட்டியொடு மரப்புணை போகித்
> தேமலர் நறும்பொழில் தென்கரை எய்தி "

என்று சிலப்பதிகாரம் கூறுவதிலிருந்து அறியலாம்.

வையையாற்றைக் கடந்து தென்கரை யடைந்தவுடனே வடக்கு வாயில் வழியாக நகரத்திற்குள் செல்லமுடியாது. வடக்கு வாயில் எப்போதும் அடைபட்டிருந்தது. (படம் காண்க.) ஏனென்றால், வடக்குப்புறத்தில் வையையாறு கோட்டை மதில் சுவரையொட்டிச் சென்றது. இதனை,

> " வந்து மதுரை மதில்பொரூஉம் வான்மலர்த்தாஅய்
> அந்தண் புனல்வையை யாறு..........."

என்னும் பரிபாடல் (12, வையை) அடிகளாலும்,

நீர்முற்றி மதில்பொருஉம் பகையல்லால் நேராதார்
போர்முற்ரென் றறியாத புரிசைசூழ் புனலூரன்"

என்னும் கலித்தொகை (67-ஆம் கலி) அடிகளாலும் அறியலாம்.

வடக்குப்புற வாயில் தவிர, ஏனைய கிழக்கு மேற்கு தெற்கு வாயில்கள் வழியாக நகரினுட்செல்லச் சாலைகள் இருந்தன. கோவலன் கண்ணகியாருடன் கிழக்கு வாயில் வழியாக மதுரைக்குச் சென்ருன் என்றும், கண்ணகியார் மதுரையை எரித்த பின்னர் திருச்செங்கோட்டிற்குச் சென்றபோது, மேற்கு வாயிலைக் கடந்து சென்ருர் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது

அரண் :

அக்காலத்தில் நகரங்கள் கோட்டைக்குள் அமைந்திருந்தன. நகரத்திற்குப் பாதுகாப்பாக அகழி, காடு முதலியவை அமைந்திருந்தன.

"மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்
காடும் உடையது அரண்" (திருக்குறள், 742)

என்று திருவள்ளுவர் கூறுகிருர். "மணிநீரும் என்றது பளிங்கு போலத் தெளிந்து ஆழம் உடைமையும் வற்ருமையும்; மண்ணும் என்றது நாற்பெருஞ் சேனையும் அகத்து இடுதற்கு அரிய இடமும்; மலையும் என்றது, மற்று அதன் புறத்து முற்றி ஓங்கித் தலைமயக்குறுத்து ஆங்கு அதன் புறம் சூழ்ந்து ஓங்கிப் பரந்த தூங்கு இருள் காடும் வகை அறப்பெற்ற இவை நான்கினையும் உடையதே அரண் ஆவது," என்று **காலிங்கர்** உரை எழுதுகிருர். "தெளிந்தநீர் ஆயினும், நிழலும் நீரும் இல்லாத வெறுநிலம் ஆயினும், மலை ஆயினும், அழகிய நிழலையுடைய காடு ஆயினும் உடைய இடம் அரணம்," என்று பரிப்பெருமாள் உரை கூறுகிருர்.

இந்த இலக்கணப்படி, மதுரைமாநகரம் காடு, அகழி என்னும் இரண்டு அரண்களைக் கொண்டிருந்தது. கோட்டையைச் சூழ்ந்து முள் காடுகள் இருந்தன. இதற்கு **மிளைக்காடு** என்று பெயர். இந்த முள் காட்டைக் கடந்துசெல்வது கடினமானது. கிழக்கு மேற்கு தெற்கு வாயில்களுக்குச் செல்ல வேண்டுமானல், இந்த முள் காட்டினுள் ஊடுருவிச்சென்ற சாலைகள் வழியாகத்தான் செல்லவேண்டும். காட்டைக் கடந்ததும் நீர்நிறைந்த ஆழமான அகழி காணப்பட்டது. இந்த ஆழமான அகழி வடக்கே வைகை ஆற்றுடன் இணைந்து இருந்தது. ஆகவே, இதில் எப்போதும் நீர் வற்ருமல் இருந்தது. காவற்காட்டினையும் அகழியையும் சிலப்பதிகாரம் இவ்வாறு கூறுகிறது:

"அருமிளை யுடுத்த அகழிசூழ் போகி"
(புறஞ்சேரி இறுத்தகாதை, 184)

"அழித்தற் கரியமிளை சூழ்ந்த கிடங்கின் புறத்தைச் சூழ் போந்தென்க. மிளை - காவற்காடு" என்பது அடியார்க்கு நல்லார் உரை.

"இளைசூழ் மிளையொடு வளைவுடன் கிடந்த
இலங்குநீர்ப் பரப்பின் வலம்புணர் அகழி"
(ஊர்காண் காதை, 62-63)

"கட்டுவேலி சூழ்ந்த காவற்காட்டோடு தானும் நகரைச் சூழ்தலை உடன்பட்டுக்கிடந்த வலத்திலே பொருந்திச் சுழலும் இலங்குநீர்ப் பரப்பையுடைய அகழி" என்பது அடியார்க்கு நல்லார் உரை. இந்த அகழியை, "குண்டுநீர் வரைப்பிற் கூடல்" என்று புறநானூறு (347) கூறுகிறது.

கோட்டை மதில் :

காவற்காட்டுக்கும் அகழிக்கும் உள்ளே வட்டவடிவமான இரண்டு மதிற்சுவர்கள் ஒன்றுக்குள் ஒன்றாக நகரத்தைச் சூழ்ந் திருந்தன. உயரமும் அகலமும் திண்மையும் பொருந்திய இச் சுவர்களின் அடிப்புறம் கருங்கற்களினாலும், மேற்புறம் செங் கற்களினாலும் அமைக்கப்பட்டிருந்தன. வெளிமதில் **புறமதில்** என்றும், உள்மதில் **அகமதில்** என்றும் பெயர்பெற்றிருந்தன. புறமதிலுக்கும் அகமதிலுக்கும் இடையிலிருந்த இடம் **புறஞ்சேரி** என்று பெயர்பெற்றிருந்தது.

ஆழமான கிடங்கினையும் (அகழி), உயர்ந்த மதிலையும், திண்ணிய வாயிலையும், எண்ணெய் பூசிக் கருநிறமாகக் காணப் பட்ட கோட்டைக் கதவுகளையும், கோட்டை வாயிலின்மேல் அமைந்திருந்த கோபுரத்தையும், கோட்டை வாயில் வழியாக மக்கள் போவதும் வருவதுமான காட்சி வைகையாற்றில் வெள்ளம் ஓடுவதுபோலிருந்ததையும் மாங்குடி மருதனார் என் னும் புலவர் **மதுரைக் காஞ்சியில்** இவ்வாறு கூறுகிறார் :

"மண்உற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கில்
விண்உற ஓங்கிய பல்படைப் புரிசை
தொல்வலி நிலைஇய அணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்
மழையாடு மலையின் நிவந்த மாடமொடு
வையை யன்ன வழக்குடை வாயில்" (351-6)

இதற்கு நச்சினார்க்கினியர் எழுதுகிற உரை வருமாறு :—

"மண்ணுள்ளளவும் ஆழ்ந்த நீலமணிபோலும் நீரையுடைய கிடங்கினையும், தேவருலகத்திலே செல்லும்படி யுயர்ந்த பல

கற்படைகளையுடைய மதிலினையும், பழையதாகிய வலிநிலை பெற்ற தெய்வத்தையுடைத்தாகிய நெடிய வாயில் நிலையினையும், நெய் பலகாலுமிடுதலால் கருகின திண்ணிய செறிவினையுடைய கதவினையும், மேகம் உலாவும் மலைபோலே ஓங்கின மாடத்தோடே வையையாறு இடைவிடாது ஓடுமாறுபோன்ற மாந்தரும் மாவும் இடையறுமல் வழங்குதலையுடைய வாயில்.''

கோட்டைச் சுவரில், நான்கு வாயில்களின் மேற்புறத்தில் நான்கு மாடங்கள் (கோபுரங்கள்) இருந்தன. இதனுல், மதுரைக்கு மாடக்கூடல் என்றும், நான்மாடக்கூடல் என்றும் பெயர்கள் வழங்கின.

கோட்டை வாயில்களின்மேலே, பாண்டியனுடைய கொடிகள் பறந்தன. அன்றியும், அக்கொடிகளுடன் பந்தும், பாவையும் தொங்கவிடப்பட்டிருந்தன.

> " செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
> வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
> பொருநர்த் தேய்த்த போரரு வாயில் " (67-69)

என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

"போரை வென்று விரும்பிக் கட்டின சேய்நிலத்தே சென்றுயர்ந்த நெடிய கொடிக்கருகே, நூலால் வரிந்து புனையப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையிற் றூங்கியே விடும்படி, பொருவாரை இல்லையாக்குகையினுலே எக்காலமும் போர்த் தொழிலரிதாகிய வாயில்" என்பது நச்சினுர்க்கினியர் உரை.

வரிந்து புனையப்பட்ட பந்தும் பாவையும் என்பதற்கு, நச்சினுர்க்கினியர் இவ்வாறு விளக்கம் கூறுகிறுர்: "பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற்குத் தூக்கின பந்தும் பாவையும்" என்று கூறுகிறுர்.

பாண்டியனுடைய கோட்டை வாயிலில் பந்தும் பாவையும் தொங்கவிடப்பட்டிருந்ததுபோலவே, சேர அரசனுடைய கோட்டைவாயிலில் சிலம்பும் தழையும் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தன என்று பதிற்றுப்பத்து கூறுகிறது:

> " செம்பொறிச் சிலம்பொடு அணித்தழை தூங்கும்
> எந்திரத் தகைப்பின் அம்புடை வாயில் "
> (ஆறும் பத்து, குண்டு கண்ணகழி)

இதற்குப் பழைய உரைகாரர் கூறும் விளக்கம் வருமாறு: "சிலம்பும் தழையும் புரிசைக்கண் தூங்கினவென்றது, 'ஈண்டுப் பொருவீருளரேல், நும் காலிற் கழலினையும், அரையிற் போர்க்குரிய உடையினையும் ஒழித்து, இச்சிலம்பினையும் தழையினையும்

அணிமி' னென அவரைப் பெண்பாலாக இகழ்ந்தவாறென்க. இனி, அவற்றை அம்மதிலில் வாழும் வெற்றி மடந்தைக்கு அணி யென்பாரும் உளர்.''

மதுரைமாநகரத்துக் கோட்டை வாயில்களில் யவனவீரர் (யவனர்=கிரேக்கர், அல்லது ரோம் தேசத்தவர்.) காவல் புரிந்தனர். இவர்கள், காண்பவர் அச்சங்கொள்ளுமாறு வாள் பிடித்துக் காவல் நின்றனர். மதுரை நகரத்தைப் பார்த்து வருவதற்காகக் கோட்டை வாயிலுட்புகுந்த கோவலன், 'காவல் நின்ற யவன வீரர்களுக்கு அஞ்சாமல் உள்ளே சென்றான்,' என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

> " கடிமதில் வாயில் காவலில் சிறந்த
> அடல்வாள் யவனர்க்கு அயிராது புக்கு "
>
> (ஊர்காண் காதை, 66-67)

உரையாசிரியராகிய அடியார்க்குநல்லார், யவனர் என்பதற்குத் துருக்கர் என்று உரை எழுதுகிறார். இது தவறு. இந்திய நாட்டிற்குத் துருக்கர் வந்தது, சங்ககாலத்திற்கு மிகமிகப் பிற்பட்ட காலம் ஆகும். ஆகவே, யவனர் என்பதற்குத் துருக்கர் என்று உரை கூறுவது, வரலாற்றாராய்ச்சிக்குப் பொருந்துவது அன்று. சங்ககாலத்திலே தமிழருடன் வாணிகத்தின் பொருட்டுத் தொடர்புகொண்டிருந்த அயல்நாட்டினர், கிரேக்க தேசத்தவரும் ரோம் நாட்டினரும் ஆவர். இவர்களுக்கு யவனர் என்று பெயர். கி. பி. 2-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட ரோம் நாட்டு நாணயங்களும் வேறு பொருள்களும், தமிழ்நாட்டிலே பற்பல இடங்களில் நிலத்திலிருந்து அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. இச்சான்றுகளையும் சரித்திரச் சான்றுகளையும் கொண்டு நோக்கினால், யவனர் என்பது ரோம் நாட்டவரை (பழைய இத்தாலி தேசத்தவரை)க் குறிக்குமேயன்றித் துருக்கரைக் குறிக்காது.

மதில் அரண்:

கோட்டை மதில் எவ்வாறு அரண் அமைந்து இருக்க வேண்டும் என்பதைத் திருவள்ளுவர் கூறியிருக்கிறார்:

> " உயர்வு அகலம் திண்மை அருமைஇந் நான்கின்
> அமைவு அரண் என்றுரைக்கும் நூல்." (743)

என்று கூறுகிறார். "உயர்ச்சியும் அகலமும் திண்மையும் கிட்டுதற்கு அருமையும் என்னும் நான்கின் அமைதியை உடையது மதில் என்று சொல்லும் இலக்கணம்.

அருமையாவது முதலையும் கிடங்கும் அடியொட்டியும் முதலாயினவற்றால் கிட்டுதற்கு அருமை அமைவு என்றது இதனின்மேல் செய்யப்படாது என்னும் அளவு உடைத்து ஆதல். திண்மை என்றது கல்லும் இட்டிகையும் இட்டுச் செய்தல். இஃது அரண் செய்யும் ஆறு கூறிற்று," என்பது பரிப்பெருமாள் உரை.

> " முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
> வீறெய்தி மாண்ட தரண்" (திருக்குறள், 749)

இதற்குக் காலிங்கர் உரை வருமாறு: "புறத்து அரசன் கடைப்புறத்துப் போர் தொடங்கிய அளவிலே தலைசாய்ந்து ஓடுமாறு அகத்தோர் இயந்திரம் முதலிய கல்பொறியும் பாம்பும் கனலும் கடிகுரங்கும் வில்பொறியும் வேலும் வெந்தீவட்டும் காய்ச்சிய மணலும் கவவு இருப்பு உலக்கையும் வீச்சுறு தூண்டிலும் விசைத்தெறி கவணும் ஆகிய வினைத்தொழில் உடைய மாட்சிமைப்பட்டது யாது? மற்று அதுவே அரண் ஆவது."

இதற்குப் பரிப்பெருமாள் உரை வருமாறு: "முந்து உற்ற முகத்தினையுடைய பகைவர் கெடும்படியாக வினைசெய்யும் இடத்து வெற்றி எய்தி மாட்சிமைப்பட்டது அரண் ஆவது.

அஃது ஆவது அட்டாலகமும் மதில் பொறியும் முதலாயின மதில் தலையில் அமைத்தல். இது மதில் நிலையில் கருவிகள் அமைக்கவேண்டும் என்றது."

இதனால், கோட்டை மதிலின்மேல் போர்க்கருவிகள் அமைக்கப்படவேண்டும் என்பது தெரிகிறது. மதுரைமாநகரத்துக் கோட்டைச் சுவரின்மேலே பலவிதமான போர்க்கருவிகளும், போர் இயந்திரங்களும் (பொறிகள்) வைக்கப்பட்டிருந்தன. நாட்டையும் அகழியையும் கடந்து பகைவர் கோட்டையை முற்றுகையிட நேர்ந்தால், அவர்களைப் பொருது ஓட்டுவதற்காக இப்போர்க்கருவிகளும் பொறிகளும் கோட்டை மதிலின்மீது அமைக்கப்பட்டிருந்தன. இந்தப் போர்க்கருவிகளின் பெயரையும் பொறிகளின் பெயரையும் சிலப்பதிகாரம் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

> " ......................வளைவிற் பொறியும்
> கருவிர லூகமும், கல்லுமிழ் கவணும்
> பரிவுறு வெந்நெயும், பாகடு குழிசியும்
> காய்பொன் உலையும், கல்லிடு கூடையும்
> தூண்டிலும், தொடக்கும், ஆண்டலை யடுப்பும்
> கவையும், கழுவும், புதையும், புழையும்

ஐயவித் துலாமும், கைபெயர் ஊசியும்
சென்றெறி சிரலும், பன்றியும், பணையும்
எழுவும், சீப்பும், முழுவிறற் கணையமும்
கோலும், குந்தமும், வேலும் பிறவும்
ஞாயிலும் சிறந்து நாட்கொடி நுடங்கும்
வாயில்... ....... ................ ....."

(அடைக்கலக்காதை, உ0எ-உகஎ)

இதில் கூறிய போர்க்கருவிகளைப்பற்றியும், பொறிகளைப் பற்றியும் விளக்கம் அறியவேண்டுவோர், அடியார்க்குநல்லார் எழுதியுள்ள உரையில் கண்டுகொள்க.

**நகர வீதிகள் :**

தாமரைப்பூவின் நடுவிலே கொட்டை அமைந்திருப்பது போன்று வட்டவடிவமாக அமைந்திருந்த மதுரைமாநகரத்தின் நடுவிலே பாண்டியனுடைய அரண்மனை இருந்தது. பெரு வீதிகளும் குறுந்தெருக்களும் பூவின் இதழ்களைப்போன்று அமைந்திருந்தன. (படம் காண்க.) இத்தெருக்களில் சில கடைவீதிகளாக இருந்தன. பெரிய கடைத்தெரு அங்காடி வீதி என்று வழங்கப்பட்டது. இது நாளங்காடி என்றும், அல்லங்காடி என்றும் இருகூறாக இருந்தது என்னை ?

" ஓவுக்கண் டன்ன இருபெரு நியமத்து " (வரி. 365)

என வரும் மதுரைக் காஞ்சி அடியையும், இதற்கு நச்சினார்க்கினியர், "மதுரைக்கண் சித்திரத்தைக் கண்டாற்போன்ற கட்கினிமையையுடைய இரண்டாகிய அங்காடித் தெருவில," என்று பொருள் கூறியதோடு, "நாளங்காடி அல்லங்காடியாகிய இரண்டு கூற்றை யுடைத்தென்றார்," என்று விளக்கங்கூறியுள்ளதையும் காண்க. மேலும்,

"வாடா வேம்பின் வழுதி கூடல்
நாளங் காடி... ......." (அகம்-93)

என்று நக்கீரர் கூறுவதும்,

"மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்
நாளங் காடி நனந்தலைக் கம்பலை" (மதுரைக்காஞ்சி, 429-430)

என்று மாங்குடி மருதனார் கூறுவதும் நினைவுறத்தக்கன. ஆடைகள் விற்கும் அறுவை வீதிகளும், நவதானியங்கள் விற்கும் கூல வீதிகளும், முத்து, பவழம் முதலிய நவமணிகள் விற்கும் இரத்தினக் கடைத்தெருவும், பொன், வெள்ளி முதலியவை விற்கும் பொன் வாணிகர் வீதியும் இருந்தன. பதியிலாராகிய கணிகையர் தெருக்கள் ஒருபுறம் இருந்தன. ஒரு தெருவில் அரசனுடைய

ஏவலாளர் குடியிருந்தனர். ஏனைய தெருக்களில் நகர மக்கள் வசித்துவந்தார்கள். தெருக்களின் இருபுறத்திலும் மாளிகைகளும் வீடுகளும் இருந்தன. "மாடம்மலி மறுகிற் கூடல்" (அகம்-346) என்றும், "மாடம்மலி மறுகிற் கூடல்" என்று திருமுருகாற்றுப்படையும், "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்" என்று மதுரைக்காஞ்சியும் கூறுகின்றன.

சுருங்கைத் தூம்பு:

நகரத்தின் கழிவுநீர் கால்வாய்கள் வழியாகச்சென்று நகரத்திற்கு வெளியே அகழியில் விழுந்தது. கழிவுநீர் செல்லும் சலதாரை சுருங்கைத்தூம்பு என்று கூறப்பட்டது. தூம்பு என்பது சலதாரை. சுருங்கை என்பது, சலதாரை தெரியாதபடி மேலே கற்களால் மூடப்படுவது. இவ்வாறு சுருங்கை வழியாகச் சென்ற கழிவுநீர் நகரத்திற்கு அப்பால் அகழியில் விழுந்தது. நீர் அகழியில் விழுந்த இடம், யானையின் தும்பிக்கையைப் போன்று அமைக்கப்பட்டிருந்தது ஆகவே, இதன் வழியாகக் கழிவுநீர் விழும் காட்சி, யானை தும்பிக்கையினால் நீரைச் சொரிவதுபோன்றிருந்தது. இதனைப் பரிபாடல் நன்கு விளக்குகிறது.

> "நெடுமால் சுருங்கை நடுவழிப் போந்து
> கடுமா களிறுஅணத்துக் கைவிடு நீர்போலும்
> நெடுநீர் மலிபுனல் நீண்மாடக் கூடல்
> கடிமதில் பெய்யும் பொழுது" (20-ஆம் பாடல் 104-107)

"நெடிய பெரிய சுருங்கை நடுவாகிய வழியைப் போந்து பெருந்தன்மை மிக்க புனலைக் கடிமதில் சொரியும்பொழுது அப்புனல் கடுமாவாகிய களிறுகள் கையை எடுத்துவிடும் நீர் போலும்" என்பது பரிமேலழகர் உரை.

பொது நிலையங்கள்:

இனி, மதுரை நகரத்திலிருந்த கோயில்கள், சோலைகள் முதலிய பொது நிலயங்களைக் காண்பாம்.

**வெள்ளியம்பலம்:** இது சிவபெருமான் கோயில். "கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில், வெள்ளியம்பலம்" என்று சிலப்பதிகாரப் பதிகத்தில் கூறப்படுகிறது.

**செழுங்கலை நியமம்:** இது சிந்தாதேவி கோயில் என்றும் கூறப்படும். கலைச்செல்வியாகிய நாமகள் கோயில்.

"மிக்க செல்வத்து விளங்கியோர் வாழும்
தக்கிண மதுரை தான்சென் றெய்திச்
சிந்தா விளக்கின் செழுங்கலை நியமத்
தந்தின் முன்றில் அம்பலப் பீடிகை
தங்கினன் வதிந்து" (கரு காதை. 104-8)

எனவரும் மணிமேகலை அடிகளால் இதனை அறியலாம்.

**ஐயை கோயில்:** காளி கோயில். இது மதுரையின் மேற்குப் பகுதியில் இருந்ததாகத் தெரிகிறது. இக்கோயிலின் வாயிலில் சென்று கண்ணகியார் தன் கைவளையைத் தகர்த்துடைத்தார் என்பதை, "கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்து" என்று சிலப்பதிகாரம் (கட்டுரை காதை) கூறுகிறது.

சேவற்கொடியோன் ஆகிய முருகன் கோட்டமும், உவணக் கொடியோன் ஆகிய திருமால் கோயிலும், மேழிவலவனாகிய பலராமன் கோயிலும் இந்நகரத்தில் இருந்தன என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. அன்றியும் பௌத்தப் பள்ளியும், சமணப் பள்ளியும் இந்நகரத்தில் இருந்தன என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது.

**நீதிமன்றம்:** வழக்குரை மன்றம் ஆகிய நீதிமன்றமும் இந்நகரில் இருந்தது. இந்த அவையை,

"செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை யறங்கூ றவையம்" (490-2)

என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது.

**மூதூர்ப்பொழில்:** இது பூஞ்சோலை. இதனை இலவந்திகைச் சோலை என்பர்.

**நீராவிச்சோலை:** இதனை உய்யானம் என்பர். இது "அரசர் விளையாடும் காவற்சோலை" என்று அடியார்க்குநல்லார் கூறுவர்.

இவ்வாறு, சங்ககாலத்து மதுரைமாநகரம் தாமரைப் பூவின் வடிவமாகவும் அகழி, மதில், காவற்காடு முதலிய அரண்களையுடையதாகவும் சிறந்து விளங்கியிருந்ததைச் சங்க நூல்களினால் அறிகிறோம். இதிலிருந்து, பண்டைத்தமிழர் எவ்வாறு நகரங்களை அமைத்துக்கொண்டு நாகரிகமாக வாழ்ந்தனர் என்பது விளங்குகிறது.

---

# தமிழில் தாவரப்பெயர்

(நான்காம் புலவர் மாணவர், அண்ணாமலை நகர்)

தமிழில் தாவரப் பெயர் என்றதும் சிலர் மருட்சியுறலாம். புதிதாகத் தோன்றலாம் சிலர்க்கு. ஆனால், இது புதிதல்ல பழமையானதே. இல்லாதது தோன்றாதாகலின், எந்த நாட்டிலும் அங்குள்ள பொருள்களைக் கண்டு தெளிந்த பெரியோர், அவர்கள் பேசி வரும் மொழி எந்த மொழியோ, அதிலேதான் தாம் ஆய்ந்து தெளிந்த பொருட்குப் பெயரிட்டு வழங்குவர். அதுபோலவே தமிழ் நாட்டில் வாழ்ந்த மக்கள் தாம் கண்ட நிலைத்திணை உயிர்கட்குப் பெயர் இட்டு வழங்கிவந்தனர்.

நம் தமிழகம் பண்டு "**நாவலம் பொழில்**" என அழைக்கப் பட்டு வந்தது. இன்றைய இந்தியப் பெருநாட்டின் பெரும் பகுதியையும், மேற்கே ஆப்பிரிக்காவின் ஒரு பகுதியையும், கிழக்கே ஆத்திரேலியா கிழக்கிந்தியத் தீவுகள் சாவா சுமத்திராப் பகுதிகள் உள்ளிட்டதாய்த் தெற்கேயுள்ள இந்துமாக்கடல் முழுதும் சூழ்ந்த பெருநிலப் பரப்பாகப் பண்டு திகழ்ந்தது. அதற்குக் குமரிக் கண்டம் (Gondwana) என்னும் பெயர் வழங்கியது. அது பல கடல்கோளால் பலவாகப் பிரிந்தும், சில கடலுள் ஆழ்ந்தும் போயின. இதனை ஆங்காங்குள்ள நிலைத்திணை உயிர்களும், இயங்குதிணை உயிர்களும், நில அமைப்புக்களும் இன்றும் சான்று காட்டுகின்றன. இவற்றை நன்கு ஆராய்ந்த மேலைநாட்டாசிரியர்களாகிய Mr. Scott Elliat. Mr. Huxley, Mr. Haeckel, Keane முதலாயினோர் சில ஆய்வுநூல் வெளியிட்டுள்ளனர்.

உண்மைகளை ஆராய்வதில் நம்மனோர் இன்னும் எழுச்சியுறாதது வருந்தற்குரியதொன்றாம். பிறநாட்டார் ஆராய்வதை விட நம் நாட்டார் நடுநிலை நின்று கூர்ந்து ஆராயின், பல உண்மைகளைத் திரிபின்றிக் காண வியலும். அறிஞர்கள் 'நான் கண்ட இன்பம் பெறுக இவ்வையகம்,' என்று தம் கருத்தை வெளிப் படுப்பார்கள் என்பது உறுதி.

மக்கள் தம்மைச் சூழ்ந்துள்ள பொருட்களைக் கண்டு தொட்டு முகர்ந்து உண்டு ஆராய்ந்து பெயரிட்டு வழங்குதல் மரபு. அவ்வாறே, தமிழர்கள் நிலைத்திணை உயிர் (Botany) வகைகளை உணர்ந்து பெயரிட்டு வழங்கிய முறையை உணர்த்துவதே இக்கட்டுரை.

நிலைத்திணை உயிர்களை இனம், மரபு, குடும்பம், குடி என்பவைகளாகவும், காளான், பாசி, புல், பூண்டு, செடி, கொடி, மரம் முதலியவைகளாகவும் தொகுத்துப் பிரித்துக் கூறப்படும். இவைகள் ஒவ்வொன்றும் பல உட்பிரிவுகளைக்கொண்டு திகழும்.

தமிழர்கள் பெயர்களைப் பெரிதும் காரணமின்றி வைப்ப தில்லை. பெயர்கள் பொருளை உணர்த்தி அதன் உண்மைத் தன்மையை நுணுகி ஆராயின் புலப்படுத்திக் காட்டும். இதனு லன்றே "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்ருர் தொல்காப்பியனாரும். ஆதலால், காரணமின்றிப் பெய ரிடுவதில்லை என்பது நன்கு தெரிகின்றது. காரணம் புலப் படாதவற்றை இடுகுறிப் பெயர் என்று கூறிவருகின்றனர்.

நாம் நாடோறும் பல மரஞ் செடி கொடிகளைப் பார்க் கின்ருேம்; மலர்களின் மணத்தை நுகர்கின்ருேம்; கனிகளைச் சுவைக்கின்ருேம். ஆனல், அவற்றின் உண்மைத் தன்மையை அறிந்துகொள்வதில்லை. அறியவேண்டும் என்ற அவாவும் எழுவதில்லை. அதற்குக் காரணம் என்னவெனில், அவை நாம் புதிதாகக் கண்டதல்ல. பல்லாண்டுகளாக நமக்கு அவை தெரிந்தவைகளாக அவற்ருேடு பழகி வந்துள்ளமையின் அவற்றை ஆராயவேண்டும் என்ற எண்ணம் நம்முள்ளத் தெழுந்த தில்லை.

பல ஆண்டுகட்கு முன் தாம் அறிந்ததைப் பிறர் அறிந்து கொண்டால் தம்மை மதிக்கமாட்டார்; தம் வருவாய் கெடும் என்ற ஓர் தவருன எண்ணம் நம்மவரிடையே இருந்ததாற்ருன் நம் கலைகள் பல அழிக்கப்பட்டன; அழிந்தன. ஆ! எத்துணை மருத்துவங்கள், மரப்பெயர்கள், தொழில்கள் மறைந்தொழிந் தன. அவற்றை நினைக்குந்தோறும் அம்மம்ம! எவர் நெஞ்சந் தான் இரங்காதிருக்க முடியும்? ஆதலால், அறிஞர்கள் நுண் ணுணர்வால் ஆராய்ச்சி அறிவை நல்கி நாட்டை வளப்படுத்து வார்களாக.

நிலைத்திணை உயிர்களை நிலப்பகுதி நீர்ப்பகுதி என இரு பெரும் பிரிவாகப் பகுக்கலாம். நிலப்பகுதி காளான் புல் பூண்டு செடி கொடி மரம் என விரித்துக் கூறலாம். நீர்வாழ் பகுதி பாசி கொடி செடி முதலியனவாக விரித்துச் சொல்லப் படும். இவற்றையறிந்த நம்முன்ஞேர் சிலர் "நால்வகை மலர்" என்று கூறினர். அதற்குக் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என்று உரை கூறியுள்ளமையால் அப்பொழுது நால்வகை யாகப் பகுத்திருந்தனர் போலும் என்று எண்ணவேண்டியுள்ளது.

இன்று ஆராய்ந்து காண்புழி அவை ஏழு பிரிவாக விரிதலைக் காண்கின்றோம். நிலைத்திணை உயிர்கள் கிளை இலை மலர் காய் முதலிய பற்றிப் பல குடும்பங்களாகப் பிரிக்கப்படுகின்றன. ஆனால், அவற்றின் பெயர்களைக் கொண்டும் அதன் பகுப்புக் களை ஏற்படுத்தலாம். அவை திணை பற்றியும், வினை பற்றியும், பண்பு பற்றியும், உவமை பற்றியும் பெயர் பெற்றுள்ளன என நான்கு வகைப்படும். இவை ஒவ்வொன்றும் பலவாக விரியும் என்பது என் கருத்து. அறிஞருலகம் ஆராய்ந்து முடிவு செய்க.

**திணை பற்றிய பெயர்கள்:** வாழும் இடங்கள் பற்றி வருவ எனவும், அகத்திணையாகிய குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் எனவும், புறத்திணையாகிய வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, தும்பை, வாகை முதலியன திணை பற்றி வந்த பெயர்களாகும்.

**இடம்பற்றிப்பெற்ற பெயர்கள்:** நிலைத்திணை உயிர்கள் முதலில் தாம் தோன்றிய இடத்தையோ, அன்றித் தாம் இப்பொழுதுள்ள இடத்தையோ எளிதில் அறிவிக்கும் வகையில் அதன் பெயர்கள் அமைந்திருக்கும். சில நாடு சென் றாலும் அது தன் வரலாற்றை விளம்பும் வகையாகவும் பெயர் அமையப்பெற்றிருக்கும். "சுனைப்புன்கு" என்னும் ஒருவகைப் புன்கு மரம் அது இயல்பின் வளர்தற்குரிய இடத்தின் காரண மாகப் பெயர் பெற்றதாதலைக் காணலாம். பலவகைப் புன்க மரத்தினின்றும் வேறு பிரித்துக் காட்டுவதோடு அதன் இயற் கைத் தன்மையையும் நன்கு விளக்குகின்றது. வேம்பு மரங்களில் 'நிலவேம்பு' 'மலைவேம்பு' என்பன இயற்கையாய் வளரும் இடங்களைச் சுட்டுவதோடு, இப்பொழுது அவை இருக்க வேண்டிய இடத்தின் மாறுபட்டு வளர்ந்துள்ள தன்மையையும் நன்கு புலப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன.

'கடாரநாரத்தை' என்னும் நாரத்தை மரங்களுள் ஒரு வகையும், 'நக்கவாரம்பிள்ளை' என்னும் தென்னையுள் ஒரு வகையும், 'யாழ்ப்பாணத்தென்னை' என்னும் வகையும், 'யாழ்ப் பாணப்பனை' என்னும் பனையுள் ஒருவகைக்குமுள்ள பெயர் கள் அவை தோன்றிய இடங்களையும், அவ்விடங்களிலிருந்து அவைகள் நாடு கடந்து வந்த வரலாற்றையும் நன்கு விளம்பு கின்றன.

நெல்வகையுள் ஒன்றாகிய 'நெல்லூர்ச்சம்பா' என்னும் வகை தான் பிறந்த இடத்தையும், கத்தரி வகையில் "பங்களூர் கத்தரி" என்பதும், ஆரஞ்சு வகையுள் 'குடகு, சாத்துக்குடி'

என்னும் அடைபெற்றும், மிளகாயுள் ஒருவகை 'சாத்தூர் மிளகாய்' எனவும் தான் பிறந்த இடத்தையும், தனது உயர்வு களையும் நாமறியப் புலப்படுத்துகின்றன.

**அகத்திணைப் பெயர்பெற்றன:** அகத்திணை நிலப்பெயராகிய குறிஞ்சிநிலத்தடியாகப் பிறந்த பெயர்கள். இவை அங்கு மிகவும் செழித்து வளர்வதையும், ஏனையிடங்களில் அதன் செழிப் பின்மையையும் காணலாம். 'குறிஞ்சிச்செடி' என்பதும், 'குறிஞ்சாச்செடி' என்பதும், 'குறிஞ்சிக்கொடி அல்லது குறிஞ் சாக்கொடி' என்பதும், இதனடியாகப் பிறந்த 'குறிஞ்சி' என்ப தன் திரிபாகிய 'கொஞ்சி' என்னும் மற்றொருவகைச் செடியும் குறிஞ்சித் திணைநிலப் பெயரடியாகப் பெற்றமையை யுணர்த்து தலைக் காண்க.

பாலைநிலத்துத் தோன்றியமையால் பாலை எனப் பெயர் பெற்றவைகள் 'பாலை' 'வெட்பாலை' என்னும் மரப்பெயரும், 'குத்துப்பாலை' என்னும் ஒருவகைச் செடியின் பெயரும், 'ஊசிப்பாலை' என்னும் ஓர் கொடிவகையின் பெயரும் பாலைத் திணைபற்றிப் பெற்ற பெயராகும். முல்லைச்செடி, ஊசி முல்லைச் செடி, முல்லைக்கொடி, சந்தன முல்லை, காட்டுமுல்லைக்கொடி என்பன முல்லைத்திணையடியாகப் பிறந்த பெயர்களாகும். மருதமரம், பெருமருதமரம், மருதோன்றி அல்லது மருதணை, மருளிக்கொடி மருள் என்பன மருதத்திணையின் பெயர் பெற்றவைகளாகும். நெய்தல் என்னும் நீர்வாழ்வகை நெய்தற்றிணையின் பெயர் பெற்றவைகளாகும். இன்னும் இவைபோல்வன உளவேனும் தாலீபுலாக முறையாக இவை எடுத்துக் காட்டப்பட்டன.

**வினைபற்றிப் பெற்ற பெயர்கள்:** தொழில்பற்றி இடப்பட்ட பெயர்கள். இதிலும் சில உட்பிரிவுகள் உள்ளன. தானிருக் கும் இடத்திலிருந்தே வினை செய்வன எனவும், குடிபெயர்ந்து ஓடுவன எனவும், சில கொடுஞ் செயல் புரியும் உணர்வுபற்றி யன எனவும் மூவகைப்படும்.

மரங்களுள் ஒருவகை மரம் கதிரொளி (சூரியன்) இருக் குங்கால் இலைகள் விரிந்திருந்து கதிர் மறைந்ததும் சுருங்கிவிடும் இயல்புடையதாயுள்ளது. அது மக்கள் முதல் உயிரினங்கள் இரவில் தூங்குதல்போல அம் மரங்கள் விரிந்த இலையை சுருக்கி ஒடுங்கியிருத்தல் கருதி "தூங்கு மூஞ்சி" மரம் என்றும், அந்தி யில் (மாலையில்) மலர்தல்பற்றி ஒருவகைச் செடிக்கு 'அந்திமல்லிச் செடி' என்றும், நள்ளிரவில் மலர்தல் கருதி ஒருவகைக் கொடிக்கு 'நள்ளிருள் நாறி' அல்லது 'இருள் வாசி' என்றும், இரவில் இதழவிழ்தல் கருதி நீர்ப்பகுதியுள் ஒருவகைக்

கொடிக்கு 'அல்லிக்கொடி' என்றும், அதனுள் ஒருவகையாகிய அல்லி நீர்ப் போக்கில் அடித்துச் செல்லப்பட்ட ஓர் இலை காம்பின் பகுதியிலிருந்து வேர்விட்டுக் குடிபெயர்ந்து வாழ்தலின் அதன் ஓடுதல் தொழில் கருதி 'ஓடு அல்லி' என்றிட்ட பெயர் இன்று 'ஓடுவல்லி' என்றும் வழங்கப்படுகின்றன. இவை வினை பற்றி வந்த பெயர்களாகும்.

இப்பொழுதும் சில நேரங்களில் மக்கள் கூடிப் பேசிக்கொண்டிருக்கும்போழ்து தம்மை ஒருவர் உயர்த்திப் பேச, அதனை ஏற்று மறுத்துப் பேச இயலாத ஒருவர், தலை குனிந்தால் அவரைப் பார்த்து 'என்னப்பா! நாணிக்கொள்ளுகிறாய்?' என்று கேட்கிறோம். மனம் கூசி ஆற்றலிழந்து தலை குனிதல் போன்ற நிலை நாணம் என்னும் மெய்ப்பாட்டினை நமக்கறிவிக்கின்றது. தலைவணங்கி வாழ்க்கை நடாத்துபவர் அதிகத் துன்பமுறுதலை வாழ்க்கையில் காண்கின்றோம். அதுபோல ஆற்றோரங்களில் வளர்ந்திருக்கும் ஒருவகைப் புல் உயர்ந்து வளர்வதாயினும் காற்றடித்துழியும், வெள்ளம் வந்துழியும் நாணினர்போலத் தலைவணங்கி மீண்டும் நிமிர்ந்து வளர்ந்து வரும் புல்லை 'நாணல்' என்று மக்கள் தம் வாழ்வுடன் ஒப்பிட்டு நிலத்திணைகட்குப் பெயரிட்டுள்ளதைக் காண்மின்!

தன் உறுப்புக்களுள் எதைத் தொட்டாலும் அவ்வுணர்ச்சியினை அறிந்து ஊடல் மகளிர்போலப் பிணங்கி நாணிச் சுருங்கிக்கொள்ளும் நீர்வாழ் கொடிக்கும் நிலம்வாழ் செடிக்கும் 'தொட்டாற் சுருங்கி' என்று பெயர் பெற்றிருத்தல் அதன் வினை பற்றியும் உணர்வு பற்றியும் பெற்ற பெயர்கள் என்பது தேற்றம்.

**பண்புப்பெயர் பெற்றவைகள்:** பண்பு - குணம். அஃதாவது அவற்றினிடத்து இயற்கையாக அமைந்துள்ள மணம்பற்றியன, வண்ணம் பற்றியன, பயன்பற்றியன, சுவை பற்றியன என நாற்திறப்படும்.

**மணப்பெயர் பெற்றவைகள்:** கற்பூரம் - சூடம். அது போல் மணம் கமழும் செடிக்கும் மரத்திற்கும் '**கற்பூரவல்லிச் செடி, கற்பூர மரம்**' என்றும், மலம்போலும் மணமுடைய செடிக்கு '**பீக்களாத்தி**' என்றும், மரத்திற்குப் '**பீநாறிமரம்**' என்றும், நறுமணம் மிக்க கொழுந்திலைகளையுடையதற்கு '**மருக்கொழுந்து**' என்றும், ஓமவிதைபோலும் மணம் வீசுகின்ற கொடிக்கு '**ஓமவல்லிக் கொடி**' என்றும், நறுமணமிக்க ஓர் மரத்திற்கு '**நறவமரம்**' என்றும், தன் பகுதிமுற்றி மணங் கமழும் செடிக்கு '**மரு**' என்றும், மாங்காய்போல மணமும், சிறிது புளிப்புங் காரமும் சேர்ந்த ஒருவகை இஞ்சிக்கு '**மா இஞ்சி**' அல்லது

'மாங்காயிஞ்சி' எனவும் மணங் கருதியே மக்கள் பெயரிட்டனர் என்பதை நன்கு அதன் பெயர்களே விளக்கிக் காட்டுகின்றன.

**வண்ணப்பெயர் பெற்றவைகள் :** நீர்வாழ் வகையுள் ஒன்றாகிய 'நீலம்' என்னும் கருங்குவளை நீலநிறம் பெற்றுள்ளமை கருதி, அதற்கு நீலம் என்றே பெயரிட்டனர். இதுபோலவே செந்நிறமுடைய சிற்றல்லிக்கு 'செங்கழுநீர்' அல்லது 'செங்குவளை' என வண்ணங் கருதியும், செம்மை நிறமுடைய பெரிய அல்லிக்கு 'செவ்வல்லி' எனவும் பெயர் அமைத்தனர்.

நிலம்வாழ் வகையுள் மஞ்சள் வண்ணமுள்ள ஒருவகைக் கிழங்கை ஈனும் செடிக்கு 'மஞ்சள்' எனவும், செம்மையாகிய வண்ணமலரை யுடையதாய்க் காய்த்தறியாத ஓர் செடிக்கு 'செம்பரத்தை' அல்லது 'செவ்வரத்தை' எனவும், கரிய தண்டினையுடையதொரு வகை மரத்திற்குக் 'கருங்காலி' மரம் எனவும், வெள்ளிய பட்டையையுடைய வேல மரத்திற்கு 'வெள்வேல' மரம் எனவும் இவைபோல்வன எல்லாம் வண்ணங் கருதித் தமிழர்களிட்ட பெயர்களேயாகும்.

**பயன்பற்றிய பெயர்கள் :** நிலைத்திணை உயிர்க்கூறுகளை நாம் பயன்படுத்தும்போழ்து அவற்றால் ஏற்படும் நன்மை தீமைகள் கருதி இடப்பட்ட பெயர்கள், சில இடங்களில் தில்லை என வழங்கப்படும் ஒருவகைச் செடி மிக நச்சுத்தன்மை வாய்ந்தது. அது மக்களைக் கொல்லும் ஆற்றல் வாய்ந்தது. அதனை நன்கு ஆராய்ந்த தமிழ் மக்கள் அச் செடிக்கு 'ஆட்கொல்லி' என்று பெயரிட்டார்கள். அதன் விதை 'ஆட்கொல்லி விதை' என்றே இன்றும் வழங்கிவருகின்றது. சிலவகைச் செடிகள் தன்னை மிதித்த உயிர்களை மயக்குறச் செய்தலின், அதனை அவ்வியல்பு தோன்றவும் வேறுபாடு தோன்றவும் 'யானை மயக்கிச் செடி' 'புலிமயக்கிச் செடி' என்றும், மக்களை மயங்கச்செய்து திகைப்பை உண்டாக்குதலின் 'திகைப்பூண்டு' என்றும், தன்மீது பட்டார் உடலைக் காய்ந்து உறுத்திப் பின் விடாது சொறியச் செய்தலின், அச் செடிக்கும் கொடிக்கும் 'காய்ஞ்சொறி' அல்லது 'காய்ஞ்சூறு' என்றும் அவ்வவற்றின் இயற்பண்புபற்றிப் பெயரிட்டுள்ளனர். இவ்வாறு தீங்கு செய்யாது நன்மை செய்வனவற்றையும் ஆராய்ந்து பெயரிட்டுள்ளனர்.

மக்கள் விலங்குகளின் உடலில் ஏற்படும் வெப்பத்தைக் குறைத்து குடரைத் தூய்மையாக்கி, அதிலேற்படும் குடற்புண்ணை ஆற்றும் ஆற்றல்வாய்ந்த செடியை அது செய்யும் வினையை நன்கு தெரிந்து அதற்கு 'வெதுப்படுக்கி' என்றும், உடலின் பல பகுதிகளில் ஏற்படும் வாதநோய்களைத் தீர்க்கும்

காரணம்பற்றி 'வாதமடக்கி மரம்' என்றும் பெயரிட்டுள்ளனர். இஃதறியாத சிலர் இன்று 'வாதநாரணன்' என்று தவறாகச் சமயச் சார்புபற்றிக் கூறுகின்றனர்.

நம் வாழ்க்கையில் நாடோறும் இன்றியமையாது பயன் படுத்திவரும் தயிர் மோர் வகைகளை நம் முன்னோர் எங்ஙனம் தயாரித்து வந்தனர் என்பதை எண்ணில் பெருவியப்பை யளிக்கும். நாம் பாலைப் புரை குற்ற இன்று மோரைப் பயன்படுத்துகிறோம். ஆனால், நம் முன்னோர் அங்ஙனம் செய்யவில்லை. காய்ச்சிய பாலில் ஓர் மரத்தின் இலைகளைப் பறித்துப் போட்டு மூடி விடுவர். சில நேரத்தின்பின்னர் பால் தயிராக உறைந்து விடும். அவ்விலையை எடுத்தெறிந்துவிட்டுத் தயிரைப் பயன் படுத்திவந்தனர். அதன்பிறகு அம் மரத்திற்குப் 'புரைமரம்' என்று பெயரிட்டனர். குழந்தைகள் வயிற்றில் ஏற்படும் உப்பலை நீக்கும் ஒருவகைக் கொடிக்கு 'உப்பிலிக் கொடி' என்றும், ஆவும், எல்லாத் தழைகளையும் தின்னும் ஆடும் தொட்டுப்பார்க்காத ஒருவகைச் செடிக்கு ஆடாதொடை* என்றும், அது தின்னுமலையுள்ள மற்றொரு செடிக்கு 'ஆடுதின்னாப் பாளை' என்றும், தான் பயன்படுதலும் பயன்படாமையும்பற்றி வைக்கப் பட்ட பெயர்களாகும். இன்று நம் நாட்டு மக்கள் அதிகமாகப் பயன்படுத்திவரும் புகையிலை புகைதற்சிறப்புப்பற்றிப் பெற்ற பெயராகும். முதலில் புகைப்பதற்குப் பயன்பட்டது பின்னர் வாயில் போட்டு அடக்கி வைத்தற்கும் பொடிக்கும் பயன்படுவதாயிற்று எனினும், அதனை அதன் தனிச்சிறப்பாகிய புகைதலை மதித்தே புகையிலை யென்றே கூறிவருகின்றோம். இவைபோல்வனவற்றால் நம்மவரறிவின் நிலைமையை அறியலாம்.

**சுவைப்பெயர் பெற்றவைகள்:** நிலத்திணையின் இலை பூ காய் கனி கிழங்கு முதலியவற்றை உண்டு அறிந்த சுவை கருதி அதற்கு அந்தச் சுவைப் பெயரையே இட்டு வழங்கினர். இலை புளிக்கக்கூடிய ஓர் வகைச் செடிக்கு 'புளிச்சாச்செடி' என்றும், விளைந்த காயோடு புளிக்கும் இலையையுடையதோர் மரத்திற்குக் 'கொடுக்காய்ப்புளி' என்றும், பழம் முதல் இலை மலர் காய் கனி எல்லாம் புளிக்கும் மரத்திற்குப் 'புளியமரம்' என்றும், மாமரத்தில் புளிக்கும் ஒருவகைக்குப் 'புளிமா' என்றும், இனிக்கும் மாவிற்

* இதன் பசுந்தாள் உரமாகப் பயன்படுத்தப்படுகிறது. இது முன்னாளில் எருவிற்காக வேறு நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன்னேயே இலத்தீன் முதலாய பல நாடுகளுக்குச் சென்றது. அவற்றுள் ஈபுரு மொழியில் 'ஆடாதோடா' என்றே வழங்கப்படுகின்றது. பிற மொழிகளில் சென்றபோதிலும் தன் இயற்கைப்பெயர் திரிபின்றி வழங்குதலைக் காண்க. ஆங்கு எருவிற்கே இதனைப் பயன்படுத்தினர் என்றும் அறிகிறோம்.

குத் 'தேமா' என்றும், கார்ப்புச் சுவையுடைய கிழங்கிற்குக் 'கருணை' என்றும், மிளகுபோலக் காரச் சுவையுடைய இலைகளை யும் காயையும் உடைய செடிக்கு 'மிளகாய்ச் செடி'* என்றும், உவர்ப்புச் சுவையுடைய இலைகளையுடைய ஒருவகைச் செடிக்கு 'உப்புச்செடி' என்றும், துவர்ப்புச் சுவையுடைமைபற்றி ஒரு வகைச் செடிக்குத் 'துவரை' என்றும், சிறிது கடுத்துத் துவர்ப்பு அதிகமாக உடைமைபற்றி ஓர் வகை மரத்திற்குக் 'கடு' என்றும், அதன் காய்க்கு 'கடுக்காய்' என்றும், நாவுணர் சுவை கருதி அவற் றிற்கு அப்பெயர்கள் இடப்பட்டன என்பதையும், அப்பெயரே நன்கு நமக்கு விளக்கிக் கூறுகின்றன. இதில்சிலவற்றை இன்றும் அச் சுவைக்காகப் பயன்படுத்தி வருதலைக் காணலாம்.

**உவமை பற்றிய பெயர்கள்:** தமிழர்கள் தாம் கண்டு தாம் துய்த்தறிவது மட்டுமன்றி காட்சியிற்பட்டவற்றுள் சிலவற் றைக் காட்சியளவையான் ஒப்பிட்டு அவற்றிற்குப் பெயரிடத் தொடங்கினர். இன்று நாம் காலிலணியும் செருப்படிகளைப் போல இலைகளையுடைய பூண்டினத்துள் ஒன்றற்குச் 'செருப்படி' என்றும், இவற்றுள் பாதி வடிவினதாகவுள்ளவற்றிற்குச் 'சிறு செருப்படி' என்றும்பெயரிட்டனர். இது சுமார் ஆயிரம் ஆண்டு கட்குமுன் செய்யப்பட்ட மருத்துவ நூல்களில் கூறப்பட்டிருக் கிறது. இவற்றால் அதன் தொன்மையும் தெரிகின்றது. எலிக் காதுகளைப்போலுள்ள இலைகளையுடைய சிறு செடிக்கு 'எலிச் செவிக்கொடி' என்றும், ஆடு முயல்களின் காதுகள்போலுள்ள இலையுடைய கள்ளிக்கு 'ஆட்டுச்செவிக்கள்ளி' 'முயற்செவிக்கள்ளி' என்றும், எழுத்தாணியைப்போல இலைகளையுடைய ஓர்வகைப் பூண்டிற்கு 'எழுத்தாணிப் பூண்டு' என்றும் இலைகளை உவமைகருதி ஒப்புநோக்கி இடப்பட்ட பெயர்களாகும். கோழியைப்போலப் பூக்கும் ஓர்வகைக் கொடிக்குக் 'கோழிக் கொடி' என்றும், புலி நகம்போல மலரும் ஓர்வகைக் கொன்றைக்கு 'புலிநகக்கொன்றை' என்றும் பெயர். பெரிதாகப் பூக்கும் ஒருவகைத் தும்பைக்கு 'ஆனைத் தும்பை' என்று பெயர். விலங்குகளில் யானை பெரிதாக லின் அதுபோலப் பெரிதாக மலர்கின்றமை கருதி அவற்றிற்கு யானை என்னும் அடைமொழியைச் சேர்த்துத் தாம் கருதியதை வெளிப்படுத்துகின்றதைக் காண்மின். காய்களுள் மகளிர் மூக்கி லணியும் மூக்குத்திபோலக் காய்க்கும் ஓர்வகைக் கொடிக்கு

* நாட்டில் வளர்வதேயன்றி காட்டில் வளரும் ஒருவகைச் செடியுள் ளது. அதன் காம்பு இலையின் கீழ்ப் பகுதிகளில் சிறியதாய் வளைந்த முட முட்கள் உண்டு. இது காரத்தில் தனக்கு இணையாக எதையும் கூறமுடி யாத சிறப்பினையுடையது. இது மிளகாய் போலவே காய்க்கும் இயல்புடை யது. இவை சேலம் மாவட்டத்திலும், மற்றும் மேற்குமலைத் தொடர்களில் சிலவிடங்களிலும் இருக்கின்றன.

'மூக்குத்திக் கொடி.' என்றும், குமிழ்போலக் காய் காய்க்கும் ஓர் வகைச் செடிக்கு 'குமிழஞ் செடி' என்றும், பெரிதாகக் காய்க்கும் நெருஞ்சிச் செடிக்கு 'ஆனை நெருஞ்சி' என்றும், மகளிர் கூந்தல் நீண்டு தொங்குதல்போல நீண்ட கொத்தாகக் காய்க்கின்ற ஒரு வகைப் பனைமரத்திற்குக் 'கூந்தற்பனை' என்றும், அயில்போல ஒழுங்காய் வளர்ந்து தோன்றும் ஒருவகைக் கோரைக்கு 'அயிற் புல்' என்றும் இங்ஙனம் மக்கள் தம் காட்சியோடு ஒப்பிட்டுப் பல நிலைத்திணைகட்குப் பெயரிட்டு வழங்கி வந்துள்ளனர்.

இதுபோலவே, மேலைநாட்டார்களும் இடம் வண்ணம் உவமை கருதிய பெயர்களை இட்டு வழங்கி வருகின்றனர். இது போன்ற நிலைத்திணை உயிர்களின் உண்மைநிலையை நன்கு ஆராய்ந்து நற்றமிழில் வரைந்து தமிழ்மொழிக்கு ஆக்கந் தேடுவார்களாக. காலமும் வாய்ப்பும் நேர்ந்துழி இதில் கூறப்பட்ட எல்லாவற்றையும்பற்றி விரிவாக எழுத எண்ணியுள்ளேன்.

## அன்பு

அன்பாவது தம்முள் தொடர்புடையாரிடத்து நிகழும் உள்ளக் கசிவு. அது, ஊர்வன, நடப்பன, பறப்பன ஆகிய அஃறிணை உயிர்களிடத்தும், மக்களிடத்தும் தோன்றி அவ்வவரின் உள்ள நெகிழ்வால் நலம் பல புரிந்து வருவதைக் காணலாம்.

அன்புடைமை யென்னும் உயரிய பண்பு உயிர்களிடத்து இல்லையாயின், உலகமே இயங்காதன்றோ? சிங்கம், புலி, கரடி முதலிய கொடிய வன விலங்குகளும், பாம்பு முதலிய நச்சுத்தன்மையுள்ள உயிர்களும், தத்தம் மனைவி, மக்கள் முதலியவற்றினிடத்து எவ்வளவு அன்புடையனவாகக் காணப்படுகின்றன! ஈ, எறும்பு முதலிய மிக அறிவு குறைந்த உயிர்களும் எவ்வளவு ஒன்றுக்கொன்று அன்புடையனவாக இருக்கின்றன. ஒருயிர்க்கு இவ் அன்புடைமை யென்ற ஒன்றில்லையாயின், உயிரிருந்தாலும் உயிரற்ற வெற்றுடம்பென்றே பெரியோர் கருதுகின்றனர்.

ஆக்கத்துக்கும், ஊக்கத்துக்கும், பண்புக்கும், இன்புக்கும், துன்புக்கும் இவ் அன்பன்றோ நிலைக்களனாக இருக்கின்றது. அதனானே சமயக் கணக்கர்களும் இறைவன் திருவுருவைக் குறிக்குங்கால் 'அன்பு' வடிவு என்றே கழறுவாராயினர். மெய்யுணர்வு கைவரப்பெற்ற செய்ய நெறியினரான திருமூலரும்,

> அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
> அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
> அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே. (திருமந்திரம்.)

என அன்பின் உயரிய பெற்றியை அங்கை நெல்லியென விரித்துரைத்தமை நன்கு தெளியக்கிடக்கின்றது. இதனானே, பெருநாவலர் தாம் அருளிய திருக்குறட் பெருநூலில்,

> அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
> மறத்திற்கும் அஃதே துணை. (திருக் எசு)

எனத் திறம்பட— விளக்கமுற நன்கெடுத்து விளக்கி அருள்வாராயினர்.

# கம்பநாடர் காலம்

[தி. பொ. பழனியப்ப பிள்ளை, B.O.L.]

கவிச்சக்கரவர்த்தியெனத் தமிழ்ப்புலவரும், திராவிட வால்மீகியென வடநூற் புலவரும் பாராட்டிப் போற்றுகின்ற கம்பநாடர் வாழ்ந்த காலத்தைச் சேதுசமஸ்தான மகா வித்துவான், ரா. இராகவையங்காரவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்து வெளியீடாகிய செந்தமிழ்ப் பத்திரிகையில் ஏறத்தாழ 40-ஆண்டுகளுக்குமுன் நன்கு ஆராய்ந்துகாட்டி, கி. பி. 12-ம் நூற்றாண்டாமென முடிபு செய்தார்கள். அவர்கள் முடிபினைப் பின்பற்றிப் பல தமிழறிஞரும் தத்தம் கட்டுரைகளினும் உரை நடைச் சுவடிகளினும் அக்காலவரையறையினைப் போற்றிக் கொண்டார்கள். ஆயினும் ஒரு தமிழாராய்ச்சியாளர் மாறுபாடு கூறினார்கள். அவர்கள் தாம் வீரசோழிய விலக்கணப் பழைய ஏட்டுச்சுவடிகளைப் பார்க்க நேர்ந்தபோது வேற்றுமைப்படலம் ஏழாவது கலித்துறை உரையுள் உதாரணமாகக் 'கம்பனானிடைப் பெருமையுளது' என்ற தொடரைச் சிலவற்றிற்கண்ட தாகவும், அச்சுச்சுவடியில் ஆண்டுக் கண்ட 'நம்பனா ரிடைப் பெருமையுளது' என்ற தொடரினும் தாம் கண்ட தொடர்ப்பொருளே நேரிது ஆதல் கூடுமென்றும் எடுத்துக் கூறி, அவ்வீரசோழிய விலக்கணம் வீரராசேந்திர சோழன் காலத்தில் இயற்றப்பட்டதாகலின் அச்சோழன் காலமாகிய கி. பி. 11-ம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகக் கம்பநாடர் காலத்தைக் கொள்ளுதல் வேண்டுமென்றும் கம்பராமாயண ஏட்டுப்பிரதி களிற் காணும் தனியன்

> "எண்ணிய சகாத்தம் எண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
> நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
> பண்ணிய விராமகாதை..............."

எனக் கூறியவாறு கி. பி. 9-வது நூற்றாண்டேயாமென்றும் எதிருரைத்தார்கள்.

தமிழ்நூலாராய்ச்சியும், தமிழகச்சரித வாராய்ச்சியும் ஒருங் குடைய சரிதாசிரியர் சிலர் தத்தம் நூல்களில் கம்பநாடர் விக்கிரமசோழன் காலத்தவரெனவும், இரண்டாம் இராசராச சோழன் காலத்தவரெனவும், மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தவரெனவும் வேறுபட உரைத்துச் சென்றார்கள். இவ் வாறு பலரும் பலபடக்கூறிய காலவரையறைகட்குக் காட்டிய சான்றுகள் பெரும்பாலும் புறச்சான்றுகளாகவும் சிறுபான்மை அகச்சான்றுகளாகவும் உள்ளன. அண்மையில் வெளிவந்த

தமிழ்க்கட்டுரை நூலாகிய 'தமிழ்ச்சுடர் மணிகள்' என்பதனுள் கம்பநாடர் காலத்தினை நன்கு ஆராய்ந்து பலதிறத்தானும் ஏற்புடைத்தாகக் கொள்ளுதற்குரிய முடிபு, கி. பி. 12-ம் நூற்றாண்டேயாமென நிறுவியுள்ளது போற்றத்தக்கதாம்.

மேற்கூறியவாறு ஆராய்ச்சியாளருரைத்த சான்றுகள் பலவற்றினும் கம்பராமாயணம் உயுத்தகாண்டம் மருத்துமலைப் படலத்து வரும் பாடலடியாகிய

"சென்னிநாட் டெரியல் வீரன் தியாகமா விநோதன் தெய்வப்
பொன்னிநாட் டுவமை வைப்பைப் புலன்கொள நோக்கிப் போந்தான்"

என்பதிற் குறித்த சோழன் மூன்றாங்குலோத்துங்க சோழனே என்று கல்வெட்டு ஆதாரங்கள் காட்டி நிறுவிய அகச்சான்று பெரிதும் வலியுடைய ஆதாரமாகும். ஆயினும், ஈண்டுக் குறித்த 'சென்னி' 'வீரன்' 'தியாகமா விநோதன்' ஆகிய பெயர்கள் எல்லாம் மூன்றாங் குலோத்துங்கன் சிறப்புப் பெயர்களேயாகப் பயின்றுள்ளனவேயன்றி இயற்பெயர் சுட்டப்பெறவில்லையெனச் சிலர் தடையுரைப்பதுண்டு. இத்தடையினையொழித்துத் தாங்கவல்ல பிற சான்றுகள் தமிழறிஞருக்கு மிக்க வன்பும் இன்பும் ஊட்டுமாதலின், அவற்றைத் தெளிவுறுத்தப் புகுவதே இக்கட்டுரையின் நோக்கமாம்.

மிக அருமையாகிய பழம்பாடற்றிரட்டு நூலாகத் தமிழகத்தில் பல்லாண்டாக நிலவிவரும் 'தமிழ் நாவலர் சரிதை' என்பதனுள் கம்பநாடர் வாக்காகவுள்ள பல பாடல்களுள்ளன என்பது தமிழறிஞர் அறிந்த செய்தி. அவை அக் கவிஞர் பெருமானின் வாழ்க்கை வரலாற்றுப் பகுதிச் செய்திகள் சிலவற்றைத் தெரிவிக்கின்றனவாதல் காணலாம். ஆதலால், அவற்றின் துணைகொண்டு நோக்குவாம். கம்பநாடர் பாடிய தனிப் பாடற்றொகுதியுள், "திருவொற்றியூர் வல்லியைக் கண்டு சொல்லிய கலிப்பா" எனவும், "பின்பு சொன்ன விருத்தம்" எனவும் இரண்டு செய்யுள்கள் அடுத்து எடுத்துக் காட்டியுள்ளன. அவை வருமாறு :—

கலிப்பா

இல்லென்பார் தாமவரை யாமவர்தம் பேரறியோம்
பல்லென்று செவ்வாம்பல் முல்லையையும் பாரித்துக்
கொல்லென்று காமனையுங் கண்காட்டிக் கோபுரக்கீழ்
நில்லென்று போனாரென் னெஞ்சைவிட்டுப் போகாரே.

விருத்தம்

நடக்கி லன்னமா நிற்கினல் வஞ்சியாங்
கிடக்கி லோவியப் பாவை கிடந்ததாங்
தடக்கை யான்சது ரானன பண்டிதன்
மடத்து ளாளென் மனத்துறை வல்லியே.

இவ்விரண்டு பாடலானும் கம்பநாடர் திருவொற்றியூரிற் சின்னாளுறைந்தாரென்பதும், அவ்வூரில் அக்காலத்துத் திகழ்வுற்ற சதுரானன பண்டிதன் மடத்துத் தாசியாகிய வல்லி என்பாள் காதற்பிணியிற் பிணிப்புண்டிருந்தன ரென்பதும் தெரியக் கிடக்கின்றமை காண்க. இவற்றுள் இரண்டாம் பாடல் "சதுரானன பண்டிதன்" என்ற சைவகுரவர் ஒருவர் பெயரினைச் சுட்டுதலைக் கூர்ந்தறிக. இதனால் கம்பநாடர் திருவொற்றியூரில் தங்கியிருந்த நாளில் 'சதுரானன பண்டிதன்' என்ற சைவகுரவர் அங்கு ஒரு சைவ மடத்தில் வாழ்ந்த செய்தி உறுதிபெறல் தேர்ந்துகொள்ளுக. இச்செய்தியே திருவொற்றியூர் ஆதிபுரீச்சுவரர் சிவாலயத்து மேலைச்சுவரிற் கண்ட கல்வெட்டு ஒன்றால் வலியுறுவதனைக்கொண்டு கம்பநாடர் காலத்தினை நன்கு தெளியலாம். ஆதலின், அக் கல்வெட்டினை ஈண்டுக் குறிக்கின்றேன் : காண்க.

தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி 5, பக்கம் 493—நெ. 1353, நெ. 401 of 1896-வது ஆண்டு.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ புகழ்மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் வளர மலர்மகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி சூடித் தென்னவர் நிலைகெட மீனவர் குலதர விக்கலர் சிங்க——
2. ணர் மேல்கடல் பாயத் திக்கனைத்துந் தன் சக்கர நடத்தி வீர ஸிங்காஸநத்து புவன முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோவிராஜகேசரி பந்மரான உடையார் ஸ்ரீ குலோத்துங்க சோழ தே——
3. வர்க்கு யாண்டு ஏழாவது நாள் இருநூற்றுத் தொண்ணூறு அதிகாரிகள் ராஜேந்த்ர சோழவளநாட்டுப் பனையூர்நாட்டுப் பொய்கை நாட்டு பெரியபாக்கத்துக் குளமுழார் எறன் கூத்தனுரான ராஜ——
4. ராஜ மூவேந்த வேளார் ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் புழல்நாட்டு திருவொற்றியூருடையார் கோயிலில் ராஜராஜன் மண்டபத்துக் கோயிற் கருமம் ஆராயாவிருந்து இத்தேவர் தேவ——
5. தானமான ஊர்கள் கணக்கு கெட்டுப் புழற் கோட்டத்துப் புழல்நாட்டு மணிக்கங்கைப் பாகுதேவர் கணக்கின்படி முன்பு நிமந்தஞ் செய்தபடி பொன் பன்னிரு கழஞ்சின்மேல் ஏற்றம் இறுத்து வருகிற பொன்னிரு கழஞ்சேய் ஏழு மஞ்சாடியினால் பொன் கழஞ்சுக்கு காசு மூன்றே அறுமாவாக கா——

6. சு நாற்பதும் இந்நாட்டுத் திருவொற்றியூர் நிலத்து யாண்டு ஏழாவது முதலேறின ராஜராஜப் பெருந் தெருவில் சாலியர் யாண்டு ஏழாவது முதல் இறுக்க நிச்சயித்த காசு அறுபதும உடையார் கோயிலில் காலளப்பார் காலளவு பாட்டத்து யாண்டு ஏழாவது வரையும் தேவர் பண்டாரத்து வைத்து—
7. வாராமையால் காலளவு பாட்டக்கு யாண்டேழாவது முதல் வைக்க நிச்சயித்த காசு இருபத்து அஞ்சும் ஆக காசு நூற்றிருபத்தைஞ்சு உடையார் திருவொற்றி யூர் உடையார் வீரராசேந்திரன் திருப்பள்ளி எழுச் சிக்கு வேண்டும் நிமந்தங்களுக்கு நிபந்தஞ்செய்து கொடுக்கவென்று அதிகாரிகள் இராஜராஜ மூவேந்த வே—
8. ளார் ஏவப்புரவுவரித்திணைக் களத்துக் கணக்கு ஊற் றுக்காட்டுக் கோட்டத்துப் பாலையூர் நாட்டு இரா ஜேந்திர சோழநல்லூர் பாலையூர் கிழான் கம்பன் கவியையனும் ஸ்ரீகாரி சோழமண்டலத்து க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருநறையூர் நாட்டுக் கொற்ற மங்கலத்து கொற்ற மங்கலமுடையான் சீராளன் கண்டராச்சனை இருமடி சோழ திருநறையூர் நாட்டு விழுப்பரைய—
9. னும் மடமுடைய சதுராநந பண்டிதரும் கணக்கு திருவொற்றியூர் உடையான் நாராயணசானும இருந்து நிபந்தஞ் செய்தபடி—

இக் கல்வெட்டின் இரண்டாவது வரியில் இறுதித் தொட ராகிய "கோவிராஜகேசரி பன்மரான உடையார் ஸ்ரீ குலோத் துங்க சோழதேவர்" என்பது அக்காலத்து அரசுபுரிந்த சோழன் பெயரினைச் சுட்டுவது. தொடக்கத்துப் "புகழ் மாது விளங்க ஜயமாது விரும்ப" என்று வரும் மெய்க்கீர்த்தியானது சோழ மன்னருள் மூன்றும் குலோத்துங்க சோழனுக்குரியது என்பது அவனுக்குரிய பிற கல்வெட்டுக்களின் மெய்க்கீர்த்தியி னின்று கண்டுகொள்ளலாம். அன்றியும், இக்கல்வெட்டிட் கண்ட சரிதக் குறிப்புக்களானும் அஃதும் உறுதியாதலுடை யது. இக்கல்வெட்டின் இறுதி 9 வரியில் "மடமுடைய சதுராநந பண்டிதரும், கணக்கு திருவொற்றியூர் உடையான் நாராயண சானும் இருந்து நிமந்த செய்தபடி" என்றிருத்தலால், திரு வொற்றியூர்ச் சைவ மடத்தில் சைவ குரவராகச் சதுராநந பண்டிதர் ஒருவரிருந்தனரென்றும், அவரும், கணக்கனாகிய திரு வொற்றியூருடையான் நாராயணசான் என்பானும் உடனிருந்து

இக்கல்வெட்டு நிபந்தங் கண்டார் என்றும் கூறுவது காண்க. ஆகவே, அக்காலத்து அரசனான மூன்றாங் குலோத்துங்க சோழன் ஆணை தாங்கிச் சதுராநந பண்டிதராகிய சைவ குரவர் திருவொற்றியூர்ச் சிவாலயத்து நிபந்தஞ் செய்தமையால் அச் சைவ குரவரும் அம்மன்னரும் ஒரு காலத்தினராதல் தெள்ளிது. அச்சைவ குரவர் பெயரினைச் சுட்டி, அவ்வூரிலிருந்த கம்பநாடர் பாடியிருத்தலின், அக்கவிஞர் பெருமானும் அச்சைவ குரவரும் அச்சோழ மன்னனும் ஒரே காலத்தவர்களெனக் கொள்ளுதற்கு இக்கல்வெட்டு உரிய சான்றாதல் கண்டுகொள்க.

இக்கல்வெட்டுள் கூர்ந்து நோக்குதற்குரிய செய்தி பிறி தொன்றும் உள்ளது. இதன் எட்டாவது வரியுள் "கம்பன் கவியையனும்" என்பது நம் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்ப நாடரையே குறிப்பதோ என எழுகின்ற ஐயப்பாடு ஆகும். கம்பநாடர் சின்னாள் தொண்டைநாட்டில் வாழ்ந்தனர் எனற் குப் பிற சான்றுகள் பல உள்ளன வாதலால் அவை கொண்டு அவர் அக்காலத்து மன்னன் ஆணை மேற்கொண்டு அரசியல் பெரும்பதவி யொன்று தாங்கி அங்கு வாழ்ந்தவராமெனத் துணிதற்கு இடனுளதாகின்றது. கம்பநாடர், தொண்டைநாட்டு ஊர்களாகிய புழல், மயிலாப்பூர், நென்மலி இவற்றில் அக் காலத்து வாழ்ந்த காளிம்பன் நிரைமேய்ப்பானையும், தட்டான் திருவாலியையும், தச்சன் கங்கணவனையும் பாடியமை யும், திருவொற்றியூரில் தாம் இராமகாதை பாடி முடிக்கக் காளியைப் பந்தம் கொள்ளுமாறு வேண்டிப் பாடியமையும் தமிழ் நாவலர் சரிதைப் பாடல்களால் நாம் நன்கு அறியலாம். விரி வஞ்சி அப்பாடல்களை ஈண்டுக் குறிக்கவில்லை. ஆகவே, அவர் தொண்டை நாட்டினராகச் சின்னாளுறைந்தமை தெளிவாம். அந்நாளில் அப்பெயரைத் தாங்கிய பிறர் இருத்தற்கு நேர்ச்சி யின்மையும் ஈண்டு நோக்கற்பாலது. இனிப் பிறரைக் குறிப்பதோ என்பதும் கருதத்தக்கதாகும்.

எளியேன் இக்கட்டுரையிற் கம்பநாடர் காலத்தை வரை யறைப்படுத் துணர்ந்துகோடற்குரிய அரிய சான்று இக்கல் வெட்டு எனக் காட்டியுள்ளது இதுவரை தமிழறிஞர் அறி யாத புதுமைச் செய்தியாகும். இஃது இதற்கு முன் பற்பல பேரறிஞர்களும் கண்ட முடிபிற்குப் பேராதரவாக நிற்றலை அறிஞர் கண்டு ஏற்றுக்கொள்ளுவார்களென எளியேன் கருது கின்றேன்.

கம்பநாடர் புதுவைச் சேதிபன், மெண்மெணய்ச் சடையன் எனப் பாராட்டிப் பாடிய சில பாடல்கள் மூவலூரிற் கண்ட மூன்றாங் குலோத்துங்க சோழன் காலத்துக் கல்வெட்டுகளுடன்

விரவப்பொறிக்கப்பெற்ற செய்தியும் கம்பநாடரும், அவர் பாராட்டுப்பெற்ற சடையப்ப வள்ளலும் மூன்றாங் குலோத் துங்க சோழனும் ஒரே காலத்தவர்களெனக் காட்டுவது பிறி தொரு ஆதாரமாகவும் காண்க.

இம்மூன்றாங் குலோத்துங்க சோழனின் ஆட்சிக்காலம் கி. பி. 1178 முதல் கி. பி. 1218 வரை என்று சரித்திராசிரியர் கள் தக்க ஆராய்ச்சியால் முடிவு செய்துள்ளார்களாதலால் கம்பநாடரின் காலம், கி. பி. 12-ம் நூற்றாண்டின் பிற்பகுதியே யாமென்பது தட்டறக்கொள்ளுதற்குரிய கொள்கையாகும். இக்காலவரையறையை முதற்கண் முட்டறுத்துணர்த்திய முற்பட்ட தமிழறிஞர் ஆராய்ச்சியே நிலைபேறுடையதாதலறிக.

## நுண்ணறிவு

'எழுமையும் ஏமாப்புடைத்'தாய் வரும் கல்வியறிவு நுண் ணறிவென்று சொல்லப்படும். அதுவே இயற்கை அறிவென்றும் கூறப்படும். அவ்வறிவு, இப்பிறப்பில் பயிலும் நூலறிவாலும், நுண்மாண் நுழைபுலச் செம்மற் செல்வர்கள் நுனித்துணர்ந்து கூறும் செவிச்செல்வமாம் கேள்வியறிவாலும் முறையே எருவும் நீரும் வாய்க்கப்பெற்று எழில்பெறச் செழித்து வளரும் உழு முதற் பயிர்போல் வளரும். இவ்வறிவையே செயற்கையறிவெனக் கூறுவர். செயற்கையறிவு இல்வழி இயற்கையறிவு ஏதும் பயன் பெறாது. இது பழக்கமில் நாப்போல் அடங்கிவிடும் என்பது பயின்றார்க்கெல்லாம் தெளிவாம். இருவகை அறிவும் பெற்றாரை எவ்வகைச் சூழ்ச்சியாலும் மாற்றார் எவரும் வெல்ல வல்லவ ராகார். இவ்வுண்மையைப் புலப்படுத்தும் தமிழ்மறை.

"மதிநுட்பம் நூலோ டுடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை." (திருக்குறள், சுஙசு)

—இனியன்.

# மதிப்புரை

திருவாசகம் நீத்தல் விண்ணப்பம் கதிர்மணி விளக்கம் பகுதி 2 என்னும் அரும்பெரும் அருள் நூல் வரப்பெற்ருேம். இதன் பேருரை யாசிரியர், மகிபாலன்பட்டி மகாமகோபாத்தியாய, முதுபெரும்புலவர், பண்டிதமணி, திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள் ஆவர். 1947-ஆம் யாண்டில் திருச்சதகத்துக்கு ஈடும் எடுப்புமில்லாப் பீடுசேர் பேருரை ஒன்று இயற்றியுள்ளார்கள்.

நீத்தல் விண்ணப்பப் பேருரை நீத்தாரையும், யாத்துக் கற்கச்செய்யும் நிலைமைத்து. கருத்துப் பதப்பொருள் விரிவுடன் காணப்படினும், அகல வுரைக்குக் கூறிய அனைத்தும் கொண்டிலங்குகின்றது. பழைமை (புராணம்) யின்கண் கூறப்பெறும் யானை, புலி, பாம்பு, மதி, வெண்டலைமாலை, கங்கை, சடை, கயிலை முதலிய முழுமுதலின் தொடர்பாம் பல்பொருட்கும் பருப் பொருளேயன்றி நுண்பொருள் கண்டு நிலைநாட்டியிருக்கும் சிறப்பு ஆசிரிய ரவர்கட்கேயுரியது. முன்னுள்ளார் பலரும் பலபடக் கூறியிருப்பினும், இவர்கள் போன்று அறுதியிட்டு அறிவியல் நூற்கும் ஏற்பப் பகுத்தறிவுப் பண்பினரும் உளம்பற்றிக் கைக்கொண்டொழுகுமாறு வலியுறுத்துக்கூறி மாண்புபெற்ருர் எவருமிலர்.

நடையொழுக்கும், தனித்தமிழ் மணமும், இனிமையும், எளிமையும், திட்பநுட்பச் செறிவும், இன்சுவையும் நவில்தொறும் நவில்தொறும் நன்கு வளர்வன. குறிப்புப்பொருளாக உள்ளெறும்பு, இகபரம், நானிறம் முதலியவற்றுக்குக் கூறியுள்ளமை, கற்ருரும் மற்ருரும் கடைப்பிடிக்க

சித்தாந்த நுண்பொருள் இடமிடந்தோறும் எழில்பெற மிளிர்வன காணுங்கால் சித்தாந்த நூன்முழுதும் கற்றற்காம் கருவூலம் எனலாம். உவமைச்சிறப்பு, அணி, இலக்கண அமைவு, அகப்பொருள் புறப்பொருள் நுணுக்கம், மேற்கோள் வனப்பு முதலியவற்றைக் கண்டு கற்பார் அவ்வந் நூற்களை ஆழ்ந்து கற்றறியும் அறிவெல்லாம் ஓரிடத்து எளிதிற் கண் டுவக்கும் இன்பநிலையமாகும் இப்பேருரை. 'மாசில் வீணையும்' என்னும் ஆளுடைய அரசருளிய திருப்பாட்டின் நயம் உரைக்குங்கால் ஐம்புல அருள் நுகர்வும் அதன்கண் காட்டப்பெற்ற பெருமை வியத்தொறும் வியப் பிறந்தன்று. இதனுல் இவர்கள் பன்னிரு திருமுறைக்கும் நல்லுரை கண்டு தொல்லையதாம் தமிழ்த்தாயின் எல்லையிலாத் துணையுடன் செந்நெறி மாண்பும் சிறக்க ஞாலமெலாம் பெற்று வாழ வழிசெய்ய வேண்டுமென்று யாவரும் கேட்டுக்கொள்ளவேண்டும். அதன் அறிகுறியாக இந்நூலை வாங்கியும் வாங்குவித்தும் ஓதியுணர்ந்துய்ய வழிசெய்வார்களாக.

ஆசிரியரவர்கள் நீண்டநாள் வாழ இத் திருத்தொண்டே வழிசெய்வ தாகும். என்னை? ஆளுடைய அடிகள் ஈண்டுத் தங்கத் தலைவன் அருளியது திருவாசகத்தேனின்பொருட்டே; டாக்டர், போப்பையர் அவர்கள், முதுமையில் தொடங்கிய திருவாசக மொழிபெயர்ப்பே அவர்கட்கு நெடு வாழ்நாள் வழங்கியது என்பனவற்ருனென்க.

ஆகவே, ஆசிரியரவர்களும் எடுத்துக்கொண்ட திருவாசக முற்றுக்கும் கதிர்மணி விளக்கங்கண்டு ஏனைய முறைகளுக்கும் விளக்கங்காண, வலுவும் வாழ்நாளும் வாய்ப்பும் துணையும் இணையிலா அம்பலவாணன் என்றும் அருள்வானுக. விலை 2 12 0. கிடைக்குமிடம்—நம் கழக நிலையங்கள். செட்டிநாடு அச்சகம், காரைக்குடி.

உணவுநெறி: ஆசிரியர் சென்னை, சிவ. முருகேச செட்டியார் அவர்கள் விலை 0-8-0. இவர்கள் தமிழ்ப்புலவரும் மருத்துவப் புலவரும் ஆவார்கள். இந்நூல் சிறந்தமுறையில் யாக்கப்பட்டுள்ளது. தூய வுணவு, ஆக்குமுறை, உண்ணும் முறை, கால இட அமைவு, உரம்தரும் வழி பலவும் உரைக்கப் பட்டுள்ளன. யாவர்க்கும் இன்றியமையாத திந்நூல்.

உணவு உடலையும் உள்ளத்தையும் நல்ல நிலையில்வைத்து உணர்வை எழுப்பிக் கடவுள் நினைவுடன் கடமையை ஆற்றச்செய்தற்குப் பெருந் துணைசெய்கின்றது. ஒருமனப்பட்டு நெடுநாள் நோயின்றிவாழ மூச்சுப் பயிற்சி இன்றியமையாதது. இவற்றை வளிநிலை யென்பர்; இதுவே செறிவு நெறியாகிய யோகப்பயிற்சி. அதற்கு வேண்டும் முறைமைகளும் இதன்கண் எளியமுறையில் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வாசிரியர் இவைபோன்ற பல நூல்கள் இயற்றி நாட்டுக்கும் மொழிக்கும் நன்னெறிக்கும் நற்றொண்டு புரியச் செந்தமிழ்ச் செல்வர்கள் முந்துற்று ஊக்குவார்களாக.

---

# செய்திகளும் குறிப்புகளும்

**மணிவிழா : திரு. வீ. குமாரவேலுப் பிள்ளை, அவர்கள்**

குலசேகரன்பட்டினம் சித்தாந்தச்செல்வர், செந்தமிழ்ப்புலவர், நூலாசிரியர், போதனாசிரியராக விளங்குபவர். இருபாலார்க்கும் மெய்கண்ட அருள் நூல்களை முப்பதாண்டுகளுக்கு மேலாகக் கைம்மாறு கருதாது போதித்துவருகின்றார்கள். அவர்கட்கு நவம்பர்த் திங்கள் 26-ஆம் நாள் மணிவிழா நிகழும். அப்பொழுது பணமுடிப்பும் நினைவு வெளியீடும் வழங்கப்பெறும். அவர்களும் அவர்கள் தொண்டும் நீடுவாழ்க.

**நூல்நிலையத் திறப்பு :**

"சிவஞானமுனிவர் நூல் நிலையம்" 18-10-50-ல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகச் சார்பில் திருநெல்வேலிக் கழக நிலையத்தில் துவக்கி வைக்கப்பெற்றது. அந்நிலையத்தைத் திருவாவடுதுறை ஆதீன மகாசந்நி தானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண அடிகள் தம் அருட்திருக்கையால் திறந்து வைத்தருளினார். மெய்கண்டான் நூற்குப் பேருரை வகுத்தருளி ஆதீனத் துக்கே அரும்பெரும் புகழும் விளக்கமும் ஆக்கியருளிய முனிவரர் நூல் நிலையம் அவ்வாதீனகருத்தரவர்களால் திறக்கப்பெற்றமை எல்லாவகை யாலும் சீரும் சிறப்பும் வாய்ந்ததேயாம்.

கழக ஆட்சிக் குழுவினருள்ளிட்டுச் செந்தமிழ் மக்கள் பெருங் குழுவினராகக் கூடிக் கண்டுகளித்துப் பாராட்டும் மகிழ்வும் பகர்ந்தனர். பெருநாவலர் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள், கழகப் புலவ ராகவும், நூல்நிலைய மேற்பார்வையாளராகவும் பணியாற்றிவருகின்றனர். நூல்நிலையப்பயனை அன்பர்கள் நுகர்ந்து அறிவாற்றலால் சிறந்து செந் தமிழும் செந்நெறியும் பேணி வாழ்வாராக. திவான்பகதூர் திரு. ஆவுடை யப்ப பிள்ளையவர்கள், கழகம் ஆற்றிவரும் அரும்பெரும் தொண்டுபற்றியும், நூல்நிலைய மாண்புபற்றியும், அடிகளார் அருட் சிறப்புப்பற்றியும், தென் னாட்டு வருகைபற்றியும் பலபடப் பாராட்டிப் பகர்ந்தனர்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



தென்குலசை வாழ்சான்றோன் சித்தாந்தப் பேராசான்
மன்னுமணி நாள்வாழ்க வாய்ந்தருளால்—அன்னவன்பேர்
வீர *குமாரவேல் பிள்ளை*யென யாவரும்வாய்
ஆர மொழிவரன் பாய்ந்து.




சிலம்பு ௨௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௧, கார்த்திகை திசம்பர், 1950 | பரல் ௪

# 'சித்தாந்த வித்தகர்' மணிவிழா

[சித்தாந்த பண்டிதர், புலவர், ப. இராமநாத பிள்ளை.]

'ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்' என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்பவர்கள் ஆசிரியர், திரு. வீ. குமாரவேலுப் பிள்ளையவர்கள் ஆவார்கள். பொருநையாறு சந்தனமணமும் தென்றற்காற்றும் தீந்தமிழ்ச்சுவையும் தன்பால் ஒருங்குமருவ என்றும் பொன்றாக் குலக்கொடியாய் நின்று நிலவி வளப்படுத்தும் நெல்லைமாவட்டத்துப், படை வீடு ஆறனுள் இரண்டாவதாகத் திகழும் 'திருச்சீரலைவாய்' என்னும் திருச்செந்தூரின் அண்மையில் தென்பால் எட்டுக்கல் தொலைவிலுள்ளது குலசேகரன்பட்டினம். இது இரண்டுபாலும் கடலாலும் மற்றிரண்டுபாலும் மணலாலும் சூழப்பெற்று நெய்தல் நிலம் சார்ந்த திருவூர்.

இவ்வூர், முன்னாளில் பெருங்கடற்றுறைப் பட்டினமாகவிருந்தது. பின்னாளிலும் ஓரளவுக்குச் சிறந்த துறைமுகமாகவே இருந்தது இப்பொழுது தோணிகள் வந்துபோகும் துறைமுகமாகத் துலங்குகின்றது. இவ்வூர் உடல்நலமுடன் வாழ்வதற்கு உகந்தது. பழமையும் புதுமையும் கிழமைகொண்டாடிப் பழமைப் பண்பாடகலா வளமை வாய்ந்தது. நீர்நலக் கேட்டாலும், போக்கும் வரத்தும் உறையுளும் அளவின்றி யிருப்பதாலும், ஒவ்வா உணவு செயலுடையார் நீக்கமுடியாத நிலைமையில் அடுத்தடுத்து உடன்கலந்து உறைவதாலும் ஏற்படும் கொடு நோயும் ஒட்டு நோயும் வர வாய்ப்பில்லாத நலம் பொருந்தியது.

அம்மை, முப்பானிரண்டறம் எப்பாலும் வளர்த்து இன்னருள் செய்த எழில் நினைவாம் காஞ்சியும், அப்பன், ஐம்பெருங்

கூத்தை ஆருயிர்ப்பொருட்டு எப்பொழுதும் இயற்றி ஒப்பிலா அருள் செய்யும் ஒண்கினைவாம் செப்பற்கரிய தில்லையும் வைப்பாயமைந்ததுபோல், முறையே வடபாலும் தென்பாலும் இருபெருந் திருக்கோவில்கள் அமைய இவற்றுக்கு நாப்பண் நன்மக்கள் வாழும் நலம் அமைந்தது இவ்வூர்; சாலச் சிறந்த வேளாண் மாந்தர் பெருக வாழ்வது இவ்வூர்; தொன்றுதொட்டுப் புலமையும், புலனடக்கமும், புண்ணியப் புரிவும் மிக்குள்ளார் பலர் வாழ்ந்து வந்ததும் வருவதுமாகிய வாய்மை நிறைந்த திவ்வூர்; மெய்யடியார்கட்கு எய்ப்பில் வைப்பாய் இலங்குவது இவ்வூர்; "கரவாது கைசெய்தூண் மாலையவர்" பலர் பகுத்துண்டு வாழும் பண்புடையதிவ்வூர்.

இத்துணைச் சிறப்புவாய்ந்த இவ்வூரின்கண் தொன்மைநலங் குன்று வேளாண் குலத்து நன்னுள் பொலியத் திருவருள் வலத்தால் தோன்றியவர் நம் **ஆசிரியர், 'சித்தாந்த வித்தகர்'** திரு. **வீ. குமாரவேலுப் பிள்ளை**யவர்கள். அவர்களின் தந்தையார் திருப்பெயர் வீரகுமாரசாமிப் பிள்ளை; தாயர் திருப்பெயர் சூரியவடிவம்மையார். இருவரும் செந்நெறிச் செல்வர்; ஈவு இரக்கம் வாய்ந்தவர்; நாவியன் மொழியும் நன்கினிமைவாய்ப்ப மொழிபவர்; நோன்பு பல நோற்கும் நோன்மையர்; அடியாரிணக்கம் முடியக்கொண்டவர்; படியின்மிசை எடுத்துக்காட்டாம் பான்மையர்.

இளமையில் உள்ளூரிலும் வெளியூரிலும் தமிழாங்கிலங்கள் முறையுறக் கற்றுச் சிறந்தனர். சூழ்நிலைக்கேற்றவாறு அடக்கமும் அறிவும் அன்பும் துறவுள்ளமும் நிறைவும் உறலாயின. அதனுல், கைத்தொழில் வேட்கையும் எழுந்தது. நூற்றலும் நெய்தலும் ஏற்றமுற ஆற்றினர். ஆணமிக மாணவர்க்குப் போதிப்பதே அருந்தொண்டெனக் கொண்டாற்றினர். 'பண்டாரச் சிவன் ஞாபகப் பள்ளிக்கூடம்' என்னும் கல்லூரியில் நல்லாசிரியராக நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக இருந்து முயன்று தொண்டு புரிந்தனர். உடனுழைக்கும் ஆசிரியர்களும், தலைவர்களும் தனிமதிப்புக்கொள்ளும்படியான நிலைமையில் பணியாற்றி வந்தனர்.

மாணவர்கள் மகிழ்ச்சியும் கிளர்ச்சியும் மிக்கவராய்க் கல்வி பயிலுமாறு அன்பும் முறுவலும், அகமும் முகமும் மலர இன்புறுத்தும் இன்னுரையும்கொண்டு இடையிடையே கதைவழி யூக்கியும் கற்பிப்பர். இல்லற வாழ்க்கையை 'வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து' நல்லறமாக நன்காற்றுபவர். பொருள்களை நுண்ணிதாய் எளிதிற் காணும் கூர்மையும், கண்டவற்றை என்றும் மறவாச் சீர்மையும், ஆற்றும் மாண்பும் வாய்ந்தவர்.

நாட்டுப்புறத்தில் நாட்டும் நற்றொண்டே நகர்ப்புறத்தும், ஊர்ப்புறத்தும், உலகத்தும் நிலவி உய்வினைத் தருமென்னும் பெருநோக்கு உடையவர்; அதற்கேற்றவாறு உள்ளூரிலேயே கிழமைதோறும் மாணவரும் பிறரும் தற்சூழச் செழுந்தமிழ் மறையாம் திருமுறை ஓதித் திருக்கோவில் வழிபாடு செய்வித்தும் செய்தும் வரும் செம்மையர்; செம்பொருட் பெருநூலாம் சித்தாந்தத் திருமுறைகளை இருபாலார்க்கும் உளங்கொளுமாறு ஒல்லும் வகை ஓவாது கற்பித்துவரும் உண்மையர்; அம்மட்டோ கற்பித்தவற்றைக் கற்பார் மறவாது கைக்கொண்டு ஒழுகி உய்யும்படி தெளிந்த எளிய இனிய நடையில் சிறு சிறு வெளியீடுகளாக எழுதியும் மெய்த்தொண்டு புரிபவர்.

'புறச்சமய நெறி நின்று அகச்சமயம்புக்க' புண்ணியர் போன்று சைவசித்தாந்தத்து அழுந்திய அறிவு பெற்ற துணிவினர். மெய்யடியார்கள்போன்று இல்லறத்தினின்று இறைவழிபாடும், முறையோதுதலும், அன்பும் அறனும், அருளும் கடமையும் பொருளுறப்பெற்று உய்ய ஒழுகிவருஞ் சீலத்தர்.

இவர்கட்கு அம்மையப்பர் திருவருளால் அகவை அறுபது நிறைவுற்று திருவள்ளுவர் ஆண்டு, கக௯அக-கார்த்திகைத் திங்கள் கக-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை (26-11-1950) பண்டாரச் சிவன் ஞாபகப் பள்ளிக்கூட மண்டபத்தின்கண் '**மணிவிழா**'ச் சிறப்புற நிகழ்ந்தது. தூத்துக்குடிச் 'சித்தாந்தப் பேராசிரியர்' திரு. ந சிவகுருநாத பிள்ளையவர்கள் தலைமை பூண்டார்கள். ஆசிரியரவர்களால் அரிதாய்ந்து அமைத்த 'வினவெண்பா ஆராய்ச்சியும், ஐந்தெழுத்துண்மையும், திருவாதிரை விளக்கமும்' அடங்கிய வெளியீடு **நினைவுமலராக** வெளியிடப்பெற்றது. ஆசிரியரவர்களின் படத்திறப்பும், அன்னார்க்கு அன்புடன் வழங்கிய ஆயிரத்தொன்றடங்கிய வெண்பொன் முடிப்பும், திருவாவடுதுறைத் திருமடமுதல்வர் சிறப்புற வழங்கிய பொன்னும் பட்டும்போற்று வெளியீடுகளும் புலவர் பலர் பாராட்டுரையும், ஆசிரியரின் மாணவன், திரு. மு. அறம்வளர்த்தான் அமெரிக்காவிலிருந்து விடுத்த உரைமாலையும், வாழ்த்தும், பிறவும் பெட்புற நிகழ்ந்தன.

ஆசிரியர்கள் திருவருளால் நலமுடன் நீடுவாழ்ந்து, செந்தமிழ்ப் பணியும் செந்நெறித் தொண்டும் செழிப்புறச் செய்து, பன்னாளும் யாத்து, பயன்பெறுவித்தும் பயன்பெற்றும் ஓங்க அம்பலவாணர் அடியிணையை வேண்டுகின்றோம்.

**வாழ்க.**

# இந்தி நல்லெண்ணத் தூதுக் குழு

[இனியன்]

அனைத்திந்திய இந்தி சாகித்ய சம்மேளனம் தென் இந்தியாவிற்கு ஓர் நல்லெண்ணத் தூதுக் குழுவை அனுப்பியுள்ளது. அக்குழு அக்டோபர்த் திங்கள் 5-ஆம் நாளிலிருந்து சென்னையில் தங்கித் தன் அலுவலைத் துவங்கியுள்ளது.

அக் குழுவில் (க) பண்டித சந்திரபாலிப் பாண்டேயா, இந்தி சாகித்ய சம்மேளனத் தலைவர்; (உ) புகழ் மிக்க காங்கிரசுத் தலைவர், திரு. பாபாராகவ தாஸ், (எம். எல். ஏ.); (ந) காசி நாகரி பிரசார்ணி சபா நிறுவியவரும் கல்வி வல்லுநருமான பண்டித ராம்ராயன் மிஸ்ரா; (ச) டில்லி, அரிசன உத்தியோக சாலா டைரக்டரான, திரு. வியோகிஹரி; (ரு) இலட்சுமணபுரி மகளிர் கல்லூரி பிரின்சிபால், திரு. காஞ்சனலதா சபர்வால்; (சா) மைசூர் பல்கலைக்கழக இந்தித்துறைத் தலைவர், புராசர், என். நாகப்பா ஆகிய அறுவரும் இக்குழுவில் இருப்பவர்கள் என அறிவிக்கப்பெற்றுள்ளது.

அறிவித்தவாறே அக்குழுவினர் அக்டோபர்த் திங்கள் எ-ஆம் நாள் சென்னை மாநில முதலமைச்சர், திரு. பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்களை, அவர் உறையுளில் (அடையாற்றில்) கண்டுரையாடினர். அதன்பின், தென்னிந்திய பத்திரிகையாளர் சம்மேளனக் காரியாலயத்தில், நகர பத்திரிகையாளர் சிலரை இந்தி நல்லெண்ணத் தூதுக்குழுவினர் இன்று கண்டனர்.

நல்லெண்ணக் குழுவின் சார்பில்பேசிய திருவாட்டி காஞ்சனலதா சபர்வால் என்பார், இந்தியாவின் பொது மொழியாக இந்தி மொழியை ஆக்கி இந்திய கலாசாரத்திடையே ஒற்றுமையை உண்டாக்குவதே தம் குழுவின் நோக்கம் என்று எடுத்துரைத்தார். தாம் இங்குவந்து கண்டதிலிருந்து இங்கு மிக எதிர்ப்பு இல்லையென்பதை அறிந்திருப்பதாகவும் குறிப்பிட்டார். குழுவின் நோக்கத்தை வெளியிட்டுக் குழுவினரை ஊக்கியதற்காகப் பத்திரிகையாளர்க்குப் பண்டித ப்தாராம் சதுர்வேதி யென்பார் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொண்டார். "சென்ற இருநூறு ஆண்டுகளாகத் தென்னிந்தியருடன் வட இந்தியர் மிகுதியாகக் கலைப்பண்புத் தொடர் வைத்துக் கொள்ளவில்லை. அறிஞர்களுடன் தூதுக்குழுவினர் நடத்திய உரையாடல்களினின்று தென்னிந்தியாவிற்கும் வட இந்தியாவிற்கும் இடையிலுள்ள பல கலைப் பண்புத் தொடர்புகள் வெளியாயின. இந்தியைப் பொதுமொழி ஆக்குவதன்மூலமே கலைப்பண்புத் தொடர்பை மீண்டும் இருநாடுகட்கிடையே

ஒற்றுமைப்படுத்த முடியும். அதுவே தற்போது செய்ய வேண்டிய முதற்கடமையாகும்,'' என்றார்.

"நாட்டின் தேசியமொழியாக இந்திமொழி ஒப்புக் கொள்ளப்பட்டாலும் எவரும், சிறப்பாகத் தென்னிந்தியர் யாவரும் ஆங்கிலம் முன்னிருந்த இடத்தைப் பதினைந்து ஆண்டு களுக்குள் இந்தி கைப்பற்றுவதை ஒப்புக்கொள்ளமாட்டார் கள். எல்லா வுலகப் பொதுமொழியாக விளங்கும் ஆங்கிலத்தின் மதிப்பை அவர்கள் இழக்கமாட்டார்கள்,'' என்றும் ஒரு பத்திரி கைச் செய்தியாளர் குறிப்பிட்டார்.

காரைக்குடி இந்தி பிரேமமண்டலின் ஆதரவில் எஸ். எம். எஸ். உயர்நிலைப் பள்ளியில் நிகழ்ந்த பட்டமளிப்பு விழாவின்போது ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் கூறிய தாவது :

"சென்னைமாகாண மக்கள் தங்கள் செயலைச் சரிவரச் செய்யவேண்டுமாயின் அவர்கள் இந்தியில் நல்ல அறிவு பெற வேண்டுவது இன்றியமையாதது. ஏனெனின், அம்மொழியே இந்திய ஒற்றுமை அரசியல் அலுவல் மொழியாகப் பதினைந்து ஆண்டுகளுக்குள் மாற்றப்பட இருக்கிறது. தமிழர் வணிகம் பெருக—பிற மாகாணங்களுடன் தொடர்புகொள்ள—இந்தியை அவர்கள் கற்கவேண்டுவது முதன்மை,'' என்பதாகும்.

பின் இந்தி நல்லெண்ணக் குழுவினர் இந்தி எதிர்ப்புத் தலைவர்களுள் ஒருவரான, திரு. சி. என். அண்ணாத்துரை அவர் களைக் கண்டு ஒரு மணி நேரம் உரையாடினர். அதற்கு அவர், கீழ்த்தர வகுப்புக்களில் இந்தி கட்டாய பாடம் ஆக்கப்படு வதையே தாம் கண்டிப்பதாகவும், திராவிட நாட்டில் தாய் மொழியே உள்நாட்டு அலுவல்மொழியாகவும், ஆங்கிலமே அயல் நாட்டு அலுவல் மொழியாகவும் இருக்கப்போவதால் இந்தி மொழி வேண்டுவது முதன்மை இல்லையென்றும், பிற மொழி களைப்போல இந்தியும் கட்டாயம் ஆக்கப்படாமல் கற்பிக்கச் செய்யப்படுமானால் தமக்கு யாதொரு மாறுபாடும் இல்லை யென்றும் எடுத்துரைத்தார்.

சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் சென்னைத் தமிழ்ச் சங்கத்தாரால் இந்தி நல்லெண்ணத் தூதுக் குழுவினருக்கு வரவேற்பு இதழ் படித்தளிக்கப்பட்டபோது, அக்குழுவினருள் ஒருவரான பண்டித ராம் நாராயண மிஸ்ரா என்பவர், "விரும் பாத மக்களின்மீது இந்தியைக் கட்டாயமாகத் திணிக்கவேண்டு மென்பதோ, அவ்வந்நாட்டு மொழிகளுக்கு ஊறு விளைவிக்க வேண்டுமென்பதோ இந்தி மொழியாளரின் எண்ணமல்ல,'' வென்று உறுதி கூறினர்.

திரு. கிருஷ்ணசாமி பாரதியவர்கள் தமிழ் மிகப் பழங்கால மொழியென்றும், அதன் பண்பாட்டைக் குலைக்கக்கூடிய எச் செயலையும் செய்ய முடியாதென்றும் தம் எண்ணத்தை எடுத்துரைத்தார்.

தூதுக் குழுவினரைச் சங்கத்தின் சார்பில் வரவேற்றுப் பேசிய திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் கூறிய போது, "உரிய காலத்தில் தூதுக் குழுவினர் சென்னைக்கு வந்தனர். மேற்கு நாடுகளிலோ கிழக்கு நாடுகளிலோ வழங்கும் பிற மொழிகளுடன் தமிழ்மொழியை ஒப்பிட்டுப் பார்க்கும் போது அதன் பெருமை விளங்கும். தமிழ் வழக்காறற்ற மொழியல்ல; வழக்கில் மக்களால் பேசப்படும் மொழியாகும். தமிழின் பெருமைக்குத் திருவள்ளுவரே சான்று. சிறந்த இரு தத்துவ ஞானிகளான இராமானுசரும் சங்கராச்சாரியரும் தமிழர்களே. இந்திய கலைப்பண்பிற்குத் தமிழ்மொழி தன் கடமையைச் செய்திருக்கிறது; இன்னும் செய்யும். அரசினர் குறிப்பிட்டிருக்கும் குறைந்தகால வரையறையான பதினைந்து ஆண்டுகளுக்குள் இந்தியை அரசியல் மொழியாகக் கொண்டுவர இந்திமொழியாளர் பெரிதும் முயற்சி செய்துவருவதாகத் தமிழர் அஞ்சுகின்றனர். பாடங்களைக் கற்பிக்கும் மொழி உள் நாட்டு மொழியாகவே இருக்கவேண்டும். அனைத்திந்திய அலுவலுக்கு இந்தியைப் பயன்படுத்திக்கொண்டபோதிலும், உள்நாட்டு அலுவல் நன்குநடைபெற அவ்வந்நாட்டு மொழியே முதன்மையானது. இந்தி கட்டாயபாடமாக்கப் பெற்றுக் கற்பிக்கப்படுவதைத் தமிழர் வெறுக்கின்றனரேயன்றி வேறு காரணத்தால் அல்ல. தமிழர்மீதும், அவர் மொழி, கலைப்பண்புமீதும் தக்க மதிப்பை வட இந்தியர் காட்டவேண்டும்," என்றார்.

திரு. ரா. பி. சேதுப்பிள்ளை பேசியதாவது: "தமிழ் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன் தோன்றி இரு வழக்கிலும் பயின்றுவரும் மொழி, இன்றியமையாத இடங்களில் தன் சிறந்த ஒலியமைதிக் கேற்றவாறு செம்மைப்படுத்திப் பிறமொழிச் சொற்களை ஏற்றுக்கொள்வதில் என்றும் பின்னடைந்ததின்று. மேலும், அவ்வாறே இயங்கும். தமிழில் பெரும்பாலோர் இராமாயணம் துளசிதாசர் முதலியோரை உணர்ந்திருப்பதுபோல் எத்தனை வட இந்தியர் வள்ளுவர்குறளையும், கம்பநாட்டாழ்வாரின் இராம காதையையும் அறிந்திருக்கிறார்கள்?"

திரு. லெ. கிருஷ்ணசாமிபாரதி, சங்கத்தின் சார்பில் கூறியதாவது:—தமிழர் இந்திப் படிப்புக்கு எதிர்ப்பாளரல்லர். அகில இந்திய அலுவல்களில் கலந்துகொள்ள இந்தி இன்றியமையாததாகும். இந்தி கட்டாய பாடமாக்கக் கூடாதென்பதே தமிழர்

எண்ணம். சென்னை அரசினர் இந்தியைக் கட்டாய பாட மாக்காமல் விருப்பப் பாடமாக்கியது பாராட்டத்தக்கதே.

"தமிழ் மொழியையோ, அல்லது வேறெம்மொழியையோ அடக்கிவைக்கவோ, அதனிடத்தை நேர்மையற்ற முறையில் கைப்பற்றவோ இந்தி மொழி பேசுவோரின் எண்ணமன்று," எனத், தென்னிந்தியர்க்குப் பண்டிட் ராம் நாராயண் மிஸ்ரா உறுதியளித்தார்.

உடலுக்குயிர்போல் உலகுக்கு உயிராய்த் திகழ்ந்து அவ் வுலக மக்களை வளம்பெற ஒற்றுமையும் உரனும் திறனும் அறிவும் உடையராய் வாழச்செய்வது மொழியேயாம். ஒவ்வொரு வரும் தத்தம் தாய்மொழியினை உயிரினும் சிறந்ததாக்கொண்டு ஒழுகுவது யாண்டும் என்ஞான்றுங் காணும் மாறா உண்மை யாம்.

அம்முறையில் தொன்மைத் தமிழ்நாடும் தன் தாய் மொழி யாம் நன்மைத் தமிழ் மொழியினை உயிரினும் சிறப்பாகக் கொண்டு ஒழுகிவருகின்றது—வரும். இம்முறையிலேயே தமிழ் நாட்டு நல்லறிஞர், பேராசிரியர், பெரும்புலவர், பெருஞ்செல்வர், பெருந்தலைவர், பெருங்கழகத்தார் பலரும் 'இந்தி நல்லெண்ணத் தூதுக் குழுவினர்' முன் தத்தங் கருத்துக்களை நடுநிலை வழாமல் முறையுறக்கிளந்து முடித்தமை முன் மொழிந்த குறிப்புக்களால் நன்குணரலாம்.

அவ்வந்நாட்டு மொழிவழியாக ஆட்சி நிகழ்வதே அவ்வந் நாட்டு மொழியை உயிருடன் வாழச் செய்வதும், அந்நாட்டு மக்களை உரமும், ஒற்றுமையும், ஊக்கமும், ஆக்கமும், ஒழுக்க மும் உடையராய் ஓங்கி வாழச் செய்வதுமாம் என்னும் உண்மையைக் காங்கிரசு என்னும் மாபெருங் கழகத்தார் கண்டு கைக்கொண்டு விரிவுரையாற்றித் தங் கொள்கையைப் பரப்பி ஒற்றுமையுண்டாக்கி வெற்றிகொண்டு விடுதலைபெற்று வீறுடன் திகழ்ந்து வீற்றிருக்கும் உண்மை யுணர்த்தும். ஆங்கிலேயர் ஆங்கிலத்தால் நாட்டுமொழியை அழித்தனர். நாட்டுமொழிப் பற்று அகலவே உயிரற்ற உடல்போல் செயலற்று உரமற்றுப் பிளவுற்று வாழ்ந்தனர் என்பது நேரிற் கண்டவுண்மை. ஆகவே, என்றும் நாட்டு மொழியே ஆட்சி மொழியாகவும், கல்லூரியில் பயிற்று மொழியாகவும், போக்குவரத்து அஞ்சல் புகைவண்டி வானூர்தி முதலியவற்றின் தலைப்பில் பொறித்துப் புழங்கு மொழியாகவும் இருத்தல்வேண்டும்.

தமிழ்மொழியை ஆட்சி மொழியாகத் திருச்சிராப்பள்ளி யில் தொடங்கி நடத்திப் பார்த்தோம்; செம்மையாக நடைபெற

வில்லையென்று கூறப்படுகின்றது. இது வியப்பைத் தருவதாகும். என்னை? வித்தூன்றினால் விளைவுறுக்கலாம் வேறொன்றும் செய்யவேண்டுவதில்லை என்று எண்ணும் வேண்டா எண்ணமேயாம். வழங்குந் தமிழ் மொழியிலேயே ஆட்சி வாய்க்கவில்லையென்றால், வழங்குவிக்கப்போகும் இந்தியில் ஆட்சி எங்ஙனம் நிகழும்?

தமிழும் ஆங்கிலமும் துறைபோகக்கற்று, நல்லெண்ணமும், நடுநிலையும், வாய்மையும், தூய்மையும், நாடும் மொழியும் உடலும் உயிருமாய் இயங்கும் ஒண்மையும் கைவந்த தக்கார் பலரைக் காப்புக் குழுவினராய் அமைத்து, முறை மன்றம், ஊராண்மை, நகராண்மைக் கல்லூரி முதலியவற்றில் இயங்க வேண்டிய எல்லா முறைகளுக்கும் ஏற்றவாறு தமிழமைத்து, தமிழ்மொழியையே யாண்டும் வழங்கிவருமாறு செய்ய வேண்டுவது அரசியலாரின் முதற்பெருங் கடமையாகும். அரசியல் அலுவலாளர்கள் அடிதொட்டு முடிவரையும் முன் ஆங்கிலத்தில் பெற்றிருந்தது போன்ற தெளிந்த அறிவு எல்லாத்துறைகளிலும் தமிழில் பெற்றிருத்தல்வேண்டும் என்னும் ஆணை பிறப்பித்தல்வேண்டும். அதுவே அவர்கட்குச் சிறப்புத் தகுதியாகவும் கொள்ளப்படுதல்வேண்டும். அப்பொழுது தமிழில் ஆட்சி செம்மையாக நடக்கின்றதென்பதனை அங்கை நெல்லியென அகத்தும் புறத்தும் ஒத்துக் காண்பர்.

இந்திமொழி மத்திய அரசுக்கும் மாகாண அரசுக்குங் கொண்டுள்ள இன்றியமையாத் தொடர்புகளுக்கே கையாளப் படவேண்டும். இதுவே முறைமையும் வாய்மையும் அறமுமாகும் சட்ட நூல் முதலிய எல்லா நூல்களும் தமிழிலேயே இருக்கவேண்டும்.

கல்லூரிகளில் இந்தியை விருப்பப் பாடமாக வைப்பது ஏற்புடையதாகும். கட்டாய பாடமாக வைப்பது, தமிழ் மொழியின் ஆக்கத்துக்கு முன் ஆங்கிலம் செய்ததுபோல் அழிவே செய்வதாகும். கல்வி நிலையங்களில் முதலிடம் தமிழ் மொழிக்கும், இரண்டாமிடம் இந்திக்கும், மூன்றாமிடம் ஆங்கிலத்துக்கும் தந்து, நாட்டையும், மொழியையும், மக்களையும், ஆட்சியையும், வளம்படுத்தி நலம்பெறச் செய்யுங் கடமையையே நாடு எதிர்பார்க்கின்றது. அரசியலார் விழிப்பாயிருந்து விழுப்பொருள் பயக்கும் இச்சீரிய செயலைச் செய்வார்கள் என்று எதிர்பார்க்கின்றோம்.

# ஐந்திறம்

[கணியர், டாக்டர், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

பூவுலகத்தில் முதன் முதலாக மக்கள் தோன்றிய இடம் தமிழகமே. அதன் எல்லை வடக்கே வேங்கட மலையும் தெற்கே குமரியாறும் என்பது பழைய நூல்களிலிருந்து விளங்குகிறது. முதன்முதலாக மக்கள் பேசிய மொழி தமிழ். தமிழ்மக்கள் ஆராய்ந்து ஆராய்ந்து பல கலைகளையும் வளர்த்தார்கள். கன்னியா குமரிக்குத் தெற்கேயிருந்த பெரும் பரப்பினதாகிய தமிழகம் கடல் கொள்ளப்பட்டது. அப்போது வடக்கே இமயமலைப் பகுதி, சீனம் முதலிய நிலங்கள் வெளிக்கிளம்பின. தமிழ் மக்கள் பல்கிப் பூமியின் பிற நிலப்பகுதிகளுக்குச்சென்று வாழலுற்றார். அப்போது அவரவர் தங்கிய இடங்களின் தட்பவெப்ப நிலைக்கேற்ப அவர்களின் நடை, உடை, பேச்சு இவை மாறுபடுவனவாயின. "உடுப்பது நான்கு முழம்" என்ற தமிழன் குளிர் நாடு சென்று உடலெல்லாம் துணியால் மூடி வாழத்தொடங்கினான். இங்ஙனமாக, தமிழகமே மக்களுக்குப் பிறப்பிடம் என்பதும், தமிழரே உலக முதன் மக்கள், அவர்களின் வழியில் விரிந்தவரே உலகமக்கள் என்பதும், தமிழ்மொழியே உலகத் தாய் மொழி, அதிலிருந்து பிற மொழிகளெல்லாம் கிளைத்தன என்பதும் உலக அறிஞர் யாவரும் ஒப்புக்கொண்ட உண்மைகள்.

தமிழ்மக்கள் அறிந்து அடிப்படைகோலி வளர்க்காத கலையே கிடையாது. சிறப்பாக வானநூற் கலையில் அவர்கள் அளித்த பிச்சையே இன்று உலக மக்களால் ஆராயப்பெற்று வளர்க்கப்பெறுகிறது. படிப்பின்மையாலும், உண்மை உணராமையாலும், ஆராய்ச்சிக் குறைவினாலும், பண்டைநூல்கள் அழிந்தும் அழிக்கப்பட்டும் போயினமையாலும், இன்று தமிழில் வானநூல் என்பது ஒன்று உண்டோ எனத் தமிழர் தலைவரும் ஐயுறும நிலைமை வந்துவிட்டது. ஆதலின் உண்மையை நிலைநாட்ட விரிவானதொரு நூல் வெளிவருதல்வேண்டும்; அதனிடையில் இங்கே இன்றைக்கு இன்றியமையாதன சில குறிப்போம்.

வானத்திலே விண்மீன் (நட்சத்திரம்) களும், கோள் (கிரகங்) களும் நம்மைச் சுற்றிச்சுற்றி வருவதை நாம் காண்கின்றோம். விண்ணிலே காணப்படும் மீன்கள் எண்ணில்லாதன; அவைகளெல்லாவற்றுக்கும் பெயர்கள் கிடையா. விட்டு விட்டு மின்னுவன மீன்கள். மின்னாது எப்போதும் ஒன்றுபோல ஒளிருவன கோள்கள். கோள்கள் ஒன்பது; அவை ஞாயிறு (சூரியன்), திங்கள் (சந்திரன்), செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இருள் (இராகு), கொடி(கேது) என்பன. இருளும் கொடியும்

இராக்கோள்கள். அதாவது இராத கோள்கள். அவை உண்மையில் நிழல்கள்தாம்; ஞாயிறு முதலிய முதல் ஏழு கோள்களைக் குறிக்கத் தனித்தமிழ்ச் சொற்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி ஆறு, ஏழு இருக்கின்றன. கோள்களுக்கெல்லாம் முதன்மை பெற்றிருப்பது ஞாயிறு; அதனால் அது 'கோளரசு' என்று வழங்கப்பெறுகிறது. மற்றைய கோள்களெல்லாம் இதனிடமிருந்தே தோன்றின. ஆதலினாலே ஞாயிற்றுக்கிழமையே முதற்கிழமையாக, ஏனைய திங்கள் முதலிய ஆறு கிழமைகளும் இதன் பின்னரே எண்ணப்பெறுகின்றன. திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய ஆறு கோள்களும் தங்களுக்கென இயற்கையான ஒளி இல்லாதவைகளாய் ஞாயிற்றினுடைய ஒளியினாலேயே ஒளிபெற்று விளங்குகின்றன.

ஞாயிறு முதலிய கோள்கள் விண்ணில் நம்மைச் சுற்றி வருகின்றன. அவ்வழி **வான்வழி, ஞாயிற்றுவழி** யெனவும் பெயர் பெறும். அவ்வழி ஒரு வட்டமாக இருக்கிறது. இவ்வட்டத்தில் கோள்கள் நிற்கும் நிலைகளை அளந்தறிவதற்கு இருபத்தேழு நிலைகள் குறிக்கப்பட்டுள்ளன. இந்நிலைகள் அவ்வழியிலுள்ள நிலையான விண்மீன்களை அடையாளமாகக்கொண்டு அறியப்படுவன. அவைகளும் அவைகளைக் குறிக்கும் சுருக்கெழுத்துக்களும் பின்வருவன :—

1. ஐப்பசி (அசுவதி) - ஐப்
2. அடுப்பு (பரணி) - அடு
3. கார்த்திகை - கார்
4. ஊற்றால் (உரோகிணி) - ஊற்
5. மார்கழி (மிருகசீரிடம்) - மார்
6. திருவாதிரை - திருவா
7. தை (பூசம்) - தை
8. புணர்தை (புணர்பூசம்) - புணர்
9. ஆயில் (ஆயிலியம்) - ஆயி
10. மாசி (மகம்) - மா
11. கணை (பூரம்) - கணை
12. பங்குனி (உத்திரம்) - பங்
13. கை (அத்தம்) - கை
14. சித்திரை - சித்
15. விளக்கு (சோதி) - விள
16. வைகாசி (விசாகம்) - வை
17. பனை (அனுடம்) - பனை
18. கேட்டை - கேட்
19. ஆனி (மூலம்) - ஆனி
20. உடைகுளம் (பூராடம்) - உடை
21. ஆடி (உத்திராடம்) - ஆடி
22. திருவோணம் - திருவோ
23. ஆவணி (அவிட்டம்) - ஆவ
24. செக்கு (சதயம்) - செக்
25. புரட்டாசி (பூரட்டாதி) - புரட்
26. பிற்கால் (உத்திரட்டா) - பிற்
27. தோணி (இரேவதி) - தோ

என்பன. இவைகளில் தையும் புணர்தையும் பெயர்மாறியுள்ளன இந்நாள் உலக வழக்கில். இவை நாள் என்றும், நாள்மீன் என்றும் பெயர்பெறும். இவைகளைக் குறிக்கத் தனித்தமிழ்ச்சொற்கள் ஒவ்வொன்றுக்கும் மூன்று முதல் ஆறுவரை உள்ளன.

இங்ஙனம் இருபத்தேழு நிலையங்களையுடைய விண்வட்டம் தம்முள் இரண்டேகால், இரண்டேகால் நாள்மீன்களை உள்

ளடக்கிய பன்னிரண்டு பெரும்பகுதிகளாகவும் பிரித்தறியப்படுகின்றது. இப்பன்னிரண்டு பெரும் பிரிவுகளிலும் கோள்கள் வாழ்கின்றபடியால் இவைகள் வீடுகள் (இராசிகள்) எனப் பெயர் பெறுவன. இவை: 1. மேழகம் (மேடம்), 2. விடபம் (இடபம்), 3. இரட்டை (மிதுனம்), 4. கடகம், 5. ஆளி (சிங்கம்), 6. கன்னி, 7. துலாம், 8. தேள் (விருச்சிகம்), 9. வில் (தனுசு), 10. மகரம், 11. கும்பம், 12. மீனம் என்பன.. இப்பன்னிரண்டு பிரிவுகளும் எங்ஙனம் பிரிக்கப் பெற்றன என்றால், கோளரசாகிய ஞாயிறு விண்வட்டத்தை எத்தனை நாட்களிற் சுற்றி வருகிறதோ, அக்கால அளவைப் பன்னிரண்டு பிரிவுகளாக்கி ஒவ்வொரு பிரிவும் ஒவ்வொரு வீடாகக் கருதப்பெற்றது. ஒவ்வொரு வீட்டிலும் ஞாயிறு வாழ்கின்ற கால அளவே ஒவ்வொரு மாதமாம். இம்மாதங்கள் தனித்தனி சில நாழிகை ஏறத்தாழ இருபத்தொன்பது முதல் முப்பத்திரண்டு நாட்கள்வரையுள்ள கால அளவாம். இவ்வளவு எக்காலத்திலும் ஒரே நிலையாக இருக்கும். ஞாயிறு (இரவி) மேழக வீட்டிலிருக்கும் காலம் மேழகமதி (மேடரவி) என்றும் இங்ஙனமாகப் பிற மாதங்களும் பெயர்பெறும்.

| | மீனம் | மேழகம் | விடபம் | இரட்டை | |
|---|---|---|---|---|---|
| | புரட்டாசி $\frac{1}{4}$<br>பிற்கால் 1<br>தோணி 1 | ஐப்பசி 1<br>அடுப்பு 1<br>காரத்திகை $\frac{1}{4}$ | கார்த்திகை $\frac{3}{4}$<br>ஊற்றல் 1<br>மார்கழி $\frac{1}{2}$ | மார்கழி $\frac{1}{2}$<br>திருவாதிரை 1<br>தை $\frac{3}{4}$ | |
| கும்பம் | ஆவணி $\frac{1}{2}$<br>செக்கு 1<br>புரட்டாசி $\frac{3}{4}$ | ↑ → | → ↓ | தை $\frac{1}{4}$<br>புணர் தை 1<br>ஆயில் 1 | கடகம் |
| மகரம் | ஆடி $\frac{3}{4}$<br>திருவோ 1<br>ஆவணி $\frac{1}{2}$ | ↑ ← | ← ↓ | மாசி 1<br>கணை 1<br>பங்குனி $\frac{1}{4}$ | ஆளி |
| | ஆனி 1<br>உடைகுளம் 1<br>ஆடி $\frac{1}{4}$ | வைகாசி $\frac{1}{4}$<br>பனை 1<br>கேட்டை 1 | சித்திரை $\frac{1}{2}$<br>விளக்கு 1<br>வைகாசி $\frac{3}{4}$ | பங்குனி $\frac{3}{4}$<br>கை 1<br>சித்திரை $\frac{1}{2}$ | |
| | வில் | தேள் | துலாம் | கன்னி | |

(வட்டம்தான் இங்ஙனம் சதுரமாகக் காட்டப்பெற்றது; எளிமைபற்றி.)

ஞாயிறு நம்முடைய கண்ணுக்கு நம்மைச் சுற்றிவருவது போலக் காணப்படினும் அது உண்மையிற் சுற்றுவதில்லை. அது ஒரே இடத்தில் அசையாமல் இருக்கிறது. நாம் வாழும் பூமியே ஞாயிற்றைச் சுற்றிவருகிறது. பூமியைப்போலவே திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய கோள்களெல்லாம் ஞாயிற்றைச் சுற்றிவருகின்றன. திங்கள் தனது தாயாகிய பூமியையும் சுற்றிவருகிறது.

ஞாயிற்றால் ஏற்படுகின்ற நாள் அறுபது நாழிகைகளையுடையது. இந்நாள் என்றும் ஒரே அளவினதாக இருக்கும். இதனால் ஞாயிற்றைவைத்து எண்ணப்படுகின்ற நாள், மாதம், ஆண்டு என்பன என்றும் ஒரே அளவினவாம் என்பது பெறப்படுகின்றது. மேழகம் முதலிய பன்னிரண்டு வீடுகளும் அவ்வவற்றின் முதலிலுள்ள நாள்மீனின் பெயரால் அழைக்கப்பெறும்:

| | |
|---|---|
| 1. மேழகம் - ஐப்பசி வீடு | 7. துலாம் - சித்திரை வீடு |
| 2. விடபம் - கார்த்திகை வீடு | 8. தேள் - வைகாசி வீடு |
| 3. இரட்டை - மார்கழி வீடு | 9. வில் - ஆனி வீடு |
| 4. கடகம் - தை வீடு | 10. மகரம் - ஆடி வீடு |
| 5. ஆளி - மாசி வீடு | 11. கும்பம் - ஆவணி வீடு |
| 6. கன்னி - பங்குனி வீடு | 12. மீனம் - புரட்டாசி வீடு |

கணக்குக்கு எட்டாத காலம் தொட்டுத் தமிழ்மக்கள், பூமிதான் ஞாயிற்றைச் சுற்றிவருகிறது என்ற உண்மையைக் கணக்கிட்டு அறிந்திருந்தனர். ஞாயிறு மேழக வீட்டிலிருப்பதுபோலக் காணப்படும்போது மெய்யாகப் பூமி அதற்கு நேர் ஏழாவது வீடாகிய சித்திரை வீட்டிலிருக்கும்; அதனால் அவர்கள் அம் மாதத்தைச் சித்திரைத்திங்கள் என்றனர்; விடபத்தில் ஞாயிறு இருப்பதுபோலத் தோன்றும் காலத்தை வைகாசித்திங்கள் என்றனர். இங்ஙனமாக அவர்கள் இரட்டையை ஆனித்திங்களென்றும், கடகத்தை ஆடித்திங்கள் என்றும், ஆளியை ஆவணியென்றும், கன்னியைப் புரட்டாசி யென்றும், துலாத்தை ஐப்பசி எனவும், தேளைக் கார்த்திகை எனவும், வில்லை மார்கழியென்றும், மகரத்தைத் தை எனவும், கும்பத்தை மாசி எனவும், மீனத்தைப் பங்குனி என்றும் அழைப்பாராயினர். ஞாயிற்றைப் பூமி சுற்றிவருகின்ற உண்மையைக்கொண்டு இடப்பெற்ற பெயர்களே சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி என்ற மாதப் பெயர்கள். பூமி ஞாயிற்றைச் சுற்றிவருவதனால் மாதங்கள் வருவதுபோல அது தன்னையே சுற்றிக்கொள்வதனால் கிழமை உண்டாகின்றது. பூமி தன்னை எங்ஙனம் சுற்றிவருகிறதெனை நுனித்தறிந்த தமிழ் மக்கள் அது கீழ்நோக்கிப்போகும் பக்கத்தைக் கீழ்த்திசை என்றும், மேலேயே வந்துகொண்டிருக்கும் பக்கத்தை மேல் திசை யென்றும் பெயர் தந்து அழைப்பராயினர். கிழக்கு,

மேற்கு என்ற பெயர்கள் தமிழில் என்று தோன்றினவோ, அன்றே பூமி தன்னை இங்ஙனம் சுற்றிவருகிறதெனத் தமிழ்மக்கள் அறிந்திருந்தனரென்ற உண்மை நிலைபெறும்.

காலம் என்பது பொழுதெனப்படும். பொழுது பெரும் பொழுது, சிறுபொழுதென இருவகைப்படும். கார், கூதிர், முன் பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் எனப் பெரும் பொழுது ஆறு; அவை ஆவணி முதல் தனித்தனி இவ்விரண்டு மாதங்களுக்கு உரியன. மாலை, யாமம், வைகறை, காலை, நடுப் பகல், எற்பாடு எனச் சிறுபொழுது ஆறு. இப்பொழுதுகள் இன்னின்ன காரணங்களால் இன்னின்ன நிலத்துக்கு உரியன என்று தமிழ்ப்பெரியார் பகுத்துவைத்திருப்பது பிறநாட்டினர் யாவரும் வணக்கம் செய்யும் பெருமையது.

மாதம் என்பது மதி, திங்கள் எனப்படும். காலத்தை மதிப்பது மதி; மதிக்கப்பட்ட காலம் மாதம். பண்டைக்காலத்தில் மக்கள் திங்களின் வளர்பிறை தேய்பிறைகளைக்கொண்டே காலத்தை மதித்து அளந்துவந்தனர். அதனால் திங்கள், மதி, மாதம் என்பன ஒருபொருட்சொற்களாயின. அதன் பின்னரே விண்வட்டம் இருபத்தேழு நிலையங்களை உள்ளிட்ட பன்னிரண்டு வீடுகளாகப் பகுக்கப்பெற்று அவைகளில் ஞாயிறு தங்குவது போலக் காணப்படும் கால அளவு நிலையிடப்பெற்றது. அதன் பின்னர் பூமியே உண்மையிற் சுற்றுவது என்று கண்டு சித்திரை முதலிய மாதப்பெயர்கள் அமைக்கப்பெற்றுப் பெருவழக்கினவா யிருக்கின்றன. பின் திங்கள் வளர்வதும் தேய்வதும் ஆகிய அளவு காணத்தொடங்கித் தமிழ்ப்பெரியார் அது ஞாயிற்றை விட்டு விலகி விலகி வருவதனாலும், பின் நெருங்கி நெருங்கிப் போவதனாலும் வளர்பிறையும் தேய்பிறையும் உண்டாகின்றன என்பது துணிந்தனர். அதற்கு அவர்கள் விண்வட்டத்தில் திங்களின் நிலையும், ஞாயிற்றின் நிலையும் காணவேண்டுவ தாயிற்று. திங்களின் நிலையைக் குறிப்பிட்டார்கள்; அதுதான் அன்றன்று இன்னின்ன காலம்வரை இன்னின்ன நாள் (நட்சத் திரம்) என்று குறிப்பிடப்படுகிறது. பின் ஞாயிற்றின் நிலையை முடிவுகட்டினார்கள். திங்கள் இருக்கும் நிலையிலிருந்து ஞாயிற் றின் நிலை இவ்வளவிருக்கிறதென்ற கணக்கினால் அவர்கள் பிறை யைக் குறித்தார்கள். வளர்பிறை பதினைந்து; தேய்பிறை பதினைந்து ஆகப் பிறை முப்பது. வளர்பிறைப் பதினைந்தாம் நாள் முழுநிலா என்றும், தேய்பிறைப் பதினைந்தாம்நாள் உவா எனவும் பெயர்பெறும். அவை வருமாறு குறிக்கப்பெறும் :—

முதற் பிறை (பிரதமை). முத
இரண்டாம் பிறை (துதியை) இர
மூன்றாம் பிறை (திருதியை) மூன்
நான்காம் பிறை (சதுர்த்தி) நா

ஐந்தாம் பிறை (பஞ்சமி) ஐந்
ஆறும் பிறை (சட்டி) ஆறு
ஏழாம் பிறை (சத்தமி) ஏழு
எட்டாம் பிறை (அட்டமி) எட்
ஒன்பதாம் பிறை (நவமி) ஒன்
பத்தாம் பிறை (தசமி) பத்
பதினொன்றும் பிறை (ஏகாதசி) ப. ஒ
பன்னிரண்டாம்பிறை (துவாதசி)ப.இ
பதின்மூன்றும் பிறை (தி. தசி) ப. மூ
பதினான்காம் பிறை (சதுர்த்தசி) ப.நா
முழுநிலா (பௌர்ணமி) முழு
உவா (அமாவாசை) உவா

பண்டைக்காலத்து ஒவ்வொரு மாதத்திலும் தேய்தியும், கிழமையும், பிறையும், நாள்மீனும் கணித்தறியப்பெற்றன. தேய்தியென்பது மாதம் தொடங்கியதிலிருந்து தேய்ந்து போகும் கிழமைகள். வீடுகளில் பூமி தங்கியிருக்கும் காலம் தேய்ந்துபோவது தேய்தி எனப் பெயர் பெற்றது; அதுதான் தேதி என வழங்கப்பெறுகிறது. காலத்தை உண்பதற்கு அதாவது தேய்ப்பதற்கு நாழிபோல அளந்தழிப்பது ஞாயிறு என்றூர் பண்டைப் பெரியாரும். கிழமையும் பிறையும் நாள்மீனு (வாரம், திதி, நக்ஷத்திரம்) மாகிய மூன்றும் முந்திறம் (திரயங்கம்) என்னப்பெற்றன. ஐந்திறம் (பஞ்சாங்கம்) என்ற பகுப்பு அண்மையில் ஏற்பட்டதுதான். கிழமை, பிறை, நாள்மீனோடு ஓக (யோக)மும் கரணமும் சேர்ந்து ஐந்திறமாக்கப்பெற்றன. யோகம் என்பது கூட்டம். திங்கள் நிலையும் ஞாயிற்று நிலையும் கூட்டப்பெற்று ஓகமாகின்றன; இவை இருபத்தேழு. காணம் என்பது பிறையிற் பாதி; இது பதினொன்று. ஒவ்வொரு பிறையின் முற்பாதிக்கு இன்னகரணம்; பிற்பாதிக்கு இன்னகரணம் என்பது அமைப்பு. ஐந்திறத்தில் பிறை பகலில் முடிந்தால் அதன் பிற்பகுதிக்குள்ள காணத்தைக் குறித்து பிறைக்குரிய நாழிகையும் எழுதப்பெற்றிருக்கும். பிறை இரவில் முடிந்தால் அப்பிறைக்குரிய நாழிகை பாதியாக்கப்பெற்று வந்த நாழிகையுடன் முற்பாதிக்குரிய கரணம் குறிக்கப்பெறும். ஓகங்கள் இருபத்தேழும் பின்வருவன குறிப்பெழுத்துக்களுடன் :—

1. கம்பம் (விட்கம்பம்) - கம்.
2. விருப்பம் (பிரீதி) - விரு.
3. வாழ்நாள் (ஆயுஷ்மான்)-வாழ்.
4. பெருஞ்செல்வம் (சௌபாக்கி [யம்) - பெரு.
5. நலம் (சோபனம்) - நல.
6. மாகண்டம் (அதிகண்டம்)-மா.
7. அறம் (சுகர்மம்) - அற.
8. துணை (திருதி) - துணை.
9. சூலம் - சூல
10. கண்டம் - கண்.
11. ஆக்கம் (விருத்தி) - ஆ.
12. நிலை (துருவம்) - நிலை.
13. அரவு (வியாகாதம்) - அர.
14. எக்களிப்பு (அரிசமயம்) - எக்.
15. வேல் (வச்சிரம்) - வேல்.
16. வல்லமை (சித்தி) - வல்.
17. கொலை (வியதீபாதம்) - கொ.
18. காயம் (பரியான்) - காய.
19. தாழ்வு (பரிகம்) - தாழ்.
20. காட்சி (சிவம்) - காட்.
21. திறம் (சித்தம்) - திற.
22. புகழ் (சாத்திரம்) - புக.
23. காவல் (சுபம்) - காவ.
24. தெளிவு (சுப்பிரம்) - தெளி.
25. நான்முகன் (பிராமியம்) - நான்.
26. வேந்தன் (மாகேந்திரம்) - வேந்.
27. பேய் (வைதிருதி) - பே.

கரணங்கள் (பதினொன்றும்) குறிப்பெழுத்துக்களுடன் :—

1. மடங்கல் (பவம்) - ம.
2. புலி (பாலவம்) - புலி.
3. பன்றி (கௌலவம்) - பன்.
4. கழுதை (தைதுளம்) - கழு.
5. யானை (கரசை) - யா.
6. எருது (வணிசம்) - எரு.
7. கோழி (விம்சடி) - கோழி.
8. கூகை (சகுனம்) - கூ.
9. நாய் (சதுஷ்பாதம்) - நா.
10. பாம்பு (நாகவம்) - பா.
11. புழு (கிம்ஸ்துக்னம்) - புழு.

ஐந்திறத்தோடு நச்சுவேளை (தியாச்சியம்) என்பதொன்று அல் (இரா) எல் (திவி) என்று குறிப்பிடப்பெற்று வருகிறது. ஒவ்வொரு கிழமைக்கும் இராகுகாலம் என்ற நச்சுவேளை இருப்பதுபோல ஒவ்வொரு நாள்மீனு (நட்சத்திரமு)ம் தொடங்கி இத்தனை நாழிகைக்குமேல் நச்சுவேளை வரும் என்ற திட்டம் இருக்கிறது; இஃது ஒரு காலத்தைப்போலவே மூன்றே முக்கால் நாழிகை வரை இருக்கும். நாள்மீன்கள் அறுபது நாழிகை நான்கைந்து நாழிகைகள் கூடியும் குறைந்தும் திட்டமில்லாமலிருப்பதால் கூடுதல் குறைதலுக்குத் தகுந்தபடி தொடங்கும் நேரம் இதுவென்பது கண்டுபிடிக்கப்பட்டு ஐந்திறத்தில் கரணத்தின் பின்னால் எழுதப்பெறுகிறது. அது பகலில் தொடங்கினால் எல் (திவி) என்றும், இரவில் தொடங்கினால் அல் (இரா) என்றும் குறிக்கப்பெறும்.

ஓகம் (யோகம்) என்பது சேர்க்கை என்று கூறினோம். இன்னின்ன கிழமையோடு இன்னின்ன நாள் (நட்சத்திரம்) கூடினால் இன்னின்ன ஓகம் என்ற ஓர் ஓகக்கணக்கும் இருக்கிறது. இது மூன்றுவகைப்படும். அவை வல் ஓகம் (சித்தயோகம்), வாழ்ஓகம் (அமிருதயோகம்), சாவு ஓகம் (மரணயோகம்), என்பன. அவை நச்சுவேளைக்கு அடுத்து முறையே வல் (சித்த), வா (அமி), சா (மர) எனக் குறிப்பிடப்பெறும்.

இப்போது வெளிவரும் ஐந்திறங்களில் அவமா, திரிதினபிருக்கு எனக் குறிப்பிடப்பெறுவன முறையே முக்கூட்டு மூந்நாளவிரி என்பன. ஒரே கிழமையில் மூன்று பிறைகள் கூடுவது முக்கூட்டு, ஒரே பிறை மூன்று கிழமைகளில் விரிந்திருப்பது மூந்நாள்விரி. கரிநாள் என்பது பண்டைக்காலத்து இருந்த யாரோ சில அரசர் மடிந்தகாலமாகக் காணப்பெறுகிறது. இதைத்தவிர அந்நாட்களினால் தீமையின்று. ஆதலின் மக்கள் மயங்கி நற்செயல்கள் தொடங்காமலிருப்பது தவறு.

முழுத்தம் என்பது முழுப்பொருத்தம் என்பதாம்; ஒரு செயலுக்கு முழுதும் பொருந்திய நேரம் முழுத்தமாம். இதுவே சொல்லத் தெரியாமல் முகூர்த்தம் எனப் பெறுகிறது. இன்னின்ன செயல் செய்ய இன்னின்ன

காலம் பொருத்தமானது என்ற திட்டம் இருக்கிறது. அத்திட்டத்தைக்கொண்டு அவ்வாறே முழுத்தத்தை எளிதாகத் தீர்மானித்துக் கொள்ளலாம். முழுத்தங்களை வைத்துக்கொண்டு செய்யப்பெறும் குருக்களின் (புரோகிதரின்) செயல்களெல்லாம் வீண்செயல்களென்றும், அவை சிலருடைய பிழைப்புக்காகக் கற்பிக்கப்பெற்றவை என்றும் அறிஞர் கூறுகின்றனர். அறிவுக்குப் பொருத்தமில்லாத சில செயல்கள் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, சீமந்தம் என்பதை ஆராய்வோம். ஒருவனுடைய மனைவி கருவுற்றாள் என்றால் அக்கருத் தன்னால்தான் உண்டாக்கப்பெற்றது என்றதைக் கணவன் ஏற்றுக்கொள்வதாகச் செய்வதே சீமந்தம். நாமே கடவுள் முன்னின்று நமக்குள்ள குறைகளைத் தெரிவித்து மனமுருகி முன்னோர்கள் அருளியதேவார திருவாசகங்களைப் பாடுவது நற்பயன் தரும்; இதுவே உண்மையான கழுவாயாகும்.

ஐந்திறத்தில் குறிக்கப்பெறும் ஆண்டுகளைப்பற்றிச் சில குறிப்பிடுவோம். ஊழி என்பதுதான் யுகம் எனப்படுவது. இப்போது நடைபெறுவது கலியூழி (கலியுகம்). இது கி. மு. 3102-ல் தொடங்கியது. ஐந்திறக் கணக்குகளெல்லாம் கலியூழி ஆண்டினையும் கலியூழி நாளையும் கொண்டே கணக்கிடப்பெறுகின்றன. ஆதலின், குறைந்தது கலியூழி தொடங்கி இன்றைக்கு ஐயாயிரத்து நாற்பத்தாறு ஆண்டுகளிலிருந்தே தமிழ்ப் பெரியார் ஐந்திறம் கணக்கிட்டு வருபவராதல்வேண்டும். அக்காலத்து மனிதர்க்கு சராசரி வயது நூற்றிருபதென்பது அவர்கள் ஒன்பது கோள்களுக்கு வகுத்திருக்கும் கால (திசை) அளவால் நிலைபெறும். அக்காலத்து இளமைக்காலம் நாற்பத்தெட்டு ஆண்டுகள் என்று சங்கப் புலவர் பாடியிருக்கின்றனர். "அறுநான் கிரட்டி இளமை." கபிலர் பெருமான் தமது புகழ்மிக்க அகவலைப் பாடியபோது மனிதர் சராசரி வயது நூறாகிவிட்டது; "மனிதர்க்கு வயது நூறல்ல தில்லை" தாவீது என்ற பெரியார் பாடும்போது சராசரி வயது எழுபது அல்லது எண்பதாகக் குறைந்துவிட்டது; (விவிலியநூல் பாடிய ருற்று தாவீதின் தொண்ணூறாவது இசைப்பாட்டு பத்தாவது பத்தியில்) "நமது ஆயுள்நாள் எழுபது ஆண்டுகள், வலிமையினால் அஃது எண்பதானாலும்." இற்றைக்கு 1867 ஆண்டுகளுக்கு முன்னிருந்த சாலிவாகனன் என்ற மன்னர்பிரான் காலத்தில் இச்சராசரி வயது அறுபது; அதனால் அவன் அறுபது ஆண்டுகளை ஒரு வட்டமாக்கி அவைகளுக்குப் பிரபவ முதல் அட்சய முடியவுள்ள அறுபது பெயர்களையும் இட்டான். அரசர்கள், சங்கங்கள் இக்காலம் இருபத்தைந்தாவது ஆண்டில் வெள்ளி

விழாவும், ஐம்பதாவதாண்டில் பொன்விழாவும், அறுபதாவதாண்டில் மணிவிழாவும் கொண்டாடுவதுபோல அக்காலம் மக்கள் நூற்றுண்டு முழுக்கு (சதாபிடேகம்) என்ற விழாவைக் கொண்டாடிவந்தனர்; இஃது இப்போது நூறுபிறையென்று கொண்டு எண்பதாவது வயதிலேயே நடைபெறுகிறது. அறுபதாவதாண்டு நிறைவு (சட்டியப்தபூர்த்தி) விழாப் பலரால் கொண்டாடப் பெறுவதை நாம் காண்கின்றோம். இக்காலம் சராசரி ஆண்டு அறுபதிலும் மிகக் குறைந்துவிட்டது. இங்ஙனம் வாழ்நாள் குறைவதன் காரணம் சட்டை முதலியவைகளால் உடலை மூடியிருப்பதும், சுடச்சுடக் காப்பி தேநீர் முதலிய குடிப்பதும், பிஞ்சிற் பழுப்பதும், வறுமை முதலியவுமாம்.

ஆரியர், தமிழ் நாட்டுக்கு வருமுன் வானநூலை ஒரு சிறிதும் அறியார். அவர் அறிந்ததெல்லாம் திங்களுடைய வளர்ச்சி தளர்ச்சியைக் கண்டு காலத்தைக் குறிப்பிடுவதுமட்டும்தான். உவாவு (அமாவாசை)க்கு உவா ஒரு மாதம் என்று அவர்கள் கணக்கிட்டனர். அவர்கள் பல்கித் தமிழ் நாடடைந்தபோதே தமிழ் மக்களுடைய மதிநுட்பத்தையும் கணித முறைகளையும் கண்டு வியந்து தாமும் அம்முறையைக் கையாளத் தொடங்கினர். அவர்கள் தங்கள் பிறை மாதங்களுக்குப் பெயர் கொடுக்க நினைத்து சித்திரை வைகாசி முதலிய மாதப் பெயர்களையே பெரும்பாலும் சைத்திரம், வைகாசம் எனத் திரித்து வழங்கத் தொடங்கினர். சித்திரை மாதத்தில் வரும் உவாநாளுடன் முடிகிற மாதம் சைத்திரம் எனவும், இவ்வாறே ஏனைய மாதங்களுக்கும் பெயர் வைத்துக்கொண்ட ஆரிய மக்கள் சில ஆண்டுகளின் பின் தங்கள் கொள்கைக்கு மாறாகச் சைத்திரம் பங்குனியிலும், வைகாசம் சித்திரையிலும் இவ்வாறே ஏனைய மாதங்களும் முடிவடைவதைக் கண்டு அஞ்சினர்களாய் சித்திரை முதலிய மாதங்களே நிலையானவை யாதலினால் அவைகளோடு தங்கள் புதிய மாதங்கள் கூடாமற்போனால் பயனற்றுப்போம் என்று தெரிந்து பங்குனியோடு முடிகிற தமது சைத்திரத்தை அதி மாதம் அதாவது பொய் மாதம் என்று தள்ளிச் சித்திரை மாதத்தின் உவாவுடன் முடிகிற பிறை மாதமே உண்மைச் சைத்திரம் (நிசசைத்திரம்) என்று கொள்வாராயினர். அவ்வழக்கமே இன்றும் வழங்கி வருகின்றது. தமிழ்மக்கள் சித்திரை முதலிய பன்னிரண்டு மாதங்களுக்கும் பெயரமைத்திருக்கிற நுட்பத்தை மாற்ற எண்ணியே தை (பூசம்), புணர்தை (புணர்பூசம்) என்ற நாள்மீன் வரிசையைப் புணர்தைதை என மாற்றிவிட்டனர்.

இது எங்ஙனம் எனில், அவர்கள் வடமொழியில் தமிழ்க் கணித நூல்களையெல்லாம் மொழிபெயர்த்து எழுதும்போது

இச்சூழ்ச்சியைக் கொண்டனர். கணிதம், மந்திரம் என்ற கலைகள் மங்கிமங்கிப்போனதற்குக் காரணம் அப்புலவர்கள் இவைகளைத் தம் மக்களுக்கும் காட்டாது மறைத்துவரும் இயல்பினரா யிருந்தமைதான். அதனால் கணிதநூல்கள் அங்கங்கே ஒன்றிரண்டே காணப்பெற்றன. நாளடைவில் ஆரியர் புரோகிதராகி ஐந்திறத்தைத் தம் வயப்படுத்தி அறியா மக்களை ஏமாற்றி அங்கங்கே யிருந்த தமிழ்க் கணித நூல்களைக் கைப்பற்றி அழித்தொழிந்து விட்டனர். இன்றும் தமிழ் மக்களிற் பலர் அறியாமையிருளில் அழுந்தி உண்மையுணராமல் தமக்கே கேடு சூழ்வாராயிருக்கின்றமை வெளிப்படை. ஆரியர் இன்னும் தமது பிறை மாதக்கணக்கில் நிற்கின்றமையினாலே தான் ஆவணியில் வரும் பிள்ளையார் சிறந்த நாளைப் புரட்டாசியிலும், புரட்டாசியில் வரும் கலைமகள் விழாவை ஐப்பசியிலும், ஐப்பசியில் வரும் தீபாவளியைப் புரட்டாசியிலும், கந்தர் சட்டி விழாவைக் கார்த்திகையிலும், மாசியில் வரும் சிவனிர (சிவராத்திரி)வைத் தை மாதத்திலும் சில ஆண்டுகளில் தமது பஞ்சாங்கங்களில் குறிப்பிட்டுத் தமிழ் மக்களில் அறியாதார் பெரும்பாலரைத் தவறான வழியில் நடந்து பயனை இழக்கும் படிக்கும், சரியான காலத்திற் செய்யாத குற்றத்திற்கு ஆளாகும்படிக்கும் செய்துவருகின்றனர். இக்காரணம்பற்றியே நாம் சென்ற முப்பத்திரண்டு ஆண்டுகளாகச் **சைவப் பஞ்சாங்கம்** வெளியிட்டு வருகின்றோம்.

இருபத்துநான்கு ஆண்டுகளுக்கு முன்னால் பிரபவ ஆண்டுக்கு ஐந்திறம் வெளிவந்தவுடன் பண்டைத்தமிழ் சொற்களையே குறித்தெழுதித் தனித் தமிழ்ப் பஞ்சாங்கம் வெளியிட வேண்டுமென்ற கருத்துடன் அவ்வாண்டுக் கடைசியில் வெளிவந்த விபவ ஆண்டு ஐந்திறத்தில் வடமொழிப் பெயர்களுக்குச் சரியான தமிழ்ப் பெயர்களைக் குறித்து வெளியிட்டோம். சென்ற எட்டாண்டுகளுக்கு முன்னால் தனித்தமிழ் ஐந்திறம் வெளியிட எல்லா முயற்சிகளும் நடைபெற்றன; அப்போது எம்மோடு துணையாயிருந்து பல முடிவு காண உதவியவர் பெரும் புலவர் தேவநேயனாரவர்கள். அவர்களுக்கு எமது நன்றி.

இப்போது தனித்தமிழ்ப் பஞ்சாங்கம் (ஐந்திறம்) வெளியிட அமயம் பார்த்திருக்கின்றோம். தமிழ்ப்பெருமக்கள் கருத்தறிய அவாவுடையோம்.

# அருள் பத்து

முதற்றிருப்பாட்டு:

“சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமால் அறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே.” —(ஆளுடைய அடிகள் க.)

விளக்கொளியானது கண்ணாடியின் நிறங்களால் வேற்று வேறாகத் தெரிந்தாலும் அதன் ஒளி ஒரே ஒளியாய்த் தோன்றுவதொப்ப, ஆண்டவன் வேறு வேறாக உலகில் கலந்திருந்தாலும், ஒரே தன்மை உடையவனாகவே விளங்குகின்றான். அவனுக்கு ஒரு வேறுபாடும இல்லை. அவன் இயல்பிலே கட்டற்றவன்.

ஆண்டவனை ஒளித்தன்மையாகக் கொள்வது மிகவும் சிறப்புடைத்து அவ்வொளியைக் காணலாம் அதற்குக் கனிவு வேண்டும்; அன்பு வேண்டும்; அறிவும் வேண்டும; அறிவு இல்லை யானால் மற்ற ஆற்றல்களினால் பயனில்லை. அறிவு திருந்தா விட்டால் எவ்வளவு அறம் செய்யினும எவ்வளவு நன்மை செய் யினும் பயனிலலை படிபபதற்கு அறிவு வேண்டும்; விளையாட்டு வேண்டாம் செயலாற்றல் என்னும விருப்பத்தை அன்பு என் றும் சொல்வர். ஆண்டவன் நமக்குச் செய்யும் பல உதவிகளில் அறியாமையை நீக்குவது சிறப்புடைத்து. அறியாமையைச் செய்யும் ஆணவமல அழுக்ககலவே உயிர்க்குப் பிறப்பைப் பெருமான் நல்கினன்.

வீட்டில் ஏற்றப்படும ஒளிக்கு எல்லை உண்டு. ஆண்டவனாகிய ஒளி எல்லையற்ற பேரொளி. ஞாயிறு, திங்கள், தீ என மூன்றையும் ‘முத்தீ’ எனச் சொல்லுகிறோம். தீ ஒன்றைப் பற்றி ஒளிர்வதனாலும், ஞாயிறு பகலை விளக்குவதாலும், திங்கள் இரவில் ஒளி செய்வதாலும் உணர்கின்றோம். இந்த ஒளிகளுக் கெல்லாம் எல்லை உண்டு. வட சொல்லில் எல்லையுள்ளதற்குக் ‘கண்டம்’ என்றும, எல்லையில்லதற்கு, அகண்டம’ என்றும் வழங்குகிறார்கள். இரண்டு முள்ளது ‘கண்டாகண்டம்’ எனப் படும். இம்மூன்றிற்கும் ஒளி நல்குவது ஆண்டவனே. படிப் பார்க்கும் படிப்பிப் பார்க்கும் அறிவைக் கொடுப்பது தலைமை ஆசிரியரே. தலைமை ஆசிரியருக்குள்ள அறிவு, நிறைந்த அறிவு. அவர் எல்லா வகுப்பும் நடத்துவர். வகுப்பு ஆசிரியருக்குக் கொடுத்த பாடத்தைத் தான் நடத்த முடியும் இவ்வெடுத்துக்

காட்டில் தலைமையாசிரியர் போலக் கடவுளை ஓர்க. தலைமை ஆசிரியராக ஆவதற்கு முன்பு அவர் வேற்றுமையின்றி ஒரு பொதுவான ஆசிரியராகத் தோன்றினும் 'தலைமை ஆசிரியர்' என்று வைத்தபின் அவர் மதிப்பு மிகும். இதுபோல் கடவுள் உடனாய் நின்று ஊக்கினும் பொருள்தன்மையில் வேறாய்ச் சிறப்புற்று விளங்குகின்றார்.

'சோதியே சுடரே' என்ற இப்பாட்டில் 'சுடர்' என்ற சொல்லில் ஞாயிறு திங்கள் என்ற இரண்டும் அடங்கியுள. சோதி என்ற சொல்லில் தீ அடங்கியுள்ளது. சுயம் சோதி—தனிச்சுடர். 'சோதி' என்பதை வடசொல் என்றுதான் பலர் கருதுகிறார்கள். அறிவது ஒளியைக்கொண்டுதான் அறிய வேண்டும் என்பதனால் தமிழ்ச் சொல்லென்றே கொள்ளலாம். சோதித்தல்—விளைதல்—ஆய்தலென்பன காண்க.

இனி, பகலவனின் சுடர் இருக்கிறது; பெரு வெளிச்சம் தருகிறது; தந்தாலும், வீட்டிற்குள் வராவிட்டால், விளக்கு ஏற்றித்தான் வீட்டிற்குள் செல்லவேண்டும். பலகணி வழியாகவும் வெளிச்சம் வரும். பலகணி—பல கண்களையுடையது என்பதால் அப்பெயர் அதற்கு வந்தது. பகலாய் இருந்தாலும் அடைத்த வீட்டிற்குள் ஒளியின் துணையின்றி நுழைய முடியாது.

இவ் ஒளி அனைத்தும் புறத்தேதான் இருக்கின்றன; அகத்தில் செல்லாது. கனவு காணுவதுபோல் வெளிச்சம் எண்ணும் பொருளில் சோதி என வழங்குவதும் உண்டு. அது, ஒரோவழி அகத்துத் தெரிந்தாலும் உறங்காமல் கண்ணை மூடிக்கொண்டிருக்கும்போது ஒளி தோன்றுவதில்லை. அறிவாகிய அகக்கண் எப்பொழுதும் தெரியும்; கடவுளை வணங்கி ஐந்தெழுத்தோதி ஒழுக்க முறையில் நிற்கின்றவர்களுக்கு, அந்தக் கண் விளங்கும். நாம் படிக்கும் பாடம் மனத்தில் விளங்குவது எப்படியென்று எண்ணிப் பார்த்தால் இது நன்கு விளங்கும்.

'சுரிகுழல் பணைமுலை மடந்தை பாதியே'

என்பதில் மடந்தை என்பது, அடக்கமும் இரக்கமும் உடைய பெண். பணை—பெருப்பு. குழல்—கூந்தல். சுரிகுழல்—சுருண்டு நெளிந்து அழகாயிருக்கும் கூந்தல்.

தாய்மைத்தன்மைக்குச் சிறப்பாம் மார்பைப் பெண்களுக்குச் சிறப்பாகச் சொல்லுவது ஆன்றோர் மரபு. இது, திருக்குறள், 'கல்லாமை' என்ற தலைப்பில் 'கல்லாதவன்' அறிவுடையாரவையில் ஒன்றைப் பேச முற்படுவதற்கு எடுத்துக் காட்டுமுகமாக,

"கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று"

—திருக்குறள், ௪0௨.

என்றருளிச் செய்ததனால் அறியலாம்.

கணவனும் மனைவியுமாகக் குடும்ப வாழ்க்கை நடத்துவதில் மேற்கண்ட பாட்டில் உள்ளபடி குடும்பம் ஒப்புமையாக நடக்கவில்லையானால் இன்பம் முறையாக எய்தாதவர் என்று சொல்ல முடியாது. ஆகவே, அவர்களின் நோக்கம் மக்களைப் பெறுவது ஒன்றே ஒப்புமை என்பது. விலைமகளிர் வாழ்க்கை மக்கட்பேறல்ல; பொருள் பெறுவதுதான். மணம்புரிந்து கொள்வது இன்பப்பெருக்கு ஒன்றிற்காகமட்டும்தான் என்றிருக்குமானால் அது மணமாகாது. பெண்களுக்கு மார்பைச் சிறப்பாகக்கொள்ளும் இடமெல்லாம் மக்கட் பேறேயாம். அப்பிள்ளைப் பேறுதானும் மணத்திற்கப்புறமல்லவா—அல்லது மணவாழ்க்கை துவங்கிய பின்பல்லவா — உண்டாகும் என்றுரைப்பர் சிலர். பிள்ளைப்பேறு கருதாத வாழ்க்கை அனைத்தும் செம்மையாகாது. மணவாழ்க்கைத் தொடக்கமே மக்கட்பேற்றின்வேட்கையில்தானுண்டாகின்றது. இஃது, "உவந்திருவரும் புணர்ந்திங்கு உலகுயிர் எல்லாம் ஈன்றும்" ஒன்றும் சிவபெருமானின் திருவுள்ளத் திருக்குறிப்பாகும்.

சமைத்து உண்ணற்குமட்டுமேல் ஆண்பெண்ணுள் ஒருவர் துணை ஒருவர்க்கு வேண்டப்படுவதில்லை. செந்நாப்போதாரும் மக்கட் பெறுதார்க்கு 'அன்பு' ஓங்காது, விரியாது, வளராது என்று சொல்கிறார். பிள்ளையைப் பெற்றவர்களுக்குத்தான் இயல்பாகவே இரக்கம் மிகுதியாக வரும்.

ஆகவே, நூல்களில் மார்பைச் சிறப்பித்துவரும் இடங்களெல்லாம் இதுபோல் சிறந்த கருத்துப் பொருள் விளக்க என்று தெரிந்தால்தான் அது பயன்பெறும். இன்றேல் பொருள் மருளாகும். (அர்த்தம் அனர்த்தமாகும்.) இதுதான் இப்பாட்டுக்குற்ற பொருள்.

ஆண்டவன் சோதி, சுடர், சூழொளி விளக்காக இருக்கின்றான். படிப்படியாகத்தான் நாம் அவனை அடைய வேண்டும். இதில் ஒரு குறிப்பு உணர்ந்துகொள்ளவேண்டும். அஃதாவது:—

விளக்கிற்குத், திரி முதலிய பற்றுக்கோடு வேண்டும். ஞாயிறு அல்லது திங்கள் தானாக நின்று ஒளிதரவில்லையா? என்று கேட்கலாம். உண்மைதான்; ஆனால் அவை என்றும் இறைவனை யொப்ப ஒன்றுபோல் நிலைபெறாமல் ஒருகாலத்தில்

இல்லாதொழிந்துவிடுகின்றது. ஆண்டவனாகிய விளக்கோ என்றும் நின்று குன்றாப் பயன்தருகின்றது.

சோதியே........பாதியே—அடக்கமும் இரக்கமும் நிரம்பிய அம்மையை ஒரு பாதியாகவுடைய சோதியே. பரம்-மேலானது. 'பால்வெண்ணீறு' என்றது, ஆண்டவன் பால்போலும் வெண்மையான திருநீற்றை அணிந்திருப்பவன் என்பதைக் குறிக்கும். சுடுகாட்டுச் சாம்பல் கருமையல்லவா, வெண்ணீறு என்பது எப்படிப் பொருந்தும் என்று வினவின்? அற்றன்று. அனைத்தையும் அவன் நீறாக்கி வெண்மையாக்கிக் கொள்கிறான் என்று கொள்க. நாமும் வெண்மையாக்க முயலவேண்டும்? அதற்கு நாம் என்ன செய்யவேண்டும்? கூறுவல் கேண்மின். பசு தரும் சாணத்தைத் தூய்மையாகப்பெற அதை நல்கும் மாடுகளைக் குளிப்பாட்டி, நல்ல இரைகொடுத்து நல்ல பருத்திக் கொட்டை, தூயநீர் இவைகள் கொடுக்கவேண்டும். மாலை வெயிலும் இளவெயிலும் படச்செய்யவேண்டும். சாணத்தை மண் படாமல் விழும்போது ஏந்தச் செய்யவேண்டும். இப்பொழுதும் பழனியில் படி ஒரு ரூபாயாக விற்கும் நீறு இருக்கின்றது. அதுவும் வெண்மையன்று. சில இடங்களில் 'திருநீறுதானா?' என்று ஐயம் கொள்ளும் நிலையில் பட்டுப்போல் தூய வெண்மையாகவும் இருக்கிறது.

மண்ணுலகில் ஒருவரை ஒருவர் அறியாதிருக்கிறார் என்றால், அவர் கள்ளச்செயல் செய்தவராக இருந்தால்தான் அப்படி இருக்க முடியும். ஆனால் ஆண்டவன் நீதிநிறைவுடையவனாக இருப்பதனாலேயே நமக்கும் காணமுடிவதில்லை. திரைக்காட்சி (சினிமா) பார்ப்பவனுக்கு, 'திருக்குறள் வகுப்பு' நடப்பது தெரியுமா? அதுபோல் எவன் எந்த நாட்டத்தில் இருக்கின்றானோ அதனையே அவன் காணமுடியும். "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்". ஆண்டவன் அடியாருக்கு—தொண்டர்களுக்கு—அன்பர்களுக்கு அண்மையனாகவே இருக்கின்றான். தன்னைப் பெரியவ... என்று எண்ணுகின்ற செருக்குடைய எவனுக்கும் ஆண்டவன் தோன்றமாட்டான். அயனும் மாலும் தங்கள் செருக்கி...ல்தான் ஆண்டவனைக் காணமுடியவில்லை. பணம் நிறைய இருக்கிறதே! நமக்கு ஏன் படிப்பு வேண்டும் என்று ஒருவன் வாளா இருப்பானானால் அவனுக்கு ஒருநாளும் படிப்பு எங்ஙனம் வராதோ, அதுபோலவே எவ்வளவு மேன்மை வாய்ந்தவர்களும் ஆண்டவனருளை நாடாவிட்டால் வாழ்வில் உய்ய மாட்டார்கள். அண்ணாவி, படிக்கும் பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுக்கிறார்; படியாத பிள்ளைகளுக்குச் சொல்லிக்கொடுப்பதில்லை. அஃது ஆசானின் குற்றமன்று; மாணவனின் குற்றமே.

இதுபோல் கடவுளுக்கு அன்பு பூண்டு அடியவர்கட்குத் தொண்டு செய்தால் கடவுளருளைப் பெறலாம். இல்லாவிட்டால் முடியாது இதிலிருந்தே கடவுள் நீதியுடையவர் என்று தெரிந்துகொள்ளலாம். ஆளுடைய நம்பிக்கு, கடவுள் தோழர்; அங்ஙனமிருந்தும், சங்கிலிநாச்சியாரிடம் இறைவன் முன்னிலையில் கூறிய ஆணையையும் மீறி, பரவைநாச்சியார் மனைக்குச் செல்லலுற்றபோது, கண்ணைக் கெடுத்துவிட்டார். இந்நிகழ்ச்சியிலிருந்து, கடவுளானவர், தமக்கு அன்பராயினும், அடியாராயினும். தோழராயினும், ஏழையாயினும், செல்வராயினும், குற்றம் செய்தவர்களை ஒறுத்தே உய்விப்பர் என்பது விளங்கும். ஆடையை அழுக்ககற்றும் வண்ணான் அவ்வாடையை மேலும் உவர் முதலிய அழுக்கேற்றி நையப்புடைத்து நறுநீர் தோய்த்து அழுக்ககற்றுவன். அதுபோல் முழுமுதல்வனும் மன்னுயிரின் 'பண்டே புல்லிய மல'த்தைப் போக்குவதற்கு வினையழுக்கேற்றி அருள்நீர் தோய்த்து மருள் நீக்கித் தெருளாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

பங்கயம்—தாமரை. சேற்றினின்றும் தோன்றியதால் இப்பெயர் பெற்றது. பங்கம் - சேறு; சேற்றுத்தோன்றி.

செல்வத் திருப்பெருந்துறையுள் என்பதன்கண், அன்புச் செயலும், ஆண்டவன் திருவருளும், அனைவரிடமும் வணக்கமான நடக்கையும், நேர்மை குன்றாமையும்தான் செல்வம் என்று சொல்லவேண்டும்.

ஆகாதபிள்ளை என்றாலும், பெற்றோர்கள் சோறுபோடாமல் இருக்கமாட்டார்கள். தீமையைத் திருத்தி நல்லவனாக ஆக்கத்தான் முனைவார்கள். மருந்து கொடுப்பதற்கும், உணவு கொடுத்துத்தானே கொடுக்கவேண்டியிருக்கிறது. அதுபோலவே தான் ஆண்டவனும் வையத்து வாழ்வருளி வருத்திச் சைவத்திற் புகுத்திச் சிவமாம் பெருவாழ்வில் என்றும் இருத்துவன். எல்லாச் செல்வமும் அருள் செல்வத்தில் அடங்கிவிடுகிறது. கடவுள் நினைப்பு, அவனருள், அருள்வழியான நற்செயல் இவை தான் செல்வம் என்பதை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். இது,

> " ... ... ... ...
> நெடிய மொழிதலும் கடிய வூர்தலுஞ்
> செல்வ மன்றுதன் செய்வினைப் பயனே;
> சான்றோர் செல்வ மென்பது சேர்ந்தோர்
> புன்க ணஞ்சும் பண்பின்
> மென்கட் செல்வஞ் செல்வமென் பதுவே."

ற். ௨௧௦.)

தேவாரத்தில்,

" செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே."
(ஆளுடைய பிள்ளை : அ0—ரு.)

என்று அருள் ஆன்றோர்கள் குறித்தவாற்றால் அறியலாம்.

குருந்தம்=குருந்தமரம். துறை=கரையேறுமிடம். 'திரு' 'பெரு' என்ற அடைபெற்றுத் 'திருப்பெருந்துறை' யென்றதனால் இம்மை வாழ்வுமட்டுமல்ல; இம்மை வாழ்வு, மறுமை வாழ்வு, வீட்டு வாழ்வு மூன்றும் தருகிறது என்று கொள்ளவேண்டும். இறைவன் மரத்தின்கீழ் இருப்பதாகப் பல நூல்களில் சொல்லப் படுவது எதற்கென்றால்; மரம் தீமையை நீக்குகிறது. நமக்குக் கூட உண்பதற்குக் காய்கனி முதலியன தருகின்றது. தங்க நிழல் தருகின்றது. மாங்காயை எடுத்துக்கொள்வோமானால் அதை மாத்திரம் வைத்துக்கொண்டு சோற்றை உண்டுவிடலாம். இதுபோன்று மரத்தினால் நாம் பல பயன்கள் பெற இருப்பதனா லேயே என்றறிக. இன்னும் மரங்களுக்கு நாம் சிறுபயனைக் கொடுக்கின்றோம். அவை நமக்குக் குலைகுலையாகத் தருகின் றன. அதுபோலவேதான் ஆண்டவனும் அதன்கீழிருந்து சிறந்த பயன்களை மரங்களைக்கொண்டு நல்கச்செய்து தானும் நல்கு கிறான். மலர் நிறைந்தது என்பதைக் காட்டத்தான், 'நிறை மலர் குருந்தம்' என்றார். மலர்தல் தனது நன்மைக்கும் பிறர் நன்மைக்கும் என்று தெரிந்துகொள்ளவேண்டும். சீர் - சிறப்பு, சீர் சிறப்பு. முன்னோர் தேடியதைப் பேணுவது 'சீர்'. அதற்கு மேலும் தானாகத் தேடுவது 'சிறப்பு'.

ஆதியே = ஆதிபகவன்; ஆதி, காரணமாயிருப்பது.
ஆதி = உலகத்தை நடத்துவது.
பகவன் = தன்னுடன் (கடவுளிடம்) சேர்ப்பது.

அருமையாகக் கூப்பிடவேண்டும் என்ற கருத்தில் இனிமை யாக அழைத்தால்தான் அவ்வழைப்பு அன்பாகத் தோன்றும். அதுதான் இங்கே 'ஆதரித்தழைத்தால்' என்பதன் நுட்பம்.

அதெந்து = அஃது என்ன என்று அருளுடன் கேட்பது.
அருளாயே = எனக்கு வெளிப்பட்டருளவேண்டும்.

'அருளாய்' = என்றால் அருளாதே என்றல்ல; அருள் என்றுதான் பொருள். அருளாய் — அருள் — அருள்செய் என்பதாம்.

(தொடரும்)

# மாலைப்பொழுதிலே

[செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை]

செந்தமிழ்த் தலைமைத் திருநகராம் நம் சென்னை நகரிலே! எம் அலுவலகத்திலே! ஒருவாறு வேலைகளை முடித்துக்கொண்டு, கடற்கரைக்குச் சென்று உலவிவர எண்ணிப் புறப்பட்டோம். அப்போது சாயுங்காலம் மணி ஐந்து. சூரியனும் தன் வேலையை முடித்துக்கொண்டு, தன் இருப்பிடம் செல்வான்போல் மேல் திசையின் கீழ்நோக்கி இறங்கிச் சென்றுகொண்டிருந்தான். நாங்கள் தெருக்களின் வழியோரமாக நடந்து சென்றுகொண்டிருந்தோம். தெருக்களே எங்கட்குக் கடலாகக் காட்சியளித்தன. தார் ரோடு (கீல்கொண்டு மெழுகப்பட்ட வழி) கரிய நிறமாதையால் அது கடலின் நீராகவும், வானளாவிய கட்டிடங்கள், அதில் மிதந்து நிற்கும் பெருங்கப்பல்களாகவும், பலவகைப் பேரிரைச்சல்கள், அதன் ஓசையாகவும், மின்சார வண்டி (டிராம்) சிறு சிறு கப்பல்களாகவும், கார்கள் அதிற்செல்லும் படகுகளாகவும், இழுப்பு (ரிக்ஷா) வண்டி சிறு சிறு மிதப்புக்களாகவும், போவார் வருவார் ஆகிய மக்களும், மாடு, நாய், பூனை, கோழி முதலியனவும், அதிற் செல்லும் பல்வகை மீன்களாகவும், அதில் வாழும் வேறு பலவகை உயிர்ப் பொருள்களாகவும் எங்கட்குத் தோன்றின. இதுவும் கடல்தானே! அக்கடற்கரைக்குச் செல்வானேன் என எண்ண அலை தடுத்தது. ஆனால், மனம் கடற்கரைக்குச் சென்று வருமாறு தூண்டிற்று. சென்றுகொண்டே இருந்தோம்.

இடையில் இழுப்பு வண்டிக்காரர்கள் ஒருவர்பின் ஒருவராக முன்னும் பின்னும் வந்து 'ஓர்ரம், ஓர்ரம்'! என்று கூவிக்கொண்டு செல்வது ஒருபுறமும், 'பம்பம்ம்—ம்—ம்' என்ற ஒலியுடன் கார்கள் ஒருபுறமும், 'டொர்—டொர், டொர்ர்ர்ர்' என்ற ஓசையுடன் மின்சார வண்டிகள் ஒருபுறமும் வந்து வந்து எங்கள் வழிச் செலவைத் தடுத்துக்கொண்டே வந்தன. நாங்கள் அந்தத் தடுப்பையும் கடந்து ஒதுங்கி ஒதுங்கிச் சென்றுகொண்டே இருந்தோம்.

வழிகளில் வீட்டுத் திண்ணைகளிலும், சலதாரை வழி ஓரங்களிலும் சட்டி முட்டிகளை ஒதுக்கி வைத்துக்கொண்டு, ஆங்காங்கே ஏழைமக்கள் பலப்பல குடும்பமாகச் சேர்ந்து ஆணும் பெண்ணுமாகக் கூடிச் சோறாக்கிக் கொண்டிருந்தனர்; அவர்கள் தெருக்களில் கிழிந்து கிடக்கும் துண்டுக் காகிதங்களையும் பழத் தோல்களையும் விறகாகக் கொண்டு, அடுப்பெரிக்கும்

காட்சியும், அவர்களுட் பெண்கள் குழந்தைகளோடு கொஞ்சி விளையாடுவதும், பாலூட்டுவதும், தாயும் குழந்தையுமாக அங்கணத்தின் (சாக்கடை) நீரில் கால்படப் படுத்துக்கொண்டு புன்னகையாடிக் கொண்டிருக்கும் காட்சியும் பிறவுங்கண்டு இரங்கி வருந்தத்தக்கதாகவே இருந்தன! குழந்தைகள் பாதைகளையே பாயலாகக்கொண்டு படுத்திருக்கும் காட்சியும், அவர்களில் கணவன் மனைவியர் 'செல்வமென்பது சிந்தையின் நிறைவே' எனக்கொண்டு, இன்முகத்தோடு புன்னகை செய்து, உரையாடி உரையாடிச் சமையல் செய்யும் காட்சியும், அவர்கள் பனியால் நனைந்து வெயிலால் உலர்ந்துறையும் காட்சியும், கண்ணிற் காணொணுக் காட்சியாகவே இருந்தன. பின்னரும் சென்றேம்.

கால் முடமானவர், கண்ணொளியில்லார், காதொலியற்றார், பிறர் இவ் வகையினரெல்லாம், எங்கள் பின்னர்த் தொடர்ந்து "ஐயா சாமி பிச்சை, கால் இல்லாதவனுங்க, கன்னில்லாதவனுங்க, ஏலயிங்க, தருமங்குடுங்க சாமி! உங்களுக்குப் புன்னியமா போவுது," என்றும், சில ஏழைப் பெண்கள் பிள்ளைகுட்டிகளுடன் வந்து "சாமி புல்லேகுட்டி பெத்த புன்னியவாங்கலே! இந்த ஏலே முகம்பாருங்க, குயந்தேக்குப் பாலுமில்லே தன்னில்லே கால்னு அரைனு தாங்க ஐயாங்கே," என்று வந்தனர். அவ்வுலகத்தினின்றும் போதரும் எங்களிடம் காசு ஏது? பணம் ஏது? அங்குநின்றும் கடந்தோம். பெருங்கடைத்தெரு வந்தோம். "சீப்பு சீப்பு அஞ்சனு விந்தது ரெண்டனு," என்னும் ஒலியும், "நல்ல துணி பட்டுத்துணி, கெசம் ஒன்னேகாரூபாய்," என்று வியாபாரிகள் கூவும் ஒலியும், "வாயைப்பயம் வாயைப்பயம், சாத்துக்கிடி சாத்துக்கிடி, லட்டு லட்டு நாலனு வித்தது ரெண்டனு ரெண்டனு ஒன்னரனு ஒன்னரனு," எனப் பழம் விற்கிற பெண்கள் பகரும் ஒலியும், பிற வியாபாரிகள் கூறும் ஒலியும் சென்னை நகரின் பெருமிதத்தை விளக்கின. அங்கங்கே கார்களில் மனைவி மக்களோடு வருவோரும், குதிரை வண்டியிற் செல்வோரும், இழுப்பு வண்டியில் போவோரும், மின்சார வண்டியில் போதருவோருமாகப் பலர் கடற்கரை நோக்கியே செல்வோராயிருந்தனர். நாங்களும் கால் வண்டிகொண்டு கடந்து கடற்கரையை அண்மினோம். கதிரவனும் தன் ஒளியை ஒடுக்கிக்கொண்டு மறைந்தான்.

அவன் மறைந்ததும் செவ்வானம் மேற்குத் திசையில் ஓங்கிப் பரந்து நின்றது. எம் மனத்தில் மாலைப்பொழுதை வடித்த ஓவியப் புலவர் பலர் வந்து வந்து காட்சி தந்து மறைந்தனர். காக்கைகள் "காகா" எனக் கத்திக்கொண்டு தம்தம் இருப்பிடம் நோக்கிப் பறந்துகொண்டிருந்தன. நாரை

கள் கொக்குகள் சாரைசாரையாகச் செவ்வானத்தின்மேற் படையெடுத்துச் செல்வனபோலப் பறந்து போய்க்கொண்டிருந்தன. காக்கைகள் கருநிறமாதலின் தம் இனமாகிய இருள் வருகையை எதிர்நோக்கி அழைப்பதற்குச் செல்வன போலவும் இருந்தன.

நாரைகள் கொக்குகளின் நிறம் வெளிறிய செம்மையும் வெண்மையுமாதலின், தம் இனமாகிய மாலையினையும் வெண்ணிலவையும் வரவேற்கப் போவனபோல் தோன்றின. இவைகளைப் பார்த்துக்கொண்டே கடற்கரை ஓரமாக அமைந்துள்ள தோட்ட ஓரங்களில் போய்க்கொண்டிருந்தோம். அத்தோட்டங்களில் உள்ள பலவகைப் பூச்செடிகளில் மஞ்சள்நிறச், செந்நிற வெண்ணிற, பன்னிறமுள்ள பல்வகை மலர்கள் மலர்ந்து, தேன் துளிக்கக் காட்சியளித்துக்கொண்டிருந்தன. அவைகள் கடற்செல்வி எங்கள் வருகையைக் கண்டு மகிழ்ந்து இன்பக்கண்ணீரரும்ப அகமுகமலர்ந்து வரவேற்பனபோலத் தோன்றின.

எதிர்ப்பக்கம் நோக்கினோம்; ஆங்கே நின்ற கோலமாக **தமிழ்ப் புலவர், டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள்** உருவச்சிலை காட்சியளித்தது; அச்சிலை கடலை நேர் நோக்கியவண்ணமாக அமைக்கப்பட்டுள்ளது. அக்காட்சி 'நாட்டிலுள்ள பழைய தமிழ் ஏட்டையெல்லாம் தேடியெடுத்துத் தமிழ் மக்கட்கு அழியாச் செல்வமாகத் திரட்டித் தந்தேம்; இன்னும் எஞ்சின கடலினும் இருக்கலாம்; அவைகளையெல்லாம் தேடித்தருவோ'மென முனைந்து எண்ணிக்கொண்டு நிற்பார்போல் தோன்றிற்று. 'வாரணம் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரும் மாள' என்ற உரையை எண்ணிப் பணியாற்றியவர்களன்றோ? என எண்ணினோம்.

பின்னர்க் கடற்கரை கடந்து, உள்ளே கடலின் மணல் பரந்துள்ள இடத்துக்குச் செல்ல எண்ணிச் சென்றோம். ஆங்கே கால் ஊன்றி மேலே பலகை ஒன்றை இணைத்து அறிவிப்புப் பலகை ஒன்று சுறுமீன் செதுக்கிய வடிவுடன் காணப்பட்டது. அதன் மீது, "**அபாயம்—சுராமீன், கடலில் ஸ்நானம் செய்பவர்க்கு சுராமீனினல் ஆபத்து ஜாக்கிரதை,**" என்று எழுதப்பட்டிருந்தது. சுறு, சுரா ஆவது தமிழ் வழக்கன்று என வியப்பெய்தினோம். ஸ்நானம்......ஜாக்கிரதை முதலிய பல தமிழல்லாத வேற்றுச் சொற்கள் காணப்பட்டன. அதைக் கண்டு திடுக்கிட்டேம். என்னே! தமிழ் நாட்டில்—தமிழர் தலைநகரில்—இரண்டொரு சொல்தொடரில்—இவ்வளவு பிழையுடனும், தன்னுணர்ச்சியின்றியும் எழுதப்பட்டிருக்கின்றதே என எண்ணி

னேம். இங்குப் புலவர்கள் இல்லையா! கழகங்கள் இல்லையா! என்ன காலம்! இதைத் திருத்தித் தமிழ்ச் சொற்களால் எழுதக் கூடாதா? ஆ! உலகங்கண்ட தமிழ் நாடே! மீன் புலி விற் கொடிகளை இமயத்தின் நெற்றியில் வெற்றியுடன் எழுதிய தமிழ் நாடே! உலகெங்கும் அறநெறிக் கதிரொளிகாலும் காளாமணி விளக்காம் திருக்குறள் பிறந்த தமிழ் நாடே! இன்பப் பெட் டகங்களாம் சங்கநூற் கருவூலங்கண்ட தமிழ் நாடே! நீ யாண் டுளாய்! யாண்டுளாய்! என விளுயினேம். எழுந்தது நடுநிலை, தமிழர்க்குத் தன் மானமில்லையென விடையிறுத்து. உள்ளே சென்றேம்! அங்குப் பலகடைகள் விரிக்கப்பட்டிருந்தன. சீப்பு, கண்ணுடி, தடுக்கு, புத்தகங்கள், உண்பண்டங்கள், சிறுவர்க் கான விளையாட்டுக் கருவிகள், பிற யாவும் விற்றுக்கொண் டிருந்தனர் பற்பல வியாபாரிகள். அதனுள் குளிப்புநீர்த் தடாகமும், சிற்றுண்டிச்சாலையும், படிப்பு நிலையமும், சிறார் விளையாடும் இடங்களும், ஆங்கே ஊஞ்சல்களும், பிறவும் காணப் பட்டன. கண்டு மகிழ்வெய்திஞேம்.

ஆங்காங்கே இளமை நலம் மிக்க ஆண்களும் பெண்களும் அணி, அணியாக வருவதும் போவதுமாகக் காட்சியளித்தனர். அக்காட்சி வானத்திற் செம்மையும் வெண்மையும் ஏனைய நிறமுங்கொண்டு திரள் திரளாக இருக்கும் சிறுசிறு மேகத் திரள் மணற் கொழித்திருப்பதுபோலத் தோற்றிற்று. ஆண்கள் காலிற் பலவகைச் செருப்புக்களணிந்து கால் சட்டை மேற் சட்டை பூட்டியும் மூக்குக் கண்ணுடியணிந்தும் வந்தனர். பெண்கள், கூந்தலை வாரிச் சடைப் பின்னியும், வெட்டிவேர் போல் பரப்பிச் சிதறிக் கட்டித் தொங்கவிட்டும், தலைமுடிமேல் கனகாம்பரம் முதலிய மணமற்ற பன்னிற மலர்களைச் சூடியும் வந்தனர். அது முகமதிக்கு அஞ்சி இருட்கூட்டம் பின்புறம் போய் ஒளிந்துகொண்டு கீழிறங்கிச் செல்வதுபோல் தோன் றிற்று. அவர்கள் காதணி, கண்ணணி, மூக்கணி, கையணி, விரலணி பூண்டும் காலில் தொடுதோலணிந்தும் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வந்தனர். அவர்கள் தலை முடிமீது முல்லை, மல்லிகை முதலிய மணமுள்ள பூக்கள் வந்திருக்கும் சிறப்பை யிழந்து செடிகளிலேயே பூத்துச் சிரித்துக்கொண்டிருப்பவாயின.

முற்காலத்து இலக்கியங்களில் வரும் 'தாழிக் குவளை சூழ் செங்கழுநீர்' 'அல்லியங் கோதைநல்லார் அன்புடன் வளர்த்த முல்லை' என்ற சொற்களெல்லாம் பகற்கனவானவே எனக் கருதினேம். மேற்கூறிய தோற்றங்களுடன் துணைவரோடு தொடர்ந்து வந்தனர்; காதலரோடு கடுகி வந்தனர்; கவலுக்கை

நெகிழாது கண்ணும் முகமும் அகமும் மலர மகிழ்ந்து வந்தனர். சிலர் மதுரைவீரன் கொண்டைபோல் காதுப் பக்கத்தில் கூந்தலைச் சுருட்டிச் செருகிக் கட்டியிருந்தனர். பலநாட்டு ஆணும் பெண்ணும் ஆங்காங்கே வருதலால் பலவகையினராக எமக்குக் காட்சியளித்தனர். முதிர்ந்த அகவை யெய்திய கிழவர்களும், நரையென வெளிறிய தாடியுடன் குனிந்து, கோலே காலாக ஊன்றிக்கொண்டு, தள்ளாடித் தள்ளாடி நடந்துவந்தனர்; கிழவிகள் சுரித்த தோலும், நரைத்த தலையும், தொங்கிய இதழும், நுங்கியல் கண்ணுமாகத் தோற்றமளித்து, வேற்கண் கெட்டு கோற்கண்ணராகப் பலர் வந்தனர். இக் காட்சிகளை யெல்லாம் பார்த்துக்கொண்டு கடல்நீர் வந்து வந்து செல்லும் கரைமேல் சீனியும் அவனும் கலந்ததை யொப்ப உடைந்த கிளிஞ்சில்களோடு விரவிக்கிடக்கும் நுண்மணற் பரப்பில் உட்கார்ந்து களைப்பாறிக் கடல்அலைகளை நோக்கிக் கொண்டிருந்தோம்.

அங்குப் பலர் கிழிந்த கந்தல் உடையுடனும், எண்ணெய் கண்டறியாத தலையுடனும், வற்றியுலர்ந்த உடலுடனும் காட்சி யளித்து ஆணும் பெண்ணுமாக வறுமைக் கோலத்தைக் காட்டிக்கொண்டு எங்கள் பக்கலில் அமர்ந்தனர். எங்கட்குச் சிறிது அதிற் கவனஞ் சென்றது. ஆ! இவ்வுலகம் என்ன உலகம்! செல்வர்பலர் களிப்புடன் வாழவும், வறியவர்கள் பசித்தபோது உண்ண உணவின்றி, இருக்க இடமின்றிப் படுக்கப் பாயின்றி வாடி வதங்கவும் படைக்கப்பட்டிருக் கின்றது. அதினும் நம் நாடு உரிமை பெற்ற நாடன்றோ? "தனியொருவற்கு உணவில்லை யென்னிற் சகத்தினை யழித் திடுவோம்," என்று முழக்கஞ்செய்த நாடன்றோ? என எங்கட்கு எண்ண அலைகள் கிளம்பிக் குமுறிக்கொண்டிருந்தன. என் செய்வது? ஆட்சிக்கோல் இவ்வாறிருக்கும் போதும்! எனக் கருதினேம்! ஆய்ந்தோம்! நல்லார்க்கும் பொல்லார்கரும் நடுநின்ற ஒருவனன்றோ? அவனுக்கு ஏன் இந்த வேறுபாடு. '**ஒரு கண்ணில் வெண்ணெயும் ஒரு கண்ணில் சுண்ணும்புமா**' எனக் கருதினேம். மேடுபள்ளம் இருக்கும்வரை இவைகளும் இருந்தேதான் தீரவேண்டுமென எண்ணினேம். 'ரஷ்யாவில் பொதுவுடைமை என்கிறார்களே, அங்குப் பசியில்லையாம், பட்டினியில்லையாம், வேலையுண்டாம், எல்லோரும் ஒரு குலமாம், எல்லோரும் அந்நாட்டு மன்னர்களாம்,' எனக் கேள்விப்படுகி றோமே, என நினைந்தோம். அஃது உண்மைதான். ஆனால், ஒன்று; எல்லோரும் அரசர்களானால் தொழில் எவ்வாறு நடைபெறும்? உலகம் நடவாவிட்டால் ஒன்றும் நடவாதன்றோ?

அங்கும் ஸ்டாலின் அரசராக இருக்கிறார். பெயர் தான் தனியாட்சி. குடி அரசு-முடியரசைப்போலத் தான் அவர், (சர்வாதிகாரம்) செலுத்துகிறார் என நினைந்தோம்.

ஏர் பிடித்து உழுபவர் எல்லாம் அரசராக இருந்தால் வேளாண்மை யார் செய்வது? குப்பை கூளம் வாருவோ ரெல்லாம் எய்ப்பிலேமென இருந்தால் அவ்வேலை எங்ஙனம் நடைபெறும்? எல்லாவற்றிற்கும் பொறி (இயந்திரங்)களால் செய்யலாமென்றால் அதைச் செய்தற்கும், செய்வதைத் தூண்டி நடத்துதற்கும் ஆள் வேண்டுமன்றோ? ஆகலான் உலகம் அவ் வத்தொழிலை நடத்திச் செல்வதற்கு உயர்வும் தாழ்வும், எக் காலமும் இருந்தே தீரும். அஃது இயற்கை இயற்கையென எண்ணினோம்.

> " வளம்பெற வேண்டாதார் யார்யாரு மில்லை
> அளந்தன போகம் அவரவர் ஆற்றல்
> விளங்காய் திரட்டினார் இல்லை களங்கனியைக்
> காரெனச் செய்தாரும் இல்." (நாலடி - ௧0௩.)

என்ற நாலடிப் பாட்டு வந்து எங்கட்கு நாலடியைப் பரிசென்று கொடுத்தது. ஓகோ! உண்மைதானெனத் தெளிந்தோம்.

அன்று நிறைநிலாக் காலம். கீழ்த்திசையில் திங்களஞ் செல்வன் தோன்றி வெள்ளி வெண்குடத்திலிருந்து பாலைச் சொரிவதுபோலத் தண்ணிலாக் கதிர்களை யெங்கள்மீதும் கடல் மேலும் அள்ளி வீசிக்கொண்டிருந்தான். கடலில் அலைகள் வருவதும் போவதும் வெள்ளிய நிறத்துடன் திரண்டு வருவதும், நிலாவொளி அதன்மீது பாய்ந்தொளிர்வதும் கண்ணுக்கு இன்பத்தைத் தந்தன. அதன் பரந்த வடிவைக் காணுந்தோறும் அளப்பொணு விரிவுடன் இருந்ததால், அதைக்கண்டு வியப்பு எய்தினேம். இதனால்தான் "பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின், நன்மை கடலின் பெரிது" (திருக்குறள்: ௧0௩.) எனவும், 'கடலன்ன காமம்' (திருக்குறள்: ௧௧௩௭.) எனவும், 'கல்விக்கடல், செல்வக்கடல், அருட்கடல், அன்புக்கடல்' எனவும் அளப்பில்லாத பொருள்களைக் குறிப்பதற்கும் கடலைக் கொண்டேவரும் தொடர்களை எண்ணி எண்ணி இன்பெய்தி னோம்.

> " தூய மலர்போல் நுரைத் தொகையும் முத்துஞ் சிந்திப் புடைசுருட்டிப்
> பாயல் உதறிப் படுப்பதே ஒத்த திரையின் பரப்பு"
> (கம்ப. உயு. கடல்.)

என்ற கம்பநாடர் கடல் வருணனை கருத்தில் தோன்றிக் காட்சி யளித்தது. "தென்றற் காற்று மெல்லெனத் தவழ்ந்து, பொங் கரின் நுழைந்து; வாவி புகுந்து; பங்கயந் துழாவி; பைங்கொடி

மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவி; கொங்கலர் மணங் கூட்டுண்டு; குளிர்ந்து; மெல்லென்று; அங்கங்கே கலைகள் தேரும் அறிவன்போல்'' வந்து வந்து எங்கள் மேனியைத் தீண்டி, ஆடையை அசைத்து கடனீரைச் சிறுசிறு பனித்துளியாக்கி எங்கள்மேல் சிதறி விளையாட்டுச் செய்துகொண்டிருந்தது. அது தென்றற் செல்வக்குழந்தையல்லவா? அக்குழந்தை இன்பத்தில் திளைத்துக்கொண்டிருந்தோம். மணியும் ஏழரை ஆயிற்று. வந்திருந்தோர் அனைவரும் சிறிது சிறிதாகக் கலைந்து செல்லத் தொடங்கினர்.

குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்களை, உக்கலில் இடுக்கிச் செல்வோரும், நடக்கவிட்டுப் பார்த்துச் செல்வோரும், மெல்லச் செல்வாரும், விரைந்து செல்வாருமாகச் சென்றனர். யாங்களும் எங்கள் இருக்கைக்குச் செல்லப் புறப்பட்டோம். நிலவுச் செல்வனும் இருள் எங்கே எங்கேயென்று விரட்டிச் செல்வான்போல் மேலே ஏறிச் சென்றுகொண்டிருந்தான். நாங்களும் இருக்கை சேர்ந்தோம்; கால்கை கழுவிக்கொள்ளத் தண்ணீர்த் தொட்டிக்குச் சென்றோம்; தொட்டியில் நீர் இல்லை. அங்கே குழாயிலிருந்து நீர் சிறிது சிறிதாக விழுந்துகொண் டிருந்தது. திருகித்திருகிப் பார்த்தோம். முன் விழுந்ததைவிடக் குறைவாக நீர் வந்ததேயன்றி மிகுதியாக நீர் வரவில்லை. அது ஒருவனுக்கு நாள் ஒன்றுக்கு இவ்வளவுதான் கூலியென்று அளவுபடுத்திய தொழிலாளியின் வருவாய்போல் எங்கட்குத் தோன்றியது. தொட்டியில் நீர் விழவிழ எடுத்து எடுத்துத் தொட்டி நிரம்பாதவாறு நீரைச்செலவுசெய்வதுபோல, வருவாய் வரவர வீட்டுச் செலவுகளும், எஞ்சினுல் சினிமா, நாடகம், முதலிய ஏனைய சிறுசிறு செலவுகளும் வந்து தொழிலாளிக்குக் கையில் காசு சிறிதும் இல்லாமற் செய்வதுபோல் இருக்கின்ற தென நாங்கள் எண்ணுமாறு தொட்டி காட்சி தந்தது. கால்கை கழுவிக்கொண்டு, அட்டில் புகுந்து உணவருந்தி வந்து சிறிது நேரம் உரையாடிக்கொண்டிருந்தேம். பொத்தென்று மணி பத்தடித்தது கடிகாரம். துயிலும் காலமும் வந்ததெனப் படுக்கை விரித்துத் துயின்றோம். கண்படைச் செல்வி மெல்ல மெல்ல எங்களைத் துயிற்றினாள். நன்கு துயின்றோம்.

இரவு போயிற்றுப் போலும்! பகல் வருகின்றதுபோலும்!

"குக்கூ என்றது கோழி அதனெதிர்
துட்கென் றன்றென் தூய நெஞ்சம்
* தோள்தோய் காதலர்ப் பிணிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே"
(குறுந்தொகை: ௧௫௭.)

* தோள்தோய் காதலர்: ஈண்டுத்தூக்கம்.

'காகா' என்ற குரலோடு காக்கைகள் கத்திக்கொண்டெழுந்தன. 'டங்டங்' என்று கடிகாரம் மணி ஐந்தடித்தது. துண்ணெனத் துடிப்புற்று எழுந்தோம். 'கொத்தமயி, கொத்தமயி, காயிபிலே, காயிபிலே (என்பது சென்னையில் கொத்தமல்லித் தழையையும், கறிவேப்பிலைத் தழையையும் விற்கிற பெண்கள் கூவும் குரல்) 'பல்பொடி பல்பொடி' என்ற அவை விற்பார் ஒலிகள் எழுந்தன. கதிரவனும் பொற்குடம்போற் கீழ்பால் தோன்றிப் புறப்பட்டான். உணவு விடுதிகள் திறந்து பல்வகை உணவுப் பொருள்கள் செய்து பரிமாறினர்; உண்போர் பலர் ஆணும் பெண்ணும் குழந்தைகளுமாக உணவு விடுதிகள் வரவேற்கப் போந்தனர்; உண்டனர்; அவ்விடுதிகள் வருவார் போவார் மிக்கு மிக்குப் பெருகிவருவதாலும், இடைவிடாது ஆங்கே வாயொலி யில் பல்லியம் முழங்குவதாலும், அவை மணவிழா நிகழும் பேரில்லமாகத் தோற்றமளித்தன. கூலவணிகர், அறுவை வணிகர், பண்ட வணிகர், அப்ப வணிகர், அடைக்காய் வணிகர், மெல்லிலை வணிகர், காய்கறி வணிகர் முதலிய வணிகத் துறை யாளரெல்லாம் தத்தம் கடைகளைத்திறந்து நறும்புகை புகைத்து இறையை வணங்கித் தம்தம் பொருள்களை விலைபகர்ந்து விற்பா ராயினர். நாங்களும் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு சிற்றுணா உண்டு, சுடுநீர் பருகி, அலுவலகம் நோக்கிச் சென்றோம். இவ்வாறே பலப்பல நாட்கள்.

> " பெருங்கடல் முழங்க; கானல் மலர:
> இருங்கழி ஓதம் இல்லிறந்து மலிர;
> வள்ளிதழ் நெய்தல் கூம்ப; புள்ளுடன்
> கமழ்பூம் பொதும்பர்க் கட்சி சேர;
> செல்சுடர் மழுங்க; சிவந்துவாங்கு மண்டிலம்
> கல்சேர்பு நண்ணிப் படரடைபு நடுங்கப்
> புலம்பொடு வந்த புன்கண் மாலை."
>
> (நற்றிணை: கஎ.)

" புன்கண்ணை வாழி மருள்மாலை " (திருக்குறள்: கஉஉஉ).

வாழ்க ! வருக ! வென வாழ்த்துகின்றேம் இம்மாலைப்போழ்தை.

# பாணர் கைவழி

[திருமந்திரமணி, துடிசைகிழார், அ. சிதம்பரனர்]

"பாணர் கைவழி" என்னும் யாழ்நூலை எனது நண்பர் கோவை வேணுகான விசாரத T. R. வேணுகோபால் நாயுடு கொடுக்கப் படித்து மகிழ்ந்தேன்.

ஆயிரம் நரம்புகளையுடைய ஆதியாழ் முதல் ஒரே நரம்பை யுடைய வில்லியாழ் வரை, பண்டைக்காலத்தில் தமிழ்நாட்டில் பலவகை யாழ்க் கருவிகள் வழக்கத்தில் இருந்தன. இப் பலவகை யாழ்க் கருவிகளிலும் சிறப்பாக எல்லோராலும் கையாளப்பட்டு வந்தன நான்குவிதமான கருவிகளாகும். அவை:—

1. பேரியாழ் (21 நரம்பு) 3. சகோடயாழ் (14 நரம்பு)
2. மகரயாழ் (19 நரம்பு) 4. செங்கோட்டியாழ் (7 நரம்பு)

என்பனவாம். இந்நான்கு கருவிகளிலும் அதிகமாக மக்களிடைப் பழக்கத்தில் இருந்ததும் இருக்கிறதும் செங்கோட்டு யாழேயாகும்.

தமிழ்ச்சங்கங்கள் நடைபெற்று வந்தபோது, இயல்—இசை நாடகம் என்ற முத்தமிழ்களையும் ஆராய்ந்து, இசைக்குரிய பண் களையும், இசைக்கருவிகளையும் மக்கள் காப்பாற்றிவந்தார்கள்.

கடைச்சங்கம் கி. மு. 1715 முதல் கி. பி. 235 வரை நடை பெற்றது.

கி. பி. 235-க்குப்பின் சங்கம் நடைபெறாததற்குக் காரணம், தமிழ்நாட்டின்மீது சமணமதத்தை அனுசரித்த பல்லவர்—வடுகக் கருநடர் முதலியவர்களுடைய படையெடுப்பேதான் என்பது சரித்திரம் கண்ட உண்மை.

தொண்டைநாடும்—சோழநாடும் பல்லவர்களிடம் கி. பி. 225 முதல் கி. பி. 880 வரையிலும்—பாண்டியநாடு வடுகக் கருநடர்வசம் கி. பி. 235 முதல் கி. பி. 520 வரையிலும், அகப் பட்டு அல்லலில் மூழ்கி இருந்தன.

சமணர்கள் துறவறநெறியில் மோகங்கொண்டு, இசையும், நாடகமும் துறவறத்துக்கு இடையூறுகள் எனக் கருதி, அந்த இரு தமிழ்க்கும் ஆதரவு கொடுக்காமலும், அவ்விரு தமிழ்க்கும் உரிய இலக்கண இலக்கியங்களை நெருப்புக்கு இரையாக்கினர்கள். அரசாட்சி முறையில் உள்ளவர்கள் இசையையும் இசைக்கருவி களையும் வெறுக்கிறார்கள் என்று தெரிந்தால், மிகுந்த உழைப் புடன் பழகி வாசிக்கக்கூடிய பேரியாழ், மகரயாழ், சகோடயாழ்

ஆகியவை மக்களிடை வழங்குமா? வழங்காது. ஆதலால், மக்கள் எளிதில் சிறுமுயற்சியுடன் வாசிக்கக்கூடிய செங்கோட்டு யாழ் என்ற சீறியாழே மக்களிடை வழக்கத்திலிருந்தது. (சீறி யாழ்=சிறுயாழ்).

சமணமதத்தை அநுசரித்த அதிகாரிகளுக்கு 'யாழ்' என்ற பெயரே வெறுக்கத்தகுந்ததாக இருந்தபடியால், தமிழர்கள் அவ்வெறுப்பையும் வளர்க்க விரும்பாமல் யாழுக்கு மறு பெயரான வீணை என்னும் பெயரை இட்டு, யாழின்பேரில் இருந்த வெறுப்பை ஒருவாறு நீக்கிக்கொண்டார்கள்.

பல்லவர்களும் வடுகக்கருநடர்களும் வடமொழிப்பற்று மிக்குடையவர்கள். அவர்கள் காலத்தில்தான் காஞ்சியிலும் மதுரையிலும் வடமொழிப் பட்டி மண்டபங்கள் ஏற்பட்டு அவர்களுடைய ஆட்சிக்காலம்வரை நடைபெற்றுவந்தன. அப்பட்டி மண்டபங்களின் உறுப்பினர்கள் அரசியல் உதவிபெற்று, இந்நூல் 55—56 பக்கங்களில் கண்டபடி, தமிழ் மொழியிலுள்ள பெயர்களை எல்லாம் வடமொழியில் மொழிபெயர்த்தார்கள். உலகத்தில் எந்த நாட்டிலும் வழக்கத்தில் இல்லாத ஒரு புது முறையைக் கையாண்டு தமிழ்ச் சிறப்புப்பெயர்களையும் மொழி பெயர்த்தார்கள். இவ்வழக்கம் எம்மொழியிலும் எந்த நாட்டிலும் இல்லை.

உதாரணமாக 'வெள்ளைக்கிணர்' என்ற ஊர்ப்பெயரை ஆங்கிலேயன் 'White-well' என்று மொழிபெயர்க்காமல் Vellak. Kinar என்று எழுதிவந்தானேயொழிய வேறின்று. ஆனால், வடமொழியாளரோ என்றால், 'மறைக்காடு' என்ற ஊர்ப்பெயரை மறைக்காடு என்றே வடமொழியில் எழுதிக்கொள்ளாமல், 'வேத ஆரணியம்' என்று மொழிபெயர்த்தார்கள். இப்படியே பலவுங் காண்க.

இந்தமாதிரி மனப்பான்மையுள்ள காலத்திலேதான் செங்கோட்டு யாழையாவது காப்பாற்றுவதற்கு வடமொழிப்பெயர் மாதிரி ஒலிக்கும் பழைய தமிழ்ப்பெயரான வீணை என்னும் பெயரை அவ் யாழுக்குச் சூட்டினார்கள். அப்படிச் செய்ததானது அன்னாருக்கு நிம்மதியை அளித்தது கண்கூடு.

வீணை என்ற சொல் 'விண்' என்னும் பகுதி அடியாகப் பிறந்த சொல். விண்=ஒலி என்னும் பொருளது. விண்—விண் என்று ஒற்றுக்குத்தக ஒலித்துப் பண்களை இசைப்பது வீணை. (விண் விண் எனல்=இசைக்குறிப்பு ஈரடுக்குமொழி—யாழ்ப்பாண அகராதி).

உடம்பிலுள்ள முதுகெலும்புக்கு 'வீணாதண்டு' என்று பெயர். ஏன் அப்பெயர் முதுகெலும்புக்கு வந்தது?

"கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி,
வீணாத் தண்டூடே வெளியுறத் தாணோக்கி,
காணாக்கண் கேளாச் செவிஎன் றிருப்பார்க்கு" (திருமந்திரம்-568)

என்றபடி, பொறைநிலை (தாரணை) அடைந்து, சித்தத்தை ஒரு வழிப்படுத்தி, வீணாத்தண்டூடே செல்லும் சுழுமுனை நாடியில் நினைவை இருத்தி, நினையவல்லவர்கள் (தியானிப்பவர்கள்), பத்து விதமான இசைகளை (நாதங்களை)க் கேட்பார்கள். அவ்விசைக ளாவன:—

"மணி—கடல்—யானை—வார்குழல்—மேகம்
அணிவண்டு—தும்பி—வளை—பேரிகை—யாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்" (திருமந்திரம்-586)

என்பனவாம்.

இப் பத்துவிதமான இசைகள் முதுகெலும்புத்தண்டு மூல மாகக் கேட்கப்படுவதால் அத்தண்டுக்கு 'வீணாத்தண்டு' என்று தமிழ்நாட்டுச் சித்தர்கள்—யோகிகள்—ஞானிகள் பெயரிட் டார்கள்.

முதுகெலும்புத்தண்டுக்கு உட்புறத்தில் ஒலி நரம்புகளும் (Sound Nerves), ஒளி நரம்புகளும் (Glowing Nerves) உண்டு. அதுபோல, செங்கோட்டியாழ் என்ற வீணைக்கும் ஒற்றுறுப்பு நரம்புகளும், பண்மொழி நரம்புகளும் உண்டு

முதுகெலும்புக்கு 33 எலும்பு வளையங்கள் (Vertebrae) உண்டு. அவைகளைத் திவவுகள் என்று வைத்துக்கொள்ளலாம் அதுபோல், வீணைத்தண்டுக்கும் திவவுகள் உண்டு முதுகெலும் பின் திவவுகளை (Vertebrae)ப் பார்த்துத்தான் யாழுக்குத் திவவுகள் வகுத்தார்கள்.

தொல்காப்பியரும் தமிழில் இருந்த 51 ஒலிகளை, 33 ஒலிக ளாக அமைத்துள்ளதை நோக்குக. இப்போது தமிழில் உள்ள ஒலிகள் முதலெழுத்து ஒலிகள் முப்பதும், சார்பெழுத்து ஒலிகள் மூன்றும் ஆக முப்பத்துமூன்றேயாகும்.

பேரியாழுக்கு ஒருகாலத்தில் 1000 கோல்கள் (திவவுகள்) உண்டு என்று நூல்களால் அறிகிறோம் பிறகு, இருக்க இருக்கக் குறுகி, 33 ஆகி, பின் 24 ஆகி, பின் 16 ஆகி, கடைசியாக 9-ல் வந்து முடிந்துள்ளது.

ஆனால், சில இசைவாணர்கள் 16 கோல்களும், 24 கோல் களும் கொண்ட வீணையைக் கையாண்டுவருகிறார்கள்

ரியர்—இராவணன முதலியோரா கையாண்டது 33 கோல்களையுடைய யாழ்க்கருவி என்று ஊகிக்க நூல்கள் இடம் தருகின்றன.

மிடற்றுக்கு வீணை—சாரீரம்—சாரீர வீணை—கழுத்து முதலிய பல பொருள்கள் உண்டு. மிடற்றினுள் இசை நரம்புகள் பல இருக்கின்றன என்பது உடல்நூல்வல்லார் கூற்று.

மிடறானது விண்ணித்துப் பாடுவதற்குக் கருவியாய் இருப்பதால், வீணை என்ற பெயரைப்பெற்றது.

"யாழும் மிடறும் உடன் நிகழ்ந்த இசையே வீணை என்றும், தனித்த மிடற்றிசையும் வீணை என்றும், வீணைப் பாட்டுக்குக் கருவி யாழ் ஒன்றே தகுந்தது," என்றும் பேசப்படுவதைத் தமிழ் நூற்களில் காண்கின்றோம்.

மிடற்றுக்கும் யாழுக்கும் வீணை என்ற பெயர் பொதுவாக இருந்தாலும், மிடறு உயிருள்ளது, யாழ் உயிரற்றது; அதனால், யாழ் சில குறைபாடுகளை உடையது என்பது சொல்லாமலே விளங்கும். மிடற்றில் பேசக்கூடிய வலிவு—மெலிவு—இழைப்பு—நெகிழ்வு—அதிர்வு—உதிர்வு முதலியவைகளில் சிலவற்றை யாழில் வாசிக்கமுடியாது.

யாழ் வாசிப்பதில் புகழ்பெற்ற திருநீலகண்டயாழ்ப்பாணர் திருஞானசம்பந்தசுவாமிகள் பாடிய 'யாழ்மூரி'ப் பதிகத்தைத் தம்முடைய யாழில் இழைத்துப் பாடமுடியாமற் போகவே, அவர் தம் கையில் இருந்த யாழை உடைத்து எறியப்போக, திருஞானசம்பந்த சுவாமிகள் தடுத்து, "யாழினுடைய திறம் அவ்வளவுதான்; அது உயிரில்லாத பொருள். மிடற்றில் பேசக்கூடியவைகளை எல்லாம் அதில் வாசிக்க முடியாது. இயலாத இடத்தில் மிடற்றைக்கொண்டு இழைத்துப் பாடி நிறைவு செய்யவேண்டும்," என்று கூறியது நோக்கத்தக்கது.

அதனாலேயே, யாழும் மிடறும் இணைந்து, இழைந்து, இசைக்க உதவும் கருவியே (யாழே) வீணையாகும் என்பது வெள்ளிடைமலை.

மிடறு யாழுடன் சேராத காலத்தில் அக்கருவிக்கு 'யாழ்' என்று பெயர்.

மிடறு யாழுடன் சேர்ந்தகாலத்தில் "வீணை" என்று அக்கருவி பெயர்பெறுகிறது.

ஆதலின், யாழ் வேறு—வீணை வேறு அல்ல. மிடறோடு தொழிற்படும்போது வீணை—தொழிற்படாதபோது யாழ் என்று கொள்க.

யாழ் என்ற தமிழ்ப் பெயரை விரும்பாத வடமொழிப் பற்றுடைய அரசாங்கத்தார்க்கு மகிழ்வு உண்டாகும்படி வீணை என்ற பெயரையே கி. பி. மூன்றும் நூற்றுண்டுமுதல் தமிழர்கள் யாழுக்கு இட்டு வழங்கினர்கள். சங்க நூல்களில் இருந்து யாழின் உறுப்புக்கள் 18 என்று இந்நூல் ஆசிரியர் 78-ம் பக்கத்தில் கூறியுள்ளார். அவ்வுறுப்புக்கள் அவ்வளவையும் தன்னிடம் கொண்டு விளங்குவது தற்காலம் நாம் வீணை என்று கூறும் கருவியேயாகும்.

ஆதலால், நாம் மேலே கூறியபடி சில காரணங்களால் நம்மவர் யாழ் என்ற பெயரை மாற்றி, வீணை என்ற பெயரை இட்டார்களே ஒழிய, யாழ்தான் வீணை—வீணைதான் யாழ் என்பது என்னுடைய முடிவான கருத்து.

ஆதலின், இனிமேல் நாம் அக்கருவியை மிடறோடு தொழிற்படுத்தியபோது வீணை என்றும், மிடறோடு தொழிற்படுத்தாதபோதும், சும்மா வைத்திருக்கும்போதும், யாழ் என்றும் கூறுவோமாக.

உண்மை இவ்வாறு இருக்கச் இசையாராய்ச்சிப் புலவர்களில் சிலபேரும், செங்கோட்டு யாழினுடைய உருவத்தை வில்மாதிரி வளைத்துக்காட்டி உள்ளார்கள்.

கோடு—என்னும்சொல்லுக்கு மரக்கொம்பு—வளைவு முதலிய 19 பொருள்கள் அகராதியில் கூறப்பட்டுள்ளன. அவைகளில் வளைவு என்ற பொருளை மனத்திற்கொண்டு யாழின் கோட்டை (தண்டை) வளைவாகக் காட்டிச் சித்திரித்தும், கோவில் மதிற் சுவர்களில் செதுக்கியும் வைத்துள்ளார்கள். அவையெல்லாம் உண்மையறிந்தவர்களால் செய்யப்பட்டவை அல்ல. கோடு என்ற சொல்லுக்கு அவர்கள் கொண்ட மயக்கப்பொருளே காரணமாகும்.

யாழ் உறுப்புக்களில் வணர் என்ற பாகம் வளைந்திருக்குமேயொழிய, தண்டு (கோடு) என்ற பாகம வளைந்த உருவத்தையுடையதல்ல. முதுகெலும்பாகிய வீணைத்தண்டிலும் தண்டு நேரே உள்ளது காண்மின். குதத்திலுள்ள (Sacrum) முதுகெலும்பின் பாகமே வணர்போல் சற்று வளைந்துள்ளது நோக்கத்தக்கது. உடம்பின் உறுப்புக்களை நோக்கித் தத்துவங்களை உணர்ந்து, இசைக்கருவியாகிய யாழை நம்முடைய பெரியார்கள் அமைத்துளளார்களே ஒழிய, மனம்போனவாக்கில் அவர்கள் அதை அமைக்கவில்லை என்பதனைத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன். யாழுக்கும் உடலுக்கும் உள்ள ஒற்றுமை

களைக் கூறிக்கொண்டே போனால் அதுவே ஒரு தனி நூலாகும் என்று இத்துடன் நிறுத்திக்கொள்ளுகிறேன்.

மாணிக்கவாசகர் முதலியோர் "இன்னிசை வீணையர்— யாழினர் ஒருபால்," என்று யாழ் வேறாகவும் வீணை வேறாகவும் கூறியிருக்கிறாரே! இரண்டும் ஒன்றாயிருந்தால் பிரித்துக் கூறுவானேன்? என்பீராகில், அவர் கொண்ட கருத்து இப்போது நாம் நினைக்கிறபடி அல்ல. அவர் கூற்றைக் கூர்ந்து நோக்குக. வீணையர் என்ற சொல்லின்முன் இன்னிசை என்ற அடைமொழி கொடுத்துள்ளார். 'யாழினர்' என்ற சொல்லுக்கு அடைமொழி இல்லை. ஆதலால், அவர் என்ன கருத்துடன் அப்படிக் கூறியுள்ளார்?

"மிடற்றால் இசைத்து இன்னிசையோடு யாழை வாசிக்கும் வீணையர் ஒருபக்கமும், மிடற்றால் பாடாது யாழைமாத்திரம் வாசிக்கும் யாழினர் ஒருபக்கமும்," என்று பொருள் கொண்டால் அவருடைய உள்ளக்கருத்து இற்றெனத் தெரியும்.

மாணிக்கவாசகரும் யாழ் மிடற்றோடு சேர்ந்தபோது வீணை என்றும், மிடற்றோடு சேராதபோழ்து யாழ் என்றும் பெயர் பெறும் என்று கருதினார் என்பது அவர் வாக்காலேயே அறியக்கிடக்கின்றது. அதனைவிட்டு வேறு விதமாகப் பொருள் கொள்ளுவது பொருந்தாது.

சகோடயாழ் என்பது ச+கோடு+யாழ்=சமமான கோட்டை (தண்டை) உடைய யாழ். அதாவது, வணர்—என்ற உறுப்பு இல்லாமல் பதினேழு உறுப்புக்களைக் கொண்டது என்று பொருளாகும்.

யாழ் என்னும் கருவியில வணர் என்ற உறுப்பு மாத்திரம் தான் வளைந்தது. வளைவுடன்கூடிய கோடு (தண்டு) எல்லா யாழுக்கும் உண்டு. வளைவு இல்லாத கோட்டையுடையது சகோடயாழ். சகோடயாழ் என்னும் சொல் இடுகுறிப்பெயர் அல்ல.

இத்தகைய அரிய, பெரிய பொருள்களைத் தெள்ளத் தெளிய எடுத்துக்காட்டி, நம்முடைய நாட்டில் பன்னெடுங் காலத்துக்கு முன்பு இருந்து வழங்கிவந்த செங்கோட்டியாழே தற்காலம் வீணை என்று வழங்குகிறதென்று உறுதிப்படுத்திய நண்பர், ஆ. அ. வரகுணபாண்டியருக்கு என்னுடைய மனமார்ந்த நன்றி உரித்தாகுக. இத்தகைய இன்னும் பல இசைநூல்களை இயற்றி அவர் நீடூழி வாழ்வாராக.

# "வாழ்க!" என்றாள்

[முத்தமிழ்மணி]

1. வானமெனும் பெருநீல வாடை தன்னில்
வைரங்கள் தெளித்தாற்போல் மின்னிப் பின்னும்
ஆனபெரு இருளிடையே முல்லை யைப்போல்
அழகுதமிழ்ப் புன்னகையால் என்னை ஈர்த்த
ஊனமிலாத் தாரகைகள் தன்னில் நாட்டம்
ஊன்றிடவே ஊணுறக்கம் மறந்தே மண்மேல்
மானமிலாச் சிறுவாழ்வு வாழும் மக்கள்,
மஞ்சுதமிழ் இழிநிலையை எண்ணிச் சாய்ந்தேன்.

2. அங்கமெலாம் திங்களொளிப் பிழம்பில் தோய்ந்தே
அயர்வெல்லாம் நீக்கிட்ட தாறு னுள்ளம்
கங்குலிலே தங்குமிருள் தாங்கி வையம்
கவிந்திருக்கும் இருள்நோக்கி, நமது நாட்டில்
சிங்காரப் பதுமைகளாய் வாழும் சில்லோர்
செயல்நோக்கிச், சிறுமதியை நோக்கி, மற்றும்
சங்கமணிச் செல்வங்கள் தவழ்ந்த நாட்டின்
தலைவிதியை நோக்கியுளம் தளர்ந்தேன் சற்றே.

3. "அறமென்றும் திறமென்றும் ஆண்மை யென்றும்
அருளார்வம் முறைகோடா முறையி தென்றும்
புறமென்றும் அகமென்றும் புலர்த்தும் பான்மை
பொருந்திட்ட தமிழ்நூற்கள் மலிந்த நாட்டில்,
'திறமுண்டு அவை கற்கத் திண்மையுண்டு
செயலளவில் அவைசேர்க்கும் செம்மை யுள்ளம்
பெறவில்லை' என்றேதம் மார்பு தட்டும்
பெட்பினராய்த் தமிழ்மக்கள் வாழ்கின் றார்கள்."

4. என்றிசைத்த குயில்மொழியின் ஒலியை நோக்கி,
இருள்நீக்கி ஒளியுடனே காட்சி தந்த
மென்றுகிலாள் முகம்நோக்கிக் கரங்கு வித்தேன்.
மேவியவண் போந்ததமிழ் வடிவைச் சார்ந்தே,
"நன்றுரைத்தாய் தமிழகத்தின் நிலையை," என்றேன்
"நனியுண்டு இதுவென்ன; நாட்டமில்லாக்
குன்றுகளாய்த் தமிழர்சிலர் குலவு கின்றார்
குணமில்லை; பணமுண்டு அவர்பால்," என்றாள்.

5. "காலமெலாம் எனைப்பேணும் கருத்துண் டென்றே
கரையாது பொய்பலவு முரைத்துத் தங்கள்
ஏலமிடும் பொருளாக்கி என்னை வாட்டும்
இழிபணியில் துணிந்திட்டார்; அன்னார் நாளும்

ஒலமிடும் குரல்கேட்டு உண்மை யோரா
 தொருசிலரும் அவர்பணியைப் போற்று கின்றார்;
ஞாலமெலாம் என்புகழைப் பரப்பும் உண்மை
 நாட்டமுளோர் மருந்துக்கும் நாட்டி லில்லை.

6. "எட்டளவில் என்பெருமை நாட்டி விட்டார்
 எழிற்சங்கப் புலவர்பலர்; வாழ்த்து கின்றேன்.
பாட்டுருவில் என்புகழைப் பரப்பி வாழும்
 பைந்தமிழர் நிலைவறுமை எக்கா லுந்தான்.
ஆட்டமுடன் பாட்டிசைத்துக் கூத்த டித்து
 ஆரியத்தை அதிற்புகுத்திச் செல்வம் சேர்க்கும்
வேட்டைபொரு ளாயென்னை மதிக்கும் வீணர்
 விழவில்லை; வீழ்நாளென் வாழ்நா ளாகும்.

7. "வாள் தாங்கி எனைக்காத்து வாகை மாலை
 வண்மையுடன் சூட்டியுளம் மகிழ்ந்த நாட்டில்,
ஆள்இல்லை எனைக்காக்க; ஆண்மை இல்லை;
 அறிவில்லை; திறனில்லை; ஆயும் பண்பும்,
தோள்இல்லை; உடன்வரவோ துணிவு மில்லை;
 தோய்ந்ததமிழ் உயர்வுள்ளம் துளியு மில்லை;
நாள்எண்ணிக் கழிக்கின்ற நிலைமைக் கேகான்
 நண்ணிவிட்டேன்; நலிந்திட்டேன்," என்றாள் மேலும்.

8. "வெளிப்பகட்டால் எனைப்புரக்கும் கள்ளர் சில்லோர்
 வீணுரைக ளாடுகிறார்; மலர்ச்சி வேண்டிக்
களிப்புடனே சிலமைந்தர் கடமை யுன்னிக்
 காலமெலாம் என்நலத்துக் குழைத்திட் டாலும்,
'ஒளிப்பதிவு சரி;ஆனால் அவர்மேற் கொண்ட
 ஒண்பொருள்தான் சரியில்லை,' என்றே நாட்டில்
விளிப்பதுவே குறிக்கோளாய்க் கொண்ட வீணர்
 விழவில்லை; வீழ்நாளென் வாழ்நா ளாகும்.

9. "நிலையில்லை என்வாழ்க்கை என்று சாற்றி
 நீணிலத்தில் ஆணவத்தால் தங்கள் சூழ்ச்சி
வலைதன்னி லெனைப்பிணித்தார் வாய்வீச் சாளர்;
 வன்மையிலாச் சூரரெலாம் வீழ்நாள் யாணும்
உலைவின்றி நம்நாட்டில் வாழ்நாள்," என்றாள்;
 உளம்நைந்தாள்; உறுதியிலா துகுத்தாள் கண்ணீர்.
சிலையன்னாள் அடிபற்றி, "தீமை யாளர்
 சீரழிவார்," என்றேன். "நீ வாழ்க" என்றாள்.

# நான் கண்ட பெருந்தமிழன்

[மயிலை, சீனி. வேங்கடசாமி]

தமிழறிஞர் உலகத்திலே, பல்லாவரம் என்றால் மறைமலை அடிகள் என்றும், மறைமலை அடிகள் என்றால் பல்லாவரம் என்றும் எண்ணம் உண்டாவது மரபு. பல்லாவரத்திற்குச் சென்று மறைமலை அடிகளைக் கண்டு அவருடன் அளவளாவித் திரும்பி வரும்போது, ஒரு புனிதமான இடத்திற்கு யாத்திரை சென்று வழிபட்டு மன அமைதியோடு திரும்பி வருவதுபோன்ற உணர்சசி எனக்கு ஏற்படுவது உண்டு. இதன் காரணம் யாது? சமயப் பற்றா? அன்று. சாத்திரப் பற்றா? அதுவும் அன்று. பின்னை எனனை எனின், அப்பெரியாரிடத்தில், அவரது பேச்சிலும் எழுத்திலும் காணப்பட்ட தூய தனித்தமிழ்! கலப்பற்ற நல்ல இனிய தமிழ்! அடிகளார் பேசும் மெல்லிய இனிய அழகிய தமிழைக் கேட்கும்போது, அவரது கலப்பற்ற தூய தமிழைச் செவிமடுக்கும்போது, உள்ளத்தில் வியப்பும் மகிழ்ச்சியும உணர்ச்சியும் பெருகும். நாமும் தனித்தமிழ் பேசவேண்டும் என்னும் ஊக்கம் பிறக்கும். அடிகளார் இயற்றிய நூல்களைப் படிக்குந்தோறும் இவ்வித உணர்ச்சிகளே உண்டாகின்றன. மறைமலையைக் கண்டு அளவளாவியது எனது வாழ்நாட்களில் ஐந்து தடவை மட்டுந்தான். (அடிகளார் சொற்பொழிவுகளைப் பலமுறை கேட்டு அவரது "செந்தமிழால் செவி கழுவி" யுள்ளேன்.) ஒவ்வொரு தடவையும், அடிகளாரிடம் குடி கொண்டிருந்த தூய தனித்தமிழ், அவரிடம் பெருமதிப்புக் கொள்ளச்செய்தது. அவரைப்பற்றி நினைக்கும்போதெல்லாம், அடிகள் ஒரு பெருந்தமிழன் என்று என் உள்ளம் சொல்லிக்

சில ஆண்டுகளுக்கு முன்னர், பல்லாவரத்தில், அடிகளார் மாளிகையில், பொதுநிலைக் கழக விழா நடைபெற்றது. அடிகளார் தலைமை தாங்கினார்கள். பல பேச்சாளர்களுள் திரு. மறை. திருநாவுக்கரசு அவர்களும் ஒருவர். திருநாவுக்கரசு அவர்கள், தமது சொற்பொழிவில், உரிமையோடு அடிகளாரைப்பற்றிச் சில கூறினார்கள். அவற்றில், "அடிகளார் மிக்க கெர்வமுடையவர்," என்பதும் ஒன்று. உடனே, தலைமை தாங்கிய அடிகளார் மலர்ந்த முகத்துடன் "கர்வம் என்று சொல்லாதே இறுமாப்பு என்று சொல்," என்று திருத்தினார்கள். தம்மைக் குறைகூறுவதாக இருந்தாலும் அதனைத் தூய —

தமிழிலே கூறவேண்டும் என்பது அத்தமிழ்ப் பெரியாரின் தனிமாண்பு. "பைந்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் பெருமான்" என்று ஒரு பெரியார் தமது வழிபடு கடவுளைப் பற்றிக் கூறியது அவ்வமயம் நினைவுக்கு வந்தது.

தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்து, அதனைத் தமது வாழ்நாள் வரையில் பேச்சிலும் எழுத்திலும் வாழ்க்கையிலும் இடைவிடாது நிறைவேற்றிய பெருந்தமிழன் மறைமலையடிகளாரின் பருவுடல் மறைந்துவிட்டது. ஆனால், அவரது புகழுடம்பு தமிழ் நாடெங்கும் தமிழ்க் காற்றுடன் கலந்து வீசுகிறது. வாழ்க அவர் புகழ்.

மறைமலையடிகளின் அமைதியான தோற்றமும், இனிய குரலும், தனித்தமிழ் பேச்சும் எமது மனத்தை விட்டகலா. அவரை நினைக்கும்போதெல்லாம் என் மனம், அடிகள் ஒரு ழன் என்று கூறுகிறது.

## பொன்மொழிகள்

மக்கள் உயிரின்நிலை அறிவும் உணர்வும் என இருதிறப் படும். அறிவைப் பார்க்கிலும் உணர்வே சிறந்தது. அறிவு உருவத்தைப்பற்றி நிகழும்; உணர்வு அஃதின்றியும் நிகழும்.

இறைவன் உண்டென்று மட்டும் ஆராய்ந்தறிதல் அறிவின் பயன். அவனோடொருமித்துப் பேரின்பத் தழுந்தல் உணர்வின் பயன். அறிவுக்கு விளங்காத இறைவன் அன்பாற் கரைந்துருகித் தேம்பும் அன்பர் உணர்வுக்கு விளங்கித் தோன்றி அருள்புரிவன். ஆகலின், அவற்கு உருவமுண்டென்பதொரு தலையாம்.

விரிந்த மன இருளை நீக்குவது சுருங்கிய அறிவொளியே யாம். எளிது விளக்குதற்கன்றே. எல்லாம் வல்ல இறைவன் ஞாயிறு என்று சொல்லப்படும் ஒரு சிறு பொற்குடத்தே ஒளியாகிய அமிழ்தத்தை நிரப்பி அதனை வான்மேற்றாக்க, அதனுட் பொதிந்த அவ்வமிழ்தக் கதிர்கள் விரிந்த இருண்மேற் பல்லாயிரங் கணைகள்போற் பாய்ந்து அவற்றைச் சின்ன பின்னமா யழித்து நமக்குக் கட்புலனை விளக்கி மனவறிவையும் ஓங்கச்செய்கின்றது.

—மறைமலையடிகள்.

# மறைமலையடிகள்

## 'செய்தித்தாட் குறிப்புக்கள்'

பன்மொழிப் புலவராய், மும்மொழித் திலகமாய் அடிகள் ஆற்றிய அரும்பெரும் அறிவுத்தொண்டினை இனி யாரே ஈடு செய்யவல்லார்? வஞ்சகர்களுக்கும் வாயடைக்க ஆய்வுரை கூறும் வளமார்ந்த நெஞ்சுரம் படைத்த ஏந்தல் இன்குரல் ஓசையினைத் தமிழுலகம் இழந்தேவிட்டது!

"குறள்மலர்"

பொதிகைமலையைப்போல மறைமலையும் என்றும் மறையாத மாமலையாக இருந்துவரும் என்று எண்ணியிருந்தோம். "மக்கள் நூறு ஆண்டு உயிர்வாழ்வது எப்படி?" என்னும் நூலை எழுதிய மறைமலையடிகள்,—சுவாமி வேதாசலம் அவர்கள்—நூறாண்டு வாழ்ந்து, ஆயிரமாயிரம் ஆண்டுகள் நிலைத்திருக்கக் கூடிய தமிழ்ப்பணிகளைப் புரிந்துவருவார் என்று நம்பியிருந்தோம். அசலம் என்றும், மலை என்றும் அந்தப் பெரியாரின் பெயரிலேயே இருந்தபடியால், அவருக்கு என்றும் மறைவில்லையென்றே எண்ணி இறுமாந்திருந்தோம். பாவி யமன் நம்மிடம் மறக் கருணைகாட்டி ஏமாற்றிவிட்டான்.

சுவாமிகளின் குரல் ஒரு தனிச்சிறப்பு வாய்ந்தது. வண்டுகளின் ரீங்காரத்தை யொத்து இனிமைமிக்க உச்சஸ்தாயியில் நெடுந்தூரம் தெளிவாகக் கேட்கக்கூடியது. அடிகளின் சொல்லாற்றலோ மிகச் சிறந்தது. தமிழில் பல பொருள்களைப்பற்றியும் புலமை வாய்ந்த சொற்பொழிவுகளை எப்படி நிகழ்த்த வேண்டுமென்பதற்கு மறைத்திரு மறைமலையடிகளார் செவ்விய வழி வகுத்து அளித்தவர்.

"கல்கி"

ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளாக, தமிழ்மொழியாக்கத்துக்காகவும், தமிழ் இலக்கிய வளர்ச்சிக்காகவும், மனித வாழ்க்கையையொட்டி, சைவசித்தாந்த தத்துவத்தைப் பரப்புவதற்காகவும், சாதி சமய சழக்குகளை அறுத்து, தமிழர் சமுதாயத்தை உலகிலுள்ள மற்ற சமுதாயங்களுக்குச் சரிசமமாக வைப்பதற்காக அடிகளார் ஆற்றியுள்ள அனந்தமான அரும்பெருந் தொண்டுகளை எண்ணிப் பார்க்கும்போது, அவர்கள் உயிர்நீத்த நாள் 'கலைமகள் கலன் இழந்த நாள்,' 'தமிழ் மகள் நாதியற்ற நாள்' என்றுமே கருதிப் புலம்பத் தோன்றுகிறது.

"பிரசண்ட விகடன்"

தமிழரது சமய வாழ்வுக்கும், மொழி முன்னேற்றத்திற்கும் எல்லையாய் நின்ற இப்பெரியார் 'இந்தியால் தமிழுக்கு இழுக்கே' என்று முடிவுகட்டி எழுதியும், பேசியும் துணிந்துநின்ற நிலை தமிழர் உள்ளத்தைவிட்டு அகலாது. தமிழுக்கு வரம்பாய புலவர் பலரைத் தோற்றுவித்த தொல்லாசிரியராயும், தனித் தமிழ்நடையே நன்னடையென்று நிலைநிறுவிய நல்லாசிரியராயும் விளங்கிய அடிகளார், பல்லாவரத்தில் தம் இல்லமாகிய பொது நிலைக் கழக மாளிகையில் சொந்தமாகவே அச்சகம் நிறுவி, உலகம் என்றும் உச்சிமேற்கொண்டு மெச்சத்தக்க நூல்கள் பலவற்றை வெளியிட்டு உலவுமாறு செய்த ஆற்றலை, தமிழ்நாடு மறக்குநாள் உளதோ ? "தமிழ்த்தென்றல்"

அஸ்ஸாம் பூகம்பச் செய்திகள் அகில இந்தியாவை நிலை குலையச் செய்திருக்கின்றன. மறைமலையடிகளின் மரணச் செய்தியோ தமிழ்நாட்டை மீளாத்துயரத்தில் மூழ்கடித்துவிட்டது. பூகம்ப இடிபாடுகளைச் செப்பனிட்டுச் சீராக்கிக்கொள்ளலாம். இடிந்த கட்டிடங்களுக்குப் பதிலாகப் புதுக்கட்டிடங்களை முன்னைவிட அழகாகக் கட்டிவிடலாம். கரைபுரண்டு ஓடும் பிரம்மபுத்திராநதியின் வெள்ளத்தை இஞ்சினியர்கள் தடுத்து நிறுத்திவிடுவார்கள். ஆனால், மறைந்த மறைமலையடிகளை உயிர்ப்பிக்க யாரிருக்கிறார்கள் ? அவர் மறைவைக் கேட்டுப் பெருக்கெடுக்கும் தமிழ்மக்களின் கண்ணீரை நிறுத்த எந்த இஞ்சினியர்களால் முடியும் ? "காண்டீபம்"

மறைமலையடிகளாரது பெருமையை மதியாதவர் யாரும் இருக்கமுடியாது. ஆனால், அதனை அளந்தறிவது நமக்கு அரிது. ஏனெனில், இன்று நாம் பேசும் தமிழ், எழுதும் தமிழ் அவர் நமக்குத் தந்த தமிழ். நம் தமிழறிவு, நம் தமிழ்ப்பற்று, நம் தமிழின எழுச்சியாவும் அவர் நமக்குத் தந்த தமிழறிவும், தமிழ்ப்பற்றும், தமிழின எழுச்சியுமே. நம்மிடையேயுள்ள பெரியார், அறிஞர், கலைஞர் எழுத்தாளர், தமிழ்ப்பற்றுளர் யாவரும் அத்தமிழ் மலையிலிருந்து பிறந்து வளர்ந்த பேராறுகளும் சிற்றாறுகளுமே.

மறைமலையடிகள் தம் வாழ்நாளிலேயே தமிழுக்கு ஒரு உரைகல்லாகத் தமிழரால் போட்டியின்றி ஏற்றுக்கொள்ளப் பட்டவர். மறைமலையடிகளார் இல்லத்தில் சிலநாள் பயின்று விட்டேன் என்று ஒருவன் கூறினால் போதும், புலவர் மன்றங்கள் எதிலும் அதற்கு மேற்பட்ட நற்சான்றை எவரும் கோர மாட்டார் ! "பொன்னி"

# பணிமதி!

[வித்துவான், முதுகண்ணன், புதுவை.]

பெருங்கடலாய் அலைபெண்ணே! பெருமுழக்கம் விளைக்கின்றாய்!
இருநிலத்தில் உனக்குற்ற இருந்துயரம் எதுவோ? சொல்!
கரையிடத்தில் வருகின்றாய்! கலங்கிப்பின் கடக்கின்றாய்!
விரையாமல் விளக்கிடுக; வெருவாது கடற்பெண்ணே!

தமிழர்தம் பெரும்பேற்றைத், தமிழ்த்தாயின் சிறப்பணியைத்
தமிழர்பால் கவர்ந்தனையே! தணிவதுமுன் துயராமோ?
பலர்கூடும் கழகத்தைப், பனித்தமிழர் அரும்பொருளை
அலைத்தேநீ கவர்ந்தனையே! அவ்வினைதான் அமைவுறுமோ?

சுடர்முடியைத் துறந்துயர்ந்த துறவறமாம் நெறியமைந்த,
அடர்புலமை நலந்திகழ்ந்த அரசிளங்கோ அடிகளவர்,
உளம்வெதும்பிக் கொடுங்கடலென் றுரைத்தசொலை அடாச்செயலாய்
அளக்கர்நீ அடைந்தனையே! அவருரையும் பழுதாமோ?

தமிழ்ப்புலவர் உளம்நோவத் தமிழினிமை அடைந்திடமுத்
தமிழ்ச்சுவடி கவர்ந்தனையே! தமிழ்ப்புலவர் விடுவாரோ?
தமிழ்ப்புலவர் மனம்நொந்து தணியாத கொடுமொழியால்
இமிழ்கடலே தவிக்கின்றாய் இனிஅதுதான் பழுதுறுமோ?

எனவாங்கு

உயர்புலப் புலவரை உணர்ந்துநீ அவரிடம்
துயர்களை வழிபெறப் பணிமதி!
அயர்வறச் செருக்கற அலைதரும் கடலே!

# அரவிந்தர் மறைவு

உலகத்தில் தோன்றும் மக்களுள் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உயரிய கொள்கையைக் கடைப்பிடித் தொழுகுவோர் சிலர்; அவரே செயற்கரிய செய்யும் பெரியோராவர்; அவர்களில் வைத்தெண்ணத்தக்காரே 'அரவிந்த கோஷ்' என்னும் அரவிந்தராவர்.

இவர் 1872-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் கரு-ஆம் நாள் கல்கத்தாவில் தோன்றினார். தமது ஏழாவது அகவையிலேயே தம் இரு தமயன்மாருடன் கல்விகற்க இங்கிலாந்து சென்றார். அங்குப் பதினான்கு ஆண்டுகள் தங்கி, கேம்பிரிட்சிலுள்ள மன்னர் கல்லூரியிற் கல்வி பயின்றார். 1890-ல் ஐ. சி. எஸ்.பட்டத்திற்கான புகுமுகம் புகு (பிரவேச) தேர்வில் தேறினார். அதன்பின் அவர்க்குப் படிப்பில் விருப்பமில்லை ஆகலான், இறுதித் தேர்வில் தேறவில்லை. பின்னர் 1893-ல் தாய் நாட்டுக்குத் திரும்பி வரலானார். வந்தபின் பரோடா தனியரசு நாட்டில் ஒரு உயர்நிலை அதிகாரியாகப் பதின்மூன்று ஆண்டுகள் பணிபுரிந்தார். பின், வங்க தேசியக் கல்லூரியின் தலைவராக அமர 1906-ல் கல்கத்தாவுக்குச் சென்றார். சென்று அவ் அலுவலை ஏற்ற சிறிது காலத்துக்குள் அரசியல் விடுதலை இயக்கம் அவர் மனத்தைப் பெரிதும் ஈர்த்தது; அதுகாலை வங்கப் பிரிவினை முகிழ்த்தது; அதை எதிர்த்தார்; போரிட்டார்; அதில் பெரிதும் முனைந்துநின்றார். "வந்தே மாதரம்" என்னும் புதினத்தாளின் முதன் முதல் ஆசிரியக் கிழமை பூண்டு தொண்டாற்றி, ஆங்கு வீறிட்டெழுந்தவர் அரவிந்தரே!

பின்னர் அலிப்பூரில் வெடிகுண்டு நிகழ்ச்சி நடந்தது; அந்நிகழ்ச்சி வழக்கில் இவர் முதன்முதலாக அரசினரால் குற்றவாளியெனக் கொண்டு கைது செய்து தனி அறை ஒன்றில் சிறைப்படுத்தினர். அச் சிறையில் வாழ்ந்த நாளில் இரவு பகலாக ஓய்வின்றிக் கீதை, உபநிடதங்களைக் கற்றார். அவைகளின் நுண் பொருள் உணர்ந்தார்; உணர்ந்ததன் பயனாக இறையன்பும், மன வொருமைக் காட்சியும் (யோகமும்) ஆங்கேயே கைகூடின; அங்கேயே துறவோரானார்; பொன்றாப் புகழ் பெறும் அறவோராம் நிலையெய்தினார்.

அதன் பின்னர், தேசபந்து சித்தரஞ்சனதாசர், முறைமன்றில் இவர் சார்பில் வழக்குகளை ஆய்ந்து வாதாடி இவரை விடுதலைபெறச் செய்தார். விடுதலை பெற்றபின் இவர் ஆங்கிலத்தில் 'கர்மயோகி' என்றும், வங்காளி மொழியில் 'தர்மா' என்றும் இரு கிழமைப் புதினத்தாள்களைத் துவங்கி நடத்திவந்தார். அப்பால் அரசியலார் தம்மைச் சிறைப்படுத்த எண்ணுவதாக அறிந்து கல்கத்தாவுக்கு அண்மையிலுள்ள சந்திரநாகூர் என்னும் பிரெஞ்சினர் ஆட்சியுள்ள நகருக்குச் சென்றார். பின்னர் 1910-ஆம் ஆண்டில் புதுச்சேரி நகருக்குப் போந்து குடியேறித் தம் அற நிலையத்தை நிறுவினார். அதிலிருந்து அவர் அறவோராக வாழ்ந்தனர். அங்கிருந்துகொண்டு அவர் பல்வகை இலக்கியப்பணி புரிந்தார்; இறை இன்பநெறியை உணர்த்தினார்.

இத்தகையராம் மகான் அரவிந்தரவர்கள் இத் திசம்பர்த் திங்கள் ச-ஆம் நாள் இரவு 1-30 மணிக்கு இறைவன் திருவடி நீழலிற் கலந்தார்.

அண்மையில் இறையடி நீழலிற்கலந்த திருவண்ணாமலை ரமண முனிவர் பெரும் பிரிவு குறித்து யாங்கொண்ட துயர் ஆறாதிருக்கும் இக் காலை, இவர் பிரிவும் மிகமிக வருத்தலுறுகின்றது ஆகலான், யாம் ஆழ்ந்த துயரினையடைகின்றோம். அன்னார் இருவரின் நல்லுயிர்களும் இறையடி இன்பிற் கலப்பனவாக.

—செல்லூர்க்கிழார்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## இரண்டு நூறுயிரம் அருட்கொடை

திருநெல்வேலி 'மணிமுத்தாநதி அணைத்திட்டம்' அம் மாவட்டத்து வாழும் பெருமக்கள் வழங்கிய பெரும்பொருள் துணைகொண்டு அரசிய லாரால் துவங்கப்பெற்று நிகழ்ந்து வருகின்றது. அச்சீரியபணிக்குத் திருவாவடுதுறை ஆதீன மகாசந்நிதானத்தின் அருட்கொடையாக வெண் பொன் இரண்டு நூறுயிரம் வழங்கப்பெற்றமை போற்றத்தக்க பேரறமே யாகும். சைவசித்தாந்தத் திருமடத்துப் பெருமுதல்வர்கள் அருள்வழி நடைகொள்வரேல் பொருள் மழையும் பொழிவரென்பதற்கு இஃதோர் எடுத்துக்காட்டாகும். இதுவே அளத்தற்கரிய வளமுடைப் பேரறமா மென்பது,

> "நிலனெளி மருங்கி னீர்நிலை பெருகத்
> தட்டோர் அம்ம விவண் தட்டோரே" (புறநானூறு கஅ)

என்னும் பொருண்மொழியால் வலியுறும்.

திருக்குறள் வகுப்பு மாணவர் கழகச் சிறப்புக்கூட்டமும், புதுவயல் புலவர்மணி சோமசுந்தரஞ் செட்டியார் அவர்களுக்கு ஆதீன வித்துவான் என்ற பட்டமும், திருவண்ணாமலை ஆதீன ஐந்து கோவில் தேவத்தான நூல்நிலையத் திறப்பும், ஆதீனத்துக்குரிய சதுர்வேதிமங்கலத் திருக்கோவி லில் திருவுருவ நிலைநாட்டலும் திருமுழுக்கும் முறையே தக்கார் தலைமையி லும் பெரும்புலவர் விரிவுரையிலும் பெருமக்கள் பெரிதும் ஈடுற நிகழ்ந்தமை உணர்ந்து மகிழ்கின்றோம்.

## தாய்மொழி பேணும் தனிமாண்பு

துருக்கி நாட்டின் பல்கலைக் கல்லூரியின் கலைகளையும், சமயம், தத்துவம், வேதாந்த முதலிய நுண்ணுணா நூல்களையும் கற்கவரும் இந்திய மாணவர்க்குத் திங்கள் ஒன்றுக்கு இருநூறு ரூபா விழுக்காடு ஆண்டு இரண்டுக்கு அந்நாட்டரசியலாரால் வழங்கப்படுமென்று வெளிப்படுத்தி யுள்ளனர். இதுபோல் நம் தாய்மொழியாம் செந்தமிழ் மொழிககும் வழங்கப்பெறும் வண்மைமிக்க நன்மைக்காலத்தை எதிர்நோக்குவோமாக.

## அனைத்திந்திய பெண்கள் சங்க சென்னைக் கிளையின் வேண்டுகோள்

இம்மாதம் 2-ம் நாள் அனைத்திந்திய பெண்கள் சங்கத்தின் சென்னைக் கிளை ஆதரவில் இராஜாஜி மன்றத்தில் மாநாடு நடைபெற்றது. அப் போழ்து பவநகர் மகாராணியார் தலைமை வகித்தார்கள். பெண்கள் சமூகத் துக்கு உற்ற பயன் விளைக்கும் தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டுள்ளன. அவைகளுள், திரைப்படங்களில் கொலை, தூக்கிலிடுதல், சுடுதல் இன்னும் பிற பெண்களை அவமதிக்கும் காட்சிகளைக் காண்பிப்பதைத் திரைப்படத் தணிக்கைக் குழுவினர் தடுத்தல் வேண்டுமென்றும், அன்றியும், எல்லாச் செய்தித்தாள்களிலும் அருவருக்கத்தக்க வகையில் படங்களையும், கதை களையும் பிரசுரிப்பதை முற்றிலும் அகற்றப்படவேண்டுமென்றும், தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன.

# மதிப்புரை

**மின்னொளி :**

[ஆசிரியர் : ப. கண்ணன் அவர்கள், தென்றல் நூற்பதிப்புக்கழகம், சலகண்டபுரம், சேலம் மாவட்டம் வெளியீடு. விலை அணா 6.]

திரு. ஆசிரியரவர்கள் நாட்டுப்புறத்துள்ள பொருந்தா ஒழுக்கங்களைப் போக்கவும், பொருந்திய மருந்தனையதிருந்தும் ஒழுக்கங்களை ஆக்கவும் துணைசெய்ய ஊக்கமளிக்கும் ஓர் உயரிய சீர்திருத்த நாடகமுறையில் இந் நூலை ஆக்கியுள்ளார். அவர் கருத்து நிரம்புவதற்கு ஏற்ற நூலென்பது துணிபு. தமிழ்நாடு இதனால் நலம்பெறுமாக.

**தமிழன் கண்ட மலேயா :**

[ஆசிரியர்: அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் B.O.L., M. Litt., துணைத் தமிழ்ப்பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை. தமிழ்க்கலைப் பதிப்பகம்,சென்னை 10. வெளியீடு விலை ரூபா 2-0-0.]

திரு. ஆசிரியரவர்கள் மலேயாவின் கண்ணுள்ள தமிழ்ப்பண்ணையார் வேண்டுகோளுக்கிணங்கி, 21-5-48-இல் அவ்வூர்க்குச் சென்றிருந்தார்கள். அவ்வூர் தமிழ்ப்பெருமக்கள் மிகுந்துவாழும் ஒரு சிறந்த நகர். அங்கு ஒரு திங்கள்வரைத் தங்கியிருந்தார்கள். ஆங்காங்குள்ள பல வூர்களிலும் தமிழ்ப் பணியாம் பல விரிவுரை ஆற்றியுள்ளார்கள். தாம் கண்டதும் கேட்டதும், ஊர் இயல்பும், மக்கள் பழக்கவழக்க நாகரிகப் பண்புகளும், தமிழ்க்கல்லூரி, ஆசிரிய மாணவர் தொகைகள், பள்ளிக்கூடம் நிகழும் பலவேறு ஊர்கள், நாட்டியலிற்காணும் நற்றமிழ்ப்பற்று முதலியவற்றைத் தெளிய விளக்கி யுள்ளார்கள்.

மேலும், நூல் விளக்கங்களைத் தம் அருமை மகளார்க்கு விடுக்கும் கடித முறையில் அமைத்திருப்பது சாலச்சிறந்ததேயாம். இந்நூலைக் கற்பார் செவ்வியமுறையில் கடிதம் எழுதவும் துணைபுரியும் வாய்ப்பாகவுள்ள நல்ல பதிப்பு. ஒழுகிய நடையும், இனிமை, எளிமை, தெளிவு, திட்பநுட்பச் செறிவும் திகழ்ந்து விளங்குவது. கல்லூரி மாணவர்கள் கற்றுப் பயனடையக் கூடியது. தமிழ்நாடு போற்றுமாக.

**தமிழ்த்தென்றல் ஆண்டு மலர் :**

[ஆசிரியர் : வெ. வ. இராமசாமி, கிடைக்குமிடம் : தமிழ்த்தென்றல் சர்ரியாலயம், விருதுநகர். விலை குறிப்பிடப்படவில்லை.]

1950-ம் ஆண்டுமலர் வரப்பெற்றோம். கண்கவர் அட்டைப்படமும் கருத்தை விளக்கும் வேறுபல படங்களும் அம்மலரை மிளிரச்செய்கின்றன. பேராசிரியர் : திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் முதலிய அறிவாற்றல் செறிந்த பல நல்லறிஞர்களின் கட்டுரைகள் நாட்டுக்கும் மொழிக்கும் நன்மைபயக்கும் தன்மையில் விளங்குகின்றன. இம்மலர் தமிழ்த்தாய்க்கோர் அணிகலமாகும்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



சர்தார் வல்லபபாய் படேல்

| தோற்றம்: | மறைவு: |
|---|---|
| 31—10—1875. | 15—12—1950 |




சிலம்பு உரு } திருவள்ளுவர் ஆண்டு கக௯அக, மார்கழி சனவரி, 1951 { பரல் ரு

# ஆண்மைச் சர்தார்

[சித்தாந்த பண்டிதர், புலவர், ப. இராமநாத பிள்ளை]

*சிறப்பு*

அடிகள் அளித்துள்ள ஆண்மைச் சிறப்புப் பெயரே 'சர்தார்'. சர்தார் என்பது தலைவன் எனப் பொருள்படும். இப்பெயர் ஏறத்தாழப் 'பெருஞ்செய் ஆடவர்' என்னும் பீடுடைப் பெரும் பெயர்க்கு ஒப்பாகும். குஜராத் மாகாணத்தில் 'மறமானம்' மிக்க மள்ளர்கள் வாழும் கோட்டம் நாடியாத் தாலுகா. இதைச்சார்ந்த எழில்மிகும் ஊர் கரம்சாத். இவ்வூரில் வேளாண் (விவசாய) விழுக்குடியில் தாளாண்மையும் வாளாண்மையும் ஒருங்கமைந்து விறல் கொண்டு திறல் மிகுத்து வாழும் திருவினர் ஜாவேரிபாய் படேல்.

*தந்தை*

இவர், ஆயிரத்து எண்ணூற்று ஐம்பத் தேழில் நிகழ்ந்த அறநெறி நில்லா ஆங்கில அரக்கர்களை மறமுடன் எதிர்த்துப் பொருத அரசியார் ஜான்ஸி அம்மையாரின் மாபெரும் படையில் சேர்ந்து மைந்துடன் பொருது வென்ற மாண்பினர். ஆயினும், ஓர் ஏழை வேளாண் வாழ்க்கையராகவே வாழ்ந்தனர். இவர்தம் தவப்பேற்றால் ஆண்மக்கள் ஐவரும், பெண்மகள் ஒருத்தியும் தோன்றினர். அவர்கள் முறையே சோமாபாய், நர்ஸிபாய், வித்தல்பாய், வல்லபபாய், காசிபாய் எனவும் தங்கிபென் எனவும் பிள்ளைத் திருப்பெயர் பெற்றனர். பெண்மகவு குறுவாழ்நாளாய் மண்ணுலகை நீத்தது. படேல் என்னும் சொற்பொருள் பட்டோலைகொண்டு ஊர்க்கணக்கு எழுதும் சீர்மிக்கோர் பெறும் பட்டப்பெயர் என்ப.

பிறப்பு

வல்லபபாய் படேல் ஆயிரத்து எண்ணூற்று எழுபத்து ஐந்தாம் (1875) ஆண்டு அக்டோபர்த்திங்கள் முப்பத்தோராம் நாள் பிறந்தனர். பெயருக்கு ஏற்பத் தோற்றமும் செய்கையும் காணப் பெற்றன. அஞ்சாமையும் துணிவும, அன்பும் அறமும் நிரம்பிய பெற்றோர்களால் வளர்க்கப் பெற்றனர். தந்தையார் போர் முனையில் தாம் இயற்றிய 'மறனிழுக்கா மானமுடைய' வரலாறுகளை இளமையிலேயே விளக்கிக் கூறினர். இவற்றைக் கூர்ந்து கேட்டு மனத்தில் பதித்து மகிழ்வர் சர்தார். தாமும் ஒருநாள் ஆண்மை வீரராய் ஆகவேண்டுமென்று விழைவர். அயலாரை எதிர்த்துப் போர் புரிந்து சீரும் சிறப்பும் எய்த வேண்டுமென்று எண்ணுவர்.

படிப்பு

இளம் பருவத்தே சர்தாரின் அஞ்சாமை கண்டு ஆசிரியரும் அஞ்சினர். மன உறுதியைக்கண்டு அறிவு சான்ற ஆன்றவரும் வியந்தனர். ஒழுங்கும், கட்டுப்பாடும், சொல்வன்மையும், அமைதியும், ஒற்றுமை ஆக்கும் நற்றிறனும் கண்டு யாரும் மகிழ்ந்தனர். இவற்றை விளக்க வரலாறுகள் பல; சிலவற்றை ஈண்டு காண்பாம். இளமையில் வல்லபபாய்க்குக் கையில் புண் உண்டாகி இருந்தது. பலவகைமருந்து கட்டினார்கள்; ஒன்றும் பயன்தரவில்லை. பெரிதாகிக்கொண்டே வந்தது. ஒருவன் சூடு போட்டால் குணமாகும் எனக் கூறினன் அதற்காம் இடத்தையும் அறிவித்தனன்; துணைச் சென்று இடத்தையும் காட்டினன். சூட்டு மருத்துவர் இருப்புக் கம்பியைப் பழுக்கக் காய்ச்சிச் சூடுபோடத் தயங்கினர் பிள்ளையின் இளமை நோக்கித் தயங்கினர். சர்தார் துணிவுடன் அவர்கையினின்றும் சூட்டுக் கோலை வாங்கித் தன்கைப் புண்ணின்மேல் வைத்தனர். அப்பொழுது அச்சமோ துன்பமோ ஒரு சிறிதும் கொண்டிலர்.

மேற்படிப்புக்காக வல்லபபாய் ஒரு சிற்றூருக்குச் சென்றனர். ஆங்கு ஆசிரியர் வீட்டிலேயே கல்வி உடை உணவு தங்குதல் எல்லாம் ஒருங்கு ஏற்பட்டன. இவ்வண்ணமே பலவூரிலிருந்து வந்த பல மாணவர் இருந்தனர். ஒருநாள் ஆசிரியரின் மனைவியார் வழக்கம்போல் எல்லார்க்கும் பால் கொடுத்தனர். ஆனால் வல்லபபாய்க்குப் பால் இல்லாமல் போயிற்று. ஆசிரியன் வாக்ஜிபாய் அதன் காரணத்தை வினவினன். அவ்வம்மையார் விளையாட்டாக வல்லபபாய்க்குப் பால் அதிகம் கொள்வதில்லை என்றனர். அன்றுமுதல் பாலை வெறுத்தனர்; மறுத்தனர். ஆசிரியரும் அம்மையாரும் எவ்வளவு முயன்றும் பயன்பெறவில்லை. இஃது அவர்தம் உறுதிக்கு இறுதியில்லை என்பதைக் குறிக்கும்.

முறை நிறுத்தல்

சர்தார் படிப்பின்பொருட்டுப் பல பள்ளிக்கூடங்கள் சென்றனர். ஆசிரியர்களின் முறையின்மையின்பொருட்டும் பல பள்ளிக்கூடம் மாற நேர்ந்தது. ஒருமுறை நாடியாத் என்னும் ஊரில் படித்துக்கொண்டிருந்தனர். அவர் படித்துக் கொண்டிருந்த வகுப்பாசிரியர் பிள்ளைகளுக்குப் பொத்தகம் எழுதுகோல் இவைகளை வாங்கிவிற்று வணிகம் செய்துகொண்டிருந்தார். வல்லபபாய் கடையில் குறிப்புச்சுவடி ஒன்றை வாங்கினர். ஆசிரியர் கடிந்துகொண்டனர். பள்ளிச்சட்டம் தெரியுமா? என்று வினவினர். ஆசிரியரே வெளியில் வாங்குவது குற்றம் எனக் கூறினர் வல்லபபாய், "அடிகளே! (குருஜீ) தாங்கள் பள்ளிக்கூடத்தில் வணிகம் செய்வதை விட்டுவிடுங்கள்; எங்களுக்குப் பாடத்தை உன்னித்து நன்றாகச் சொல்லிக்கொடுங்கள்," என்றனர். ஆசிரியரின் கடுஞ்சினத்தால் சர்தாரின் முறை தவிராத உரையால் எல்லா மாணவரும் ஒருங்கு சேர்ந்து ஆறுநாட்கள் பள்ளிக்கூடம் வரவில்லை ஆசிரியர் தம் தவறு உணர்ந்த பின்னரே மாணவர்கள் பள்ளிக்கூடம் வந்தனர்.

மற்றொரு பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் மிரட்டினால் சர்தார் அடங்கிவிடுவார் என்று வீண் மிரட்டு மிரட்டினர். அம்மட்டோ, சர்தாரின் தோழன் என்ற காரணம் ஒன்றே கொண்டு ஒரு மாணவனைக் காலால் உதைத்தனர். இது சர்தாருக்குப் பொறுக்கலாகாப் பெரும் துன்பமாக ஆயிற்று. தம் சொல்வன்மையால் எல்லா மாணவர்களையும் உடனழைத்துக்கொண்டு வெளியேறினர். நெடுநாள் பள்ளிக்கூடம் நடக்கவில்லை. கல்வி முதன்மையர் வந்து சர்தார் முன் அறிவித்ததுபோல ஆசிரியரைக்கொண்டு 'எற்றென் றிரங்குவ செய்தேனே' என்னும் வருத்தமொழி புகலச் செய்தனர். சர்தாரும் இரங்கி மாணவர்களுடன் பள்ளி வந்தனர்.

மன்றாடியார்

ஒருவாறு பல்கலை நுழைவுத் தேர்வு (Matriculation) தேர்வில் தேறினர். வழக்கறிஞர் தேர்வுக்குப் படித்துத்தேறினர்; வழக்கறிஞர் ஆயினர். மன்றாடியார் என்பதே வழக்கறிஞரென வழங்கப்படுகின்றது. "பழையமன் றாடி போலும்," என்னும் சேக்கிழாரடிகள் திருவாய்மொழியும் இதனை வலியுறுத்தும். இயல்பாகவே மிடுக்கும், துடுக்கும், அளவையும், அஞ்சாமையும் மிக்குள்ள சர்தார்க்கு முறைமன்ற வழக்கு மிகுதியும் உளங்கொள்வதில்லை. மிறைமன்ற வழக்கே மிகுதியும் உளங்கவர்வது. அதனால், அத்துறையிலேயே பெரிதும் உவந்துழைத்தனர்.

முறைமன்றம் (Civil Court) மிறைமன்றம் (Criminal Court) என வழங்குகின்றன. மிறைமன்ற வழக்குகளிலும் எதிர் வழக்காளிகளின் சார்பே விரும்புவர். அவ்வழக்கைப் பலரும் வியக்க விளக்கி வெல்லுவர். ஆட்சியினர் செய்வதறியாது திகைத்து அடங்குவர். மெய்வழக்கல்லாப் பொய்வழக்கைக் காதால் கேட்பது, கண்ணால் காண்பது, கையால் தீண்டுவதும் செய்யார்.

மன்றம் மாற்றம்

சர்தார்க்கு அஞ்சிப் போர்சாத்திலிருந்த மன்றத்தலைவர் (Magistrate) தம் மன்றத்தை ஆனந்திற்கு மாற்றிக்கொண்டார். சர்தாரும் அவ்வூர்க்கே குடியிருக்கக் கருதினர். இதனை யுணர்ந்த தலைவர் மன்றத்தைப் பழைய இடத்துக்கே மாற்றிக்கொண்டனர்.

நடுங்குவித்தல்

ஒருகால் வெள்ளை மிறைநடுவர் (மாஜிஸ்டிரேட்) முன் கொலைவழக்கின் சார்பாக வழக்காட நேர்ந்தது. அவ்வெள்ளையன் பாடறிந்தொழுகும் பண்பினன் அல்லன். மேலும், எள்ளி நகூஉம் இயல்பினன். அதனால், இவர் ஆங்குச் செல்வது தகாது எனப் பலரும் வற்புறுத்தினர். இவர் பொருட்படுத்தாது சென்றனர். வழக்கு ஊர்காவலரால் படைத்துக் கட்டிய கட்டு. ஒரு செல்வ மகந்து (திருமடத் தலைவர்) வேலைக்காரப் பெண்ணைக் கற்பழித்துக், கொன்று கிணற்றில் தள்ளினர் என்பது. ஏழு மணியகாரர்களும் ஒன்றுபோல் பொய்க்கரி (சாட்சி) புகன்றனர். எட்டாவதாக வந்த அவ்வூர் மணியகாரர் சான்று பகரும்போது நடுவர் மன்றத்து நிலைக்கண்ணாடி ஒன்று நிறுவி அதைப் பார்த்துக் கொண்டே சான்று பகரச் செய்தனர். இதுகாறும் 'ஊக்க முடையான் ஒடுக்கம்' ஒத்திருந்த சர்தார் குறுக்கு உசாவல் (கேள்வி) தொடங்கினர். நடுவர், இவரை மட்டும் ஏன் உசாவ வேண்டும் என வினவினர். தம் விருப்பம் என்றனர். சான்று பகர்ந்தவரை நோக்கி, நடுவர் ஆணைப்படி கண்ணாடியைப் பார்த்துத்தானே கரி போக்கினர்? ஆம்; இதை மேல் மன்றத்தும் மெய்ம்மையுறக் கூறுவீரன்றோ? ஆம், என்றனர்.

நடுவர் நடுங்கித் தம் எண்ணத்தை மாற்றிச் சான்றுகளெல்லாம் நிறைவுறும் நிலையில் இல்லை என வரைந்து, எதிரியையும் பிணைமேல் விடுத்து வழக்கை மேல்மன்றத்துக்குப் போக்கினர். ஆங்கு எல்லாரும் வழுவினின்று நழுவி ஒறுத்தல் பெறாது தப்பினாற் போதுமென்று மன்றாடினர். நடுவர் வேண்டுகோளின் மேல் அமைந்தாங்கொழுக இணங்கினர். அவ்வமைவுப் (சமாதானம்)படி மகந்துவும் விடுதலையாயினர். அரசியல் முதன்மை

யரும் அச்சமகன்று தப்பினர். அதுமுதல் படேல் என்றால் கனவிலும் பொய்யர்க்கு உள்ளமும் உடலும் படேல் என்கும்.

மணம்

தம் ஊராகிய கரம்சாத்திற்கு அண்மையில் உள்ளது காறு என்னும் சிற்றூர். இது மூன்று கல் தொலைவில் உள்ளது. அவ் வூரில் நன்மைசால் தொல்குடியில் தோன்றிய நங்கை ஜாவேர்பா என்ற மங்கையர்க்கரசியை நன்னாள்கொண்டு மணந்தனர். நல் லறமாம் இல்லிருந்து விருந்து பேணல், சுற்றம் ஓம்பல், ஒப்புர வாற்றல், ஈகை முதலிய செயல்களை இனிதுறச் செய்தனர். கற் பன கற்று நிற்றலும், கடவுட் கொள்கையும் கடைப்பிடித்து ஒழுகும் பொற்பு நிறைந்தனர். வாழ்க்கை ஊதியமாம் வண் புகழும் எண்மையில் வாய்க்கப் பெற்றனர்.

மக்கட்பேறு

பிறவிப் பெரும்பயன் மக்கட்பேறே. உலகிடை உடலுடன் வாழும் உயிர்க்கெல்லாம் உதவுவது ஊராண்மையாகும். வீட் டிடை உயிர்க்கு உடனுற உதவுவது சீராண்மையாகும். சர்தா ரும் கற்புறும் மனைவி பால் கடவுள் அருளால் கண்மணியனைய பெண்மகவு ஒன்றும் ஆண்மகவு ஒன்றும் ஈன்றெடுத்தனர்.

மனைவியின் பெரும்பிறிது

சேய்கள் இரண்டும் பிறந்து சின்னாட்களுக்குள் தாய் பொன் உலகு எய்தினர். அந்நிகழ்ச்சி சர்தாரின் பற்றற்ற இல்வாழ்க்கைப் பண்பினைப் பலரறிந்து உய்யப் பகர்வதா யிற்று. என்னை? மனைவியார் நோயுற்று வருந்தினர். அவ ரைப் பம்பாய்க்குப் போகச் செய்தனர். அங்குள்ள சிறந்த காமா மருத்துவ நிலையத்துச் சேர்ப்பித்தனர். பின் முன்போ லவே தநதொழிலைச் செவ்வையாகப் பார்த்து வந்தனர். அகம் புறம் காணப்பெறும் மாறுதல் ஏதும் இன்று. ஒரு நாள் ஆமதா பாத்து மன்றத்தில் வழக்காடிக் கொண்டிருந்தனர். அப்பொ ழுது மின்னஞ்சல் (தந்தி) ஒன்று வந்தது. மன்றத்தலைவர் ஆணைபெற்று அதனைப் பிரித்துப் பார்த்துவிட்டு வழக்கைத் தொடர்ந்து நடத்தினர். இதனைக் கண்ணுற்ற தலைவராம் நடு வரும், நண்பரும் இறும்பூது எய்தினர். செய்தி அறியத் துடி துடித்தனர். சர்தாரின் முகத்தில் மாறுதல ஒரு சிறிதும் காணப்படவில்லை. வழக்கு முடிந்ததும் "கம்பிச் செய்தி தம் அருமை மனைவியார் இறந்ததே" என்று ஏதும் நடுக்கின்றி இடுக்கணின்றி இயற்கைபோல் எடுத்தியம்பினர். இத்தகைய உரம் நிறைந்த உள்ளத்தார் என்க. அம்மையார் விண்ணுறு நாள் ஆயிரத்துத் தொள்ளாயிரத் தெட்டென்ப.

சட்டத்திறலர்

இலண்டன் மா நகர் சென்று முறை நூல் (சட்டம்) நுணுக்கம் நிறையப் பெற்றுப் பெரும்புகழ் பெற விழைந்தனர். அங்ஙனமே சென்று எண்மையில் கற்று வல்விரைவில் தேர்வில் தேறித் திகழ்ந்தனர். இலண்டன் மாநகர் செல்லுங்கால் தம் அரும்பெரும் சேய்கள் இருவரையும் உறவினர்பால் ஒப்படைத்துச் சென்றனர் தேர்வில் முதன்மையாகத் தேறி, வெற்றி பெற்றதுமட்டும் அல்லாமல் ஐம்பது செம்பொன் (பவுன்) பரிசு பெற்றனர். தனிப் பெரும் சிறப்புடன் இனித்த தம் தாய்நாடு மீண்டனர். மீண்டு ஆமதா பாத்தில் குடியேறித் தொழில் நடத்தினர். இவர் வந்துற்ற இரண்டு மூன்று ஆண்டுகளின் பின் காந்தியடிகளும் அவ்வூரையே தம் படைவீடாகக் கொண்டு சபர்மதி யாற்றங்கரையில் முனிவர் உறைவிடமாம் திருமடம் (ஆசிரமம்) அமைத்துத் தங்கினர்.

மேனாட்டு மயக்கு

சர்தார் மன்றம்விட்டதும் சென்று 'குஜராத் கிளப்' என்னும் கழகம் சேர்வர். சீட்டுச் சொக்கட்டான் நாட்டமுடன் ஆடுவர். தாள் சுருட்டு (சிகரெட்) ஓயாது பற்றுவர். மாயா மேனாட்டு மயக்கே ஆயாது கொண்டனர். காந்தியடிகள் வந்து இரண்டு ஆண்டுகளுக்குப் பின்தான் சர்தார் அவருடன் பழக வாய்ப்பு நேர்ந்தது. அடிகள் கற்றறி வல்ல பலர் கூடும் அக் கழகத்துக்கு வந்தனர். வெள்ளையரை விரட்டி நாட்டை விடுதலை செய்யத் தாம் கோரிய உண்மை கடைப்பிடித்தலும் ஊறு செய்யாமையுமாகிய உயரிய திட்டத்தை ஒப்புவித்தனர். எல்லாரும் பித்தன் என்று இகழ்ந்து பெருகச் சிரித்தனர். சர்தார் அடிகளின் அமைதியையும் கூச்சத்தையும் கண்டு நகைத்தனர் சுவையுடன் ஆடிய சீட்டாட்டத்தை உடன் ஆடினர்.

அடிகள் தொடர்பு

மீண்டும் இரண்டாண்டுகள் கழித்து ஆறு மேனாட்டு மயக்குப் போனவா தெரியாது, ஒற்றை மெய்ப்பையும் ஓங்கு நாட்டுடையும் உடுத்து அடிகளை அடுத்து அன்புறு தொண்டர் ஆயினர். ஆயினும் அடிகள் கூறுவதை எல்லாம் கண் மூடி வழக்காய் ஆயாது ஏற்கும் சேயாய் இருந்திலர். "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் மெய்ப்பொருள் காண்பது அறிவு" அன்றோ?

அடிகள் தம் திட்டத்தை முதன்முதல் செய்து காட்டியது பீஹாரில்தான். அங்கு வெற்றியுற்று விட்டாலும் நடுவர் முன்

தம் கொள்கையைக் குறையை எடுத்துரைத்த அழகும் கையாண்ட முறையும் எல்லோர் உள்ளத்தையும் உருக்கின. கழகத்தின் செயலாளர் சர்தாரும் ஹரிலால் தேசாயும் ஆவர். இருவரும் மிக்க ஈடுபாடுகொண்டு அடிகளைக் கழகத்தின் தலைவராக அமைத்தனர். நாடு முழுவதும் அடிகளைப் போற்றின.

சர்தார் - தலைவர்

1917-ஆம் ஆண்டில் கெய்ராவில் வானம் வழங்காதொழிய மானமுறும் வேளாளர் பெரிதும் வருந்தினர். ஊணின்றி உய்யாநோய் கொண்டனர். ஆளும் இனத்தவர் மக்கள் மாளினும் வரி வாங்காது விடா வன்கண்ணரன்றோ? நோயுற்ற மாட்டின்மேல் போயிருந்து குத்துதல் கருங்காக்கையின் இருங்குணமன்றோ? இதுவும், 'கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோலும்' சொல்லாலும் பொருளாலும் வேறுபாடில்லை. அடிகள் அம்மக்கள் துன்பகற்றத் தாம் முன்னின்று அறப்போர் துவங்கினார். தமக்குத் துணையாந் தொண்டர் ஒருவரை நாடினர். வல்லபபாய் படேல் வந்து வாய்த்தனர். அவரும் அடிகள் ஆணை வழிநின்று அறப்போர் ஆற்றினர். அதுமுதல் அடிகட்கு எந்நாளும் "படைவேண்டுவழி வாளுதவியும், வினைவேண்டுவழி அறிவுதவியும், வேண்டுப வேண்டுப" வேட்டாங்குதவும் தாட்டாளராயினர். வாள்—ஒண்மை—வாய்மை.

போர்ஸாத் போர்

1917-ல் ஒத்துழையாமை இயக்கத் தொடக்கத்தில் குஜராத்தி மக்கள் அடிகளோடிணைந்து படைகொடு எதிர்க்கும் அரசினரைப் படையின்றி எதிர்க்க முனைந்தனர். அரசினர் அடக்கி ஆளவேண்டுவ செய்தனர். தண்டவரி வாங்கத் துணிந்தனர். கீழோரைக்கொண்டு பெண்களையும் துன்புறுத்த முற்பட்டனர். மக்கள் கூக்குரல், செய்தித்தாள் ஓலம் எல்லாம் கூடித் தண்டக்காவலை நீங்கச்செய்தன. 1923-ல் நாகபுரிக் கொடிப் போராட்டம்.

வெற்றிப் போராட்டமும் வீரமொழியும்

1927-ல் பர்டோலியில் வரிகொடா இயக்கப்போரில், "ஒவ்வொரு சிற்றூரும் ஒவ்வோர் பாசறையாக மாறவேண்டும். ஊறுசெயாப் போருக்கு (அகிம்சை) உண்மையான கட்டுப்பாடே முதன்மை," என்றனர். "கொடுங்கோல் ஆட்சியினர் வீட்டுப் பொருள்களை விற்பனை செய்ய வெளியாக்குவர்; ஆண்மை மிக்க பெண் திருவினரே! நீங்கள் உங்கள் கைப்பித்தளை வளையல்களையும்

கழற்றிக்கொடுத்து அவர்கள் கையில் அணியச் சொல்லுங்கள். சட்டிபானைகளை எடுத்துச் செல்வதால் பட்டினிபோட முடியா தெனக் கூறுங்கள். இவற்றால் நீங்கள் 'மூதின் மகளிர் (வீரப பெண்) ஆதல் தகும்' என்னும் அரும்பெயரை நிறுத்துங்கள்," என்றனர்.

1930 மார்ச்சு 1, 2-ல் உப்புப்போராட்டத்தில் "வெற்றியும் தோல்வியும் உங்களுடைய தன்னிழப் (தியாகம்)பின் சால்பினால் தான் ஏற்படவேண்டும். குஜராத்தி எவனும் தன்னலங்கொண்டு உயிருக்கஞ்சி வெளி ஏறித் தன்னைக் குஜராத்தி எனச் சொல்லிக் கொள்ளான்," என்றனர். இவை போன்றவை இன்னும் பல.

நகராண்மைத்தலைமை

காங்கிரசு ஏற்படுத்திய முறைப்படி சர்தார் ஆமதாபாத் நகராண்மைத் தலைவராய் 1924 முதல் 1928 வரை நேர்மை யாகவும் திறம்பெறவும் வாய்மையாகவும் நடத்தி மக்களுக்கு எல்லா வாய்ப்பும் செய்து கொடுத்து வண்புகழ் பெற்றார்.

குழுத்தலைவர்

1935-இல் சட்டசபைக்குழுவின் (Parliamentary Board) தலைமைநிலை ஏற்று, ஏழு மாகாணங்களிலும் காங்கிரசின் சார் பாகச் சென்று திறம்பெற நடத்த அமைச்சர்களுக்குச் சிறந்த தலைவராய் அறிவாண்மைகளை உற்றுழிக் கூறி ஊக்கிய உரவோராயும் உறு துணைவராயும் நின்றமை பெரிதும் நினைவு கூரத்தக்கது.

குறுநிலங்களின் (சமத்தானம்) இணைப்பு

இந்திய யூனியன் ஆட்சிக்கீழ் பதினேழு குறு நிலங்கள், ஒன்பது மாகாணங்கள் ஏழு குறுநில (சமத்தான யூனியன்) இணைப்புக்களுமாக இருந்தன. இவ் இந்தியாவை எவ்வாறு ஒற்றுமையாக்கி ஒரு தலைவரின் ஆட்சிக்கீழ் கொண்டு வருவதென உலகமே மருண்டது ; உள்ளூர நடுங்கிற்று ; ஊழி ஊழியாக முயலினும் ஒண்ணாது ஒண்ணாது என ஒருதலையாக உரைத்தது.

சர்தார் தம் சொல்வன்மையாலும் சோர்வின்மையாலும் அஞ்சாமையாலும் எல்லாக் குறுநில மன்னர்களையும் அணுகினர் ; தொகச் சொல்லினர் ; தூவாத நீக்கினர் ; உளங்கொள உரைத் தனர் ; நன்றி பயக்க நாட்டினர்.

(தொடர்ச்சி உசகூ-ம் பக்கம் பார்க்க)

# எதிரிலிசோழச் சம்புவராயன்

[சித்தாந்த கலாநிதி, ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை]

சோழ வேந்தனான இரண்டாங் குலோத்துங்கன் சோழ நாட்டையாண்டு வருகையில், வடக்கில் தொண்டைநாடுமுற்றும் அவனது ஆட்சியில் இருந்தது இஃது அக்காலத்தில் இருபத்து நான்கு பகுதிகளாகப் பிரிந்திருந்தது. ஒவ்வொரு பகுதிக்கும் கோட்டம் என்பது பெயர் தொண்டை நாட்டின் மேற்குப் பகுதி பல்குன்றக்கோட்டம் எனப்படும். இதற்கு வடவெல்லை பாலாறும் தென்னெல்லை தென்பெண்ணையும் மேலெல்லை சவ்வாது மலைத்தொடரும் ஆகும். இப்பல்குன்றக் கோட்டம் அக்காலத்தே சம்புவராயர் என்ற குறுநிலத் தலைவரது ஆட்சியில் இருந்தது. அவர்கட்குப் படைவீடு என்பது தலைநகரமாக விளங்கிற்று.

வடார்க்காடு வட்டத்துப் போளூரிலிருந்து வேலூர்க்குச் செல்லும் பெருவழியில் சந்தைவாசல் என்னும் அழகிய ஊருளது. அதற்கு மேற்கில், படைவீடு, மூன்று பக்கமும் உயர்ந்த குன்றுகளால் சூழப்பட்டு அவற்றினின்று இழிந்தோடி வரும் ஆரணியாற்றின் கரையில் அமைந்திருக்கிறது. சிறு காடு படர்ந்து பசுந்தழை போர்த்து நிற்கும் குன்றுகளின் அடியில் மணல் பரந்த ஆற்றங்கரையில் நின்று திகழும் இவ்வூர், படைவீடு என்ற பெயர்தாங்கி யிருப்பது மிகவும் பொருத்தமே யெனக் காண்பார் கருதாதொழியார். ஒரு காலத்தில் இது செல்வம் சிறந்த திருநகரமாய் விளங்கிற்றென்பதைக் காட்டும் சின்னங்கள் பல அங்கே இப்போதும் காட்சியளிக்கின்றன. அங்கே ஒரு தேவி கோயில் உளது. ஆண்டுதோறும் ஆடி வெள்ளிக்கிழமைகளில் நூற்றுக்கணக்கான மக்கள் சென்று அத் தேவியை வழிபடுவர் ; அத்தேவியைப் படைவீட்டம்மன் என்று அவர்கள் பெயர் கூறுகின்றனர். சென்ற சில ஆண்டுகட்குமுன் அத்தேவி கோயிலின் திருமுன் ஆடிவெள்ளிக்கிழமைகளில் பருந்தும், கழுகும் வட்டமிட்டுத் திரியும் கொலைக்களமாய்க் காட்சியளித்தது. எண்ணிறந்த கோழிகளும் ஆடுகளும் அத் தேவி பெயரால் கொலையுண்டன. நல்லோர் சிலருடைய முயற்சியால் அக்கொடுஞ்செயல் இப்போது நின்றுபோயிற்றென்று கூறுகின்றனர்.

"இப் படைவீட்டம்மன் கோயில் அங்கு எப்படி உண்டாயிற்று?" என்று அங்குள்ள அறிஞர்களைக் கேட்டால், அதன் தல

புராணத்தைக் காணவேண்டும் என்கின்றனர். அங்கே சிதறிக் கிடக்கும் கோயிற் சுவர்களை நோக்கினால் சில கல்வெட்டெழுத்துக்கள் காணப்படுகின்றன. அவற்றைத் தொகுத்து நோக்குவோமாயின் அங்கே 'அம்மையப்பேச்சுரம்' என்றொரு சிவன் கோயில் இருந்ததென்பதும்,[1] அக்கோயிலின் வடபுறத்தே நிறுவப்பெற்ற துர்க்கையே இத்தேவி யென்பதும் தெரிகின்றன. இத்தேவியின் காவலில்தான் பண்டைய நாளில் படைவீட்டு நகரம் விளங்கிற்று. இவ்வூர்க்கருகே வடக்குத் தெற்காகச் சுவர் வைத்ததுபோல் நிற்கும் மலை 'இராஜ கம்பீரன் மலை' யென்று பெயர் கூறப்படுகிறது.

இராஜகம்பீரன் என்பது இந்நகரத்தேயிருந்து ஆட்சிபுரிந்த சம்புவராய மன்னருள் ஒருவன் பெயர். மாறவன்மன் சுந்தர பாண்டியன் என்பவன் ஒருகால் இப்பகுதியைக் கைப்பற்ற வேண்டிப் போர்தொடுத்தான். அவன் முயற்சி வெற்றி தாராதாயிற்று. அப்போது சம்புவராயன்பால் இனிதிருந்த இரட்டைப் புலவர்கள்,

> " காற்றால் அலைப்புண்டும் கண்ணன் கடல்கடைந்தும்
> ஏற்றான் எடுத்துவளைத் தெய்திளைத்தும்—ஆற்றாத
> செம்பொன் மலையன்று சேலுக்கிடம் கொடுக்கச்
> சம்பன் மலைகை தவா[2] "

என்று பாடினர்.

இச்சம்புவராயர்கள், இடைக்காலச் சோழ வேந்தர்களின் காலத்தில் மிக்க சிறப்புற்று விளங்கினர். இவரது ஆட்சி வடக்கே சித்தூர் மாவட்டத்திலும் தெற்கில் திருவாமாத்தூர் வரையிலும் பரவியிருந்தது. கிழக்கில் திருக்கழுக்குன்றமும் அவரது ஆட்சியில் இருந்தமையின், செங்கற்பட்டு, வடவார்க்காடு, தென்னார்க்காட்டு வட்டத்தின் வடபகுதியாகிய இப்பகுதிகளைக்கொண்ட நாடு சம்புவராயர்க்கு உரியதாயிருந்தமை விளங்குகிறது.

இவர்களின் ஆட்சியும் மிகச்சிறந்து விளங்கிற்று. இதுவும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டுமுதல் பதினான்காம் நூற்றாண்டின் இறுதிவரை மிக்க புகழ்படைத்து நின்றது. மக்கள் பசியும் பிணியும் பகையுமின்றி இன்பவாழ்வு நடத்தினர். களஞ்சியம், கமலபாதம், மருதம், மங்கலம், அரியபாடி, கண்ணமங்கலம், அகத்தேரிப்பட்டு, ஏனைபாடி, குடியாத்தம, வல்லம் முதலிய பேரூர்கள் சிறந்து நின்றன. இப் பகுதிக்குப் படைவீட்டரசு என்றே பெயரும் வழங்கிற்று. சில செப்பேடுகள்,

---

(1) S. I. I. Vol. I. No. 78. (2) தமிழ் நாவலர் சரிதை 113.

"ஜெயங்கொண்ட தொண்டைமண்டலத்துப் படைவீட்டு மகா ராஜ்யம"[1] என்று கூறுகின்றன.

இப்படைவீட்டைச் சூழ்ந்த நிலப்பகுதி மிக்க நீர் நிலவளம் படைத்தது. இன்றும் மேலே சொன்ன பெருவழியாகச் செல்லுவோர் அப்பகுதி இனிய வளம் படைத்துத் தோற்றும் அழகிய காட்சியைக் காண்பர் அதன்கண் இன்றுபோல் அன்றும் வேதியர் பலர் வாழ்ந்தனர் அவர்களிலே கன்னடிகளும், தமிழரும், தெலுங்கரும், இலாளரும் எனப் பல திறத்தர் இருந்தனர் ஒரு காலத்தில் அவரிடையே திருமணம் பொருளாகத் தீய கொள்கையொன்று உண்டாயிற்று. மணப்பெண்ணுக்காக மிக்க பொன்னை மணமகன் தரவேண்டும் என்றும், மணமகனுக்காக மணப்பெண்ணின் தந்தை பொன் கொடுக்கவேண்டும் என்றும் வேதியர்கள் ஒரு வழக்காறு ஏற்படுத்திக்கொண்டனர். இத் தீக் கொள்கையின் பயனாக பொன் கொடுத்து மணம் செய்துகொள்ளும் வாய்ப்பு இல்லாதவர் தவறான கோத்திர சூத்திர சாகைகளில் மணஞ்செய்துகொள்ளலாயினர். அதனால் அச் சமுதாயத்தின் பண்பாடு வலியிழக்கத் தொடங்கிற்று. அதனை உணர்ந்த அறிஞர் பலர் விரிஞ்சிபுரத்து வழித்துணைநாதர் கோயிலில் கூடியிருந்து, "இற்றைநாள் முதலாக இந்தப்படைவீட்டு ராஜ்யத்துப் பிராமணரில் கன்னடிகர் தமிழர் தெலுங்கர் இலாளர் முதலான அசேஷ கோத்ரத்து அசேஷ சூத்ரத்தில் அசேஷ சாகையிலவர்களும் விவாகம் பண்ணுமிடத்துக் கன்யா தானமாக விவாகம் பண்ணக் கடவராகவும், கன்யா தானம் பண்ணுமல் பொன்வாங்கிப் பெண் கொடுத்தால் பொன் கொடுத்து விவாகம பண்ணினால் இராஜதூஷணத்துக்கும் உட்பட்டுப் பிராமண்யத்துக்கும் புறம்பாகக்கடவாரென்று பண்ணின தர்மஸ்தாபன சமய பதரம்; இப்படிக்கு அசேஷ வித்ய மகாஜனங்கள் எழுத்து..."[2] என்றோர் ஏற்பாடுசெய்துகொண்டார்கள். இவ்வாறே மற்றைச் சமுதாயத்தாரும் தத்தம் சமுதாய வளர்ச்சிக்கு ஆவனவற்றைச் செய்துகொண்ட செய்தியை அப் பகுதியிற் பிற இடங்களிலுள்ள கல்வெட்டுக்களும் மாதேவிமங்கலத்துக் கல்வெட்டுக்களும் கூறுகின்றன. நாட்டரசியல் நன்கமைந்திருந்தாலன்றி மக்கட்குத் தம் சமுதாய வளர்ச்சிக்கண் கருத்துச் செல்லாது; இப் படைவீட்டரசியலில் மக்களில் ஒவ்வொரு சமுதாயத்தாரும் தத்தம் வளர்ச்சி குறித்து ஆவன செய்வதில் கருத்தைச் செலுத்தியதொன்றால் சம்புவராயர்களின் ஆட்சியது சால்பு இனிது விளங்குகிறது.

---

(1) Inti. Ant. Val. XIII பக். 132.

(2) S. I. Inscriptions Vol. I. No. 56. P. 83—4.

இச் சம்புவராயர்களின் ஆட்சி தொண்டைநாடு முற்றும் பரந்து சிறந்து நிற்பினும் இவர்கள் முடிவேந்தரான சோழ வேந்தர்களுக்கு அடங்கி அவர்வழி நின்றுஒழுகினர். சோழ வேந்தர்கள் வலிகுன்ற நேர்ந்தபோது இவர்கள் படைவேண்டிய வழி வாளுதவினர்; வினை வேண்டியவழி அறிவுதவினர். இவர்களுடைய அருஞ்செயலைப் பாராட்டிச் சோழவேந்தர்களும் இவர்கட்கு இனிய சிறப்புக்களைச் செய்தருளினர். இவர்களிற் பலர் குலோத்துங்கசோழச் சம்புவராயன், வீரநாராயணச் சம்புவராயன் எனப் பெயர் தாங்கியிருப்பதே இதற்குப் போதிய சான்று பகராநிற்கும்.

முன்பு படைவீட்டம்மனைப்பற்றிக் கூறியபோது அங்குள்ள கல்வெட்டுக்கள் அம்மையப்பேச்சுரம் என்ற ஒரு சிவன் கோயிலைக் காட்டுகின்றன என்பது கண்டோம். அப்பெயர், சம்புவராயருள் ஒருவனான அம்மையப்ப சம்புவராயனைக் குறிக்கிறது. அச் சிவன்கோயிலை அந்த அம்மையப்பசம்புவராயனோ அவன்மகனோ கட்டியிருக்கவேண்டும். அவன் வழி வந்தோருள், கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் இடையில் இராஜகம்பீரச் சம்புவராயன் என்பான் ஆட்சிசெய்தான். அவன் பெயரால்தான் படைவீட்டருகில் நிற்கும் மலை இராஜ கம்பீரன் மலையென்ற பெயர் பெறுவதாயிற்று. அப்பகுதியில் ஆரணியாற்றின் வடகரையில் உள்ள குன்றத்தூர்க்கும் இராஜ கம்பீரநல்லூர்[1] என்பது பெயர்.

இப் படைவீட்டைத் தலைநகராகக்கொண்டு ஆட்சிபுரிந்த சம்புவராயர்களுள் எதிரிலிசோழச் சம்புவராயன் என்பான் ஒருவன். அவன் சம்புகுலப்பெருமாளான இராஜகம்பீரன் வழிவந்தோனுவன். அவனுக்குத் துணைவராய் அவன் படைத் தலைவர்களாய் விக்கிரமசோழப் பேரரையன், அம்பலக்கூத்தனை தென்னுட்டரையன் எனப் பலர் இருந்தனர். அவருள் விக்கிரமசோழப் பேரரையன் தொண்டைநாட்டுக் களத்தூர்க் கோட்டத்திலுள்ள மதுராந்தகம் என்னும் ஊர்க்கு அண்மையிலுள்ள குன்றத்தூரில் இருந்துவந்தான். அம்பலக்கூத்தன் தென்பெண்ணையாற்றின் வடகரையான மலாடு என்ற இருங்கோளப்பாடி பனையூர் நாட்டு மலையனூர் என்னும் ஊரிலிருந்தான். இவனுடைய போர்வன்மையும் மனநன்மையும் சம்புவராயனுக்குப் பேருவகைதந்தன. அதனுல் சம்புவராயன் அவனை ஒரு படைத்தலைவனுக்கிச் செம்பூர்க்கோட்டத்து முக்காட்டுப்பட்டில் தங்கியிருக்குமாறு பணித்திருந்தான்.

---

(1) S. I. I. No. 74. பக். 105.

பேரரையனும் தென்னாட்டரையனும் சம்புவராயனுக்கு இரு கண்கள்போல் திகழ்ந்தனர். கண்ணிரண்டும் ஒன்றையே காணும் என்பதற்கேற்ப, இருவர் உள்ளங்களும் ஒரு பொருளிலே ஒன்றிநின்றன. தென்னாட்டரையனும் பேரரையனும் அந்நாட்டிற் பெண்மைநலத்தால் புகழ்பெற்றிருந்த வம்பு என்பவள்பால் உள்ளம் ஒன்றிநின்றனர். இருவரும் அவளை மணந்துகோடற்கு முயன்றனர். அவளைப்பெற்ற தந்தையும உடன்பிறந்தவரும் இருவரிடத்தும் ஒத்த பண்பும் செயலும் இருப்பதுகண்டு செய்வதுதெரியாது திகைப்புற்றனர். இருவருள் ஒருவரைத் தேர்ந்துகொள்ளும் உரிமையை அவள்பாலே விட்டொழித்தனர். இருவருடைய குணஞ்செயல்களையும் கண்டறியும் வாய்ப்பும் வம்புவுக்கு வழங்கப்பெற்றது.

முடிவில் ஒருநாள் வம்பு என்பவட்குத் தன்னுட்கருத்தைத் தெரிவிக்கவேண்டிய நிலையுண்டாயிற்று. அவளுடைய உள்ளத்தைத் தென்னாட்டரையன் தன் குணஞ்செயல்களாற் கவர்ந்துகொண்டான் என்பது புலனாயிற்று. பெற்றோரும் உற்றோரும் உடனிருப்ப வம்புவுக்கும் தென்னாட்டரையனுக்கும் திருமணம் நடந்தது. தென்னாட்டரையன் வாழ்க்கைத்துணைவியாய் வம்புவும் அவனது திருமனைசென்று சேர்ந்தாள்.

தென்னாட்டரையன் வம்புவை மணத்தற்குச்செய்த முயற்சியிடையே பேரரையனைப்பற்றிச் சில வடுவானவுரைகளை வழங்கியிருந்தான் என்றும், அவ்வாறு வடுக்காணும்வகையில் தன்பால் குற்றமொன்றும் இல்லையென்றும் பேரரையன் எண்ணினான். அவ்வெண்ணத்தினூடே அழுக்காற்றுத்தீயும் எழுவதாயிற்று. அதனால் தென்னாட்டரையனுக்கும் பேரரையனுக்கும் மனக்கடுப்புண்டாயிற்று. இடையிடையேயுண்டான அரசியல் நிகழ்ச்சிகள் சிலவற்றில் தென்னாட்டரையன் மேன்மையுற்றுச் சம்புவராயன்பால் சிறப்புக்கள் பெறுவானாயினன். இவ்வாற்றால் பேரரையன் உள்ளத்திற் பிறந்திருந்த கடுப்பு வளர்ந்து பகையாய் மூண்டது. நாள் செல்லச்செல்ல, தென்னாட்டரையனை ஒழித்தாலன்றித் தனக்கு மனவமைதி யெய்தாது என்னும் எய்

பேரரையன் எண்ணியது எண்ணியவாறு முடிக்கும் மனத்திட்பமுடையவன். அதனால், தன் மனத்துக்கு இயைந்த மறவாகளைக் கலந்து தன் கருத்தை முற்றுவிக்குமாறு பணித்து அதற்கு வேண்டுவன செய்துதந்தான். தென்னாட்டரையன் முக்காட்டுப்பட்டில் தானைத்தலைவனாய்ப் பாடிகாவல் புரிந்து வந்தான். அவனுக்குப பேரரையன் தன்பால் கறுவுகொண்டிருக்கிறான் என்ற செய்தி தெரியாது. பெண் விழைவால்

பெருந்தீமைகளைச் செய்தோர் வரலாறுகள் பல அறிந்திருந்தா னுயினும், பேரரையன் தான் அறிவு பேதுறுவது நன்றன்று என் பதை யுணர்ந்திலன். ஒருநாள் இரவு முக்காட்டுப்பட்டில் தென்னுட்டரையன் தனித்திருக்கும் செவ்விநோக்கிப் பேரரை யன் விடுத்த கொலைமறவர் வந்து அவனை வளைத்துக்கொண்ட னர். தென்னுட்டரையன் நெடுநேரம் அவரோடு கைகலந்து பொருதான். முடிவில் பேரரையனே தென்னுட்டரையனைக் கைப்பற்றித் தன் கைவாளால் எறிந்து கொன்றுவிட்டு ஓடிப் போனுன்.

தென்னுட்டரையன் கொலையுண்டு வீழக் கண்ட வம்பு ஓவெனக் கதறிப்புலம்பினுள். அருகிருந்த தானைமறவர்கள் வந்துகூடுமுன் பேரரையனுடைய கொலைமறவர்கள் ஓடிமறைந் தனர் வம்புவுக்குக் கையறவு பெரிதாயிற்று. கணவன் உடல்மேல் வீழ்ந்து புலம்பினுள். செய்தியறிந்ததும் அவளு டைய பெற்றேரும் உடன்பிறந்தோரும் வந்துசேர்ந்தனர். அவர்கள் எத்துணையோ சொல்லித்தேற்றியும் தேருளாயின வம்பு, அவன் உடலையெரித்த ஈமத்தீயிலேயே தானும்வீழ்ந்து உயிர்கொடுத்தாள.

தென்னுட்டரையனை யெரித்த ஈமத்தீயை வலம்வருகை யில், வம்பு, விக்கிரமசோழப் பேரரையன் மறவர் சிலருடன் போந்து தன் கணவனை வளைத்துக்கொன்ற திறத்தை விரிவாகச் சொல்லிப் புலம்பினுள். அப்போது அதனைக் கேட்டிருந்தவர் களில் தென்னுட்டரையன் தமயனும் ஒருவனுவான். அவன் தென்னுட்டரையன்போல் பிறிதோரிடத்தில் பாடிகாவற் றலைவ னுய் இருந்தான். அவன் பெயர் இராமநம்பி யான இருங்கோ ளப்பாடி நாடாள்வான் என்பது தன் தம்பியைக் கொன்ற பேரரையன்பால் இருங்கோளப்பாடி நாடாள்வானுக்குப் பெரிய பகைமையுண்டாயிற்று. பழிவாங்கும் மனப்பான்மை அவன் உள்ளத்தே குடிகொண்டது.

நாடாள்வான் பேரரையனைவிட வினைத்திட்பமும் அதற் கேற்ற மனத்திட்பமும் உடையன். கொலைமறவர் பலரைச் செலுத்திப் பேரரையனைப்பற்றிக் கொலைபுரியுமாறு பணித் தான். அவர்கள் பேரரையனைத் தேடலுற்றனர். பேரரையன் தான்செய்த தவற்றை யுணர்ந்து மறைந்துகொண்டான். அச் செயலால், ஒரு குற்றமும் செய்யாத அவன் துணைவர் பலர் மாண்டனர்; உறவினர் பலர் துன்புற்றனர்; அவர்தம் வீடுகள் தீக்கிரையாயின; சுருங்கச்சொன்னுல், பேரரையனுடைய களத் தூர்க்கோட்ட முழுதும் நாடாள்வான் விடுத்த மலாடருடைய

பகைப்புயல் வளைத்து உயிர்ச்சூறை யாடத் தொடங்கிற்று. இதனை மறைந்திருந்துகண்ட விக்கிரமசோழப் பேரரையன் இனித் தான் உய்தற்கு வழியில்லையென்பதை யுணர்ந்தான். நேரே படைவீடுசென்று தனக்கும் நாடாள்வானுக்கும் முதலி யான எதிரிலிசோழச்சம்புவராயனைக் கண்டு அவன்பால் நடந் தது முற்றும் தெரிவித்து உய்திபெறுவதெனத் துணிந்தான். இரவோடிரவாய்ப் படைவீட்டையடைந்து எதிரிலி சோழச் சம்புவராயனிடம் உண்மையை உள்ளவாறு உரைத்து உய்தி நல்குமாறு வேண்டினான்.

சோழச் சம்புவராயனுக்குத் தென்னாட்டரையன் கொலையுண்டிறந்ததுபற்றி ஒருபால் வருத்தமும், பேரரையன் உண்மையை ஒளியாமல் உரைத்ததுபற்றி ஒருபால் உவப்பும் உண்டாயின. பேரரையன் செய்த தீச்செயல்பற்றி இருங்கோ ளப்பாடி நாடாள்வான் மேற்கொண்ட செயலை எண்ணினான். தன் தம்பியைக் கொன்றவன் சிறப்புடைய தானைத்தலைவனாக இருத்தலால் அவன் செயலை வேறுவகையில் ஆராய்ந்து முறை செய்வது உள்ளத்தெழுந்த சினத்தீக்குப் போதிய இரையாகா தென எண்ணி, நாடாள்வான் பேரரையனைப் பெருந்தொல் லைக்கு உள்ளாக்கினான் என்பதையும் எண்ணினான்; அவனைத் தான் வெறுப்பதிலும் பயனில்லையெனச் சம்புவராயன் தெளிந் தான் நாட்டில் சிறந்த சான்றோர்களை வருவித்துச் செயல் வகை யாதெனச் சூழ்ந்தான்.

முடிவில் சான்றோரும் தானுமாய் இருந்து இருங்கோளப் பாடி நாடாள்வானை வருவித்தான் இருவர் கருத்துக்களையும சான்றோர் கேட்டறிந்தனர். இருவரும் உண்மையைச் சிறிதும் ஒளியாமல உரைத்தது கண்டனர் சான்றோர். முடிவில் சம்பு வராயன் சான்றோர் சார்பாகப் பின்வருமாறு கூறலுற்று, “பேரரையனும் நாடாள்வானும் நம் அரசியலுக்குப்பெருந் துணைவர்கள். இவர்களிடையே போரும் பூசலும்உண்டாயின், வேற்றுநாட்டுப் பகைவர்க்கு நகையும் எளிமையும் உண்டாக் கும். விரும்பியவண்ணம் பேரரையனைக் கொல்வதனால், நாடாள்வான், தன் தம்பி தென்னாட்டரையனை மீளப் பெறப் போவதில்லை. அதனால் அவனதுயிர் ஒருவகை ஆக்கமும் பெறப போவதில்லை. மறத்திற்கும் அறமேதுணை. பேரரையன் செய்த மறவினைக்குக் கழுவாய் அறஞ் செய்வதேயாகும். அஃதா வது, நாடாள்வான் பேரரையன்பால் கொண்ட சினத்தைத் தணிக்கவேண்டி அவனைப் பகைப்பதைக் கைவிடவேண்டும் என்பது தெளிவாக விளங்குகிறது. பேரரையனால் உண்டான கொலைவினை ஒன்றென்றால், நாடாள்வானால் பல உண்டாகியிருக்

கின்றன. ஆகவே இருவரும் தங்கள் தங்கள் செயல்குறித்துக் கழுவாய் செய்யவேண்டும்,'' என்று தீர்ப்பளித்தனன்.

மேலும், சம்புவராயன், தான் உரைத்த தீர்ப்பு இருதிறத்தாருக்கும் சான்றோராகிய நாட்டவர்க்கும் மகிழ்ச்சி தருவதைக் கண்டுகொண்டு, விக்கிரமசோழப் பேரரையனை முதற்கண் நோக்கி, “நீ உன்னாற் கொலையுண்ட தென்னாட்டரையன் பொருட்டும் அவன் மனைவி வம்பு என்பாள்பொருட்டும் இரண்டு நுந்தாவிளக்கு வைத்தல்வேண்டும்,'' என்று பணித்து, இருங்கோளப்பாடி நாடாள்வானை நோக்கி, “நீயும் இவ்வாறே நுந்தா விளக்கு இரண்டு வைக்கவேண்டும்,'' என்று ஆணையிட்டான்.

இதுகேட்ட அறங்கூறவையத்தார், “எங்கள் வேந்தனை சம்புகுலப்பெருமாள் பெயராலும் எதிரிலி; போர்க்குரிய மறத்துறையிலும் எதிரிலி; அரசியற்குரிய அறத்துறையிலும் எதிரிலி எனப் பாராட்டி மகிழ்ந்தனர். தானைத்தலைவர் இருவரும் முகமலர்ச்சியோடு அத்தண்டத்தை யேற்றனர்.

முடிவாக, எதிரிலிசோழச் சம்புவராயன், இருவரையும் ஒருங்கு நிறுத்தி, “இவ்விளக்கிடுமட்டில் அமையாது; மற்றொரு தண்டம் உளது; அதனையே நீங்கள் மனங்கலந்து மேற்கொள்ள வேண்டும்,'' என மொழிந்தான். அவையினரனைவரும வியப்பும் பெருமிதமும்கொண்ட உள்ளத்தராய்ச் சம்புவராயனை நோக்கினர். தன் மலர்ந்த முகத்தில் சிறிது விருவிருப்புத் தோன்ற, இருவரையும் உருத்துநோக்கி, சம்புவராயன் தன் மடித்த வாயைத் திறந்து, “நீங்கள் இருவரும் இனி ஒருவர்மேலொருவர் பகை கொள்வதில்லையென உடன்பட்டு உறுதி தரவேண்டும்; நீங்கள் செய்யும் விளக்கிடு தென்னாட்டரையன் அவன் மனைவி ஆகிய இருவருயிரும் நலம் எய்துதற்காயிற்று; அத்தென்னாட்டரையன் இருந்து இந்நாட்டு அரசியலுக்குச் செய்த ஆக்கத்தை நீங்கள் இருவரும் செய்யத்தக்கவ ராகின்றீர்கள். அந்த ஆக்கம் உங்கள் இருவருடைய மனவொருமையால்தான் உண்டாகும். ஆதலால் நீங்கள் இருவரும் ஒருவரையொருவர் பகை தொடர்வதில்லையென உறுதிதருக,'' எனக் கட்டுரைத தான். அது கேட்டதும், அரசவையில் உடன்பாட் டாரவாரம் உண்டாயிற்று. இருவரும் பல்லோரும் காண உறுதி மொழிந்தனர்.

இனி, சான்றோருடன் கூடியிருந்து ஆராய்ந்து, விளக்கீட்டினைத் திருக்கழுக்குன்ற முடையார் கோயிலில் வைப்பதென முடிவு செய்தனர். இருவரும் அதற்கு உடன்பட்டனர்.

இருவருள் பேரரையனே முதற்கண் குற்றம் செய்து பின்னர் நாடாள்வானால் அலைப்புண்டு சம்புவராயன்பால் உய்தி நாடினவனாதலால், அவனது உடன்பாடு, தம்பியான தென்னாட்டரையனுக்கும் அவன் மனைவி வம்புவுக்கும் நன்றுண்டாக விளக்கெரிப்பதற்கு காடாள்வான் நல்கிய உடன்பாட்டினும் சிறந்ததெனக்கொண்டு, அதனையே கல்லில் முதலில் வெட்ட வேண்டும் என்று ஆணை தந்தனர். அக்கல்வெட்டு, "இருங்கோளப்பாடி நாடாள்வான் இரண்டு விளக்குக்கும் சம்மதித்து இருவரும் தங்களில் உபயம்வந்து உடையார் திருக்கழுக்குன்றமுடையபர் திருக்கோயிலிலே வைப்பதென்று இருங்கோளப்பாடி நாடாள்வான் சொல்லி நானும் என் வமிசத்தாரும் இப்பகை தொடரவும் சொல்லவும் பெறுதோமாகச் சம்மதித்து இத்தென்னாட்டரையனுக்கும் அவன் அகமுடையாளுக்குமாக வைத்த திருநுந்தாவிளக்கு இரண்டுக்கும்விட்ட சாவா மூவாப் பேராடு தொண்ணூறும் பசு முப்பத்தொன்றும் இத்தேவர் கோயிலிலேவிட்டுச் சிலா லேகைபண்ணிக் கொடுத்தேன்; இத்தன்மம் அழியாமற் காப்பான் அடி என் தலைமேலன,"* என்று கூறுகிறது.

## தமிழ்ச் சொல்

[கா. கணபதி]

அறிவுமிகும் அன்புமிகும் ஆற்றல்மிகும் சொல்லாம்
　　அமைதியுடன் அருள்கலந்து ஆர்வம்மிகும் சொல்லாம்
செறிவுமிகும் செம்மைமிகும் செப்பும்நல்ல சொல்லாம்
　　சிந்தைகளி கூரவரும் சீர்மைமிகு சொல்லாம்
நறியமலர் போலமணம் நாளுமிகும் சொல்லாம்
　　நயவுரைகள் பலவாக்கும் நாகரிகச் சொல்லாம்
வறியவரும் வள்ளல்களாய் வாழவருள் சொல்லாம்
　　வண்மைமிகு தண்டமிழ்ச்சொல் வாய்மையுறுஞ் சொல்லே.

* Annual Report on South Indian Epigraphy for 1932—33. Part II. Para 25. No. 162 of 1932—33.

# போமோ துன்பம்?*

[புதுவை, முதுகண்ணன்]

குமுறுகின்ற கருங்கடலே! உனக்கு வாய்ந்த
குறைதன்னைக் கூறுகின்றேன்; சற்றுக் கேளாய்!
குமரியைமுன் உருவழித்த கொடுமை உன்னிக்
குலைகின்றாய்! அம்மட்டில் நின்றாய் இல்லை
தமதுமனை மக்களெலாம் பிரிந்து செல்வம்
சார்ந்துபிற நாட்டிற்குச் சென்றோர் தம்மை
அமையாத தீவினையால் அடக்கிக் கொண்டாய்!
அழியாத பழிசுமந்தாய் போமோ துன்பம்? க

பொருளீட்டிப் பெருவாழ்வை நடத்த எண்ணிப்
பொலிவழியத் தந்தலைவி நீங்கிச் சென்ற
பெரும்பாலோர் வாழ்வைநீ ஆழ்த்திக் கொண்டாய்
பேதுற்றே அவர்வரவை நோக்கி நாளும்
வரும்வழியில் விழிவைத்துக் காணு தேங்கி
வருந்தியஅத் தலைவியர்கள் இட்ட சாபம்
பொருந்தியதால் தவிக்கின்றாய்! ஒய்வில் லாமல்
போய்ப்போய்நீ கரைவந்தால் போமோ துன்பம்? உ

கரையினிலே சிறுமியர்கள் வண்டல் கோலி
களிப்புடனே விளையாடும் போதுவந்து
திரைக்கரத்தால் அழித்தோடிச் சென்ற தாலே
சிறுமியர்கள் மனம்நொந்து வைத சொல்லை
குரைகடலே நீநினைந்து குலைகின் றாயோ?
குடும்பமெனும் பெருஞ்சுமையை இதற்குள் ளேற்றுப்
பெருந்துயரில் விழவேண்டாம் என்றா யேனும்
பெரிதுனது வினைதீதே! போமோ துன்பம்? ௩

புதுப்புலன்கள் கண்டறிய வேண்டி நாளும்
பொய்ம்மை மிகும் உனைநம்பி அறிஞர் பல்லோர்
இதமுடனே கப்பலிலே செல்லுங் காலை
எறிதிரைசூழ் கொடுங் கடலே! நீயோ அன்றோர்
புதுமைமிகும் குறிப்பெல்லாம் அடக்கிக் கொண்டு
பொல்லாங்கு செய்தனையே! அந்தோ! அந்தோ!!
முதிரறிவின் திறன்கண்டோர் ஆவி உன்னை
முனைப்படங்கச் செய்யாதோ? துன்பம் போமோ? ச

---

குறிப்பு. 'விக்தோர் உய்கோ'வின் (Victor Hugo) 'ஓசெயானோனோக்' (Oceanonox) என்ற பிரெஞ்சுப் பாடலின் தழுவல்.

# 'பாணர் கைவழி' மதிப்புரை

## (மறுப்பு)

[புலவர், ஞா. தேவநேயப் பாவாணர்.]

[16—7—50-இல் வெளிவந்த 'இந்து'ச் செய்தித்தாளில் 'பாணர் கைவழி'யைப்பற்றித் திருவாளர் P. சாம்பமூர்த்தி அவர்கள் வரைந்துள்ள மதிப்புரையைப் பற்றியது.]

திருவாளர் P. சம்பந்தமூர்த்தி அவர்கள் பாணர் கைவழியைப் பற்றிய தம் மதிப்புரையைத் தொடங்கு முன்னரே, காலஞ் சென்ற மறைத்திரு விபுலானந்த அடிகள் இயற்றிய யாழ்நூல் மதிக்கொணுக் களஞ்சியமென்றும், அதுபற்றி இற்றையுலகம் அவர்கட்கு மிகக் கடப்பட்டுள்ளதென்றும், அவர்கட்குப் புகழ் மாலை சூட்டுகின்றார்கள். இதற்குக் காரணம், அந்நூலின் போலி முடிபுகளெல்லாம் மதிப்புரையாளரின் விருப்பத்திற்கிசைந் திருத்தலே.

தமிழரென்று தம்மைச் சொல்லிக்கொண்டு ஆராய்ச்சியின் பேரால் தமிழுக்குப் பெருவசை விளைத்து ஆரிய ஏமாற்றத் திற்கு அரண் செய்தவருள் விபுலானந்த அடிகளும் ஒருவர் என்பது, இசையியல்புந் தமிழிசைத்தரமும் அறியாத பலர்க்குத் தெரியாதுபோயினும், அவற்றையறிந்த ஒரு சிலர்க்கேனும் தெரியாததன்று. அவர்கள் உடல் தாங்கியிருந்தபோதே 'குரல் மத்திமம்' என்னும் அவர்கள் கொள்கையைக் கண்டித்துக் 'குரல் சட்சமே' என்று 'செல்வி'யில் ஒரு கட்டுரை வரைந்தேன். அதற்கு அவர்கள் ஓர் இளைஞர் பெயரால் மறுப்பெழுதினார்கள். யான் அம்மறுப்பிற்கொரு மறுப்பு வரைந்தேன். அதோடு நின்றது அவர்கள் தருக்கு. 'முதற்கோணல் முற்றுங்கோணல்' ஆதலின் அடிப்படைக் கொள்கையே தவறாயிருக்கும்போது, அவர்கள் நூன்முடிபு எத்தகையதாயிருக்கும்? ஒரு மூலை முடங்கியில் கூட்டங்கூட்டி, எதிர்ப்பாளரைச் செலவிற்குப் பணங்கொடுத்து வரவழைக்காது, இசைத்தமிழ் மரபறியாதார் முன்னிலையில், அவர்கள் தங்கள் யாழ்நூலை அரங்கேற்றியதாலும்; கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் அதனை வெளியிட்டதாலும்; அது புரையற்ற நூலாகப் போற்றப்பட்டுவிடாது. துவராடையணிந்தவர் நூலெல்லாம் துகளற்றன என்னும் கொள்கை எம்மனோர்க் கில்லை.

இனி, மதிப்புரையாளரின் உடம்படாக் கூற்றுக்களை யெல்லாம் ஒவ்வொன்றாகக்கூறி மறுப்பாம்.

கூற்றுக்கள் யாவும் இயன்றவரை சுருங்கிய அளவிற கூறப் பெறும்.

1. "8-ஆம் நூற்றாண்டிற்கும் 13-ஆம் நூற்றாண்டிற்கும் இடையில் வீணை என்னும் பெயர் யாழிசையோடு கூடிய மிடற்றிசையையே குறித்ததாயின், வீணை வாசிப்பின் செயல்முறையும் அது பற்றிய இடக்கை வலக்கைத் தொழில் வேறுபாடுகளைக் குறிக்கும் மிகப் பலவாகிய குறியீடுகளும் பொய்யாய்ப்போம்."

இப்போது வீணையென வழங்கும் கருவி 8-ஆம் நூற்றாண்டிற்கும் 13-ஆம் நூற்றாண்டிற்கும் இடையில் தமிழ்நாட்டிலிருக்கத்தான் செய்தது. ஆனால், அது தொன்று தொட்ட முறைப்படி யாழ் என்னும் தமிழ்ப் பெயராலும் சிறுபான்மை வீணை என்னும் வடமொழிப் பெயராலும் அழைக்கப்பெற்றது. இவ்வடமொழிப் பெயர் கடைச்சங்கக் கால இறுதியில்தான் தமிழ் நாட்டிற் புகுத்தப்பட்டது. அதற்குமுன் வடசொற்கள் தமிழில் மிக அருகியே வழங்கின. வடசொல்லே கலவாத தனித்தமிழ் வழங்கிய காலமுமுண்டு. அது ஆரியர் தென்னாட்டிற்கு வருமுன்னதாகும்.

வீணை என்னும் பெயர் தனித்து வரும்போது, செங்கோட்டி யாழையே அல்லது பிற யாழையே குறிக்கும்.

"மங்கல மிழப்ப வீணை மண்மிசை"

என்று இளங்கோவடிகளும,

"மாசில் வீணையும் மாலை மதியமும்"

என்று திருநாவுக்கரசரும்,

"குழலினோசை வீணை மொந்தை கொட்ட முழவதிர"

என்று திருஞான சம்பந்தரும், கூறுதல் காண்க.

சிந்தாமணியில், கந்தருவதத்தையா ரிலம்பகத்தில், யாழ் என்னும் பெயரும் வீணை என்னும் பெயரும் ஒருபொருட்கிளவியாய் ஒன்றுக்கொன்று பதிலாக வருகின்றன. தேவாரத்தில், யாழ் என்னும் பெயர் வருமிடத்தில் வீணை என்னும் பெயரும் வீணை என்னும் பெயர் வருமிடத்தில் யாழ் என்னும் பெயரும் விலக்கப்பட்டன. நாரதயாழ் நாரதவீணை என ஒரே கருவி குறித்து இருபெயர் வழக்குமுள்ளது.

வீணை என்னும் பெயர், யாழ் என்னும் பெயரோடு கூடி வருமிடத்தில் மட்டும், தனி மிடற்றிசையையோ யாழிசையொடு கூடிய மிடற்றிசையையோ குறிக்கும். இதற்குச் சிந்தா

மணி மூலத்தினின்றும் உரையினின்றும் 'பாணர் கைவழி'யாசிரிய ரால் போதிய சான்றுகள் தரப்பட்டுள்ளன.

யாழ் என்னும் சொல்லும், பொதுப்பட்ட இசையையும் இசைப்பகுதியான பண்ணையும் இசைக்கருவியான யாழையும், இடத்திற்கேற்பக் குறிக்கும்.

> " செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> (அகத்திணையியல், 18)
>
> " துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே "
> (களவியல், 2)

என்று தொல்காப்பியரும்,

> "யாழோர் மணவினைக் கொத்தனள் என்றே "
> (மணிமேகலை, 22 :—86)

என்று சீத்தலைச் சாத்தனாரும், யாழ் என்னும் சொல்லை இசை யென்னும் பொருளில் ஆண்டனர்.

> " பாலை குறிஞ்சி மருதஞ்செவ் வழியென
> நால்வகை யாழா நாற்பெரும் பண்ணே "

என்று பிங்கல முனிவர் அச்சொல்லைப் 'பண்' என்னும் பொரு ளில் ஆண்டனர்.

நரப்புக் கருவியைக் குறித்து அச்சொல் சங்கநூல்களிற் பயின்று வருதலானும், அற்றை உலக வழக்கிலும் அதற்கு அதுவே பொருளாதலானும், அதற்குச் சான்றுகள் வேண்டுவ தில்லை.

ஆகவே, 8-ஆம் நூற்றாண்டிற்கும் 13-ஆம் நூற்றாண்டிற் கும் இடையில், இக்காலத்து வீணையைப் பெரிதும் ஒத்த செங் கோட்டியாழ் இருந்ததென்றும்; அதற்கு வீணையென்னும் பெயரும் சிறுபான்மை வழங்கிற்றென்றும்; அப்பெயர் ஆகு பெயராக மிடற்றிசையையும் உணர்த்தினதினால், இருபெயரும் இணைந்துவரும் இடைக்கால நூற்பகுதிகட்கு உரையாசிரியர் உரை வரைந்தபோது, அவற்றுள் தென்சொல்லைக் கருவிப் பெயராகவும் வடசொல்லை மிடற்றிசை குறித்ததாகவுங் கொண் டனர் என்றும்; செங்கோட்டியாழினும் வேறாகச் சிறந்ததொரு நரப்புக் கருவி இந்தியாவிலேயே இதுவரையிருந்ததில்லை யென் றும்; யாழ் வீணை என்னும் இரு சொற்களும் ஒரு பொருட் கிளவியாய் ஒரே கருவியையே குறிக்குமென்றும்; இதனால் வீணைவாசிப்புச் செயன்முறையும் அதுபற்றிய குறியீடுகளும் பொய்யாய்ப்போகா என்றும்; அறிந்துகொள்க.

2. "யாழ் வடிவைப்பற்றி விபுலானந்த அடிகள் ஒரு வகையாகவும், திரு. வரகுணபாண்டியனார் மற்றொரு வகையாகவும், வரைந்துள்ளனர்."

செங்கோட்டி யாழைப்பற்றி அடிகள் வரைந்து காட்டியுள்ள படமே உண்மையானதாயின், வறுவாய், கவைக்கடை, உந்தி, ஒற்றுறுப்பு, தந்திரிகரம், மாடகம், தகைப்பு, வணர் முதலிய உறுப்புக்களெல்லாம் எங்கே? அவற்றைக் கூறியுள்ள இளங்கோவடிகளும் அடியார்க்கு நல்லாரும் பித்தரோ? அன்றிப் பொய்யரோ?

மறைதிரு. விபுலானந்த அடிகள் தட அறியாதவர்கள் என்பது முன்னரே கூறப்பட்டது. அதையே உண்மையென்று கடைப்பிடிக்க.

3. "உருவச்சிலைச் சான்றை நோக்குவோமாயின், மேல் நாட்டிலும் கீழ்நாட்டிலும் பண்டைக் காலத்திலும் இடைக் காலத்திலுமிருந்த யாழ் வில்யா ழொத்திருந்ததேயன்றி வீணை யொத்திருந்ததன்று என்பது அறியப்படும். இவ்வியல்பிற்குத் தென்னாடு விலக்கன்று."

பண்டைத் தமிழர் இற்றைத தமிழர் போன்றவரல்லர். முன்னவர் நாகரிகத்திலும் அறிவிலும் நாயகம் பெற்றவர்; பின்னவர் அடிமைத்தனத்திலும் பேதைமையிலும் பெயர்பெற்றவர்.

'செய்கலைக்கரசி செய்யுள்' (Poetry is the Queen of Arts) என்பர் சீரியோர். பண்டைத் தமிழர் செய்யுட் கலையில் ஒப்புயர்வற்றவர் என்பது உலகறிந்த வுண்மை. வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா என்னும் பாகுபாடு தமிழுக்கே சிறந்தது அவற்றுள்ளும், வெண்பாவும் கலிப்பாவும் போன்ற யாப்புவகைகளை வேறெந்நாட்டாரும் கனவிலும் கருதியிருக்க முடியாது. யாப்பிலக்கணத்தை யுள்ளிட்ட பொருளிலக்கணமோ மொழியிலக்கணத்தின் கொடுமுடியாய்த் தமிழரைத் தனிவகுப்பினராகக் காட்டுவது. இத்தகைய இலக்கணத்தாற் பொலிவு பெற்ற இயற்றமிழோடமையாது, இசைநாடகக் கலைகளையும் அதனொடு கூட்டி முத்தமிழ் என வழங்கியதொன்றே, பண்டைத் தமிழரின் இசைப்புலமை யேற்றத்தையும் நாடகப்புலமை நாயகத்தையும் மொழித்திற முதன்மையையும் மதிநுட்ப மாண்பையும் ஐயந்திரிபற விளக்கப் போதியசான்றாம். இத்தகை மொழிவளர்ச்சிக்கேற்ப, வாழ்க்கைமுறை ஒழுக்கம் தொழில் திறம் பொறிவினை முதலிய பிறநாகரிகத் துறைகளிலும் பண்டைத் தமிழர் ஏற்றம் பெற்றிருந்தனர். சிறப்பாக, செய்யுட்கலையில் சீரிய புலமைவாய்ந்திருந்த அவர், அதனொடு நெருங்

கிய தொடர்புள்ள இசைக்கலையிலும் ஏற்றம் பெற்றிருந்தனர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

பழந்தமிழ் இலக்கியம் பலவகையில் இறந்து பட்டமையையும், தற்காலத்தமிழன் குலப்பிரிவினையால் தாழ்வுண்டிருப்பதையும், இந்திய வரலாறு தலைகீழாய் எழுதப்பட்டிருப்பதையும், பயன்படுத்திக்கொண்டு, பண்டைத்தமிழன் கண்ட யாழ் வில்யாழே என்பது நடுநிலை திறம்பிய நலமில் கூற்றும்

4. "திருஞான சம்பந்தர் பாடிய யாழ்முரிப்பண்ணைத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் தம் யாழிலிட்டுக் காட்டமுடியவில்லை. அவ்யாழ் வீணையாயிருந்திருந்தால் அங்ஙனம் தவறியிருக்க முடியாது. ஏனெனின், மிடற்றிசையின் எத்திற நுணுக்கத்தையும் வீணையிற்காட்ட இயலும்; ஆதலால், 9-ஆம் நூற்றாண்டுவரை தமிழகத்திலிருந்தது வில்யாழ்வகையே அதன்பின் (வடநாட்டினின்று) வீணை வந்தது. அது வந்ததும் யாழ் நெகிழவிடப்பட்டது."

திருநீலகண்ட யாழ்ப்பாணர், யாழ்முரிப் பண்ணைத் தம் யாழிலிட்டுக் காட்ட முடியாமைக்கு, முதலாவது, அவரது அளவிறந்த சிவபத்தியே காரணம். தருமபுரத்திலுள்ள அவருடைய உறவினர், அவர் திருஞானசம்பந்தரின் திருப்பதிக இசையை யாழ்ப்படுத்தி வந்த திறனைப் புகழ்ந்தபோது, அவர் அதற்கு மிக வருந்தி, யாழிலிட்டுக்காட்ட முடியாதவாறு திருப்பதிகம் பாடும்படி தாமே திருஞானசம்பந்தரை வேண்டினார். இதனால், யாழிலிட்டுக்காட்ட முடியாத பெருமை திருப்பதிக இசைக்கிருத்தல் வேண்டுமென்று அவர் பேரவாக் கொண்டமை புலனாகும். இத்தகைப் பத்திநோக்குடையவர் எங்ஙனம் தம் திறமையை அன்று காட்டியிருக்க முடியும்? அவர் காட்ட முயன்றிருப்பினும், அவரது அச்சமனப்பான்மை எங்ஙனம் இடந்தந்திருக்கும்?

இரண்டாவது, யாழில்மட்டுமன்றி வேறெவர் மிடற்றிலும் இசைக்க முடியாதவாறு, இறைவனருளால் இறும்பூதுச் செயலாக யாழ்முரிப்பண்ணைத் திருஞானசம்பந்தர் பாடினாரென்று, சேக்கிழார் மிகத்தெளிவாகக் கூறுகின்றார். வேறெவர் மிடற்றிற்கும் இயலாத இசை யாழுக்குமட்டும் எங்ஙனம் இயன்றிருக்கும்? இதனால், யாழ்முரிப்பண்ணைப் பாணர் யாழிலிட்டுக் காட்டமுடியாமை அவர் யாழ் வில்யாழொத்தது என்னும் போலியூகிப்பிற் கேதுவாகாமை பெறப்படும்.

மேற்காட்டிய காரணங்களின் உண்மையைப் படிப்போர் அறிதற்கு, அந்நிகழ்ச்சியைக் கூறும் பெரியபுராணச் செய்யுட்களை ஈண்டு காட்டுகின்றேன்.

"தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமாம்
அதனாற் சார
வருமவர்தஞ் சுற்றத்தார் வந்தெதிர்கொண் டடிவணங்கி
வாழ்த்தக் கண்டு
பெருமையுடைப் பெரும்பாணர் அவர்க்குரைப்பார் பிள்ளையார்
அருளிச் செய்த
அருமையுடைப் பதிகந்தாம் யாழினாற் பயிற்றும்பே
றருளிச் செய்தார்."

"கிளைஞருமற் றதுகேட்டுக் கெழுவுதிருப் பதிகத்திற்
கிளர்ந்த ஓசை
அளவுபெறக் கருவியில்நீர் அமைத்தியற்று மதனாலே
அகில மெல்லாம்
வளர இசை நிகழ்வதென விளம்புதலும் வளம்புகலி
மன்னர் பாதம்
உளம்நடுங்கிப் பணிந்துதிரு நீலகண்டப் பெரும்பாணர்
உணர்த்து கின்றார்."

"அலகில்திருப் பதிகஇசை அளவுபடா வகைஇவர்கள்
அன்றி யேயும்
உலகிலுளோ ருந்தெளிந்தங் குண்மையினை அறிந்துய்ய
உணர்த்தும் பண்பால்
பலர்புகழுந் திருப்பதிகம் பாடியரு ளப்பெற்றால்
பண்பு நீடி
இலதுமிசை யாழின்கண் அடங்காமை யான்காட்டப்
பெறுவன் என்றார்."

"வேதநெறி வளர்ப்பவரும் விடையவர்முன் தொழுதுதிருப்
பதிகத் தன்மை
பூதலத்தோர் கண்டத்தும் கலத்தினிலும் நிலத்துநூல்
புகன்ற பேத
நாதஇசை முயற்சிகளால் அடங்காத வகைகாட்ட
நாட்டு கின்றார்
மாதர்மடப் பிடிபாடி வணங்கினார் வானவரும்
வணங்கி ஏத்த."

"வண்புகலி வேதியனார் மாதர்மடப் பிடிஎடுத்து
வனப்பிற் பாடிப்
பண்பயிலுந் திருக்கடைக்காப் புச்சாத்த அணைந்துபெரும்
பாண னார்தாம்
நண்புடையாழ்க் கருவியினில் முன்புபோல் கைக்கொண்டு
நடத்தப் புக்கார்க்
கெண்பெருகும் அப்பதிகத் திசைநரம்பில் இடஅடங்கிற்
றில்லை யன்றே."

(தொடரும்)

# தமிழ் நெடுங்கணக்கு - பெயரும் எண்ணும்

[இராவ்சாகிப், சைவப்புலவர்,
டாக்டர், தி. இரா. அண்ணுமலைப்பிள்ளை,
L.C.P.S., L.M.S.S.A. Lond.]

(சிலம்பு—உச, பரல்—கo ; ப. சசகு தொடர்ச்சி)

தமிழ் நெடுங்கணக்கெழுத்துக்கள் ஒவ்வொன்றும், தாங் குறிக்கும் உள்ளீடான மறை பொருட்கேற்ப, தத்தம் வடிவங் களை யடைந்துள்ளன. இதை, மேற்கூறிய கட்டுரைப் பகுதி களில், ஒருவாறு தொகுத்துக் கூறியுள்ளோம். இனி, இக் குறிப்புக்கள், விரிந்த முறையில், பல தலைப்பின்கீழ் உறுதிப் படுத்தப்படும். இவ்வுரை, ஆராய்ச்சி முறையில் எழுதப்பட்ட தொன்ருகலின், அதிற் பொருட்குற்றம் காணப்படுவது இயல்பே யாகும் ; அவைகளைக் களைந்து குணத்தையே நாடும்படி, இதைப் படிப்பவர்களைப் பன்முறை பணிந்து வேண்டுகின்ருேம்.

## தமிழ் நெடுங்கணக்கு

தமிழ் நெடுங்கணக்கு என்ருல் என்னை ? 'நெடுங்கணக்கு' என்னும் பெயர் வருவதற்குக் காரணமும் உளதோ? இதைப் பற்றிச் சிந்திப்பது முறைமையேயாகும். நம் நாட்டில், சிற்றூர் களில், அண்ணுவியார், திண்ணைப் பள்ளிக்கூடங்களில், இளஞ் சிருர்க்கு அரிச்சுவடி தொடங்கி, பாடங் கற்பிக்கும் பண்டைய முறையைக் காண்கிருேம். ஆனல், இன்றைய புதுமுறைப் பாடசாலைகளில், பள்ளிப்பிள்ளைகள், போலிச் சுயமரியாதை போர்த்து, ஆசிரியருக்கு வணக்கங்கூடச் செய்யாமல், மொழிக்கு முதலில் வாரா எழுத்துக்களில் ஒன்ருகிய டகரத்தை முதலாகவுடைய "டமாரம்" என்னும் வெற்ருெலி கிளப்பு வது எத்தனை வேற்றுமை? கேடென்ன விளையுமோ அறியோம்.

பண்டைநாட்களில், மாணவர்களுக்கு அரிச்சுவடி தொடங் குவதே ஒரு நற்சடங்காய்ப் பெற்ருேர் நடத்துவர். பனைஓலையை ஒழுங்குபடுத்தி மஞ்சள் தடவி, இறைவனை நினைந்து, தூபங் காட்டி, எழுத்தாணிகொண்டு, ஆசிரியர் நல்வாழ்த்துக் கூறி, மாணவன் கையைப்பிடித்து, அகர வரிசையை எழுதிக்காட்டி, திருக்கோயிலுக்குப் பள்ளிமாணவர் யாவரும் பெற்ருேர் உள் படச் சென்று, ஞானுசிரிய மூர்த்தியை வணங்கிவருவது நமது மரபேயாகும். ஓலைச்சுவடிகளில் எழுத்துக்களை எழுதுவது நம் நாட்டில் மட்டுமல்ல ; இத்தாலியா, கிரீசு, எகிப்து முதலிய நாடு களிலும், அக்காலத்தில் இருந்து வந்ததென்பது வரலாறு. தற்

காலத்தில் யாமெழுதும் காகிதம் (Paper) முதன்முதலில் Papyrus (Latin), Papuros (Greek) என்னும் ஒருவகைச் செடியினின்று உண்டாக்கப்பட்டதென்பது யாவரும் அறிந்ததே யாகும். தமிழ்நாட்டில் ஓலையில் எழுதும் பழக்கம் இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்குக் குறைந்ததல்லவென்பது சங்கநூல்களினின்று நன்கு விளங்கும். பனைஓலையை, இரண்டு மூன்று அடி நீளத்திலும், இரண்டு அங்குல அகலத்திலும் வகைப்படுத்தி, ஓலையின் மத்தியில் வட்டத்துவாரம் போட்டு, மஞ்சட் கயிற்றிறைக் கட்டி, இடது பக்கத்திலிருந்து வலது பக்கமாயெழுதி, ஏடு தொடங்குவார்கள். முதல் ஏட்டில், முன் பக்கத்தில் பன்னிரண்டு உயிரெழுத்துக்களும் அகரத்திற்றொடங்கி ஆய்தத்தில் முடியும்; அதன் பின்பக்கத்தில் மெய்யெழுத்துக்கள் பதினெட்டும் எழுதப்படும். மெய்யெழுத்துக்கள், க, ங, ச, ஞ என்று உச்சரிக்கப்படுமே தவிர, க், ங், ச், ஞ் என்று படிப்பதில்லை. மெய் யெழுத்துக்களை முதலிலேயே (க்) 'இக்கென்னு' என்று தொடங்குவது தமிழர் மரபல்ல; ககர வரிசை உயிர்மெய் யெழுத்துக்களைப் படிக்கும்பொழுதுதான் இறுதியாய், 'க்', கூட்டப்படும். புள்ளி பெற்ற ககரத்தைக் கொண்டு ககரவரிசை தொடங்குவது தவறு. இங்ஙனமாக, இருநூற்றுப் பதினாறு உயிர்மெய் யெழுத்தின்பின்னர், னகரம் இறுதிஒற்றாய் நிற்கும். இந்த ஏட்டை "அரிச்சுவடி" என்றும் அழைப்பர். ஒன்று முதலிய எண்வரிசையை நெடுங்கணக்கென்றும், முந்திரி, காணிவரிசையைக் கீழ்க்கணக்கென்றுங் கூறுவாருமுளர்.

## அரிச்சுவடி

ஆகவே, அரிச்சுவடியில், பன்னிரண்டு உயிரெழுத்துக்களும், பதினெட்டு மெய்யெழுத்துக்களும், இவைகளினிடையில் மூன்று புள்ளிகளாற் குறிக்கப்படும் சார்பெழுத்து மூன்றும், உயிர்மெய்யெழுத்து இருநூற்றுப் பதினாறுமாக மொத்தம் இருநூற்று நாற்பத்தொன்பது எழுத்துக்கள். நேர்வரிசை பதினெட்டும், நிரையில் பன்னிரண்டுமாக, அணிவகுத்தாற் போல் நின்றிலங்குவது "நெடுங்கணக்கு" என்னும் திருப்பெயருக்குப் பொருத்தமே

ஆனால், பொதுவாய் முதலெழுத்துக்கள் முப்பதும், ஆய்தவெழுத்துஞ்சேர்ந்து நிற்பதுதான் 'நெடுங்கணக்கு' என்று கூறுவர். ஓலையில் நீட்ட நீட்டமா யெழுதுவதால் 'நெடுங்கணக்கு' எனப் பெயர் வந்தது என்பார்போலும்.

தமிழ் எழுத்துக்கள் இருநூற்றுநாற்பத்தொன்பதாயிற்றே யென்று மலைவாரும் மலைவிப்பாரும், இவை முழுவதும் அச்சி

டப்பட்ட அட்டவணை ஒன்றை உற்றுநோக்கல் வேண்டும். அப்பொழுது, கா, ஙா, சா, ஞா, என்று பதினெட்டு (ஆ) வரிசை உயிர்மெய்களும் ஒன்றுபோலிருப்பது நன்கு தென்படும். இங்ஙனமே மற்றைய உயிர்மெய்யெழுத்து வரிசைகளிலும் ஒற்றுமை காணப்படும். ஒரு சிறு மாறுதல்கள் உளவேனும், அவற்றை எளிதிற் பழகிவிடலாம்

கூர்ந்து நோக்குவார்க்கு, உயிரெழுத்துக்கள் பன்னிரண்டுக்குள்ளும், மெய்யெழுத்துக்கள் பதினெட்டுக்குள்ளும், பல ஒற்றுமை புறப்புக்கள் புலனாகும்; இவைகளை முன்னர் விளக்குதும். இன்னும், நுணுகிநுணுகி ஆராய்வார்க்குக் காட்சியளிக்கும் புதுமை ஒன்றுண்டு. தமிழ் கற்கும் மாணவன், அடிப்படையாகத் தெரிந்துகொள்ளவேண்டிய உருவம் இரண்டேயாகும்; ஒன்று வட்டம ◯, மற்றொன்று வரி —. இவ்விரண்டையும் எழுதத் தெரிந்துவிட்டால் எல்லாவெழுத்துக்களையும், ஒருசிறு முயற்சியோடு எழுதிவிடலாம். இதையும் தக்கசமயம் வந்துழி எடுத்துக்காட்டுவாம்.

## நெடுங்கணக்கு—மூல ஒலித்தொகுதி

இம் முப்பத்துமூன்று எழுத்துக்களும், மூல ஒலிகள் முப்பத்துமூன்றைக் குறிப்பதென்பது முந்தியே சுட்டப்பட்டுள்ளது.

மொழி முதற் காரணமாம் 'அணுத்திரள் ஒலி எழுத்து' என்பது எழுத்திலக்கணம் இக்கருத்தைத் தொல்காப்பியா, நச்சினார்க்கினியர் போன்ற பல பேராசிரியர்கள் வற்புறுத்தியுள்ளார்கள். தமிழ்நெடுங்கணக்கில் ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு மூல ஒலியைக் குறிப்பதனாற்றான், நுழைபுலமிகுந்த பெருங்கலைஞர் திருத்தகு, பா. வே மாணிக்கநாயககரவர்கள் (B.E., M C.I, Late Superintending Engineer, Madras) உலகில் நிலவும் எத்தகைய மொழியாயினும், அம்மொழியில் எழும் ஒலிகளனைத்தையும் தமிழில் உச்சரிக்கவும் எழுதவும் முடியுமென்ற உண்மையைப் பல மேடைகளிற் கங்கணங்கட்டி எடுத்துக்காட்டினார்கள். எல்லா ஒலிகளுக்கும் மூலமாகிய தனியொலிகட்கும் சார்பொலிகட்கும் குறியீடு அமைக்கப்பட்ட எழுத்தொலித்தொகுதியே '**தமிழ்நெடுங்கணக்கு**' என்று கூறப்படுமாயின், அவ்விழுமிய பொருளைத்தரும் எழுத்தொலித் தொகுதியை 'நெடுங்கணக்கு' என்றழைப்பது மிகமிகப் பொருத்தம என்பதை அனுபவித்தறிதலே தகுதியாகும்.

மூவாறும் நெடுங்கணக் கெழுத்துக்கள், உயிர், உடல், சார்பு என்று பகுக்கப்பட்டுள்ளன. உயிருக்கும் உடலுக்கும் இடை

யில் மிடைவது சார்பெழுத்தாகையால், இவையிரண்டுக்கும் சார்பாயிருக்கும் பொருளையே அவை குறிக்கும். இவ்வுலகிற் காணும் பொருட்களில், உடல் அழிவது, உயிர் அழியாதது இறை (கடவுள்) இவைகள் அனைத்தையுங் கடந்துநின்று எங்கும் நிறைந்து இயக்குவது; உலகுயிர்க்கெல்லாம் பற்றுக்கோடா யிருப்பது முழுமுதற் பொருளாகிய ஆண்டவன் இங்ஙன மாக, உயிர்கள், காட்சியிலும் உணர்ச்சியிலும் அறியும் பொருள் கள், இறை, உயிர், உலகம் இம்மூன்றினுள் அடங்கும். பல்லா யிரங்கோடி அண்டம் என்றழைக்கப்படும் உலகமே இறைவனது உடல் என்று கூறுவதும் நமது சமயக்கொள்கையே இம்மூன்று பொருள்களையும், குறியிலும், பொருளிலும், சுட்டிக்காட்டித் திகழ்வது 'தமிழ்நெடுங்கணக்கு' ஆயின், இத்திருப்பெயர் எத்தனை சிறப்புவாய்ந்துள்ளது!

ஆகவே, 'தமிழ் நெடுங்கணக்கு' என்னுஞ் சொற்றொடர், முதல் சார்பாகிய முப்பத்துமூன்று எழுத்துக்களடங்கிய தென்றும், தமிழ் எழுத்துக்கள் நீட்டத்தில் வரிசைவரிசையாய் எழுதப்படுகின்றமையானும், முப்பத்துமூன்று தனிச்சார்பு ஒலி களுக்கு (கலப்பொலி தவிர்த்து) குறியீடாயமைந்திருப்பதா னும், இறை, உயிர், உலகம் என்று யாங் காணும் முப்பொருளை யுஞ், சுட்டிக் காட்டிக்கொண்டிருத்தலானும், அது 'நெடுங் கணக்கு' என்ற பெரும்பெயர்கொண்டு நிலவுகின்றதென்பது இங்கு எடுத்துரைக்கப்பட்டது.

இதன்பின்னர், 'முப்பத்துமூன்று' என்னும் எண், பண் டைக்காலத்திலிருந்தே தனிச்சிறப்புவாய்ந்து திகழ்ந்துவருகிற தென்பதையும், தமிழ்நெடுங்கணக்கு முப்பத்துமூன்றே என்று உறுதிப்படுத்துவதையும், அடுத்துவரும் பகுதிகளிற் சிந்திப் பாம். இவ் ஆராய்ச்சிக்குப் பயன்படக்கூடியவை பின்வருமாறு:

| சங்க நூல்கள் | சமய நூல்கள் | விஞ்ஞானச்சான்றுகள் |
|---|---|---|
| 1. தொல்காப்பியம் | 1. பகவத் கீதை | 1. மக்கள் வீணைத்தண்டு அமைப்பு |
| 2. திருமுருகாற்றுப் படை | 2. உபநிடதம் | 2. யாழ் அமைப்பு |
| 3. திருக்குறள் | 3. மகாபாரதம் | 3. திருக்கோயில் கொடி மரம் |
| 4. பரிபாடல் | 4. தேவாரம் | 4. உருத்திராக்கம் அணிதல் |
| 5. திருவாசகம் | 5. திருமந்திரம் | 5. புதைபொருள் இயல்பு |
| | 6. கந்தபுராணம் | 6. திருச்சபையார் பட்டங்கள் (Theosophy) |
| | 7. ஆழ்வார்கள் திருவாய்மொழி | |
| | 8. திருவிளையாடற் புராணம் | |
| | 9. சிவஞானசுவாமிகள் | |
| | 10. குமரகுருபரர் | |
| | 11. அருணகிரிநாதர் | |

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் உலகமுய்ய ஈந்தருளிய "திருக்குறட்பா" ஆயிரத்துமுந்நூற்றுமுப்பது; அதிகாரம் 133. ஆகவே, பதிகம் 133. இவர், தக்க காரணமின்றி, ஒரு சிறு சொல்லேனும் இணைப்பதில்லையென்பது திருக்குறட் பேராசிரியர்களின் கூற்று. உண்மையே உருவெடுத்த அத்தகைய பெரும்புலவர் பெருமானார், ஆயிரத்துமுந்நூற்றுமுப்பது என்னும் எண்ணையே தமது குறட்பாக்களுக்கு முடிபாகக் கொண்டுவழங்கியது அறிஞர்கள் சிந்திக்கத்தக்கது. நூறு, நூற்றொன்று என்னும் எண்களால், அளவிறந்த தன்மையைச் சுட்டிக்காட்டுவது தமிழுலகில் நிலவிய மரபாகும். சிற்றம்பல நாதரையே தமக்குத் துணையாகக்கொண்ட தூய்மைவாய்ந்த மாணிக்கவாசகப் பெருந்தகை, திருவண்டப்பகுதியில், "அண்டப்பகுதியின் உண்டைப்பிறக்கம், அளப்பருந்தன்மை....நூற்றொருகோடியின்மேற்பட விரிந்தன," என்ற திருவாக்கால் பேரண்டத்தின் அளவிறந்த பெருமையைக் கூறிநின்றார். இதே கருத்திற்றான், வள்ளுவப்பெருமானார், நூறு குறட்பதிகங்களை எங்கும் நிறைந்த பரம்பொருளுக்கும் எஞ்சிய முப்பத்துமூன்று பதிகங்களை, முப்பத்துமுக்கோடி தேவர்களுக்குமாக 133 பதிகங்க ளடங்கிய 1330 குறட்பாக்களையும் உரிமைக்கொடையாக (Dedication) இறைவனுக்கு ஒப்பித்தாரென்று யாங்கோடும். இது எம் சிற்றறிவிற்கெட்டியது; தவறாயின் அறிவர் பொறுத்தருள்க. முப்பத்துமூன்று என்னும் எண்ணை நம்முன்னோர் தனிச்சிறப்புவாய்ந்த எண்ணாகக் கருதிவந்தன ரென்பதற்கு நம் நூல்களிற் பல சான்றுகள் மிளிர்கின்றன. அவற்றுள் முதன்மைபெறத் தகுதியுடைய ஒருசிலவற்றையே முன்னர் விளக்கிக்கூறுவாம் தமிழ்நெடுங்கணக்கு எழுத்துக்கள் முப்பத்துமூன்று என்பதை உறுதிப்படுத்துவதும் எங்கடனாகும்.

(தொடரும்)

# பொங்கற் புதுநாள் வாழ்த்து

[செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை.]

சிந்தியல் வெண்பா

பொங்கலைப் போற்றுதும் பொங்கலைப் போற்றுதும்
அங்கண்மா ஞாலத் தனைத்துயிர்க் கும்நன்மை
தங்கியின் பேதருத லான். (க)

கொண்டலைப் போற்றுதும் கொண்டலைப் போற்றுதும்
தண்டுளி யீத்தென் றும் நாவில் உயிர்வாழ
மண்டிவான் வாழ்ந்துறுத லான். (உ)

ஆவினைக் காக்குதும் ஆவினைக் காக்குதும்
நாவிற் கினியநற் பாலொடு நல்லுணவும்
மேவுறத் தான்தருத லான். (ங)

யாட்டினைப் பெருக்குதும் யாட்டினைப் பெருக்குதும்
வேட்டவே ளாண்மை விளைய உரம்தந்து
தேட்டவிளை யுள்ளாக்க லான். (ச)

வயலினை வாழ்த்துதும் வயலினை வாழ்த்துதும்
இயலுறு செந்நெலும் கன்னலுமே ஈத்து
வியலிடம் மேவுத லான். (ரு)

நெல்லினை வாழ்த்துதும் நெல்லினை வாழ்த்துதும்
பல்லுயிர் வாழப் பதந்தந்து காத்திடும்
வல்லமை வாய்த்துற லான் (சா)

கூலத்தை வாழ்த்துதும் கூலத்தை வாழ்த்துதும்
ஞாலத் துயிர்கட்கு நன்மை பலதந்து
சால வளர்ந்துற லான். (எ)

மஞ்சளைப் பேணுதும் மஞ்சளைப் பேணுதும்
அஞ்சொல் மகளிர்க் கழகு நலங்கொடுத்து
விஞ்சுமேம் பாடெய்த லான். (அ)

மாமலர் ஏத்துதும் மாமலர் ஏத்துதும்
நாமநீர் வேலி உலகில்நன் மங்கலத்
தேமிக வந்தமைத லான். (கூ)

நானிலம் போற்றுதும் நானிலம் போற்றுதும்
மான உயிர்வகைகள் வாழ இடந்தந்து
தானகத்தே தாங்க லான். (ய)

# தேவாரமும் பண்ணும்

[தணிகைமணி, ராவ்பகதூர், திரு. V.S. செங்கல்வராய பிள்ளை, M.A.]

இசைப்பா வகையில் யாக்கப்பட்டு பண் அமைக்கப்பட்ட பாடல்களுள் காலத்தால் முந்தியது 'பரிபாடல்' என்னும் நூல். கடைச் சங்கப் புலவர்கள் செந்தமிழுலகுக்குத் தந்த 'எட்டுத் தொகை'யுள் ஒன்று இப் பரிபாடல். பரிபாடலில் ஒவ்வொரு பாடலின் பின் பண்ணின் பெயரும் இசை வகுத்தோர் பெயரும் எழுதப்பட்டுள. ஆதலால் பரிபாடற் செய்யுட்கள் தேவாரம்போலவே சங்க காலத்தில் உரிய பண்களிற் பாடப்பெற்று வந்தன போலும். பின்னர், ஏழாம் நூற்றாண்டிலும் பின்னரும் வந்த தேவார ஆசிரியர்களாகிய சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும் அவரவர் அருளிய பதிகங்களைப் பண்ணிசையுடன் பாடினர். அவர்கள் காலந்தொட்டு தேவாரப் பதிகங்கள் உரிய பண்களிற் பாடப்பட்டு வந்தன. சம்பந்தப் பெருமான் தாம் அருளிய பாடல்களைத் தாமே நல்ல இசையில் தமிழ்ப் பண்ணிற் பாடினர் என்பதைப் பின்வரும் அவர் வாக்கினின்றே நாம் அறியலாகும் :—

(i) ஞானசம்பந்தன் நல்ல தன்னிசையாற் சொன்னமாலை. i-5-11

(ii) நாடிய தமிழ்க்கிளவி யின்னிசை செய் ஞானசம்பந்தன். iii-79-11

(iii) காழியர் தந் தலைவன் பண்ணோடிவை பாடிய பத்தும். ii-23-11.

இங்ஙனம் அவர் பாடித் தலந்தோறும் இன்னிசையில் தமிழைப் பரப்பின சிறப்பை உணர்ந்தே, சுந்தரர்-"நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்." (VII-62-8) என வியந்தோதினர்.

2. கால வேகத்தினால் மூவர் அருளிய பண்முறை மறைந்தொழிய அவர்கள் காலத்துக்கு நானூறு ஆண்டுகளுக்குப் பின் வந்த சோழர்பிரான், இறைவன் திருவருளை நாடிச் சம்பந்தருடனிருந்து யாழ் வாசித்த திருநீலகண்ட யாழ்ப்பாணரது மரபில் வந்த நங்கை உதவியைக் கொண்டு, செல்லுண்டவை போக எஞ்சிநின்ற தேவாரப் பாக்களுக்குப் பண்வகுத்தனன் என்று சரிதங் கூறும். அந்த அம்மையார் வகுத்துக் காட்டிய பண் முறையை அக்காலந் தொட்டுத் தேவார ஓதுவார்கள் தலைமுறை தலைமுறையாகப் பயின்று வந்தனர். அங்ஙனம் வகுத்து ஓதப் பட்ட பண்கள் மூவர் தேவாரத்திலும் இருபத்துமூன்று. இவையன்றி யாழ்மூரிப் பதிகம், திருநேரிசை, திருவிருத்தம், திருத் தாண்டகம், திருக்குறுந்தொகை என்பன தொன்றுதொட்டு ஒரு

குறித்த இராகத்திற் பாடப்பட்டு வந்தன. இன்ன பண்ணுக்கு இன்ன இராகம் என்பதைப் புலப்படுத்தும் பழம் பாடல் ஒன்று ஒரு தேசிகர் கூறக் கேட்டிருக்கின்றேன். 'ஞானபோதினி'ப் பத்திரிகையில் (ஏப்ரல்-1903) வந்த இதழ் ஒன்றில் பண்களுக்கு உரிய இராகங்கள் குறிக்கப்பட்டுள்ளன; அவை பின்வருமாறு:-

பகற்பண்

1. புறநீர்மை—பூபாளம்
2. காந்தாரம்—நவரோசு
3. பியந்தைக் காந்தாரம்—நவரோசு
4. கௌசிகம் - பைரவி
5. இந்தளம்—நாதநாமக்கிரியை
6. தக்கேசி—காம்போதி
7. சாதாரி—பந்துவராளி
8. நட்டபாடை—நாட்டை
9. நட்டராகம்—பந்துவராளி
10. பழம்பஞ்சுரம்—சங்கராபரணம்
11. காந்தார பஞ்சமம்—கேதார கௌளம்
12. பஞ்சமம்—ஆகிரி

இராப்பண்

13. தக்கராகம்—காம்போதி
14. பழந்தக்கராகம்—ஆரபி
15. சீகாமரம்—நாதநாமக்கிரியை
16. கொல்லி—கேதாரம்
17. கொல்லிக்கௌவாணம்—நவரோசு
18. வியாழக்குறிஞ்சி—சௌராஷ்டிரம்
19. மேகராகக்குறிஞ்சி-நீலாம்புரி
20. அந்தாளிக் குறிஞ்சி—சாமா
21. குறிஞ்சி—குறிஞ்சி

பொதுப்பண்

22. செவ்வழி-யதுகுலகாம்போதி
23. செந்துருத்தி—மத்யமாவதி.

மேற்காட்டிய பண்களன்றி, யாழ்மூரிப் பதிகம் அடாணாவிலும், திருநேரிசை நவரோசிலும், திருவிருத்தம் பைரவியிலும் திருக்குறுந்தொகை நாதநாமக்கிரியையிலும், திருத்தாண்டகம் ஹரி காம்போதி, கமாசிலும் பாடப்பட்டு வந்தன. புதியன புகும் முறையாலே, பழந்தக்கராகம்—தேவகாந்தாரத்திலும், குறிஞ்சி—சுருட்டியிலும், ஆரபியிலும், சீகாமரம், பஞ்சமம்—புன்னாகவராளியிலும், காந்தாரம் — சங்கராபரணத்திலும், கொல்லி—நவரோசிலும், திருவிருத்தம்—தோடியிலும், பின்னும் பலவகையாகவும் பாடப்பட்டு வருகின்றன.

மேற்காட்டிய இருபத்து மூன்று பண்களுள் செந்துருத்திப் பண் தவிர ஏனைய இருபத்திரண்டு பண்களைச் சம்பந்தர் தேவாரத்திலேயே காணலாம். இங்ஙனம் பண்களையே நிரம்பப் பாடிய காரணத்தால் சம்பந்தமூர்த்தியை அப்பர் பெருமான் தமது பாடலில் "பண் மலிந்தமொழியவர்" (VI. 58-1) என்று சிறப்பித்துக் கூறியுள்ளார்.

### வண்டும் பண்ணும்

3. இயற்கை ஒலிகளிலெல்லாம் சம்பந்தர் பண்ணிசைகளைக் கேட்டு மகிழ்ந்தார்; பாராட்டினார். மலர்த்தேனை உண்டு களித்துப்பாடும் வண்டுகளின் ஒலியிற் பல பண்களைக் கேட்டுக்

களிப்புற்றார்; தமது பாடலிற் சிறப்பித்தார். அவை தம்முள் சில எண்டெடுத்துக் காட்டுவாம்:

(i) மலைவளஞ் செறிந்த திருக்குற்றாலத்தைக் கண்டு வழி பட்டபோது அங்கே மலைச்சாரலில் வண்டு தன் பெடையைப் புல்கிக் குருந்த மரத்திலிருந்து பண் **செவ்வழி** (யதுகுல காம் போதி)யைப் பாடினதைக் கேட்டுப் பாராட்டுகின்றார் :—

> " பெருந்தண் சாரல் வாழ்சிறை வண்டு பெடைபுல்கிக்
> குருந்தம் ஏறிச் செவ்வழி பாடுங் குற்றாலம்.'' (I. 99—10)

(ii) திருவீழிமிழலை என்னுந் தலத்தை வழிபட்டபோது அங்கே மடுவில் வண்டு செங்கழுநீர்ப்பூவின் மகரந்தப் பொடி களிற் படிந்து மது உண்டு, தன் நிறம் சிவந்து, தன் உருவம் மாறி, **செவ்வழிப்** பண்ணைப் பாடிற்று என்கின்றார்:—

> " சேறுடு செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு சிவந்த வண்டு
> வேறாய உருவாகிச் செவ்வழிநற் பண்பாடும் மிழலை யாமே." (I. 132—7)

(iii) சீகாழியிற் சோலைகளில் வண்டு பண் **சீகாமரத்தை** இசைத்தன என்கின்றார் :—

> " காரடைந்த சோலை சூழ்ந்து காமரம் வண்டிசைப்ப." (I. 47—3)
> (காமரம்—சீகாமரம்—சிறுபாணாற்றுப்படை—77-உரை)

(iv) திருப்பைஞ்ஞீலி என்னும் தலத்தில் மலர்த்தேனை நிரம்ப உண்டு வண்டுகள் பண் பஞ்சுரம் (பழம்பஞ்சுரம்) பாடின என்கின்றார் :—

> (பஞ்சுரம் பழம் பஞ்சுரமாகும்—பிங்கல நிகண்டு)
> " அஞ்சுரும்பு அணி மலரமுதம் மாந்தித் தேன்
> பஞ்சுரம் பயிற்று பைஞ்ஞீலி," (III-14-3.)

(v) சில வண்டுகள் குறிஞ்சியாழ்த்திறன் வகையிற்பட்ட " மருள் " பாடினவாம் :—

> " வண்டு மருள் பாட " (I. 46—1.)

(vi) சில வண்டுகள் நேரிசைப் பண் பாடின என்கின்றார் :-

> " நேரிசையாக அறுபதம் முரன்று " (I. 75—3.)

(vii) சில வண்டுகள் துத்தம் என்னும் இசையில் பண் பாடினவாம்.

> " வண்டினம் துத்த நின்று பண் செயும்
> சூழ் பொழில் தருத்தி" (II-98-0)

(viii) சில வண்டுகள் " செந்து " என்னும் இசை பாடினவாம்.

> (செந்து—பெரும்பண்ணின் வகை—பிங்கலம்)
> " குளிர்வண்டு செந்திசைபாடும்" (I-101-2)

(ix) சில வண்டுகள் பண்பாடி ஆடவும் ஆடினவாம்.

"பண்கொண்ட வண்டினம் பாடியாடும்" (III-104-1)

## குயிலும் இசையும்

4. குயில்களின் இன்னிசைப் பண்ணையும்கேட்டு மகிழ்கின்றார் சம்பந்தர்.

"குயில் இன்னிசைபாடுங் குளிர்சோலை" (I-14-2)

## மாதர்களும் பண்ணும்

5 (i) பெண்களின் மொழியே *குறிஞ்சிப் பண்ணுக்குப் புறம் ஆகிய 'செந்து' என்பதை ஒக்கும் என்கின்றார்.

"செந்து நேர் மொழியார்" (II-51-11)

(ii) சம்பந்தர் காலத்தில் பெண்கள் அருமையான பண்களிற் பாடவும் பாடினர், பாடலுக்கு ஒத்தவண்ணம் வீதியில் அரங்கு அமைத்து ஆடவும் ஆடினர்—என்பர்.

"காந்தாரம் இசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார் வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே." (I-130-6)
(காந்தாரப் பண்—நவரோசு ராகம்)

## இராவணனும் பண்ணும்

6. தமது இருப்பிடமாகிய மலையை அசைத்த இராவணனைக் கால்விரலால் ஊன்றி அழுத்திய இறைவர் இராவணன் பண்ணுடன் பாடக்கேட்டு அவனுக்கு அருளினராம்:

"வல்லரக்கன்...பண்ணின் பாடல் கைந் நரம்பாற் பாடிய
பாடலைக் கேட்டு அண்ணலாய் அருள் செய்த அடிகள்" (II-95-8)

## அடியார்களும் பண்ணும்

7. சம்பந்தர் காலத்தில் அடியார்கள் பண்ணுடன் இசை பாடி வழிபட்டனர்.

."பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள்" (II-43-8)

## இறைவனும் பண்ணும்

8. (1) இறைவனே காந்தாரப் பண்பாடிச் செல்வாராம்.

"காந்தாரம் தாம் முரலாப்போகா நிற்க" (VI-9-2)

(2) வானவரும் பண்பாடி இறைவனை வணங்குவர்.

"பண்ணின் இசைமொழி பாடிய வானவர் தாம் பணிவார்"(IV-90-6)

* சிலப்பதிகாரம் பக்கம்—384

(3) "பாலை யாழொடு செவ்வழி பண்கொள
மாலை வானவர் வந்து வழிபடும்." (V-12-10)

9. இனித் தேவாரம் ஓதும் முறையைக் கூறுவாம் :

(1) இசையுடன் பண்ணுடன் ஓதவேண்டும்; இசைபாட வல்லவர்கள் பாட, ஆசையுடன் கேட்டு மகிழ்தல் வேண்டும் :

"பண்ணாரப் பாடவல்லார்க் கில்லை பாவமே" (II-16-11)
"ஆதரித்து இசை கற்று வல்லார் சொலக்கேட்டு உகந்தவர்" (II-106-11)

(2) பயனளிக்கவல்ல பண்ணுடன் பாடவேண்டும் :

"பண்பயன் கொளப் பாடவல்லவர்
விண்பயன் கொளும் வேட்கை யாளரே" (II-26-11)

(3) இசைஞானம் இல்லாதவர்கள் அவர்களுக்குக் கூடிய இசையிலோ வாய்ந்தவாறே எங்ஙனம் ஓதினாலும் இறைவர் மகிழ்வார் :

"கோழை மிடறாக கவிகோளும் இலவாக
இசைகூடும் வகையால்
ஏழையடி யாரவர்கள்
யாவை சொன சொல்மகிழும் ஈசன்" (III-71-1)
"இசைகூர வந்தவணம் ஏத்துமவர் வானமுடையாரே" (II-29-11)
"ஞானசம்பந்தன் சொல் வாய்ந்தவா றேத்து
வார் வானுல காளவாரே"— (II-15-11)

இங்ஙனம் கூறியிருந்தும் பாடலுக்கு உரிய பண்ணிற் பாடுதலே நீதி என்றும், அவ்வப் பண்ணுக்கு வழங்கும் இசை எதுவோ அந்த இசையிற் பாடுக என்றும், தெளிவு பெறச் சம்பந்தர் கட்டளையிட்டுள்ளார்.

"தமிழ்கெழுவிரகினன் ஓதிய ஒருபதும்
உரியதொ ரிசைகொள உரைசெயும் நீதியார்"— (III-84-11)
"ஞானசம்பந்தன் சமைத்த பாடல் வழஙகும்இசை
கூடும்வகை பாடுமவர் நீடுலக மாள்வார்"— (I-131-11)

இதுபற்றியன்றோ உரியபண் இன்னதென ஆராயச் சோழர் பிரான் நீலகண்ட யாழ்ப்பாணரின் வழிவந்த நங்கையின் உதவியைத் தேடிப்பிடித்தான். இது பற்றியன்றோ 'தேவாரப் பண் ஆராய்ச்சி,' என்ற இயக்கம் இன்று பெரியோரால் எழுந்துளது ! 'உரிய இசையில் உரைத்தலே நீதி,' என்று சம்பந்தப்பெருமானே கூறியுள்ளதால் அந்நீதியைக் கடைப்பிடிப்போமாக.

குறிப்பு: தேவாரத்தில் இல்லாத பண் ஒன்று திருவிசைப் பாவில் உள்ளது. அது "சாளரபாணி". அதையும் ஆய்தல் நன்றாம்.

# பொங்குக பொங்கல்!

[முத்தமிழ்மணி]

1. புதுமைமணம் கமழ்ந்திடவே பொங்குக பொங்கல்!
புன்மையாவும் கலைந்திடவே பொங்குக பொங்கல்!
மதுரமான தமிழர்நாட்டில் பொங்குக பொங்கல்!
மாற்றானுக் கில்லையிடம் பொங்குக பொங்கல்!

2. ஒற்றுமை வளர்ந்திடவே பொங்குக பொங்கல்!
ஓங்கும் தமிழ்செழிக்க பொங்குக பொங்கல்!
வற்றாவளம் பெறவே பொங்குக பொங்கல்!
வண்மைத் தமிழ்வளர பொங்குக பொங்கல்!

3. வீடுநாடு எங்குமின்று பொங்குக பொங்கல்!
வேற்றுமைகள் நீத்திடவே பொங்குக பொங்கல்!
காடுவயல் திருத்திடவே பொங்குக பொங்கல்!
காலமெல்லாம் பயன்பெறவே பொங்குக பொங்கல்!

4. கலைபலவும் கற்றிடவே பொங்குக பொங்கல்!
காதலர்உள் ளம்மகிழப் பொங்குக பொங்கல்!
விலையறியா உழைப்புமிகப் பொங்குக பொங்கல்!
விளைபுலங்கள் வளம்பெறவே பொங்குக பொங்கல்!

5. உரிமைத்தமிழ் மக்கள்வாழப் பொங்குக பொங்கல்!
உலகமெலா மினிதிலங்கப் பொங்குக பொங்கல்!
அரியபே றுடையமக்கள் பொங்குக பொங்கல்!
அறிவுஆண்மை ஆற்றல்பெற பொங்குக பொங்கல்!

---

# திருப்பாவை ஆராய்ச்சி

[பேராசிரியர், கா. ர. கோவிந்தராச முதலியார்]

(சிலம்பு, உச, பரல் ு, பக்கம் உகரு தொடர்ச்சி)

கோதை நாய்ச்சியார், பெரியாழ்வாருக்குத் திருமகளாராய் அவதரித்து, ஞான பத்தியோடே வளர்ந்து, ஒரு கொழு கொம்பிலே சேர்க்கவேண்டிய பருவம் அடைந்தனர். அப் போது 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்'* என்னும் உறுதி உடையவராய்,

"கோல்தேடி ஓடுங் கொழுந்ததே போன்றதே
மால்தேடி ஓடு மனம்."†

என்றபடி செங்கணெடியோன்பாற் செறிந்த உள்ளத்தினராய், அக்கருவுடை முகில்வண்ணன் காயாவண்ணன் திருவுரு முகத் துத் திருக்கண்களால் திருந்தருள் நோக்குப் பெறுதலை விழைந்து, அஃதோராற்றானும் கிட்டப் பெறுமையான் ஆற்றாது வருந்துவா ராயினர்.

செந்தண்மை பூண்டோர் சிலர், அது கண்டு நாய்ச்சியாரை நோக்கி, "அன்னாய்! ஆய்ப்பாடியில் ஆயர்சிறுமியர் கண்ண னோடு குரவை கோத்து, அதனாற் களிப்பு மிக்கவ ராயினர். கண்ணன் அதனையுணர்ந்தருளி 'இம்மீக்களிப்பு இவ்வாறே செல்லின், இச் சிறுமியர்க்குத், துன்பமுண்டாம்; ஆதலின், இதனை நாம் மாற்றுதல் வேண்டும்,' என்று திருவுளங்கொண்டு, அவர்களைப் பிரிந்து ஒளித்தருளினன். கண்ணன் பிரிவை ஆற்றாத அச்சிறுமியர் தங்களுள் ஒருத்தியைத் 'தீயகாளியனே!' என்று விளித்தும், ஒருத்தி 'நான் கண்ணன்' என்று சொல்லியும் ஒரு வாறு தங்கள் ஆற்றாமை தணியப் பெற்றார்கள்," என்று கூறக் கோதை நாய்ச்சியார், தாமும் அவர்களைப்போல் தம் ஆற்றாமை யைத் தணித்துக்கொள்ளுதற்குரிய வழியை உன்னித் திருப் பாவை பாடினர் என்பது.‡

## திருப்பாவையிற் கூறப்படும் பொருளின் தோற்றுவாய்

திருமகளார்தம் கேள்வனாகிய பெருமாள் தீயோரை அழித்து, நல்லோரைக் காத்து, அறத்தை வளர்த்துத், தன்னை யன்றிப் பிறிதொன்றையும் வேண்டாத அடியவர்கட்கு அந்தமில் இன்பத் தழிவில் வீட்டை யருளுதற்பொருட்டு ஆதியஞ்சோதி

---

* நாய்ச்சியார் திருமொழி, 1-ம் திருமொ. பா. 5.

† இயற்பா, 2-ம் திருவந்தாதி, பா. 27.

‡ இது பரமகாருணியரும், திருப்பாவைக்கு மூவாயிரப்படி வியாக் கியானம் அருளிச்செய்தவருமாகிய பெரியவாச்சான் பிள்ளை, அந்த வியாக் கியானத்தில் எழுதிய அவதாரிகையினைத் தழுவி எழுதப்பட்டதாகும்.

உருவை அங்கு வைத்து, இங்குத் திருவாய்ப்பாடியில் கண்ண னாய் அவதரித்து, ஒப்புயர்வற்ற தன் அழகினாலும் அரிய குணஞ் செயல்களாலும் ஆயர்தம் சிறுமியர்களின் மனங்களைக் கவர்ந்துகொண்டு, மின்னற் கொடிகளுடன் வளரும் கார்முகில் என அவர்களோடு வளர்ந்து வந்தனன்.

அங்ஙனம் கண்ணனோடு வளர்ந்துவந்த ஆயர்தம் சிறுமி யர்கள் மங்கைப் பருவம் எய்தியபோது முதியவர்களாகிய ஆயர் கள், 'கண்ணன் தூர்த்தனாயிராநின்றான்; அவன் முகத்திலே பெண்கள் விழிக்கலாகாது,' என்று தமக்குள் முடிவு செய்து கொண்டு, அப்பெண்களை வெளியிற் செல்லாதபடி இல்லிற் செறித்தார்கள். அதன் பின்னர் அச்சிறுமியர்களின் நல்வினைப் பயனால் மழைபொழியாதொழிய, அம்முதியர்கள், எல்லாருந் திரண்டு, 'ஆநிரைகளும், மாந்தர்களும் பிழைத்தற்குரிய விரகு யாது?' என்று ஆய்ந்து, 'கண்ணனைக் கடகனாக அமைத்து, இவ் வூரின்கண் உள்ள பெண்கள் அடைய நோற்கச்செய்யின், மழை உண்டாம்,' என்று முடிவு செய்து, அப்பெண்கள் எல்லாரையும் அழைத்துக் கண்ணனையும் அழைத்துப் பெண்களை நோற்கச் சொல்லி, 'நீ, இவர்கள் நோன்புக்கு வேண்டுவன செய்து தரு பவன் ஆதல்வேண்டும்,' என்று கண்ணனை வேண்டக், கண்ணன், 'இஃதென்னால் இயல்வதன்று,' என மறுக்க, அம்முதியவர்கள் 'நீ இதனைச் செய்தல்வேண்டும்,' என வற்புறுத்தினராகக், கண்ண னும் அதற்கிசைந்தனன். பின்பு அம்முதியவர்கள் யாவரும் ஒருங்குதிரண்டு, கண்ணன் கையிற் பெண்களைக் காட்டிக்கொடுத் துச் சென்றார்கள் பின்னர்க் கண்ணன் அவ்வாயர் சிறுமியர்க ளோடு சிறிதுநேரங் களிகூர இருந்து பின்பு, அப்பொற்பாவை யரை நோக்கிப், "பெண்காள்! திருக்குரவை கோத்த இரவுபோல இவ்விரவும் நமக்கு நல்லிரவாயிற்று. பிறர்க்கு ஐயுறவு பிறக்கும் படி நெடும்போது நாம், இங்ஙனம் இருத்தலாகாது. நீங்கள் யாவரும் இப்போது சென்று, நள்ளிரவில் வந்து என்னை எழுப்புங்கள், நோன்புக்குக் குளிக்கலாம்படி," என்று கூறிப் பெண்களைப் பிரிந்துபோய், நப்பின்னைப் பிராட்டியின் திருமாளி கையிலே புக்கான். அப்பாவையரும் அவ்வாறே சென்று தத்தம் மாளிகைகளை அடைந்தார்கள்.

## திருப்பாவையிற் கூறப்படும் பொருள்

பிறகு அவ்வாயர் சிறுமிகளுள், உறங்கப் புக்க விடத்தில் கண்ணுறங்காமையாலே முற்பட எழுந்தவர்கள், கூடிச் சென்று, கண்ணனுடைய குணஞ் செயல்களை நினைத்து, எழுந்திருக்க மாட்டாதே அணையிற் கிடப்பவர்களைத் தனித்தனியாக எழுப்பி,

யாவருந் திரண்டு, தாங்கள் செல்லக் கருதிய நந்தகோபர்தம் திருமாளிகையை அடைந்து கண்ணனை எழுப்பித் தாங்கள் விழைந்ததைக் கண்ணனுக்கு அறிவித்து, வேண்டிப் பெற்று, நோன்பை முடித்தார்கள் என்பது.

ஈண்டுக் கவனித்தற்குரிய செய்தி ஒன்றுண்டு. அது முதியவர்களாம் ஆயர்கள் கூறியபடி 'மழை பெய்தல் வேண்டும்' என்பதை வெளிப்படையாகவும், 'கண்ணனை அடைதல் வேண்டும்' என்பதைத் தம் முள்ளக் கிடையாகவுங் கொண்டு ஆயர் சிறுமியர்கள் நோற்றார்கள் என்பதே. அதனைத் திருப்பாவையில்,

"ஆழிமழைக் கண்ணா ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொ டார்த்தேறி
ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ வுலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்"

எனவும்,

"சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றமேய்த் துண்ணுங் குலத்திற் பிறந்துநீ
குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கு மேழேழ் பிறவிக்கு முன்றன்னோடு
உற்றோமே யாவோ முனக்கேநா மாட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்."

(திருப்பாவை: பாசுரம் ச, உக.)

மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்ததாகிய திருவெம்பாவையில்,

"முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்."

எனவும்,

"உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன் றுங் காணற்க
இங்கிப் பரிசே யெமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோர் எம்பாவாய்."

(திருவெம்பாவை : ௧௯, ௧௧.)

எனவும் வரும் திருப்பாடல்களையும் ஈண்டு நோக்குக.

## திருப்பாவை என்னும் தொடர் இலக்கணம்

திருப்பாவை என்னுந் தொடரில் திரு என்பது, அடைமொழி. இது, செல்வம், இலக்குமி, அழகு, மேன்மை என்பன முதலிய பல பொருள்களைத் தருஞ் சொல்லாகும். இஃது ஈண்டு மேன்மை என்னும் பொருளதாய் நின்றது. பாவை என்பது பதுமை என்னும் பொருளது. இங்ஙனமாகிய இவ்விரு சொற்களுங் கூடிய இத்தொடர்மொழி, மேன்மையாகிய பாவை என்றுதலின், பண்புத்தொகைநிலைத் தொடராம் என்பது. இத்தொடரில் பாவை என்பது உவமையாகு பெயராய்ப் பெண்களை உணர்த்த, அது பொருளாகுபெயராய்ப் பெண்களால் நோற்கப் படும் நோன்பை உணர்த்த, அது, காரியவாகு பெயராய் அந்நோன்பைத் தெரிவிக்கும் நூலை உணர்த்தி நின்றது. ஆதலின், இது மும்மடியாகு பெயர்.

இனிப் "பாவை என்பது இருமடியாகுபெயராய் நோன்பையுணர்த்த அது, திரு என்பதனோடு கூடி மேன்மையாகிய நோன்பை உணர்த்தும் நூல் என்னும் பொருளதாயிற்று எனக் கொண்டு அதனை அன்மொழித்தொகைப் பெயர் என்று கூறலாகாதோ?" எனின்,

'திருவாடல் பாவை யதற்குறுப்புத் தேரின்
ஒருவா திரண்டுட னென்று'

எனவும்,

'செருவெங் கோல மவுணர் நீங்கத்
திருவின் செய்யோ ளாடிய பாவையும்'

எனவுங் கூறியவற்றுள், பாவை என்பது அடைமொழியின்றி நின்றே நூலை உணர்த்தலின், மும்மடியாகு பெயரென்றே கூறுதல் வேண்டும்; அதற்கு மாறாக ஈண்டு இருமடியாகு பெயர்க்கு மேல் வந்த அன்மொழித்தொகைப் பெயர் என்றல் மாறுகொளக் கூறலாம் என்க.

(தொடரும்)

# ஆண்மைச் சர்தார்

(உ௬௬-ம் பக்கத் தொடர்ச்சி)

காந்தியடிகள் "சர்தார் பார்வைக்கு வன்மையாளராகத் தோன்றினும் உள்ளம் தாய்மையினும் மென்மை படைத்தது. தலைவர் மாட்டுத் தக்கவாறு நடந்துகொள்ளு முறையில் சர்தாரே மிக்கவர்; தமக்குத் தாமே ஒப்பவர். மேலும் தொண்டு பூண்டொழுகுவதில் அன்னையினும் அன்புடையர். சிறையில் எனக்கு அன்னையிலாக் குறையைப் போக்கிப் பணிபுரிந்தனர். நாடே தம்முயிர், நாட்டு நலனே தம்நலன் என மெய்ம்மையாகக் கொண்டொழுகும் செம்மையர்," என்று கூறிய செம்மொழிக ளெல்லாம் குறுநில இணைப்பில் மிக்க விளக்கமுற்றன.

குறுநில மன்னர் எவரையும் வற்புறுத்தவில்லை. அவர் தாமே வலிந்து இணங்கும்படி சர்தார் தம் வாய்மொழி வண்மை யாலேயே ஆக்கினர். அறிவுரு, ஆராய்ந்த கல்வி, கண்ணஞ் சாமை, காலமும் இடனுமறிந்து, தக்கவற்றை எண்ணியுரைத்தல், மன்னவர்க்கு உறுதியுண்டாம் வாய்மை காட்டல் முதலிய தொன்னெறி மாண்புகளால் கிட்டத்தட்ட அறுநூற்றுக்கு நெருங்கிய குறுநிலங்களை ஓராண்டுக்குள் உலகு வியக்க ஒற்றுமை யாக்கினர். இச்செயற்கருஞ் செயலால் நாவலந்தீவாம் நங்கை ஒருவனுக்கு ஒருத்தி போன்று தன் உண்மையான ஒரு தலைவன் தன்பால் நீஙகாதுறையும் நேர்மை பெற்று நெடிதுளம் பூத்தனள். இந்நனவு பண்டு அசோகரால், அக்பரால் கனவு கண்டு கைநழுவவிட்டது. எனினும் அவர்கட்குமுன் ஒரு மொழி வைத்துலகாண்ட தொன்மைத் தமிழ் முடிமன்னரால் நனவாக்கி நாட்டியதொன்றே. காலவேறுபாட்டால் பரத்தை யில் பிரிந்த தலைவன் போன்று ஆட்சி குறுநில மன்னர்பால் மறுநில மன்னர்பால் குறுகுவதாயிற்று. அவ்வாட்சியை மீண்டும் தலைவிபாற் சேர்க்கும் தனிப்பாங்கன் ஒத்துச் சர்தார் அமைந்தனர்; சேர்த்தனர்; தலைவியாம் இந்திய நங்கையும் தன்னிகரின்றி வாழ்கின்றனள். இஃதோர் அகப்பொருட் செயலே போலும்.* இதனால் சர்தார் புகழ் பாரத வரலாற்றில் தக்க இடம் பெற்று மிளிர்வது போன்று பரந்து பட்ட உலகப் பண்பாளர் உள்ளத்தும் ஒளிரும் என்பது திண்ணம்.

---

* ஆட்சியாம் நாவல் வேந்தன் அன்னவள் மனம்புண் ணுக
மீட்சியில் ஆறு நூறு மினுக்கியாம் குறும்பர் தம்பால்
தாட்சியில் மூழ்கி அசோகர் அக்பர்தாம் செய்யா மீட்பை
மூட்சியில் செய்தான் சர்தார் முதுக்குறைப் பாங்கன் ஒத்தே

இவர்தம் அருமைத் தமையனார் வித்தல்பாய் படேல் நாட்டுக்கு உழைத்துத் தேட்டமெலாம் நாட்டுக்கே ஈந்து, சட்டப் பெருமன்றத் தலைவராயிருந்து முட்டின்றி நடத்திய முதல் இந்தியர் என்னும் முதன்மையும் பெற்று, வெளிநாடு சென்று நம் நாட்டியல்புரைத்து அஞ்சா வெள்ளையரும் அஞ்சும்படி செய்து அறவுரையால் உயிர் கொடுத்துப் புகழ் பூண்டனர். அணமையில் (2—1—51) நம்நாட்டுத் தலைவர் ராஜேந்திரப் பிரசாதால் நிறுவப் பெற்ற வெண்கலப் புகழுருவாய்ப் பம்பாய் நகரில் விளங்குகின்றனர். இவ்விருவர்களும் நம்நாட்டுப் "புண்ணியக்கண் இரண்டெனப்" பொன்றாப் புகழுடன் பொலிவர்.

தாழ்வில் செய்தி

"நாட்டின் விடுதலைப்போரில் காட்டிய மிகச்சிறந்த தனையிழப்பு (தியாகம்) பிறர்க்கென முயறல், ஒப்புயர்வற்ற கட்டுப்பாடு, ஈடும் எடுப்பும் இல்லா ஒற்றுமை யுணர்ச்சி ஆகியவைகளையும் இந்நாளிலுள்ள அறச்சிதைவையும் ஒப்பிட்டுப் பாருங்கள் ஒவ்வொருவனும் தான் சரியாக நடந்துகொள்கின்றானா என்று பார்த்துத் திருந்தட்டும். சிறிய செய்திகளில் பெரிய ஆய்வு வேண்டா. முதன்மையானவற்றில் ஊகமின்மை உதவாது; அவரவர் கடமையை அவரவர் அகம் புறந்தூய்மையுடன் செய்க நம்மை முன்னுக்குக் கொண்டுவந்தது தன்னம்பிக்கையே. அதை மீண்டும் அடைந்தால் நாட்டின் எதிர்காலத்தைப்பற்றிக் கவலையே இல்லை," என்பதே உறுதியும் இறுதியுமாகிய அறவுரை

மக்களன்பு

நாவலம் தீவாம் நம் நாடு விடுதலை பெற்ற ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பத்து ஏழு ஆகஸ்டு பதினைந்தாம் நாள் தொட்டு ஆற்றிய தொண்டோ அளப்பில. சர்தார் பொறுப்போ சிக்கல் வாய்ந்தது, சிறுமை நிறைந்தது, பொறுமை வாய்ந்த சர்தார் செய்து முடிக்கும் பொற்பினது. சர்தார் துணையமைச்சராய், உள்நாட்டுத் துறையினராய் குறுநில மன்னர்க்குத் திருமிகு காவலராய்த் திகழ்ந்தனர். எல்லாம் நன்றாமாறு நோக்காலும் சொல்லும் நுண்ணுணர்வாலும் எண்மையின் முடித்தனர். எழுபத்து நான்காம் பிறப்பை யொட்டிப் பம்பாய் நகர மக்கள் நூறாயிரம் கொண்ட செம்பொன்னால் அசோக உச்சி (தூபி) என்னும் அடையாளம் கையுறையாக அளித்தனர்.

குஜராத்தி மக்கள் அவர் பெயரால் அவர் பிறந்த கரம்சந்த் என்னும் ஊர் அருகே கலைநகர் ஒன்று நின்று நிலவ அமைக்க வேண்டுவ செய்துள்ளனர். அதற்கு அடிப்படைக்கல் பண்டித

நேரு அவர்கள் திருக்கையால் நாட்டப் பெற்றது. இது, 'வல்லப நகர்' என்னும் திருப்பெயரால் வழங்கும். சைவவுணவும் துறவு வாழ்க்கையும் சர்தாரின் சால்பு.

பல்கலைக் கழகங்கள் ஒன்றோடொன்று போட்டியிட்டு 'டாக்டர்' பட்டம் வழங்கின. அவை நாகபுரி, காசி, அலகாபாத், இலட்சுமணபுரி, உஸ்மானியா, கிழக்குப் பஞ்சாப் முதலியன.

“ அடிகளுடன் சர்தார் அறமுறைசேர் கண்ணன்
படியில் அருச்சுன னென்ப.”

பொன்றுப்புகழுடல்

'உளதாம் சாக்காடு' ஒருவர்க்கு எய்துதல் சாலவும் அரிது. தாளாண்மையும் வேளாண்மையும் ஒருங்கமைந்த சான்றோர் பிரிவு மழையது பொய்ப்பும், வளியது தடையும், ஞாயிற்றது மறைவும போன்று முழு உலகத்தையும் கழிவில் துன்பக் குழியில் வீழ்த்தும் என்பது 15—12—1950-இல் காணப் பெற்றது. என்னே! காலக்கொடுமை. நிறைநாள் வாழ நினைநததும் தன் பொருட்டன்று; நாட்டின் பொருட்டு. அத்தகைய சர்தாரையும் காலன் கைக்கொண்டனன். டில்லியி லிருந்து மூன்று நாட்களுக்குமுன் நோய் நீக்கத்தின் பொருட்டு பமபாய் நகர் வந்து சோந்தனர். சிறிது நலம் பெற்று மீள்வார் என்று எல்லோரும் நம்பினர். பின் 15—12—50 வெள்ளி காலை மணி 9-37-க்குத் திடீரென மறைவெய்தினர். மணிபென் தாயாபாய் என்ற மக்களிருவரும் பிறரும் இருந்து உற்றுழி உதவி நற்றொண்டு புரிந்தனர். கீதை ஓதப்பெற்றது. திருவிளக்கு இருபாலும் நின்று நிலவியது. சமயச் சடங்குகள் அமையச் செய்தனர்.

பறவைக்கப்பல் வழியாகத் துணையிழந்த இணையில் ஆண் மையராம் நேரு, ராஜாஜி, ராஜேந்திரப் பிரசாத், புருஷோத்தம தாஸ் தாண்டன் முதலியோர் பம்பாய் வந்து சேர்ந்தனர். அர சியல் இடங்களெல்லாம் கொடியை அரை மர அளவில் கட்டல், விடுமுறைவிட்டு மூடல், பரிவுத் தீர்மானம் செய்து அறிவித்தல் முதலிய இன்றியமையாச் செயல்கள் செய்தன. உலகத்தின் பல்வேறு பாகங்களிலிருந்து பகரொணுக் கையறுநிலைச் செய்தி கள் கம்பிவழியும், பிறவழியும் வந்து சேர்ந்தன. வானொலி நிலையங்கள் பல்வேறு மொழியில் பிரிவுச்செய்தியை இடை விடாது பரப்பின.

16-12-50 மாலை 4-30 மணிக்கு பம்பாய் பிர்லா மாளிகையி லிருந்து சோனப்பூர் நன்காட்டுக்கு ஒரு கல் தொலைவுக்கும்

மக்கட்கடலே சூழ்ந்த ஊர்வலத்திடையே சிறப்புடன் அறப் பெருஞ் செல்வர் சர்தார் நல்லுடல் மெல்லெனக் கொண்டு வரப்பட்டது. தலைவர்களெல்லாம் இறுதியுரையும் இயம்ப வொண்ணு வண்ணம் ஏங்கி அழுதனர். அழுகையிடையே தழு தழுத்த குரலில் சிறிது பேசினர். அப்படியும் பேசமுடியவில்லை நேருஜிக்கு. தாயாபாய் கொள்ளியிடப் பிறரெல்லாம் நெய் வார்க்க எரியுண்டது எழிலுடலை. பரிவுண்டது உலகே! செறி வுண்டது இருளே! இவ்விடமே முன் வித்தல்பாய் படேலுக்கும் இடமாயது.

எழிற்றிருவேணி என்புக்கிடம்

29-12-50 வெள்ளிக்கிழமை பொன்னே மணியே பொரு வும் அவர்தம் என்பு தனி வானவூர்திவழி டில்லிக்குக்கொண்டு வரப்பட்டுப் படகுகள வழிப் பல்லாயிரக்கணக்கான மக்கள், குடியாட்சித் தலைவர், அமைச்சர் உள்ளிட்டார் சூழத் திரு வேணிக் கலப்பில் கலக்கச் செய்தனர். அக்காட்சியும சிறப் பும் சர்தாரின் ஆட்சியும் மாண்பும் ஆண்மையும் புலப்படுத்தும் அறிகுறிகள். நாம் சர்தார்க்குச் செய்யவேண்டிய மாறுக்கடமை அவர் அடிச்சுவடு பற்றிக் கட்டுப்பாடும், ஒற்றுமையும், கலங்கா ஆண்மையும், தன்னலமின்மையும், நாட்டு நலமே நமமுயிர் என நாடலும், உலக அரங்கில் உயர்வற உயர்ந்தது நம்நாடே எனப் பெயர் நாட்டிக் கூட்டொருவரை வேண்டாக் கொற்றத் தினராய் வாழ்வதே. சர்தார் வல்லபபாய் படேல் நல்லாவி நமக்கு ஊக்கந் தந்து பேரா இயற்கை பெற்றுப் பெரிதும் வாழ்க.

# திரு. புகழ். முத்துசுவாமிப் பிள்ளை

தென்றலும் பொருநையும் நின்றுலவும் தமிழ்தேர் நெல்லை மாவட்டத்து, திருச்செந்தூர்க் கூற்றத்து உடன்குடி என்றோர் ஊர் உளது. அவ்வூர் நிலைவேளாண் மக்களாய் நிலவியவர் சிவ. புகழும் பெருமாள் பிள்ளையவர்கள் ஆவர் இவர்கள் வாழ்க்கைத் துணைவியார் சுப்பம்மையாராவர். பிள்ளையவர்கள் பெரு மளிகைத் தொழில் நடத்தி நெறி முறை தவறாது வாழ்க்கை நடத்தினர். தவப்பேற்றால் இவர்கட்கு ஆண்மக்கள் ஐவரும் பெண்மக்கள் ஐவரும பெரும் பேறாய்க் கிட்டினர்.



இப்பதின்மருள் தலைப்பிள்ளை குறு வாழ்நாளாய்க் கழிந்தது. ஏனை ஒன்ப தின்மரும் கற்றறி வல்லராய் நற்றிறம் படர்ந்து மணமுற்று மக்கட்பெற்று மக்கட்கும் மக்கள்கண்டு வாழ்ந்தனர். இவர்களுள் ஒருவரே நம் **முத்துசுவாமிப் பிள்ளை** யவர்களாவர். இவர்கள் 1890 ஆகஸ்டு 16 சனிக்கிழமை நற் பொழுதில் தோன்றினார்கள். உள்ளூர்க்கல்வி ஊக்கமுடன் கற்றார்கள். பன்னிரண்டு பதின்மூன்றாண்டு இளமையிலேயே செந்தமிழ் மொழியைத் திறம்பெறக் கற்கத் திருத்தில்லை சென்ற னர். அங்ஙனம் செல்வதற்கு உறுதுணையாக இருந்தவர்கள் இவர்களின் முதல் தமையனார் சிவராமகிருட்டின பிள்ளையவர்க ளாவர். தில்லையில் **நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலையில்** நான்காண்டுகள் தமிழ் கற்றுத் தேறி வல்லராயினர். உடன்கற்ற மாணவர் பல்லோருள்ளும் தலைசிறந்த நண்பர் வேலூர் ஊரிஸ் கல்லூரித் தமிழாசிரியராய்த் திகழும் திரு. இராசாப்பிள்ளையவர் கள். பிள்ளையவர்கள் நேர் தமையனார் பு. சண்முகம் பிள்ளை யவர்கள் பி. ஏ. பட்டமும், சட்டப்பட்டமும் பெற்று திரு வைகுண்டத்தில் வழக்கறிஞராய்த் திகழ்ந்தனர்.

இவர்கள் தந்தையார் நடத்திய மளிகையை நடத்தித் தமிழ்த்தொண்டும் சிவத்தொண்டும் புரிந்து வந்தனர். தில்லை யில் கற்கும்பொழுதே மறைமலையடிகள் நட்பு வாய்த்தது. இளமைப் பருவத்தே கிட்டத்தட்ட முந்நூறு கல் தொலைவி லிருந்து தமிழ் கற்க வந்திருக்கும் சால்பு அடிகள் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. அந்நட்பின் திண்மையால் அடிகள் தென்

பால் முதன் முதல் இவர்கள் விருந்தினராகவே குடும்பத்துடன் வந்தனர். இவர்கட்குத் தாய்மாமன் மகளேயே மணஞ்செய்விக் கப்பெற்றது. இவர்களுக்கும் மக்கள் ஆண்பால் மூவரும் பெண் பால் மூவரும் ஆவர்.

### தமிழ்த்தொண்டு

செந்தமிழ்ச் செல்வியில் பல கட்டுரைகள் அவ்வப்போது எழுதியுள்ளார்கள். பானையங்கோட்டை சைவசபைச்சார்பில் நடந்த பல கூட்டங்களிலும் ஆண்டு விழாக்களிலும் அரிய பெரிய பொருள்கள்பற்றி விரிவுரையாற்றியுள்ளார்கள். ஒழுக்க விளக்கம், செல்வக்கணபதி இரட்டைமணிமாலை முதலிய நூல்கள், அற்புதத் தேவாரம், திருச்சதக உரைகள் இயற்றியுள்ளார்கள். பல வேறு கழகங்களில் பயன்பெறும் சொற்பொழிவு பல ஆற்றியுள்ளார்கள். தலைசிறந்த புலவர்கள் தமிழ்ப் பெரும் செல்வர்கள் பலர் நட்பும் நன்மதிப்பும் பெற் றுள்ளார்கள். உறவினரும் வணிகச் செல்வரும் ஆய திரு. ச. க. ஆ. பரமசிவன் பிள்ளையவர்களை உளங்கொளத் தூண்டி உடன்குடியில் நன்கொடை நடுநிலைப்பள்ளி ஒன்று நாட்டிச் செவ்வனே நடந்துவர வேண்டும் வைப்புங்கூட்டி நிறுவியுள்ளார் கள். தூய தமிழ்ச்சொல் வழங்கக் கிணறு அமைப்பித்து அந்தக் கிணற்றுக்கு அறக்கிணறு எனப் பெயரிட்டு வழங்குவித் துள்ளார்கள்

ஓய்வுள்ள வேளைகளில் முதியர்க்கும் இளைஞர்க்கும் முயன்று கல்வி புகட்டியுள்ளார்கள். 1937-இல் இலங்கை சர். டி. பொன்னம்பல அருணசலத்தாரின் பெயர்த்தி மங்க ளேச்சுவரி அம்மையாருக்கு நற்றமிழ் கற்பித்துள்ளார்கள். பொதுநலத் தொண்டிலும் பல ஆண்டுகள் கூட்டுறவுச் சங்கத் தலைவராய்ப் பணிபுரிந்துள்ளார்கள். விபுலானந்த அடிகளின் கெழுதகு நண்பரும் ஆவர்.

### அருட்பேறு

நீங்கா நோயுற்று மணிமந்திர மருந்துகளால் நீங்காமல் வள்ளி மணளன் கனவில் அருளிய கட்டளைப்படி செந்தமிழ்ப் பாப் பாடி அந்நோய் தீரப் பெற்ற தீந்தமிழ்ச் செல்வர். 1950 திசம்பர் 17 ஞாயிறு காலை 7 மணிக்கு 'அம்மை அப்பர்' திருவடி நினைவுடன் ஆவி பிரிந்தது; ஆண்டவன் அடியிணை பொருந்தினர்.

புகழ்முத்துச் சாமிப் புலவர்புகழ் என்றும்<br>திகழ்க தமிழ்சிவத்தால் சேர்ந்து.

---

# தேவாரப் பண் ஆராய்ச்சி

[புத்தனேரி ரா. சுப்பிரமணியன்]

சென்னைத் தமிழ் இசைச் சங்கத்தின் சார்பில் தேவாரப் பண் ஆராய்ச்சிக் கூட்டம், இரண்டாவது முறையாக 27-12-50 முதல் 29-12-50 வரை மூன்று நாட்கள் சி. எல். எஸ். மெமோரியல் மண்டபத்தில் நடைபெற்றது. திருப்புகழ்மணி, திரு. டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் கூட்டத்தைத் தொடங்கி வைத்தார். பேராசிரியர் திரு. பி சாம்பமூர்த்தி தலைமையேற்றார்.

தமிழ் இசைச் சங்கத்தலைவர் டாக்டர், திரு. ரா. க. சண்முகஞ் செட்டியார் தமது வரவேற்புரையில் அடுத்த ஆண்டில் திருவாசக ஆராய்ச்சியும் எடுத்துக்கொள்ளப்படுமென அறிவித்தார். இக்காலம் வழக்கத்திலிருக்கும் இராகங்களெல்லாம் தமிழ் நாட்டின் பழமையான பண்களிலிருந்துதான் தோன்றின என்ற உண்மையைப் பண் ஆராய்ச்சிக் கூட்டம் தெளிவாக்கிற்று. சென்ற ஆண்டு நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து, சில பண்களுக்குப் பொருத்தமான இக்கால இராகங்கள் என்ன வென்பதுபற்றி ஆராய்ச்சி மூன்று நாட்களும் சுவையாக நடைபெற்றது. தேவார ஓதுவார்களும், இசைவாணர்களும், தமிழ் அறிஞர்களும் உணர்ச்சியோடு சொற்போர் செய்தமை அன்பர்களின் உள்ளத்திற் கிளர்ச்சி யூட்டிற்று. கீழ்க்கண்ட பண்களுக்கு ஏற்ற இராகம் இதுவென்பது பின்வருமாறு முடிவாயிற்று :—

| பண் | பொருத்தமான இராகம் |
|---|---|
| பழம்பஞ்சுரம் | —சங்கராபரணம். |
| சாதாரி<br>நட்டராகம் | —பந்துவராளி. [இரண்டிற்கும் உள்ள தனித்தனி இராகம் என்னவென்பதை உட்குழு (சப்கமிட்டி) ஆராயவேண்டும்.] |
| புறநீர்மை | —பூபாளம். [ஓதுவார்கள் பாடுகையில் பௌளியின் சாயல் வருகிறது.] |
| மேகராகக் குறிஞ்சி | —நீலாம்புரி. |
| தக்கராகம்<br>தக்கேசி | —காம்போதி. [இரண்டிற்கும் தனித்தனியே இராகம் உண்டா என்பதை உட்குழு ஆராயும்.] |
| பழந்தக்க ராகம் | —ஆரபி, சுத்த சாவேரி, தேவகாந்தாரி ஆகிய மூன்று இராகங்களில் பாடப்படுகின்றது. இவற்றில் எது மிகப் பொருத்தம் என்பதை உட்குழு ஆராய வேண்டும். |
| காந்தாரம்<br>பியந்தைக் காந்தாரம் | —நவரோசு இராகத்திற்குச் சரியாக இருக்கின்றன. இவற்றிற்குரிய தனியான இராகம்பற்றி உட்குழு ஆராயும். |

அந்தாளிக்குறிஞ்சி —சாமா.
திருத்தாண்டகம் } —செய்யுள் வகை. இவைபற்றி மேலும்
திருநேரிசை } ஆராய வேண்டும்.

ஆராய்ச்சிக் கூட்டத்திற் சலிப்புத்தட்டாம லிருப்பதற்காக இடையிடையே பண்களைப்பற்றிய சொற்பொழிவுகளும் நடை பெற்றன. திருவாளர்கள், டி. கே. சிதம்பரநாத முதலியார், ரா. பி. சேதுப்பிள்ளை, டாக்டர் மு. வரதராசனார், ம. ப. பெரிய சாமித்தூரன் ஆகிய அன்பர்கள் இலக்கிய விருந்தளித்தனர்.

பேராசிரியர், திரு. பி. சாம்பமூர்த்தி தமது முடிவுரையில் மக்களுக்கு ஓதுவார்களின் சம்பிரதாயத்தில் பத்தியிருக்கவேண்டு மென்று குறிப்பிட்டார். 'கல்கி' ஆசிரியர், திரு. ரா. கிருஷ்ண மூர்த்தி நன்றி கூறினார்.

---

# செய்திகளும் குறிப்புகளும்

## தாய்மொழியின் இன்றியமையாமை

டில்லி பட்டம் அளிப்பு விழாவில் ராஜன் பாபு வற்புறுத்தியதாவது: நம் நாட்டில் நாட்டுமொழிக்கு முதன்மை யில்லாமையே ஒற்றுமையின்மைக் குக் காரணம். நாட்டுமொழி விருப்பப் பாடமாகவும், ஆங்கிலம் கட்டாய பாடமாகவும் ஆக்கப்பட்டிருந்தது. ஆங்கிலத்தைக் கட்டாய பாடமாகப் படிப்பதால் தாய்மொழியின் கண்ணுள்ள தமக்குரிய இலக்கியங்களைக் கற்கத் தவறிவிடுகின்றனர். ஆங்கிலம் அன்றாட வாழ்க்கைக்குச் சிறிதும் பயன்படுவதில்லை. மேலும் அவர்கள் ஆங்கிலம் கல்லாதாரை இகழ்கின்ற னர். அவர்களைவிட்டு விலகி வாழ்கின்றனர். அதனால் கூடிவாழும் சிறந்த பண்பும் ஒற்றுமையும் பறந்து குலைந்து ஒழிகின்றன என்பதே.

## வடவெல்லை

தமிழ் வளர்ச்சிக் கழகச் சார்பில் நடந்த மாபெருங் கூட்டம். தலைவர் திரு. கே. விநாயகம் அவர்கள். மொழிவாரி மாகாணப் பிரிவின்போது திருத்தணி, புத்தூர், சந்திரகிரி, சித்தூர், பலமனேரி, குப்பம் ஆகிய ஆறு தாலூகாக்களும் தமிழ்நாட்டுடன் இணைக்கப்பட வேண்டுமென்னும் தீர்மானம் ஒருமனமாக நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

## 'ஔவையார்' நாடகம்

திருவல்லிக்கேணி பெண்கள் பாடசாலைக் கலாமண்டபத்தில் டி. கே. எஸ். பிறப்பாளர் நடித்த 'ஔவையாரைக்' கண்ணுற்றுத் திருவாங்கூர் மன்னர், "கிழவியாகவா இளைஞர் நடிக்கிறார் என்று தெரியவே யில்லையே; அவ்வளவு அருமையாக இருந்தது," என்று தமிழில் மொழிந்தனர்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு உரு } திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௨, தை பிப்ரவரி, 1951 { பரல் ௬

## தனிப்பெரும் புலவர்
# சலசலோசனர்

[சித்தாந்த பண்டிதர், புலவர், ப இராமநாத பிள்ளை]

### நாடும் ஊரும்

முத்தமிழ்த் துணையால் முறைதிறம்பாது வாழும் முதியவர் சான்றோர் எனப்படுவர். சான்றோர் வாழும் நாடே நாடாகும். ஏனைய கடும்புலி வாழும் காடாகும். ஒழுக்கமே உயர்திணை. ஒழுக்கம் இன்மையே அஃறிணை. மக்கள் உருவு எய்தினால்மட்டும உயர்திணையாதல் முடியாது. மக்கட் பண்பு எய்தினாற்றான் உயர்திணையாதல் முடியும். பிறரால் சுட்டப்படுவது பண்பையே. இவ்வுண்மை புலப்படுப்பான் வேண்டியே ஆசிரியர் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார்,

> "உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே" —தொல். சொல். ௧

என்று ஆணையிட்டருள்வாராயினர். உலகம் "பண்புடையார்ப் பட்டுண்டு" என்பது தமிழ்மறை. பண்பு பலவாயினும் எல்லாம் அடங்கும் தலைமைப் பண்பு ஐந்தாகும். அவை: அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ப.

இவ்வுண்மை,

> "அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
> ஐந்துசால்பு ஊன்றிய தூண்" —திருக்குறள், ௯௮௩

என்னும் பொய்யா மொழியால் விளங்கும்.

இயற்றமிழ் உயிராகவும் இசைத்தமிழ் உளமாகவும் நாடகத்தமிழ் உடலாகவும் கொண்டு நனி நாகரிகம் இன்னிமையுற

நடவாதிற்கும். அதனாலேயே முத்தமிழ் வல்லார் முறை நிறுத்தும் திறவோர் ஆயினர்.

"என்றும் இயலுயிராம் ஏற்ற இசையுளமாம்
நின்றவுடல் நாடகமாம் நேர்."

ஐம்பெரும் பண்புகள் செம்மையுற வாய்த்து 'ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர் வாழும்' நாடு தொண்டை நாடு. இந்நாட்டகத்து நீர்வளம் நிலவளம் குடிவளம் நெறிவளம் நிரம்பப் பெற்றது 'திருஎவ்வுளூர்' ஆகும். இவ்வூரின்கண் "இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்" என்று உள்ளதை உள்ளவாறு உரைக்கும் செந்நாப்புலவர் தொல்காப்பியரால் உரைக்கப் பெற்ற வணிக வேளாளர் மரபு சிறந்துள்ளது.

## தந்தையார்

அம்மரபில் பெரும்புலமை வாய்ந்து திகழ்ந்தவர் திரு. இராமசாமிச் செட்டியாரவர்கள் ஆவர். இவர்கள் செந்தமிழ்ப் புலமையும் சிவனெறிப் பற்றும் ஒருங்கமைந்த பெருந்திருவினர். ஒழுக்கம் உயிரென ஓம்பும் விழுப்பஞ்சேர் ஒண்மையர். அருளாற்றலால் மருள் தீர்ந்த மாண்பினர். 'அருச்சனை பாட்டேயாகும்' என்னும் அருள் முறைப்படி செந்தமிழ்ப் பாப்பாடிச் சிவவழிபாடு செய்யும் செல்வர். உடலூணினும் உயிரூணாகிய வழிபாட்டை ஒல்லும்வகை ஓவாது உஞற்றிவந்த உண்மையர். திருவெண்ணீறும் கண்மணியும் விளம்பும் அஞ்செழுத்தும் உண்ணீர்மையாகக் கொண்டு ஒழுகும் ஒழுக்கினர். திரு எவ்வுளூர்ப் பிள்ளையார் மேலும், இறைவன் இறைவியர் மேலும் இன்தமிழ்ப் பதிகங்கள் இயற்றியுள்ளார்கள். பலவகை யாப்பும் உலகியல் முறையும் பாங்குறத் தெரிப்பது கலம்பகமாகும். அஃது எல்லாரானும் எளிதிற் பாடத்தக்க தன்றென்பதினாலேயே "கலம்பகத்துக்கு இரட்டையர்கள்" எனக் கல்வி வல்லார்களாலும் புகழப் பெற்றுள்ளது. அத்தகையதொன்று "திருஎவ்வுளூர்க் கலம்பகம்" அந்நூலும் நம் இராமசாமிச் செட்டியாரவர்களால் பாடப்பெற்றுள்ளது. மேலும், திரு ஆலவாய், திருக்குடந்தை, திருமாயூரம், திருவிடைமருதூர் முதலிய திருவூர்க் கடவுளர் மேலும் செந்தமிழ்ப் பதிகங்கள் பல பாடியுள்ளார்கள். அங்கதம் (அறம்) பாடுதலிலும் வல்லர்.

## வணிகம்

இவர்கள் வணிகத்தின் பொருட்டுக் கோநகராகிய சென்னையம்பதியில் வந்து குடியேறினார்கள். "பிறர் பொருளும் தம் பொருள்போற் பேணிச் செய்யும்" பெற்றியராய் வணிகம்

நடத்தினர். 'கொள்வது மிகைபடாமல் கொடுப்பது குறை படாமல்' உள்ளம் உவந்து உடையானை நினைந்து வணிகஞ் செய்தனர். இம்மையும் மறுமையும் ஒருங்கு தருவதாய் செம்மையூதியம் பெற்றுத் திகழ்ந்தனர். இவர்தம் தோற்றமும் புலமையும் காண்பார், இவர் தொன்மைக் கூலவாணிகன் சாத்தனார் போன்ற சீரியர் என்பர். பட்டினத்துப் பிள்ளையார் முதலியவர்களை யொத்த பண்பினர் என்பர்.

## வாழ்க்கை

நல்லறமாம் இல்லறத்தை நன்னாளால் கைக்கொள்ள நாடினர். அறிவும் அழகும் அன்பும் பொறையும் கற்பும் பொற்பும் காதலும் செறிவும் தெய்வ நாட்டமும் சேரப்பெற்ற நங்கை திருமதி பூங்காவனத்தம்மை யாரைச் செந்தமிழ்த் திருமணஞ் செய்தனர். அன்பொருமித்து அகம்புறத் தொண்டுகளை 'அணியும் அமிழ்தும் ஆவியும் ஆகிக், கண்ணொளிபோற் கலந்து இல்வாழ்க்கையை நடத்தினர். விருந்துபேணல் சுற்றம் ஓம்பல் ஈகை இன்சொல் பணிவு கனிவு ஒழுக்கம் நனிமிகக் கொண்டு நாயனடிமறவாது வாய்மைத் தூயராய் வாழ்ந்து வந்தனர்.

அடியார்க்கு அமுது ஊட்டுந்திறத்தில் ஆர்வம் மிக்கவராய்ச் சோர்வின்றி நாளும் ஒழுகினர். 'பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தற்குப் பத்தராகி அரும்பு நன்மலர்கள் கொண்டு' அம்மையப்பர் திருவடியைச் செம்மையுறப் போற்றுவர். திருமுறை ஓதா வழிபாடு உயிரில் உடலும், உப்பில் உணவும், ஒழுக்கில் உயிரும் போன்று விழுப்பம் எய்தாதென்பதும், விழலுக்கு இறைத்த நீராம் என்பதும் விளங்கிய திறத்தராய்த் திருமுறையோதி வழிபட்டு வந்தனர். 'ஈயாமாக்கள் இயம்பும் தீமொழியாம்' இல்லையென்பது இவர்கள்பால் இல்லையென்பதே எஞ்ஞான்றும் எய்திற்று. அதனால் 'இல்லாண்மை ஆக்கி நல்லாண்மையாம்' நற்பெயர் பூண்டனர்.

## பிறப்பு

'மனையறத்தில் இன்பமுறும் மகப்பெறுவான் விரும்பித்' தவம் புரிந்தனர். புனைமணிப்பூண் காதலர் ஒருமூவர் தோன்றினர். அவர்கள் முறையே, பாலசுந்தரர், சிவானந்தர், சலசலோசனர் எனத் திருப்பெயர் பெற்றவர் ஆவர். (சலசம்-தாமரை, விலோசனர்-கண்ணர்) சலசலோசனர் என்பது தாமரைக்கண்ணர் என்னும் தமிழ்ப் பெயரால் வழங்கப்பெறும். தாமரைக்கண்ணர் இளமையிலேயே தெய்வ நாட்டமும் தீந்தமிழ்ப் பற்றும் கூர்ந்த அறிவும் தேர்ந்த மொழியும் உடையவராய்த் திகழ்ந்தனர். பிள்ளையார் வழிபாட்டில் பெரும் பற்றுக்

கொண்டு ஒழுகினர். இவற்றை எல்லாங் கண்ட உலகோர் "தந்தை அறிவே மகன் அறிவு" என்னும் தன்மைக்கு எடுத்துக் காட்டாவார் தாமரைக் கண்ணரே என்று சாற்றினர்.

படிப்பு

எண்ணரும் திண்ணைப் படிப்பு நண்ணிய பின்னர், வண்ணப் படிப்புப் பல படிக்க எண்ணினர். சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் சேர்ந்து கற்றனர். அக்காலத்து மேன்மை உவல்லியம் மில்லர்த்துரை மகனர் கல்லூரி முதல்வராய்த் திகழ்ந்தனர். திரு. பரிதிமாற் கலைஞரென்னும் சூரிய நாராயண சாத்திரியார் தமிழ்ப் பேராசிரியராய் வீறுகொண்டு வீற்றிருந்தனர் இருவர்பாலும் ஆங்கிலமும் தீந்தமிழும் பாங்குறப் பயின்றனர். பயிலுங் காலத்தே புதிய பாட்டுப் பாடுவது மிகவும் எளிதாக இருந்தது நம் தாமரைக்கண்ணர்க்கு. அப்பாட்டும் இனிமையும் எளிமையும் திட்பநுட்பமும் இயற்கையாகவே செறிந்து திகழ்ந்தது. யாவரும் போற்றிக் கொண்டாடினர். கல்லூரிப் பாடங்களில் முதன்மையுறத் தேர்தலும் பரிசு பெறுதலும் மிக எளிதாக இருந்தன. உடன்பயில் மாணவரும் ஒருசாலை மாணவரும் ஒருங்கு போற்றினர். விரும்பி நண்பு பூண்டனர். இவர் போல் நாமும் எழிலுற வேண்டுமென்று விழைந்தனர். ஆசிரியர்களும் இவரின் அன்பும் அடக்கமும், வாய்மையும் தூய்மையும், அறிவும் செறிவும், பொறையும் நிறையும், பொய்யா ஒழுக்கமும் கண்டு இறும்பூது எய்திப் புகழ்ந்தனர். "இவன் தந்தை என்னோற்றான் கொல் என்னும் சொல்" இவர்பால் பட்டாங்காய்த் திகழும் பான்மை கண்டு முட்டாச் சிறப்பு இஃதென மொழிந்தனர்.

நூல்யாப்பு

கட்டிளமைக் காலத்தே திரு எவ்வுளூர்க் கணபதி என்னும் ஆனைமுகக் கடவுள்மேல் செந்தமிழ்ப் பதிகம் பாடி வழுத்தி வந்தனர்.

உண்மையான வாழ்க்கை ஒருமணத்தால் ஆவது என்பதும், மறுமணத்தால் பெற்ற மக்களையும் வாடவிடுவர் என்பதும், நல்லோர்க்குப் பொறுக்கலாகாத் துன்பம் மலைபோல் வரினும் உறுதி தளராது உண்மை கடைப்பிடித்துப் பொறையும் நிறையும் தாங்கி "அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கட் படும்," என்பதை மெய்ப்பித்து வென்று புகழ் மேம்படுவர் என்பதும், நல்ல நண்பர் உற்றுழி யுதவி ஒல்லும் வகை ஊன்றும் நிலையினராவர் என்பதும், தீயோர் கழிகாமத்தராய்ப் பழிபாவங்கட்கு அஞ்சாது படைத்து மொழிந்தும், கடைத்தொழில்

புரிந்தும், காதலர்ப்பிரித்தும், சூது பல இயற்றியும் உலகைக் கெடுப்பதே உலையா முயற்சியாய் உழன்று இறுதியில் எண்ணரும் துன்பெய்தி இகழப்படுவர் என்பதும், காடுறைய நேரினும் குடிப்பிறந்தார் "நகையீகை இன்சொல் இகழாமை நான்கும்" தகைபெறக் கொண்டு சான்றோராய் வாழ்வரென்பதும், ஆண்மையும் ஆற்றலும் உடையார் அறந்துணையாகத் தீமையை அழித்து நன்மையை வாழ்விப்பர் என்பதும் உலகுக்கு உணர்த்த வேண்டுமென உன்னினர். என்னை? தாம் உணர்ந்த உண்மையை உலகுக்கு ஒளியாமல் உணர்த்துவதே உயர்ந்தோர் ஒழுக்கம் ஆகலின்.*

இம்முறைகளைத் தம் கல்லூரிப் படிப்புக்கு இடையே நூல் வழியாக்கத் துவங்கினர் தாமரைக்கண்ணர். அந்நூலும் கதை தழுவிய நாடகமாக இருப்பது நலமென எண்ணினர். உலகப் புகழ் எய்திய ஆங்கிலப் புலவர் பெருமான் செகப்பிரியர் செய்த பலவேறு நாடகங்களுள் தலைசிறந்தது சிம்பலைன் (Cymbeline) என்னும் நாடகம். அதைச் சரசாங்கி எனப் பெயர் தந்து ஒரு நூலாக ஆக்கினர். அம்மட்டுமன்று, நம் நாட்டு நாடகப் பேராசிரியர், திரு. இராவ்பகதூர். சம்பந்த முதலியாரவர்களுடன் சரசாங்கியாகவே கோலங்கொண்டு அவையோர் வியப்புற நடித்துக் காட்டிப் பெரும் புகழும் பெற்றனர். திரு. முதலியாரவர்கள் அஞ்ஞான்று அளவிறப்பப் பாராட்டி வாழ்த்தினர். அவர்கள், இவர்களின் தகையை உரைக்கப்புகின் கண்ணீர் உகுத்துப் பரிவுகூர்கின்றனர். இந்நூல் அரை நூற்றாண்டுகளுக்கு முன் வெளிவந்துள்ளது. செய்ந்நன்றி மறவாச் சீர்மையால் ஆசிரியர் தம் கல்லூரி முதல்வர் மேன்மை உவல்லியம் மில்லர் துரை யவர்களுக்கு இந்நூலை, உரிமை ஆக்கியுள்ளார்கள். இஃது ஆசிரியரின் உளநிலை விளக்கும் விழுப்பமாகும். இப்பொழுது நம் கழகத்தாரால் செம்மையுற இரண்டாம் பதிப்பாக வெளிவருகின்றது. இதனை ஒவ்வொருவரும் கற்று, உண்மையுணர்ந்து ஒழுகி வண்மையுற வாழவேண்டுவது இன்றியமையாததென்க. இந்நூல் ஆசிரியர் உரைநடை, பல்வகைப்பா, வண்ணப்பா முதலிய முறையுறயாத்துள்ளார்கள். மேலும், "முன்னோர் மொழி பொருளேயன்றி, அவர் மொழியும், பொன்னேபோல் போற்றும்" பொய்யா வாய்மைக்கு எடுத்துக் காட்டாகத் தொல்காப்பியம், திருக்குறள் முதலிய சங்கமருவிய

*ஒருமணமே திருமணமாம் உறுதியறம் அன்புடையார் ஒழியாத் துன்பம் பெருமலைபோல் எய்துறினும் பின்புநலம் பெற்றுயர்வர் மறுமணத்தால் வருந்தீங்கிங் களப்பிலவாம் மக்களையும் வாட்டுவிப்பர் வாய்மை நண்பர் அருஞ்சிறப்பும் தீயோர்தம் அழிமுறையும் அறிகசரசாங்கிக் கண்ணே.

நூற்களும், திருமுறை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், நளவெண்பா, நைடதம் முதலிய நூற்களும் விளக்கும் நயஞ்சேர் திருப்பாட்டுக்கள் பல இடையிடையே வேண்டும் இடங்கள் தோறும் ஆண்டுள்ளார்கள். அவ்வவ் இடங்களில் தாம் பாடிய பாட்டுக்களும் பலவுள்ளன. படிப்போர் இடம்நோக்கி உணரின், பாடல்கள் எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றன என்று இயைபெண்ணி மகிழ்வர்.

புகழுரை

நூலையும் நூலாசிரியரையும் போற்றி மெய்யுரை நுவன்றோர் பலராவர். அவருள் தலைசிறந்தவர் "மனோன்மணீய" ஆசிரியர் பேராசிரியர், இராவ்பகதூர். திரு. P. சுந்தரம் பிள்ளை எம். ஏ. அவர்கள், கிறித்துவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் பி. ஏ. அவர்கள், கயப்பாக்கம் திரு. இ. சதாசிவ செட்டியார் பி. ஏ. அவர்கள் முதலியோர் ஆவர்.

போற்றும் செயல்

ஆசிரியர் "சொல்லியவண்ணம் செய்யும் அருமையை எளிமையாக்கிச் சொல்லுவதும் எளிமையே," என நடித்துக் காட்டிய திறம் வியக்கத்தக்கதன்றோ? பார்மின்! ஆசிரியர் நாடகத்துட் பெய்திருக்கும் நயங்களை நவில்தொறும் நாநயம் பயக்கும், உள்ளுதொறும் உள்ளம் உவக்கும்; உணருந்தொறும் உயிர் இனிக்கும். இத்தகைய நூலணி நம் தமிழன்னைக்கு அணிந்து தம் கடமையைக் காலமுண்டாக ஆக்கிய ஆசிரியரைக் கருதி வாழ்த்துவோமாக. நாமும் அவர் வழிபற்றித் தமிழன்னைக்கு நூலணி அணிவோமாக.

நயம்

விரிவஞ்சி நாடகத்துள் சில நயங்களை ஈண்டுக்காட்ட விழைகின்றனம். அழகானந்தனின் களவுப் பிரிவால் கலக்கமுறும் சரசாங்கி, முல்லைக்கொடிகளைப் பார்த்து மொழியும் மொழிகள் :—

> "ஏ! முல்லைக் கொடிகளே! கணவனை நினைந்து இப்படியும் ஒரு பெண் ஏங்குவாளோ என்று என்னை நகையாடி இகழ்கின்றீர்களே! இகழாமல் எனது வேண்டுகோளுக்கிரங்கி நீர் தலையசைத்துச் சென்ற வழியைக் காட்டினீரானால், என்றும் உம்மை மறவாத எனக்குப் பேருதவி புரிந்தவராக மாட்டீரோ?"

துன்மதியால் வஞ்சிக்கப்பட்டு அழகானந்தன் சரசாங்கியின் கற்பில் ஐயுற்று அவளைக் கொன்றுவிட வேண்டுமெனப்

பிழைபடத் துணிகின்றான். நண்பன் சுகுணனுக்கு எழுத்து வழி அறிவிக்கின்றான். சரசாங்கி நடுக்காட்டில் அவ்வெழுத்தைக்கண்டு ஆற்றொணாக் கொடுந்துயரெய்தி நெஞ்சழிந்து புலம்புகின்றாள்.

> "கைகேசி மனந்திரியக் கற்பித்த கூனியைப்போல்
> மையார்கண் மடவாரோ மைந்தரோ மண்ணுலகில்
> ஐயாவென் காதலனை யாரோவிக் காரியத்தைச்
> செய்வாயென் றிப்பொழுது சிந்தையுறக் கற்பித்தார்."

சரசாங்கி ஆண் உடையோடு காட்டில் களைப்புற்றுச் செல்லுமிடம் அறியாது தள்ளாடிச் செல்லுகின்றாள். பசி தலைக்கேறப் பத்தும் பறந்துபோம் என்னும் பண்பினை நம் ஆசிரியர் அவள் மாட்டு வைத்துக் காட்டுகின்றனர்.

> " ஐயா ; உங்களைப் பார்த்தால் இரக்கமுடையவர்களாகத் தோன்றுகின்றது ! நீங்கள் என்னை மன்னித்து அருள் புரியவேண்டும். எனக்கு யாதொரு தீங்கும் புரியீர்கள் ! இங்குக் கதவை நீண்டநேரம் தட்டிப் பார்த்தேன். பிறகு பசியால் காதடைத்துக் களைத்திருந்தேன் ஆதலால், நீராவது இருக்கலாமென்று நினைத்து உள்ளே நுழையப் பாலும் பழமும் இருந்தமை கண்டு அதிற் சிறிது அருந்தினேன். திருட்டு எண்ணத்துடன் வந்தேனல்லேன்."

விருந்தோம்பும் முறையைக் குணநிதி விக்கிரமன் வீரசேனர் வாயிலாக வலியுறுத்தும் பான்மையினைக் கூர்ந்து நினைமின்.

> " நீ இங்கேயே எங்களுக்கு விருந்ினராய் இரு ! நீ அஞ்ச வேண்டியதில்லை ! என் தம்பியைப்போலவே உன்னை நினைத்தேன் ! நீ என் அருமைத் தோழனாய் !"

நம்பிக்கையால் ஆகும் நன்மையை வலியுறுத்த,

> " இவர்கள் சிறந்த மனிதர்கள், இவர்களை நம்பலாம். இன்று இங்கு வரும்போது காக்கை வலமாயிற்று ! ஏதோ நன்மை உண்டென்று நினைத்தேன் ! நல்ல வேளையாய் ஆண்வேடம் தரித்து வந்தோமே ! நல்லது இவர்களே அண்ணன்மாரென நினைத்து இரண்டு மூன்று நாள் இங்கிருப்பேன் !"

மயங்கிக் கிடந்த சரசாங்கியை இறந்தவளாக நினைத்து வேண்டுவ செய்து வருந்திப் புலம்பிய பாட்டுக்களுள் ஒன்று,

> "நடுவனெனப் பேர்கொண்டு நட்டாரைப் பிரித்திடுவாய்
> படுதொழிலைக் கைக்கொண்ட பாதகனே கொடுங்கூற்றே
> அடுதொழிலைக் கைக்கொள்ளா அருமைபெறுஞ் சுந்தரனுக்
> கிடர்செய்தாய் நன்றோவீ தியம்பிடுவா யியம்பிடுவாய்."

நம் இளம் பெரும் புலவர் தம் இருபத்தொன்றும் அகவைக்குள் 'கலைத்தலைவன்' (எம். ஏ.) பட்டம் பெற்று எழிலுற விளங்கினர். யாவரும் இப் பெருந்தகையார் வழிப் பற்பல நூல் நம் அருந்தமிழ் அன்னைக்கு மணி அணியாய் வரவேண்டும்

என எதிர் பார்த்தனர். நம்பினர். ஆற்றலும் அறிவும் தோற்றமும், மொழிபெயர்ப்பு வண்மையும் நுண்மாண் நுழைபுலத்திண்மையும் ஒருங்கு வாய்ந்த ஒப்பில் ஒருவரை, அறிவுடைய உலகம் எப்படி நம்பாமல் இருக்கும்.

பெரும்பேறு

எல்லாருடைய நம்பிக்கையும் கொன்னே கழியத் தன்னேரில் புலமைச் செம்மல் இருபத்திரண்டாம் அகவையாம் கட்டிளமைப் பருவத்தே இவ்வுலகை விட்டகன்றனர். அவர்தம் பிரிவிற்கு அல்லலுற்று இரங்காதார் எவரே! கல்லூரி முதல்வர் மேன்மை உவல்லியம் மில்லர்த் துரை மகனுர் எதிர்பாராத, ஈடு செய்ய முடியாத இவ் இழப்பினைக்கேட்டுக் கையறு நெஞ்சினராய்க் கண்ணீர் வார்ந்த முகத்தினராய் இளம் புலவர் இல்லத்துக்கு வல்விரைந்து வந்தனர். ஆவியகன்ற யாக்கைப் பொலிவினைக் கண்டு ஆராத்துயரெய்தி அழுதனரென்ப. நல் அறிவு நின்ற யாக்கை செல்வப் பொலிவுடன் ஆவியகன்ற பின்னும் திகழும் வாய்மையை எவரும் கண்டு ஏத்தினர்.

நம் புலவர் வழிவழிச் செம்பொருட்டுணிவும் சிவனெறிச் சார்வும் சேர்ந்தவராதலால் சிவனடி நீழல் எய்தி இன்புறுவர் என்பது உறுதி. அவர்க்கு நாம் செய்யும் கைம்மாறு, அவர் நூலைக் கற்றலும் கற்பித்தலும், வாங்கலும் வாங்குவித்தலும் செய்து எங்கணும் பரப்புவதேயாம். அவரது திருவுருவப் படத்தினைக் கல்லூரி நூல்நிலையம் கழகம் முதலியவற்றில் தக்கவாறு திறந்து வைத்தல் முதலிய நினைவுக்குறி செய்தலுமாம்.

இவர் செய்த முறைபோன்று பிறமொழி வல்லார் நம் தமிழ் மொழிக்கு அப்பிறமொழிக்கண் தாம் தம் நுண்மாண் நுழைபுலத்தால் கண்டுணர்ந்த கருத்துக்களைத் தொகுத்தும் விரித்தும் தொன்மைத் தமிழ் மரபமைய நூல் யாத்துப் பரப்புதலும் சிறந்த கைம்மாறாகும். அம்மையப்பர் அடியிணைக்கீழ் அவர் என்றும் செம்மையுற இன்புற்று வாழ்வாராக.

“ சச்சந்தன் மறுமணத்தைத் தடைசெய்குணி நீதிச்செல்வன்
[சார்ந்த மக்கள்
பொச்சமிலா விக்கிரம வீரசே னர்வளர்த்தல் சுகுண நண்பன்
அச்சமில்சீர்ச் சரசாங்கி அழகானந் தன்முதலோர் அறத்தால்
[வாழ்தல்
கச்சகுணத் துன்மதிசங் கிரசேக ரக்கனகர் கதியுங் காணே.”

# பதிற்றுப் பத்து

[வித்துவான், மு. ந. வேலாயுதனார், புதுவை.]

இலக்கிய நூல்களுள் எட்டுத்தொகையே மிகவும் பழமை வாய்ந்தது. அத்தொகை நூல்கள்,

> " நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
> ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
> கற்றறிந்தார் போற்றுங் கலியோடு அகம்புறமென்
> றித்திறத்த எட்டுத் தொகை "

என்பனவாம். அவற்றுள் பதிற்றுப் பத்து நான்காவதாகக் குறிக்கப்பட்டுள்ளது. தமிழ்நூலுக்குப் புலவர்கள் நூலியற்றிய ஆசிரியர் பெயரையும், செய்யுளின் அளவையும், பொருளையும், வடிவையும் பின்பற்றிப் பெயர் கொடுத்திருக்கின்றனர். அந்த முறையை அடியொற்றி, இந்நூலுக்குப் பதிற்றுப்பத்து என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. பத்து பத்துக்கள் உண்டு. ஒவ்வொரு பத்திலும் பத்துப் பாக்கள் அடங்கியிருக்கின்றன. ஒவ்வோர் பத்தையும் ஒவ்வோர் புலவர் பாடியிருக்கின்றனர். முதற் பத்தும், பத்தாம் பத்தும் கிடைக்கவில்லை. கிடைத்த செய்யுட்களில்கூட அடிகள் குறைகின்றன. முதற் பததோ, அல்லது பத்தாம் பத்தோ என்று ஐயங்கொள்ளும் வண்ணம், சில செய்யுட்சள் காணப்படுகின்றன. அவற்றிலும் அடிகள் குறைகின்றன.

பொருளிலக்கணம் அகம், புறம் என இருவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. பதிற்றுப்பத்து புறத்தைச் சார்ந்தது இந்த நூல் இலக்கியத்திற்கு மாத்திரமன்றி வரலாற்றாசிரியர்களுக்கும் நல்ல விருந்தளிக்கிறது. இதில் சேர அரசர்களைப் பற்றியே எல்லாப் புலவர்களும் பாடியிருக்கின்றனர். அரசர்களின் வீரம், வெற்றி, கொடை, நாடுகாத்தலிற் சிறப்பு, புலவர்களிடம் அன்பு, அவர்களுக்களிக்கும் பரிசில், குடிகளிடம் உள்ள பேரன்பு, இல்லாளுடன் வீற்றிருக்கும் சிறப்பு முதலியன கூறப்பட்டிருக்கின்றன.

சேர அரசர்கள் செருக்களத்தில் பகைவரைத் தோற்றோடச்

இந்நூலில், குமட்டூர் கண்ணனார், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்மீது இரண்டாம் பத்தையும், பாலைக் கௌதமனார், பல்யானைச் செல்கெழுகுட்டுவன்மீது மூன்றாம் பத்தையும்,

காப்பியாற்றுக்காப்பியனார், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல்மீது நாலாம் பத்தையும், பரணர், கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன்மீது ஐந்தாம் பத்தையும், காக்கைபாடினியார் நச்செள்ளையார், ஆடுகோட்டுச் சேரலாதன்மீது ஆறாம் பத்தையும், கபிலர், செல்வக்கடுங்கோ வாழியாதன்மீது ஏழாம் பத்தையும், அரிசில்கிழார், தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை மீது எட்டாம் பத்தையும், பெருங்குன்றூர்கிழார், இளஞ்சேரல் இரும்பொறைமீது ஒன்பதாம் பத்தையும் பாடி இருக்கின்றனர். அரசர்கள், கவிஞர்களை ஆதரித்து அவரவர் தகுதிக்கேற்றவாறு நாட்டின் வருவாயும், பொன்னும், பொற்காசும், கவிஞர் விருப்பப்படி மலைமீது ஏறி, தேர்ந்து பார்த்தெடுத்த நல்ல நிலங்களும் பரிசிலாக அளித்தனர்.

சேர அரசர்கள், புலவர்களைப் பாராட்டிவந்ததால் தமிழ் இலக்கியங்கள் உருக்கொண்டன. அவ்வரும்பெரும் இலக்கியங்களுள் ஒன்றாகிய இப் பதிற்றுப்பத்துக்குப் பழைய உரை ஒன்றுண்டு. இருந்தாலும், சங்கநூல் பயிலும் மாணவர்க்கு அது பற்றாது. இக்குறையைக் குறிப்புரையால் போக்கி வைத்த பெருமை, தண்டமிழ்த்தாயின் தனிப்பெரும் புதல்வர் டாக்டர், உ. வே. சாமிநாத ஐயரவர்களைச் சார்ந்ததாகும்.

இரண்டாம் பத்தின் பதிகத்தில், அரசனின் வீரத்தைக் கூறும்போது, முருகக்கடவுளின் செயலை ஒப்பிட்டுப் புலவர் கூறுகின்றார். முற்காலத்தில் வாழ்ந்துவந்த சூரவன்மா என்னும் பகைவனை ஒழிப்பதற்கு முருகன், மலைபோன்று உயரும் அலைகளையுடைய கடலில் இருந்த காவல்மரமாகிய மாமரத்தை வெட்டினான். இங்கு ஒன்று கவனிக்கவேண்டும். காவல்மரமென்பது ஒரு நாட்டின் எல்லைப்புறத்தே அரணாக ஓங்கிவளரும் மரமாகும். பகைவர்கள் ஊருக்குள் புகுவதற்குமுன், அம் மரத்தை வெட்டிவிடுவார்கள். அப்படி வெட்டப்பட்ட மரத்தைக்கொண்டே முரசு செய்வார்கள். எனவே, காவல் மரமாகிய மாமரத்தை முருகன் வெட்டினான். பின் வென்றிச்சிறப்பால் யானைமீது ஊர்ந்தான். இச்செயல்களையெல்லாம் சேர மன்னனுக்குச் சார்த்தி அமைக்கப்பட்டன.

> "வரைமருள் புணரி வான்பிசி ருடைய
> வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூல்
> களியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
> அணங்குடை யவுண ரேமம் புணர்க்கும்
> சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
> கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு"

என்று கூறப்பட்டிருத்தலை நோக்கலாம்.

எப்படிச் சேரமன்னன், பகைவர்களை ஒழித்தான் என்ற செய்தி மிகவும் விளக்கமாகவும் இயற்கைக்கு முரணின்றியும் காணப்படுகின்றன. பகைவர்கள் எதிர்த்து நிற்பாரல்லவா? அங்ஙனம் எதிர்த்தவர்களை, வேல்கொண்டு பிறர் எவராலும் முடியாதவாறு, அவர்கள் மார்பகத்தைத் துளைத்துவிட்டான். துளைக்கப்பட்ட அப் புண்ணிலிருந்து இரத்தம் வடிகிறது. நீல நிறம்போன்ற அகழியில் உள்ள நீர், வீரர்களின் இரத்தம் பாய்வதால் அகழி முழுதும் குங்குமம்போலச் செந்நிறமாய்விட்டது. இவ்வாறு அழித்தபின் அரண்கடந்து பகைவர் காவல்மரமாகிய கடப்பமரத்தை வெட்டி, புகழ்ச்சிக்குரிய வெற்றிகொண்டான். எனவே, பகைவர்களை வஞ்சியாது, வெற்றிகொள்வதே மற வேந்தர்க்கழகு. வஞ்சித்து வெற்றிகொள்வது வெற்றியாகாது.

இதனை,

"மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்று தலையழிக்குஞ் சிறப்பிற் றென்ப"

என்ற தொல்காப்பியப் புறத்திணைச் சூத்திரத்திற்கு விளக்கங் காண வந்த நச்சினார்க்கினியர், "அறத்தினலன்றி வஞ்சனையாற் கொல்லுதலும், தேவரால் பெற்ற வரங்களால் கொல்லுதலும் சிறப்பாகா," என்று கூறுகின்றார்.

அரசர்கள், கல்வி, ஈகை, ஆட்சி முதலியவற்றில் நன்கு புகழ் அடையலாம். ஆனால், எல்லாப் புகழைக் காட்டினும் வீரத்தின் மேம்படுதலே சிறந்த புகழ். இதைக் குமட்டூர் கண்ணனார் என்ற புலவர் 'மறம் வீங்கு பல்புகழ்' என்று சிறப்பிக்கின்றார். இதுவே, ஒரு செய்யுளின் பெயராகவும் அமைகிறது.

சேர மன்னர்களின் வீரர்கள் மாத்திரம், பகைவர்களை நொறுக்கி வெற்றி கொள்வதில் வல்லவர் என்று நினைக்க வேண்டாம். மன்னனது முரசுகூட, தன் தொழிலால் பகைவர்களை விரட்டி நல்ல வெற்றியை அடைந்திருக்கிறது. எவ்வாறெனின், போர் முரசு கேட்டதுமே, மாற்றார்கள் ஆற்றாது அச்சத்துடன் ஓட்டமெடுக்கலாயினர். காரணம் அம் முரசின் ஒலியே பகைவரின் வயிற்றில் கனலை மூட்டிவிடும். அம் முரசொலி கேட்பதற்குமுன் வீரத்தைக் கொண்டிருந்த பகைப்புல மறவர்கள், இனித் தங்கள் கருத்து முற்றுப்பெறாதென்றுணர்ந்து வெருவியோடுவர். இக்கருத்தாலேயே 'வலம்படு வியன்பணை' யென வெற்றி முரசைச் சிறப்பிக்கின்றனர்.

அரசனின் வெற்றியைப் பரணர் என்னும் புலவர் அழகாக எடுத்துக் காட்டுகின்றார். வீரர்கள் பொன்னாற் செய்த தும்பை

மலரை அணிந்துகொண்டு, பகைவர் மதிலைக் கடந்து செல்கின்றனர். அவர்கள், அம்புகள் பொருத்தப்பட்ட தூணியைக் கொண்டிருக்கின்றனர். அதில் உள்ள அம்புகள் மிகவும் கூர்மை வாய்ந்தவை. பகைவர்களை ஒழிக்கவல்லன. தூணிக்குப் புற்றும் அம்புக்குப் பாம்பும் உவமைகள். புற்றில் உள்ள பாம்பு எந்த நேரத்திலும் வெளியே புறப்பட்டு இன்னல் செய்ய வல்லது. அதுபோலவே, தூணியாகிய புற்றில் உள்ள அம்புகள் நச்சுக் கனலைக் கக்கி, மாற்றாரை வேற்றுலகிற்குக் கொண்டுபோகச் செய்யவல்லன. அம்புகளை எறிவதற் கேற்ற வில்லோ வளைந்து, காரியத்தைச் சாதிக்கக் கூடியது; ஆனால், வீரனின் மனம் ஒரு போதும் வளையாதது.

கையில் கொண்டுள்ள வேல் எப்படிப்பட்டது? ஆண் யானைகளின் மேல் எறிந்ததால், அவ்வேல் அதைக்குத்திக் காயப்படுத்தி வடுக்களைப் பெற்றதாகும். மதம் பொருந்திய ஆண் யானையையும் எதிர்த்துநின்று, தன் வேலினால் கொல்லுந் தொழிலுடைய மறவன் மரணத்திற்கு ஒருபோதும் அஞ்சுவதில்லை. யாக்கை நிலையாமை என்ற தத்துவத்தை உணர்ந்தவன் ஆதலால், அவன் மனத்தில் வீரமே வீற்றிருந்தது. உயரிய உள்ளத்தையும் வீரத்தையும் ஒருசேரக்கொண்ட வீரர்களை 'விழுமியோர்' என்று ஆசிரியர் பரணர் பகர்வதில் வியப்பொன்றுமில்லை. இதையே,

> "பொலம் பூந்தும்பைப் பொறிகிளர் தூணிப்
> புற்றடங் கரவி னொடுக்கிய வம்பின்
> நொசிவுடை வில்லி னொசியா நெஞ்சிற்
> களிறெறிந்து முரிந்த கதுவா யெஃகின் விழுமியோர்."

என்று கூறுகின்றார்.

மன்னர் உயிர்களிடத்தில் அன்பும் பகைவரிடத்தில் மிகக் கொடுமையுங் கொண்டிருந்தனர். அவர்களிடத்தில் கண்ணோட்டம் காட்டுவதில்லை. போரில் பகைவர்கள் மடிந்து பிணக் குவியலாய்க் கிடப்பர். போர்க்களம் குருதிபடிந்து செங்களமாகும். இத்தகைய அழிவையும் அரசன் கண்டு இரங்குவதில்லை. ஆனால், பெருமிதங் கொள்வான். எனினும் புலவர்கள் மாத்திரம் பெரிதும் இரங்குவர்.

சேரமான், புலவர்களை எவ்வாறு உபசரிக்கின்றான் என்பதை உணர்த்தவந்த ஆசிரியர், அழகாக எடுத்துக் காட்டுகிறார். ஒரு புலவர் பரம்பரையாக வறுமையால் விழுங்கப்பட்டவர். அவர் குன்றுகள் நிறைந்த வழியைக் கடந்து அரசனைக் காண வருகின்றார். அரசன் ஆட்டு ஊனுடன் வெண்சோறிட்டுக்

கள்ளின் தேறலைக் கொடுத்து உபசரிக்கின்றான். புலவர் வாழ்ந்து வரும் வீடு மிகவும் கெடுதலான நிலையிலுள்ளதால், உடுத்திக் கொண்டிருக்கிற ஓர் ஆடையும் செல்லால் அரிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு அரிக்கப்பட்ட கந்தையானது பருந்தின் சிறகு எவ்வாறு மண் நிறத்தைப்போன்று புள்ளி புள்ளியாகக் காணப்படுகின்றதோ, அதுபோன்ற தோற்றமுடையது. இந்த விதமான கந்தையை அகற்றிப் பட்டுத்துணி கொடுத்து மன்னர் உபசரிக்கின்றார். கந்தைக்குப் பருந்தின் சிறகு உவமையாகக் காட்டப்பட்டிருத்தல், எவ்வளவு பொருத்தமாகவும் இயற்கைக்கு மாறுபடாததுமாகக் காணப்படுகின்றது?

இன்னும் ஓர் உவமை. பகைவர்களின் வளப்பம் பொருந்திய ஊர் அழிக்கப்பட்டது. இயமன் உடலினின்று உயிரைப் பிரித்தால் எவ்வாறு உடலானது நேரஞ் செல்லச்செல்ல அழியுந்தன்மை மிகுந்து செல்கின்றதோ, அதுபோல் பகைவரின் ஊரும் சிறிது சிறிதாக அழிவுறுகிறது என்ற கருத்தை, 'கூற்றடூஉ நின்ற யாக்கைபோல' என்ற சொற்றொடரால் குறிப்பிட்டிருக்கின்றனர்.

சேர அரசர்கள், கடலைக்கடந்து சென்று தங்கள் வீரத்தைக் காட்டி, வெற்றி பெற்றிருக்கின்றனர் என்ற செய்தி நன்றாய்க் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

நிற்க, இந்திய நாடு பிறநாட்டு மக்களை உபசரித்து வரவேற்பதில் மிகவும் மகிழ்ச்சிகொண்ட நாடு. பிறநாட்டில், கெடுதல் நிலவுவதைக்கண்ட மக்கள், அந்நாட்டைவிட்டு நம் நாட்டைத் தேடி வருகின்றனர். இந்தியா இலட்சக்கணக்கான மக்களுக்குப் புகலிடந்தந்து ஆதரித்து வருவது மிகவும் வியப்பாகும். இந்திய நாட்டினர்க்கு இக்குணம் இன்றோ அல்லது நேற்றோ காலப் போக்கில் அமைந்ததென்று நினைக்கலாகாது. ஏனெனில், சேரலாதன் ஆட்சி புரிந்தபோது, அரசன் கட்டளையைத் தாங்கி முரசறைவிப்போர்,

> "அரணங் காணாது மாதிரம் துழைஇய
> நனந்தலைப் பைஞ்ஞிலம் வருக விந்நிழல்"

தங்கள் ஊர் பாதுகாப்பின்றி, 'எங்கு நல்ல ஊர் கிடைக்குமென்று திசைகளெல்லாஞ் சென்று தேடிய பரந்த உலகிலுள்ள உலக மக்கள், எங்கள் நாட்டில் வந்திருக்கக் கடவர்' என்று அறிவிக்கின்றார்கள். இவ்வாறு, அரசர்கள் தங்கள் தேசத்தவர்கட்கு மாத்திரமன்றி, உலக மக்கள் எல்லோருக்கும் நன்மை செய்வதிலேயே நாட்டமுடையவரா யிருந்தனர்.

இன்னும், நாட்டின் முதன்மைத் தொழிலாகிய உழவு தொழிலை ஆதரித்துச் செல்வ நிலையை உயர்த்தினர். வேளாண்மைத் தொழில் செய்வோர் இரண்டு வகுப்பினராகக் கூறப்படுவர். அவரை வரிசையாளர் என்றும், காணியாளர் என்றும் கூறுவர். வரிசையாளர் என்போர் வாரம், குத்தகை முதலியன தந்து நிலத்தை உழுதுண்போர். காணியாளர் என்போரே உழுவித்துண்போர். இவர்களே நிலத்திற் குரியவர். உழுதுண்போரும் உழுவித்துண்போரும் தங்களுக்குள் எத்தகைய பகையும், சச்சரவுமின்றி வாழ்ந்து வந்தனர். நாட்டில் நல்ல மழை பெய்து வந்ததால் நோயும் பசியும் தொலைந்தன. வளப்பமுள்ள நாட்டில் நோயும் பசியும் தலைகாட்டுமா? தட்ப வெப்பத்தினாலும், இயற்கை மாறுதலினாலும், நாட்டில் நல்ல விளைவில்லாததாலும் நோய் உண்டாகிறது. உணவுப்பொருள் உண்டாக்கற் குறைவு, மக்கள் வேறுபாடு, வர்த்தக மந்தம் முதலியவற்றின் விளைவால் பசி உண்டாகிறது. இவையிரண்டும் ஒரு நாட்டில் இல்லையென்றால் அந்நாடு பொன்னுடாகும்.

> " உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும்
> சேரா தியல்வது நாடு "

என்று வள்ளுவரும் கூறினர். இதையே பதிற்றுப்பத்தில்,

> " குடிபுறந் தருநர் பாரமோம்பி
> அழல் சென்ற மருங்கின் வெள்ளி யோடாது
> மழை வேண்டு புலத்து மாரிநிற்ப
> நோயொடு பசியிகந் தொரீஇப்
> பூத்தன்று பெருமநீ காத்த நாடே "

என்று புலவர் கூறுகின்றனர்.

நிற்க, இப்போது நம் நாட்டில் எங்கும் மரங்கள் நடப்பட்டு வருகின்றன. தேசத்தலைவர்கள் வழி காட்டுகிறார்கள். இது நமக்குப் பழமையான பண்பாடாகும். சுமார் 1800-வருடங்களுக்கு முன்னாலேயே நம் முன்னோர்கள் மரம் நட்டு வளர்த்தலை 'தேசப்பணி'யாகக் கொண்டார்கள். இதை,

> 'நன்மரந் துவன்றிய நாடுபல தரீஇ'

என்ற அடியால் அறியலாம். அஃதாவது 'நல்ல மரங்கள் நிறைந்த நாடுகள் பலவற்றை எமக்குத் தந்து' என்று கருத்துச் செல்கிறது. மேலும் பழங்கள் தரக்கூடிய மரங்களையும், கிழங்குகளையும் நன்றாய்ப் பயிரிட்டு வந்திருக்கின்றார்கள். நாட்டின் சிறப்பைக் கூறும்போது, உணவுப் பொருள்களாகிய பழங்களும் கிழங்குகளும் மிகுதியாய்ப் பயிரிட்டு வந்தனரென்றால் அந்நாட்டு மக்கள் எவ்வளவு உண்டபோதிலும் அவ்வுணவுப் பொருள்கள் முட்டுப்பாடில்லையாம். இதை,

'பழனுங் கிழங்கும் மிசையற வறியாது' என்ற அடியால் உணரலாம்.

மற்றோரிடத்தில் 'அவரை முதலிய விதைகளைச் சர்க்கரைக் கட்டியோடு சேர்த்து மக்கள் உண்டு வந்தனர்,' என்று கூறப் படுகிறது. வழிப்போக்கர்களுக்கு உதவி செய்யவே பாதைகளின் ஓரத்தில் மரங்கள் நட்டு வந்தனர். நுண்ணிய மணலும் பருக்கைக் கற்களுமிருந்த பாலைநிலத்தில் செல்லும் மக்களுக்குப் பயன்படுதற்காக நெல்லிமரங்களை நட்டுவந்தனர். மக்கள் நிழலில் தங்கி அதன் காயை உண்டு நாவறட்சியைப் போக்கிக் கொண்டு வழிச்செல்வர்.

சிலர் ஆட்சிசெய்யுங் காலத்தில் மழையும், நீரும் குறைவின்றி யிருந்தும், நல்ல விளைவு உண்டாகாது என்று பதிற்றுப் பத்தில் குறிப்புரை காணப்படுகிறது. எனவே, இக்காலத்தில் கூட மழையின்றி விளைவுகள் குறைவுற்றால் ஆட்சியின் நேர்மை யின்மையைக் குறிக்கும் என்று மக்கள் கருதுகின்றனர். இந் நினைப்பு அக்காலத்திலும் உண்டு. ஆனால், இதற்கு இடமே யின்றிச் சேர மன்னர்கள் காலத்தில் நிலத்தில் நல்ல விளைவுண்டா யிற்றென்று குறிப்பிட்டிருக்கின்றனர்.

பின், தமிழ்நாட்டில் சில ஊர்ப்பெயர்கள் ஆசிரியரால் எடுத்துக்காட்டப்படுகின்றன. 'கொடுமணம்' என்றதோர் ஊருண்டு. அவ்வூரில் அணிகலன்கள் செய்வதில் தேர்ந்த தொழிலாளர்கள் இருந்தனர். இன்னும் கொற்கைத் துறை முகம், முத்துக்குப் பேர்போனது. ஆனால், கபிலர் 'பந்தர்' என்ற ஊரைக் குறிப்பிடுகின்றார். இவ்வூர் கடற்கரையை அடுத்துள்ள தென்பதும், அங்கு முத்துக்கள் குளிக்கப்பட்டன வென்றும் தெரிகிறது.

> "கொடுமணம் பட்ட நெடுமொழி யொக்கலொடு
> பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்"

என்ற அடிகளாலும்,

> "கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம்
> பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்"

என்ற அடிகளாலும் அறியலாம்.

பண்டைக் காலத்தில் தமிழர்கள் வானநூலிற் பெரும் புலமை பெற்றிருந்தனர். சோதிட நூலில் வல்லுநர்களா யிருந்துவந்தனர். செவ்வாயும் வெள்ளியும் சேர்ந்தால் மழை பெய்யாது என்ற கருத்தை,

"அழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது"

என்றுவரும் அடியால் உணரலாம். அழல் என்றால் செவ்வாய்க்குப் பெயராகும். மழைக்கோளாகிய வெள்ளி வடக்குத் திசை சென்றால் மழை உண்டாகும். தெற்கில் சென்றால் மழை இலதாகும் என்ற கருத்தும் மற்றோரிடத்தில் காணப்படுகிறது.

இன்னும், இசையில் பன்னெடுங்காலமாகத் தமிழர்கள் இன்பம் கண்டுவருகின்றனர் என்ற செய்தி, இந்நூலில் ஆங்காங்கே காணப்படுகிறது. அக்காலத்தில் இசைப்புலவர்கள் தூய தமிழ்ச்சொற்களை இசையின் பற்பல கூறுபாட்டிற்கு இட்டுவந்தனர். அவ்வாறு பார்த்தால் 'மறுகுசிறை' என்ற தோர் துறையுண்டு. அது, "ஆரோசண அவரோகணக் கிரமம் என்று இக்காலத்தில் சொல்வதைப் போலிருக்கலாம்," என டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் கூறியிருக்கிறார். ஊரின் நடுவே இசைமன்றங்கள் இருந்துவந்தன. அனைத்திந்திய வானொலி நிலையங்களில் இக்காலத்தில், இசைப்புலவர்கள் பாடுவதுபோல, ஊர்மன்றங்களில் இசைப்புலவர்கள் பாடுவர் என்ற கருத்தை,

"மன்றம் போந்து மறுகுசிறை பாடும்
வயிரிய மாக்கள்"

என்றுவரும் அடிகள் அரண்செய்கின்றன.

இளைஞர்கள் கூட்டமொன்று கடவுள்வாழ்த்து இசைக்கின்றது. யாழ் வாசிப்பதில் தேர்ச்சிபெற்ற இளைஞர்கள் யாழுடன் குழுமியிருக்கின்றனர். நன்றாய்ச் சுருதி அமைந்த மத்தளமும், ஒரு பக்கத்தில் மாத்திரம் அடித்தலையுடைய மத்தளமும், மூங்கிலின் கணுக்களை அறுத்து அவற்றால் இயற்றப்பட்ட பெருவங்கியம் என்ற வாத்தியமும் ஆகிய இவற்றை இசைக்கும் இசைப்புலவர்களும் ஒன்றுசேர்ந்து கடவுள்வாழ்த்து இசைக்கின்றனர் என்று ஐந்தாம் பத்தில் பரணர் கூறுகிறார்.

இன்னும், யாழ் நரம்பைப்பற்றிக் கூறும்போது, கின்னரம் என்னும் பறவை ஒன்றிருந்தது. அதன் சிறகு, காற்றினால் ஓர் இனிய இசையை உண்டாக்கும். அத்தகைய இசையையும் தோல்வியுறச்செய்தது யாழ் நரம்பு என்று கூறப்படுகிறது.

எனவே, பதிற்றுப்பத்தென்னும் எட்டுத்தொகையில் ஒன்றான இந்நூல், புலவர்க்கு அமிழ்தமாகும். வரலாற்றாசிரியர்கட்கு உயரிய கருவியாகும். வீரர்கட்குச் சிறந்த வீரக்களஞ்சியமாகும். மொழிவல்லுநர்க்கு ஆராய்ச்சித் தொகுப்பாகும். கலைஞர்களுக்குக் கலைக்கோயிலாகும்.

# வரவேற்பு வாழ்த்திதழ்

[திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகச் சார்பில் அமைந்துள்ள சிவஞானமுனிவர் நூல் நிலையத்துக்கு 19—1—1951-ல் வந்தருளிய சென்னைச் சட்டசபைத் தலைவர் மாட்சிமிகு, ஜே. சிவசண்முகம் பிள்ளை, எம். ஏ., அவர்கட்கு வழங்கப்பட்டது.]

தமிழ்நாட்டின் தமிழ்ப்பெருந் தலைவரே!

வருக! வருக! தங்கள் அன்புவரவால் எங்கள் நெல்லை நாடு எல்லையற்ற இன்பமடைகின்றது. அருள்நலங் கனிந்த தங்கள் அரிய வருகையால் எங்கும் அன்பே கனிந்திலங்குவதாக! கைம்மாறு வேண்டாக் கடப்பாடுடைய தங்கள் கருணைப் பெருமிதங் கண்டு கழிபேருவகை யடைகின்றோம். கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்பமொழியும் தங்கள் நாநலம் கண்டு தமிழ்நாடே வியந்து மகிழ்கின்றது.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளரே!

நாட்டுத் திருப்பணியே நல்ல தெய்வப் பெரும்பணியென இடையறாது உழைக்கும் தங்களைப் பாராட்டுகின்றோம்.

> "குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
> மடிதற்றுத் தான்முந் துறும்."

என்பது நம் தமிழ்மறை. குலநலம் பேணிக் குறைவுடையாரை யெல்லாம் நிறைவுடையச் செய்யும் தங்கள் சிறந்த பணிக்கு, இறைவன் இன்னருள் இனிது முன்னிற்கும்.

தமிழும் சமயமும் தகவுறப்பேணும் தலைவரே!

1920-வது ஆண்டில் நிறுவப்பெற்ற இச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், தமிழுக்கும் சமயத்துக்கும் அளவற்ற பணியாற்றி வருவதை அனைவரும் அறிவர். இதுகாறும் இலக்கியம், இலக்கணம், சமயம், விஞ்ஞானம் முதலிய பல்வேறு துறைகளில் சிறந்த பேரறிஞர்களால் எழுதப்பெற்ற உயரிய ஐந்நூற்றெழுபத்தைந்து நூல்களை வெளியிட்டுள்ளது. தெய்வப் புலவர் அருளிய நம் தமிழ்மறையாகிய திருக்குறளைக் கைக்குள் ளடங்கும் மிகச் சிறிய அளவிலிருந்து மிகப்பெரிய அளவுவரை பல பதிப்புக்களாகக் கண்ணைக் கவரும் கட்டடத்துடன் வெளியிட்டுத் தமிழர்க்குத் தமிழ்நூல்களைப் படிக்கும் ஆர்வத்தைப் பெருக்கியுள்ளது. "நம் கழகத் தமிழ்நூல்களின் அழகிய பதிப்புக்களைப் போல், இந்திய மொழிகளில் எந்த மொழியிலும் எந்தப் பதிப்பாளராலும் இதுகாறும் நூல்கள் வெளியிடப்

பெறவில்லை" என மேன்மை தங்கிய இந்திய மந்திரி உயர் திரு. இராசகோபாலாச்சாரியார் அவர்களைப் போன்ற பெருமக்கள் பலர் பெரிதும் பாராட்டுகின்றனர்.

இக் கழக வாயிலாக வெளிவரும் "செந்தமிழ்ச் செல்வி" யென்னும் திங்களிதழ், பேரறிவாளர்களின் சீரிய சொல்லோவியங்களால் சிறப்புற வளர்ந்து இருபத்தைந்து ஆண்டுகள் நிரம்பப் பெற்று வெள்ளிவிழா மலரும் அண்மையில் வெளிவரவிருக்கிறது. 1930-வது ஆண்டு முதல் கழகம் வெளியிடும் திருக்குறள் நாட்குறிப்பு நம் நாட்டு நல்லறிஞர் பல்லோராலும் பாராட்டப்பெற்று ஒவ்வொருவர் கையகத்தும் ஒளிர்கின்றது.

நம் கழகத்தைச் சார்ந்த தென்னிந்தியத் தமிழ்ச் சங்கமும், சைவசித்தாந்த சங்கமும் இடையிடையே பல மாநாடுகள் கூட்டியும், சிறப்புக் கூட்டங்கள் அமைத்தும் பல பேரறிஞர்களின் ஆராய்ச்சிப் பேருரைகள் நிகழுமாறு செய்து நாட்டுக்கு அறிவுப் பணியாற்றி வருகின்றது. கழகத்திற்கு வரும் ஊதியத்தின் பெரும்பகுதி, சமயப் பணிக்கும் தமிழ்ப் பணிக்குமே செலவிடப்படுகிறது. ஊதியத்தில் நூறுக்கு ஆறு விழுக்காடே கழகப் பங்காளிகளைச் சாருகின்றது. இத்தகைய பொதுநலப் பணியையே என்றும் போற்றியாற்றிவரும் நம் கழகம் தங்களைப் போன்ற அரசியல் தலைவர்களின் தொடர்பாலும் பேராதரவாலும் இன்னும் பல நற்பணிகளை இனிது புரிய முடியும் என்று உறுதியாக நம்புகிறோம்.

## பொதுநலம் பேணும் புனிதரே !

சென்னை அரசியலில் அரிய தலைமைப் பதவி தாங்கும் தங்கள் அன்பு, கழகத்தின்பால் என்றும் கனிந்து பெருகுவதாக ! தங்களைப் போன்ற சொல்லில் வல்ல நல்ல தூயாரின் துணையால் கழகம் மேலும் பெரும்பணி புரிந்து அரும்பெறற் சிறப்பினையடையும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம். சமயப்பற்றும் தமிழ்ப்பற்றும் ஒருங்கே தழைத்த உள்ளம் கொண்ட தங்கள் மங்கல வருகையால் கழகமும் நூல் நிலையமும் சிறப்புற்றுப் பெரும்பயன் விளைப்பனவாக ! தங்கள் வாழ்வு பல்வகைச் செல்வமொடு மல்கிச் செழிக்கவும், அம்பலக் கூத்தரின் பேரருள் தங்கட்குப் பெருகவும் அவன் திருவடி மலரை வாழ்த்தி வணங்குகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்**

கீழைத் தேர்த் தெரு, திருநெல்வேலி. 19—1—51

# கதிரவனும் காலநிலையும்

[சு. குமாரஸ்வாமி ஆச்சாரி, B.O.L., மயிலம்.]

கணிமேதாவியார், காமக்கணி என்பன போன்ற சொற்றொடர்கள் நம் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன. இத்தொடர்களிலுள்ள கணி என்னும் சொல் 'கணக்கிட்டு அறிபவன்' என்னும் பொருளில் சோதிடரைக் குறிக்கின்றது. எனவே, இச் சொற்றொடர்கள் 'நந்தமிழ் நாட்டில் சோதிடக் கலையில் வல்லுநர்கள் இருந்தனர்' என்பதை உணர்த்துகின்றன. பல்லி யோர்தலும், விரிச்சி கேட்டலும், புள்நிமித்தம் காண்டலும், எத்தொழிலைச் செய்யவும் நன்னாள் கோடலும் ஆகிய வழக்கங்கள் நம் நாட்டிலிருந்தன என்பதை நம் தமிழ் இலக்கியங்களும் தொல்காப்பியமும் கூறுகின்றன. எனினும், சோதிடம் பார்ப்பதால் பயனில்லை எனக் கூறுவர் சிலர். இலக்கண இலக்கியங் கற்றோர் அதற்குச் சான்றாகப் புறப்பொருள் துறைகளுள் "பிள்ளைப் பெயர்ச்சி" என ஓர் துறை யிருப்பதனைக் காட்டுவர். அத்துறை நிமித்தம் பார்க்காமலே செயலாற்றினன் என்பதைத்தான் குறிக்குமே யன்றி நிமித்தம் பார்ப்பது பயனற்றதென உணர்த்தவில்லை. சோதிடக் கலையினைச் சரிவரக் கற்காத குறையினாற்றான் மக்களிடம் இத்தகைய எண்ணம் தோன்றியது, தோன்றுகிறது. சோதிடக்கலை நமக்கு இன்றியமையாததொன்று என்பதை நாம் ஒவ்வொருவரும் உணரவேண்டும்.

முக்கால நிகழ்ச்சிகளையும் நமக்கு உணர்த்தும் கருவிகளாக வுள்ளன கோள்கள். அக்கோள்களுள்ளும் தலைமை பெற்றிருப்பது ஞாயிறாகும். அஞ்ஞாயிறு எல்லா வுலகத்தவராலும் எல்லா மதத்தவராலும் போற்றப்படுகிறது. வேனிற் காலத்தில் வருத்தமூட்டும் கதிரவன் மாரிக் காலத்தில் சில நாட்களுக்கு நமக்குப் புலப்படாதிருப்பின், அக்கதிரவனைக் காணாது கலங்குகின்றோமன்றோ! காரணம் இவ்வுலகிலுள்ள உயிர்கள் உயிரல்லாதவைகள் ஆகிய பொருள்கள் எல்லாவற்றையும் ஆக்கி, அளித்து, அழிக்கும் ஆற்றலுடையதாக இருத்தலேயாம். கதிரவனுக்கு இம் முத்தன்மைகளும் உண்டு என்பதை நம் முன்னோர்களும் உணர்வர். "பாடின்றிப் பசந்தகண்" என்று தொடங்கும் (கசு) பாலைக்கலியின் தாழிசைகளில் முறையே "இன்னிசை யெழிலியை இரப்பவும் இயைவதோ" "கனை கதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ," "வளிதரும் செல்

வனை வாழ்த்தவும் இயைவதோ,'' எனவரும் தொடர்களில் குறிக்கப்படும் எழிலி, கனலி, வளிதரும் செல்வன் ஆகிய மூன்றும் ஞாயிறு ஒன்றையே குறிப்பனவன்றோ? முத்தாழிசைகளும் ஒரு பொருளினையே குறித்து வரவேண்டுமென்பது இலக்கணமாதலின். இத்தகைய கதிரவனது நிலை, உரு முதலிய வற்றைப் பற்றிப் பல பேரறிஞர்கள் நூல்கள் வாயிலாகவும் பத்திரிகைகள் வாயிலாகவும் வெளியிட்டிருக்கின்றனர். அவர்களுள், பண்டைய சிறந்த அறிஞர்களுள் ஒருவரான வராகமிகிரர் தாம் எழுதிய பிருகத்சம்ஹிதையில் கதிரவனைப்பற்றிக் கூறியிருப்பதையே ஈண்டு வரைகின்றனன்.

கதிரவன் மகரத்தை யடையுமுன் வடதிசையை நோக்கிச் செல்லத் தொடங்கினுல், நாட்டின் மேற்கு தெற்குப் பகுதிகளில் துன்பமுண்டாம். கடகராசியை யடையுமுன் தெற்கு நோக்கிச் செல்லத் தொடங்கினுல், நாட்டின் கிழக்கு வடக்குப் பகுதிகளில் துன்பமுண்டாம். கதிரவன் தெற்கு நோக்கிச் செல்கையில் தன் நிலையில் மாறுபடாதிருப்பின், நாடு வளமடையும்; உணவுப் பொருள் உற்பத்தியாம்; கதிரவனது உருவத் தோற்றத்திலாவது செல்லும் கதியிலாவது மாறுபாடிருப்பின் மக்களுக்கு அச்சமுண்டாம்.

அமாவாசை யொழிந்த ஏனைய நாட்களிலும் த்வஷ்டா என்னும் கேதுவினுல் சூரியக்கிரகணமுண்டாம். அப்போது மன்னரும் மக்களும் போரினுலாவது நெருப்பினுலாவது பஞ்சத்தினுலாவது மடிவர்.

தாமசன் கீலகன் முதலிய முப்பத்துமூன்று கேதுக்கள் உண்டு. இக் கேதுக்கள் கருமை நிறமுடையவை. இவைகளின் நிறம், வடிவம், இருக்குமிடம் ஆகியவைகளுக்கு ஏற்றபடி நாட்டிற்குத் துன்பமுண்டாம். இந்தக் கரும்புள்ளிகள் சூரிய கோளத்தில் காணப்படின் மக்களுக்குத் துன்பம் அதிகரிக்கும்; சந்திரகோளத்தில் காணப்படின் மக்களுக்கு மகிழ்ச்சியுண்டாம். இக் கரும்புள்ளிகள் காக்கைபோலவும் போர்க் கருவிகளைப் போலவும் தலையற்ற மனிதவுடல் போலவும் சந்திரகோளத்தில் காணப்படினும் மக்கள் துன்பத்திற்காளாவர். சூரியனில் இப் புள்ளிகள் காணப்படின், நாட்டில் நீர் அரிதாம்; வான வெளியில் தூசு நிறைந்து காணப்படின், காற்று மரங்களையும் முறித்துத் தள்ளும்; மலைகளும் சரியும்படி வீசும்; கற்களையும் மணலையும் வாரி வீசும்; தாவரங்கள் தமக்குரிய பருவகாலத்திலும் பயனளிக்கமாட்டா; பறவைகளும் விலங்குகளும் வெப்பம் தாங்காமல் வருந்தும்; எங்கு நோக்கினும் நெருப்பு நிறைந்திருப்பது போலத் தோன்றும்; மின்னலும் பூகம்பமும் மக்களை வருத்தும்.

இம் முப்பத்துமூன்று கேதுக்களைத் தவிர வேறு கேதுக்கள் சூரிய கோளத்தில் காணப்படின், சூரியக் கிரகணத்துக் குரிய பலனுண்டாம்.

நாட்டில் எப்பகுதியில் சூரியனில் கரும்புள்ளிகள் காணப் படுகின்றனவோ அப்பகுதியில் பஞ்சம் அதிகமாம்; அதனால் அரசர்கள் வருந்துவர்; உணவில்லாததால் மக்கள் சதையில்லாத எலும்புக் கூடாக விளங்குவர்; முனிவர்களும் தங்கள் நெறியை விட்டுவிடுவார்கள்; மக்கள் தசைப்பற்றில்லாத குழந்தைகளோடு வேறிடம் நாடிச் செல்வர்; நல்லோருடைய செல்வம் திருடர்களால் கொள்ளப்படும்; அதனால் மெலிந்த உடலோடு நல்லோர் கண்ணீரும் கம்பலையுமாயிருப்பர். மக்கள் பஞ்சத்தினால் வெறுப்புற்று, தங்கள் அரசர்களின் குணத்தையும் பெருமையையும் குறைவுபடக் கூறுவார்கள்; மேகம் நீர் நிறைந்ததாகக் காணப் படினும் மழை பொழியாது; நீர் நிலைகளெல்லாம் வறண்டு போம்; உணவுப் பொருள் இங்கும் அங்குமாகச் சிற்சில இடங் களில் பயிராம்.

அறிஞர் ஜே. நார்மன் லாக்கியர் (J. Norman Lockeyer) என்பாரும் தாம் எழுதிய 'சூரியப் புள்ளிகளும் பஞ்சமும்' (Sun spots and famines) என்னும் நூலில் இக் கருத்தினையே கூறியிருக்கின்றார். அஃதாவது:—"Our Meteorology by falling at different times upon different points of the aerial and aqucous envelopes of our planet, thereby producing ocean and aircurrents; while by acting upon the various forms of water which exist in those envelopes, it is the fruitful parent of rain and cloud and mist Nor does it stop here. It affects in a more—mysterions way the electricity in the atmosphere and the magnetism of the globe itself" என்பதேயாம்.

சூரியனில் காணப்படும் கரும்புள்ளிகள்—தடி போன்றிருப்பின், அரசன் மரணமாவான்; தலையற்ற மனிதவுடல் போலத் தோன்றின், நாட்டில் நோய் பரவும்; காக்கை போன்றிருப்பின், கள்ளரால் பயமுண்டாம்; ஈட்டியை யொப்பின், பஞ்சமுண்டாம்; வெண்கொற்றக் குடை, கொடி, சாமரம் முதலிய அரச சின்னங்களைப்போன் றிருப்பின், அரசு மாறுபடும், அல்லது அரசியலில் கிளர்ச்சி ஏற்படும்; நெருப்புப்பொறிகள் போலவும் புகை போலவும் இருப்பின், மக்கள் மடிவர்.

'கரும்புள்ளிகள் தோன்றியபொழுது கதிரவனிலிருந்து வெளியாகும் ஆற்றல் இங்குள்ள பொருள்களைத் தாக்குவதனால்

இவ்வாறு நிகழ்கின்றன' என தேகிஜெவ்ஸ்கி (Prof. A. Tehi jevsky) என்ற ரஷ்ய விஞ்ஞானி கூறுகிறார்.

கதிரவனில் ஒரு புள்ளியிருப்பின், பஞ்சமுண்டாம்; பல புள்ளிகள் இருப்பின், அரசன் மடிவன். அப்புள்ளிகள் வெண்மை, சிவப்பு, மஞ்சள், கருப்பு நிறங்களையுடையனவாகக் காணப்படின், முறையே பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் துன்புறுவர். சூரிய கோளத்தில் எப்பகுதியில் இப்புள்ளிகள் உண்டாகின்றனவோ அதற்குச் சரியான பகுதியில், இவ்வுலகில் இத்தகைய பலன்கள் நிகழும்.

கதிரவன் நிறம் செம்புபோலக் காணப்படின், சேனாதிபதி மடிவன்; பச்சையாகவோ மஞ்சளாகவோ காணப்படின், அரசகுமாரன் மடிவன்; வெண்மையாகக் காணப்படின், இராஜகுரு மடிவார்; புகைபோலக் காணப்படினும், பல்வகைநிறக் கலப்பாகக் காணப்படினும் விரைவில் நன்மழை பொழியவேண்டும், அல்லது மக்கள் திருடர்களால் துன்புறுவர்.

சித்திரை வைகாசி மாதங்களில் (வசந்த ருதுவில்) கதிரவன் மயிற்பீலி (blue crimson) நிறத்தோடும், ஆனி ஆடி மாதங்களில் (கிரீஷ்ம ருதுவில்) வெண்மையாகவும், பொன் நிறமாகவும், ஆவணி புரட்டாசியில் (வர்ஷ ருதுவில்) வெண்மையாகவும், ஐப்பசி கார்த்திகையில் (சரத் ருதுவில்) தாமரை மலரிதழின் இடைப்பகுதியில் காணப்படும் நிறம்போலவும், மார்கழி தை மாதங்களில் (ஹேமந்த ருதுவில்) குருதிபோலவும், மாசி பங்குனி மாதங்களில் (சிசிர ருதுவில்) செம்பின் நிறம் போலவும், கருஞ் சிவப்பாகக் காணப்படின், மக்கள் மகிழ்ச்சியோடு வாழ்வர். ஆவணி புரட்டாசியில் மேற்குறித்த எவ்வகை நிறத்தோடு காணப்படினும் சூரிய கிரணங்கள் மென்மையுடையனவாக இருப்பின், மக்களுக்கு மகிழ்ச்சியுண்டாம். அம்மாதங்களில் கிரணங்கள் சரிலெனத் தாக்கும் வெப்பமுடையனவாக இருக்க, கதிரவன் வெண்மை, குருதி, மஞ்சள், கருப்பு நிறங்களோடு காணப்படின், முறையே பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் துன்புறுவர். ஆனி ஆடி மாதங்களில் கதிரவன் குருதி நிறத்தோடு காணப்படின், மக்களுக்குப் பலவகையான அச்சமுண்டாம். ஆவணி புரட்டாசியில் கருநிறத்தோடு காணப்படின், உலகில் நீரில்லாது பஞ்சமுண்டாம். மார்கழி தை மாதங்களில் மஞ்சள் நிறமாகக் காணப்படின், நாட்டில் பலவகையான நோய்களுண்டாம்.

சூரிய கோளத்தில் வானவில் குறுக்கிட்டால் மன்னர்களுக்குள் போருண்டாம். [வானவில் (Rainbow) நீர்த்தாரை

யாக இருக்கலாமோ என ஐயம்] மழைக்காலத்தில் சூரிய கோளம் தூய்மையாகக் காணப்படின், மழையுண்டாம்; ஆவணி புரட்டாசியில் சூரியன் கிரிஷப்பூவின் (Mimosaflexuosa) நிறத் தோடு காணப்படினும் மழையுண்டாம்; மயிற்பீலியின் நிறத் தோடு காணப்படின், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மழையில்லை. சாம்பல் நிறமாயின், மன்னரால் மக்கள் துன்புறுவர். கதிரவன் கருப்பாகக் காணப்படின், பாம்புகளாலும் கிருமிகளாலும் அச்சமுண்டாம்.

சூரியன் தோற்றம், மறைவு காலங்களைத்தவிர மற்றைய நேரங்களில் முயலின் குருதிபோலக் காணப்படின், நாட்டில் போர் மூளும். சூரியன் சந்திரனைப்போலக் காணப்படின், மன்னன் கொல்லப்படுவான்; வேற்றுநாட்டு மன்னன் அரசாளத் தொடங்குவான்.

சூரியன் குடம்போலக் காணப்படின், மக்கள் பசியால் மடிவர். சூரிய கோளம் சிதைவுபட்டதுபோலக் காணப்படின், மன்னன் மடிவான்; கிரணங்களின்றிக் காணப்படின் மக்களுக்கு அச்சம் அதிகமாம்; வாயில் (Gate) போலக் காணின், நாட்டின் தலைநகரம் அழியும்; குடைபோலக் காணப்படின், நாடு அழியும்; துவஜம் (விருதுக் கொடி) போலவும் வில்போலவும் அம்புபோலவும் காணப்படினும் வெயில் வெப்ப மிகுதியோடிருப்பினும் போர் மூளும்.

கதிரவனில் கருப்புக்கோடுகள் காணப்படின், மன்னன் மந்திரியால் கொல்லப்படுவான். தோற்றக்காலத்தில் கதிரவனில் குறுக்காக ஆகாசக்கல் (aerolite), இடி, மின்னல் தோன்றின், மன்னன் மடிவான்; வேற்று மன்னன் அரசாள்வான். தோற்றம், மறைவு காலங்களில் பல நாட்கள் கதிரவனைப் பரிவேடம் சூழினும் கதிரவன் குருதி நிறத்தோடு காணப்படினும் மன்னன் அரசை இழப்பான். தோற்றம் மறைவுகாலங்களில் கதிரவனை மறைக்கும் மேகங்கள் போர்க் கருவிகளின் வடிவத்தோடு காணப்படின், நாட்டில் போருண்டாம்; அவை மான், எருமை, கழுதை, ஒட்டகம், பறவை போலக் காணப்படின், மக்கள் மிகுந்த அச்சமுடையவராவர்.

பரிவேடம் கதிரவனுக்கு வடக்கே காணப்படின், மழையுண்டாம்; தெற்கே காணப்படின், காற்று மிகுதி; தெற்கு வடக்காகிய இரண்டு திசைகளிலும் காணப்படின், வெள்ளமுண்டாம்; மேற்கே காணப்படின், அரசன் மடிவான்; கிழக்கே காணப்படின், மக்கள் மடிவர்.

கதிரவன் நடுவானத்திலிருக்கும்போது குருதி நிறத்தோடு காணப்படினும், மண் காற்றால் மறைக்கப்பட்டுச் சிவப்பாகக் காணப்படினும், அந்தி நேரத்தில் பறவைகளும் விலங்குகளும் அச்சத்தோடு கூக்குரலிடுமாயினும் மக்கள் மடிவர். கதிரவன் இயல்பான வடிவினும் நிறத்தினும் மாறுபாடில்லாதிருக்க, கிரணங்கள் தூய்மையோடு நெடுந்தொலைவிற்குச் செல்லும் ஆற்றலுடையனவாக இருப்பினும், சூரியகோளத்தில் வேறொன்றும் இடையிடாதிருப்பினும் மக்கள் மகிழ்ச்சியோடு வாழ்வர்.

இவற்றினை மக்கள் அறியவேண்டியது இன்றியமையாததொன்றன்றோ? இத்தகைய பல பொருள்கள் பிருகத்சம்ஹிதையில் காணக்கிடக்கின்றன. அறிஞர்கள் அவற்றினைப் பலரும் அறியச்செய்வார்களாக.

---

## குடியரசுத் திருநாள்*

[செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை.]

படியரசு காலையெழுந் துலகமெலாம் ஒளிபரப்பும் பண்பார் நாளின்
முடியரசாம் இருட்கணங்கள் மூலைகளில் புக்கொடுங்கி முடங்கி நிற்கக்
கடியரசாம் போரின்வெறி கால்முறிந்து நடுங்கிவிழக்; காலம் பார்த்த
'குடியரசு' மலர்ந்திடுக; நன்மையெலாம் ஓங்குகவே குலவிப் பார்மேல். (க)

மக்களெலாம் உயிர்களெலாம் இன்பநிலை வளம்பெறுக; மகிழ்ச்சி யோங்கத்
திக்கெல்லாம் மழைபொழிக; செஞ்சாலி நெல்விளைக; தெருக்கள் தோறும்
மிக்குயரும் கலையோங்க; நிலையோங்க; நலமோங்க; வீறிட் டென்றும்
தக்கநெறி தழைத்தோங்க; குடியரசு மலருமிந்தத் தனிநாள் தன்னின். (உ)

சோற்றுவளம்; இன்பவளம்; துன்பநிலை அறியாத தூய உள்ளம் [பூத்த
ஏற்றவளம்; இறைவன்வளம்; எந்திழையார் பெண்ணணங்கார் இன்பிற்
மாற்றமிலா மக்கள்வளம்; செல்வவளம்; ஆயுள்வளம்; வண்மை சான்ற
ஏற்றவளம் எல்லாமும் குடியரசுத் திருநாளில் இணைக நன்றே. (ங)

---

*1950 சனவரி 26-நாள் முதற் 'குடியரசு'த் திருநாளின்போது பாடியன.

# தமிழ் நெடுங்கணக்கு - பெயரும் எண்ணும்

[இராவ்சாகிப், சைவப்புலவர்,
டாக்டர், தி. இரா. அண்ணாமலைப்பிள்ளை,
L.C.P.S., L.M.S.S.A. Lond.]

(செந்தமிழ்ச்செல்வி—சிலம்பு உகு - பரல் கு - ப. உகூஎ தொடர்ச்சி)

## முப்பத்துமூன்று தனிப்பெருஞ் சிறப்புவாய்ந்த எண்

### திருவள்ளுவரும், திரு. மில்ட்டனாரும் (Poet Milton). முப்பத்துமூன்றும்

வான்புகழ் கொண்ட தமிழ்நாட்டில், திருவள்ளுவ நாயனார், எல்லாம் வல்ல இறைவனுக்கு நூறு குறட் பதிகங்களும், அம் முதல்வனது பல தோற்றங்களாகக் கருதப்படும் முப்பத்து மூன்று தேவர்களுக்கும் முப்பத்துமூன்று குறட் பதிகங்களு மாக வமைத்துத் தம்மையும் அம் மெய்ப்பொருளுக் கடிமை யாக்கி, தமது அழியாவுடைமையையும் உலகினுக்கொப்ப டைத்த அருட்செயலை மறந்து உலகமுந் தமிழ்நாடும் உயிர் வாழ முடியுமோ ?

சமயத் துறையில், ஊன்றி யுழைத்துக் கண்ணிழந்தும் கையிழக்காத மேனாட்டுப் பெரும்புலவர் திரு. மில்ட்டனார் (Milton) பாடியருளிய பொருள்கள் ஒரு நூறேயாகும். பேரின்ப வீட்டைத் துறப்பதும் (Paradise Lost), அதை மீள அடைவதும் (Paradise Regained) பற்றி, தமக்கு உண்ணின் றுணர்த்தியபடி நல்லிசைப்படுத்தி உலகுக்கு வழங்கினார். அவர் பாடிய நூறு பொருள்களும் (Scriptural and British) என் னும் இரண்டு பிரிவில் அடங்கும். பின்னையது முப்பத்துமூன் றேயாகும்; அவை குறுகிய அளவிற் பாடப்பட்டவை, தெய்வத் தன்மை (Sacredness) நிரம்பிய பாக்களென்று உரையாசிரியர் கூறுவர். ஆகவே, திரு. மில்ட்டனார் முப்பத்துமூன்றை நூற் றில் அடக்கினார். வள்ளுவப் பெருந்தகை, நூற்றுக்குமேல் முப்பத்துமூன்றும் விதந்தோதினார். முப்பத்துமூன்று என்னும் எண் தூய்மை வாய்ந்ததென்பதுதான் இங்குக் காணவேண்டிய குறிப்பு. திருக்குறள், உலக முழுவதும் ஒளிபரப்பும் சமயப் பாதுநூலாகக் கருதப்படுவதால், திருவள்ளுவரது திருவடி யைத் தலைமேற் கோலிச் செல்வோமாக,

## நக்கீரரும் முப்பத்துமூவரும்

'உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்' முருகனடிகளாராகிய நக்கீரதேவநாயனார், திருமுருகாற்றுப்படையில், 'திருவாவினன்குடியில் அசைதலுமுரிய' முருகன் திருக்காட்சியை விளக்குகின்றார். முருகப்பிரானின் மெய்யடியார்கள் பெருந்திரளாய்ச் செல்லுகிறார்கள். தவமுனிவர், இசைவாணர் (யாழ்ப்பாணர்) - கந்தருவர், திருமால், முக்கண்ணன், இந்திரன் முதலிய முப்பத்துமூன்று தேவர்கள் எல்லோரும் நான்முகனைப் (பிரமன்) பழைய நிலையிலே நிறுத்துவிக்கக் கருதியும், தத்தங் குறை யிரத்தற்பொருட்டும், வான்வழியாய் விரைவில் வந்து தன்னைக் காணும்படி, முருகன் திருவாவினன்குடியில் எழுந்தருளியிருக்கின்றான். இங்ஙனம் நக்கீரர் முருகனைக் காணும் பொழுது,

> " பகலில் தோன்றும் இகல்இல் காட்சி
> நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு"—(11 × 3=33)
> —திருமுரு. ௧௬௬ - எ.

என்று முப்பத்துமூவரைக் குறிக்கின்றார். இம் முப்பத்துமூவருக்குள், அறிவில் வேறுபாடு கிடையாது; ஆயினும் **ஒருபொருள் பலவாமாறுபோல,** பகுத்துக் காணுங்கால் நால்வகை இயல்பினையுடையவர்கள் என்பது இதன்பொருள். இப் பதினொரு மூவர் (முப்பத்துமூவர்) யார்? இவர்களே, ஆதித்தர் பன்னிருவர் (துவாதசாதித்தர்), உருத்திரர்பதினொருவர் (ஏகாதசருத்திரர்), வசுக்கள் எண்மர் (வசு-அக்கினி), மருத்துவர் இருவர், (அச்சுவினி) ஆக முப்பத்துமூவர் என்று கூறுவர். இவர்களை வேறு பெயர் கொண் டழைப்பதுமுண்டு. இங்ஙனம் பாகுபடுத்தியதன் தன்மையை முன்னர் ஆராய்வாம். இங்கு நக்கீரர், முப்பத்துமூவருக்கும் பெருஞ் சிறப்பளித்துள்ளார் என்பது வெள்ளிடைமலை.

## பரிபாடலும் முப்பத்துமூவரும்

இந்நூல் கடைச்சங்கம், எட்டுத்தொகையுள் ஒன்று (ஐந்தாவது) என்பதை யாமறிவோம். இப்பாடல், தேவாரத்தைப் போல, அக்காலத்திலேயே பண்களிற் பாடப்பெற்றுவந்தன வென்பதும், 'இசைப்பா வகையில் யாக்கப்பட்டு, பண் அமைக்கப்பட்ட பாடல்களுள் காலத்தால் முந்தியது' என்பதும் பேராறிஞர் கூற்று. ஒவ்வொரு செய்யுளின்பின், பண்ணின் பெயரும் இசைவகுத்தோர் பெயரும் எழுதப்பட்டுள்ளதும் வெளிப்படை. பரிபாடல், பரிபாட்டென்றழைக்கப்படுவதோடு, நான்கு பாவாலும் பரிந்துவருவதால் அப்பெயர் பெற்றதென்றும், இழைபு என்னும் வனப்புடையதென்றும் கூறுவர். பரி

பாடலின் அமைப்பும் அதன் பெருமையும் சமயம் வந்துழி விரித்துரைப்பாம்.

இந்நாலில், '.........................விதியின் மக்களும், மாசில் எண்மரும் பதினொரு கபிலரும், தாமா இருவரும்' என்னும் வரிகளைக் காண்கின்றோம்.

—பரிபாடல். ௩ - ௬ - அ.

ஆதித்தா பன்னிருவர்; மாசில் எண்மர் - எட்டு வசுக்கள்; பதினொரு கபிலர் - செய்யர், செந்நிறத்தவர் - பதினொருவர்; தாமா இருவர்: தாமா - தாவுமா - குதிரை - அசுவம் (அச்சுவினி தேவர்) இருவர், ஆக மொத்தம் 33. ∴ பரிபாடலிலும் முப்பத்து மூன்று என்னும் தொகைக்குச் சிறப்பு வழங்கப்பட்டுள்ள தென்று கூறுவதுமிகையாகாது.

## திருவாசகமும் முப்பத்துமூவரும்

மணிவாசகப்பெருமானார் அருளிய திருவெண்பாவில்,

"மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான்" —திருவா - திருவெண்பா, ௬.

என்னும் மணிவார்த்தைகள், "ஒருவனென்னும் ஒருவன் காண்க" என்னுங் கருத்தை வலியுறுத்துகின்றன. இதை யுற்று நோக்கும்போது, இவ் அடிகளார் மனத்திலும், 'சிவபெருமானை யடுத்து, மூவரும் முப்பத்துமூவருமே சிறப்புக்குரியவரென்பது' உள்கிக்கற்பாலது. மூவர் தனியடியார் போலவும், முப்பத்து மூவர் தொகையடியார் போலவும் வைத்தெண்ணப்படுவரோ? மும்மூர்த்திகளுக்கும் முப்பத்துமூவருக்கும் உள்ள தொடர்பை ஆராய்தல் வேண்டும்.

## திருநாவுக்கரசரும் முப்பத்துமூவரும்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே," "புண்ணியா, உன்னடிக்கே போதுகின்றேன்" என்னும் தம் திருமொழி இலக்கியமாய் விளங்கும், எங்கள் அப்பரடிகள், உலகின் மருள்நீங்க, உழவாரப் படைதாங்கிப் பாடியருளிய சித்தத்தொகை—திருக்குறுந்தொகையில், முதற்பாட்டின் முதல் வரியை, "சிந்திப்பார் மனத்தான் சிவன் செஞ்சுடர்" என்று சிகரத்திற் றொடங்கினார். இதையடுத்துத் தொடரும் ஒவ்வொரு பாவின் முதல் எழுத்துக்களையும் உற்றுநோக்கும்பொழுது அவை, அகரத்திலிருந்து ஔகாரம், பின்னர் அஃகேனம் (ஆய்தம்), ககரத்திற் றொடங்கிய பதினேழு மெய்களுமாய் முற்படுகின்றன. ஙகரத்தையும் ஞகரத்தையும் ஒரே பாவில் அமைத்துள்ளார். ஆகவே,

முப்பத்துமூன்று எழுத்துக்களும் இப் பாக்களுக்கு முதன்மை யாய் நின்றன. இம்முப்பத்துமூன்றெழுத்துக்களுக்கும் முதலில் நிற்பது "சி" (சிவ்வெழுத்து), என்னும் பேரழகு வாய்ந்து, ஆழ்ந்த கருத்தைச் சுட்டிக்காட்டுந் தனிச் சிறப்பை என்னென்று கூறுவாம்! இதினின்றும், முப்பத்துமூவர்க்கும் மிக்கோனாய் நிற்ப வன் ஒருவனே யென்பது திருநாவுக்கரசடிகளாரின் திருவாக்கு என்பதை ஓயாது சிந்தித்தல் வேண்டும்.

## கந்தபுராணமும் முப்பத்துமுக்கோடி தேவரும்

இனிக் கந்தபுராணத்தில், கச்சியப்ப முனிவரருளிய தேன் சுவைக்கும் திருப்பாடலைப் பருகுவாம். அண்டகோசப் பட லத்தில், 'இரவிபதந் தரணிக்கோரிலக்கமாகுமங்கதனின் முப்பான் முக்கோடி தேவரருக்கனுடன் வழிக்கொள்வர்' என்று, சூரிய மண்டலத்தில் முப்பத்துமுக்கோடி தேவர்களும் உறைவதாகக் கூறப்பட்டுள்ளது. இதற்குமேல் சந்திரலோகமுள்ளதாம். இன்று மனிதன் சந்திரலோகத்தையடைய முயற்சிக்கின்றான்; மூவேழுலகத்துக்குஞ் செல்லும் ஆற்றல் பெறினும், முப்பத்து மூவருக்கும் முதல்வனாய் நிற்கும் மூத்த திருவடிகளை புறக் கண்களால் காணமாட்டான். இது நிற்க. உருத்திரர் கேள் விப் படலத்திலும், உருத்திரர் பதினொருவரென்றும், அவர்கள் 'பரமனதுருவாய் நின்றோர் பதினொருவோர்' என்றும், "அறு வர் ஐவர் உருத்திரகணத்தோர்" $(6+5=11)$, என்றும் 'வேதன் நெற்றித்தலத்தினும் போந்து நின்றோர்' - பிரம்மாவின் நெற்றியினின்றும் உருத்திரர்கள் சிவபெருமான் அருளினால் வெளிப்பட்டார்களென்றுங் காண்கிறோம். முப்பான்முக் கோடி தேவர், முப்பத்துமூவரே யென்பது முன்னரே விளக்கப் பட்டது.

## திருவிளையாடற்புராணமும், முப்பத்துமூவரும்

இங்ஙனமே, பரஞ்சோதிமுனிவர் பகர்ந்தருளிய திருவிளை யாடற் புராணமும், பல இடங்களில், முப்பத்துமூவரைப்பற்றிக் கூறும். "பாலம் ஏற்ற செந்தழல் விழி உருத்திரர் பதினொருவர்", 'எண்வசுதேவர்', "மருத்துவர் இருவோர்", "ஆறிரண்டு அருக்கர்" என்று ஆங்காங்குச் சுட்டப்பட்டுள்ளது.

## குமரகுருபரரும் முப்பத்துமூவரும்

சிவமுருகன் பெருமையை வடகாசியிலும் நிலைநாட்டிய குமரகுருபர அடிகள், "இருவர் எண்மர் பதினொருவர் பன் னிருவர்" என்று மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்—காப்புப் பருவத்திலும், "மருத்துவர் வசுக்கதிர் உருத்திரரெனப்பொலியு

முப்பத்துமுக்கோடி தேவர்கள் புரக்கவே" என்று முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்—காப்புப்பருவத்திலும முப்பத்து முக்கோடி தேவருக்கும் தனித் தனியாகத் துதிப்பாக்கள் அமைத்துப் போற்றியுள்ளார்.

## அருணகிரிநாதரும் முப்பத்துமூவரும்

இல்லறத்தழுந்தி முருகனருள் பெற்றுத் துறவறம் பூண்ட அருணகிரிநாதரின் அறஉரைகளைக் கூர்ந்து நோக்குவோம்.

'முத்தைத்தரு பத்தித்திருநகை' என முருகப்பிரான் அருணகிரிநாதருக்கு அடி எடுத்துக்கொடுத்து மறைந்தருளினு ரென்பது வரலாறு. இத்தவமுனி பாடியருளிய திருப்புகழ் வரிசை-ஆயிரத்துக்குமேற்பட்ட பாக்களின் முதல் எழுத்துக்களை அவரடி பணிந்து அலகிடுவோமாக. செந்தமிழ் உயிரெழுத்துக் களில், அகரத்திற்றொடங்கி, ஓங்காரம் வரையிற் சென்று, பின்னர் ககர வரிசையிற் றொடங்கி வகரத்தில் முடிப்பது எத்தனை தெய் வத்தன்மை வாய்ந்தது! மொழிக்கு முதலில் வாரா மெய்யெ ழுத்துக்களாகிய டகர, ணகரங்கள், ரகர லகர ழகரங்கள் முத லியனவற்றிற் பாட்டுக்கள் உயிரெழுத்துச் சேராமற்றொடங்கு வதே யில்லை. ககர வரிசையிலுள்ள பாக்களை நுழைந்து பார்ப் பவர்கள் ககரத்தின் பின்னரும் தமிழ் நெடுங்கணக்கின் வரிசை யிலேயேதான் மெய்கள் சேர்க்கப்பட்டிருக்கும். (உ-ம்.) அ, ஆ........ஓ, (பின்னர்) கக, கங், கச், கட், கண், கத, கந், கப், கம என்ற உள்வரிசை தோன்றும்.

இங்ஙனம், செந்தமிழ் இலக்கண விதி பிறழாது உதிக்கும் இப்பாக்கள் வரிசை எம்போலிகளுக்கு ஒரு வாக்களிக்கின்றது. வருங்காலத்தில், தமிழ் நெடுங்கணக்கு வரிசைக்கோ அல்லது இலக்கண விதிகளுக்கோ மாறுதல் ஏற்படினும், இவ் அழியாத் திருப்புகழ் தமிழ் நெடுங்கணக்கு முப்பத்துமூன்று எழுத்துக் களின் வரிசை யழியாது நிலைநிறுத்திக் காத்தருளும் மந்திரத் தூணாய் இலங்குகின்றதென்பதே. இவ்அடிகளார் காட்டி யருளிய வரிசையை PERMUTATION and COMBINATION என்று கூறுவதா? அல்லது PROGRESSION என்று சொல்வதா? இவ் வரிசையைக் கண்ணுறுவார்க்கு அது ஒரு புதிய இன்பந்தரும்— ALPHABETICAL PROGRESSION, என்று புதுப் பெயர் கொடுத் தழைக்கலாமா?

## ஸ்ரீ ஆழ்வாரடிகளும் முப்பத்து மூவரும்

எம் அன்னைப்பிராட்டியார் திரு ஆண்டாள்நாச்சியார் பெருமாட்டி ஒப்பற்ற அற்புத நோன்பு வளர்த்து அருள் பெற்ற

திருமதி உலகத்தாயல்லவா! திரு அம்மையார் பாடியருளிய திருப்பாவையினின்றே இத்தெய்வக் கோதைநாயகியார் திருப் பெரியாழ்வாரின் திருமகளாரென்பது நன்கு விளங்கும்.

"ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ வுலகினிற் பெய்திடாய்" —ஆண்டாள், திருப்பாவை-௪

என்னுமன்பின் கட்டளையைக் கடவுளும் மீறமுடியுமா? 'எங்கை உனக்கல்லாதெப்பணியுஞ் செய்யற்க' என்னுங் கூற்றை நினைப் பூட்டுகின்றதல்லவா?

இத் திருப்பாவையில் ஒரு பாட்டு,

"முப்பத்துமூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பந் தவிர்க்கும் கலியே துயிலெழாய்"
—ஆண்டாள், திருப்பாவை-௨௦

என்று தொடங்குகின்றது. இன்னும - திருநம்மாழ்வாரும் முப் பத்து மூன்று திவ்விய தேசப் பெருமாள்களைப் பாடியுள்ளார்: அவர் களின் முப்பத்து மூன்று திருவுருவங்களும் திருக்குருகூரிலே (ஆழ்வார் திருநகரி) திருப்புளியைச்சுற்றி எடுத்திருக்கும் கற் சுவர்களிற் பொறிக்கப்பட்டுள்ளனவென்று அவ்வூர், ஸ்ரீ ஆதி நாதர் ஆழ்வார் கோயில் வரலாறு கூறுகின்றது. (ப-14) இங்ஙன மாயின், முப்பத்து மூன்று ஒரு சிறந்த எண்ணல்லவா!

ஸ்ரீமத் பகவத்கீதை உபநிடதம், மகா பாரதம்

இறுதியாக, இம்மூன்று தெய்வ நூல்களின் வாக்குக்களை யுஞ்சேர்த்துக் கூறுவதின் எமது நோக்கமே, இவ்வாக்குகளுக்கு மேல், சான்றுகளில்லையென்பதே. இவை அநாதியாய், உள்ள திருமறை மொழிகளாகும்; கால அளவுக்குள் அமையாத உபதேச மொழிகளும் இவைகளே. திருக்கண்ணபிரானும் அர்ச் சுனனும் கூறும் உறுதிமொழிகள்தானே, மகா பாரதம்! இவை களை ஒன்றாகத் திரட்டி அனுபவித்தலே சாலத் தகுதியாகும். இங்குக் கூறப்படும் குறிப்பை, ('Gita Rahasya or Karma Yoga by Bal Gangadhar Tilak, B. A. LL. B. & B. S. Sukthanka, B. A. LL. B. Vol. II) என்னும் நூலினின்று (பக்கம் 1084) பொறுக்கியுள்ளோம். ஆதலின், அதை ஆங்கிலத்தி லேயே வரைந்துள்ளோம். "It is stated in the Brahadranyakopanishad that the Eight Vasus, eleven Rudras, twelve Adityas, Indra and Prajapati make in all THIRY THREE GODS—and their names and etymology have been stated in the Maha Bharata, Adi parva, ch. 65 and 66 and Santiparva ch. 208"

ீன் ஸ்ரீமத் பகவத் கீதை, ஸ்ரீ இராமகிருஷ்ணர் மடம்-(1945) என்னும் நூலில், பக்கம்—212, விளக்கவுரையாக,

தேவர்கள் முப்பத்து மூவர் 1 பிரம்மா: 11 உருத்திரர், 12 ஆதித்யர்; 8 வசுக்கள்; 1 இந்திரன் என்று கூறப்பட்டுள்ளது. ஹரிவம்சம் 1,3·51—உருத்திரர் பதினொருவரென்றும் இவர்களுள் முக்கியமாய்ச் சம்புமூர்த்தியே சங்கரன், மங்களரூபி, மங்களங்களை யளிப்பவன் என்றுங் கூறும்.

இன்னும், திவாகரம், பிங்கலம், திருமந்திரம், திருவரங்க மாலை, தக்கயாகப்பரணி, விசார சாகரம், தேவாரம், தாயுமானவர், பட்டினத்தார், சிவஞான சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள் இவர்களுடைய வாக்குக்களையும், அவைபோன்ற பல நூல்களையும் ஊடுருவிப் பார்ப்பவர்க்கு, முப்பத்து மூன்றைப்பற்றிய வரலாறுகள் கிட்டவே கிட்டும். சமயம் வந்துழி எடுத்துரைப்பாம். முப்பத்து மூன்றைப்பற்றிய விஞ்ஞானச் சான்றுகளை அடுத்த கட்டுரையில் எழுதி முடிக்க இறைவன் திருவருள் புரிவாராக.

## தமிழ் மொழி

[கா. கணபதி]

தேனென இனிக்கும் தமிழ்மொழி கல்லார்
செம்மொழி வேறெது கற்பார்
வானமிழ் தொத்த தமிழ்மொழி கேளார்
மற்றும்வே றெம்மொழி கேட்பார்
கோனென விளங்கும் தமிழ்நெறி கொள்ளார்
கூர்நெறி வேறெது கொள்வார்
தானென எவர்க்கும் தீந்தமிழ் அளிக்கும்
தண்மையார் எம்தமிழ் மொழியே.

# கடவுள்

[செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை.]

உலகம் தோன்றி அறிவு நிலை திருந்தியதிலிருந்து கடவுளைப்பற்றிய ஆராய்ச்சியே அறிஞர்களால் ஆராயப்படுகின்றது. அக்கடவுட் கொள்கை பற்றிப் பலப்பல சமயங்கள், பல்வேறுவகை வேறுபாட்டுடன் தோன்றி வளர்ச்சியடைந்துள்ளன. தமக்கு மேம்பட்ட ஆற்றலுள்ள உயிர்ப் பொருளை யும் உயிரில்லாத மற்றைய பொருள்களையும் ஒரு காலத்தில் கடவுளாக வைத்து மக்கள் வணங்கி வந்தனர். அதுவே பாம்பு வழிபாடும், தீ வழி பாடும், வில் வேல் வாள் முதலிய படைக்கல வழிபாடுமாகும். அவை இன் னும் நம் நாட்டில் வழிபாடாக இருந்து வருகின்றன. அரச மரத்தினடி யில் பற்பல ஐந்தலை நாகப்பாம்புகள் வடிவில் கல்லில் அடித்துவைத்து வழி படுவதும், தலங்களில் சென்று துன்ப நீக்கத்துக்காக நாகர் உருவங்கள் செய்து வைப்பதுவும் கொண்டு அறியப்படும்.

நாட்டுப்புறங்களிலுள்ள வயல், புன்செய் முதலிய நிலப்பாங்குகளில், வில் வேல் முதலியவற்றைக் குறடுகட்டி ஊன்றிவைத்து வழிபடுவது நாம் கண்கூடாகக் கண்டறிந்ததொன்று. பழங்காலத்தில்கூட சுறுமீன்கொம்பை நட்டுவைத்துக் கடவுள் வழிபாடு செய்ததாகப் பட்டினப்பாலை கூறு

பின் அறிவுநிலை திருந்தி மேம்பட மேம்பட, பொருந்தி எல்லாவற்றினும் கலந்து, அவைகளைப் படைத்தும் காத்தும் அழித்தும் வருகின்ற ஒருவனைச் சக்தி (வலிமை)யே 'கடவுள்' எனத் தெளிந்தனர். அத்தெளிவை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே அறிந்து காட்டினர், நம் செந்தமிழ் நாட்டுச் சீரிய கூரிய பேரறிஞர்.

அது: தீயிற் சூடு; பூவினுள் மணம்; கல்லில் மணி; சொல்லினுள் உண்மை; அறத்தில் அன்பு; வீரத்துள் வலிமை; வேதத்துள் மறை பொருள்; ஞாயிற்றில் வெப்பம்; திங்களுள் குளிர்வு; இன்னும் உலகில் காணப்படும் பொருள் ஒவ்வொன்றினும் இரண்டறக் கலந்து நிற்கின்றான் எனவும், ஆதலின் அக்கடவுள் ஒன்றிலிருக்கின்றான், ஒன்றில் இல்லை யென்று கூறுதற்கில்லை, அவன் இவைகளை மறவாத வியத்தகு பண்பி னன் எனவும், அவன் முதலும் இடையும் கடையுமென்ற முக்காலத்தும் பிறந்தவனுமல்லன்; அவனைப் பிறப்பித்தோருமில்லை. தானே தோன்றிய தனிப்பெரும் தலைவன் எனவும், அவன் வியத்தகு முழுஆற்றலை விரித்து உரைத்து, அவர்கள் கண்ட முழு உண்மையை நமக்குத் தெளிவித்தனர். அத்தெளிவின் பிழிவாக, கடுவன் இளவெயினனார் என்னும், நல்லிசைப் புலவர் பெருமான் பாடியுள்ள 'பரிபாடல்' அடிகள் நன்கு விளக்குகின்றன; அவை:—

> தீயினுள் தெறல்நீ; பூவினுள் நாற்றம்நீ;
> கல்லினுள் மணியும்நீ; சொல்லினுள் வாய்மைநீ;
> அறத்தினுள் அன்புநீ; மறத்தினுள் மைந்துநீ;
> வேதத்து மறைநீ; பூதத்து முதலும்நீ;
> வெஞ்சுடர் ஒளியும்நீ; திங்களுள் அளியும்நீ;
> அனைத்துநீ; அனைத்தினுள் பொருளும்நீ; ஆதலின்,
> உறைவும் உறைவதும் இலையே; உண்மையும்
> மறவியில் சிறப்பின் மாயமா ரனையை;
> முதல்முறை இடைமுறை கடைமுறை தொழிலிற்
> பிறவாப் பிறப்பிலை; பிறப்பித்தோர் இலையே.

பரிபாடல்: ௩, அடி: ௬௩ - ௭௨.

# ‘பாணர் கைவழி’ மதிப்புரை

## (மறுப்பு)

[புலவர், ஞா. தேவநேயப் பாவாணர்.]

(உடு-ஆம் சிலம்பு உகஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

திருஞானசம்பந்தரினும் முதியரான திருநாவுக்கரசர், “மாசில் வீணையும்” என்று பாடியிருத்தலானும்; திருநீலகண்ட யாழ்ப்பாணர் யாழ்முரிப்பண்ணை இசைத்தற்கியலாமை பற்றித் தம் யாழை உடைத்தற் கெழுந்தபோது, அதைத் தடுத்த சம்பந்தர் ‘யாழை விட்டுவிட்டு வீணையை மேற்கொள்ளும்’ என்னாது, ‘திருப்பதிக இசையை இயன்றவரை இயக்கும்’ என்றமையானும்; பாணரும் வேறொரு நரப்புக்கருவியை மேற்கொள்ளாமையானும்; அவர் கையாண்டது வீணையொத்த கருவியேயன்றி வேறன்று என்பது துணியப்படும்.

இனி, வீணை எத்துணைச் சிறப்பினதாயினும், அதை இயக்குவோர் எத்துணைத் திறவோராயிருப்பினும், அது எவ்வெவர் மிடற்றிசையையும் இட்டுக் காட்டற்கேற்றது என்பது முற்றும் உண்மையானதன்று. இறைவன் அமைத்த மிடற்றிற்கும் மாந்தன் அமைத்த வீணைக்கும் சிறிதேனும் வேறுபாடு இருக்கத்தான் செய்யும்.

5. “யாழும் வீணையும் வெவ்வேறு கருவிகள்.”

ஒரு நரம்புள்ள சுரையாழ முதல ஆயிரம நரம்புள்ள வரை எல்லா நரம்புக்கருவிகட்கும் யாழ் என்பது பொதுப் பெயராகும். எவ்வெவ் வடிவிலிருப்பினும், எவ்வெவ் அமைப்பைக்கொண்டதாயினும், எவ்வெம்முறையில் இசைக்கப்படினும், எவ்வெந் நாட்டிற்குரியதாயினும், நரம்பு அல்லது கம்பிகொண்ட இசைக்கருவிகளெல்லாம் தமிழில் யாழ் என்றே பெயர் பெறுதற்குரியன. கின்னரி அல்லது சிறியாழ், (Fiddle), கித்தார், சுரமண்டலம், மண்டொலின், பேஞ்சோ, புல்புல்தாரா, சுரகெத், சித்தார், கச்சுவா, தாவூஸ், தில்ருபா, ஏஸ்ராஜ், சாரிந்தா (சாரங்கி), வில்லடி, சுரைவீணை, அகப்பைக் கின்னரி, வில்யாழ், தம்புரா (கேள்வி யாழ்), வீணை முதலிய எல்லா நரப்புக் கருவிகளும் பொதுப்பட யாழ் என்றே அழைக்கப்பெறுவன. ஆகவே, யாழ் என்பது ஒரு தனிப்பட்ட கருவியின் சிறப்புப் பெயராகாது. அது தோற்கருவி துளைக்கருவி நரப்புக்கருவி கஞ்சக்கருவி என்னும் நால்வகைக் கருவியுள், நரப்

புக்கருவியை யெல்லாம் பொதுப்படக் குறிக்கும் பொதுப் பெயராகும். இப்பாகுபாட்டின்படி இற்றை வீணையும் ஒருவகையாழாயிருக்க, அதைமட்டும் எங்ஙனம் வேறு பிரித்துக் கூறமுடியும்?

யாழும் வீணையும் வெவ்வேறு கருவியாயிருப்பின், நாரதயாழ் நாரதவீணை எனச் சிலப்பதிகாரத்தும், மகரயாழ் மகரவீணை எனச் சிந்தாமணியிலும், ஒரே கருவி ஏன் இருபெயராலும் அழைக்கப்பெறல்வேண்டும்? ஆதி (பெரு), மகர, சகோட, செங்கோட்டு, மூண்டக, சிறு முதலிய அடையடுத்தாலன்றி, யாழ் என்னும் பெயர் ஒரு சிறப்புவகை நரப்புக் கருவியைக் குறிக்காது. ஆயினும், சுருக்கம்பற்றி, துப்பாக்கியிற் பலவகையிருப்பினும் அவற்றுட் சிறந்ததும் துப்பாக்கியென்றே அழைக்கப்பெறுதல்போல, யாழுட் பலவகையிருப்பினும் அவற்றுட் சிறந்ததும் யாழ் என்றே அழைக்கப்பெறும்.

நரப்புக்கருவி வில்நாணொலியிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டதாகத் தெரிதலால், வில் யாழே முதன்முதல் தோன்றிய யாழ் வகையாக இருத்தல்வேண்டும். அதன்பின், பத்தர் (குடம்) உள்ள வில்யாழும், பத்தரும் கோடும் (தண்டியும்) உள்ள கோட்டி யாழும், பத்தரும் கோடும் திவவுமுள்ள திவவியாழும், முறையே தோன்றியிருத்தல் வேண்டும். தலைச்சங்கக் காலத்திலேயே தமிழ் முத்தமிழாய் வழங்கியதால், கடைச்சங்கக் காலத்துச் சிறந்த யாழ் வகைகளாகக் கொள்ளப்பட்ட பேரியாழ் மகரயாழ் சகோடயாழ் செங்கோட்டியாழ் என்னும் நால்வகை திவவியாழாகவே இருந்திருத்தல் வேண்டும். அவை முறையே யாழும் ஒன்றினொன்று ஏதேனுமொரு வகையில் சிறந்ததாயுமிருந்திருத்தல் வேண்டும். அவற்றுள், செங்கோட்டியாழ் கருவியமைப்பில் இற்றை வீணையை ஒத்ததாகும். நரம்பிற்குப் பதிலாய்க் கம்பியும் வார்த் திவவிற்குப் பதிலாய் வெண்கல மெட்டும் தோற்போர்வைக்குப் பதிலாய் மரப்பலகையும் வறுவாய்க்குப் பதிலாய் நுண்துளைத்தகடும் கொண்டிருத்தலே, இற்றை வீணையின் வேறுபாடாம். குடவடிவிற் சிறிது மாறுதல், கோல் எனப்படும் மெட்டுத்தொகையிற் கூடுதல், ஆகியவற்றையும் வேறுபாடாகச் சேர்த்துக்கொள்ளலாம். இவையெல்லாம் காலவளர்ச்சியில் வசதிக்கேற்ப ஏற்பட்டவை. ஈராயிரம் ஆண்டுக்கு முற்பட்ட செங்கோட்டியாழ் இன்று இத்துணை வேறுபட்டிருப்பது வியப்பன்று.

> "பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்
> சீர்போலியுஞ் செங்கோடு செப்பினர்—தார்பொலிந்து
> மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே
> பின்னு முளவே பிற."

என்பதனால், கடைச்சங்கக்காலத்தில் பலவகை யாழ்கள் இருந்தன என்பதும், அவற்றுள் நான்கு சிறந்தன என்பதும், அவற்றுள்ளும் செங்கோட்டியாழ் தலை சிறந்தது என்பதும், அறியப்படும். காலமுறைப்படி நோக்கின், இசைவல்லார் கையாளும் கருவிகளுள் பிந்தினது சிறந்திருக்குமே யன்றி முந்தினது சிறந்திருக்காது. நால்வகை யாழுள் இறுதியது செங்கோட்டியாழாதலின், அது ஏனையவற்றினும் சிறந்ததாயிருத்தல் வேண்டும்.

ஆகவே, யாழ் என்பது தமிழ்நாட்டில் மட்டுமன்றி உலகமெங்கணும் முக்காலும் வழங்கும் நரம்புக் கருவிகட்கெல்லாம் பொதுப்பெயர் என்றும், அச் சொல்லைச் சிறப்புப் பெயராகக் கொண்ட ஒரு தனிக் கருவியும் கடைச்சங்கக் காலத்திருந்ததில்லை யென்றும், அன்றிருந்த பலவகை யாழுள் தலைசிறந்த செங்கோட்டியாழே இன்று வீணை என்னும் வடசொற் பெயர் கொண்டு வழங்கி வருகிறதென்றும், யாழ் வேறு வீணை வேறு என்பது இருவகையில் தவறான திரிபுக்கொள்கை என்றும், அறிந்துகொள்க. யாழ் என்னும் தென்சொல் பிற்காலத்து வழக்கற்றதினாலேயே, முற்காலத்தில் சுரையாழ் என வழங்கியது இன்று சுரைவீணை அல்லது வீணை என உலக வழக்கில் வழங்குகின்றது.

6. "யாழில் விரலுறுகோடு (Finger - board) இல்லை. அதன் குடத்தினின்றெழுந்த நரம்புகள் நேரே அதன் வளைவுக் கோட்டில் கட்டப்பட்டன."

இதற்கு மறுப்பு, ஏனை மறுப்புக்களிலும், திரு. வரகுண பாண்டியனார் இலக்கியச் சான்றும் மேற்கோளும் காட்டி விளக்கியுள்ள செங்கோட்டியாழின் 18 உறுப்புக்களின் வரணனையுள்ளும், படங்களுள்ளும், கண்டுகொள்க.

> "கோடே பத்த ராணி நரம்பே
> மாடக மெனவரும் வகையின வாகும்"

> "மாட்டிய பத்தரின் வகையு மாடகமுந்
> தந்திரி யமைதியுஞ் சாற்றிய பிறவு
> முந்திய நூலின் முடிந்த வகையே"

என்னும் பழஞ் சூத்திரங்களையும்,

> "மணிகடை மருப்பின் வாளார் மாடக வயிரத் தீந்தேன்
> அணிபெற வொழுகி யன்ன அமிழ்துறழ் நரம்பின் நல்யாழ்"

என்னும் சிந்தாமணிச் செய்யுளையும் (722) நோக்குக.

7. "யாழும் வீணையும் இடைக்காலத்தில் இறுதிவரை தமிழ்நாட்டில் பக்கம் பக்கமாயிருந்து வந்தன. மாணிக்க வாசகரின் திருப்பள்ளியெழுச்சியில், இரு கருவிகளும் உடன் குறிக்கப் படுகின்றன. புதுக்கோட்டைத் திருமயததிலுள்ள திருமால் கோவிலுள் எழுமுனிவர் (சப்தரிஷி) சிலையில் இரு கருவிவடிவங் களும் உடன் பொறிக்கப்பட்டுள. வேத இலக்கியத்துள்ளும் யாழும் வீணையும் பற்றிய குறிப்புள்ளது."

நால்வகை யாழுள் செங்கோட்டி யாழ் சிறந்ததாதலானும், குலப்பிரிவினையால் நேர்ந்த இழிவு காரணமாகப் பாணர் தம் பிழைப்பிழந்து பாண்தொழிலை அடியோடு கைவிட்டமை யானும், ஏனை மூன்று யாழ்களும் படிப்படியாய் வழக்கிறந்தன.

ஆரியர் தென்னாடு வருமுன் அல்லது வடசொல் தமிழ் நாட்டில் வழக்கூன்றுமுன், செங்கோட்டியாழ் செந்தமிழ்ப் பெயராலேயே வழங்கி வந்தது. அதன்பின், அதற்கு வீணை என்னும் வடசொற் பெயர் புகுத்தப்பட்டது. சிறிது காலத்தின் பின் தமிழ்ப் பெயர் வழக்கு வீழ்ந்தது. அதன் பின்னர், செங் கோட்டியாழ் வீணை என்னும் வடசொற் பெயராலும், இசை யெளியார் கையிலுள்ள பன்னரம்பு வில்யாழ் யாழ் என்னும் தமிழ்ப் பெயராலும், வழங்கி வந்தன. இடைக்காலத்தின் பின், அவ்வில் யாழும், கருவியும் பெயரும் ஒருங்கு வழக்கு வீழ்ந்தது. பண்ணிசைத்தற்குரிய பண்டை யாழ் வகைகளுள், செங்கோட்டி யாழ் ஒன்றே இன்று சிறிது உருக்கரந்தும் பெயர் மாறியும் வழங்கி வருகின்றது. தமிழநாகரிகப் பழக்க வழக்கங்களுள்ளும் பொருள்களுள்ளும், தலைசிறந்தவற்றைத் தழுவிக்கொண்டு அவற்றைத் தமவாகக் காட்டுவது, ஆரியர் வழக்கம்.

செங்கோட்டியாழ் வீணையெனப் பிரிக்கப்பட்ட பின் னெழுந்த நூல்களிற்சில, வில் யாழையும் செங்கோட்டியாழை யும் முறையே 'யாழும் வீணையும்' என உடன் கூறுகின்றன. திருமயம் சிலை இக் கொள்கை பற்றியதே. எந்நாட்டிலும் உயர்ந்த கருவியுடன் தாழ்ந்த கருவியும் பயில்வது இயல்பு. மதங்கம் (மிருதங்கம்) இருக்கும்போது கஞ்சிராவும், வீணை யிருக்கும்போது புல்புல்தாராவும் வழங்குதல் காண்க. 'யாழ்' 'வீணை' என்னும் பெயர்கள் அடுத்துவரும்போது, அவற்றுள் ஒன்று மிடற்றிசையைக் குறியாவிடின், முன்னது வில்யாழை யும் பின்னது செங்கோட்டியாழையுமே குறிக்கும்.

ஆரியர் கி. மு. 1500 ஆண்டுகட்கு முன்பே தமிழ் நாட்டிற் சிறுசிறு குடும்பங்களாகக் குடியேறிவிட்டதனால், வேத இலக்

கியத்தில் யாழும் (வில் யாழும்) வீணையும் (செங்கோட்டியாழும்) பற்றிய குறிப்பிருப்பது வியப்பன்று.

முல்லை நாகரிக நிலையிலிருந்த நாடோடிகளான வேத ஆரியர் இந்தியாவிற்குள் புகுமுன்னரே, தமிழ் முத்தமிழாய் வழங்கிற்றென்பதையும், தமிழ் நாகரிகம் பனிமலை (இமயம்) வரை பரவியிருந்ததென்பதையும், நினைவிலிருத்துதல் வேண்டும்.

பண்டைக் காலத்தில் யாழ் என்னும் தமிழ்ப் பெயர் நரம்புக் கருவிகளையெல்லாம் குறித்தவகை யொட்டி, இன்று வீணை என்னும் வடசொற் பெயரும் ஒரு கம்பியுள்ள இரப்போன் யாழ் முதல் எழு கம்பியுள்ள செங்கோட்டி யாழ் வரை எல்லாக் கம்பி யிசைக்கருவிகளையும் குறித்து வருகின்றது.

செங்கோட்டியாழ் வடசொற் பெயர் பூண்டபின் தமிழ்ப் பெயரை யிழந்தமைக்கு, முதுகுன்றம் மறைக்காடு முதலிய தமிழ்நாட்டூர்கள் முறையே விருத்தாசலம் வேதாரணியம என வடமொழிப் பெயர் பூண்டபின் தம் தமிழ்ப் பெயர்களை யிழந்தமை சிறந்த ஒப்பனையாம். அவ்வூர்கள் தொன்றுதொட்டுத் தமிழ்நாட்டைச் சேர்ந்தனவாயுள்ளமை அனைவரும் அறிவர். ஆயினும், அவற்றை வடசொற் பெயராலன்றித் தென்சொற் பெயராற்குறிப்பின், இன்று புலமக்கள் தவிரப் பொது மக்கள் பொருளறியார்.

8. "பண்டைத் தமிழ்யாழ் வீணைபோன்றிருந்ததாயின், ஒவ்வொரு யாழிசைஞனும் விலக்க வேண்டியிருந்த 'அதிர்வு' என்னுங் குற்றத்திற்கு எங்ஙனம் காரணங்காட்ட முடியும்? யாழின் மெலிவு நரம்பைத் தெறித்தபோது அது ஏனை நரப்பிசையினின்பம் நுகரப்படாதவாறு அதிர்ச்சியை உண்டு பண்ணியதாதலின், அதை உடனே நிறுத்துதற்கு யாழோன் கையில் ஒரு கோல் இருந்தது. இக் கோலுருவம் அமராவதி யாழோன் சிலையில் பொறிக்கப்பட்டுள்ளது."

பேரியாழ் முதலிய மூன்றியாழ்களிலும், ஒலி பெருக்குறுப் பாகத் தரப்புச்சித்தாரில் பண்மொழி நரம்பிற்குக் கீழ் அமைத்திருக்கும் அதிர்வு நரம்புகளைப்போல், சில அதிர்வு நரம்புகள் அமைக்கப் பெற்றிருந்தன. பண்மொழி நரம்புகளை இசைக்கும் போது, அவ் அதிர்வு நரம்புகள் ஒலி பெருக்குவதுடன் அதிர்வையும் உண்டுபண்ணும். யாழ் இசைப்பவரின் தேர்ச்சிக்குத் தக்கவாறு அவ் அதிர்வு குறையும், அல்லது நீங்கும். இத்தகைய அதிர்ச்சி அல்லது இரைச்சல் நிகழாதவாறு, ஒவ்வோர் யாழிசைஞனும் காத்துக்கொள்ள வேண்டியிருந்தது. இவ்வதிர்ச்சி அதிர்வு நரம்புகளால் நேர்ந்ததேயன்றி யாழால் நேர்ந்ததன்று.

இவ்வதிர்வு நரம்புகளால் இனிமை கெடுகிறதென்றறியப் பட்டபின், பேரியாழிலிருந்த 14 அதிர்வு நரம்புகள் மகரயாழில் 12 ஆகவும் சகோடயாழில் 7 ஆகவும் குறைக்கப்பட்டு, இறுதியில் செங்கோட்டியாழில் அடியோடு விலக்கப்பட்டன.

மேலும், நரம்பின் அதிர்வு யாழின் மரக்குற்றத்தாலும் பிறக்கும். இதை, 'நரம்பினிசையாற் பிறந்த பொல்லாமை' யாவன :

" செம்பகை யார்ப்புக் கூட மதிர்வு"........
" அதிர்வெனப் படுவதிழுமென வின்றிச்
சிதறி யுரைக்குந ருச்சரிப் பிசையே"

என்பன.

இவை மரக்குற்றத்தாற் பிறக்கும் ;

" நீரிலே நிற்றல் அழுகுதல் வேதல் நிலமயங்கும்
பாரிலே நிற்றல் இடிவீழ்தல் கோய்மரப் பாற்படல்கோள்
நேரிலே செம்பகை யார்ப்பொடு கூடம் அதிர்வுநிற்றல்
சேரினோர் பண்கள் நிறமயக் கம்படும் சிற்றிடையே."

என்னும் நச்சினார்க்கினியர் உரையான் (சிந்தாமணி, 718, 719) அறிக.

யாழோன் கையிலிருந்த கோல், அவன்தன் யாழ்ப் புலமையை அரங்கேற்றிய காலத்து அவனுக்கு அளிக்கப்பட்ட வரிசைச் சின்னமே யன்றி, மெலிவு நரம்பதிர்ச்சியைத் தடுக்கும் இசைக்கருவி யுறுப்பன்று. மாதவி தன் ஆடல்பாடலை அரங்கேற்றித் தலைக்கோற்பட்டம் பெற்றாள். அப்பட்டம் ஒரு கோலுடன் கொடுக்கப்பெறுவது. அக்கோல் தலைக்கோல் எனப்படும். தலைக்கோல் இசைநாடகக்கலையில் தலைமை குறிக்கும் கோல். 'தலைக்கோல் தானம்' 'தலைக்கோலாசான்' 'தலைக்கோலரிவை' முதலிய வழக்குகளை நோக்குக.

9. "வீணை ஒருகாலும் தமிழ்நாட்டிலிருந்ததில்லையென்று நூலாசிரியர் கூறுகின்றார்."

செங்கோட்டி யாழினும் வேறாக வீணையென்றொரு சிறந்த கருவி ஒருகாலும் தமிழ்நாட்டிலிருந்ததில்லை என்பது ஆசிரியர் கருத்தேயன்றி, வீணையே ஒருகாலும் தமிழ்நாட்டிலிருந்ததில்லை என்பதன்று.

10. "21 நரம்புள்ள பேரியாழிலும் பண்மொழி நரம்புகள் ஏழேயாகவும் ஏனையவெல்லாம் அதிர்வு நரம்புகளாகவுமிருந்திருப்பின், அதற்குப் பெரும் பத்தர் எதற்கு? இசைபெருக்க அதிர்வு நரம்புகளே போதுமே!"

முற்கால மக்கள் உருவத்திற் பெரியவராயிருந்ததினால், அவர் கையாண்ட கருவிகளெல்லாம் பெரியனவாகவே யிருந்தன. மக்கள் உருவம் வரவரச் சிறுத்துவருவதினால், அவர்கள் கையாளும் பலவகைக் கருவிகளும் சிறுத்துவருகின்றன. பேரியாழ் மிகப்பழையதாதலின், அது முதுபழங்கால மக்கட்கேற்றபடி மிகப்பெரியதாயிருந்திருக்கின்றது. அது நால்வகை யாழில் முதற் குறிக்கப்பெறுவதற்கு அதன் பழைமையே காரணம். கடைச்சங்கக்காலத்திலும் அது வழங்கினதாகக் கூறப்படினும், அது உருவத்திற் பெரியவர்க்கே உரியதாய் அருகினவழக்காகவே வழங்கினதாகத் தெரிகின்றது.

அதிர்வு நரம்புகளால் இசையைப் பெருக்கலாம் என்ற எண்ணம் உண்டானபின், பெருங்கலம் என்னும் பேரியாழில் முதன்முதலாக அதிர்வு நரம்புகள் சேர்க்கப்பட்டிருத்தல்வேண்டும். ஆகவே, அவ் யாழில் பெரும்பத்தர் முந்தினதும் அதிர்வுநரம்பு பிந்தியதுமாகும். தலைச்சங்கக்காலத்து மக்கள் தம் உடற் பருமனுக்கேற்றபடி, இயல்பாகவே பெரும்பத்தர் அமைத்திருத்தல் வேண்டும். பிற்காலத்துச் சிற்றுருவ மக்களின் சீறியாழ்களோடு ஒப்புநோக்கிய பின்னரே, அதற்குப் பெருங்கலம் அல்லது பேரியாழ் என்று பெருமைச்சொல் அடைகொடுத்துப் பின்னோர் பெயரிட்டதாகத் தெரிகின்றது. முதற்காலத்தில் அது அளவான கருவியாகவே கருதப்பட்டிருக்கலாம். பழங்காலத்திற் பெரு வழக்காக வழங்கியதாக நூல்களிற் கூறப்படும் மத்தளம், அதன் பருமை காரணமாக இன்று பயன்படுத்தப்படாமல் சில சிற்றூர்களிற் பதுங்கிக் கிடக்கின்றது. அதன் சிறுவடிவான மதங்கம் (மிருதங்கம்) இன்று பெருவழக்காயுள்ளது. இங்ஙனமே, பேரியாழ் சீறியாழ் நிலைமைகளும் கடைச்சங்கக் காலத்தில் இருந்திருத்தல்வேண்டும்.

பேரியாழினும் பேரியாழான ஆதியாழ் (பெருங்கலம்) வேறு; நாரதப் பேரியாழ் என்பதும் வேறு.

"பெருங்கலமாவது பேரியாழ்; அது கோட்டினதளவு பன்னிருசாணும், வணரளவு சாணும், பத்தரளவு பன்னிருசாணும், இப்பெற்றிக்கேற்ற ஆணிகளும் திவவும் உந்தியும் பெற்று, ஆயிரங் கோல்கொடுத்தியல்வது; என்னை? "ஆயிர நரம்பிற்றாதி யாழாகும் - ஏனை யுறுப்பு மொப்பன கொளலே—பத்தரளவுங் கோட்டினதளவும்—, ஒத்த வென்ப இருமூன் றிரட்டி-வணர்சாணொழித்தென வைத்தனர் புலவர்" என்பது அடியார்க்கு நல்லார் உரைப்பாயிரம். நாரதப் பேரியாழ் வில்யாழ் வகையாகும்.

இதுகாறும் கூறியவாற்றால், திருமான் வரகுணபாண்டியனார் அவர்களின் பாணர்கைவழி முடிபுகள் அனைத்தும் உண்மையே என்றும், அதற்குத் திருமான் சாம்பமூர்த்தி அவர்கள் வரைந்த மறுப்பு சற்றும் பொருந்தாதென்றும் அறிந்து கொள்க.

குறிப்பு :—வீணை என்னும் பெயர், வடசொல் என இம் மறுப்புரையிற் கூறியுள்ளேன். அது 'விண்' என்னும் பகுதியடியாகப் பிறந்த தென்சொல்லேயென்று மூதறிஞர் துடிசைகிழார் கூறியுள்ளனர். விண்ணென ஒலித்தது, விண்ணென இசைத்தது, விண்ணென இரைந்தது, விண்ணெனத் தெறித்தது என இருவகை வழக்கினும் வழங்குதலானும், 'விள்' என்னும் வேர்ச்சொற்கு ஒலித்தல் சொல்லுதல் என்னும் பொருள்களுண்மையானும், அவர்கள் கூற்றும் ஒப்புக்கொள்ளத்தக்கதே.

இனி, முகவீணை என ஒரு குழற்கருவி யிருத்தலானும், அதன் இசை ஒருவகையில் வீளையை (சீழ்க்கையொலியை) யொத்திருத்தலானும், வீணை என்னும் பெயர் மிடற்றிசையையுங் குறித்தலானும், வீளையென்னும் சொல்லினின்று வீணையென்னும் பெயர் திரிந்ததோ எனவும், ஐயுறக்கிடக்கின்றது.

விண் என்னும் சொல்லினின்று நீட்டல் திரிபாகவோ, வீளையென்னுஞ் சொல்லினின்று போலித்திரிபாகவோ, வீணையென்னும் பெயர் தோன்றியிருக்கக்கூடியது பொருத்தமே. ஒரு பொருள்பற்றித் தென்சொல்லின் வேறாக வழங்கும் வடசொற் சில, தென்சொல்லினடியாகவே பிறந்திருத்தலின், மேற்கூறிய கூற்று வியப்பிற்கிடமானதன்று.

# குறியா இழப்பு

வித்துவான், தி. பொ. பழனியப்ப பிள்ளை B.O.L. அவர்கள் திருப்பதி திருவேங்கடேசுவரன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகத் தமிழ் ஆராய்ச்சியாளராய் அரும்பணி செய்துவந்தனர். அவர்கள் அமைதியே உருவாய்த் திகழ்ந்தவர்கள். திருச்சிராப்பள்ளித் தேசியக் கல்லூரி, முன் உயர்நிலைப் பள்ளியாக இருந்தது. அப்பொழுது அதன்கண் தமிழாசிரியராகத் தொண்டாற்றியுள்ளார்கள். பின், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் விரிவுரையாளராகத் திகழ்ந்தனர். இதற்கிடையில் தம் அரும்பெரும் முயற்சியால் கீழ்க்கலை இளம்புலவர்த் தேர்வி (B.O.L.) லும் வெற்றிபெற்றுள்ளார்கள். வடமொழியிலும் பெரும் புலமையுண்டு. கல்வெட்டு ஆராய்ச்சியில் வியத்தகுதிறலினர். பழைய ஏட்டுச் சுவடிகளைப் பிழையறப் படித்துப் படியெடுத்துப் பேணுவதிலும், அச்சிட்டு வெளியிடுவதிலும் உலையா முயற்சியுள்ளவர்.

அறிவும் ஆற்றலும், நெறிமுறைதவறா நேர்மையும், சீர்மையும் சிவனெறிப்பற்றும் சேரக்கொண்டவர். அடக்கமும் இனிமையும் ஆழ்ந்து எண்ணும் நீர்மையும், மென்மொழியும், "வேட்பமொழிதலும் பிறர்சொற் பயன்கோடலும்" வாய்ப்பப் பெற்றவர். பிறர்தம் பொருந்தாக் கூற்றுக்களை எடுத்து நயம்பெற நடுநிலை தவறாது வடிவுரை புகலாது வாய்மையுற மறுப்புரை வரைவதில் வல்லர். மறுப்புரை வரைவது உண்மை தெருட்டுதற் பொருட்டேயாம். அவ்வாறாயினும், அப்பொருந்தாக் கூற்றுப் புகன்றார்மாட்டும் பேரன்புவாய்ந்தவர். கருத்து வேற்றுமை எழுவது இயற்கை. அதன்பொருட்டு வேறுபட்டாரைக் காய்வது மயற்கை எனக்கொள்ளும் மாண்பினர்.

திருவேங்கடேசுவரன் கீழ்க்கலை ஆராய்ச்சி வெளியீடாகச் சிறந்த முறையில் தாம் அரிதிற்றொகுத்த அரும் பெரும் குறிப்புக்கள் முன்னுரை முதலியவற்றுடன் திருக்குறள் காளிங்கர், பரிப்பெருமாள் இருவர் உரைகளுடன் கிடைத்தவரை அறத்துப்பாலும், பொருட்பால் இன்பத்துப்பால் முழுவதும் வெளியிட்டுள்ளார்கள். இவர்களின் விரிந்த வரலாறு பின்வெளிவரும்.

இப்பெரும் புலவர் எதிர்பாராத நிலையில் 1—2—'51 மாலை 5-10 மணிக்குத் திருப்பதியில் தாம் வாழ்ந்துவந்த இல்லத்து உடல்நீத்து இறைவனடி சேர்ந்து இன்புற்றனர் என்பது கேட்டுப் பெரிதும் வருந்துகின்றோம். இவர்தம் அருமைத் திருமகனார் தி. ப. கதிரேசன் அவர்களுக்கும், குடும்பத்தார்க்கும் எங்கள் பரிவுரையைத் தெரிவிக்கின்றோம். ஆறுதல் எய்துவார்களாக. அவர்தம் ஆவி இறையடிக்கீழ் இன்புற்று வாழ்க.

# இரங்கல்

[திருப்பதி கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர், திருவாளர். தி. பொ. பழநியப்பப் பிள்ளை B.O.L. அவர்கள், இறை யடி யுற்றமைகுறித்து அவர் மாணவருள் ஒருவராகிய, வித்துவான், செ. வேங்கடராமச் செட்டியார் பாடியவை]

ஆசிரிய விருத்தம்

1. என்படு கின்ற தந்தோ எழில்திரு வேங்க டந்தான் !
என்படு கின்ற தையோ இருந்தமிழ் கற்றார் நெஞ்சம் !
என்படு கின்ற தந்தோ இணையிலாத் தமிழர் நாடு !
மன்படு பழநி யப்பர் மறைந்தமை யறிந்த தாலே.

2. அன்பின துருவம் என்பார் ! அறிவினுக் கெல்லை யென்பார்!
அன்புரை மொழிவர் என்பார் ! ஆய்வுரை பகர்வர் என்பார்!
துன்பிலா மனத்தார் என்பார் ! துகளிலாப் பழநி யப்பர்
துன்புறப் பிரிந்தா ரென்று துடிக்கின்ற மனத்து மாந்தர்.

3. ஆழ்தமிழ்ப் புலமை கண்டோர், ஆயுள்நாள் முழுது மிந்தத்
தாழ்விலாத் தமிழே கற்ற தகவினர் போலு மென்பார் ;
வீழ்வறு மாங்கி லத்தின் விழுமிய நடையைக் கண்டோர்,
வாழ்வுநாள் பழநி யப்பர் மருவுதம் மொழியோ வென்பார்

4. தவமுறு வைண வத்தார் தம்மினு மவர்நூ லாய்வார்
பவமறு சமண நூலைப் பாரிப்பார் சமணின் மிக்குச்
சிவநெறி விளக்குஞ் சைவ சித்தாந்தம் தெளிந்து நாளும்
அவமற நோற்று நின்றே ஆழ்திருப் பழநி யப்பர்.

5. பழநியில் பிறந்தார் பேரும் பழநியென் றழைக்கப் பட்டார்
அழகுறு தமிழில் தேர்ந்தார் ஆயிரம் பரிசு பெற்றார்
பழகினர் ஆங்கிலத்தைப் பரிததனர் பி. ஓ. எல். ஆம்
பழநியே யெனவி ரும்பப் பண்பெலாம் நிறைந்து நின்றார்.

6. வடமொழி பயின்றார் நன்கு வடமொழிப் புலவர் யாரும்
திடமுறக் காணு நூலும் தெரிந்துரை விரிக்க வல்லார்
அடைவுற இசைநூல் கற்றே ஆயிசை வாணர் போலத்
தடையற இராகம் பண்கள் தாளமொ டுரைக்கு நீரார்.

7. பழந்தமிழ் அரசர் அந்நாள் பண்புடன் வரைந்து வைத்த
பழையசெப் பேடு தாமோ பற்பல கல்வெட் டெல்லாம
பிழையற நோக்கி நோக்கிப் பீடுறு பழநி யப்பா
விழைவுறப் புதுமை யாக விரித்துரைத் தனவே யன்றோ.

8. தில்லைப்பல் கலைக்கல் லூரித நிகழ்ந்தனர் தமிழா சானாய்
எல்லைக்கீழ்க் கலையா ராய்ச்சி யிணையிலாக் கழக முற்றார்
இல்லையே நிகரி வர்க்கென் றியம்பிடப் பதித்தார் பன்னூல்
இல்லையே யவரிந் நாளில் எனநினைந் திரங்கச் சென்றார்.

9 தெழிகுர லருவி வீழும் திருப்பதி மலையே! முன்னாள்
வழிவழிப் புலமை சான்ற வளர்தமிழ்ப் புலவன் தன்னை
இழிவறப் பெற்று ளோனென் றிறுமாந்து நின்றாய் இந்நாள்
கழிந்தனர் பழநி யப்பர் கரைந்துநைந் தழுவாய் கொல்லோ.

10. புன்னகை பூததது யார்க்கும் பொலிவுற வணக்கஞ் செய்தே
இன்னுரை வழங்கி யென்றும் இனியசெய் திடைய றாமல்
மின்னவிர் சடிலத் தானை விழைந்துளம் பற்றி நின்று
துன்னிய பழநி யபபர் தொழுதமிழ்த் தெய்வங் கண்டா.

வெண்பா

11 அன்பு வடிவே அறிவாற் பெருங்கடலே
துன்பத் தொடர்வறுக்கும் தூய்மனத்தீர்—இன்பம்
இடையறா நீண்ட இடையூறா மெய்யின்
தடைநீங்கப் பெற்றீரோ தான்.

இங்ஙனம்,

சே. வேங்கடராமச் செட்டியார்.

S. V. O, கல்லூரி, திருப்பதி.

# நூலகம்

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தலைமைநிலையமாகிய திருநெல்வேலியின்கண் கழகத்தார் அமைத்துள்ள 'சிவஞான முனிவர்' நூல் நிலையத்தைச் சென்னைச் சட்டசபைத் தலைவர், திரு. ஜே. சிவசண்முகம் பிள்ளை அவர்கள் பார்வையிட்டார்கள். அப்பொழுது ஒரு பெருங் கூட்டம் நிகழ்ந்தது. அக்கூட்டத்திற்கு திரு. வி. எஸ். சங்கரசுப்பிரமணிய முதலியார் பி.ஏ.பி.எல்., எம.எல.ஏ. அவர்கள் தலைமை பூண்டார்கள். திரு. பிள்ளையவர்களுக்குக் கழகத்தாரால் அன்புடன் வரவேற்பு நன்மொழி படித்தளிக்கப் பெற்றது. திரு. பிள்ளையவர்கள் நூல்நிலையத்தைப் பார்வையிட்டுப் பாராட்டினர். சிறப்பாக வரவேற்றமைக்கு மகிழ்ந்து சில அறிவுரை பகர்ந்தனர். அது, சென்னை அரசியலார் தமிழுக்கும் பேராதரவு கொடுத்துவருகின்றனர். பிறநாடுகளில் மக்கள் எத்துணையோ மொழிகளைக் கற்கின்றனர். நாமும் அவ்வாறு கற்கவேண்டும். பிறமொழிகளைக் கற்க வேண்டா எனக் கூறுவது விரும்பத்தக்கதன்று. தமிழாசிரியர்களில் (எல்லோரும் அல்ல) ஒருசிலர் குடியரசுக்கு மாறான கொள்கைகளையும், பாழ்ங் (நாத்திகக்) கொள்கைகளையும் மாணவரிடையே பரப்புவது பொருத்தமற்றதாகும் என்பதே.

தலைமை பூண்ட திரு. முதலியாரவர்கள தமிழாசிரியர்களிற் சிலர் பாழ்ங் கொள்கைகளை மாணவரிடையே பரப்பி வருகின்றனர் என்றால், அதற்குக் காரணம் அவர்கள் அன்று. அவர்களுக்குக் கடவுட் கொளகையையும, அதன் இன்றியமையாமையையும் வற்புறுத்துக் கற்பிக்காத கல்வி முறையின்— ஆட்சிப் பொறுப்பின் குறையே காரணமாகும். அரசியலார் சமயத்துறையில் தலையிடுவதில்லையென்று கூறி நிற்பது பொருந்தாது. தனிப்பட்ட சமயங்களைச் சார்ந்து நிற்பதுதான் தவறு. பொதுநெறியாகிய கடவுட் கொள்கையைக் கடைப்பிடித்து நிற்பது கடப்பாடேயாம். கடவுட் கொள்கையின்றேல் அறமுறை திறம்பும். ஆகவே, கடவுட் கொள்கைகளை ஆசிரியர்கட்கு உணர்த்தி அவர்கள் வழி மாணவர் உலகத்துக்குப் பரப்புதல் வேண்டும். அதற்கேற்ற பாடப்பிரிவில் சிறுகால வரையறையும் நூலும் அமைக்க வேண்டும். வெளிநாட்டாரால் மேற்கொள்ளும் கல்லூரிகளில் அம்முறை நிகழ்வதும் காணலாம் என்றனர்.

திரு. பிள்ளையவர்கள் அவ்வுரையை மனமார ஏற்றுத் தாங்கள் கூறுவது நல்லதே. அதை நிகழப்போகும் சட்டசபைப் பொருள்நிலைக் கூட்டத்தில் தாங்கள் விளக்கிப் பேசுங்கள். அதற்கென அரைமணி நேரம் நல்குகின்றேன் என்றார்கள்.

கழக ஆட்சிப் பொறுப்பாளர், திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் நன்றிகூறுமுகத்தால் பிள்ளையவர்களையும், தலைவரவர்களையும் பாராட்டிப் பேசித் "தமிழாசிரியர்களின் தவறுதலான நிலைக்குக் காரணம் அவர்கள்பால் அன்று, கல்வியின் பாலதே என்பதை யானே கூறவேண்டுமென்று கருதியிருந்தேன். அதைத் தலைவரவர்களே கூறினார்கள். அதுவே பல்லாற்றானும் சாலப் பொருத்தமானதாகும். திரு. பிள்ளையவர்கள் கழகத்தின் செயலைப் பாராட்டி ஆதரவும் நல்லெண்ணமும் என்றும் பூண்டுள்ளார்கள். இன்றும் நம் வேண்டுகோளுக் கிணங்கிக் கழகத்தையும் நூல்நிலையத்தையும் பார்வையிட்டுக் கட்டுரை வழங்கினார்கள். அவர்கட்குக் கழகத்தார் நன்றி என்றும் உரித்தாகுக. தலைவர் அவர்கட்கும் அவையோர்கட்கும் நன்றியுரித்தாகுக," என்றனர். கூட்டம் இனிது நிறைவுற்றது.

இரவு கழகநிலையத்தில் திரு. பிள்ளையவர்களுக்கு ஒரு விருந்து அளிக்கப் பெற்றது. அவ்விருந்தில் அன்பர்கள் முப்பதின்மர் கலந்துகொண்டனர்.

## பொதுநெறி

செந்தமிழ்த் தொன்னூல்களில் கடவுட் கொள்கைகளைப் பொதுமையுறக் கூறுவனவே பெரும்பான்மை. எடுத்துக்காட்டாகத் திருக்குறளில் கடவுள் வாழ்த்தை எடுத்துக்கொண்டால், கடவுள் உண்மையைக் கடைப்பிடித்து வழிபடுவதே கற்றபடி நிற்கும் கல்விப் பயன். அன்பால் நினைவார் உள்ளமே ஆண்டவன் அமருங்கோவில். விருப்பு வெறுப்பிலாமை அன்பெனப்படும். அத்தகைய அன்பே கடவுள். இயல்பாகவே கட்டற்றுக், கட்டுற்ற உயிர்கட்குக் கைம்மாறு கருதாது கட்டறுத்துத் தன்பாலுள்ள பேரின்பத்தை நல்கிப் புகழ்பெறுபவன் கடவுள். பொறிவழியில்லாப் புலனடக்கியவன் கடவுள். அவன்தாள் சேர்தலே அளவில் இன்பம்.

—இனியன்

# எண் பெரும் நினைவாற்றல்

இவ்வாற்றலை அட்டாவதானம் என்ப. இஃது ஒரேநேரத்துப் பல்வேறு பொருள்களில் தொடர்நினைவு வைத்துப் பொருள் முடித்துக் காட்டுவது. பெரியார், திரு. தி. ப. சுப்பிரமணிய தாசு அவர்கள் பெருநாவலர் அருளிய திருக்குறள் என்னும் ஒரு நூற் கண்ணே இவ் அமைத்துக்காட்டித் தம பேராற்றலும் பெரும் புலமையும் பல்வேறிடங்களில் பல காலமாக நிலைநாட்டி வெற்றியும் பரிசும் பெற்று வருகின்றார்கள்.



அவர்கள் 4-2-51 ஞாயிறு காலை ஒன்பது மணிக்குக் கோகலே மண்டபத்திற் கூடிய பேரவையிலும் எண் பெரும் நினைவாற்றலை வண்மையுற நிகழ்த்தினார்கள். திரு. சொல்லின் செல்வர், ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் விழாவைத் துவங்கி வைத்தார்கள். திரு. பன்மொழிப் புலவர், தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் அவைத் தலைமை பூண்டார்கள். துவக்கத் தலைவர், அட்டாவதானம் என்னும் சொல் வடமொழியாயினும் பண்பு தமிழருடையதே. திருக்குறள்உணர்ச்சி மிக்குவளரும் இக்காலத்து இத்தகைய வியத்தகு அருஞ்செயல் கற்பார்க்குப் பேருதவியாக இருக்கும் என மொழிந்தார்கள்.

அவைத் தலைவரவர்கள், தமிழ் நாடும் தமிழரும் முன்னேறிச் செல்லும் காட்சியால் 'தமிழ் வாழ வேண்டும்' என்னும் உண்மை உரமுடைய எம்மனோர்க்கும் வேட்கையும் வியப்பும் உறுதியும் எற்படுகின்றன. தமிழ் ஏடுகள் பல செல்லரித்துப் போயின. திருக்குறள் தப்பியது தவப்பயனே என்றனர்.

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கச் செயலாளர், திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள், அவைத் தலைவரவர்கள், மாணவர்கள், புலமை நிரம்பிய இருபெரும் பாலார் பலரும் திருக்குறள் திருமறைக்கண் பல்வேறு வகையாகக் கேள்விகள் கேட்டனர். அவற்றிற்கெல்லாம் தக்கவாறு திரு. தாசரவர்கள் விடையீந்து வியப்பும் மகிழ்வும் ஒருங்குறச் செய்தார்கள். அவையோரும் அகமிக மகிழ்ந்தார்கள்.

வியந்து பாராட்டி திருமதி. ஆர். இராசரத்தினம் அம்மையாரவர்களும், திருமதி. சீதாலட்சுமி அம்மையாரவர்களும் விரிவுரை ஆற்றினார்கள்.

திரு. கா. சின்னையாச் செட்டியாரவர்கள் நன்றி கூற அவை இனிது நிறைவுற்றது.

# செய்திகளும் குறிப்புகளும்

### ஆசிரியர்கள் தமிழ்ப் பயிற்சிக் கல்லூரி

இக்கல்லூரி, திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் லிமிடெட், 24, கீழ ரத வீதி, திருநெல்வேலி என்னுமிடத்தில் இக்கழக அறநிலையங்களுள் ஒன்றாகிய தென்னிந்திய தமிழ்ச்சங்கச் சார்பில் நடைபெறுகின்றது.

சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் பட்டத் தேர்வுக்குரிய பாடங்கள் முறையாகப் பெருநாவலர் முதலிய பேராசிரியர்களால் நடத்தப்பெறுகின்றன. தொடக்கப் பள்ளி, நடுநிலைப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி இவற்றில் பணிபுரியும் இருபால் ஆசிரியர்களும் சேர்ந்து கல்வி பயிலலாம். விளக்கங்களும் விண்ணப்பத்தாளும் விழைவோர் மேற்குறித்த முகவரிக்கு எழுதுக. இவ்வாய்ப்பை எல்லாரும் பயன்படுத்திக்கொள்க.

### ஆண்டு விழா

சென்னை மாணவர் மன்றத்தின் 19-ஆவது ஆண்டுவிழாச் சிறப்புற 8-2-51-ல், வி. பி. மண்டபத்தில் நிகழ்ந்தது. திரு. டாக்டர். சர். ஆர். கே. சண்முகஞ் செட்டியாரவர்கள் தலைமை பூண்டார்கள். பல்கலைக்கழகப் பேராசிரியர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் மறைமலையடிகளாரின் திருவுருவப் படத்தைத் திறந்துவைத்தார்கள். வெற்றிபெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. மன்றத் தலைவா, டாக்டர் தருமாம்பாளுக்கும், புலவர், மயிலை சிவமுத்து அவர்களுக்கும் அன்னவர் அறுபதாண்டுப் பிறப்பை முன்னிட்டு வாழ்த்திதழ்கள் படித்து வழங்கப்பெற்றன.

திரு. செட்டியாரவர்கள் மொழிந்தவற்றின் சுருக்கம் :

தமிழின் பழம்பெருமையை மீண்டும் உயிர்ப்பிப்பதற்குத் தொல்காப்பிய முதலிய தொன்மைப் பெருநூல்களை நன்முகக் கற்றுணர்ந்து கைக்கொள்ளல்வேண்டும். அங்ஙனமின்றிப் பழம் பெருமைமட்டும் பேசிக் காலங்கழிப்பதால் பயன் ஏதுமின்று. நம் பழந்தமிழ் நூல்களெல்லாம் முக்காலத்துக்கும் பொருத்தமானவையே. பண்டுரைத்தவாறே இன்றும் செல்லுபடியாகின்றது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றிய உலகப் பொதுமறையாம் திருக்குறள் இன்றும் பொருத்தமுற அன்றுபோன்று நின்றுநிலவுகின்றது. இந்நூல் அரசியல் அறிஞர்களுக்கும், சட்ட உறுப்பினர்களுக்கும் வேண்டும் பொருண்மையுடையதாகவும் மிக்க பயனுடையதாகவும் பேருதவியாகவும் இருக்கின்றது. உலகில் ஏனைய இலக்கியங்களெல்லாம் கடவுள், தேவதை முதலியவைகளைப்பற்றியே விரிவாகவும் முதன்மையாகவும் கூறி இருக்க, நம் தமிழ்த்தொல்லிலக்கியங்கள் மக்களைப் பற்றியே கூறுகின்றன என்பதே.

### தமிழ்த் திருநாள்

தருமையருள்பெறு நெல்லை அருணகிரி இசைக் கழகம், திருநெல்வேலிச் சந்திப்பு. இக்கழகச் சார்பில் தமிழ்த் திருநாள் ஆண்டுதோறும் தொடர்ந்து ஆறு நாட்களுக்கு மிக்க சிறப்பாக நடந்துவருகின்றது. வழக்கம்போல் இவ்வாண்டிலும், தைத்திங்கள் உஉ முதல் உஎ (4, 9—2—51) முடிய நிகழ்ந்துள்ளது. விழாவின் தொடக்கத் தலைவர், திரு. சு மகராசன் B.Sc, B.L. அவர்கள். (மாவட்ட முறைமன்ற நடுவர், தென்காசி.) கவியரங்கின் தலைவர், திரு. மு. ரா. பெருமாள் முதலியாரவர்கள், எம். ஏ., எல். டி., (நெல்லை மாவட்டக் கல்வி முதன்மையர்.)

பல்வேறு பொருள்பற்றிய பல்பெரும் புலவர்களும், மாணவ மாணவி யர்களும் விரிவுரை இசையரங்கு நாடகம் உரையாடல் முதலியவற்றின் வாயிலாகச் செவியுணர்விருந்து சிறப்புற ஈந்துள்ளார்கள். இறையருளால் இவ்விழா ஆண்டுதோறும் ஓங்குக. செயலாளர்களுக்குத் தமிழ்நாடு பெருந் துணைபுரிக. இந்நிகழ்ச்சி நாடெங்கும் பரவுக. தமிழ் வாழ்க.

### கல்விப் பெருங்கொடை

கயா கல்லூரிக்கு ஆண்டொன்றுக்கு ரூபா, ஏழாயிரம் வருமானமுள்ள இரு பெரும் கிராமங்கள் மஹாந் ஹரிஹரஜீயர் நன்கொடையாக வழங்கி யுள்ளார். நன்றிக்குறியாக அவர்தம் திருப்பெயர் அக் கல்லூரியின் வணிகப் பகுதிக்குச் சூட்டப்பெற்றுள்ளது.

### திருஎம்பாவை திருப்பாவை மாநாடு

திருவிடைமருதூர்-ஸ்ரீ சங்கராச்சாரியாரின் பேராதரவுடன் நடை பெற்றது. ஆசாரியார் அவர்களின் சொற்பொழிவு: "சங்கரர், இராமா னுசர், மத்வர், நாயன்மார், ஆழ்வார்கள், தாயுமானவர், பட்டினத்தார், இராம லிங்க அடிகள் முதலிய பெருந்தவச் செல்வர்கள் அருள் தோற்றமுற்ற தென்னாட்டில் கடவுள் இல்லையென்னும் பாழ்ங்கொள்கை (நாத்திகம்) யை அகற்றிக் கடவுட்கொள்கையை நிலைநாட்ட இவ்வகைய மாநாடு வேண்டத் தக்கது," என்பதே.

திருஎம்பாவை, திருப்பாவை மாநாட்டில் நாட்டுப்பாடல் கும்மி சிந்து இவைகள் வளரவேண்டும். குழந்தைமுதலே கடவுட்கொள்கை பரவுவதற் குரிய கல்விகள் புகட்டப்பெறுதல் வேண்டும். அயல்நாட்டு வரலாறுகள்— இலக்கியங்களைவிடத், தாய்நாட்டு வரலாறுகளை, இலக்கியங்களைத் தாய் மொழியில் எளிதில் கற்றுக்கொள்வார்கள். ஆகவே, தாய்மொழிக் கல்வி யும் கடவுட் கொள்கையும் பள்ளிக்கூடத்தில் ஒருங்கு பயிற்றப்படவேண்டு மெனக் கூறப்பட்டுள்ளது.

நாயன்மார் ஆழ்வார்கள் அருளிய தமிழ்மறைகள் தெய்வத்தன்மை பொருந்தியவை. அவர்களைத் தொழுவோம்; அவைகளை ஓதி உய்வோம். திருஎம்பாவை திருப்பாவை ஊர்வலம், சிறப்பாக நிகழ்ந்தது.

### தலைசிறந்த எழுத்தாளர்

அமெரிக்க இலக்கியக் கழகம், தேர்ந்தெடுத்துள்ள தலை சிறந்த எழுத் தாளர் நால்வருள் இந்திய முதலமைச்சர் ஜவகர்லால் நேருவே முதல்வர். ஏனை மூவராவார் இங்கிலாந்து அர்னல்டு ஜே. டாய்ன்பி, பிரான்சிசு ஆண்டிருகிதே, இத்தாலி இக்னுகியோ என்க.

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு ௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௨, மாசி
மார்ச்சு, 1951 | பரல் ௭

# புலவர்ப் போற்றல்

[சித்தாந்தபண்டிதர், புலவர், ப. இராமநாதபிள்ளை.]

தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராம் சான்றவர் புலவர் எனப்படுவர். புலம் என்பது: அறிவு, கல்வி, கலை, மெய்யுணர்வு, புலனடக்கம், நிலம் முதலிய பல பொருள் தரும் ஒரு சொல். ஒரு நாட்டின் சிறப்பு அந் நாட்டுப் புலவர்களையும் அவர்கள் ஆக்கியுள்ள அரும் பெரும் பொன்றாப் புகழ்சேர் மெய்ந்நூல்களையும் கொண்டே எல்லாரானும் மதிப்பிடப்பெறும். புலவர்களே நாட்டின் உயிராவர்; மன்னன்றன் மாண்புயிரும் ஆவர். வேந்தன் விழையுயிரும் அவரே. தலைவன் தனி உயிரும் அவரே. உயிரின்வழி உடல் செல்லுகின்றது. உயிர் உடலை ஓம்புகின்றது. உயிர் உடலால் உறுபயன் பெறுகின்றது.

அதுபோலவே, புலவர்களும் நாட்டுக்கும் தலைவர்கட்கும் நன்மக்கட்கும் உயிராகத் திகழ்கின்றனர். அந் நாளில் மக்களும், மக்கள் தலைவராகிய மன்னரும், மன்னர் தலைவராகிய வேந்தரும் செந்நாப்புலவர் வழிநின்று அவர்களையே தலைவராகக்கொண்டு வாழ்ந்துவந்தனர். அதனால், தீமை அறவே மாய்ந்து, நன்மை வாய்ந்து நாடு செழித்து நலமுற்றது. 'பெரும் பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால், ஆற்ற விளைந்தது நாடு' அது, 'பொறை யொருங்கு மேல்வருங்கால் தாங்கும்' நிறையும் பெற்றது.

புலவர்கள் மெய்ந்நெறிக்கண் நின்று மெய்ந்நூல் இயற்றி அருளினர். அந்நூல்வழித் தாங்கள் ஒழுகினதுபோல் ஏனையாரையும் ஒழுகச் செய்தனர். அதனால் அவர்கள் வல்லார் என்னும் வண்பெயர் பெற்றனர். அவரை அடுத்து அன்பும்

பணிவுமாக ஒழுகக் கற்றுக்கொண்டவர் நல்லார் என்னும் நற்பெயர் பெற்றனர் இவ்வுண்மை, வரும் அடிகளால் விளங்கும்.

"வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
நல்லார்கட் டோன்று மடக்கமு முடையன்"

—கலித்தொகை, குறிஞ்சி-௧௧.

புலவர்கள் பொருளுண்மைகண்டு போற்றினர். மெய்ப்பொருளின் தெளிவால் 'மேலோர்க்கு மேலோர்க்கும் மேலாயினர்' உலகம் அவர்களைத் தெய்வம் எனக் கொண்டது. உவந்து பேணிற்று அதனால் தெய்வத்திற்கும் 'புலவ'ரெனப் பெயா உண்டாயிற்று. இவ்வுண்மை பத்துப் பாட்டுள் தலையாய திருமுருகாற்றுப்படையின்கண் ஒப்பில்லாப் புலமையோய் என உள்ளம் உருகி, அன்பு பள்ளமடை வெள்ளமெனப் பாயப் பகர்ந்த பயனார் மொழியால் உணரலாம்.

அது,

"நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையின்
நின்னடி யுள்ளி வந்தனென் நின்னொடு
புரையுந ரில்லாப் புலமை யோயென."

—பத்துப். திருமுருகு. ௨௭௮-௮0.

புலவர்களைப் புரவலரும் மன்னரும் வேந்தரும் உயிரினும் சிறந்தாராக ஓம்பி வந்தனர். அவர்கள் அரும் பெரும் உறுதி மொழிகளை தாங்கள் பெறவேண்டிய பெரும் பேறெனக் கருதினர். அவர்வழி நின்று அறம் பல புரிந்தனர். இழத்தற்றுன்பம் எல்லாவற்றினும் ஈடு செய்யவொண்ணாத் துன்பம் மிக்கது, அவர்தம் கூட்டுறவு இழத்தலே என எண்ணி இன்று வஞ்சினங் கூறுங்கால் அவ்விழப்பினையே மிக்கெடுத்துக் கூறினர் இவ்வுண்மை, பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற **நெடுஞ்செழியன்** கூறிய வஞ்சினப் பாட்டால் விளங்கும்.

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் நிலவரை." —புறம் - ௭௨.

புலவர்கள் 'சொல்லேர் உழவர்' என்னும் தூய திருப்பெயரும் உடையர். அவர்கள் மக்களை நல்வழிப்படுத்தி அறிவாகிய உயிருணர்வு விளைக்கும் உழவராவர். அவர்களுக்குக் கேட்பார் செவியே விளைநிலமாகும்; தொன்மைச் சான்றோர் தோற்றுவித்தருளிய நன்மை மொழி நிரம்பும் நயமார் நூல் உரைகளே நீராகும்; தம் பொய்யா நாவே மெய்யாம் ஏராகும்; தம்பால் கேட்பார் செவியில் தீமொழி புகவொட்டாமல் களைவதே களையாகும்; அறிவுமொழியே விதையாகும்; கேட்பார்

உளத்துக் (ஆன்மா) கண் விறிட்டெழும் பேரின்பப் பெருவாழ் வாம் மெய்யுணர்வே விளைவாகும்; இவ்விளைவே உயிர் உண வாகும். இவ்வுண்மை,

“பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு
மதிமொழி யிடன்மாலே வினைவர்போல் வல்லவர்
செதுமொழி சீத்த செவிசெறு வாக
முதுமொழி நீராப் புலன்நா உழவர்......”

—கலித்தொகை, மருதக்கலி, ௩.

என்னும், ‘கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகைத்’ திருப்பாட்டால் விளங்கும். மேலும், இவ்வறிவே பேராவியற்கைப் பேரின்பப் பெருவாழ்வை நல்கும் ஆண்டவன் திருவடிப் பேற்றுக்கு உரித் தாம அருளை விளைவிப்பதுமாகும். இவ்வுண்மை,

மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகில் சிவகதி விளையும் அன்றே.

—ஆளுடைய அரசு, ௪-எ௬—௨.

என்னும் திருமுறைத் திருப்பாட்டாலு முணரலாம்.

இச்சிறப்பெல்லாம் உள்ளடக்கியே நம் திருவள்ளுவப் பெருந்தகையார்,

“வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை” —திருக்குறள், எ௭௨

எனவும்,

“பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்” —திருக்குறள், ௪௫0.

எனவும் தாம அருளிய தமிழ்மறைக்கண் ஓதி அருள்வா ராயினர்.

புலவராவார் ‘வேனிற் புனலன்ன’ நலவராவர். ‘களித் துக் கலந்ததோர் காதற்கசிவொடு காவிரிவாய்க் குளிப்பார்’ புனல் வரவினைக்கண்டு தலைக்கூடி உவத்தலும், புனல் வடிவில் மீண்டுமப்புனல் வரவு என்ஞான்று கைகூடுங் கொல் என்று ஏங்கி நிற்றலும் இயல்பாக நிகழும் கிழமையுடையவராவர். இக்கிழமை இறைமாட்டு நிகழும் உயிரின் நிறைகிழமை ஆகும். குடும்பமும் நாடும் முற்றாக இத்தகைய கிழமை கொளளுதல் ‘சென்ற இடமெல்லாம் சிறப’பெய்தும் செந்நாப் புலவர் ஒருவர் மாட்டேயாம. இதனல்,

“உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்” —திருக்குறள், ௩௯௪.

என வாயுறை வாழ்ததும் வழுத்துவதாயிற்று.

இதன் பொருள் : "தம்மை ஐந்து புலனும் பின்செல்லுறத் தகையராகிய" புலவர்கள் ஒருவருடன் உறவாடுங்கால், உறவாக ஏற்றுக்கொள்பவர்க்கு அளவிலாத மகிழ்ச்சி ஏற்படுதலும், சின்னாளிருந்து நன்னெறிப்படுத்திப் பிரியநேருங்கால் 'இனி எப்பொழுது காண்போம்,' என்று ஆழநினைந்து வருந்துமாறு பரிவு ஏற்படுதலும் விளைவிக்கும் நிறைபண்புகள் உடையவர்கள். இவையே அவர்தம் தொழில்கள். என்னை காரணமெனில்? உறவாக ஏற்றுக்கொண்டவர் நல்லொழுக்கத்தான் மிக்க இவரோடு கூடியதால் அறியாதனவெல்லாம் அறியப்பெற்றேம் என்றும், யாண்டு பலவாக நரையிலமாயினேமென்றும், பயனில் சாக்காட்டினின்று நீங்கி நயனுடை நல்வாழ்வு பெற்றனமென்றும், ஆயாது அல்லலுழக்கும் அலைகொலைபுரிய உன்னிய நம்மை அவற்றினின்றும் நீக்கி நிலையான புகழ் புண்ணியம் புலமை இவற்றின்கண் நிற்பிக்க நின்றேமென்றும், நெடுவாழ்வு தரும் வடுவில் அமிழ்தம் வாய்ப்பெய்து வாழ்வதினும் மிக்கது, அவர்தம் மொழியமிழ்தம் செவிவாய்ப்பெய்து தேக்கிச் செம்மாந்து உயிர்தளிர்க்க வாழும் வாழ்வு; அஃது எளிதிற் கைகூடப்பெற்றனமென்றும் இறுமாந்து இன்புற்று வாழ்தல். இவ் வுண்மைகளைக் கீழ்வரும் செந்தமிழ்த் திருப்பாட்டுக்கள் விளக்கும்.

"உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும்மனந் திரியும்
௫. ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
௧0. மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே."—புறநானூறு, ௧அ௩.

கற்றவர்பால் கல்வி கற்பானும், தனக்குத் துணையாக அன்னாரை ஏற்றுக்கொள்வானும் "உடையார்முன் இல்லார் போல் ஏக்கறுதலாம்" ஆசையாற்றாழ்ந்து, வேண்டுவன வேண்டுங்காலத்து விழைவுடன் நல்கியும், பணிவும் பற்றும் உடையனாய்த் தொண்டுபூண்டும் உயிர்க்கு உறுதிபயக்கும் கல்வியைக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும். அக்கல்வியே சிறப்பினை நல்கும். 'ஈன்றஞான்றினும் பெரிதுவக்குமாறு' தாயினுக்கும் தனிச் சால்பினைத்தரும். நாட்டுத் தலைவரும் நன்கு வரவேற்று நானில மகிழத் தாம் நடக்கவேண்டிய அறமுறைகளைக் கேட்டுத் தெளிந்து கேடின்றிவாழும் பீடுறு பெட்பினை அன்னவர்க்கு ஈயும். எல்லார்க்கும் இன்றியமையாச் சிறப்பாம் குடிப்பிறப்பினைத்தரும். குடிபபிறப்பென்பது பண்பாடு; 'பண்புடை

யார்ப்பட்டுண்டு உலகம்' 'பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்' சுருங்கச்சொல்லின் 'தமக்கென முயலா நோன்தா'ளுடையராய்ப் 'பிறர்க்கென முயலும்' பெற்றியராதல்.

"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
௫ ஓம்பாது உண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே, திறப்பட
நண்ணார் நாண அண்ணாந் தேகி
ஆங்கினி தொழுகி னல்லது ஓங்குபுகழ்
௧0 மண்ணாள் செல்வம் எய்திய
நும்மோ ரன்ன செம்மலும் உடைத்தே." —புறநானூறு, ௪எ.

புலவர்கள் மன்னரை யொத்த தலைமைப்பாடு உடையர். எவர்க்கும் எவ் வகைத் தீதும் கனவினும் கண்ணாப் புண்ணியர். திருவினர் தம் சிறப்பறிய வேண்டுமே என்னும் வருத்தம் ஒன்றுமே உள்ளவர். பெற்றதற்கு மகிழும் பெரியவர். சுற்றம் பேணும் நற்றவர். 'வல்லாங்கு வாழ்து மென்னாது' எல்லார்க்கும் நல்கி இன்புறும் இயல்பினர். புலமைத் துறையில் மாறுபட்டாரை வீறுகொண்டு வெல்லும் ஈறிலாத் திறலினர். அவரைச் சார்ந்தார்க்கு அவ்வவெல்லாம் இயல்பாகவே அமைகின்றன. அதனால், சார்ந்தவர் சால்பு குன்றாமல் நேர்ந்த இன்னல் அகற்றி இன்புறுகின்றனர். இச் செய்யுளின் குறிப்பும் ஒரு புலவரைத் தவறாக ஒற்றரெனக் கருதிக் கொல்லத்துவங்கிய மன்னனை நயம்பட அறிவுறுத்தி நன்னெறிப் படுத்தினமையும், புலவரைச் சாக்காட்டினின்று உய்யக்கொண்டமையும் விளக்குகின்றது.

"வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார்
களம்படக் கடந்த கழறொடித் தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி
௫. பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
௧0 தாதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே." —புறநானூறு, ௯௧.

இப்பெரும் புலவர்கள் உலக அருட்குருவினர் ஆவர். இவர்கள் திருமேனியைக் காண்டலும், திருப்பெயரினைச் செப்பலும், திருமறையினைக் கேட்டலும், திருவுருவினை இடையறாது

நினைதலுமே மெய்யுணர்வாகும். இவையே "கற்றீண்டு மெய்ப் பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி," என்னும் திருக்குறளின் எடுத்துக்காட்டுகளாகும்.

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே" —திருமந்திரம், ௧௩௩.

இத்தகைய பெரும்புலவர்கட்கு இடமிடந்தோறும் திருக்கோவில்கள் எடுப்பித்துத் தொழுகையாற்றி வழுவிலறம் புரிந்து வாழ்வாங்கு வாழ்வதே மக்கட் பண்பாகும். இவர்தம் திருவுருவ நிழலோவியங்களைப் பெரிதாக்கி அணிபெறச் செய்து இல்லங்கள், படிப்பகம், மன்றம், கழகம், கல்லூரி, பணிக்களம், வாணிகம், அலுவலகம், அரசநிலையம் முதலிய எல்லா இடங்களிலும் நிறுவல்வேண்டும். இத் திருவுருவங்களைக் காண்பார் கண்ணும் கருத்தும் மாண்பெய்தும். அதனால் நாடும் மொழியும் நலமுறும். கூடும் கூட்டுறவு பீடெய்தும். எல்லாரும் பகையொழிந்து நகைவராவர்.

நம் கழகத்தார் நூற்றுக்கணக்கான பெரும்புலவர் திருவுருவப் படங்களைப் பெரிய அளவில் நல்லமுறையாக அமைத்துள்ளார்கள். அமைத்துக்கொண்டும் வருகின்றார்கள். இச் சீரிய திருநோக்கம் தமிழன்னையின் தண்ணருளால் கைகூடுவதாக. தமிழ்ப்பெருமஅன்பர்கள் தங்களபால உள்ள புலவர் பெருமக்கள் திருவுருவங்களை நம் கழகத்து இத் திருத்தொண்டுக்கு உதவுமாறு வேண்டுகின்றோம். அவ் வுருவங்களைக் கொண்டு பெரிதாக்குவித்ததும அவற்றை அன்புடன் உதவிய அன்பர்கட்கு மீட்டும் அனுப்பிவைப்போம. தங்களுக்குத் தெரிந்த நண்பர்களுக்கும் இதனை அறிவுறுத்தி அவர்கள்பால் உள்ள புலவர் திருவுருவங்களை அனுப்புவிக்குமாறு செய்யத் துணைபுரியவேண்டுகின்றோம்.

"புலவர் திருவுருவம போற்றுவார் எல்லா
நலமும் பெறுவாமொழி நாடு."

# எம்முன் எழுந்தருளாய்

[தென்கருணையூர், வேல்-இளவேந்தன்]

(மறைந்த மறைமலை அடிகளாரின் ஆன்மாவை இளைஞர்கட்குத் தமிழறிவுச் செல்வம் நல்க விழைந்து அழைப்பதாக அமைத்துப் பாடியுள்ளார் இதன் ஆசிரியர்.)

பல்லா வரப்பதி பண்புற வாழ்ந்து
பலகலை பெற்றுப் பாவல ரோதக்
கல்லா ரவரெனக் காணவும் வைத்துக்
கைம்மா றகலாக் கருத்தினை முடித்து
நல்லா ரேங்கிட நாமுந் துயங்கிட
நம்மைவிட் டகன்ற நற்றமிழ்ச் செல்வா
இல்லா தெனயாம் இரவுடை யாது
இன்புற எம்முன் எழுந்தரு ளாயே. (1)

பொதுநிலைக் கழகப் பொன்னொளி விளக்கே!
பொருப்பினில் விளங்குஞ் சிறப்புடை ஒளியே!
இதுவும் கழகமோ இனபுறு செயலோ?
இன்ன லுறவெமை யகன்றுவிட் டகன்று
முதுமையை வெறுத்தோ முதுதமிழ் விரும்பி
முன்னோ ளகன்றவுன் நாட்டினை விழைந்தோ
எது? நிக ரில்லா எந்தமிழ்த் தாயை
எம்முன் எழுந்தரு ளாயே. (2)

செந்தமி ழன்னையின் கண்மணி யானாய்
செப்புதற் கரியதோர் திலகமு மானாய்
கந்தமி லாரியக் கருத்தினைத் தமிழில்
களைந்தெறிந் தேகலைக் கடலெனப் பெற்றாய்
மந்தமி லாய்வினை வளமுற நடத்தி
வான்புகழ் கொண்ட வனப்பினை யுடையோய்!
செந்தமி ழன்னைய தேன்றமிழ் மலையே!
செவ்விதி னெம்முன் எழுந்தரு ளாயே. (3)

வளம்பெறக் காட்டினை வள்ளுவர் நெறியை
நலமுறக் காட்டினை நந்தமிழ் வாழ்வில்
களத்தினிற் குட்டுவன் மறத்தையுங் காட்டி
கலைக்கட லானவுன் உளத்தையுங் காட்டி
வளத்தினிற் றிகழ்ந்த வனப்புடை வாழ்வை
வாழ்வினிற் றுலங்கிடப் பண்ணிய தேவே!
இளமையிற் கழியா இளைஞரா மெமக்கிங்
கின்ப மளித்திட எழுந்தரு ளாயே. (4)

தொல்காப் பியத்தின் தொன்மையுங் காட்டித்
தோன்றிய பன்னூ லாய்வதுங் காட்டிப்
பல்காப் பியங்களின் பான்மையுங் காட்டிப்
பாரினிற் சீரிய நெறியையுங் காட்டி

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியத்தின்
கருத்தறிதற் கரியதோர் கருத்துரை காட்டி
அல்லாப் பொருளுரை அகலவே யோட்டிய
அரியனே! எம்முன் எழுந்தரு ளாயே. (5)

மணிமொழிப் பெருமான் மாண்பினை விளக்கி
மதிப்பிடற் கரியதோர் காலமுங் காட்டி
மணிமொழிக் கொளியென மாண்புரை எழுதி
மண்ணவர் மகிழ்ந்திட மன்றினி லிட்டோய்!
அணியெனத் திகழ்ந்திட அரும்பத்துப் பாட்டின்
திறமுறு நூலகளுக் குரையினைத் தந்தோய்!
மணியெனத் தெளிவுரை தேக்கிய தேவே!
மண்ணவர் மகிழ்வுற எழுந்தரு ளாயே! (6)

நாடக நூல்களை நயந்தெமக் களித்தாய்
நம்மவர் வாழ்வோ டயலவர் வாழ்வாம்
பீடக மேலைநன் னாட்டவர் வாழ்வும்
பிறங்கிட எழுதிய பீடுடை யாள!
வீடக வழியினை விளக்கிடும் ஞான
போதம் பொலிந்த பொன்னுரை கண்டோய்!
தேடவு முடியாத் தென்னவன் நாட்டுத்
தீந்தமிழ் எம்முன் எழுந்தரு ளாயே! (7)

அருந்தமிழ் நாட்டினி லயலவர் இந்தியைப்
பொருந்துறத் திணிப்பவே போருட னாற்றித்
திருந்தா முறையினர் நெறியினை விளக்கித்
திறம்படக் கூறிய சீருடை யாள!
பொருந்தா திந்தி பொதுமொழி நிலைக்குப்
போக்கிட வேண்டுமிந் நாட்டைவிட் டென்றே
திருந்திட வெழுதிய திரைகட லனையோய்!
திறமுட னெம்முன் எழுந்தரு ளாயே. (8)

அறிவுக் கடலெனும் அருந்தமி ழிதழை
அரும்பெருஞ் சிறப்புட னச்சினி லேற்றி
நெறியுடை யணியாய் நேர்மையின் ஒளியாய்த்
தெருளினைப் பெருக்கிடத் தென்றமிழ்த் தாயின
தறிவெனு முளத்தில் அழகுறப் புனைந்து
அன்பொடு வெளியிட்ட தண்டமிழ்ப் பெரியோய்!
சிறியோ மெமையிங்குச் சிறப்புடன் வளர்த்திடச்
சீருட னெம்முன் எழுந்தரு ளாயே! (9)

ஐம்பதாண் டின்மே லருந்தமிழ்ப் பணியை
அறமுட னாற்றிய திறமுடைப் பெரியோய்!
ஐம்பதின் மேலாம் அருந்தமிழ் நூல்களை
அளித்தே அகமகிழ் வாற்றலைப் பெற்றோய்!
ஐம்பதிற் பெருக்கிய அருநூறின் மேலாம்
அருந்தமிழ் நூலக மொன்றமைத் திட்டோய்!
ஐம்பதாண் டாயினும் அன்புட னெம்மை
அணைத்து வளர்த்திட எழுந்தரு ளாயே. (10)

# மொழியாராய்ச்சி

[அ. நக்கீரர்]

(சிலம்பு உஉ. பரல் டு. கககூ-ம் பக்கத்தொடர்ச்சி)

**சகடம்:** சாகாடு—சகடு—சகட்+அம்—சகடம். "சகடம்" என்னும் இச்சொல் "சாகாடு" என்ற தமிழ்ச்சொல்லின் கண்ணுள்ள நெட்டெழுத்துகளைக் குறுக்கி இறுதியில் 'அம்' சேர்த்து ஆக்கப்பட்டது. 'சா' என்ற நெடிலைச் சகரமாக்கிக் 'கா' என்ற நெடிலைக் ககரமாக்கி 'டு' என்ற ஈற்றிலுள்ள உகரம் கெடுத்து 'அம்' சேர்த்தனர் என்க.

"பீலி பெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்" (குறள்-சஎடு)

என்ற திருக்குறளிலும்,

"கால்பார் கோத்து ஞாலத் தியக்கும்
காவற் சாகாடு" (புறம்-கஅடு)

என்ற புறப்பாட்டின்கண்ணும், மற்றும் பிற இடங்களிலும் பண்டு "சாகாடு" என்று வழங்கியமை காண்க. சாகாடு சகடமாகி அதன் பொருள் மறையத் தொடங்க, மக்கள், "சூறாவளிக் காற்று" "அரைஞாண் கயிறு" என்பதுபோல, "சக்கடா வண்டி" என்று வழங்கத் தொடங்க முடிவில் அது, "ஜட்கா வண்டி" என்று சொல்லும் அளவுக்கு மாற்றமடைந்து வந்திருக்கிறது. இவ்வாறு அகர முதன் மொழிகள் பலவற்றின்மேற் சகரவொற்றுச் சேர்த்து மாற்றிப் பல சொற்கள் ஆக்கினதாலே,

"சகரக் கிளவியும் அவற் றோரற்றே
அ ஐ ஔ எனும் மூன்றலங் கடையே" (தொல், எழுத்: கூஉ)

என்ற தொல்காப்பிய நூற்பாவுக்குப் பொருள் கொள்ளுங்காற் பலர் திகைப்பு அடைய நேரிட்டது. அவை: "ஔ எனும் ஒன்றலங்கடையே" என்று பாடம் இருந்திருக்கவேண்டும் என்றும் சிலர் மயங்கினர். ஆசிரியர் இளம்பூரணர் எழுதிய தொல்காப்பிய உரையில் இந் நூற்பாவினடியில் 'சகடம்' எனவும், 'சையம்' எனவும் விலக்கினவும் வருமாலெனின், அவற்றுள் ஆரியச்சிதைவல்லன "கடிசொல்லில்லை" என்பதனாற் கொள்க," என்று கூறப்பட்டிருக்கின்றது. "கடிசொல்லில்லை காலத்துப் படினே" என்ற நூற்பாவுக்கு இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய இவர்கள் கூறிய பொருள்களைக் காட்

டினும், அப் பொருள்களின் வேருகத் தெய்வச்சிலையார் உரைத்த உரை முன் பின்னுள்ளவற்ருேடு முரணுமல் இயை புடையதாக இருத்தலும் உணர்தற்குரியது. "மிருச்ச கடிகா" என்ற வடநூலில் சகடம் என்ற சொல் வந்துளது.

**சக்கரம்:** "அச்சுடைச் சாகாட்டாரம் வாங்குந் தந்தைக்கு" என்பது அகநானூறு. "சாகாட்டாரம்" என்பது வண்டியின் உருளை; அது, 'சாகாடு' 'சகடு' என்ருக இறுதிக் குற்றியலுகரத்தைக் கெடுத்து ஆரம் என்பதனைக் குறுக்கிக் ககர வொற்றிரட்டச் செய்து 'சக்கரம்' என்ருக்கினர்.

**சந்தனம்:** இச்சொல் 'சாந்தம்' என்ற சொல்லின்கண்ணுள்ள முதனிலையைக் குறுக்கி இறுதியிலுள்ள 'அம்' விகுதிக்கு இடையில் 'அன்' சாரியை சேர்த்துச் 'சந்தனம்' என்ருக்கப்பட்டது.

"விடர்முகை யடுக்கத்துச் சினைமுதிர் சாந்தம்" (புறம்-உ௪௪)
"சாந்த விறகி னவித்த புன்கம்"

என்றும்,

"புலர்ந்த சாந்திற் புலரா ஈகை" (பதிற்றுப்பத்து)

என்றும்,

"பலவுறு நறுஞ் சாந்தம்" (கலித்தொகை)

என்றும்,

"வடவர் தந்த வான்கேழ் வட்டம்
தென்புல மருங்கிற் சாந்தொடு துறப்ப" (நெடுநல்வாடை)

என்றும், பண்டு பெருவழக்கு உடையதாக நூல்களில் வழங்கப் பெற்றுவந்த "சாந்தம்" என்ற சொல்,

"வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத்
தென்மலைப் பிறந்த சந்தனம் மறுக"

என்று, சிலப்பதிகாரத்தில் வந்துளது. ஆகவே, இது சகரமுதன் மொழியாயுளது என நினைந்து வடசொல்லென்றே வடசொல்லிலிருந்து வந்த தமிழ்ச் சொல்லென்றே கூறுதல் தவருகும்.

**சந்தனுசலம்:** சந்தனுசலம் என வரின், அது தமிழிலிருந்து படைக்கப்பட்ட சொல்லே என்க. அசைவு + இலம் என்ற இரண்டினையும் புணர்த்தி "அசலம்" "சைலம்" என்ற இரண்டு சொற்கள் படைத்துக்கொண்டனர்.

அசலம், சைலம், அசை + இலம்—சைலம். அசைவிலாதது என்பது பொருள். அசைவு + இலம்—அசை + இலம் —அசை + லம்—அசைலம்—அசலம்.

**சத்துவகுணம்:** "சாந்தம்" என்ற சொல் "சந்தனம்" என்று பொருள் தருதலேயன்றி அமைதியான பண்பு குறித்தும் வழங்கப்படும். சந்தனம்போன்ற தண்மையான இயல்பு என உவமையாகு பெயராய் வழங்கலாயிற்று. பாவை போல்வாளை பாவை என்பதுபோன்றது இச்சொல். "சாந்தம்" என்பதனைக் குறுக்கி "சந்தம்" என்றாக்கிப் பின்பு வன்மைப்படுத்திச் 'சத்துவகுணம்' என்றாக்கினர். குணம் என்பது குணிக்கப்படுவது, ஆராயப்படுவது என்ற பொருளுடைய தமிழ்ச் சொல்லேயாகும். ஆகவே, குணத்தையுடைய 'குணி' என்பதும் தமிழ்ச்சொல்லே என்க.

**ரஜோகுணம், ராஜன், ராஜ்யம்:** 'அரசன்' என்ற தமிழ்ச்சொல்லில் முதற்கண்ணுள்ள அகரத்தை அடுத்த ரகரத்தில் ஏற்றினர். ஏற்றவே "ராசன்" என்றாயிற்று. சகரத்தை 'ஜ' என ஆக்கி இறுதி னகரம் கெடுத்து, "ராஜ" என்று ஆக்கினர். அரசனது பண்பினைப்போன்று வீறுகொண்ட குணம் என்பதே "ரஜோகுணம்" என்பதன் பொருள். அரசன் என்பதிலிருந்து "ராஜா" என்ற சொல்லும், "அரசு" என்ற சொல்லிலிருந்து, "ராஜ்யம" என்ற சொல்லும் ஆக்கப்பட்டன. அரசன் என்பது தூய தமிழ்ச் சொல்லே என்க. "அருமையான—வியக்கத்தக்க தலைவன்" என்பது அதன் பொருள். "ஐ வியப்பாகும்" என்பது தொல்காப்பிய உரியியல் நூற்பா. ஐயன் என்பது வியக்கத்தக்கவன், தலைவன் என்று பொருள் தரும். அருமை என்ற சொல்லும் ஐயன் என்ற சொல்லும் மையீறும் உகரமும் கெடும்படி புணர்ந்து 'அரையன்' என்றாயிற்று. அதுவே பின்பு 'அரைசன்' 'அரசன்' எனவும ஆயிற்று.

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" (தொல், எழுத்: ருசு)

என்ற தொல்காப்பிய நூற்பாவின்படி 'ஐயன்' என்பதனை 'அய்யன்' என்றும் எழுதலாம். அய்யன் என்பதில் உள்ள யகரங்கள் சகரங்களாக மாறி 'அச்சன்' என்று ஆகிப் பின்பு சகரம் தகரமாக மாறி 'அத்தன்' என்றும் ஆயிற்று. இவ்வாறு போலியாக வருதல் இயல்பேயாகும். ஆகவே, அய்யன், ஐயன், அச்சன், அத்தன் என்ற இச்சொற்கள் நான்கும் தலைவன், வியக்கத்தக்கவன் என்ற பொருளுடையனவாய் ஒரே பகுதியிலிருந்து பிறந்த ஒரு பொருட் சொற்களேயாமென்க. அரசன் என்பது தலைவருள், வியக்கத்தக்கவருள் மிகவும் அரியனாக உயர்ந்தவனைக்

குறிப்பதற்கு வழங்கப்பட்டது. அருமை என்ற சொல்லும் ஐயன் என்ற சொல்லும் அரசன் என்ற சொல்லுக்கு முதற் சொற்களாய் அமைந்தன. ஆகவே, சீவகசிந்தாமணியின்கண் வருகின்ற "ராசமாபுரம்" என்ற சொல்லை வடசொல் என்பது தவறு. 'அரச' என்ற சொல்லினுள்ள அகரமே ரகரத்திலேற்றப்பட்டு 'ராச' என்றாயிற்று என்பதும் தெளிவாகிறது. 'ரகரம்' தமிழில் மொழிக்கு முதலில் வராதல்லவா? ராச, ராஜ என்று வழங்கினால் யாவர்கண்டு பிடித்துவிடப் போகிறார்" என்ற நினைப்பினால் அவ்வாறு ஆக்கப்பட்டது என்க. அந்நினைப்பின்படி ஆக்கப்பட்டதே 'ரூபம்' என்ற சொல்லும்.

**ரூபம்:** 'உருவம்' என்ற தூய தமிழ்ச்சொல் பண்டு தொடங்கி இன்றுவரை வழங்கி வருவதை யாவரும் அறிவர். இதில், முதற்கண்ணுள்ள உகரம் அடுத்த ருகரத்தின்மேல் ஏற்றப்பட்டது. வகரம் பகரமாகத் திரிக்கப்பட்டது. ஆகவே, 'ரூபம்' என்றாயிற்று.

உருவம்—உ + ருவம்—ரூவம்—ரூபம்.

முடிவு, முடிபு; உருவு, உருபு, வேற்றுமை உருபு, உருபு புணரியல் என்ற சொற்களில் வகரம் பகரமாக மாறுவது காண்க. வகரத்திற்குப் பகரம் போலிபோன்று வரும் முறைமைப்படி அச்சொல் மாற்றப்பட்டதென்க.

**ரூபகாலங்காரம்:** அழகு என்ற தமிழ்ச் சொல்லினுள்ள ழகரத்தை லகரமாக்கிக் ககரத்திற்கு இனமாகிய ஙகரவொற்றும் இடைப்பெய்து ஆர் என்பதனைப் பின்சேர்த்து வழக்கம்போல் அம் என்பதனை இறுதியிற் சேர்த்து "அலங்காரம்" என்றாக்கினர்.

அழகு—அலகு—அலங்கு—ஆர்—அம்—அலங்காரம்.

உருவகா வகுக்கப்படுவது உருவகம்; ஆகவே, ரூபகாலங்காரம் என்பது உரு+வகு+அழகு என்ற சொற்களிலிருந்து பிறந்தது.

**தமோகுணம்:** தாழ்மதிக்குணம் என்ற தமிழ்ச்சொல் தாமதகுணம் என்றாகித் தமோகுணம் என்றாயிற்று. தாழ்ந்த மதியுடையதாக்கக்கூடிய குணம் என்பது பொருள். அமைதி, விரைவு, ஒய்வுப் பண்புகள் என்றும்; சாந்தம், வேகம், தாழ்மதி அல்லது தளர்மைப் பண்புகள் என்றும் தமிழில் வழங்குவது ஏற்புடைத்து.

**தீபகாலங்காரம்:** தீவம் என்ற சொல் தீ என்ற பகுதியிலிருந்து பிறந்த தமிழ்ச்சொல்; தீயிலிருந்து அழகாக விளக்கிற்

பொருத்தி வைக்கப்பட்டது தீவம். முன்போல் வகரத்தைப் பகரமாக்கி அழகு என்பதிலிருந்து அலங்காரம் என்பது உண்டாக்கி "தீபகாலங்காரம்" என்றனர்.

**சிலேஷாலங்காரம்:** சில பொருள்கள் எடுத்துக்கொள்ளும்படி பாடப்படுவது சிலேடை. 'சில' என்னுஞ் சொல்லுடன் 'எடை' என்பது சேர்த்து அகரங் கெடுத்து எகரத்தை நீட்டிச் சிலேடை என்றாக்கினர் பின்பு, டகரத்தை ஷகரமாக மாற்றிச் "சிலேஷா" என்றாக்கினர். சில—எடை—சில்—எடை—சில்—ஏடை—சிலேடை—சிலேஷா.

**பரிவருத்தனை:** பரி என்பது செலவு என்ற பொருள் தரும். "காலே பரிதப் பினவே" என்ற குறுந்தொகைப் பாடலில் செலவாகிய நடை என்ற பொருள் தருவது காண்க. செல்லுதலிற் சிறப்புடைய குதிரைக்கும் பெயராயிற்று. "ஆதி போகிய பாய்பரி நன்மா" என்பது அகநானூறு. வருத்தனை என்பது கொள்வனை, கொடுப்பனை என்பன போன்ற சொல். அது "வரு" என்ற பகுதியினடியாகப் பிறந்தது. வருத்தனை என்பது தன்னிடத்து வரச்செய்யும் பொருள் என்று பொருள் தரும். "ஒரு பொருளைச் செல்லவைத்து ஒரு பொருளை வரவழைப்பது" என்பதே "பரிவருத்தனை" என்ற சொல்லுக்குப் பொருளாகும். ஒன்றைக் கொடுத்து மற்றொன்றை வாங்குவது என்பது தான் தெளிவான பொருள். பரிமாறறம் என்ற சொல்லும் இப் பொருள்பட வழங்கத்தக்கது. "பரிமாறுதல்" என்ற சொல் "சென்று தன்னிடத்திலுள்ள பொருளை வேறு ஒருவருக்கு மாற்றிப படைத்தல்" என்ற பொருளில் வழங்குவதுங் காணலாம். ஆகவே "பரிவருத்தனாலங்காரம்" என்ற சொல் தமிழ்ச் சொல்லிலிருந்தே படைக்கப்பட்டது என்க.

**ரவி:** இரவினை அவிப்பது இரவி. இரவு+அவி—இரவி—ரவி. இருள் என்றும் இரவு என்றும் வழங்குஞ் சொற்களை நாம் நன்கு அறிவோம். இரவு என்பது "இரா" என்றும் வழங்கும். "இரா" என்பதில் இகரத்தைக் கெடுத்து "ராத்திரி" என்று ஆக்கினர். "பாஞ்சராத்திரமதம்" என்பதில், "ராத்திரி" என்ற சொல் வருதல் காண்க. "ரா" என்பது இருள். இருளை அவிப்பது—அடக்குவது என்ற பொருளில் "ரவி" என்ற சொல் படைக்கப்பட்டது. ஆகவே, இரவு என்பதும் அவி என்பதுஞ் சேர்ந்து "இரவி" 'ரவி' என்று ஆகியது என்பது தெள்ளத்தெளிய விளங்குதல் காண்க. வடமொழியாளர் தமிழிலிருந்த

படைத்த சொற்களுக்கெல்லாம் வேறு பகுதிப்பொருள் கூறி ஏமாற்றமான நூல் செய்துவைத்துள்ளனர். தமிழ் நாட்டுக் கோயிற் பெயர்களை மாற்றினர்.

**சிதம்பரம்:** "சிற்றம்பலம்" என்றசொல்லைச் "சிதம்பரம்" என்று மாற்றினர். வல்லின றகரம் தம் மொழியில் இல்லாமையால் றகரத்தைத் தகரமாக்கி லகரத்தை ரகரமாக்கினர். சித் + அம்பரம். சிதாகாசவெளி என்று பித்தலாட்டமான பொருளுங் கூறினர். தேவாரம் பாடிய மூவர் காலத்தில் வழங்காத "சிதம்பரம்" என்ற சொல், அவர்கள் காலத்திற்குப் பின்பு வந்தது. தமிழரின் கோயில்கட்குப் புராணநூல் எழுதத் தொடங்கிய வடமொழியாளரின் பித்தலாட்டமான மாற்றம் இது. மறைக்காடு வேதாரணியமாயிற்று. மயிலாடுந்துறை மாயவரமாயிற்று; ஐயாறு பஞ்சநதீச்சுரமாயிற்று. இவ்வாறு கோயிலுள்ள ஊர்ப் பெயர்கள் எல்லாவற்றையும் மாற்றி, ஆங்குள்ள தெய்வங்களுக்குத் தமிழர் வைததிருந்த தமிழ்ப் பெயர்கள் எல்லாவற்றையும் மாற்றிப் பின்பு, அப்பெயர்களை யெல்லாம் வடமொழியிலிருந்து வந்தன என்று கூசாமல் நாணுமல் கூறவுந் தொடங்கினர், தமிழரின் இசைப்பெயர்களைத் திரித்துமாற்றினர். நூற்பொருள்களைக் கவர்ந்து எழுதி வைத்துககொண்டனர். தென்றமிழ் நாட்டிலுள்ள குற்றாலததையும் அதனைச் சார்ந்த நாட்டினையும், "தென்னாரிய நாடு" என்று வடமொழிப் புராணத்திற் பாடி வைத்தனர். அதனை மொழிபெயர்த்த கவிராயரவர்களும் குறவஞ்சியிலும் புராணத்திலும ஆரியநாடு என்றே பல இடங்களில் பாடியிருப்பதை யாவரும் நோக்கலாம். இவ்வாறு துறைதொறுந் துறைதொறும் புகுந்து தமிழைச் சிதைத்துத் தெலுங்காகவுங் கன்னடமாகவும் மலையாளமாகவும், குடகு, துளு, கூர்க்கு, முதலியபல மொழிகளாகவும் ஆக்கினர்.

இம் முயற்சிகள் எல்லாவற்றாலும் கெட்டொழிந்தனபோக எஞ்சியிருக்குந் தமிழை அழிக்கக் "கிரந்தம்" என்ற ஒரு மொழியைத் தமிழிலிருந்து ஆக்கினர். தமிழ் நாட்டின் ஒரு பகுதியான மலையாள நாட்டில் வழங்கிய தமிழைச் சிதைத்து "மலையாளம்" என்றாக்கியதுபோல, தமிழ்நாட்டில் வழங்கும் தமிழைக் கிரந்தமாக்க முயன்றனர்; முடியவில்லை. "மணிபபிரவாளம்" ஆக்கிப் பார்ததனர்; அதிலுந் தோல்வியே ஏற்பட்டது. இன்று கலைச் சொல்லாக்கக் குழாததுட் புகுந்திருந்து கொண்டு தமிழ்ச் சொற்களுள் வடசொல் எனப்படும் புத்துருவான சொற்களைப் புகுத்

துத் தமிழை உருக்குலைக்கும் வேலை செய்கின்றனர். ஒவ்வொரு அரசியற் கிளர்ச்சிக் காலத்திலும் தமிழைச் சிதைத்திருக்கின்றனர். இச்செயல்களை யெல்லாம ஆற அமர இருந்து நினைந்து உணரவல்லாருக்கு வடமொழியாளர் தமிழிலிருந்து பெரும்பான்மையான சொற்களை எடுத்து உருமாற்றியமைத்துக் கொண்டனரென்பதும், அவற்றிற்கு அடிப்படையான தமிழ்ச் சொற்களிற் சிலவற்றை வடமொழியிலிருந்து தமிழிற்கு வந்தன என்றுங் கூறி ஏமாற்றி வந்தனர் என்பதும், அவற்றிற்குப் பகுதிப் பொருள்கள் பொய்யாகக் கற்பனை செய்தனர் என்பதும், வேண்டுமென்றே (வஞ்சகமாக) எண்ணிறந்த தமிழ் ஏடுகளைப் பதினெட்டாம்படிப் பெருக்கில் ஆற்றுத் தண்ணீரில் விடும்படியான மூடப்பழக்கம் உண்டாக்கிக் கெடுத்தனர் என்பதும், ஒளிநூலாகிய சோதிட நூலைப் பயின்று மக்களை ஏமாற்றி வடமொழிப் பெயர்களையே எல்லோரும் வைத்துக் கொள்ளும்படி செய்தும், மணவீடு, பிணவீடு, சுடுகாடு, உணவிடுதி, கோயில், குளம், அரசியல்மன்றம், அறங்கூறவையம், முதலிய எல்லா இடங்களிலும் புகுந்து தமிழை அழித்துக் கெடுத்துத் தமிழ்ச் சொல்லை உருமாற்றிப், படைத்த சமஸ்கிருதத்தை வழங்கச் செய்தனர் என்பதுவும் தெற்றென விளங்கும். வடமொழியைப் படித்தால் தமிழர் இந்த நுட்பங்களை அறிந்து கொள்வாரென்று கருதிப் பண்டு அதனைத் தமிழர் பயிலவுங் கேட்கவுங் கூடாதென்றும், கேட்டால் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டுமென்றும், தொட்டால் வெட்ட வேண்டுமென்றும் ஏற்பாடு செய்து அவர்களின் சூழ்ச்சியை அறியா வகையாக நன்ருக ஏமாற்றிவந்தனர். இன்னும் இந்தத் துன்பம் ஓய்ந்தபாடில்லை. "சிந்துபூந்துறை" என்ற அருமைத் தமிழ்ச் சொல்லை "சித்புட்பக்கட்டா" என்ற வட சொல்லிலிருந்து வந்தது என்று சிறிதும் நாணமின்றிப் பிதற்றுகின்ற நிலை இன்னும் இருந்து வருகிறது. இவற்றிற்கெல்லாந் தெளிவடையாதவர்கட்கு ஒன்று கூறுவேன், நன்கு நோக்குக.

தமிழில் பாட்டியல் என்ற இலக்கணநூல் எழுதத் தொடங்கிச் செய்திருக்கும அட்டூழியத்தைப் படித்து நினைத்துப் பாருங்கள். தமிழ் எழுத்துக்களை நான்கு சாதியாகப் பிரித்தனர். உயிரெழுத்துக்களும் முதல் ஆறு மெய்யெழுத்துக்களும் பிராமணருக்காம்; ஏனையவற்றுள் த, ந, ப, ம, ய, ர என்ற ஆறு மெய்யெழுத்துக்களையும் ல, வ, ற, ன என்ற நான்கு மெய்யெழுத்துக்களையும் அரசருக்கும் வணிகருக்கும் ஐயோ போகட்டும் என்று விட்டுக் கொடுத்திருக்கின்றனர். ழ, ள என்ற-மொழிக்கு முதலில் வராத-இந்த இரண்டு எழுத்துக்களை

யும் வேளாளருக்கென்று உவந்து கொடுத்திருக்கிறார்களாம் இம்முறையில் வருணப் பொருத்தமுடன் பாடவேண்டுமாம். இவற்றை வைத்துக்கொண்டு அவன் என்ன செய்ய? மூள மூள எழ எழ என்று உளறவா? எழுத்துக்களில் மட்டுமல்ல இந்தத் துன்பம. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நால்வகைப் பாவினுள் அமிழ்தொழுகும் இனிய வெண்பா—திருக்குறள் அமைந்த—முத்தொள்ளாயிரம் அமைந்த வெண்பா பிராமண சாதியாம். அவர்களைப்பற்றி மட்டும் வெண்பாவினால் பாடவேண்டுமாம். அரசருக்கு ஆசிரியப்பாவாம்; வணிகருக்குக் கலிப்பாவாம்; வேளாளருக்கு வஞ்சிப்பாவாம்.

"மறையோர் மன்னர் வணிகர் சூத்திரர்க்கு
முறையான் வெண்பா முதலன் செய்தும்"

என்பது இலக்கண விளக்கப்பாட்டியல். என்னே இவர்கள் தம் வஞ்சிப்பு. சிறு வழக்கினதாக அருகிவரும் வஞ்சிப்பா மட்டும் வேளாளருக்காம். இந்த மூட வழக்கம் தொல்காப்பிய நூலில் எழுதப்படவில்லை. யாப்பருங் கலக்காரிகையின் உரையில் பிற்காலத்தில் புகுத்தப்பட்டது. பாட்டியல்களில் தம் கைவரிசைகளைக் காட்டிக் கொண்டிருக்கின்றன. இத்தகைய இழிநிலையான பாட்டியலும் பல்கலைக் கழகத்தாரால் தேர்வுக்குப் பாடமாச வைக்கப்பட்டிருக்கிறது. பிள்ளைத் தமிழைப் பற்றிப் பாட்டியல் கூறுவதையும் நோக்குங்கள். தேவர்கட்கு நூறு பாடவேண்டுமாம் பிராமணருக்குத் தொண்ணூற்றைந்து பாடவேண்டுமாம். அரசருக்கும், அமைச்சருக்கும், வணிகருக்கும் அவற்றிலிருந்து குறைவாக இயற்ற வேண்டுமாம். வேளாளருக்கு முப்பது பாட்டிற்குமேற் பாடக் கூடாதாம். என்னே இவர்களின் நோக்கம். இலக்கண நூலுட் புகுந்து எழுத்துக்கும் பாட்டிற்கும் சாதி வகுத்தனர் எனின், அந்தோ இவர்கள் உள்ளம் எத்தகையது என்று கூறுவது? சிலப்பதிகாரத்தில் நாலுவகை வருண பூதங்கள் கற்பித்து ஏட்டுச் சுவடியிற் செருகிவிட்டிருக்கின்றனர். திரு உ. வே. சாமிநாத ஐயரவர்கள் அவ்வாறு இடைச் செருகலாகச் செருகப்பட்ட பகுதியை இருபகரக் குறிக்குள் அமைத்து, இவை எல்லா ஏடுகளிலும் இல்லை; இடைச் செருகலாக இருக்கலாம் என்ற கருத்திற் குறிப்பிட்டிருப்பதையும் நோக்குங்கள். ஆகவே, இனியாவது தமிழுக்குத் தீங்கு செய்வதை விடுத்துத் திருந்தும்படி அன்னாரை வேண்டுகின்றோம்.

# பேரறிஞர் பழநியப்ப பிள்ளை

(29-8-1893—1-2-1951)

[இ. ஆறுமுகம் எம்.ஏ., தமிழ் விரிவுரையாளர், திருவேங்கடவன் கீழ்க்கலைக் கல்லூரி, திருப்பதி.]

கண்ணொளி குறைந்தவனுக்குக் கண்ணொளியைத் தந்த மருத்துவனைப் போலவும், நடுக்கடலில் கரை காணாது திகைத்த மாலுமிக்குக் கரையினைக் காட்டி மகிழ்ச்சி ஊட்டிய கலங்கரை விளக்கம் போலவும், வறுமையிலே வாடிய ஒருவன் தேடாமல் கண்டெடுத்த புதையலைப் போலவும் தமிழர் வரலாறு ஆராய்ச்சி யரங்கிலே புகுந்து, விளக்கத்தைத் தூண்டி, இருளை விலக்கினார். இருள் மெல்ல மெல்ல மறையத் தொடங்கும்போது, கரையினை நெருங்கி வரும் மரக்கலம் வெடிகுண்டுகளால் சாய்ந்தபோதும், கண்ணொளியைப் பெற்றும் கண்ணொளி குறைந்தவன் நீண்ட நாள் வாழாமல் மறைந்தபோதும், புதையல் கண்டெடுத்தும் ஏழை துய்ப்பதற்குக் கொடுத்து வைக்காமல் மறைந்தபோதும் அவரவர் மனதில் ஏற்படும் துயர அலைகளைப்போலத் திருப்பதி யில் அவர்தம் இல்லத்தில் 1-2-1951-மாலை 5-10-மணிக்கு அறிஞர் திரு. தி. பொ. பழநியப்ப பிள்ளை அவர்கள் மறைந்த போது பெருந் துன்ப ஒலி தோன்றியது.

இவ்வாறு தமிழ்மக்களின் உள்ளத்தில் துன்பத்தைத் தந்து மறைந்த பெரியார் 1893-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 29-ஆம் நாள் பழநியில் ரெவினியூ இலாக்காவில் கணக்கராக ஊழியம் செய்துவந்த உயர்திரு. தி மா. பொன்னுசாமிப்பிள்ளை அவர் களுக்கும், திருமதியார். அரங்கம்மாள் அவர்களுக்கும் மகனா ராகத் தோன்றினார். “விளையும்பயிர் முளையிலே தெரியும்,” என்பதுபோல அவர்தம் கூர்த்த அறிவும், கல்விகற்கும் ஆவ லும் அவருடன் ஒன்று சேர்ந்து, வளர்ந்துவந்தன. திண்டுக் கல்லில் அவர்தம் தாய்வழிப் பாட்டனார் உயர்திரு. ஆறுமுகம் பிள்ளையவர்களிடம் தமிழறிவும், கொன்னக்கோல் மருதநாயகம் பிள்ளையென்று புகழடைந்த அவர்தம் பாட்டனாரிடம் இசைக் கலையறிவும் பெறத் தொடங்கினார். திண்டுக்கல் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியில் மூன்றாம் படிவம் வரை பயின்றார். 1911-ஆம் ஆண்டு தொடங்கி 1915-ஆம் ஆண்டு முடியத் தமது மூதாதையர் வாழும் ஊராகிய திரிசிராப்பள்ளி நேஷனல் உயர்நிலைப்பள்ளியில் பள்ளியிறுதி வகுப்புவரை பயின்றார். 1915-ஆம் ஆண்டு தமிழில் உள்ள தமது சிறந்த

பயிற்சியை வெளிக்காட்ட மதுரைத தமிழ்ச்சங்கத்தில் பொற் பதக்கத்தையும், பாளையங்கோட்டைச் சைவசித்தாந்தசபையில் வெள்ளிப்பதக்கத்தையும் பெற்றார்.

1916-ஆம் ஆண்டு முதற்கொண்டு அதே உயர்நிலைப்பள்ளி யில் தமிழாசிரியராக வேலையில் அமர்ந்தார். எஸ். பி. ஜி. கல் லூரியில் ஊழியம் செய்துவந்த பிச்சை இப்ராஹிம் புலவரிடம் கூடிய மட்டில் தமிழ்க்கல்வி பெற்றுவந்தார் எனினும், தமிழ் மொழிக் கல்வி முழுதும் அவர்தம் சொந்த முயற்சியின்மூலம் உருப்பெற்று வந்தது. தமிழ்க்கல்வியில் உள்ள ஆர்வம் மிகுதி யானதால் அவரில்லம் தமிழ்ப்புலவர்கள் நடமாடும் கோயிலாக விளங்கியது. அத் தமிழ்ப்புலவர்களில் ஒருவராகிய ஆண்டி பட்டி சமஸ்தான வித்துவான், திருவாளர். திருஞானசம்பந்தக் கவிராயர் அவர்கள், “திரிசிரபுரம் வித்துவான் தி. பொ. பழநி யப்பபிள்ளை அவர்கள் தமிழிலக்கண இலக்கியங்களில் நல்ல தேர்வும், கற்ற நூற்பொருளைப் பிறர்க்கெடுத்துச் செவ்விதில் போதிக்கும் திறமும், சொற்பொருள் அலங்காரங்கள் அமையக் கவிபாடும் வன்மையும், பிரசங்கநலமும் உடையவர்கள்,” என்ற நற்சான்றிதழை இவருக்கு அளித்தனர்.

1-6-1917-இல் திருப்பதிக்கு அண்மையிலுள்ள சிறுத்தா னூர் பாங்கராக (Banker) இருந்தவர் இவருக்கு மாமனாராகும் பேறு பெற்றார். அவர்தம் திருமகள் திருவாட்டி. இராஜ மன்னாரம்மாள் அவர்களை மணந்தார். சோதிடர் ஒருவர், “இவர் முருகனைப்போன்று இரு வாழ்க்கைத்துணைவியரைப் பெறுவர்,” என்ற கூற்றைத் தம் வாழ்க்கைத் தூய்மையால் பொய்ப்பித் தார். அவர்தம் மனைவியார் இவரிடம் காதல் கெழுமியவராகி, இவர் நலமே தம் நலம் என்று வாழ்நாள் முழுதும் வாழ்ந்து வந்திருக்கின்றனர். அன்னார் வாயிலாக, இவர் இரண்டு ஆண் குழந்தைகளுக்கும், மூன்று பெண் குழந்தைகளுக்கும் தந்தையா ராயினர். உலகமக்களிடத்தில் அன்புணர்ச்சி காட்டியது போலவே, அவர் குடும்பத்திலும் அன்புநலங்கனிந்த தந்தையா ராகவே வாழ்ந்து வந்தார் என்பதை அவர் மறைவைத் தாங்க முடியாது எழுந்த அரற்றொலி தெளிவாக்கியது. எனினும், அவருள்ளம் துறவையே நாடி நின்றது.

இவர் உள்ளத்திலே ஆடும் தெய்வம் நடமாடியவாறிருந்த போதும், இவர் காலத்துக்கேற்பப் பலதிறப்பட்ட சமய நூல்க ளையும் கற்றார். சைவசித்தாந்தம், வைணவம், வேதாந்தம் என்ற சமயக்கொள்கைகளைத் தம் சொந்த முயற்சியால் கற்று அறிந்து கொண்டார் அமெரிக்கப்பிரசாரக் குழுவைச்

சேர்ந்த எச். டபிள்யூ. கார்ட்டர் என்பவர்மூலம், கிறித்துவ சமயக் கொள்கைகளை அறிந்தார். சமரசமே சமயக்கொள்கை களில் சிறந்ததாகக் கொண்டார்.

இக்காலத் தமிழாசிரியர்களைப்போல, 1930-இல் வித்து வான் தொடக்க வகுப்பிலும் (Preliminary), 1932-இல் வித்து வான் இறுதிநிலைத் தேர்விலும் தேர்ச்சியடைந்தார். தமது தேர்ச்சியின் அறிகுறியாக முதன்முதலாகத் திருப்பனந்தாள் மடாலயத்தின் ஆயிரம்ரூபாப் பரிசையும் பெற்றார்.

ஆங்கிலத்தில் தமது புலமை காட்டுவதற்கு 1937-ஆம் ஆண்டு பி. ஓ எல் (B. O L.) வகுப்பில் தென்னிந்திய மொழி களும், இலக்கியமும் (South Indian Languages and Literature) என்ற தேர்வுப் பகுதியிலும், 1938-ஆம் ஆண்டு திராவிட மொழிநூல் (Dravidian Philology) என்ற தேர்வுப் பகுதியி லும தேர்ந்து, பி. ஓ எல் பட்டமும பெற்றார்.

இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலே தமிழ் ஆசிரிய ராக 1932-முதல் 1941-வரை ஊழியம் செய்துவந்தார். நாவலர் சோமசுந்தரபாரதியார், பண்டிதமணி மு. கதிரேசன் செட்டி யார், இரா. இராகவையங்கார், வேங்கடாமிநாட்டார், சர்க்கரை-இராமசாமிப்புலவர் என்று இத்தகைய குறிப்பிடத் தகுந்த தமிழ்மணிகளுடன் இத் தமிழ்மணியும் ஒன்று சேர்நது ஒளி வீசத் தொடங்கியது. சோமசுந்தரபாரதியார் இவர் தம் நெருங்கிய நண்பராவர். அவர் இவர் பிரிவை நினைத்து மிகவும் வாடிவிட்டார் என்று அவர் முடங்கல் புகல்கிறது.

இவர் சித்திரக்கவிக்கு மித்திர ராகவும், சித்திரக்கவி நிபுணராகவும விளங்கினார். இவர் சித்திரக்கவியாகிய கலையில் தேர்ந்ததை டாக்டர் உ. வே. சாமிநாதையர், "நீங்கள் எழுதிய பந்தச் செய்யுட்களையும் அவற்றின்பொருளையும் பார்த்தேன். சித்திரக்கவிகள் இக்காலத்து அருமையே. இந்த விஷயத்தில் உங்களுக்குப் பயிற்சியிருத்தலைத் தெரிந்து சந்தோஷிக்கிறேன்," என்று, 8—9—1932-இல் புகழுரையாகப் பாராட்டிப் பேசினார்.

1932-முதல் 1934-வரை இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இளந்தமிழ்ப் புலவராகவும் (Junior Tamil Pandit), 1934-முதல் 1936-வரை முதுதமிழ்ப் புலவராகவும் (Senior Tamil Pandit), 1936-முதல் இளம் ஆராய்ச்சிப்புலவராகவும் (Junior Research Pandit) திகழ்ந்தார்.

திருவேங்கடவன் கீழ்க்கலை ஆராய்ச்சித்துறைத் தமிழ்த் தலைவராக 31-7-1941-முதல் ஊழியத்தில் அமர்ந்தார். அது

முதற்கொண்டு பதிப்பாளராகவும், ஆராய்ச்சி அறிஞராகவும் தமிழன்னைக்கு அவர்செய்த தொண்டுகள் அளவிடற்கரியன. திருவேங்கடத் தலபுராணம், எம்பெருமானார் நெஞ்சுவிடு தூது, சேடமலைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருக்குறள் காளிங்கர், பரிப்பெருமாள் உரை, இவர் பதிப்பாளராகவே யிருந்து வெளியிட்டவை. "என்கடன் பணிசெய்து கிடப்பதே," என்ற தொண்டருண்மையைப் பின்பற்றி, "ஆராய்ச்சி ஆராய்ச்சிக்காகவே," என்ற வரலாற்றுசிரியரின் வழியில் நடந்து, தமிழ்வரலாற்றில் புதிய உண்மைகளை அகழ்ந்தெடுத்துக், கல்வெட்டு அறிஞர் என்று அறிந்த திருப்பதி கீழ்க்கலைக்கல்லூரி மாணவர்கள் அவர்தம் கல்வெட் டறிவால் புதிய உண்மைகளை அறிந்து பெற்ற இன்பமே, இன்று அவர் பிரிவைத் துன்பமாகக் கருதும் அளவுக்குக் கொணர்ந்தது.

எடுத்த நூற்பொருளைச் செவ்விதாக விளக்குவதில் மட்டுமல்ல, தாம் கண்ட உண்மையை எடுத்துரைப்பதில் அஞ்சாத நெஞ்சம் படைத்தவர். ஆராய்ச்சியுலகில் அறிஞர்களை அஞ்சாது எதிர்த்துநின்ற மறைமலையடிகளாரின் மாணிக்கவாசகர் காலஆராய்ச்சியை அஞ்சாது மறுத்து 'மாணிக்கவாசகர் இவருக்குப் பிற்பட்டவர்,' என்று கூறிய முறையும், திருவேங்கடவனைச் சிவனாகப் பாராட்டியவரில்லை என்பதை மறுத்து இராகவையங்காருக்கு அவர் அளித்த கொட்டுரையும், திருவள்ளுவரைக் காலததால் பிநதியவராகத திரு. வையாபுரிபபிள்ளை அவர்களின் கருததை மறுதத முறையும இன்று தமிழன்னைக்குப் புதிதாக இடப்பட்ட மலர்களாகும். ஆராய்ச்சியுலகிலே மயக்கந் தருவன மூன்று கால ஆராயசசிகள். அவை: மணிவாசகரின் காலம், சிலம்பின் காலம், வள்ளுவர் காலம் ஆகும். அவை இவரால் அறுதியிடப்பட்டமையால், மயக்கம் ஒழிய மருந்தைததநத பெருமை இவரைச் சேரும.

சிறு வயதிலேயே இவருக்கு இசையிலே நாட்டம் அமைந்திருந்தது. அவ்விசைப் பயிற்சி பிறகு கலையனுபவிக்கும் திறனில் வெளிவந்தது. திருப்பதியிலே ஆண்டு தவறாது நிகழும் தியாகராசர் திருவிழாவில் பொருந்தும இசைவிழாக்களில் கலந்துகொள்ளும் இசையறிஞர்களைப் பாராட்ட அவர் தாளம போடும்போதும், "சபாஷ்" என்று சொல்லும் போதும் இசையறிஞர்கள காணமுடியாத ஊக்கம பெறுவார்கள்.

இவர் சொல்நயமும், பொருள்நயமும, கலைநயமும் படப் பேசுவார். இவர் பேசும்போது முத்தமிழும் முழங்கும. இவர் இளமை துள்ளி வந்து நிற்கும்.

இவ்வாறு வாழ்ந்த பெரியார், நம் நண்பர் சோமசுந்தரபாரதியாரைப் போன்றவர்கள் உளம் குலையவும், மாணவர்களும், உடன் பயில் ஆசிரியர்களும் மனம் நடுங்கவும், அன்பர்களாய் நெருங்கி வாழ்ந்தவர்கள், "ஆறுதல் இனி எங்கே?" என்று எண்ணி ஏங்கவும், "நம் உடலைப் பிணிக்காது எந்நோயும்" என்று இறுமாந்திருந்த அவர்தம் சட்டுடலை, மூப்பினால் பற்றிய ஊர் பேர் அறியா ஒரு நோய் அவர் பொன்னுயிரைக் கூற்றுவனுக்கு விருந்தாக அளித்தது. தமிழ்ப்பலமையிரத்தத்தின் சுவையை உண்டு மகிழ்ந்த கூற்றம் மறைமலையடிகளின் மறைவு குறித்து மனம் மாழ்கிய பெரியாரின் பொன்னுயிரையும் கௌவிடக் கங்கணம் கட்டியது. அறிவாளர்களை அழித்துவிட்டால் இனி இப் பேதையர்களின் உயிர்களைத் தான் எளிதில்பெற முடியாது என்று இக்காலப் போராட்சிமுறை பயியாக் கூற்றம், இக கால அறிவாளர்களை அழிக்கத் தொடங்கியதுபோலும்! அஞ்சா நெஞ்சத்தின் அறிகுறியாக விளங்கிய அறிஞர் பெர்னட்ஷாவைப்போலவும், மறைமலையடிகளைப் போலவும், இவரும் கூற்றுவற்கு விருந்தாயினர்.

இவர் மறைவைத் தாங்க வொண்ணாது திருப்பதி கீழ்க்கலை ஆராய்ச்சிக் கூடமும், திருப்பதி கீழ்க்கலைக் கல்லூரியும், அண்ணமலைப் பல்கலைக்கழகமும் கதவுகளை சாத்திக்கொண்டன.

அவரைப் பிரிந்து வாடுகின்ற குடும்பம் தலைவனைப்பிரிந்து ஆற்றொணாத் துன்பத்தில் ஆழ்கிய நங்கையை ஒத்து நிற்கின்றது. அன்பில வளர்ந்து, ஆராய்ச்சியில் அச்சம் நீக்கி வாழ்நத ஒரு பெரியார், ஆராய்ச்சியுலகில் சினநெருப்பை வளர்த்துச் சினமாகிய நெருப்பால்தான் மாற்றலர்களைச்சினமெழ நோக்கினார். ஆனால்அவர் ஆராய்ச்சி யுலகிலே யிருந்து வாழ்க்கையுலகிலே நடமாடும்போது, குழந்தையினும் கள்ளங் கபடமற்றவராய் விளங்கினார். மக்களை நடமாடும் தெய்வங்களாகக் கொண்டாடினார். என்போன்ற வயதில் சிறியோரையும், "சாமீ, நமஸ்காரம்" என்று கைகூப்பித், தலைவணங்கும்போது, சொல்லொணாத மகிழ்ச்சியில் மனம் துள்ளும். அவர் வயது முதிர்ந்தவராயினும், உள்ளத்தில் இளைஞர்.

இத்தகைய அன்புடைய அறிஞர்களைத் தமிழ்நாடு இன்னும் நன்றாக அறிந்து போற்றுவதற் கில்லை. இனியாவது, ஆங்கில நாட்டு மக்களைப் போலவும், ஆங்கிலநாட்டு அரசாங்கத்தைப் போலவும் தமிழ்மக்களும், தமிழ்நாட்டு அரசாங்கமும் அறிஞர்கள் இருக்குமிடம் தெரிந்து, ஓடி, அவர்களை அணைக்கவேண்டுமென்பது என் பணிவான வேண்டுகோள்.

# திருக்களிற்றுப்படியார் ஆசிரியர்

[தி. பொ. பழனியப்ப பிள்ளை B.O.L.]

(ஆசிரியர் தாம் உலகில் வாழ்ந்தபோது அனுப்பியது.
சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரை)

தமிழ்மொழியில் வழங்குகின்ற சைவசித்தாந்த நூல்களாகிய பதினான்கும் ஏறத்தாழ எழுபது யாண்டுகட்கு முன்பு முதன்முதலாக அச்சேறின. பின்னரும சில பேரறிஞர்கள் அச்சிட்டனர். 1934-ம் ஆண்டில் சென்னைச் சைவசித்தாந்த மகாசமாசத்தார், காலஞ்சென்ற S அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் எம்.ஏ., எல்.டி., இராவ்சாஹிப் திரு. S.வையாபுரிப் பிள்ளையவர்கள் பி.ஏ., பி.எல்., ஆகிய இருபேரறிஞர்களையும் கொண்டு இப் பதினான்கு சாத்திரங்களின் மூலமும் உரையும் ஆராய்ச்சி செய்வித்துச் சமாசத்தின் முதற்பதிப்பு வெளியிட்டார்கள். பின்னர் 1940-ஆம் ஆண்டில் சமாசத்தின் இரண்டாம் பதிப்பு அறிஞர் திரு. மு. அருணாசலம் எம்.ஏ., அவர்கள் ஆராய்ச்சிப் பயனாய் வெளிப்போந்தது.

இவற்றுள் இறுதியிற் கூறிய சமாச இரண்டாம்பதிப்பிலொழிய முன்னைய பதிப்புக்களிலெல்லாம் இப் பதினான்கு சாத்திரங்களின் வைப்புமுறை,

> " உந்தி களிறு உயர்போதஞ் சித்தியார்
> பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
> பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
> உண்மைநெறி சஙகற்ப முற்று "

என்ற பழம்பாடலிற் கண்ட வைப்புமுறையாகவே அமைந்துள்ளது. இந்நூல்கள் தோன்றிய காலவரன்முறைகளை நோக்கியே இப் பழம்பாடல் இவற்றினடைவைக் காட்டியுள்ளது என்பது அறியப்படுகின்றது. இக்காலத்து நூலாராய்ச்சியாளர்கள் கண்ட காலவ்ரன்முறையும் மாறுபாடின்றி இப் பாடற்கொப்பவே யுள்ளதென நன்கு அறியலாம்.

இவை யாவும் தமிழ்நாட்டிற் றோன்றிய சைவத் திருவருளாளர்களாலே அருளிச்செய்யப்பட்டன வென்பதும், தமிழ்மொழிக்கே யுரியனவென்பதும், அப் பெரியார்களின் திருப்பெயர்களாலும், அவர்கள் வாழ்ந்த நாடு, ஊர்களின் பெயர்களாலும், வாழ்வு வரலாறுகளாலும், அவர்களருளிய நூற்பெயர்களாலும் தெளிவாக விளங்குகின்றன. சுவாமிநாததேசிகர் இயற்றிய சந்தானசாரியர்புராண நூலும், முருகதாச சுவாமிகளியற்றிய புலவர்புராண நூலும் கூறுகிற செய்திகளும் மேற்கண்ட முடிபுகளை வலியுறுத்துகின்றன.

பழைய பதிப்புக்களும் சமாச முதற்பதிப்பும் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் இவற்றின் ஆசிரியர்களைப் பற்றிய வரலாறுகளைக் கூறுதற்கண், வடநாட்டினின்று சேதுக்கரைத் திருமுழுக்கின்பொருட்டுத் தெற்குப்போந்த ஒரு பெரியார் அதனை முடித்துத் தந்நாட்டுக்கு மீளுங்கால் சோணாட்டுள்ள திருவியலூரில் தங்க, அங்கிருந்த ஒரு பக்குவர் அவரையடுத்து ஞானோபதேசம் பெற்றதாகவும், உபதேசித்த குரவர் திருவியலூர் உய்யவந்ததேவநாயனு ரென்பாரென்றும், உபதேசம் பெற்றார் திருவியலூர் ஆளவந்ததேவநாயனு ரென்பாரென்றும் காட்டிப், பின்பு இவ்வாளவந்ததேவநாயனார் தம்மை யடுத்த திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார்க்கு உபதேசித்தாரென்றும், இந்தத் திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார் பெரும்பற்றப்புலியூராகிய தில்லைநகரி லெழுந்தருளி யிருக்குங்காலை தம்மை யடுத்த ஒரு பக்குவர்பொருட்டுத் தம் பரமாசிரியர் அருளிய திருவுந்தியார் என்ற நூலின்வழி ஓர் அருணூலியற்றி யுபதேசித்தன ரென்றும், அது திருக்களிற்றுப்படியாரென்ற சிறப்புப் பெயர் பெற்றதென்றும் தெரிவித்துள்ளன. இக் குறிப்புக்களையும் நூற்பொருளையும் கண்டு காலவரையறையும் ஒருவாறு தெளிவித்தனர் முற்பதிப்பாசிரியராகிய அனவரதவிநாயகம்பிள்ளையவர்கள். அவர்கள் திருவுந்தியாருக்கும் திருக்களிற்றுப்படியாருக்கும் திருவாவடுதுறையாதீனத்துத் தில்லைச்சிற்றம்பலவர் எழுதிய உரைகளைப் பதிப்பித்துள்ளார்கள்.

சமாசத்து இரண்டாம் பதிப்புச் செய்த அறிஞர் திரு. மு. அருணசலம்எம் ஏ., அவர்கள், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய இவ்விரு நூலுக்கும் முற்கூறிய தில்லைச் சிற்றம்பலவரென்ற சிவப்பிரகாசருரைகளை விடுத்து வேறு பொழிப்புரைகளைச் சேர்த்துப் பதிப்பித்துள்ளார்கள் தமது குறிப்பில் அச்சிவப்பிரகாசத் தம்பிரான் இவ்வரிய பொழிபபுரைகளைத் தழுவியே தமதுரையைச் செய்தனரெனக் காட்டியுள்ளார்கள். இப்பழைய பொழிப்புரையேடுகளின் தலைப்பில் "திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் வரலாறு" என்ற பகுதியுள்ளது இஃது அரிய செய்திகளைத் தெரிவிப்பது. ஆகலின் அதனைக் கீழே தருகின்றேன்.

"பரிபூரணமாயிருக்கிற சிவன் ஆன்மாக்களுக்குச் சிவானுபவம் விளையும் நிமித்தமாக மானுடச்சட்டை சாத்தி உய்யவந்த தேவநாயனார் என்னுந் திருநாமத்தையுஞ் சாத்திக்கொண்டு வடவேங்கடந் தென்குமரி யெல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங் காலத்து ஒருநாள் திருவியலூரிலே எழுந்தருளினார். அவ்வூரிலேயிருக்கிற ஆளுடையதேவநாயனார் கண்டு தரிசித்தபோது

அவருடைய மலபரிபாகத்தை யறிந்து தீட்சைபண்ணி ஞான உபதேசமும் பண்ணி, திருவுந்தியார் என்று பேரிட்டு நாற்பத்து நாலு செய்யுளாக நூலும் பண்ணி அந்த நூல் முடிவிலே தம்முடைய பெயர் தோன்ற ஒரு செய்யுளும் பண்ணி அந்த நூலினுடைய தாற்பரியத்தையும் உள்ளபடி அறிவித்துச் சிறிதுநாள் சென்று தன்னியல்பை யடைந்தார். பின்பு ஆளுடையதேவ நாயனார் முன்சொன்ன வெல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங் காலத்து ஒருநாள் திருக்கடவூரிலே எழுந்தருளினார். அவ்வூரிலே ஆட்டுவாணிபக் குலத்திலே உற்பவித்தவரொருவர் கண்டு தரிசித்தபோது அவருடைய மலபரிபாகத்தை யறிந்து தீட்சை பண்ணித் தம்முடைய ஆசாரியருடைய பெயரையுஞ் சாத்தித் திருவுந்தியாரென்கிற சாத்திரத்தையு மறிவித்துச் சிறிதுநாள் சென்று தன்னியல்பை யடைந்தார். பின்பு அந்த உய்யவந்த தேவநாயனார் முன்சொன்ன எல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங்காலத்திலே ஒருநாள் சிதம்பரத்திலே எழுந்தருளினார். அவ்வூரிலே ஒருவர் ஞானம் பெறவேண்டித் தலவாசம் பண்ணியிருந்து இவரைக் கண்டு தரிசித்தபோது இவர் அவரது மலபரிபாகத்தை யறிந்து தீட்சைபண்ணித் திருவுந்தியாருக்கு வழி நூலாகத் திருக்களிற்றுப்படியார் என்று நூறு செய்யுளாக ஒரு நூலும் பண்ணி அறிவித்துச் சிறிதுநாள் சென்று தன்னியல்பை யடைந்தார். திருக்களிற்றுப்படியா ரென்பதற்குக் காரணம் இவர் நூல் பண்ணினகாலத்து இவர் கீழ்ச்சாதியென்றும் இவருடைய நூல் கைக்கொள்ள லாகாதென்றுஞ் சிறிதுபேர் சொல்ல, சிறிது பக்குவராயுள்ளவர்கள் அந்த நூலைப் பஞ்சாக்கரப்படியிலே கொண்டுபோய் வைத்தார்கள். அந்தப் படியிலே செய்திருக்கிற கல்லானை (அந்நூலைத்) துதிக்கையாலே யெடுத்து எல்லாவற்றுக்கும் மேற்படியிலே கொண்டுபோய் வைத்தது. ஆகையால் (இந்நூல்) அப் பெயர்பெற்றது இந்தச் சந்தான பரமபரையை இப்படிக் கண்டுகொள்க".

பழைய பொழிப்புரைத் தொடக்கத்துள்ள இப்பகுதி இவ்வாசிரியர்களைத் தமிழ்நாட்டினராகவே தெளிவுறுத்துக் காட்டுகின்ற செய்தி பழையபதிப்புக்களின் வரலாற்றுக் கூற்றுக்கு மாறுபட்டு ஆராய்ச்சியாளர்கள் கண்ட முடிபினை வலியுறுத்துகின்றது கண்டுகொள்ளுக. இனித் திருவியலூர் ஆளுடைய தேவநாயனார் திருக்கடவூரிலே எழுந்தருளியிருந்த செய்தியும், அவ்வூரில் ஆட்டுவாணிபக் குலததிலே உற்பவித்தவராகிய உய்யவந்ததேவநாயனார் அவர்பால் உபதேசம் பெற்ற செய்தியும் கூறப்பட்டுள்ளன. இது புதுமையாக உள்ளமைகண்ட பதிப்பாசிரியர் திரு. மு. அருணசலம் எம.ஏ., அவர்கள் தமது குறிப்பில்,

"உரைத்தொடக்கத்தில் நூலாசிரியர்களின் சந்தான பரம்பரையைக் கூறுகிறார். வழக்கிலுள்ள வரலாற்றுக்கு இது சிறிது மாறுபட்டிருக்கிறது,"

என்று எழுதியுள்ளார்கள். இவர்கள் பழைய பதிப்புக்களில் எழுதியுள்ள வரலாற்றுச் செய்தியொன்றே கொண்டு இது மாறுபாடு என்று கூறியுள்ளார்கள். பழைய பொழிப்புரைக் கூற்றுக்கு நூற்பிரமாணம் காணுக்குறையால் இவ்வாறு எழுதி விட்டார்கள் இப பொழிப்புரையின் கூற்று, நூற்பிரமாணம் உடையதென எளியேன் ஈண்டுக் காட்டுகின்றதனை அறிஞர் காண்பார்களாக.

'புலியூர் வெண்பா' என்ற பெயர்சிறந்த நூலின்கண் 38-வது செய்யுளாக உள்ளது கீழ்வரும் வெண்பா ஆகும்.

"வாட்கையச வாணிபர்சொன் மாநூ லினைப்படிக்கற்
பூட்கையெடுக் கக்கொள் புலியூரே—தாட்கமலப்
போதுளவ னத்தன் புருகூதன் போற்றுமந்திப்
போதுள வனத்தன் புரி."

இதன் பொழிப்புப் பொருளாவது:—"அடித்தண்டினையுடைய தாமரைமலரினுள்ள பிரமனும், சங்கினைக் கையினுடைய திருமாலும், இந்திரனும் போற்றி வழிபடுகின்ற அந்திப் பொழுதின் செவ்வண்ணத் திருமேனியுடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள ஊராவது, வாளைக் கையிலுடைய ஆட்டு வாணிபர் ஆகிய பெரியார் சொல்லியருளிய சிறந்த சைவ நூலினைத் திருச்சிற்றம்பலத்துள்ள பஞ்சாக்கரப் படிக்கல்லின்கண் அமைந்த கல்லானை துதிக்கையால் எடுத்துக் கொடுத்துநிற்க அதனை ஏற்றுக்கொண்ட பெரும்பற்றப் புலியூரே ஆகும்," என்பது இந்நூலாசிரியர் தில்லைத்தலம பற்றிய புராணச் செய்திகள் பலவற்றை உமாபதியார் அருளிய கோயிற் புராணம், திருமலைநாதர் இயற்றிய சிதம்பர புராணம் இவற்றிற் கண்ட செய்திகட்கு இயையவே கூறிச் சென்றுள்ளார் என்பது இந்நூலினைப் படிப்பார்க்கு நன்கு விளங்கும். ஆகவே, இவர் நூற்பிரமாணங்களோடு தாம் செவிவழிச் செய்தியாகத் தெரிந்த இச் செய்தியினையும் தம் நூலுட் கூறியதாகவே கொள்ள வேண்டும. இவ்வாறு நூற்பிரமாணம் உண்மையின் இப்பொழிப்புரைக் கூற்றினைப் பதிப்பாசிரியர் மாறுபட்டதென ஒதுக்கிவிடுதல் பொருந்தாது எனக் காண்க.

இவ் வெண்பா திருக்களிற்றுப்படியாரருளிய பெரியாரை "வாட்கை யசவாணிபர்" எனத் தெளியக் கூறுகின்றமையால் அவர் ஆடுவிலைபகரும் வாணிபராதலின்றிக் கருவியால்

கொன்று அதனுடற் குறைத்து இறைச்சிவிற்கும் வாணிக ரெனப் புலப்படுத்து, மேல் அவர் ஞானபரிபாகம் பெறுதற்குச் சொல்லியருளிய நூல் சிறந்த அருணூலாயிற்று எனத் தெளிவுறுத்துவது அறிக. சிவஞானபரிபாகம் பெறுதற்குக் குடிப்பிறப்பு ஏது அன்று என்றும், ஆன்மபக்குவம் ஒன்றே உரியது என்றும் இச்செய்தி காட்டுவதாகும். திருத்தொண்டர் புராணத்துட் கண்ட சிவனடியாரிற் பலர் குடிப்பிறப்பு ஏதுவாகச் சிவனருட் பேற்றுக்கு விலக்காயினாரில்லை என்பது நன்கு தெளிவாகின்றது அறிக.

வியாசபாரதத்து வனபருவத்து உ0௬-வது அத்தியாய முதற்பத்து அத்தியாயங்களுள் போந்த "தருமவியாதர்" வரலாறு இத்திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் வரலாற்றுக்குப் பெரிதும் ஒத்துள்ளது காண்க. கௌசிகன் என்ற பெருந்தவசி யொருவன் மிதிலைநகரில் ஆட்டிறைச்சி விற்கும் வியாதனைக் கண்டு அவன்பால் தருமோபதேசமும் ஞானபரிபாகமும் பெற்றசெய்தி அதன்கண் வந்துள்ளதனை அறிஞர் கண்டுகொள்வார்களாக.

இனி இப்பதிப்பாசிரியர் தம் குறிப்பில் "உரைகளின் இறுதியில் எழுதப்பெற்றுள்ள 'அம்பலவாண குருவே துணை,' 'நமச்சிவாய குருவே துணை' என்ற தொடர்களினால் இவ்வுரையாசிரியர் திருவாவடுதுறை யாதீனத்தைச் சேர்ந்தவர் என்று கருதலாம்," என்றும் தெரிவித்துள்ளார்கள். இவர்கள் குறிப்பின்படி நமச்சிவாய குரு என்பார், திருவாவடுதுறையாதீனத்து முதற் குரவராவார் என்பதும், அம்பலவாண குரு என்பார்,

> "உரவுதச மார்க்கசித்தி சிவாச்சிரம முபதேச முபாய நிட்டை
> தெருளுநிட்டை விளக்கமே பஃறொடை சிகாமணியதிசய மாலை
> திருநமச்சி வாயதுதி யெனஞான நூல்பத்துஞ் சிறப்பச் செய்தே
> அருள்குருவாய்த் துறைசையம ரம்பலவா ணன்றிருத்தா—
> ளணுகி வாழ்வாம்"

என்று போற்றப்பட்ட பெரியா ரென்பதும் தெரிந்து கொள்ளலாம். ஆகவே இப்பெரியார்களின் வழிவந்தவர் பொழிப்புரையாசிரியராதலின் அவர் கூற்றில் ஐயப்பாடு கொண்டு மாறுபட்டதென ஒதுக்கி விடுதல் பொருத்தமாதலில்லை வழிவழிவந்த சைவாசாரிய மரபுச் செய்தியையே அவர் கூறினாரென்பதும் அது பன்னூறாண்டுகளாக நிலைபெற்ற வழக்காறு என்பதும் கூர்ந்தறிதற்பாலன. இப்பழைய பொழிப்புரையை வெளியிட்டுதவிய பதிப்பாசிரியர்க்குத் தமிழ்நாட்டறிஞர் என்றும் நன்றியறிதலுடையராவ ரென்பது ஒருதலை.

# எழுத்து ஆக்கம்*

[மயிலை, சீனி. வேங்கடசாமி]

பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னே மனிதன் பேசக் கற்றுக்கொண்டான். அஃதாவது, தன் எண்ணங்களைப் பேச்சின் மூலமாகப் பிறருக்குத் தெரிவிக்கக் கற்றுக்கொண்டான். மனிதன் கற்றுக்கொண்ட பேச்சு அவனை மிருகத்தன்மையி லிருந்து மனிதத் தன்மைக்கு உயர்த்திவிட்டது. பின்னும், பல காலம் சென்ற பிறகு மனிதன், தன் எண்ணங்களையும் கருத்துக் களையும், எழுத்து மூலமாகப் பிறருக்குத் தெரிவிக்க முயற்சி செய் தான் முயற்சிசெய்து அதில் வெற்றி அடைந்தான் எழுத்துக் களைக் கண்டுபிடித்து அதன் மூலமாகத் தன் கருத்துக்களை மற்ற வர்களுக்குத்தெரிவிக்கக் கற்றுக்கொண்ட வித்தையானது, மனி தனை மிக உயர்ந்த நாகரிகத்தை அடையச் செய்துவிட்டது. எழுதப்படிக்கக்கற்றுக்கொள்ளாமல், வெறும்பேச்சோடுமட்டும் நின்றுவிட்டிருந்தால், இப்போது மனிதன் அடைந்திருக்கிற உயர்ந்த நாகரிக நிலையை அடைந்திருக்க முடியாது.

எழுத்தைக் கண்டுபிடித்த ஆதிகாலத்து மனிதர், இப்போது உலகத்திலே வழங்குகிற ஒலி எழுத்துக்களைக் கண்டுபிடிக்க வில்லை. அஃதாவது, தனித்தனியாக ஒவ்வொரு ஒலிக்கும் ஒவ்வொரு எழுத்தைக் கண்டுபிடிக்கவில்லை. உருவங்களைச் சித்திரம் வரைவதுபோல வரைந்து அவற்றின் மூலமாக அக் காலத்து மனிதர் தமது எண்ணங்களை மற்றவர்களுக்குத் தெரி வித்து வந்தார்கள். ஆதிகாலத்திலே சித்திர எழுத்துக்களைப் பல நாட்டினரும் எழுதிக்கொண்டிருந்தார்கள் என்பதற்கு ஆர்க்கி யாலஜி, எபிகிராபி சான்றுகள் கிடைத்திருக்கின்றன. எகிப்து தேசத்திலும் சீன தேசத்திலும் அமெரிக்காக் கண்டத்து மெக்ஸிகோ நாட்டிலும் நமது இந்தியா தேசத்திலும் ஆதிகாலத் தில் ஓவிய எழுத்துகள் வழங்கிவந்தன.

நமது இந்தியா தேசத்திலே சிந்து நதிக்கரையிலே மொ ஹஞ்சதாரோ ஹாரப்பா என்னும் பெயருள்ள இரண்டு நகரங்கள் சுமார் 6 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே சிறந்த நாகரிகம் உள்ள நகரங்களாக இருந்தன. இந்த நகரங்கள் சுமார் 4 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மண்ணில் புதைந்து மறைந்து விட்டன. அண்மைக் காலத்திலே இந்திய அரசாங்கத்து ஆர்க்கி யாலஜி இலாகா அதிகாரிகள் இந்த இடங்களைத் தோண்டிக் கிளறிப் பார்த்தபோது அங்கே பலப்பல பொருள்களைக் கண்

---

* அகில இந்திய 'வானொலியில், சென்னை நிலையத்தில் ஒலிபரப்பப் பட்டது. இசைவுபெற்று வெளிவருகிறது.

டெடுத்தார்கள். அப்படிக் கிடைத்த பொருள்களில், ஒருவகையான சித்திர எழுத்துக்கள் எழுதப்பட்ட முத்திரைகளும் ஏராளமாகக்கிடைத்தன இதனால் 4 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இந்தியாவில் சித்திர எழுத்துக்கள் வழங்கிவந்தன என்பது உறுதியாகத் தெரிகிறது.

மொஹஞ்சதாரோவில் காணப்பட்ட சித்திர எழுத்துக்களைப் படித்து அதன்பொருளைக் கண்டுபிடிக்க முயற்சி செய்த, பூனா பல்கலைக்கழகத்துப் பேராசிரியர் ஹீராஸ் பாதிரியார் அவர்கள், இந்தச் சித்திர எழுத்துக்கள் திராவிட (தமிழ்) மொழியுடன் தொடர்புமுடையன என்று கூறுகிறார். சில சித்திர எழுத்துக்கள், குறள்வெண்பா வாக அமைந்திருக்கின்றன என்றும் கூறுகிறார். ஆனால், இவர் கருத்தை புராதன புதை பொருள் ஆராய்ச்சிக்காரர்கள் இன்னும் ஏற்றுக்கொள்ளவில்லை மிகப் பழைய காலத்தில் தமிழ்நாட்டிலும் சிதத்திர எழுத்துகள் வழங்கிவந்தன என்றும், அந்த எழுத்துக்களுக்குக கண் எழுத்து என்றும் ஓவிய எழுத்து என்றும் உரு எழுத்து என்றும் வேறு பெயர்கள் உண்டு என்றும் தமிழ் நூல்களிலிருந்து தெரிகிறது.

> "காணப்பட்ட உருவம் எல்லாம்
> மாணக் காட்டும் வகைமை நாடி
> வழுவில் ஓவியன் கைவினைபோல
> எழுதப் படுவது உருவெழுத் தாகும்."

என்று ஒரு பழைய இலக்கணச் சூத்திரம் கூறுகிறது.

சித்திர எழுத்துக்கள், எழுதுவதற்குச் சிரமமாக இருந்தது ஓவிய எழுத்து என்றும், கோடு கருத்துக்களைத் தெளிவாகவும் முழுமையாகவும் தெரிவிக்க முடியாதனவாக இருந்தன. ஆகவே காலக்கிரமத்தில் புதுப்புது எழுத்துக்கள் கண்டுபிடிக்கப்பட்டுக் கடைசியாக இப்போது வழங்குகிற ஒலிஎழுத்துக்கள் கண்டு பிடிக்கப்பட்டன. ஒலிஎழுத்துககள் எழுதுவதற்குச் சிரமம் இல்லாமலும் கருத்துக்களை முழுதும் தெரிவிக்கக் கூடியவைகளாகவும் இருக்கின்றன.

இந்தியா தேசத்தில் பழைய காலத்திலே சிறப்பாக வழங்கி வந்த ஒலி எழுத்துக்கள் இரண்டு. அவை, **கரோஷ்டி**, **பிராமி** என்பவை. கரோஷ்டி, இந்தியாவில் வடமேற்குப் பககத்தில்மட்டும் வழங்கி வந்தது. பிராமி எழுத்து வட இந்தியா முழுவதும் வழங்கி வந்தது பிராமி எழுத்தின் உற்பத்தியைப் பற்றிச் சில கதைகள் கூறப்படுகின்றன. பிரமா கண்டு பிடிததது பிராமி எழுத்து என்பர் சிலர். ரிஷப தீர்த்தங்கரரின் மகளான பிராமி என்பவள் கண்டுபிடித்தது பிராமி எழுத்து என்பர் ஜைனர்கள். கௌதம புத்தர், சிததார்த்த குமாரன் என்னும

பெயரையுடைய சிறுவராக இருந்தபோது பிராமி எழுத்தைக் கண்டுபிடித்தார் என்று க்ஷேமேந்திரர் என்பவர் தாம் இயற்றிய புத்த ஜனனம் என்னும் நூலிலே கூறுகிறார். இந்தக் கதைகளை உண்மையான சான்றுகளாகக் கொள்ளாவிட்டாலும், இவற்றிலிருந்து ஒரு உண்மை தெரிகிறது அஃது என்னவென்றால், வட இந்தியாவில் பண்டைக்காலத்தில் பெரிதும் வழக்காற்றில் இருந்துவந்த எழுத்து பிராமி எழுத்து என்பதே. பிராமி எழுத்து கி மு. 5-ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்து வழங்கப் பட்டது.

தமிழ் நாட்டிலே கி மு 3-ம நூற்றாண்டுக்கு முந்திய காலத்திலே வழங்கி வந்த தமிழ் எழுத்து இன்னது என்று இப்போது அறிய முடியவில்லை. ஆனால், ஏதோ ஒருவகையான எழுத்து வழங்கி வந்தது என்பதை உறுதியாகக் கூறலாம். பாண்டிய நாட்டிலே தலைச்சங்கம இடைச்சங்கம் கடைச்சங்கம் என்று மூன்று சங்கங்கள் ஒன்றின்பின் ஒன்றாக ஏற்படுத்தப்பட்டு முத்தமிழ்நூல்கள் ஆராயப்பட்டன என்று வரலாறு கூறுகிறது. அந்தச் சங்கங்களிலே சிவபெருமான், முருகக் கடவுள், கிருஷ்ணன், குபேரன் முதலான கடவுள்கள் அங்கத்தினராக இருந்தார்கள் என்பதையும், அந்தச் சங்கங்கள் பல ஆயிரக் கணக்கான ஆண்டுகள் நடைபெற்றுவந்தன என்பதையும் மிகைபடக்கூறல் என்று ஒதுக்கிவிடலாம். ஆனால், சங்கங்கள் இருந்தன என்பதையும் அவற்றில் முத்தமிழ்நூல்கள் ஆராயப்பட்டன என்பதையும் ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. அந்தச் சங்கங்களிலே தமிழ் நூல்கள் ஆராயப்பட்டன என்றால், அதற்கு ஏதோ ஒருவகையான எழுத்துக்கள் இருந்திருக்கவேண்டும் அல்லவா? அந்த எழுத்து இனனது என்பது இதுவரையில் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆனால், கி. மு. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 3-ஆம் நூற்றாண்டு வரையில தமிழ் நாட்டிலே வழங்கிவந்த எழுத்து பிராமி எழுத்துத்தான் என்பதற்குச் சிறிதும் ஐயம் இல்லை. ஏனென்றால், இதற்கு ஆர்க்கியாலஜி, எபிகிராபி சான்றுகள் கிடைத்திருக்கின்றன.

வட இந்தியாவில் வழங்கிவந்த பிராமி எழுத்து தமிழ்நாட்டிற்கு எப்படி வந்தது? பிராமி எழுத்தைத் தென் இந்தியாவிலே பரவச்செய்தவர்கள் பௌத்தபிக்ஷுக்கள் ஆவர். கி மு. 3-ஆம் நூற்றாண்டில் இந்தியாவை அரசாண்ட அசோக சக்கரவர்த்தி, பௌத்தமதத்தைப் பிரசாரம் செய்வதற்காகப் பல நாடுகளுக்கும் பௌத்தபிக்ஷுக்களை அனுப்பினார். அவ்வாறு அனுப்பப் பட்ட பிக்ஷுக்கள் இந்தியாவில் உள்ள பல நாடுகளுக்கும் சென்று பௌத்தமதப்பிரசாரம் செய்தார்கள். அவர்கள் தம்

பௌத்தமதக் கொள்கைப்படி அந்தந்த நாட்டுத் தாய்மொழி யிலே பௌத்தமதக் கொள்கைகளைப் பிரசாரம் செய்துவந்தார் கள் என்றாலும், அவர்கள் எல்லா நாடுகளிலும் ஒரேவிதமாகப் பிராமி எழுத்தே வழங்கி வந்தார்கள். இவ்விதமாகப் பௌத்த பிக்ஷுக்களால் முதல்முதல் இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் பிராமி எழுத்து புகுத்தப்பட்டு வழக்காற்றில் வந்தது. அன்றி யும் அசோகச் சக்கரவர்த்தி, தென் இந்தியா உட்பட இந்தியா முழுவதிலும் ஆங்காங்கே பல இடங்களில் அரச சாசனங்களைக் கல்வெட்டுகளில் எழுதி அமைத்திருக்கிறார். அந்தச் சாசனங்கள் இப்போதும் இருக்கின்றன. அந்தச் சாசனங்கள் பிராமி எழுத் தினால் எழுதப்பட்டிருக்கின்றன இதனால், அசோக சக்கர வர்த்தி காலத்திலே, அதாவது கி. மு. 3-ஆம் நூற்றாண்டிலே பிராமி எழுத்து தென் இந்தியாவிலும் வழங்கப்பட்டது என்பது நன்கு விளங்குகின்றது.

கி. மு. 3-ஆம் நூற்றாண்டு முதல கி பி. 3-ஆம் நூற்றாண்டு வரையில், சுமார் 600 ஆண்டுகளாகப் பிராமி எழுத்து தமிழ்நாட் டில் வழங்கிவந்தது இதற்கு எபிகிராபி சான்றுகள் தமிழ் நாட்டிலே, முக்கியமாகப் பாண்டிய நாட்டிலே மலைக்குகைகளி லும், மலைப்பாறைகளிலும் காணப்படுகின்றன. அழகர்மலை, கழுகுமலை, நாகமலை, சித்தர்மலை, திருப்பரங்குன்றம், கொங்கர் புளியங்குளம், முத்துப்பட்டி, அரிட்டாபட்டி, குன்னக்குடி, மருகால்தலை, ஆறுநாட்டார்மலை முதலிய இடங்களில் காணப் படும் தமிழ்ச்சாசனங்கள் பிராமி எழுத்தினாலே எழுதப்பட் டவை. இவைகளைத்தவிர வேறு புதிய எபிகிராபி சான்று இப் போது கிடைத்திருக்கிறது புதுச்சேரிக்குத் தெற்கே 2 மைல் தூரத்தில் கடற்கரையோரத்திலே அரிக்கமேடு என்னும் ஒரு மேடு இருந்தது. 5 ஆண்டுகளுக்கு முன்பு இந்திய ஆர்க்கியாலஜி இலாகா அதிகாரிகள் இந்த மேட்டைக் கிளறித தோண்டிப் பார்த்தார்கள். இங்கிருந்து பல பொருள்கள் அகற்றப்பட்டன. அப்பொருள்களுடன், பிராமி எழுத்தில் எழுதப்பட்ட இவை தமிழ்மொழியாக இருக்கின்றன. அரிக்கமேடு, இற்றைக்கு 1800 ஆண்டுகளுக்கு முன்னே, அதாவது கி. பி. 2-ஆம் நூற் றாண்டில் சிறந்த துறைமுகப்பட்டினமாக இருந்தது என்று ஆர்க்கியாலஜி இலாகா ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். இந்தச் சான்றுகளினாலே, கி. மு 3-ஆம் நூற்றாண்டு முதல் கி பி. 3-ஆம் நூற்றாண்டு வரையில் தமிழ் நாட்டிலே தமிழர் பிராமி எழுத்தை வழங்கிவந்தார்கள் என்பது ஐயம் இல்லாமல் தெரி கிறது. தமிழர் பழைமையாக எழுதியிருந்த பழைய எழுத்தைக் கைவிட்டு புதிதாகப் பிராமி எழுத்தை எழுதத்தொடங்கிய

போது, தமிழ் மொழிக்கே சிறப்பாக உள்ள ள, ழ, ற, ன என்னும் எழுத்துக்கள் பிராமி எழுத்தில் இல்லாதபடியினால், இவ்வெழுத்துக்களைப் பழைமையாக வழங்கிவந்த எழுத்துக்களில் இருந்தபடியே வழங்கிவந்தார்கள்போலும்.

சுமார் கி. பி. 3-ஆம் நூற்றாண்டிலே தமிழ் நாட்டிலே பிராமி எழுத்து மறைந்து வட்டெழுத்து என்னும் புதுவகையான எழுத்து வழங்கத் தொடங்கிற்று வட்டெழுத்தும், பிராமி எழுத்திலிருந்து உண்டானதுதான். அந்தக்காலத்தில் பனையோலையும் எழுத்தாணியும் எழுதுகருவிகளாக இருந்தன. பிராமி எழுத்தைப் பனையோலையில் எழுத்தாணியால் எழுதும்போது, அவ்வெழுத்தின் உருவம் மாறுதல் அடைந்து கடைசியில் வட்டெழுத்தாக மாறிவிட்டது. பண்டைக்காலத்தில் சரநாடு என்னும் பெயருடன் தமிழ்நாடாக இருந்து இப்போது மலையாள நாடாக மாறிப்போன கேரள நாட்டிலே முற்காலத்தில் வழங்கி வந்த கோலெழுத்து என்பதும் வட்டெழுத்தின் திரிபேயாகும் வட்டெழுத்து தமிழ் நாட்டில் கி. பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 10-ஆம் நூற்றாண்டு வரையில் வழங்கிவந்தது. பிறகு வட்டெழுத்து மறைந்து இப்போது வழக்காற்றில் இருந்து வருகிற கிரந்த எழுத்து வழங்கி வருகிறது.

கிரந்த எழுத்தை உண்டாக்கினவர்கள் தென்னாட்டில் இருந்த பௌத்தரும் ஜைனரும் ஆவர். பௌத்தரும் ஜைனரும் தங்கள் மதநூல்களை மாகதி, அர்த்தமாகதி என்னும் பிராகிருத மொழிகளில் எழுதியிருந்தார்கள். அவர்கள் தமிழிலே தனித் தமிழ் நூல்களை எழுதியதோடு, தமது மதச்சார்பான நூல்களை பிராகிருதம், சம்ஸ்கிருதம், தமிழ் என்னும் மொழியில் உள்ள சொற்களைக் கலந்து மணிப்பிரவாள நடையில் வசன நூல்களை எழுதினார்கள். மணிப்பிரவாள நூல்களை எழுதுவதற்கு, தமிழில் க்ஷ, ஜ, ஷ, ஹ, ஸ முதலான எழுத்துக்கள் இல்லாதபடியினாலே, இவ்வெழுத்துக்களை எல்லாம் அமைத்துக் கிரந்த எழுத்து என்னும் ஒருவகை எழுத்தைக் கண்டுபிடித்து, அந்த எழுத்தினாலே மணிப்பிரவாள நூல்களையும் பிராகிருத சம்ஸ்கிருத நூல்களையும் எழுதினார்கள். இந்தக் கிரந்த எழுத்தையும் அவர்கள் பிராமி எழுத்தில் இருந்துதான் உண்டாக்கினார்கள்.

இவ்வாறு பௌத்த ஜைனர்களாலே உண்டாக்கப்பட்ட கிரந்த எழுத்து முதலில் அந்த மதத்தினரால் பயிலப்பட்டு வந்தது. பின்னர், பிற்காலத்துச் சோழ அரசர்கள் இந்தக் கிரந்த எழுத்தை ஆதரிக்கத் தொடங்கினார்கள். ஆகவே, கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் சோழநாட்டை அரசாண்ட ராஜராஜன்

(முதலாவன்) பாண்டியநாட்டை வென்று அந்த நாட்டிலும் கிரந்த எழுத்தை வழங்கத்தொடங்கினான் என்பதற்கு எபிகிராபி சான்று இருக்கிறது. ராஜராஜசோழன் காலத்திலே, பாண்டி நாட்டில் வழங்கிவந்த வட்டெழுத்து மறைந்து கிரந்த எழுத்து வழங்கத் தொடங்கியது. இந்தக் கிரந்த எழுத்துக் கி. பி. 10-ஆம் நூற்றாண்டுமுதல் இப்போதும் தமிழ்நாட்டில் வழங்கி வருகின்றது.

கி. மு. 3-ஆம் நூற்றாண்டில் இருந்து பிராமி எழுத்து தமிழ் நாட்டிலே வழங்கத் தொடங்கி, அதுவே காலக்கிரமத்தில் வட்டெழுத்தாகவும், கோலெழுத்தாகவும், கிரந்தஎழுத்தாகவும் வெவ்வேறு உருவம் அடைந்து இன்றளவும் வழங்கிவருகிறது.

தமிழ்எழுத்து மட்டுந்தான் பிராமி எழுத்திலிருந்து உண்டாயிற்று என்று நினைக்கவேண்டாம். தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்தி, மராட்டி, வங்காளி, தேவநாகிரி முதலிய எழுத்துக்கள் எல்லாம் பிராமி எழுத்திலிருந்தே உண்டானவை. ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள எல்லா மொழி எழுத்துக்களும் லத்தீன் எழுத்து எவ்வாறு தாய் எழுத்தாக இருந்ததோ அது போன்று, இந்தியமொழியில் உள்ள எழுத்துக்களுக்கெல்லாம் தாய் எழுத்தாக இருந்தது பிராமி எழுத்தேயாகும்.

## பெயர் அணி விழா அழைப்பு

ஆணுக்கு ஆணழகாய், பெண்ணுக்குப் பெண்ணரசாய்;
நாலெட்டுத் திங்கள்களாய் நான்மகிழ்ந்து வளர்கையிலே,
அம்மை அப்பா தரும் முத்தம், அன்பணைப்பில் பங்குகொள,
இம்மாதம் (மாசி) நாலாம் நாள் என் **தம்பி பிறந்துவிட்டான்!**
பொடிப்பயல் என் சுதந்திரத்தில் போட்டியென வந்துவிட்டான்!
ஆயினும் யான் அவனுடனே அமராடப் போவதில்லை;
என் தம்பி, என்செல்வம், இன்பமணி, வீரனுடன்
அன்பு, கலை, தமிழ், பொறுமை அனைத்தும் எம் இலட்சிமாய்க்
கொண்டெங்கள் வாழ்க்கையினை விளையாட்டாய் நடத்திடுவோம்!
அன்னவனைப் பெயர் சொலி நான் அழைத்திடவே பொருத்தமு
அழகு தமிழ்ப் பெயர் ஒன்றை என் அப்பா சூட்டிடுவார். [ள்ள
அந்த விழா (7-3-51) கண்டிடவும், ஆண்டு நூறு என் தம்பி
வாழ்ந்திடவே, **வாழ்த்துரைகள்** வழங்கிடவும் உரிமையுடன்
வாருங்கள்! வாருங்கள்! அக்கா-நான் அழைக்கின்றேன்!

# முத்தமிழ்விழா வரவேற்புரை*

[திரு. கா. பொ. இரத்தினம் அவர்கள், B. A. (Hons), B. O. L.]

ஓரின மக்களுடைய சிறந்த நாகரிகம் அம்மக்கள் பேசும் மொழியின் சிறப்பையும் அவர்களுடைய கலைஞானப் பெருக்கையும் பொறுத்ததென்பதை யாவரும் அறிவர். நாகரிகத்துக்குக் காரணமான உயர்ந்த பண்பாடு கலைஞானத்தாலே உண்டாவது. இப்பண்பாட்டை வளம்பெறச் செய்யும் பல கலைகளுள்ளும் சிறந்தன இன்பக்கலைகள் அல்லது அருங்கலைகள் எனப்படும் இலக்கியம், இசை, நாடகம், சிற்பம், ஓவியம் முதலியனவாகும்.

## முத்தமிழ்க் கலைகள்

இவற்றுள்ளும், மொழியுடன் இணைந்த இலக்கியம், இசை, நாடகம் என்பனவே மிகச் சிறந்தன. மொழிஅறிவு மக்களை எவ்வாறு விலங்குகளினின்றும் பிரித்து உயர்த்துகிறதோ அவ்வாறே இலக்கியம், இசை, நாடகம் எனும் கலைகள் இவற்றைப் பயின்றோரை ஏனைய மக்களினின்றும் பிரித்து உயர்த்திப் பொலியச் செய்கின்றன. மக்கள் — இன்பவாழ்வை — அமர வாழ்வை வாழுதற்கு இம்மூன்று கலைகளும் இன்றியமையாதன. இவை சிறந்தோங்கி விளங்கும் நாட்டிலே ஏனைய கலைகள் யாவும் மலர்ந்து விளங்கி நற்பயனை நல்கும். இம்மூன்று கலைகளும் ஒன்றாக வளர்ந்து பொலிந்தாற்றான் மொழிவளர்ச்சியும் மக்கள் உளவளர்ச்சியும் சிறக்கும் இந்தப் பேருண்மையினை அறிந்து இவற்றை ஒன்றாகச் சேர்த்து வளர்த்த தனிப்பெருமை தமிழ் இனத்துக்கே உரியது. இம்மூன்றையும் தமிழ்மக்கள் முத்தமிழ் என வழங்கினர். தமிழ் வளர்த்த சங்கங்கள் இம்முத்தமிழினையும் நன்கு வளர்த்தன. கிறித்து பிறப்பதற்கு முன்னரே முத்தமிழ்க்கலைகள் தமிழ்நாட்டிலே சிறந்த வளர்ச்சியை அடைந்திருந்தன. தமிழ்ப்புலவர்பலர் முத்தமிழ்ப் புலவர்களாக விளங்கினர். இசையிலும் நாடகத்திலும் ஈடுபட்ட புலவர்கள் நெடும்பல்லியத்தனார், முதுகூத்தனார், மதுரைத் தமிழ்க்கூத்தனார் முதலிய காரணப்பெயர்களைப் பெற்றார்கள். பல முத்தமிழ் இலக்கியங்களும், இலக்கணங்களும் இயற்றப்பட்டன. இளங்கோவடிகள் பதினெட்டு நூற்றாண்டுகட்கு முன்னர் முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தை இயற்றி முத்தமிழை என்றும் நின்று நிலவச்செய்தார்.

* கொழும்புமாநகரிலே இலங்கை வானொலித் தமிழ்க்கலைமன்றம் எடுத்த முத்தமிழ்விழாவில் நிகழ்த்திய உரையைத் தழுவியது.

அக்காலத்திலே தமிழ்மக்கள் இலக்கியங்களை ஆர்வத்துடன் படித்தார்கள்: இசைவிருந்துகளையும் நாடகக்காட்சிகளையும் அனுபவித்தார்கள். "பாடல் ஓர்த்தும் நாடக நயந்தும்," என்று பட்டினப்பாலையும், "பண்கனியப் பருகிப் பயனுடைகம் கண்கனியக் கவர்ந்து உண்டு," என்று சீவகசிந்தாமணியும் கூறுவன காண்க.

"சங்கத்தமிழ் மூன்றுந்தா"

இடைக்காலத்திலே தமிழ்நாடு இடைக்கிடையே அன்னியர் ஆட்சிக்குட்பட்டதாலும் பிற காரணங்களாலும் முத்தமிழ் வளர்ச்சி குன்றியது. எனினும், அவ்வக்காலப் பகுதியிலே தோன்றிய தமிழ்ப்பெரும்புலவர்கள், முத்தமிழ்வளர்ச்சி இன்றியமையாதது என்பதைத் தமது நூல்களினூலே நன்கு புலப்படுத்தியுள்ளனர். பெருங்கதையும், சீவகசிந்தாமணியும் ஆடல் பாடல்களை அழகாக வருணித்துள்ளன. ஔவையார "சங்கத்தமிழ் மூன்றுந் தா" என்று கடவுளை வேண்டினார். கம்பர் தமது காவியத்தில் அவையடக்கங் கூறும்பொழுது, "முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவிகளுக்கே" தாமுரைப்பதாகப் பாடினார். தமிழ்மக்கள் தமது ஓய்வுநேரங்களை இலக்கியம், இசை, நாடகங்களி லீடுபடுத்தி இன்பமடைய வேண்டுமென்றுங் கம்பர் கருதினார். இக்கருததை இராமாயணத்தில் பல இடங்களிலே குறிப்பிட்டுள்ளார் "பருந்தொடு நிழல் சென்று அன்ன இயல் இசைப்பயன் துய்ப்பாரும், மருந்தினும் இனிய கேள்வி மாந்துவாரும்" எனும் அவர் கூற்றை ஆராய்ந்து பாருங்கள். நிற்க,

சென்ற நூற்றாண்டிலே தமிழ்நாட்டில் ஏற்பட்ட ஆங்கில மோகத்தாலும், அதற்கு முந்திய நூற்றாண்டுகளிலே சமயம், அரசியல், பொருளாதாரம் முதலிய துறைகளிலே நிகழ்ந்த மாறுதல்களாலும் தமிழ்இலக்கியமும், தமிழ்இசையும், நாடகமும் போற்றுவாரற்றுக் கீழ்நிலை யடைந்தன.

தாய்மொழி இலக்கியத்தின் தனிமாண்பு

நமது மொழியிலுள்ள இலக்கியச்செல்வங்களை நம்மில் எத்தனைபேர் இப்பொழுது அனுபவிக்கிறார்கள்? இந்த உலகத்திலே ஏறக்குறைய மூவாயிரம் மொழிகள் வழக்கிலிருக்கின்றன இவற்றுட் பதினைந்துமொழிகளே திருந்திய மொழிகளாகும். இம்மொழிகளுள் பேச்சுவழக்கில் இருப்பவற்றுள் எல்லாம் மிகப் பழையது, எமது தமிழ்மொழியேயாகும். இத்தகைய தனிப்பெருமைவாய்ந்த மொழியினைத் தாய்மொழியாகக்

கொண்டு வாழும் தமிழ்மக்கள் யாவரும் இம்மொழியிலுள்ள இலக்கியங்களைப் படித்துப் பயன்பெறக் காணேம். தன் தாய் மொழியிலுள்ள இலக்கியத்தைக் கற்காத ஒருவன், வேறெவற்றைக் கற்றாலும் நிரம்பிய கல்விமானாகிவிட முடியாது என்று இப்பொழுது பேராசிரியர் கூறுகிறார்கள். கல்வியின் நோக்கம் நன்கு நிறைவேறவேண்டுமெனில், மக்கள் சிறந்த இலக்கிய நூல்களைக் கற்றல்வேண்டுமெனச் சிக்காக்கோ பல்கலை கழகத்தலைவர் டாக்டர் ரோபேட், எம். கட்சின்ஸ் கூறிச் சிறந்த இலக்கிய நூல்களை அடக்கி ஒரு பட்டியலும் அமைத்திருக்கிறார். இந்த உண்மைகளை நமது முன்னோர் நன்கறிந்திருந்தனர். நாம் கட்டாயமாகப் படிக்கவேண்டிய நூல்கள் சிலவற்றை அவர்கள் பழமொழிகளை, பாட்டுக்கள் வாயிலாக எடுத்துரைத்துள்ளனர்.

"நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி," எனும் பழமொழி நாலடியாரையும் திருக்குறளையும் படிக்கவேண்டுமென்பதைப் புலப்படுத்துகிறது "தேவர் குறளும் திருநான்மறை முடிவும்" எனும் ஔவையார் பாடலும், "வள்ளுவர் சீரன்பர் மொழி" என்றும், "திருத்தக்கதேவர் சிந்தாமணி" என்றும் தொடங்கும் பாட்டுக்களும், தமிழ்மக்கள் யாவரும் படித்துப் பயனடைய வேண்டிய நூல்களைக் குறிக்கின்றன. திருக்குறள், சிலப்பதிகாரம், கம்ப இராமாயணம் எனும் மூன்றையும் தமிழ் மக்கள் நன்கு படிக்கவேண்டுமென்று பாரதியார் உரைத்துளார். நம் முன்னோர் திருப்பித் திருப்பிக் கூறிய இந்தப் பொருளுரைகளைத் தமிழமக்கள் சிறிதேனும் போற்றுகிறார்களா?

உலகப் பொதுநூல்

தமிழ்மக்களுக்கும் தமிழ்மொழிக்கும் பெருமையளிக்கும் உலகப் பெருநூலாகிய தெய்வத் திருக்குறளை எத்தனை தமிழர்கள் முறையாகக் கற்கிறார்கள். இத்திருக்குறளைக் கற்பதற்குக் காந்தியடிகள் தமிழினைக் கற்றார்; பல்வேறு நாட்டு மக்கள் தத்தம் மொழியிலே அதனை மொழிபெயர்த்தார்கள். ஆனால், தமிழ்மக்களாகிய நாம் என்ன செய்கின்றோம்? இக் கொழும்புமாநகரில் வாழும் தமிழ்மக்களில் எத்தனைபேரிடம் திருக்குறட் புத்தகங்கள் உண்டு. ஆங்கிலங் கற்று, உயர்ந்த பதவிகளை அடைந்து வாழும் தமிழ்மக்களுடைய புத்தகப் பேழைகளில் ஆங்கிலநூல்கள் வாழும்; இலத்தீன் கிரேக்க நூல்கள் தூங்கும்; ஆனல், திருக்குறளை அவற்றுளே காணமுடியுமா? வள்ளுவர் வாக்கைப் படிக்கும் ஆற்றல் அப்பெரியார்களுக்கு இல்லாவிடில், டாக்டர் போப் ஆக்கிய மொழிபெயர்ப்பு நூலையாயினும் அவர்கள் படிக்கலாமே!

உலகத்தவர் யாவரும் சிறந்த நூலெனப் போற்றும் திருக்குறளையேனும் படித்தறிய முயலாது வாழும் தமிழ்மக்கள் பாரதியார் பாடியபடி "நாமமது தமிழரெனக் கொண்டு" வாழ்பவர்களே யாவார்கள். இனியாகுதல் தமிழ்மொழியிலுள்ள சிறந்த இலக்கியங்களைப் போற்றிக் கற்கத் தமிழ்மக்கள் யாவரும் முயல்வார்களாக. தமிழர்களுடைய வீட்டிலே திருக்குறளும், அவர்களுடைய உள்ளத்திலே திருக்குறள்காட்டும் சீரிய நெறியும் திகழ்ந்தாற்றான் தமிழினம் தலைநிமிர்ந்து நிற்கலாம்; தாழ்வின்றி வாழலாம.

## கர்நாடக சங்கீதமும் தமிழிசையும்

இனித், தமிழிசை பற்றியும் சில கூறல் இயைபுடைத்து. தமிழிசை என்றால் இப்பொழுது பலருக்கு விளங்காது. கர்நாடக சங்கீதமென்றால் நன்கு புரியும் இந்தக் கர்நாடகம் எனும் பெயரே ஒரு 'கருநாடகம்'தான். தமிழன் தன்மானத்தை இழந்துவிட்டான் என்பதைத்தான் நமது இசையையும் கர்நாடக சங்கீதம் என்று இன்றும் நாம் வழங்குவதும், நம் பாடகர்கள வாயிலாக அளவின்றிப் பிறக்கும் தெலுங்குப் பாடல்களும் காட்டுகின்றன. கர்நாடக சங்கீதம் எனுஞ் சொற்றொடர் பதின்மூன்றாம் நூற்றாண்டிலெழுந்த நூல்களிலேயே காணப்படுகிறது. கன்னட தேசத்தைக் குறிக்கும் கார்நாடு எனுந் தொடர் கர்நாடகமாயிற்றென்பர் மொழிநூலறிஞர்.

தெலுங்கு கன்னட மொழிகள் தோன்றுவதற்கு முன்னர் இசையால் இசைவளர்த்த தமிழ்மொழியின் இசையைப் பிறமொழிகளுக்கு அடிமைப்படுத்துவதும், தமிழர்கள் பொருளறியாது தெலுங்குப் பாடல்களைப் பாடுதலும் அழகாகாது. கி பி. பதினோம நூற்றாண்டிலே தெலுங்கர்களுடைய விசயநகர ராச்சியம் சிறந்து ஓங்கித் தமிழ்நாட்டையும் தன் ஆட்சிக்குட்படுத்திற்று. அதனால் தெலுங்கு மொழியின் ஆதிககம் எங்கும் ஏற்பட்டது. தெலுங்கர்களுடன் தெலுங்குப்பாடல்களும் தமிழ்நாட்டிற் புகுந்தன. இத்தெலுங்குப்பாடல்கள் மூலம் கர்நாடகசங்கீதம் நிலைபெற்று
கர்நாடகசஙகீததததுககும அடிபபடை தமிழிசையே என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்

## தமிழின் ஓசைநயம்

ஒரு மொழியின் ஓசைநயத்தை வளம்பெறச் செய்வன மோனை, எதுகை முதலிய தொடைகளும், பல்வேறுவகையான

யாப்புக்களுமேயாகும். தமிழிலேயுள்ள தொடைகளின்வகை 13708 எனத் தொல்காப்பியர் கணக்கிட்டார். இவ்வளவு தொகையான தொடைகளையும் தமிழிலுள்ள பாவும் பாவினங்களும் போன்ற அளவில்லாத யாப்பின் வகைகளையும் வேறெம்மொழியிலுங் காணமுடியாது தமிழின் ஓசைநயத்தின் சிறப்பைப் புலப் படுத்தவே, "பல்லோசைத்தமிழ்" என்று சம்பந்தரும், "ஒண்டீந் தமிழெ"ன்று மணிவாசகரும் கூறினார்கள். "வண்டு தமிழ்ப் பாட்டிசைக்குந்தாமரையே" என்று கம்பர் பாடித் தமிழின் இனிமையைச் சிறப்பாக வெளிப்படுத்தினார். 'யாமறிந்த மொழி களிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்குங்காணோம்" என்று பாரதியார் உணர்ச்சிததும்ப உண்மையை உரைத்தார். இத் தகைய இனிய தமிழ்—தீந்தமிழ்—இசைக்கு ஏற்றதன்று என்று யாரேனுங் கருதுவார்களா? "பண்ணாரின் தமிழாய்" என்பதும் "தமிழோடிசை கேட்கும் இச்சையால்" என்பதும் சுந்தரர் திருவாக்குக்கள் இவற்றின் பொருளைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். "தமிழோடிசைபாடல் மறந்தறியேன்," என்று பாடித் தமிழிசையினைவளர்த்த நாவுக்கரசர் வாழ்ந்த தமிழ்நாட்டிலே "தமிழோடிசை பாட அறியோம்," என்று சொல்லும் நிலைமை அன்றோ இன்று காணப்படுகிறது. அருந்தமிழின் வழக்கு நிகழாத இடங்களிலும் தமிழ்இசையினைப் பாடவேண்டும் என்று சம்பந்தர் கருதினார் என்பதைச் சேக்கிழார் கூறுகின்றார். ஆனால் இப்பொழுது நம் நாட்டிலே நாம் தெலுங்கோடிசை பாடுகிறோம். இந்த நிலைமை அடியோடு மாறவேண்டும். கர்நாடகசங்கீதம் என்ற பெயர் தோன்றுமுன் சிறந்துயர்ந்து விளங்கிய தமிழிசையினை வளர்த்தல் வேண்டும். உணர்ச்சிமிக்க தமிழறிஞர் சிலர் தமிழ்இசைப் பாடல்கள் பல இயற்றி இசைவகுத்தும் வகுப்பித் தும் வருகிறார்கள். இம்முயற்சி சிறக்குமாக.

நமது இசையினைத் தமிழிசையென்றே வழங்கவேண்டும்

இசைப்பாடல்களுக்கு இசைவகுக்கும் முறை தமிழ்மக்கள் பிறநாட்டாரிடமிருந்து புதிதாகக் கற்றுக்கொண்ட பாடமன்று. ஈராயிரம ஆண்டுகளுக்குமுன்—இந்தியாவில் இப்பொழுது பேச்சு வழக்கில் இருக்கும் மொழிகள்யாவும் தோன்றுமுன்— தமிழறிஞர்கள் இசைப்பாடல்களைப்பாடி இசைவகுத்து வைத் தார்கள். இதற்குப் பரிபாடல் என்னும் அரியநூல் சான்றாகும். இந்நூலிலுள்ள இசைப்பாடல்களைப் பாடினவர்களும் இப் பாடல்களுக்கு இசைவகுத்தவர்களும் பலராவார். அவர்களின் பெயர்கள் இன்றும் நின்று நிலவுகின்றன. இவர்களின் அடிச் சுவட்டைப் பின்பற்றிக் கர்நாடகசங்கீதம் எனும் பெயரை நீக்கி விட்டு நமது இசையினைத் தமிழ்இசையென்றே வழங்குதலும்

அதனைப் பல்லாற்றானும் வளரச்செய்தலும் இன்றியமையாதன. இந்த அரிய பணியினைச் சென்னைமாகாணத் தமிழ்இசைச் சங்கத்தார் செய்து வருகின்றனர். அவர்களுடன் இலங்கைத் தமிழ்மக்கள் ஒத்துழைத்தல் வேண்டும். இங்குள்ள தமிழ்த் தலைவர்கள் குருட்டாட்டமாடாது, தமிழ்மக்களுக்கிடையே புத்துணர்ச்சியையும் கிளர்ச்சியையும் உண்டாக்கத்தக்க முறையில் தமிழிசை விழாக்களையும் நடத்துதல் நன்று.

## தமிழ்நாட்டில் வண்டுகளும் நடனம் ஆடின

முத்தமிழில் மூன்றாவது நாடகத்தமிழாகும். நாடகத்தமிழுக்கு இசைத்தமிழ் இன்றியமையாதது. தமிழ்நாட்டிலே மயில், தும்பி, பூங்கொடி முதலியனகூட வண்டு, அருவி, மேகம், கலைமான் முதலியவற்றின் இசையுடன் நடனம் ஆடின என்று புலவர்கள் பாடியுள்ளார். இஃது அக்காலத்திலே தமிழ்மக்கள் நாடகத்தை எவ்வாறு போற்றி அனுபவித்தார்கள் என்பதையும் நாடகக்கலையின் வளர்ச்சியையும் நன்கு புலப்படுத்துகிறது.

> "கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப்
> பொங்கர் வண்டினம் நல்யாழ் செய்ய
> வரிக்குயில் பாட மாமயில் ஆடும்
> விரைப்பூம் பந்தர்"

எனும் அடிகளிலே ஒரு பூம்பந்தரிலே நடந்த இயற்கையான ஆடல் பாடல்களை அழகாக வருணித்திருக்கிறார் சாத்தனார் எனும் பெரும்புலவர். தமிழ்மக்கள் ஆடலையும் பாடலையும் ஒன்றாக வளர்த்தார்கள். தமிழ்நாட்டு வண்டுகளகூடத் தாளத்துடன் பாடித் தாளத்திற்கும் பாட்டின் சீர்க்கும் பொருந்தச் சிறைவிரித்தாடின என்று பரிபாடல் கூறுகிறது. இச்செய்தியைக்கூறும் பாடற்பகுதி "பண்கண்டு திறனெய்தாப் பண் தாளம் பெறப்பாடிக்கொண்ட இன்னிசைத்தாளம் கொளை சீர்க்கும் விரித்தாடும் தண்தும்பி இனம்" என்பதே.

## நாடகக்கலையின் நுட்பங்கள்

மாதவியின் ஆடலையும் பாடலையும் அழகாகச் சிலப்பதிகாரஞ் சித்திரிக்கிறது. மாதவியின் ஆடல்பாடலுக்கு உதவி புரிந்த ஆடலாசிரியன், இசையாசிரியன், கவிஞன் எனும் முத்தமிழ் ஆசிரியர்களின் அமைதியினையும், குழலோன் யாழோன், தண்ணுமையோன் முதலிய கருவியாளர்களின் அமைதியினையும் அந்நூல் திறம்பட உரைக்கிறது. அரங்கேற்று காதையிலே மாதவி பன்னீராண்டாகக் கற்ற ஆடல்பாடல்களை அரசன்முன் அரங்கேற்றிப் பரிசுபெற்ற வரலாறு விரிவாக வரையப்பட்

டுள்ளது. நாடக அரங்கிலே அவள் ஏறும்பொழுது, "வலக்கால் முன்மிதித்து ஏறி அரங்கத்தின் வலத்தூண் சேர்ந்தாள்," என்று நுட்பமாக இளங்கோவடிகள் அக்காலவழக்கை எடுத்துக் கூறியிருக்கின்றார். பாடுவோர், வாத்தியங்களை இயற்றுவோர், ஆடுவோர் நாடகமேடையில் இவ்வளவு இவ்வளவு தூரத்திலே நிற்கவேண்டுமென்றும் அக்காலத்திலே வகுத்து வைத்திருந்தார்கள். இதுமாத்திரமே நாடகக்கலை எவ்வளவு நுட்பமாக வளர்க்கப்பட்டதென்பதை நன்கு காட்டப் போதுமானது.

## ஆடலுடன் பாடல் சேரவேண்டும்

சீவகசிந்தாமணி சமணசமயக்கதையைக் கூறுவதாயினும் அதன் ஆசிரியர் தமிழ்நாட்டு இசை நாடகங்களின் நுட்பங்களையே அதிலும் எடுத்துக்கூறியுள்ளார். தேசிகப்பாவை எனும் பெண்ணினுடைய ஆடலை வர்ணிக்கும்பொழுது அவர் "பாடலோ டியைந்தஆடற் பண்ணமை கருவி மூன்றும், கூடுபு சிவணி நின்று குழைந்திழைந்து அமிர்தம் ஊற....ஆடுகின்றாள்" என ஆடல் பாடல் வாத்தியம் சேர்த்துக்கூறினார். ஆடல், பாடல், வாத்தியம் எனும் இம்மூன்றினையும் "கொட்டாட்டுப் பாடல்" என்று முற்காலமக்கள் வழங்கினர் என்பதைத் தேவாரங்கள் வெளிப்படுத்துகின்றன. இடைக்காலத்திலே நாட்டியக்கலை கணிகையர் கைப்பட்டுத் தன் பழம்பெருமையை இழந்ததாயினும் அஃது இக்காலத்தில் நன்கு விருத்தியடைதற்குரிய அறிகுறிகள் காணப்படுகின்றன. தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் நாட்டிய அரங்கேற்ற விழாக்கள் இப்பொழுது நிகழ்கின்றன. என்றாலும், இக்காலத்தில் நடனம் பயில்கிறவர்கள் இசைப்பயிற்சியிலே போதிய கருத்துச் செலுத்துகிறார்கள் இல்லை. இக்குறையை நீக்கிவிடவேண்டும்.

## முத்தமிழின் தொடர்பு

"பண்ணென்னும் பாடற்கு இயை பின்றேல்" எனும் வள்ளுவர் வாக்கும், "விளியாதான் கூத்துக் காண்டலும்" எனும் திரிகடுகப் பகுதியும் பாட்டுக்கு ஏற்றதாகஇசையும். இசைப்பாடலோடு நாடகமும் அமைந்திருக்க வேண்டும் எனும் பேருண்மையினை விளக்குகின்றன. அன்றியும் இவை முத்தமிழ்களின் தொடர்பையும் நமக்குத் தெள்ளத் தெளியக் காட்டுகின்றன. ஆகவே முத்தமிழ்களுக் கிடையிலுள்ள இந்தத் தொடர்பையும் அவற்றின் பெருமையையும் நாம் நன்கு அறிந்து அவற்றை மேலும் மேலும் வளர்க்க முயலுவோமாக. இது தான் தமிழினத்துக்கு நாம் செய்யுந் தொண்டுகளுள் சிறந்தது

# எது வேண்டும்?

[முத்தமிழ்மணி]

பண் - சிந்துபைரவி. தாளம் - ஆதி.

எது வேண்டுஞ் சொல் தமிழா?—தமிழா! (எது)

மதிசேர உயர்வுற்று வாழ்வதா?—விதி
வழிசென்று தாழ்வுற்றுச் சாவதா?—இதில் (எது)

1. கலைவேண்டு மென்பதுன் நோக்கமா?—விடு
தலைவேண்டு மென்பதுன் ஏக்கமா?—என்றும்
நிலையான தமிழ்நாட்டின் ஆக்கமா?—அன்றி
நிலையற்ற மடமையின் தேக்கமா?—இதில் (எது)

2. போராட்ட மேற்கொண்டு செல்வதா?—சொல்
மாருட்டம் செய்வோரைக் வெல்வதா?—இன்றி
சூதாட் டமேபுகுந் தழிவதா?—முழுச்
சோம்பலி னுடல் மாய்வதா?—இதில் (எது)

3. அழியாத கலை வேண்டுமா?—அன்றி
அலைமோதும் நிலை வேண்டுமா?—தீங்
கனிபோலுந் தமிழ் வேண்டுமா?—வெற்றுக்
காய் வேண்டுமா? பிஞ்சு
பூ வேண்டுமா?—இதில் (எது)

4 மலைபோன்ற திறம் வேண்டுமா?—போரில்
மார்தட்டும் உரம் வேண்டுமா?—உயர்
விலைமிக்க நிலை வேண்டுமா?—அன்றி
விழ வேண்டுமா குழியில்?
எழ வேண்டுமா உலகில்?—இதில் (எது)

5 எஞ்ஞான்றும் புகழ் வேண்டுமா?—இன்றி
இழிவான தொழில் வேண்டுமா?—நாட்டில்
விஞ்ஞான வளம் வேண்டுமா?—அன்றி
விழ வேண்டுமா குழியில்?
எழ வேண்டுமா உலகில்?—இதில் (எது)

# அற ஆட்சிக்கு அன்புமுறை

[கௌசல்யா சோமசுந்தரம்]

உலகில் அமைதி நிலவ வேண்டுமானால் மக்கள் இன்ப வாழ்வு வாழ வேண்டும். இன்பவாழ்வு அறவழி வாழ்வதால் தான் வாய்க்கும்.

> 'அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
> புறத்த புகழும் இல.' —திருக்குறள், ௩௯.

மக்கள் அறவாழ்வு வாழ்தல் கைகூட, அறவழிப்படி ஆட்சி நடத்தப்பட வேண்டும். அத்தகைய அறஆட்சியும் அன்புமுறையில் நிறுவப்பட வேண்டும். உலகின் இன்றைய மக்கள் வாழ்க்கைமுறையைக் கெடுக்கும் உரமான ஆற்றல் பொருளாதார முறைகளில் இருக்கிறது ஒரு நாட்டின் பொருளாதாரப் போக்கு மற்ற நாடுகளின் வாழ்வைக் கெடுக்கிறது. ஒரு நாட்டின் பொருளாதாரப் போக்கின் வேர், அந்நாட்டிலுள்ள ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கைப்போக்கில் இருந்தும் எழுகிறது. ஆகவே உலகநிலைமையின் உண்மை ஊற்றுக்கண் தனிமனிதனின் வாழ்வே ஆகும். தனிமனிதனுடைய அன்றாட வாழ்வு சீர்திருத்தப்பட்டால் உலகநிலை சீர்திருந்தும். இது அடிப்படையான உண்மை. இஃது ஒழுக்க, பொருளாதார, அரசியல், ஆருயிர்த்துறை ஆகிய ஒவ்வொன்றுக்கும் பொருந்தும். ஆகவே பொருளாதாரத்துறையில் அறவழி வாழ்தல் உலக அமைதி கூட்டுவிக்கும் என்பது திண்ணம். இக்கருத்தை விளக்கப் பொருள்அறிஞர் J. C குமரப்பா ஒரு கட்டுரை எழுதி உள்ளார். இவர், காந்தி அடிகளின் தூண்டுதலால் துவக்கப்பட்ட அகில இந்திய கிராமக் கைத்தொழிற்கழகத்தின் தலைவராவர். அக்கழகத்தின் திங்கள் இதழான 'கிராமத்தொழில்' இதழ் (கிராம உத்தியோகபத்திரிகை)யின் 1950-ம் ஆண்டின் சனவரி மாத வெளியீட்டில் கீழ்க்கண்ட கட்டுரை காணப்படுகிறது.

## தனிமனிதனும் உலக அமைதியும்

தற்காலப் போர்கள் எழும் காரணங்களைக் கூர்ந்து கவனித்தால் நாம் பார்ப்பது என்ன? இயற்கை வளங்களை, பெருந்தொழிற்சாலைப்பொருள்களைச் செய்து குவித்து ஏகபோக உரிமையாக்க முயல்வதனாலேயே போராட்டங்கள் எழுகின்றன. இப்பெருந் தொழிற்சாலைகள் ஒரே மாதிரியான பொருள்களை ஒரே இடத்தில் ஏராளமாகச் செய்து குவிப்பதற்கு அமைக்கப் படுகின்றன. இவ்வகைத் திட்டத்தில் பொருட்களைச் செய்யும்

இயந்திரப் பொறிகள் ஓர் இடத்தில் இருக்கின்றன அவைகளுக்கு வேண்டிய மூலப் பொருள்கள் உலகில் மிகத் தொலைவிலுள்ள பாகங்களிலிருந்து கொண்டு வரவேண்டி இருக்கின்றன. அந்தப் பொறிகளை இயக்கவேண்டிய ஆற்றலையோ (மின் ஆற்றல்), ஆற்றல் அளிக்கும் பொருள்களையோ (நிலக்கரி, எண்ணெய்கள்) வேறு இடங்களிலிருந்து கொண்டுவரவேண்டி இருக்கிறது. இத்தொழிற்சாலைகளில் செய்யப்படும் பொருள்களை விற்பதற்கு வேண்டிய சந்தைகளை (மார்க்கெட்டுகளை) உலகில் மற்ற இடங்களில் பிடித்துவைக்க வேண்டி இருக்கிறது. இப்படி ஓரிடத்தில் ஏராளமாகப் பொருள்களைச் செய்து குவிக்கும் பொருளாதாரத் திட்டத்தில் பொதுவாகப் பொருள்களைச் செய்வது, வழங்குவது (விநியோகிப்பது), அவைகளை பயன்படுத்துவது ஆகிய மூன்றுவகைச் செயல்களையும் ஒரு பொதுவான கட்டுப்பாட்டுக்குள் வைக்க வேண்டி இருக்கிறது. இததகைய பொருளாதார அமைப்பில் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய மூலப் பொருள்களும், பொருள்களைச்செய்து குவிக்கும் தொழிற்சாலைகளும், மேற்படி பொருள்களை விற்பனைசெய்யும் சநதைகளும், உலகின் வெவ்வேறு பாகங்களிலே இருப்பவை. ஆனால் அம்மூன்றினையும் ஒரு பொது அதிகாரத்துக்குள் கொண்டு வந்து அடக்கிவைக்க வேண்டி இருக்கிறது. அப்பொழுது தான் ஒரே கருத்துடனும், கொள்கையுடனும், நடைமுறைத் திட்டத்துடனும மேற்படி பொருளகளைச் செய்வதும், பொருளகளைச் சந்தைகளுக்கு அனுப்பி வழங்குவதும, மூலப் பொருளகளைக் கொணர்வதும தங்கு தடையின்றி நடைபெறுப. இப்படி அம்மூன்றினையும ஓர் ஆளுகைக்குள் கொண்டுவர எளிதான வழி அவைகளை வலுக்கட்டாயத்தால் இணைப்பதே ஆகும். ஆதலால் போரிடும் நாடுகளால் விளைவிக்கப்படும் நாசவேலைகளை நீக்கவேண்டுமானுல், இந்தப் போருக்கு மூல காரணமான மேற்படி வலுக்கட்டாய இணைப்புச் செய்வது போன்ற பொருளாதார முறைகளைக் கவனித்து மாற்றவேண்டும். மேற்படி வலுச்கட்டாயப் பொருளாதார இணைப்பின் தேவையும், அதைப்பற்றி எழும் பொறுமையும், பேராசையும், அவை எழுப்பும் வெறுப்புகளும், எதிர்ப்புகளுமேதான் கடும்போர்களுக்குக் காரணம். ஆதலால் நாம் காணும் போர்கள் எழாதிருக்க அவைகளை உண்டாக்கும் அடிப்படைக் காரணங்களை அகற்றவேண்டும். அதற்குத் தொடர்புடைய கருப்பொருள்களை உண்டாக்குபவர்களும், அவைகளை விநியோகிப்பவர்களும், அதைவிடப் பெருமபாலோரான மேற்படி பொருள்களைப் பயன்படுத்துபவர்களும் இதன் நிலைபற்றிக் கவனித்து நடக்கவேண்டும். இப்போதைய நிலையில் பொருள்களைச் செய்

வோரும், விநியோகிப்போருமான இருகூட்டத்தாரும் பொதுவாக அரசாங்கங்களின்மேல் ஆதிக்கம் உடையோராய் இருக்கிறார்கள். அந்த ஆதிக்கத்தினால் தங்களுக்கு வேண்டிய சந்தைகளை வலுக்கட்டாயத்தின் மூலம் ஏற்படுத்திக் கொள்கிறார்கள். அவர்களுடைய முறைகளால் அவர்களுக்கே ஊதியம் கிடைக்கிறது. அவர்கள் சமாதானகாலத் தேவைகளையோ, போர்க்காலத் தேவைகளையோ எதைச் செய்தாலும் அவர்களுக்கே ஊதியம் மேலும் அமைதியான காலத்தில் நடத்தும் தொழில் முறையிலும் போர்த் தேவைகளைச் செய்யும் நிலைமைக்கு உடனே மாற்றிக்கொள்ளும் வசதிகளையே வைத்திருக்கிறார்கள். ஆதலால் இத்தகைய சமூகப் பொருளாதார முறைகளால் ஊதியம் பெறும் இவர்கள், இந்த நிலைமையை மாற்றிச் சீர்திருத்துவார்கள் என்று எதிர்பார்க்கக்கூடாது

பலர் போர்களைத் தவிர்க்க ஆர்வம் உள்ளவர்களாக இருந்தாலுங்கூட, போர் எதிர்ப்புத் திட்டத்தில் தங்களுடைய தனிப் பொறுப்பையும், தங்கள் அன்றாட வாழ்க்கையில் தாங்கள் செய்துகொள்ளவேண்டிய மாறுதல்களையும் அறிவதில்லை. நம்முடைய அமைதி நாட்டமும் (Pacijism) போர் எதிர்ப்பும், பெரிய போர்நடவடிக்கைகளுக்கு எதிராக இருப்பதுமட்டும் போதாது கூடவே நமது அன்றாட வாழ்வில் கட்டாயங்களுக்கு அடிப்படையான நிலைமைகள் தோன்றாவண்ணம் கவனித்து நடக்கவேண்டும். நாம் நாடோறும் பயன்படுத்தும் பொருள்களும் கருவிகளும் அனைத்தும், அவைகளைச் செய்விப்பதிலும் விநியோகிப்பதிலும் பயன்படுத்துவதிலும் 'நம் சகோதர மக்களுக்கு எவ்வித தீங்கும் கொடுமையும் விளைவிக்காதனவா?' என்பதைப் பற்றிக் கவனிக்க வேண்டும்

பெரும்பாலான மக்கள் அமைதிமனப்பான்மை உடையோராய் இருந்தபோதிலும், அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் செய்யும் காரியங்களின் மூலம் தோற்றுவிக்கும் நிலைமை, முடிவில் போரில் கொண்டுவந்து விடும் என்பதை அறிவதில்லை. போர் என்பது திடீர் என்று எழும் இயற்கை நிகழ்ச்சி அல்ல. உதாரணமாக முதல் பெரும்போருக்கும் இரண்டாவது உலகப் போருக்கும் இடையே கழிந்த இருபது ஆண்டுகளும் சமாதான காலம் என்று சொல்லமுடியாது. அந்தக் காலத்தை இரண்டாவது உலகப் பெரும்போருக்கு தயார்செய்துகொண்டிருந்த காலம் என்றுதான் சொல்லவேண்டும் நமது அன்றாட வாழ்க்கையில் போரை எழுப்பக்கூடிய அடிப்படைச் செயல்களை நீக்கினால்தான் உண்மையான அமைதியைப் பெறமுடியும். இல்லாவிடில் ஒற்றுமைக்காலம் என்பது, போர் எழாமலும்

போர் எழக்கூடிய காரணங்கள் மங்கியும் இருக்கும் இடைக் காலமே ஆகும். நமது அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளில் கட்டாயம் எழக்கூடிய நிலைமைகளை நீக்கினால்தான் உண்மை யான அமைதி கைகூடும். உண்மையைக் கூறுவோமானால், உலகப் போர்கள் எழுவதற்குக் காரணம், பார்ப்பதற்கு அமைதி யாக நடத்தப்படும் நமது குடும்பத்தை நடத்தும் முறைகளி லேயே உளது உலகப் பரவலான சந்தைகளை உடைய பூதா காரத்தொழிற்சாலைகளில் செய்யப்படும் பொருள்களை நமது இல்லங்களில் எவ்வளவு அதிகம் பயன்படுத்துகிறோமோ அவ் வளவிற்கு நாம் உலகப் போர்களை உண்டாக்க உதவுகிறோம். நமது காலைஉணவில் உள்ள பொருள்களைப் பார்த்தால் [கோதுமைப் பூரி, காப்பி, அதற்கு (மில்) வெண்மைச் சர்க் கரை, டின்பால், கைக்குத்தரிசி உணவு, பால், கிராமத்தில் செய்யும் வெல்லம்] நாம் உலக அமைதிக்கு ஆதரவோ, அல் லது உலகப் போருக்குத் தூண்டுதலோ செய்கிறோம் என்பது விளங்கும்.

இந்நிலைமைகளை இவ்விதம ஆராயநதால ஒரு நடைமுறைத் திட்டம் உடனே தென்படுகிறது. இத்திட்டத்தின்படி உலக அமைதியைப் பாதுகாக்கும் பொறுப்பு பெரிய இராசதந்திரி களிடமும் அரசியல் வாதிகளிடமுமிருந்து சாதாரண உலகமக்க ளிடம் மாற்றப்படுகிறது. இத்தகைய அறிவுள்ள நடவடிக்கை மூலம்தான் சாதாரண உலகமக்கள் உலகத்தில் சில ஆண்டு களுக்கு ஒருதரம் எழும் கொடுமையான சூறாவளிப் போர் களையும், அவற்றினால் முடிவில் மக்கட்கூட்டமே அழிந்து போவதையும் தடுக்கலாம் இத்தகைய அன்றாட தூய வாழ்க்கைத் திட்டத்தை ஆரம்பிக்க நாம் பெரும்பாலும் தன் னடக்கத்தையும், சொந்தக் கட்டுப்பாடுகளையும் தனிமனித வாழ்வில் கைக்கொள்ளுவதை எதிர்பார்க்க வேண்டி இருக் கிறது. இப்போதைய தன் விருப்பப்படி பல்வேறு விரிவான வேண்டாத வசதிகளை வைத்துக்கொள்வதை விட்டுவிட வேண்டும். இவ்வழியைத்தான் உலகஅமைதி ஏற்படக் காந்தி அடிகள் குறிப்பிட்டார். அவருடைய ஆக்கமுறைகள் (நிர்மா ணத் திட்டங்கள்) என்பவற்றின் மூலம் அவர் செயல்முறை உலக அமைதிக்கு அழைத்துச் செல்லுகிறது. இந்நாளிலிருந்தாவது கண்விழித்து, நாம் எளிய தூயவாழ்க்கை வாழவேண்டும். அதன்மூலம் உலகஅமைதிக்கு அடிகோல வேண்டும். அது நம் நாட்டவருடைய உரிமையும கடமையும் ஆகும். அக் கடமையைச் செலுத்த அறிவுடன் முனைவோமாக.

# செய்திகளும் குறிப்புகளும்

## கம்பர் நாடக அரங்கேற்றம்

திரு. டி. கே. சகோதரர் மூலம் தமிழுலகிற்கு "ஔவையா"ரை நாடக உருவில் அமைத்து உதவிப் புகழ்பெற்றுள்ள நெல்லைத் திருவாளர், எதிராஜுலு அவர்கள் இறவாத புகழுடைய எழில்நூற்'கம்பனை' நாடக உருவமாக ஆக்கி சோதிநாடக சபா குழுவினர் மூலம் 26-1-51-இல் அரங்கேற்றஞ் செய்துள்ளார்கள். இதற்கு முன்னரும் 'வேலைக்காரன்' என்னும் சமூக சீர்திருத்த நாடகமும் ஆக்கி உதவியுள்ளார்கள். இது போன்ற அரும்பெரும் தமிழ்ப்பணி செய்துவரும் அவர்களின் ஊக்கங்கண்டு மகிழ்வெய்துகின்றோம். அவர்கள் இன்னும் இவை போன்ற நாடக நூல்கள் ஆக்கி உதவி நீடுவாழ்வார்களாக!

## கல்விக் காப்பு

மக்களை மாக்கள் நிலையினின்றும் உயர்த்தி மக்களாக வாழச்செய்வது 'கேடில் விழுச் செல்வமாம் கல்வி'யே ஆகும். அதை நல்ல முறையில் பரப்புதற்காம் நன்கொடை வழியொன்றை 'உலகவாம்' பெருந்திருவினர் குடியாத்தம், திரு. இராசகோபால நாயுடு அவர்கள் செய்தமைத்துள்ளார் கள். இந் நன்முறையைப் பின்பற்றி தமிழகப் பெருஞ் செல்வர் முன் வருவார்களாயின், தமிழ்நாடும் தமிழ்மொழியும் தமிழரும் நல்வாழ்வுபெற்று உய்வார்கள். அம்முறை யாது?

"**திரு. இராசகோபால் கல்வியமைப்பு**" என ஒன்று ஏற்படுத்தியுள்ள னர். இதன் பொறுப்பாளர் திரு நாயுடு அவர்கள், அவர்தம் அருமை மனைவியார் திருமதி, இலட்சுமிகாந்தம்மாள், ஆம்பூர் டாக்டர், நாதமுனி நாயுடு, திரு. ஏ. ஜே. ஜே. அருணசல முதலியார் ஆவார்கள். நிலப்பொறி யூர்தியாம் ஏழு பஸ்களை வழங்கியுள்ளனர். இதன் ஆண்டு வருவாய் இருபத்தையாயிரம். இதிலிருந்து பள்ளிக்கூடம் நடத்தப்படும். முப்பது ஏக்கா நிலத்தில் கட்டடம் கட்டப்படும். இஃது இரு பாலாருக்கும் சேர்ந்த உயர்நிலைப்பள்ளியாய், கல்லூரியாய்த் திகழும்.

## திரு. திவாகர் கூற்று

இந்திமொழியின் அடக்கி ஆளும் ஆட்சி (ஏகாதிபத்தியம்) ஏற்பட்டு விடுமோ என்று தென்னிந்தியர்கள் சிலர் அஞ்சுகின்றார்கள். இந்தியைக் கற்றுக்கொள்வதற்கு அங்கு இன்னும் சில உண்மையான சங்கடங்களும் இருக்கின்றன. இந்திமொழியைக் கற்கத் தென் இந்தியர்களுக்குப் போது மான கால இடையீடு கொடுக்கப்படுதல் வேண்டும். தாங்களும் தேசீய மொழியான இந்தியை வளம்படுத்த உதவமுடியும் என்ற நம்பிக்கையைத் தென் இந்தியர்கள் உள்ளத்தில் ஏற்படுத்தல் வேண்டும். எந்த முறையில் இந்தி வளர்ச்சியுற வேண்டும் என்பதில் எந்த இந்தி மாகாணமும் கட்டுப் பாடு கூற முயற்சிப்பது முறைமை ஆகாது. தென் இந்திய மொழிகளுள் ஏதாவது ஒன்றை வட இந்தியர்கள் கற்றுக்கொண்டு அதை வளாக்க முயற்சித்துத் தென் இந்தியர்களிடையே நம்பிக்கையை ஏற்படுத்தல் வேண்டும். தென் இந்திய மொழிகளிலுள்ள உயர்ந்த நூல்களை இந்தியில் மொழிபெயர்க்க வேண்டும். இவ்வகையால் தென் இந்தியர்கள் உள்ளத்தி லுள்ள நம்பிக்கை யின்மையைப் போக்குதல் வேண்டும்.

### பலித் தடை

ஈவிரக்கமற்றுச் செய்துவந்த ஆடு கோழி முதலிய உயிர்ப்பலியைத் தடை செய்யும் 1950-ஆம் ஆண்டுச் சட்டம் இராட்டிரபதியின் இணக்கம் பெற்றுவிட்டது.

### மொழி ஆய்வு

வழக்கத்திலுள்ளதை விரைவில் நீக்கிவிட வேண்டுமென்று கொண்டது விடாக் குருட்டுச் செய்கை பொருந்தாதெனத் திரு. இராஜாஜி அவர்கள் இலட்சுமணபுரிப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் பகர்ந்தமை பாராட்டற்குரியதே.

### தெய்வ ஆற்றல்

பெங்களூரில் வாழும் குமாரி சகுந்தலா தேவி கண்ணொணத் தகும் கணக்கில் அனைத்துலகத்தும் எவர்க்கும் இல்லாத் தனித்திறல் பெற்று விளங்குகின்றாள். அகவை பத்தொன்பதே ஆகின்றது. நனி நாகரிக மேனாடெல்லாம் சென்று ஆங்குள்ளாரனைவரும் மிகுவியப்பும் பெரும் விழி விழிப்பும் ஒருங்கெய்தச் செய்துளாள்.

### பெண் கல்வி

ஐதராபாத்—அனைத்திந்திய கல்வி மாநாட்டின் இருபத்தைந்தாவது கூட்டம் நிகழ்ந்தது. மாதா பிரிவுகருத் தலைமை தாங்கிய திருவாட்டி யமுனாபாய் சொறபொழிவு: "பெண்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுப்பதுடன் தொழில்களிலும், நாட்டுத் தொண்டிலும் தங்கள் கருத்தைத் தெரிவிக்கக் கூடிய திறமை வாய்க்கவும் கற்பிக்க வேண்டும். ஐம்பது ஆண்டுகளாக பெண்கள் கல்வி மிகுதியும் பரவியிருப்பது மகிழ்ச்சியே. ஆயினும் முதன்மை (உத்தியோகம்) வேட்கையில் வீட்டைப் புறக்கணித்தல் கூடாது. தேர்வில் தேற வேண்டு மென்னும் பித்தும், கல்வியின் நிலை உயர வேண்டும் என்னும் பெத்தும இளம் பெண்களின் உடல் நலத்தைக் கெடுக்கின்றன. ஒழுக்கம் வளரும் முறையில் கல்வி இருக்கவேண்டும். நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்பெரும் பண்புகள் நாளும் ஓங்கும் நிலையில் நம் நாட்டுப் பெண்கல்வியின் குறிக்கோள் அமைய வேண்டும்," என்பதே.

### இருபாலாரும் ஒருங்கு கற்றல்?

லக்ஷ்மணபுரி, பல்கலைக் கழக மாணவா கூட்டத்தில் பம்பாய் ஆட்சியாளார் ராஜா மகாராஜ் சிங் பேசினார். அப்பொழுது ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிக்கலாமா? என்று வினவினார். ஆண்கள் நன்றாகப் படிக்கலாமென்றனர். ஆனால் பெண்கள் பேசாதிருந்தனர்.

### பிள்ளைப்பேறு மகிழ்ச்சி

நம் கழக ஆட்சிப்பொறுப்பாளர் அவர்களின் மருகரும், கழக மேலாளருமாகிய திரு. க. சொக்கலிங்கம் பிள்ளையவர்கட்குப் பாளையங்கோட்டையில் தம் மாமனார் இல்லத்து 22-2-51 வியாழக்கிழமை இரவு 7-47 மணிக்கு ஆண்குழந்தை பிறந்து சேயும் தாயும் நல்ல நலமாக இருக்கின்றார்கள் என்னும் செய்தி கேட்டு மகிழ்கின்றோம். கடவுள் எல்லா நலமும் அருள்வாராக.

# மதிப்புரை

### சித்தர் சித்தாந்தம்:

இது, பழனி நவநீத சாதுமாமுனிவர் நினைவு மலர் ஆக அத்திரு மடத்துத் தலைவர் அடிகள் ஈசகப்பூர்சுவாமி அவர்களால் வெளியிடப்பெற்றது. அழகான பதிப்பு. தொன்மைச சித்தர்கள் கொள்கைகளை நன்மை பயப்பன என விளக்குகின்றது. தக்க மேற்கோள்கள் காணப்பெறுகின்றன. அடிகள் விமலானந்தா அவர்களால் இயற்றப்பட்டது. அடிகள் பொன்னம்பலசிவம் அவர்களின் திருத்தறள் வாழ்த்து வண்ணப்பாவும் பொருந்தியுள்ளது. திருமடத்தார் இவை போன்ற செந்தமிழ் வெளியீடுகள் பல வெளியிட்டு, மககளின் நன்னெறிக்குத் துணைபுரியும் மாண்பு மற்றெல்லா மாண்புகளினும் சிறந்தது.

### வலம்புரி வடுகநாதன் உயர்நிலைப்பள்ளி

குறித்த பள்ளியின் 1948-50 ஆண்டு அறிக்கை வரப்பெற்றோம். இக் கல்லூரி, திருவாளர் வடு லெ. இலக்குமணச செட்டியார், வயி வ. வடுகநாதன் செட்டியார் இவர்கள் குடும்பத்தார்களின் சொலற்கரும நன்முயற்சியால் நிலைபெற்ற நிகழ்வதாகும். 'கேடில் விழுசசெல்வம கல்வி' என்பது இவர்கள் உள்ளத்தெழுந்த ஊற்று. அறிக்கையில் பள்ளிக்கூடம் நிறுவிய 1944 முதலாகவுள்ள நிகழ்ச்சிகள் காணப்பெறுகின்றன. எல்லா ஆண்டுகளின் தேர்வுகளும் போற்றற்குரிய முதன்மை நிலையிலேயே காணப்பெறுகின்றன. இப்பொழுது ஆசிரியன்மார் இருபத்தொருவர், அலுவலாளர் இருவர், மாணவர் ஐந்நூற்றுப்பதின்மர் உளர். மாணவர் திறமையை விளக்கும் கட்டுரைகள் பலவும் காணப்பெறுகின்றன. திருவருட்டுணையால் விரைவில் தக்க கட்டடமும் அமைந்து முதன்மைக் கல்லூரியாகவும் நிலவுக.

### அறுபத்துமூவர் துதிப்பா.

இந்நூலாசிரியர் தணிகைமணி, இராவ்பகதூர், திரு. வ. சு. செஙகல்வராய பிள்ளை எம். ஏ. அவர்கள் ஆவர். அவாகள் அப்பரை அனைய செப்பரும் தவத்தார். திருப்புகழை ஓதி உலகுக்குதவி ஓங்கிவாழ் குடும்பத்தார். பல நூலியற்றித் தமிழனனைக்கு அணிவித்துவரும் பொய்யில் புலவர். செந்நெறிக்கு ஈடும் எடுப்புமில்லாத சிந்தாமணி விளக்கா நின்றிலகும் 'தேவார ஒளிநெறி' என்னும் நாவாற்பெருநூல் நல்கிய நற்றொண்டர்.

இவாகள் தம் இளவலின் தூண்டுதலால் அறுபத்துமூன்று நாயனமார்களின் வரலாற்றுக் குறிப்பை அறுபத்துமூன்று வகையான ஓசைநயம் பெறும் ஒழுகிசைத் திருப்பாட்டுக்களால் இந்நூற்கண் யாத்துள்ளார்கள். இத்திருப்பாட்டுக்களை பண்ணமையப் பாடுதற்கு வாய்ப்பாக நால்வர், தாயுமானார், காரைக்கால் அம்மையார் முதலியோர் பாடியருளிய திருப்பாட்டின் ஓசையோடு அமைத்துக் காணுமாறு இணைப்பாகப் பாவிளக்கம் ஒன்று தந்துள்ளார்கள். நாயன்மார் வரலாற்றுக்கண் பாவிலமைந்த சிறந்த குறிப்பு விளக்கமும், பாவின் உரையும் செம்மை உரைநடையால் செய்தமைத்துள்ளார்கள். இந்நூல் நாயன்மார் வரலாற்றுக்கு வழிகாட்டி, வழிபாட்டுக்குக் கருவூலம் ஆகும். நாற்பத்தொரு யாண்டுகளுக்குமுன் திருவிளையாடல் அறுபத்துநான்கினையும் எண்ணெண்வகைப் பாவால் இயற்றியுள்ளார்கள் என்றும் தெரிகிறது. இவர்கள் குடும்பம் முற்றுக ஏறூர்ந்தான் இவர் மகனார் எழிலடியார் திருத்தொண்டே இயற்றிவருவதுகாணின், எவர்தாம் வியவார் நயவார் இன்புறார். இவர்கள் நீடுவாழ்ந்து பெருந்தொண்டியற்றிப் பீடுறப் பெண்ணொருகூறன் அருள்வாருக. விலை அணா எட்டு

**அண்ணல் காந்திஅடிகள் வெண்பாமாலை,-நால்வரும் இராமலிங்கரும்:**

இவ்விரு நூற்களின் ஆசிரியர் திரு. வித்துவான் குமரகுருபரதாச கவிராய பரம்பரை இராசவரகவி பூவை, அ. இராசகோட்டியப்பன் அவர்கள் ஆவர். முன்னது செய்யுளும் பின்னது உரைநடையுமாக அமைந்துள்ளன முன்னது காந்தியடிகளின் பண்பும் தொழிலும் பழந்தமிழர் கையாண்டனவற்றுடன் பெரிதொத்துத் திகழ்கின்றன எனபதும், அடிகள் வழியே உலகுய்தற்காம் பொதுவழியாம் என்பதும் வள்ளுவர் வாய்மொழியுடன் ஆங்காங்கே எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. பின்னது நால்வரைப் பற்றி இராமலிங்கர் உருகிப்பாடிய கோடையூற்றுச் சுவைப்பா அடியொற்றித் திறம்பெற வரையப்பெற்றுள்ளது. இந்நாளில் இத்தகைய நூலும், கடவுட்பற்றும் கலங்கா வுளமும் நலங்காண் திறனும் வாய்ந்த இத்தகைய ஆசிரியர் போன்றாரே வேண்டற்பாலர். தமிழுலகம் ஆசிரியரை ஊக்கிப் பல நூல் வெளிவரச்செய்யத் துணைபுரியுமாக.

**திருவொற்றி வடிவுடை அம்மை அருள்வேட்டல்**

இந்நூலாசிரியர் பெரும்புலவர் பாரிப்பாக்கம் திரு. கண்ணப்ப முதலியாரவர்கள் ஆவர். அம்மை திருவருளால் தாம் பெற்றுள்ள இடக்கை நோய் நீங்கி எழிலுறும் இன்பத்தினை நினைந்துருகிப் பாடிய பாமாலையாகும் இது. அழகிய இனிய தெளிந்த இன்னோசை நிரம்பிய நூற்றொரு பாட்டுகளையுடையது எளியநடை வாய்ந்தது. பொருட்செறிவு மிக்கது 'செம்பொருட்டுணிவாம்' சித்தாந்தக் கருத்துக்கள் இடம் இடந்தோறும் சிறந்து விளங்குகின்றன. குறிப்புரை மிகத் தெளிவாகவும் விளக்கமாகவும் இருக்கின்றது. 'அருச்சனைபாட்டேயாகும்' என்னும் தமிழ்மரபு இன்னுந் தழைத்திருக்கின்றது என்னும் மெய்ம்மை இதனல் விளங்கும். புத்தகம் அழகாக அச்சிடப்பெற்றுள்ளது. செந்நெறிச் செல்வர்கள் ஒவ்வொருவரும் வாங்கிக் கற்றுத்தொழுது அம்மை அருட்கு உரியராகுக.

**தமிழ்த்தென்றல் 1950 ஆண்டுமலர் (விருதுநகர்):**

இம் மலர் தலைசிறந்த அறிஞர் பலர் ஆர்வமூட்டும் வகையில் வரைந்துள்ள கட்டுரைகள் பலவற்றைக்கொண்டு திகழ்கின்றது. ஆண்மையும் இயற்கைநலமும் ஒப்புரவும் ஊட்டக்கூடிய நன்னடைவாய்ந்த நறுஞ் செய்யுட்கள் பல காணப்படுகின்றன. புலவர் பெருமக்கள், இயற்கை வனப்பு முதலிய அழகிய உருவப்படங்கள் நல்லமுறையில் பல அமைந்துள்ளன. விலை, ரூ. 1 4 0.

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு ௨௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௨, பங்குனி ஏப்ரல், 1951 | பரல் ௮

# தமிழ்ப் பேராண்மைச் சிதம்பரனார்

[சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை]

இவர்கள் திருவிதாங்கூரைச் சார்ந்த நாகர்கோவில் நகர்க் கண் ஒழுக்கமிக்க வேளாண் விழுக்குடியில் தோன்றியவர். தந்தையார் பழனியாபிள்ளை அவர்களாவர். இளமையிலேயே கூர்த்த மதியும் சுறுசுறுப்பும் ஆழ்ந்த எண்ணமும் ஆண்மையும் மிக்கவராக விளங்கினார்கள். முறையே கல்லூரிகளில் திறம் பெறப் பயின்று கலைப்புலவராம் பி. ஏ. பட்டமும் பெற்றுள் ளார்கள். அதன்மேல் சட்ட நூற்றுறையில், பி. எல். பட்டமும் பெற்றனர். வழக்கறிய வல்லுநராம் அட்வகேட் என்னும் நிலை எய்தினர்.

ஆங்கிலத்தில் தலைசிறந்து விளங்கியதுபோலவே தமிழிலும், மலையாளத்திலும் தலைசிறந்து விளங்கினார்கள். மாண்பமை ஆண்மைத் தோற்றம் வாய்ந்தவர்கள். புன்னகை பூத்த முகத் தினர். பழந்தமிழ்ப் பண்பாடு நிரம்பியவர்கள். பழந்தமிழ்ப் பண்பாடென்பன,

> " நகையீகை இன்சொல் இகழாமை நான்கும்
> வகையென்ப வாய்மைக் குடிக்கு."
>
> —திருக்குறள், ௯௫௩

என்பனவையாகும்.

இந்நான்கும் நம் பிள்ளையவர்களிடம் நிலைபெற்றிருந்தன. "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும, நன்றே நினைமின்," (நாடொறும்) என்னும் தெய்வத் தமிழ்மறையை உறுதியாகக் கொண்டு ஒழுகியவர்கள். இவ்வுண்மைக்கு அவர்கள், ' காந்தி

யடிகள்' கைக்கொண்டு வற்புறுத்து வழங்குவித்த கோவில் நுழைவுரிமை என்னும் அறப்பெருஞ் செய்கையை அடிகள் துவங்கக் கருதுவதற்குப் பன்னெடுங்காலங்களுக்குமுன் தனித் தமிழ்ப் பண்பாட்டால் தாமாகக் கருதித் தமிழிலும் ஆங்கிலத் திலும் **கோவில் நுழைவுரிமை** என்னும் பெயருள்ள அரிய பெரிய நூலொன்று ஆக்கி வெளிப்படுத்துள்ளதே ஆன்ற சான்றாகும்.

தாம் மேற்கொண்டுள்ள வழக்கறிஞர் துறையில வாய்மை தவறாத நேர்மையர். சட்ட நுணுக்கங்களை முட்டின்றி ஆய்ந்து, " சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை, வெல்லுஞ் சொல் இன்மை அறிந்து," என்னும் உலகப் பொதுமறைக் கேற்ப ஒருதலையாச் சொல்லும் ஒண்மையர். முறைத்துறையி லும், மிறைத்துறையிலும வழக்கை நிரல்பட மொழிந்து வாய்மைநாட்டி, நடுநிலை காணச்செய்து வெல்ல வல்லுநர். நேர்மை வழிச்செல்லா நீர்மையர் எவரும் இவர்கள் பெயரைக் கேட்பினும் அஞ்சுவர். பலர், இவர்கள் உயர்முறைமன்ற நடுவராக வரவேண்டுமென்று பெரிதும் விழைந்தனர்; விளம்பினர். அரசியற் காரணத்தால் அது வாயாதகன்றது.

திருவிதாங்கூர் சட்டசபை உறுப்பினராகவும் (எம்.எல்.ஏ.) எதிர்க்கட்சித் தலைவராகவும் பல ஆண்டுகள் பலரும் புகழத் தொடர்ந்து பணியாற்றியுள்ளார்கள். வழுவொழித்து விழுமி தாக்க எடுத்து மொழியும் திறம், இவர்களபால் என்றென்றும் கெழுமியுள்ளது. எப்பொருளையும் 'காய்தலுவத்தலின்றி ஆய்தலும்' ஆய்ந்தவற்றை ஆண்மையுடன் அஞ்சாது கூறி முடிப்பித்தலும் வல்லவர்.

நாகர்கோயில் நகராண்மைக்கழகத் (முனிசிபல்) தலைவ ராகப் பல ஆண்டுகளிருந்து நலம் பல புரிந்துள்ளார்கள். பொதுநலத்தொண்டில் வேட்கையுள்ளதுபோல் அதனைச் செவ் வனே ஆற்றும் பூட்கையும் உடையவர்கள். மக்களுக்குத் தக்க வாறு தொண்டியற்றும் வழி வீடும் ஊரும் பீடுற, நோயின்றி வாழ, அறிவும் செல்வமும் செறிவுற, நலமும் ஒற்றுமையும் வலமுற, மொழியும் தொழிலும் முன்னேற நாட்டாண்மை நகராண்மைக் கழகங்களில் உறுப்புற்றுத் தொடர்ந்து பணியாற் றுவதாகும் என்னும் துணிபுடையவர். துணிந்தவாறு தொண்டு மியற்றி அரசினராலும், பெருமக்களாலும நன்மதிப்புப் பெற்றவர்கள்.

வரலாற்றுத்துறையில் நன்காய்ந்து வாய்மையைத தூய்மை செய்து அரண்செய்யும் சான்று பலகாட்டி மக்களை நன் னெறிப்படுத்தும் நாட்டமுடையவர்கள் என்பதற்கு அவர்க

ளியற்றி வெளிப்படுத்தியுள்ள 'திராவிடன்—ஆரியன்' என்னும் சிறிய நூலே போதிய சான்றாகும். மேலும் பெருமக்களுக்கு விழிப்புண்டாக்கும் வியத்தகுவழி இதழ்களுக்கு அடுத்தடுத்து அறிவு நிரம்பிய கட்டுரைகள் எழுதி உணர்ச்சியும் கிளர்ச்சியும் உண்டாக்குதல் என்னும் கடைப்பிடி உடையவர்கள.

அகற்கியைய இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்னரே! 'ரிவோல்ட்' என்னும் ஆங்கிலக்கிழமை இதழில் நலமபல பயக்கும் பலபல கட்டுரைகள் எழுதி அவ்வப்போது வெளிப் படுத்தியுள்ளார்கள் மக்கள் மொழி நாடு கொள்கை முதலிய வற்றை நன்குணர்ந்து தமக்கும் பிறர்க்கும் நலம் பயக்கும் நன்னெறியில் ஒழுகவேண்டும. அதற்கு அவர்கள் செந்நாப் புலவர்கள் இயற்றியருளிய செவ்விய தீவிய வைப்பாம் அருள் நூல்களைத் தக்கார்வாய்க் கற்றல் கேட்டலுடையராதல் வேண்டும்: என்னை? 'கற்றல் கேட்டல் உடையார் பெரியார்' ஆதலின் அக்கேள்விக்குச் சிறந்த கருவி விரிவுரை ஆற்றலும ஆற்றுவித்தலும் என்ப. அத்தகைய திருத்தொண்டை நம் பிள்ளை அவர்கள் இளமை தொட்டே மேற்கொண்டுள்ளார்கள். 'நாநல மென்னும் நலனுடைமையால்' "கேட்டார்ப் பிணிக்குந் தகைய வாய்க் கேளாரும, வேட்ப மொழிவதாம் சொல்" என்னும் தமிழ் மறைப்படி விரிவுரையாற்றுவார்கள். அவையோர் இவர் தம் சொற்பொழிவில் ஈடுபட்டுத் தூயோராய் நயனுடை நன் னெஞ்சினராவர். இவர்கள்போல் பேசவேண்டுமென்னும் வேட்கையுற்றுப் பெருநெறி பிடித்துப் பேச்சாளர்களாகிப் பீடுற்றாரும பலர் இவர்கள் அவைத்தலைமை ஏற்று அணிபெற நடத்தி அருமபயன் பெற்றுத் திகழ்ந்த அவைகளும் அளப்பில.

பிள்ளையவர்கள் தாம் வாய்மை எனக் கண்ட நன்மைகளை நவில்வதிலும் நாட்டுவதிலும் மிக்க திறலினர். உறுதி எடுத் துரைப்பதில் ஒப்பில்லாதவர். அங்ஙனம அஞ்சாது ஆண்மை யொடும் ஆர்வமொடும் கூறுவது தம் கடமையெனக் கனவினும் கருதும் கடப்பாட்டினர். இஃது,

> " அறிகொன்று அறியான் எனினும் உறுதி
> உழையிருந்தான் கூறல் கடன்." —திருக்குறள், ௬௩௮.

என்னும் பொய்யில் புலவர் மெய்ம்மொழியாலும் உணரலாம்.

நம் கழகத் துவக்க முதலே கழகத்தின் வளர்ச்சியிலும் ஆக்கத்திலும் கண்ணும் கருத்துமாக இருந்து அவ்வப்போது தம் முழு ஆற்றலும் கொண்டு வேண்டும் உதவிகள் கடைசி வரையும் சொல்லாலும, செயலாலும், தூண்டுதலாலும், அறி வுரை நல்கலாலும் புரிந்து துணைசெய்துள்ளார்கள். 1938-ஆம்

ஆண்டு முதல் பத்தாண்டுகளுக்குமேல் தொடர்பாகக் கழகத் தலைவராயமர்ந்து 'உவப்பத் தலைக்கூடி' எல்லாரும் 'உள்ளு மாறு' அருஞ்செயல் நிகழ்த்தியுள்ளார்கள். 'நுண்மாண் நுழை புலத்தாலும்,' திண்ணிய உரனுறும் உளத்தாலும், ஆழ்ந்து அகன்ற அறிவாலும், 'உழப்பின் வாரா உறுதிகள் உளவோ' என்னும் ஊக்கத்தாலும் கழப்பின்றிக் கழகத்தின் அகத்தும் புறத்தும் ஆற்றிய அருந்தொண்டுகளும் மிகப்பலவாம்.

சிறந்த தொண்டுகள் பல பலவாற்றானும் செய்து பலர் புகழ் நிலைமையில் வாழ்ந்துவந்த நம் பிள்ளையவர்கள் எதிர்பாராத நிலையில் நாகர்கோவிலில் தம் இல்லத்துக்கண் 25-3-'51, ஞாயிற்றுக்கிழமை காலை, செம்பொருளின் திருவடி எய்திச் சிறப்புற்றார்கள். இந்நிலை அவர்கள் ஆருயிரை நோக்க அமைவுடையதே எனினும் அவர்களால் இன்னும் பன்னாள் பயனெய்தவேண்டும் என்னும் முன்னேக்கமுடைய நம்மையும் அவர்கள் வழிப் பன்னூல் வெளிவரவேண்டுமென்னும் பெருவேட்கையுடைய நம் தாய் மொழியாம் தமிழ் அன்னையையும், எல்லா வழியாலும், முன்னேற்றமுற முயன்றுகொண்டிருக்கும் நாட்டையும் நோக்க ஈடுசெய்ய முடியாத இழப்பின் வருத்தமே இயல்பாக எவர்க்கும் வந்தெய்தும். என் செய்வது? முறை அவ்வாறாயின் அதனைத் திறம்புவார் யாரே!

நமது ஆழ்ந்த பரிவினை அவர்கள் குடும்பத்தார்க்கு அன்புடன் அறிவிக்கின்றனம். அவர்கள் ஆறுதல் எய்துவார்களாக. பிள்ளையவர்கள் ஆவி ஆண்டவன் அருளில் திளைத்து என்றும் இன்புறுமாக.

அவர்களுக்கு வாழ்க்கைத் துணைவியார் ஒருவரும், மக்கள் ஆண்பாலார் மூவரும், பெண்பாலார் ஒருவருமுளர் அவரை யும் எழுபதுக்குக் குறையாமல் இருக்கும்.

"வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்கும் கல்." —திருக்குறள், ௩௮.

குறிப்பு—இவர்களின் விரிந்த வரலாறு பின் வெளியிடப் பெறும்.

# நாவன்மை மிக்க சி. ஆர். இரெட்டி

[சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை]

ஒரு நாடு பிறநாட்டவரால் மதிக்கப்படவேண்டுமானல், அந்நாடு பொக்கமில்சீர்த் தக்காராலும், ஊக்கமும் உறுதியும் கொண்டு ஓவாது உழைக்கும் மிக்காராலும், தாளாண்மை யியல்பினராய் வேளாண்மையே இன்பமெனும் தாழ்வில் செல்வ ராலும், பிறர்க்கென வாழும் பெற்றி வாய்ந்த புலத்துறை முற்றிய நலமிகு புலவராலும், நீர்வளம், மலைவளம், நிலவளங்க ளாலும் சிறந்திருக்கவேண்டும். அப்பொழுதுதான் பிறநாட் டவர்கள் நன்கு மதிப்பர். இதுவே 'பெரும்பொருளால் பெட்டக்கதாகும்' என்க.

உலகப் பொதுமறையாம ஒன்றாகிழ்த திருக்குறளில்,

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச
செல்வரும் சேர்வது நாடு." —திருக்குறள், ௭௩௧.

எனத் தொகுத்தவற்றை விரிப்பின் மேலவை எல்லாம விளங்கும். நாவலர் இல்லா நாடும், பாவலர் இல்லாப் பதியும், காவலரில்லா அரசுபோல் பயன்பெறு என்க. நானில மக்கள் நற்றிறம் படர்ந்து மேனிலை எய்த உற்றதுணையாவார் நாவலரே என்க. நாவலர் புலத்துறைமுற்றியவராய்க் கலைவல்லவராய்க், கட்டுரைச் செல்வராய்க், காய்தல் உவத்தலகற்றி நடுநின்று ஆயும் வடுவில் அறிவினராய், ஆராய்ந்தவற்றை அஞ்சாதுரைக் கும் ஆண்மைச் சிறப்பினராய்த் திகழ்ந்து விளங்குபவர் ஆவர்.

இத்தகைப் பெரும் செம்மலார் ஒரு சிலரே தோன்றுவர். அத்தகைய தோன்றல்களுள் நம் சி. ஆர். இரெட்டியும் ஒருவர் ஆவர். சித்தூர் மாவட்டத்துத் தலைநகராகிய சித்தூர்க்கு அண்மையில் கட்டமஞ்சி என்னும் ஒரு சிற்றூருளது. அதன் கண், வேளாண் விழுக்குடியாம் இரெட்டியார் மரபில் தோன்றி யவர் சி. ஆர். இரெட்டியாரவர்கள். இவர்களைச் சி. இராமலிங்க இரெட்டியார் என்ப. இவர்கள் இளமையிலேயே கல்விக் களஞ்சியமாகும் நல்லியல்பு வாய்ந்தவராகத் தோன்றினர் கள். ஆயிரத்து எண்ணூற்று எண்பதாம் ஆண்டில் பிறந் தனர். இளமைக் கல்வியும் உயர்நிலைக் கல்வியும் சித்தூர் உயர்நிலைப்பள்ளியிலேயே எய்தினர்.

கல்லூரிப் புலமையின் பொருட்டுச் சென்னைக் கோநகர் வந்தனர். சென்னையில் சிறந்து விளங்கும் 'சென்னைக் கிறித் துவக் கல்லூரியில்' சேர்ந்து பயின்றனர். மாணவரும் ஆசிரியன் மாரும் வியப்புறத் தம் மதிநுட்பத்தால் எக்கலையையும்

வாறு எளிதில் கற்றனர். இவர் தம் திறமை அறிகுறியாகப் பல வேறு பொற்பதக்கமும் புகழ்சால் பட்டமும் பெற்றனர். 'வினைவிழைவார்க்கு' என்ஞான்றும் அதர்வினாஅய் வந்து பயன் எய்தும். அதுபோல் இவர்கட்கும் கல்விப் பயனும் மேற்புலக் கல்வி மிக எளிதாகக் குறியாப் பேருய்க் கிடைத்தது. என்னை? இந்திய அரசியலார் இவர்தம் செப்பரும் ஒப்பிலாத்திறங் கண்டு தம் அரசியற் செலவில் இலண்டன்மாநகர்க்குக் கல்வியின் பொருட்டுக் கடற்செலவாகப் போகச் செய்தமையான்.

இவர்கள் இலண்டன்மாநகர் சென்று 'கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழக'த்துச் சார்ந்து கலைத்துறைப் புலமைக்குக் கற்றனர். பரந்த நாவலம் தண்பொழிலாம் நம் பெருநாட்டின் பல பாகங்களிலிருந்து பலர் சென்று பலகாலும் கல்விபயின்று வருவது இயல்பு. அவருள் வியத்தகு முறையில் பெயரும் பீடும் பெறுவார் ஒரு சிலரே ஆவர். அவரெல்லாருள்ளும் நம் இரெட்டியாரவர்கள் தலைசிறந்தவராஞர்கள். இவர்கள் தாய்மொழி தமிழ்க்கிளையாகும் களிதெலுங்கு. எனினும், இவர்கள் ஆங்கிலத்தை ஒலிக்கும் (உச்சரிக்கும்) முறையினைத் தாய்மொழி வல்ல ஆங்கிலேயருங் கண்டு மருளுவர். எழுதுவது, பேசுவது, விரிவுரையாற்றுவது, அளவை முறைப்படி ஆய்வு நிகழ்த்துவது, உண்மை காணும் நன்னோக்குடன் வழக்கிடுவது (தர்க்கிப்பது) முதலிய பல துறைகளிலும் இவர்களே தலைசிறந்து விளங்கினர். அதனல், இவர்கள் எய்திய பரிசுகளும், நிலைகளும் (பதவி) பட்டமும் பலப்பலவாம். எல்லா வகையாலும் இவர்கட்கு ஆங்கில மொழி தாய்மொழியினுமிக்க பாங்குடையதாயிற்றெனப் பலரும் பலகாலும் பாராட்டுவாராயினர்.

அப் பாராட்டு நல்லதோர் செவ்வியை நல்கிற்று. இங்கிலையில் கல்லா மாந்தர் தம் நாட்டகத்து இல்லாவாறு செய்ய மடிதற்று முன்வந்துள்ள மன்னருட் சிறந்த பரோடா மன்னர் இவர்களால் தம் நாட்டில் கல்விச் சீர்திருத்தம் காணவேண்டுமெனக் கருத்துக்கொண்டனர். அதன்பொருட்டு இவர்களைத் தம் செலவில் அமெரிக்கா நாட்டிற்குப் போகுமாறு செய்தனர். இவர்களும் அதற்கிணங்கி ஆங்குச் சிறந்துள்ள பல இடங்களுக்கும் சென்று, பலதுறை வல்லாரோடும் அளவளாவினர்.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்னும் தமிழ்மறையும், 'சென்ற இடமெல்லாம் சிறப்பு' என்னும் தமிழ்த்தாய் மொழியும் கற்றூர் நிலையைத் தெற்றென விளக்குவன. இரெட்டியார் அவர்கள் அமெரிக்க நாட்டுப் பயிற்சி கைவந்ததும் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஏழில் வெற்றிச் சிறப்போடு தாய்நாட்டுக்குத் திரும்பினர்கள். திரும்பியதும்,

பரோடா அரசர் கல்லூரியில் துணைமுதல்வராகச் சின்னாட் களுக்குத் தொண்டாற்றினர். அச் சின்னாட்களுக்குள் ஆங்குச் செய்துபோந்த கல்வித்துறைச் சீர்திருத்தங்களும், கலைவளர்ச்சி முறைகளும் அளவிலவாம். அந்நாட்டு மன்னரும் மாபெரும் மக்களும் ஒருங்கு பாராட்டி ஒப்புரவு செய்தனர். என்செய்வது? கற்றோர் ஓரிடத்திலேயே தங்க நேரின், உலகுண்ணும் அருவிநீர் மலைஅடிவாரத்தே தங்கி ஏனை உலகத்தார்க்குப் பயன்பெறாமை போல் ஆகுமன்றோ? நினைந்து பாருமின். ஆயின், இவர்களும் அங்கு நின்றும் அகன்றனர்.

மைசூருக்கு வந்து கல்வித்துறையில் முதல்வராகத் திகழ்ந் தனர். மைசூர்க்கல்வி முன்னேற்றம் இவர்களாலேயே ஆயிற்று. கல்வித்துறையைத் சிறம்பெற நடப்பிக்கும் பெரும் பொறுப்பு முதன்மையும் இவர்களே கையேற்றனர். இங்கும் எல்லாராலும் நன்கு மதிக்கப்பெற்றனர். ஆங்கு இவர்கள் உண்மையாக உழைத்த உழைப்பின் வண்மை வையமெலாம் போற்றும் வாய்மையாயது.

ஆயிரத்துத் தொளாயிரத்துப் பதினாறில் சென்னையில் சர். பி. தியாகராயச் செட்டியாரவர்களும் பிற முதன்மையரும் சேர்ந்து நயன்முறைப் பாங்கு (ஜஸ்டிஸ் கட்சி) என்னும் ஓர் உயரிய கொள்கையை உண்டாக்கினர். அக்கட்சியில் சேர்ந்து பெரும் பங்கு பெற்றுத் தொண்டாற்றினர். புலமையாலும், நாவன்மையாலும் கேளாரும் எதிர்கொள்ளும்படி உரையாலும் எழுத்தாலும் உண்மைச் செயலாலும் தொண்டாற்றினர். சட்ட சபையில் உறுப்பினராய்ப் பலர் போற்றப் பணியாற்றினர்.

ஆந்திர நாட்டுக்குத் தனிப் பல்கலைக்கழகம் வேண்டு மென்று பல்லாற்றானும் வழக்கிட்டுப் பெற்ற பெருமை நம் இரெட்டியாரவர்களையே சார்ந்தது. அரும்பெறல் பணியைப் பெறுவது எவ்வளவு அருமையோ, அவ்வளவு அருமை அதன் பயனைப் பலர்க்கும் ஆக்குவித்தல். அம்முயற்சியையும் தாமே மேற்கொண்டு அப்பல்கலைக் கழகத்துத் துணை வேந்தராம் பண் பார் முதன்மைபெற்றுத் திகழ்ந்தனர். பயிர் வளர்க்கும் வான் போன்றும், சேய்வளர்க்கும் தாய் போன்றும் அல்லும் பகலும் எல்லையில் ஊக்கத்தால் கண்ணும் கருத்துமாய்ப்பேணி உலகு விழையும் உயர்நிலைக்குக் கொண்டுவந்து அமைத்தனர். இப் பல்கலைக்கழகம் ஆயிரத்துத் தொளாயிரதது இருபத்தாறில் துவங்கப்பெற்றது. ஆயிரத்துத் தொளாயிரத்து முப்பதுவரை துணை வேந்தராகத் தொண்டு பூண்டனர்.

1930-ஆம் ஆண்டில் காந்தி அடிகள் வரிகொடா இயக்கம் தோற்றுவித்தனர். அவ்வியக்கத்தை அரசினர் முறையின்றி

முழு வலிமையுடன் அடக்கினர். அவ்வடக்கு முறையைக் கண்டிக்கும் வாயிலாகத் தாம் மேற்கொண்டு உயிரெனப்போற்றி ஒழுகிய துணைவேந்தர் நிலையைத் துறந்து பெரு நாட்டுப் பெருங் கழகமாம் காங்கிரசில் சேர்ந்து மீண்டும் சட்டசபை உறுப்பினராயினர். இந்நிகழ்ச்சி ஆயிரத்துத் தொளாயிரத்து முப்பத்தைந்தில் நிகழ்ந்தது

ஆயிரத்துத்தொளாயிரத்துமுப்பத்தாறுமுதல் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தொன்பது முடியத் துணைவேந்தராக ஆந்திரப் பல்கலைக் கழகத்தமர்ந்து அருந் தொண்டாற்றினர். பின் உழைப்பினின்றும் விடுதலை பெற்றனர். கல்வி வல்லார்க்கு விடுதலை யென்பது ஒரு துறையிலிருந்து மற்றொரு துறையில் உழைத்தலேயாம். இவர், ஆங்கிலத்தில், எவ்வளவு வல்லுநரோ அதனினும மிக்க வல்லுநர் தாய் மொழியாகிய தெலுங்கின்கண். இவ்வுண்மை அம்மொழியில் இவர் இயற்றியுள்ள 'கவிதாதத்துவ விசாரம்' என்னும அரும் பெரும் நூலால் அறியலாம். ஒவ்வொரு மொழியும் இவரனைய பல பேரன்பு வாய்ந்த பெரும் புலவர்களால்தான் வளர்ந்தோங்கும். உலகத்திலும் தனிச் சிறப்பு எய்தித் தழைக்கும். இப்பெருந்தகையார் வாழ்நாள் முற்றும் மணமாகாத மாணி (பிரமசாரி)யாகவே வாழ்ந்து தொண்டியற்றினர் என்பதனை எண்ணுந்தோறும் எவர்தாம் வியவாதிரார். ஆங்கிலத்திலும கல்வியைப் பொறுத்துப் பல நூல்கள் எழுதியுள்ளார்கள். ஆயிரத்துத் தொளாயித்து ஐம்பதில் மைசூர்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பலர் புகழும் வாய்ப்புடன் பணியாற்றினர்.

7—7—'51-இல் சென்னை மருத்துவ நிலையம் அடைந்தார். உற்றபிணி நீங்காது ஆண்டே கால நிறைவுற்றார். பின் சென்னையிலுள்ள இவர்க்குரிய மாளிகையில் இவர்தம் உடல் வைக்கப் பெற்றிருந்தது. முதலமைச்சர் திரு. பி. எஸ். குமாரசாமி ராசா அவர்கள், உள்நாட்டுச் செயலாளர். திரு. ஓ. புல்லாரெட்டி அவர்கள், சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. சர். ஏ. இலட்சுமணசாமி முதலியார் அவர்கள் முதலிய பலரும் தத்தம் கடைசி நன்றியை நல்கினர். பின் இவர் தம் பிறப்பிடமாகிய கட்டமஞ்சிக்கு அவ்வுடல் கொண்டுவரப்பட்டு ஆண்டு ஈம எரியிடை ஈயப்பெற்றது.

1951-பிப்பரவரி 24 காலை, 8-30 மணிக்குத் தம் எழுபத்தோராம் அகவையில் ஆண்டவன் அடியிணை எய்தி ஆரா இன்பத்தார்ந்தனர். அவர்கள் ஆவி என்றும் இன்புறுமாக அவர்களுடைய வளர்ப்புப் பெண்ணின் வழியுள்ளார்க்கு எங்கள் பரிவு உரித்தாகுக.

# உமாபதி தேவரான ஞானசிவ தேவர்

[சித்தாந்த கலாநிதி, ஔவை சு. துரைசாமிப் பிள்ளை.]

இற்றைக்குச் சுமார் 800 ஆண்டுகட்குமுன் நம் தமிழ் நாட்டில் சோழவேந்தரும் பாண்டி வேந்தரும் நாடு காவல் புரிந்து வந்தனர். சோழநாட்டில் கோவிராசகேசரிவன்மனான இரண்டாம் இராசாதிராசன் ஆட்சிபுரிந்து வந்தான். அப்போது பாண்டிநாட்டில் மதுரையில் பராக்கிரம பாண்டியனும் திருநெல்வேலியில் குலசேகர பாண்டியனும் இருந்துவந்தனர். சோழ பாண்டியர்கள் தம்முட் பூசலின்றி இனிதிருந்தமையின், நாட்டில் இன்பவாழ்வு நிலவிற்று.

அந்நாளில் ஈழநாட்டில் வாழ்ந்த ஈழ வேந்தர்கள் மிக்க செல்வாக்குடன் இருந்தனர். அவர்கள்பால் பொருளும் படையும் பெருகியிருந்தன. அதனால் அவர்கட்கு நல்ல புகழும் உண்டாகியிருந்தது. ஈழ வேந்தரது படைப்பெருக்கம் "இடம் சிறிது" என்னும் நினைவை எழுப்பிப் பிற நாடுகளை வென்று அடிப்படுத்த வேண்டுமென்ற தமிழ்வேந்தியல் அவாவையோ, கடல் வாணிகத்தைத் தமக்கே உரிமையாக்கிப் பிறர் கலம் கடலிற் செல்லலாகாதெனத் தடுக்கும் சேரலர் செருக்கையோ அவர்கள் உள்ளத்தில் எழுப்பவில்லை அதனால், அவர்கள் தம்மை யடைந்தார்க்கு உதவிபுரியும் அந்த அளவில் அமைந்தொழுகினர்.

தொண்டைநாட்டின் மேலைப்பகுதிக்குப் பல்குன்றக்கோட்டம் என்ற பெயர் நிலவிற்று. தொண்டைநாடு முற்றும் சோழ வேந்தர் ஆட்சிக்குட்பட்டிருந்ததெனினும் இப்பகுதியில் படைவீடு என்னுமிடத்தைத் தலைநகராகக்கொண்டு சம்புவராயர் என்னும் குறுநிலமன்னர்கள் ஆண்டுவந்தார்கள். அவர்கள் சோழ வேந்தர்கட்கு அவ்வப்போது வேண்டும் படைத்துணை செய்வர். இராசாதிராசன் காலத்தில் படைவீட்டிலிருந்து ஆட்சிசெய்த சம்புவராயன் எதிரிலி சோழச் சம்புவராயன் எனப்படுவன்.

பாண்டிநாட்டு மதுரையிற் பராக்கிரமபாண்டியன் இருந்து வருகையில் திருநெல்வேலிப் பகுதியிலிருந்து ஆட்சிசெய்த குலசேகரன் பாண்டிநாடு முழுதிற்கும் தானே தனிவேந்தாகவேண்டுமென்ற ஆசைகொண்டான். அவனுக்குரிய நண்பர்கள், பாண்டிநாடு ஒரு வேந்தனாட்சியில் நிலவுமாயின் அதன் ஆக்கம் பெருகுமெனச் சொல்லி அவனை ஊக்கினர். குலசேகரன் படையும் பொருளும் பெருக்கினன். அவனுடைய மனக்குறிப்புப் பராக்கிரமனுக்குத் தெரிந்தது. தன்னையும் தனது ஆட்சியையும்

காத்துக்கொள்ளும் முயற்சியில் அவன் ஈடுபட்டு ஈழவேந்தனை பராக்கிரமபாகுவைப் படைத்துணை புரியுமாறு வேண்டினான்.

ஈழ வேந்தன்பால் இலங்காபுரித் தண்டநாயகன் என்றொரு தானைத்தலைவன் இருந்தான். பெருவலியும் ஆழ்ந்த சூழ்ச்சியும் அத் தண்டநாயகன்பால் இருந்தன. மறப்புகழ் வேட்கையே அவனது வடிவம். பராக்கிரமன் விடுத்த வேண்டு கோளைக் கண்டதும் தண்டநாயகற்கு உள்ளம் பூரித்தது. ஈழ நாட்டின் மறப்புகழைத் தமிழகத்தில் நிலைபெறச் செய்தற்கு நல்லதோர் வாய்ப்பு உண்டானதாக எண்ணினான். பண்டைச் சோழ வேந்தரும் பாண்டி மன்னரும் ஈழநாட்டில் தங்கள் புகழொளியைப் பரப்பியிருப்பது அவனுள்ளத்தே பொறாமை யுணர்வைத் தோற்றுவித்திருந்தது. இதனால் அவன் பராக்கிரமனுக்கு ஈழப்படை சென்று துணை புரிவது தக்கதே என்று ஈழவேந்தனை பராக்கிரமபாகுவுக்கு எடுத்துரைத்தான். தொடக்கத்தில் பராக்கிரமபாகுவுக்குப் பராக்கிரம பாண்டியன் விடுத்த வேண்டுகோளை ஏற்றற்கு உள்ளம் செல்லவில்லை. மேற்கே கேரள வேணாட்டு வேந்தர்களும் வடக்கே சோழவேந்தரும் பொருளாலும் படையாலும் சிறப்புற்று விளங்க அவர்கள் துணையை நாடாது தன்னை நாடியது ஈழ வேந்தனுக்கு உண்மையிலேயே ஐயத்தை எழுப்பிற்று. இவ்வகையில் பராக்கிரம பாகு தன் துணைவரையும் ஏனைத் தானைத் தலைவர்களையும் ஆராய்ந்து இலங்காபுரித் தண்டநாயகன் தலைமையிலே பெரும் படையொன்றைச் செலுத்தத் துணிந்து அதற்கு ஆவனவற்றைச் செய்யுமாறு பணித்தான்.

பராக்கிரமன் ஈழவேந்தன் துணை நாடுவதையும், ஈழவேந்தன் துணைபுரிதற்கு உடன்படுவதையும் திருநெல்வேலியிலிருந்த குலசேகரன் தெரிந்துகொண்டான். ஈழப்படை வந்துசேருவதற்கு முன்பே, பெரும்படையொன்று கொண்டுசென்று மதுரையை முற்றிப் பராக்கிரமன் காவலை யழித்தான்; பராக்கிரமனுடைய படை குலசேகரன் படைக்கு ஆற்றாது சிதறிக்கெட்டது தானைத் தலைவரும் போர் மறவரும் மூலைக்கொருவராய் ஓடிவிட்டனர். பராக்கிரமனும் அப்போரில் குலசேகரனாற் கொலையுண்டான்; அவனுடைய மனைவி மக்களும் குலசேகரன் வாட்கு இரையாயினர். உரிமை மகளிருட் சிலர் உயிர்தப்பி மலைநாட்டிற் புகுந்து மறைந்து வாழ்ந்துவந்தனர். அவரிடையே பராக்கிரமனுடைய புதல்வர்களுள் கடைசி மகனான வீரபாண்டியன் மறைவாக மலைநாட்டில் இருந்துவரலானான். இப்போரின் விளைவாகக் குலசேகரன் எண்ணம் நிறைவேறியது. பாண்டி நாடு அவனது ஒருகுடைக்கீழ் வந்தது. திருநெல்வேலியிலிருந்த

குலசேகரன் மதுரைநகர்க்கண் பாண்டியரது அரசுகட்டிலேறி முடிவேந்தனாய் விளங்கலுற்றான்.

இந்நிலையில் இலங்காபுரித் தண்டநாயகன் தலைமையில் புறப்பட்டுவந்த ஈழப்படை இராமேச்சுரக்கரையில் வந்து இறங்கியது. பராக்கிரமன் கொலையுண்டதும் குலசேகரன் மதுரையிலிருந்து அரசியல் நடத்துவதும் கண்ட தண்டநாயகன் மனம் சினத் தியால் வெதும்பிப் புகைந்தது. கண்களில் தீப்பொறிகள் பறந்தன இராமேச்சுரத்துக் கடற்கரையில் காவல்புரிந்திருந்த குறுநிலத் தலைவனை வெருட்டித் துரத்தினான். அதனைத் தனக்கு அடிப்படுத்திப் பாண்டிக்கரையில் இருந்த குந்திக்குளம் என்ற ஊரையும் கைப்பற்றிக்கொண்டான். குந்திக்குளம் குந்துகளம் என்றும் காணப்படுகிறது. இப்போது அது சமரங்கபுரத்துக் கண்மையில் கும்பிகுளம் என்ற பெயர்கொண்டு விளங்குகிறது.

இலங்காபுரித் தண்டநாயகன் கடற்கரையைச் சார்ந்துள்ள பகுதியைச் சிறிது சிறிதாகக் கைப்பற்றுவதுகண்ட குலசேகரன், சுந்தரபாண்டியன் என்ற தலைவன் ஒருவனோடு படையொன்றை விடுத்து ஈழப்படையை ஈடழிக்க முயன்றான். பாண்டிப் படை வலியிழந்து பறந்தோடிவிட்டது; சுந்தரபாண்டியன் தோல்வியுற்றான். பின்னர்ப் பாண்டியராசன் என்பான் தலைமையில் ஒரு பெரும்படை சென்றது அது கண்டதும் தண்டநாயகன் தானை சீறியெழுந்து சினப்போர்புரிந்து பாண்டியராசனைப் புறந்தந்தோடச் செய்தது; அப்போரில் குலசேகரனுக்கு நெருங்கிய துணைவனாய் விளங்கிய ஆளவந்தான் எனனும தானைத்தலைவன் போர்ப்புண்பட்டு மாய்ந்தான். குலசேகரன உள்ளத்தில் அசைவு பிறந்தது. இலங்காபுரித் தண்டநாயகனுக்குப் பாண்டிநாட்டில் இடமும் வலியும் கிடைத்தன; எண்ணியவாறு போர்ப்புகழும் எய்துவதாயிற்று.

"பராக்கிரமனைத் தொலைக்கப் புகுந்து பராக்கிரமபாகுவின் பகையுண்டாக்கிக்கொண்டோம்; இனி இதனைத் தடாதொழியின், பாண்டியர் குடியால் தமிழ்நாட்டிற்குட் பிற நாட்டினர் புகுந்து அரசு நிறுவினர் என்ற பெரும்பழியுண்டாமே" எனக் குலசேகரன் நினைந்தான். நாட்டில் ஆங்காங்கே சிதறிக்கிடந்த பராக்கிரமனுடைய தானைமறவர்களைத் தேடித் திரட்டினான். அந்நாளில் கொங்குநாட்டில் குலசேகரனுக்கு மாமன் ஒருவன் ஆட்சி செய்துகொண்டிருந்தமையின் அவனுடைய படைகளையும் சேர்த்தான். பாண்டிப்படையும் கொங்கப்படையும் சேர்ந்துவரத் தானே அப்படையை முன்னின்று நடத்தி இலங்காபுரித் தண்டநாயகனுடன் போர் தொடுத்தான்.

பராக்கிரமன் படைமறவர் உள்ளன்போடு போர் செய்ய வில்லை; கொங்கப்படை அத்துணைப் படைப்பயிற்சியின்றியிருந் தது. படையினது தொகை பெருகியிருந்ததேயன்றி வலி பெருகவில்லை. ஈழப்படையின் கிளர்ச்சியும் மறமும் படை தொடப்பும் கண்டவளவிலேயே குலசேகரன்படை வலிதளர்ந்து சிதையலுற்றது. பராக்கிரமனுடைய படைமறவருட் சிலர் ஈழப்படையுடன் கலந்து இலங்காபுரித் தண்டநாயகனுக்கே துணைசெய்தனர். முடிவில் குலசேகரன் தோற்றான். மதுரை நகர் தண்டநாயகன் கைக்கு வந்தது. அவன் மறச்சான்றோர் களை மலைநாட்டுக்குச் செலுத்திப், பராக்கிரமன் மகன் வீர பாண்டியனைத் தேடிக்கொணர்ந்து அவனையே பாண்டி வேந்த னாக்கினான்.

குலசேகரனோடு நடத்திய போரில் கீழைமங்கலம், மேலை மங்கலம் என்ற சிலவூர்கள் தண்டநாயகன் வசமானபோது அவற்றிற்குக் கண்டதேவமழவராயன் என்பவனைத் தலைவனாக்கி னன்; தொண்டி, திருவேகம்பம் முதலிய பகுதிகட்கு மழவ சக் கரவர்த்தி யென்பவனைத் தலைவனாக்கினான். இவ்வாறே புறத்தே பாண்டிநாட்டவர்க்குச் சிறப்புச் செய்யினும் அந்த நாட்டு மக் கட்கு அத் தண்டநாயகன் மிக்க துன்பம் செய்தான். ஊர்களைச் சூறையாடினன்; வயல்களில் தீ வைத்தனன்; உயிர்க்கொலை பல புரிந்தனன். இதனால், அத் தலைவர்கள் தண்டநாயகன் காட்டும் அன்பில் ஐயமுற்றனர்; செய்யும் சிறப்பில் நம்பிக்கை இழந்தனர்.

இதுநிற்க, படையிழந்து பரிபவப்பட்டோடிய குலசேக ரன் தென்பாண்டி நாட்டிட்புகுந்து பெரும்படை யொன்றைத் திரட்டிக்கொண்டு வந்தான் அவன் வரவுகண்ட மழவராய னும் மழவசக்கரவர்த்தியும் குலசேகரனோடு கூடிக்கொண்டு மதுரையை முற்றுவாராயினர். அதனால் பேரச்சம்கொண்ட வீரபாண்டியன் மதுரையைவிட்டு ஓடிவிட்டான். தண்டநாயக னும் கடற்கரைப் பகுதிக்கோடி ஈழவேந்தனைப் படையொன் றைத் துணையாகச் செலுத்துமாறு வேண்டிக்கொண்டான். வேண்டியவாறே ஈழநாட்டினின்றும் வந்த பெரும் புதுப்படை யுடன் கூடி இலங்காபுரித் தண்டநாயகன் குலசேகரனை மறுபடி யும் பொருது வென்று வெருட்டிவிட்டு வீரபாண்டியனுக்கு மதுரையில் முடிசூட்டி வெற்றிவிழா நடத்தினான். பின்பொரு கால் குலசேகரன் ஸ்ரீவில்லிபுத்தூரருகே ஈழப்படையொடு பொருது தோற்றுத் திருநெல்வேலிப் பகுதிக்குச் சென்று சேர்ந்தான்.

பன்முறை முயன்று வெற்றிபெறாமை ஒருபுறம் வருத்த, மற்றொருபுறம் தன் செயல்களால் ஏதில் ஈழப்படைக்குத் தமிழ்

நாட்டில் ஏற்றமும் இடமும் உண்டானது குலசேகரனுக்குப் பெருவருத்தத்தைச் செய்தது. அந்நாளில் கோளநாட்டரசரினும் சோழவேந்தரே உலகுபுகழும் போர்ப்புகழ் எய்தியிருந்தனர். அவர்களால்தான் தமிழகத்தின் தனிப்புகழும் கெடாது நிலைபெற்றுவந்தது. குலசேகரன் அதனை எண்ணினான் இராசகேசரிவன்மனை இரண்டாம இராசாதிராசன்பால் சென்று நிகழ்ந்தது முற்றும் அவனுக்கு நன்கு எடுத்து இசைத்தான்.

இரண்டாம் இராசாதிராசன் குலசேகரனுக்கு வேண்டும் அறிவுதவிப் பெரும்படையொன்றைக் குலசேகரனுக்குத் துணை புரியுமாறு விடுத்தான். அப்படைக்குத் தலைவனாக எதிரிலி சோழச் சம்புவராயன் மகனை திருச்சிற்றம்பலமுடையான் பெருமான்நம்பிப் பல்லவராயன் என்பான் சென்றான். சோழர் படையின் தென்திசைச் செலவு கண்டமாத்திரையே பாண்டிப் படை உடைந்தோடிற்று; பராக்கிரமன் மகன் வீரபாண்டியனும் முன்போல் ஓடிவிட்டான். சிங்களப்படை சிதறுண்டுபோயிற்று. குலசேகரன் மதுரைக்கரியவனானான். இதனையறிந்த பராக்கிரமபாகு மறுபடியும் இலங்காபுரித் தண்டநாயகனையும் சயதா தண்டநாயகனையும் இருபெரும் படைகட்குத் தலைவராக்கித் தமிழ்நாட்டிற்குச் செலுத்தினான். ஈழப்படையும் குலசேகரனது தூசிப்படையும, தொண்டி, பாசிப்பட்டினம் என்ற இடங்களிற் கைகலந்து பொருதன. அவற்றுள் ஈழப்படையே வெற்றிபெற்றது. அதனால் அப்பகுதிகளில் வாழ்ந்த மறவர்களும் பிறரும் ஈழப்படைத் தலைவர்கட்கஞ்சி அவர்வழி நிற்பாராயினர். அவர்கட்குத் தலைவனை மாளவ சக்கரவர்த்தியென்னும் ஒருவனுக்குப் பொன்னும் பொருளும் தந்து தமக்குத் துணையிருக்குமாறு மனத்தைத் திரித்துக்கொண்டனர். அவரது படையும வடக்குநோக்கி முன்னேறுவதாயிற்று. திருச்சிராப்பள்ளிப் பகுதியைச் சேர்ந்த ஆலம்பாக்கத்தில் வாழ்ந்த சிவப் பிராமணர் சிலர் ஈழப்படை வடக்குநோக்கிவருவது கேட்டஞ்சி ஊரைவிட்டு ஓடத்தலைப்பட்டனர்.

பின்னர்ச் சென்ற சோழர் பெரும்படையுடன் பாண்டிப் படையும் கொங்குநாட்டுத் தலைவர் விடுத்த கொங்கப்படையும் வந்துசேர்ந்தன. முப்பெரும்படையும் கடல்பெயர்ந்து செல்வதுபோல நம்பிப் பல்லவராயன் தலைமையில் செல்லலுற்றன. ஈழப்படை வடக்கே கானப்பேர் நோக்கி வந்துகொண்டிருந்தது.

தொண்டைநாட்டில் காஞ்சிமாநகரைச் சூழ இருக்கும் பகுதிக்கு எயிற்கோட்டம் என்பது பெயர். கங்கை பாயும் நாடாகிய கௌடதேசத்திலிருந்து சிவாச்சாரியர் பலர் தென்னாட்டிற்கு வந்து மடங்கள் நிறுவி, மக்களுக்குச் சிவதன்மங்களை

(சிவாகம நெறிகளை) அறிவுறுத்திவந்தனர். தீக்கை முறைகளை முதற்கண் உண்டாக்கினவர்கள் அவர்களே. களச்சூரி வேந்தரும் மாளவ வேந்தரும் சோழ வேந்தரும் பிறரும் இம்மடங்கள் புரிந்த சிவப்பணியின் பொருட்டு ஊர்களும் விளைநிலங்களும் பொருளும் தந்து சிறப்பித்தனர். அவர்கள் நிறுவிய மடங்கள் கன்னடம், தெலுங்கு, தமிழ் ஆகிய நாடுகளில் ஆங்காங்கு இருந்து சமயத் தொண்டுபுரிந்தன. மக்கட்குச் சமயக் கல்வி கற்பித்தலும், மருத்துவச்சாலை நிறுவி உடற்குண்டாகும் நோய்களைப் போக்குவதும், காணார் கேளார் அனாதைச் சிறுவர்கள் ஆகியோரைத் தொகுத்து ஆதரித்து அறிவு நல்குவதும் இம் மடங்கள் செய்த சிறந்த பணிகள் இதனால் நாடாளும் வேந்தர் இம் மடங்களின் தலைவர்பால் ஞானவுரை கேட்டு மாணவராவது பெருஞ் சிறப்பெனக் கருதினர்; மாணவரான வேந்தர் சிலர் தம்மை மாணவரென்னாது புதல்வரெனவே கூறிக்கொண்டனர். சமயம் விசேடம் நிருவாணம் எனப்படும் மூவகைத் தீக்கைகளையும் வேந்தர்கள் பெற்றனர். களச்சூரி கணபதிவேந்தன் தான் பெற்ற தீக்கை காரணமாகத் தன்னைத் தீக்கா குரவர்க்குப் புதல்வனாகவே கூறிக்கொண்டான். பெருவேந்தர்களை அடியொற்றிக் குறுநிலத் தலைவர்களும் இவ்வாறு சிவதீக்கை பெற்று "ஞானப் புதல்வர்களாய்"* விளங்கினர். சிவதீக்கை செய்து சிவதன்மங்களை அருளிய சிவாச்சாரியர் பலர் வேந்தர்கட்கு "ராஜகுரு"†வாக இருந்தனர். சிவாச்சாரியர்களைச் சிவமென்றே கருதி வழிபட்டனர். இராசாதிராசன் காலத்தில் திருவொற்றியூரில் பெரியதோர் சைவமடம் இருந்தது. அதற்குத் தலைவர் சதுரானன பண்டிதர்; அதனால் அது சதுரானன பண்டிதர் மடம் என்று பெயர் பெற்றது. அதன்கண் சிவாகமங்கள் மக்கட்கு உரைக்கப்பெற்றன. மடத்து ஆசிரியர் திருக்கோயில்களில் வியாகரணம் முதலிய கல்விநெறிகளைக் கற்பித்தனர். அது கற்பிக்கும் மண்டபத்துக்கு வியாகரணதான மண்டபம் என்றும் பெயர். அம்மண்டபத்தில் திருவிழாக்காலங்களில் சதுரானன பண்டிதர் மடத்துச் சான்றோர், அங்கு வந்து கூடும் மக்களைத் தொகுத்துச் சமயச் சொற்பொழிவுகள் செய்தனர். அச்சொற்பொழிவுகட்கு நாடாளும் வேந்தரும் வந்திருப்பர். பங்குனி உத்திரவிழா வொன்றில் திருவொற்றியூரில் இராசாதிராசன் வந்திருந்து கேட்க, சதுரானன மடத்து வாகீச பண்டிதர் என்பவர் ஆளுடைய நம்பிகளின் வரலாற்றைச் சொற்பொழிவு செய்தாரென அக்கோயில் கல்வெட்டே கூறு

* Annual Report on S. Indian Epigraphy for 1917. Para. 35
† Epigraphica Indica Vol. XXV. p. 309 f.

கின்றது. இவ்வாறு நாட்டில் ஆங்காங்கு மக்கட்குச் சமய வறிவும் சமயவொழுக்கமும் மடத்துத் தலைவர்களால் கற்பிக்கப் பெற்று வந்தமை நாட்டுவரலாற்றைப் பயில்வோர் இல்லாமையால் மறைந்துபோயிற்று. மடங்கட்கு அளவிறந்த பொருளும் தங்கட்குரிய அறத்துக்குப் புறம்பான தொழில்களும் உண்டாகவே, மடத்தலைவர்கள் ஏனைப்பெரிய பெரிய இல்லற மிராசுதார்களைப்போலத் துறவற மிராசுதார்களாய்விட்டனர்.

அந்நாளில் உமாபதி தேவரென்னும் சான்றோர் காஞ்சி நகர்க்குத் தெற்கில் ஏழெட்டுக்கல் தொலையிலிருக்கும் மாகறல் என்னுமிடத்தில் மடம் ஒன்று நிறுவி மக்கட்குச் சிவதன்மங்களையும் சிவஞானத்தையும் அறிவுறுத்தி வந்தார். சிவஞானச் செம்பொருளை வரையாது வழங்கியதுபற்றி அவரை ஞானசிவ தேவரென்றும் மக்கள் பாராட்டிப் பரவினர். அப்பகுதிக்குத் தலைவனாகிய எதிரிலி சோழச்சம்புவராயன் அவர்பால் தீக்கை பெற்று அவர்க்கு ஞானப்புதல்வனானான். அவர் இனிதிருந்து தம்முடைய சமயப் பணிகளை நன்கனம் ஆற்றுதற் பொருட்டுப் பொன்னும் பொருளும் மிகுதியும் நல்கினான். அவர் செய்யும் வழிபாட்டு முறைகளில் சம்புவராயன் உள்ளத்தில் மிக நம்பிக்கையிருந்தது. அவர் எண்ணுவது எண்ணியவாறே நிகழுமென எண்ணினான்; எத்தகைய அரசியல் நிகழ்ச்சிக்கும் அவருடைய அறவுரையும் அறிவுரையும் அவனுக்குவேண்டியிருந்தன

இந்நிலையில், சோழவேந்தன் பணிமேற்கொண்டு தன் மகன் பல்லவராயன், பாண்டியன் குலசேகரன் பொருட்டுச் சோழர் படைத் தலைவனாய்ச் சென்றிருப்பதும், போரும் ஈழப்படையை எதிர்த்து நிகழ்வதும், தொடக்கத்தில் பாண்டிப்படை ஈழப் படைக்குத் தோற்றதும், பின்பு கொங்குநாட்டுத் தானை வந்து சோழர்படையுடன் கூடிப் பாண்டிப்படைக்குத் துணையாய்ப் போர்தொடுத்திருப்பதும் எதிரிலிசோழன் கேள்வியுற்றான். ஈழப்படைத் தலைவர்கள் தாம்வென்ற பகுதிகளில் மக்களைக் கொன்றும், ஊர்களைத் தீக்கிரையாக்கியும் கோயில்களைச் சூறையாடியும் கொடும்பாடு செய்வது சம்புவராயனுக்குத் தெரிந்தன ஈழர்கள் செய்யும் கொடுஞ்செயல்களைக் கேட்குந்தோறும் சம்புவராயன் உள்ளத்தில் கலக்கம் தோன்றுவதாயிற்று. பாண்டிநாட்டு வடவெல்லை நோக்கி முன்னேறிவரும் ஈழப்படை சோழநாட்டிற்குள் புகுமோ என்றோரெண்ணம் தோன்றி அவன் மனத்தை அலைப்பதாயிற்று. இரவு பகல் கண்ணுறக்கம் இலனானான் எதிரிலிசோழச் சம்புவராயன்.

ஒருநாள் தன் மனக்கவலையை ஞான குருவாகிய ஞானசிவதேவரிடம் தெரிவிக்கக் கருதிப் படைவீட்டினின்றும் புறப்

பட்டு எயிற்கோட்டத்து ஆற்பாக்கத்திற்குச் சென்றான். சம்புவ ராயனது வரவறிந்த ஞானசிவதேவர் அவனை அன்புகனிய வர வேற்று நல்வாழ்த்து வழங்கினார் வேந்தன் அவருடைய திரு வடியில் வீழ்ந்து வணங்கி, அரசியல் உலகில் பாண்டிநாட்டுத் தலைவர்கட்கும் ஈழநாட்டுத் தலைவர்கட்கும் இடையே போர் நிகழும் செய்திகளை விரிவாக எடுத்து மொழிந்தான்; முடிவில் தன் மனக்கவலையைத் தெரிவித்து, "இது எங்ஙனேயாமோ என்று விசாரம் தோன்றி வருத்துகிற"தென்று முறையிட்டான்.

அது கேட்டதும் ஞானசிவதேவர் சம்புவராயன் உள்ளத் தில் நிகழும் அலமரலைப் போக்குவது குறித்து, அவர் பயின் றுள்ள புராண இதிகாசங்களில் கண்ட நிகழ்ச்சிகள் பல எடுத் தோதி ஆறுதல் மொழிந்து, திருவருளியக்கத்தின் சிறப்பையும், அதனையுணர்ந்து அதன்வழி நிற்பார்க்கு "இடும்பையும் இடுக்கணும் பரிவும் துன்பமும் கடும்பகற்பட்ட பனிபோல் மறைந்தொழியும்" என்ற திறத்தையும சைவாகமங்கள் சைவத் திருமுறைகள் வாயிலாக எடுத்தோதித் தெருட்டினார். அவ்வுரைக ளால் ஒருவாறு தெளிவுற்றானாயினும, ஞானாசிரியரை மறுபடி யும் வணங்கி, "ஈழப்படையாகிறது சாலவும் பாபகர்மாக்கள நிறைந்தது; அவர்கள் சோழமண்டலத் தெல்லையிலே புகுதில் ஸ்ரீமகாதேவர் கோயில் உள்ளிட்ட தேவர்கள கோயிலுக்கும் பிராமணருக்கும் ராஷ்டிரத்துக்கும் அடங்க விரோதமுண்டா கும; இதற்குப் பரிகாரமாக ஜபஹோமார்ச்சனங்களால் எல் லாப்படியாலும அவர்கள் அபிஷ்டம் அதம்பண்ணியருள வேண்டும"* என்று வேண்டிக்கொண்டான்.

ஞானசிவதேவர் சம்புவராயனுடைய உள்ளவேட்கை தெளிய விளங்கியதும், தானும் மனம் தெளிந்து, "ஈழப்படை யாகிறது, சாலபாபிஷ்டருமாய்த் துர்ச்சனருமாய்த் திருவிரா மேஸ்வரத்தில் தேவர் கோயிலைத் திருக்காப்புக்கொண்டு பூஜைமுட்டப்பண்ணி அங்குள்ள ஸ்ரீபண்டாரமெல்லாம் கைக் கொண்டு சிவத்துரோகிகளாயினரென்பதும் அறிந்தோம்; அவர் கள் பூசலிலே அறப்பட்டுத் தறப்புண்டு போம்படிக்கு அதி ருஷ்டமுகத்தாலே வேண்டும் யத்னம் பண்ணுகிறோம்" என்று சொல்லி இரண்டு நாட்குப்பின் சம்புவராயன் முன்பிலே "அகோர சுபூஜை" யைத் தொடங்கினார். சம்புவராயனும் அநதப் "பூஜை"யைத் தொடங்கிவைத்துவிட்டுப் படைவீடு சென்று சேர்ந்து போர்க்களத்தில் செயற்குரிய அரசியற்

---

* இச்சொற்களும் மேல் காட்டப்படுவன யாவும் ஆற்பாக்கம கல் வெட்டில் உள்ளவை. (A. R. on S. Indian Epigraphy Madras. No. 20 of 1899; No. 474 of 1905)

செயல் முறைகளைச் செய்துகொண்டிருந்தான். ஆற்பாக்கத்தில் ஞானசிவதேவரது "அகோரசபூஜை" இருபத்தெட்டு நாட்கள் நடந்தது.

இதற்கிடையே, பாண்டிநாட்டில் சோழபாண்டியர் படையும் ஈழப்படையும் கடும்போர் புரிந்தன. ஈழப்படைத் தலைவர்கள் தொண்டி, தேவிபட்டினம், மானமதுரை, நெட்டூர், சீவில்லிபுத்தூர், வேலங்குடி, திருப்புத்தூர், விக்கிரமமங்கலம் முதலிய இடங்களில் பாண்டிப்படையை வென்றும் வெருட்டியும் மேன்மையுற்றார்கள்; ஆயினும் நாட்டின் பல விடங்களிலும் சோழர்படையால் அலைப்புண்டு திரிந்தமையின் ஈழப்படை நாளடைவில் வலிகுன்றத் தலைப்பட்டது இடையிடையே இருந்த உண்ணாட்டுத்தலைவர்களின் ஆதரவைப் பொருள் கொடுத்து விலைக்கு வாங்கித் திரிந்ததனால் ஈழத்தலைவர்பால் பொருட்குறைவும் உண்டாயிற்று. ஈழநாட்டுமறவர் நாட்டு மக்கள்பால் அன்பின்றித் துன்பமே மிகச் செய்தமையால் மக்கட்கு அவர்கள்பால் வெறுப்பும் பகைமையும் இயல்பாகவே உண்டாய்விட்டன.

ஒற்றர்கள் வாயிலாக ஈழப்படைக் குளதாகிய குறைபாட்டினை யுணர்ந்த சோழர் படைத்தலைவர் வேறொரு படையினைத் துணை செய்ய விடுமாறு சோழவேந்தனை வேண்டினர். வேண்டியவாறே பெரும்படையொன்று விரைந்து வந்து சேர்ந்தது. சோழர் பெரும்படை புதிது வந்தணைந்த பெரும்படையுடன் ஈழப்படையை எதிர்நின்று தாக்கி அதனை சீடழிக்கலுற்றது. மறத்திக் கிளர்ந்தெழப் பொரும் தமிழ்ப்படைமுன் ஈழப்படை எதிர்நிற்கலாற்றாது உடைந்தோடலுற்றது. ஈழப்படைக்குத் துணைசெய்த பாண்டித்தலைவர் சிலர் இருந்தவிடம் தெரியாவாறு ஓடி ஒளித்தனர். ஈழப்படை இதுகாறும் பெற்றுப் போந்த வெற்றியெல்லாம் பகற்கனவாய் மறைந்தழிந்தன.

இவ்வாறு நாடோறும் தமிழ்ப்படையே வெற்றிசிறந்து மிகுவது கண்ட குறுநிலத் தலைவர் பலரும் சோழர்படையின் பக்கல் நின்று துணைசெய்வாராயினர். ஈழப்படைத் தலைவர்களான இலங்காபுரித்தண்ட நாயகனும் சயதர தண்டநாயகனும் அவர்கட்குத் துணையாக வந்த தானைத்தலைவர்களும் "இனி, இங்கே போர்புரிந்து வெற்றி பெறுவதென்பது இயலாது," எனத் தெரிந்து தம் ஈழநாட்டிற்கு ஓடிவிட்டனர். பாண்டியன் குலசேகரனுடைய ஆட்சி நிலைபேறுகொண்டது.

இவ்வெற்றி நலத்தால் சோழவேந்தனை இராசாதிராசனது புகழ்பெருகிற்று. பாண்டிநாட்டு மக்கள் சோழவேந்தன் படைமறவரைப் பாராட்டி வாழ்த்தினர். படைத் தலைவனை

பல்லவராயன், சோழர்படைக்கு எய்திய வெற்றிநலத்தையும் வேந்தன் புகழ்ப்பெருக்கத்தையும் தன் தந்தைக்குத் திருமுக மெழுதித் தெரிவித்தான். எதிரிலி சோழன் இன்பக்கடலில் மூழ்கினன். தமிழ்ப்படை பெற்ற வெற்றிக்கு ஞானசிவ தேவ ரது "அகோர சுபூஜை" காரணம் என எதிரிலி சோழச் சம்புவ ராயன் எண்ணினன்; நேரே ஞானசிவர்பால் சென்றான்.

சம்புவராயன் வந்து சேருமுன் ஞானசிவ தேவருக்குச் செய்தி தெரிந்துவிட்டது. அவருக்கும் மகிழ்ச்சி மிகுந்தது. இறைவன் திருவருள்தான் இவ்வெற்றியை நல்கிற்றென அவரும் எண்ணி அத்திருவருளை வழுத்தினார். சம்புவராயனுக்கு ஞான சிவ தேவர்பால் பெருமதிப்பும் பேரன்பும் உண்டாயின. ஞான சிவ தேவருடைய திருவடிகளில் பன்முறையும் வீழ்ந்து வணங் கிப் பரவினன். முடிவில், அவரைக் கைதொழுது, "தேவர் செய்த அதிருஷ்டயத்னமாய் இப்படிப் பலித்தது; இதற்குத் தேவர் ஸ்ரீபாத பூஜையாக நான் தருவதை ஏற்றருளவேண்டும்," என்று இறைஞ்சினன். ஞானசிவ தேவர், சம்புவராயனை நோக்கி, "நீர் நமக்கு ஏதேனும் முன்பு குறைவாகச் செய்த துண்டோ? ஒன்றும் இல்லை; எல்லாம் உம்முடையனவாக இருக்கின்றவே," என்றார். "தேவர் ஸ்ரீபாத பூஜையாக இப் போது ஏதேனும் தரவேண்டும் என்று என் உள்ளம் விரும்பு கின்றது," என்று சம்புவராயன் வற்புறுத்தவும் ஞானசிரியர், "அவஸ்யம் ஏதேனும் தரவேண்டுமென்றிருந்தால் ஆற்பாக்க மாகிற இந்த ஊரைச் செம்பிலும் கல்லிலும் வெட்டித் தருவது," என்று தெரிவித்தார்.

பின்னர்ச் சம்புவராயன், சோழவேந்தனது ஆணை பெற்று அவனது ஐந்தாமாண்டு நிகழ்ச்சியாக, "ஜயங்கொண்ட சோழ மண்டலத்து எயிற்கோட்டத்து மாகறல்நாட்டு ஆற்பாக்கத்து நன்செய் புன்செய் அகப்பட விளைநிலம் நூற்றறுபத்தேழுவேலி யும் ஏரிகோளும் நத்தமும் குட்டமும் கிணறும் மேனோக்கின மரமும் அகப்பட நாற்பாற்கெல்லையுட்பட்ட நிலம் வெள்ளவாரி பண்ணைக்கூலி தறியிறை தட்டார்ப்பாட்டம் அந்தராயம்உட்பட ஆயமெல்லாமகப்பட்ட ஏகபோகமாக இறையிலியாகக் கௌட தேசத்துத் தக்ஷிணராடத்துக் கங்கோஜி சவர்ண கோத்திர மகாமகேஸ்வர சுருதி ஸ்மிருதி சிந்தே கார்நவஸ்ய தன் மாஸ்தை உமாபதி தேவரான ஞானசிவ தேவர்க்கு நீர்வார்த்துக் கொ டுத்துச் சூரிய சந்திரார்க்களுள்ளதனையும் செல்வதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொடுத்தேன் எதிரிலி சோழச் சம்புவராய னேன்," என்று கல்வெட்டுமாறு பணித்தான். இஃது ஆற்பாக் கத்துச் சிவன்கோயில் தென்சுவரில் இன்றும் யாவரும் காணக் காட்சியளித்துக் கொண்டுள்ளது.

# சில பேச்சு வழக்குகள்

[பி. லூர்துசாமி, பி. எஸ். ஸி.]

சிலம்பு, உச, பரல் பத்தில் சில பேச்சு வழக்குகள் ஆராயப் பட்டன. அவைகளில் சிலவற்றைத் திரும்பவும் கவனிக்கவேண் டும். 'குறுவட்டா' என்ற கலித்தொகைச் சொற்றொடர்க்கு நச்சினார்க்கினியர், 'சூதாடும் காயான வட்டைப்போன்று குறிய தன்மையன்' என்று பொருள் கூறியுள்ளார். ஆனால், ஒரே கலிப்பாவில், வல்லுப் பலகையைக் குறளனுக்கு உவமானமாகக் கூறிவிட்டு அப்பலகையில் விளையாடும் நெல்லிக்கா யளவுள்ள வட்டைத் திரும்பவும் அவனுக்கே உவமை கூறியிருப்பரோ என்ற ஐயம் எழுகின்றது. 'இளவட்டம்' என்ற தறகாலப் பேச்சு வழக்கிற்கும் 'குறுவட்டா' என்ற சொற்கும் உள்ள தொடர்பைக் கண்டோம். 'மூப்புவட்டம்' என்ற சொல் முது மையைக் குறித்துவருவதை நிகண்டுகளில் காணலாம். 'கனவட் டம்' என்றசொல் மூவேந்தரில் ஒருவருடைய குதிரைகளுக்குப் பெயராகவும் வழங்கியிருக்கின்றது. இளவட்டம், மூப்புவட்டம், கனவட்டம் என்ற சொற்களின் வழக்கத்திலிருந்து 'குறுவட் டம்' என்ற சொல்லே 'குறுவட்டா' என்று வந்தது என்பதில் பிழையிருக்கமுடியாது.

'விடலை, நம்பி' என்ற சொற்கள் உயர்ந்த தலைவனைக் குறித்து வரும் சிறப்புப் பெயர்கள். விடலை என்ற சொல் மணமாகாத உடன்போக்கில் செல்லும் தலைவனைக் குறித்து வழங்கியதையும் பார்த்தோம். மணமாகா - துடிப்புமிக்க இளை ஞர்களை விடலை என்றழைப்பதைக் கண்டோம். கலித்தொகை யில் மணமாகா இளைஞனைத்தவிர மணமாகி இழிவொழுக்கத்தி லிறங்கிய தலைவனும் விடலை என்றழைக்கப்படுகிறான். பரத்தை யிடம் சென்ற தலைவனைத் தலைவி இழித்துக்கூறுங்கால், அவனை விடலை என்றழைக்கிறாள். இச்சொல் சிறப்புப்பொருளில் வழங்கி இழிபொருள் பெற்ற வரலாற்றை இதிலிருந்து அறி கிறோம்.

'வயிறு விளங்குவாளா' என்று வயிற்றைச் சுட்டிக்கூறும் பேச்சு வழக்கைக் கவனித்தோம். 'வயிறு மாசிலீயரவனீன்ற தாயே' என்ற பதிற்றுப்பத்து வரிக்குப் பொருள் கூறிய பழைய உரையாசிரியர் 'அவனை யீன்ற தாய் வயிறு விளங்குவாளாக' என்று சொல்லியிருப்பது இப்பேச்சு வழக்கின் பழமையை நன்கு உணர்த்தும். கருவுற்றிருக்கும் மகளைத் தாய் 'வயிறும்

பிள்ளையுமா அழுகிட்டு இருக்கிறாள்' என்று கூறும் பேச்சு வழக்கையும் கேட்டிருக்கலாம். 'வாதுவல் வயிறே வாதுவல் வயிறே' என்று தொடங்கி, 'கல்லாக் காளையை ஈன்ற என் வயிறே' என்று முடியும் புறப்பாடல் வரியைப் படித்திருக்கலாம். தன் வயிற்றைத் தானே இழித்துக்கூறும் தாயின் பேச்சு இது. ஆதலின் பெண்களின் வயிற்றைச் சுட்டி வழங்கும் பேச்சு வழக்குகள் மிகப் பழமையான வரலாற்றை உடையன என்பது தெளிவு.

கந்தறுகோலம் என்ற பேச்சு வழக்கை முன்னரே விளக்கினோம். 'கந்துகட்டில்லாத பேச்சுப் பேசாதே' என்ற பேச்சு வழக்கும் சிலவிடங்களில் வழங்குகிறது இது வரையறையற்ற பேச்சு என்ற பொருளில் வழங்குகிறது கந்தில் கட்டியதிலே ஒழுங்கையும், கந்தில் கட்டாததிலே அலங்கோலத்தையும் குறிக்கும். கந்துக்கும் யானைக்கும் உள்ள நெருங்கிய தொடர்பைக் 'களிறும் கந்தும்போல நளிகடற், கூம்பும் கலனும் தோன்றும்' என்ற பாடல் வரிகள் காட்டும். 'கந்து கோளீயாது காழ்பல முருக்கி' என்ற பதிற்றுப்பத்து வரியிலும் கட்டுத்தறியிலடங்காத மதமேறிய யானைகளின் அழிவுவேலை சொல்லப்பட்டிருக்கின்றது.

> ' பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
> தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
> மார்புகடி கொள்ளே னாயி னார்வுற்(று)'

என்று வரும் அகப்பாடலில் கந்து என்ற சொல் பரத்தையின் பேச்சில் பயின்று வருவதைக் காண்க. பரத்தை தலைவனைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருவேன் என்று சூள் உரைக்கும் பகுதியில் இச்சொல்லைப் பயன்படுத்தியிருக்கிறாள். கந்துக்கும் யானைக்கும் உள்ள தொடர்பைக் குறித்து வந்த தொடர்கள் மனிதருக்குள் இருக்கும் தொடர்பைக் குறித்துத் தற்காலம் வழங்குகின்றன. 'கந்தறுகோலம்,' 'கந்து கட்டில்லாத பேச்சு,' 'தறிகெட்டுத் திரிதல்,' ஆகிய பேச்சு வழக்குகளில் கந்துக்கும் யானைக்கும் உள்ள தொடர்பைக் கூறும் செய்யுள் வழக்குகளின் உறவை உணரலாம். தனக்கு அடங்காது நடக்கும் பிள்ளையைப் பார்த்து, 'உனக்கு மதமா? கிறுகிறுப்பா?' என்று தாய் கேட்பதைக் கேட்டிருக்கலாம். 'மதமா' என்று கேட்கும் சொல்லில் மதமேறிய யானையின் செய்கை மறைமுகமாகக் குறிக்கப்படுவதை நோக்குக. 'கிறுகிறுப்பு' எனும் சொல் குடிகாரனின் செயலை மறைமுகமாகக் காட்டும். மனைவியை விட்டுப் பரத்தையை நாடும் தலைவனைக் கயிற்றை அறுத்துச்செல்லும் எருமைக்கும் எருதுக்கும் உவமித்தது உள்ளுறை

உவமமாகக் கூறும் பல அகத்துறைப் பாடல்களைப் படித்திருக் கலாம்.

> '...................................அண்டர்
> கயிறரி எருத்தின் கதழுந் துறைவன்'

என்ற குறுந்தொகைப் பாட்டு ஒரு எடுத்துக்காட்டாகும். 'தும்பு தெறித்துவிடல்' என்ற பேச்சு வழக்கும் தொடர்பை அறுத்துவிடல் என்ற பொருளில் வழங்குகின்றது.

> "சாவார்சான் றாண்மை திரிந்திலார் மற்றிவளைக்
> காவார் கயிறரீஇவிட் டார்"

என்ற திணைமாலைப் பாட்டில் அணங்கு போன்றவளை அறுத்து விட்டதாகக் கூறப்படுவதைப் பார்க்கவும்.

'முக்கி' என்ற சொல் 'உண்டு' என்ற பொருளில் சில விடங்களிலும் 'நிறைய உண்டு' என்ற பொருளில் வேறி டங்களிலும் வழங்குகின்றது. 'தெவு' என்ற சொல்லுக்குக் 'கொள' என்பது பொருள். இது தொல்காப்பிய சொல்லதி காரத்தில் காணப்படும். 'தெவிட்டுதல்' என்ற சொல்லைத் தனிச் சொல்லாகக்கொண்டு 'அடைதல்' என்ற பொருளை நச்சினார்க் கினியர் கூறியுள்ளார். 'தெவு' என்பதே தெவிட்டுதல் என்ற சொல்லின் மூலச்சொல்.

> 'கடுவுணங்கு பாறைக் கடவு தெவுட்டு'

என்ற ஐந்திணை எழுபது 36-ம் பாட்டு வரியில் வரும் 'தெவுட்டு' என்ற சொல்லுக்கு 'நிறைந்து நிற்கும்படியான' என்று பொருள் கூறப்பட்டுள்ளது. தற்காலத்தில் 'திகட்டி' என்ற சொல் நிறைய உண்பதால் ஏற்படும் சலிப்பைக் குறித்து வழங்குகிறது. 'தெவிட்டி' என்ற சொல்லின் மாற்றமே இச் சொல். தெவிட்டி என்ற சொல் முதலில் கொள என்ற பொரு ளில் வழங்கி, நிறையக்கொள எனப் பொருள்கூடப் பெற்று, தற் காலம் 'சலிக்க' என்ற பொருளொடு வழங்குகிறது.

'நாத்தூணங்கை' என்றொரு சொல் சிலப்பதிகாரத்தில் வருகிறது.

> 'சாவக நோன்பிக ளடிக ளாதலி
> னுத்தூ ணங்கையொடு நாள்வழிப் படூஉம்'

என்ற வரிகளுக்கு அடியார்க்குநல்லார், 'அடிகள் சாவகநோன்பி களாதலின் நங்கையார் நாத்தூணுருடனே நீங்களும் பகல்பொழு துண்ணும் அடிசில் சமைத்தற்குப் புதுக்கலங்களை விரையக் கொண்டு கொடுப்பீராக' என்று உரை யெழுதியுள்ளார். மேல்

வரும் பாட்டுவரி மாதரி ஆய்ச்சியரைப் பார்த்துக் கூறியதாகும். 'என்னுடை நங்கை யீங் கிருக்கெனத் தொழுது' என்ற வரியில் மாதரி கண்ணகியைத் தன் மருமகளாகக் கொண்டதும், கோவலனைத் தன் மகனாகக் கொண்டதும் தெரியும். நாத்தூணங்கை, நங்கை நாத்தூ ணென்க என்று பிரித்தெழுதாத உரையாசிரியர், பின்னர் 'நாத்தூணொடு நங்கை அடிசிலாக்குதற்கெனினுமமையும்' என்று எழுதியுள்ளார். முதலில் 'நாத்தூணங்கை' என்று ஒரு சொல்லாகக்கொண்டு ஐயை என்று பொருள் கூறியவர், பின்னர் அதையே இருகூறாக்கி ஐயையையும் கண்ணகியையும் குறிப்பதாகக் கொண்டார். அரும்பத உரைகாரர் 'நாத்தூணங்கை' என்பதை ஒரு சொல்லாகக்கொண்டு மாதரி மகள் ஐயை என்று பொருள் கூறியுள்ளார். ஆய்ச்சியரை அழைத்து, 'நாத்தூணங்கையொடு' அடிசிலாக்குதற்கு நல்ல புதுக் கலங்களைக் கொண்டுவரும்படி மாதரி கூறுகிறாள். அடிசிலாக்கியவள் கண்ணகி என்பது பின்வரும் வரிகளில் தெரிகின்றது. ஆதலின் ஐயை என்று பொருள் கொண்டால், ஐயை அடிசிலாக்குதற்கு என்ற உரைக்கும், கண்ணகி அடிசிலாக்கினாள் என்ற செய்திக்கும் முரண்பாடு ஏற்படுகின்றது. ஆதலின் 'நங்கையொடு நாத்தூண் அடிசிலாக்குதற்கு' எனக்கொண்டு கண்ணகியொடு ஐயை அடிசிலாக்குதற்கு என்று பொருள்கொள்ளவேண்டும். 'நாத்தூணங்கையொடு' என்ற தொடரில் 'நாத்தூணங்கை' என்பதை ஒரு சொல்லாகக்கொண்டால் 'ஒடு' என்ற உருபு வேண்டாததாகும். 'ஒடு' என்ற உருபு பெய்திருப்பதே நாத்தூண், நங்கை என்று பிரித்தெண்ண வேண்டியதை வற்புறுத்தும். உ. வே. சாமிநாதையர் 'நாத்தூண்' என்று கொண்டுள்ளார். கணவனுடன் பிறந்தவளை 'நாத்தி,' 'நாத்தனார்' என்றழைக்கும் வழக்குகளை அறிவோம். 'நாத்தூண்' என்றே மலையாளத்தில் இச்சொல் வழங்குகிறது. ஆதலின் 'மருமகளொடு, கணவனுடன் பிறந்தவள்' என்றே 'நாத்தூணங்கையொடு' என்பதற்குப் பொருள் கூறவேண்டும். நங்கையார் என்ற சொல் அண்ணன் மனைவியைக் குறித்து இப்பொழுது கொங்குநாட்டில் வழங்குகிறது. இவ்வழக்கின்படி பொருள் கூறினோமானால் மாதரி ஆய்ச்சியர்களிடம் நாத்தூணின் நங்கையாரும் (ஐயைக்கு அண்ணன் மனைவி) நங்கையாரின் நாத்தூணும் (கண்ணகிக்குக் கணவன் தங்கை) கூட சமைக்கப் புதுக்கலங்கள் கொணர்க எனக் கொள்ளவேண்டும். ஆனால் மலையாளத்தில் 'நாத்தூண்' என்ற சொல்லே உருமாற்றமின்றி அண்ணன் மனைவியைக் குறிப்பது மிகுந்த வியப்பைத் தருகிறது. நாத்தூண் என்றால் மலையாள வழக்குப்படி அண்ணியாகும். நங்கையென்றால் கொங்குநாட்டின் வழக்குப்படி அண்ணியாகும். ஆதலின் 'நாத்தூணங்கை' என்பது ஐயை

யின் அண்ணியாகிய கண்ணகி என்று பொருள் தரலாம். மூற் கால வழக்குக்கும் தற்காலவழக்குக்கும் எதிர்மாறானபொருளைத் தருகின்றன. தென்னார்க்காட்டில் பழைய வழக்கு மாறவில்லை. கொங்குநாடும் மலையாளமும் சேரநாடானமையால் அங்கு வழங்குபவை உண்மையெனக்கொண்டால் உரையாசிரியர்களை மறுப்பதாக முடியும்.

ஒரு தெருவில் உள்ள வீடுகளைக் குறிக்க வழங்கும் பேச்சு வழக்கைப் பார்க்கலாம். இருபக்கத்திலும் உள்ள வீடுகளைக் குறிக்க 'இந்தக்கையிலுள்ள வீடு, அந்தக் கையிலுள்ள வீடு' என்று பேசும் வழக்கம் சில பகுதிகளில் உண்டு. கை என்பது பக்கம் என்ற பொருளில் வழங்குகிறது மற்றும் எதிர்ப்பக் கத்து வீடு என்பதற்குச் சில பகுதிகளில் 'எதிர்ச்சரகில் உள்ள வீடு' என்று பேசுவதையும் கேட்டிருக்கலாம். 'வீதியின் இரண்டு சிறகுகள்' என்று சொல்வதையும் கேட்டிருக்கலாம். 'சிறகு' என்பது 'சரகு' என்று எளியோர் வாயில் வழங்கு கிறது சிறகு என்ற சொல் புறத்திலும் பதிற்றுப் பத்திலும் 'சிறை' என்று பயில்கின்றது.

> 'மன்றம் போந்து மறுகுசிறை பாடும்
> வயிரிய மாக்கள் கடும்பசி நீங்க'

என்ற வரியிலும் இன்னும் பிற பாடல்களிலும் 'மறுகுசிறை' எனும் சொல் தெருப் பக்கம் என்ற பொருளில் வருகின்றது. சிறை சிறகாகி, சிறகு சரகாகி, இருபுறம் தெருக்களையுடைய கிராமம் சரகமாயிற்று. கிராமத்தைச் சரகம் என்றழைப்பர் சிலர். சிறை மறுகுகளுடைய மன்றம் சரகம் எனப்பட்டது.

சுடுநீரில் குளிர்நீரைக் கலந்து சூடு தணியச் செய்வதற்கு 'நீர் வெளாவுதல்' என்று சொல்வர். மற்றும 'பந்தி வெளாவுதல்' என்ற பேச்சு வழக்கும் பயிலுகின்றது. நண்பர் இருவர் மனங்கலந்து பேசுதலை 'அளவளாவுதல்' என்பர். இச் சொல், 'அளவி' என்ற சொல் 'அளவி அளவி' என்று இரட் டிக்கும்வழித் தோன்றும். 'அளவி' என்பது கலந்து என்ற பொருளில் 'அற்புளஞ் சிறந்தாங் கருண் மொழி யளைஇ' என்ற சிலம்புவரியிலும் சங்கநூல்களிலும் வருகின்றன. ஆதலின் அளவளாவி என்ற சொல் பேச்சுவழக்கில் பயிலும் போது முன் னின்ற உயிரெழுத்து உயிர் மெய்யாய் மாறி 'வெளாவி' என்ற உருவம் பெற்றது என்று எண்ணற்கிடமுண்டு. ஆனால், 'யாந் தனக் குறுமுறை வளாவ விலக்கி' எனும் புறப்பாட்டு வரியில் 'வளாவ' எனும் சொல்லிற்கு உற்ற முறையால் கலந்து என்று பொருள் கூறப்பட்டுள்ளது. ஆதலின் 'வளாவ' என்பது

தனிச்சொல்லா அல்லது ‘அளவளாவ’ என்பதன் மறு உருவமா என்ற ஐயம் எழுகின்றது.

தினை, கேழ்வரகு போன்ற தானியங்களை உள்ளங்கையில் வைத்துத்தேய்த்துத் தோலுரிப்பதற்கு ‘ஞெமிட்டுதல், நிமிட்டுதல்’ என்று சொல்வர். இச்சொற்கள் ‘ஞெமிடி’ என்ற சொல்லின் மாற்றங்களாகும்.

> “கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி
> யங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்
> றிரையணற் கொடுகவு ணிறைய முக்கி’

என்ற நற்றிணை 22-ம் பாட்டு வரிகளில் ‘ஞெமிடி’ என்ற சொல் இதே பொருளில் வருவதைக்காண்க. இதே வரிகளில் ‘முக்கி’ எனும் சொல் உண்டு எனும் பொருளில் வருவதையும் காணலாம்.

தமிழ்நாட்டின் தென்பகுதிகளில் சூடு, குண்டு, குழை முதலிய பழமை வாய்ந்த சொற்கள் வழங்குகின்றன. சூடு அடித்தல் என்று சொல்லும்போது ‘சூடு’ அரிதாளை உணர்த்தும். ‘மடையடிகுண்டு’ என்று பேசுங்கால்குண்டு, ஆழத்தை உணர்த்தும். இலையைக் குழையென்பதும் அங்கு வழக்கத்திலுள்ளது. ‘ஓர்த்தல்’ என்ற சொல் நினைத்தல், கருதல் என்ற பொருள்களில் புறத்திலும் பிற பழைய நூல்களிலும் வருகின்றது. இச்சொல் ‘ஓர்மை’ என்ற பெயர்ச்சொல்லாய் நாஞ்சில் நாட்டுப் பகுதிகளில் வழங்குகின்றது. ‘ஞாபகம் இல்லை’ என்பதற்கு ‘ஓர்மையில்லை’ என்பர். ஆரஞ்சுப்பழத்தை உரித்தலைப் ‘பொளித்தல்’ என்று மலையாளத்தில் கூறுவர். இச்சொல் தமிழில் பேச்சு வழக்கில் இருப்பதாகத் தெரியவில்லை.

> “நாரை மருங்கி னீர்வரப் பொளித்து
> களிறு சுவைத்திட்ட கோதுடைத் ததரல்”

என்ற அகப்பாட்டு வரியில் ‘பொளித்து’ என்ற சொல் இதே பொருளில் பயில்வதைக் காண்க. மற்றும் நாம் ஆரஞ்சு என்று சொல்லுவதை அவர்கள் ‘நாரங்காய்’ என்பர். அதுவே தூய தமிழ்ச்சொல்லாகும். ‘நாரங்காய்’தான் ஆங்கிலத்தில் ஆரஞ்சு ஆனது வரலாறு.

‘கெண்டி’ என்ற சொல் சிறுகலத்தைக் குறிப்பதாய்ப் பேச்சு வழக்கில் வருகின்றது. இப்பெயர்ச்சொல் பழைய நூல்களில் பயிலாவிட்டாலும் வினைச்சொல்லாக வந்து ‘தோண்டி’ என்ற பொருளில் வழங்கினது. நீரைத் தோண்டும் கலம் தோண்டி ஆனதுபோல், கெண்டி எடுப்பது கெண்டியாயிற்று.

'நெடுங்கோட்டுப் புற்றத் தீயல்கெண்டி' என்ற நற்றிணை வரியில் வினைச்சொல்லாய் வருகிறது. 'உண்ட வீட்டில் கெண்டி தூக்கல்' என்ற பழமொழியும் உண்டு.

ஒருவனைப்பற்றிய ரகசியம் மற்றொருவன் காதில் தெளிவாக விழவில்லை என்று கொள்வோம். அஃது என்னவென்று ஆராய அவன் முற்படுகிறான். பிறிதொருவன் பிறருடைய ரகசியத்தை ஆராய்தல் கூடாது என்று அவனுக்குச் சொல்கிறான். அப்படிச் சொல்லும்போது 'அதை அவ்வளவு பெரிதாகத் தூண்டித்துருவாதே' என்று கூறுகிறான். இருட்டிலோ அல்லது பிறிதொன்றிலோ மறைந்திருந்த ஒன்றை விளக்கைத் தூண்டித் தேடுவது போல் தேடாதே என்பது விளக்கமான பொருள். மறைந்திருத்தலால் ரகசியத்தை 'மறை' என்றனர் பழந்தமிழர். தேடிப் பார்ப்பதற்குத் 'துருவி' என்ற சொல் 'தேறி' என்பதுபோல் இலக்கியத்தில் பெரிதளவு பயிலவில்லை.

> "களித்தானைக் காரணங் காட்டுதல்
> குளித்தானைத் தீத்துரீஇ யற்று"

என்ற குறளில் துருவி என்ற சொல் வழங்குகிறது. நீர்க்கடியுள் இருப்பவனை விளக்கினால் தேடமுடியாததுபோல குடிகாரனுக்குக் காரணங்காட்ட முடியாது என்கிறார் வள்ளுவர். இக்குறள் கையாண்ட உவமை சிறிது மாற்றத்தோடு 'தூண்டித் துருவிப் பார்த்தல்' என்ற பேச்சு வழக்கில் வழங்குகிறது. எளியோர் வாயில் வரும் பேச்சுவழக்கிலும் அழகிய கருத்துக்கள் அடங்கியிருப்பது இதன் மூலம் தெரிகிறது.

பெருநகை விளைத்த ஒரு நிகழ்ச்சியைப்பற்றி ஒருவர் மற்றொருவரிடம் கூறுங்கால், 'அது பெரிய கூத்தப்பா...' என்று துவக்கி அந்நிகழ்ச்சியை விளக்கிக் கூறுகிறார். மற்றும் கிண்டலும் கேலியுமாய்ப் பேசிக்கொண்டிருப்போரை,'என்னப்பாஒரே கூத்தடிக்கிறே' என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். பார்ப்பானொருவனை இரவில் தலைவி பயமுறுத்தவே அவன் அவளைப் பேயென்று எண்ணி அலறிப்புடைத்துக்கொண்டு ஓடுகிறான். அவனை ஏமாற்றிப் பயமுறுத்தின சிரிப்பூட்டும் நிகழ்ச்சியைத் தோழிக்குக் கூறுங்கால்

> "வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
> வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து"

என்று சொல்லுகிறாள். இது கலித்தொகையில் வருவதாகும். இதில் வரும் 'பெருங்கருங் கூத்து' என்ற சொற்றொடர் மேற்கூறிய பேச்சு வழக்கை ஒட்டி வருவதைப் பார்க்கலாம்.

தமிழ்நாட்டில் சில இனத்தார் பேசும்போது சில குறிப்பிட்ட தனிப்பட்ட பேச்சுவழக்குகளைக் கையாளுவதைக் கேட்டிருக்கலாம். பார்ப்பனர்கள் பேசும் சில பேச்சுவழக்குகள் பிற தமிழரிடையே வழங்குவதில்லை. 'தண்ணீர்' என்பதற்குத் 'தீர்த்தம்' என்பர். 'தண்ணீர்' என்ற சொல்லே குடிகாரர்கள் பேச்சு வழக்கில் கள்ளைக் குறிக்கின்றது. கள் குடிக்கிறதைக் குடிகாரர்கள் 'தண்ணீபோடறது' என்பர். மந்திரம் போடும் கோடங்கி சாராயம குடிக்க மூன்றுபணம் வேண்டுமென்று சொல்வதற்குப்பதில் 'தீர்த்தத்துக்கு மூனுபணம் கொடுங்க' என்பான். ஆங்கிலத்தில் செகப்பிரியர் எழுதிய 'நான்காவது என்றி' எனும் நாடகத்தில் அரசன்மகன் குடிகாரர்களுடன் சேர்ந்துகொண்டு குடித்துக்கொண்டே பேசுவதாக வரும் பகுதி உளது. அதில் அவன் மது அருந்துவதைத் 'தண்ணீர் குடிப்பது' (watering) என்றே சொல்கிறான். இம்முறையில் பேசியதிலிருந்து அரசன்மகன் குடிகாரர் பேச்சுவழக்கை எளிதில் கற்றுக்கொண்டது தெரிகின்றதென ஆங்கில அறிஞர்கள் கூறுவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் இப்பேச்சுவழக்கில் ஒற்றுமை இருக்கின்றது. மதச்சார்பான நிகழ்ச்சிகளில் பாமரரும் வடமொழிச் சொற்களையே கையாளுகின்றனர். மந்திரித்த நீரைத் தீர்த்தமென்றும், புண்ணிய நீரை எடுத்துச்செல்லும் கலத்தைக் 'கரகம்' என்றும், மர இலையைப் 'பத்திரிகை' என்றும் அழைக்கின்றனர்.

நல்லதாக வாங்கினான் என்பதற்கு வட பகுதிகளில் 'நறுவிசா வாங்கினான்' என்பர். நறுவிதாக என்பது 'நறுவிசாக' என்று மாறியது. பதம் என்ற சொல் சிறந்த செவ்வியுடையது என்ற பொருளில் பழைய நூல்களில் பயிலுகிறது. ஒரு சிறுவனை 'நல்லபடியாக இரு' என்று சொல்வதற்குப் 'பதவிசா இரு' என்று சொல்வர். பதவிதாக இரு என்பதே இப்படி மாறியிருக்கவேண்டும். மற்றும் 'பையன் பதவிசு' என்ற பேச்சு வழக்கில் பையன் நல்லவன் என்ற பொருளில் 'பதவிசு' என்ற சொல் பெயர்ச்சொல்லாக வருகிறது. வணக்கமானவன் என்பதற்குப் பதவிசானவன் என்றும் சொல்வர்.

இனிப் பேச்சுவழக்கில் வரும் வசைமொழிகளைப் பார்ப்போம் திட்டுவதில்கூட காலத்திற்கேற்ப, இடத்திற்கேற்ப பேச்சுவழக்குகள் மாறுவதைக் காணலாம். திருநெல்வேலிப் பகுதியில் 'ஆக்கங்கெட்ட அருள்மாறி மூதி' என்று திட்டுகிறார்கள். சோழநாட்டிலோ சென்னைப் பகுதியிலோ இதைக்கேட்டவர்கள் வசவு என்றுகூட உணரமாட்டார்கள். இலக்கணமாகத் திட்டுவது போலிருக்கிறது. இதில் அருள் என்பது

னுக்கு இயற்கையில் இருக்கவேண்டியது. ஆக்கம் என்பது செயற்கையில் ஒருவன் அடையவேண்டியது. அஃதாவது தனது முயற்சியில் ஒருவன் பெறும் நல்லநிலையே ஆக்கம். இயற்கையாக ஒருவன் பெறும் அருளையும் இழந்து, தான்பெற்ற நல்ல நிலையையும் இழந்த மூதேவி என்பதே இவ்வசையின் பொருள். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் 'நல்வினைவழி ஆக்கங் கூறல்' என்று எழுதிய நச்சினார்க்கினியரின் விளக்கத்தை இது சார்பாகக் கவனிக்கவேண்டும். "அவனுக்கென்ன மதியில்லையா ஸ்திதி இல்லையா" என்று பேசுவதையும் கேட்டிருக்கலாம். அந்த ஸ்திதி என்பதே ஆக்கம்.

அகநானூறு, நற்றிணை முதலிய பழைய அகத்துறை நூல்களில் பெரிதும் மருதப்பாக்களில் ஒரு மரபைப் பார்க்கிறோம். அப்பாக்களில் தலைவி தலைவனைக் கடிந்தும் இழித்தும் கூறும் பகுதிகள் பலவுள. தலைவி அவனைக் கொடுமைபுரியும் நீர் நாய்க்கும், எருமைக்கும், வாளைமீனுக்கும் உள்ளுறை உவமயாக உவமித்து இழித்துக் கூறுகிறாள். பழித்துக் கூறிய அப்பாக்களிலேயே இறுதியில் அவனை 'வாழி' என்று வாழ்த்துதலைப் பெரும்பாலும் பார்க்கிறோம். அவனது இழி வொழுக்கத்தைப் பழிக்கும் தலைவி ஏன் இப்படி வைத வாயாலேயே வாழ்த்தவேண்டும்? சிலப்பதிகாரத்தில் கானல் வரிப்பாக்களில் மாலையை இழித்துக் கூறுவதாகச் சில பாக்கள் உள. ஆவிகொள்ளும் மாலையை இறுதியில் தலைவி 'வாழிமாலை' என்றே வாழ்த்துகிறாள்.

தினமணிக் கதிரில் ஒரு எழுத்தாளர் "பாட்டிகளின் வசவுகள்" என்று சிலவற்றைத் தொகுத்து எழுதியுள்ளார். அவை வசவுபோலத் தோன்றினும் உண்மையில் வாழ்த்தாகவே உள என்கிறார். 'அடராசனுவே, யமனேசசறுவே, கூத்தடிததிடுவான், நாசமத்துப்போவாய்' என்பன சில. அரசை ஆளுவாய், எமனை எய்த்து நெடுங்காலம் வாழ்வாய், கூற்றை விரட்டுவாய் என்பன அவைகளின் பொருள்கள் எனக் காட்டுகிறார். வசையில் வாழ்த்து மறைந்துளதைக் காண்கிறோம். எமனை முழுங்கிடுவாய் என்று திட்டுவதைக் கேட்டிருக்கிறேன். மற்றும் 'எமசாந்தி வாங்கினவனே' என்று கொங்கு நாட்டில் திட்டுவதையும் கேட்டிருக்கலாம். எமனைக் கழித்தவனே அல்லது எமனைச் சமாதானப்படுத்தியவனே என்று பொருள்கூறி நெடுங்காலம் வாழ்வாய் என்பதாக வாழ்த்தெனக்கொள்ளலாம். இது தற்காலம் மறைந்துவரும் வசைவு மரபாகும். மிகப்பழைய நூல்களிலிருந்து திட்டினாலும் உள்ளுறை உவமமாக மறைத்துத் திட்டினது தெரிகிறது; திட்டியதோடுநில்லாமல் உடனேவாழ்த்தினர். மறைந்துள்ள வசவில் கூர்மை மட

வாழ்த்தினதும், வசவுதருமவலி மறைந்துவிடுகிறது. இந்த நல்ல மரபின் அடிச்சுவடே வசவில் வாழ்த்தை மறைத்துக் கூறும் பாட்டிமாரின் மரபு என்று கருதுவது மிகையன்று.

"பையுணோய் கூரப் பகல்செய்வான் போய்வீழ
வையமோ கண்புதைப்ப வந்தாய் மருண்மாலை
மாலைநீ யாயின் மணந்தா ரவராயின்
ஞாலமே நல்கூர்ந் ததுவாழி மாலை"

என்ற இந்தக் கானல் வரிப்பாவில் தலைவி மாலையைப் பழிக்கிறாள். மணந்தவரில்லா மாலை, கொடுமை நிறைந்த மாலையாய்த் தோன்றுகிறது. ஒரு வேலையில் *சலிப்புத் தட்டிவிட்டது; உடனே 'இதென்ன தரித்திரம் பிடிதத வேலை' என்கிறோம். பல தொல்லைகளால் உலக வாழ்க்கை கசந்துவிடுகிறது. 'என்ன தரித்திரம் பிடித்த உலகம்' என்கிறோம் இதுபோலவே தனக்கு வந்த துன்பம் எல்லார்க்கும் உண்டு எனக் கருதி 'ஞாலமோ நல்கூர்ந்தது' என்கிறாள். அஃதாவது தற்காலப் பேச்சின்படி 'தரித்திரம் பிடித்த உலகம்' என்கிறாள். 'ஞாலமோ நல்கூர்ந்ததென்றாள்' தன்னோய் எல்லார்க்குமுண்டென்று தனக்குத் தோற்றுதலால், என்ற உரையையும் கவனிக்கவும். மற்றும் அரும்பத உரைகாரர் "இது, 'தான்சாவ உலகு விழும்' எனும் பழமொழிபோல நின்றது" என எழுதியுளளார். பழமொழிக்கும் இதற்கும் உள்ள தொடர்பே இஃது ஒரு பேச்சுவழக்கு என்பதைக் காட்டும். தான் இன்புறும்போது உலகம் இன்புறவேண்டும், துன்புறும்போது உலகம் துன்புறவேண்டும் என்பது எளிய உள்ளங்களில் தோன்றும் உணர்வாகும்.

பேச்சுவழக்குகளின் பழமையையும், வரலாற்றையும் ஆராய்வது அளவற்ற இன்பந்தரும் ஒரு துறை. பாமரர் என்று சிறுமையாகக் கருதப்படுவோரிடை வழங்கும் பல பேச்சுவழக்குகள் மிகப் பழமை வாய்ந்ததாகவும், பழைய இலக்கியங்களில் பயில்வதாகவும் இருப்பதைக் காணும்போது மிகுந்த வியப்பெய்துகிறோம். வழி வழி வந்த பல சொற்கள் அவர்களிடையேதான் வழங்குகிறது. நகர நாகரிகம் சிற்றூர்களில் பரவப் பரவ இவ்வழக்குகளில் பல வீழ இடமுண்டு. ஆதலின் பேச்சுவழக்குகளை ஆராய்வது காலந்தாழ்க்காது செய்யப்பட வேண்டிய தொண்டாகும்.

# எனது கதிர்காமச் செலவு

[செல்வி எஸ். கமலாதேவி, இரத்தினபுரி.]

எழிலுறு இலங்கையின், யாழினுமினிய அந்தமில் இன்பம் ஆர்தரப்பொழியும் செந்தமிழ்ப் பகுதிகளும் சில உள. இன்பத் தமிழினைச் சொந்தமாகக்கொண்டு அதன் தூயவழி முயன்று இமிழ்கடல்வேலித் தமிழகமெல்லாம் ஒரு நிழற்கீழ் பொன்னர சாளும், தமிழ்ப் பெருமக்கள் என் இருமுதுகுரவரும். எனவே தமிழ்நாடும், தவப்பயனும் என்றும் யாண்டும் கண்டுகளிக்க வேண்டுமென்ற தூய்மை நிறைவுறு நினைவும் விருப்பும் என் சிறு மனத்திடை நிலவலாயினமை வியப்பன்று. புதுமையைக் காணவிழையும் பருவமாகலின் அவ்வழி முயல யான் எண்ணிப் பலநாள் முயன்றமை, சென்ற சித்திரைத்திங்கள் முதலாம நாள் வாய்த்தது; அதை நினைந்து உள்ளம் நயந்து உவகை எய்தினேன்.

முருகன்—எல்லா உயிர்க்கும் நன்மகன்—உண்ணும் நீரினும் உயிரினும் மேம்பட்டோனுகிய அப்பெருமகனைக் கண்டு வழிபடும்பேறு எனக்கு அளித்தமைக்கு என் தோழி கலாவல்லியையும், அவள்வழி யான் இறைவனது பெரும்பேறு பெற்றமைக்கு மற்றையாரையும் வணங்கி, நறுமணம் கமழும் நறுமலர்களால் வாய்மை நிறைவுறு செந்தமிழ்ப் பாமாலையால் வழிபடல் சால்புடைத்து. என்னையோவெனின்? திருமகன் எனும் முருகன் வீற்றிருக்கும் கதிர்காமமும், அங்கு யான் அடைந்த பேரின்பமும், என் சிறுமையுள்ளம் உள்ளி மேற்கொண்ட பெருமையும், அதனுல் என் இளமை வாழ்வு புனிதமுற்றமையும் எண்ணிலடங்காதன என்றே அறையலாகும்.

'ஏயன கண்டபோழ்து விடுவரோ புதுமை காண்பார்,' எனப் பெரியோர் கூறியாங்கு, புதிய இடங்களையும் ஆங்கு நிலவும் ஆற்றலுறு அழகு நிறைவுறு பகுதிகளையும் உள்ளமாரப் பெறும்பேறு பெற்றோர் மீண்டும் பிறவாமை வேண்டுமென்று எண்ணுர். 'புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா' நின்னிழல் வீழும் பெரும்பகுதிகளுக்கு யாம் செல்லும் பேறு கிடைக்க அருள்புரிவாய் என்றே முந்நூறு நாளாயினும் முந்தித் தவம் கிடப்பர் எனின், அப்பேறு இப்பிறப்பில் சிறப்புற்ற மக்கட் பிறவியிலேயே யான் பெற்றேன் எனில் என்னின்பம் யாவரே அறியவல்லார்? வானமும் வையமும் வளர்ந்த எழிலும் என் இறை இன்பத்திற்கு ஈடாகா என்றே பெருமிதம் கொள்வேன்.

வாழ்க்கை வனப்பும் அதனிடைத்தோன்றும் அரிய உண்மை களும் யான் இதுகாறும் அறியேனாயினும் கதிர்காமக் காட்சியும் அதன் மாண்புறு மாட்சியும் மக்கள்வாழ்வை நன்முறையில் ஆட்சிசெயும் என்றே உறுதி கூறுவேன். கதிர்காமத்துக் கடவுளை அதிர் யாமத்தும் வழிபடும் பெண்பாலாரை யான் அறிந்த உண்மை இன்றே மெய்யுருப்பெறுகின்றது. யான் பெற்ற இன்ப வெள்ளத்திடை என்போன்ற மற்றையவருங் காலச் செல்விமாரும் பெறக்கேட்டுய்யுமாறு இவண் சிலசில வரைகின்றேன்.

என் அருளுறு தந்தையும், அன்புறு அன்னையும், இன்புறு தோழியும், அழகுறு தங்கையும், ஆண்டவனைக்காணும் விருப்பு மேற்கொண்ட அந்நாள் காலைப்போழ்து நான்குமணிக்குத் தூக்க மும் மற்றைய ஆக்கமும் எங்களை நாடவில்லை. ஏன் எனில்? இறை நோக்கமே நிலவியது. விண்ணிலே தோன்றும் வெண் மீன்கள் என்னை நோக்கிப புன்முறுவல் பூத்தனவோ அன்றி என்னை வாழ்த்தி வழியனுப்பினவோ என நினைவில்லை. கதிர வன் தோன்றும் காலைநேரம். அதன் நேர்மையால் இன்புறும் யான் அப்புன்முறுவலை ஏற்றுக்கோடல் என் தகாது? இயற் கையோடு தோய்ந்து அதன்கண் மிதந்து அதன் வழிச்சேறல் பேரின்பமெனப் பெரியோர் கூறிச்சென்றனர்.

சிறிது போழ்தில் யாங்கள் ஏறிச்சென்ற ஊர்தி விரை வுடன் ஆண்டவன் பொன்னிழலைக்காணும் வண்ணம் பலகாதம் செல்லலுற்றது. யான் வழியிற்கண்ட சில ஈங்குக் கூறினால் பயனளிக்குமன்றோ? எங்கும் இயற்கை—அழகு—இளமை தூய்மை—பசுமை—எனும் இவை பன்முறையில் காட்சியளித் தன. வானளாவிய மரங்களும் அவற்றின்ஊடே தவழ்ந்து செல்லும் கொடிகளும் பசுமைதோய்ந்து இலங்கின. தென்றற் காற்று தேனினும் இனியதாய் மாசற்ற உணர்ச்சியை வீசிக் காட்டியது அவண் நிறைந்த நற்காட்சிகள் மறைந்த இலக்கி யப் புலவர்களை நினைவுறுத்தின. வீடும், ஆடும், மாடும், மனை யும் யான் மறந்தேன். இயற்கையன்னையின் சிறு குழவி யானேன். முருகன் மேற்கூறிய பல்வேறு வடிவங்களாய்த் திகழ்கின்றான் போலும்! பசிய மரச்சோலைகளும், நீலவான மும், அசையா மலைகளும், ஓசையிழற்றும் சிறு பறவைகளும் முருகன்பால் என் அறிவை யிழுத்தன இயற்கையே முருகன்— இயற்கையிற்றோன்றும் அழகுப்பிழம்பே முருகன் திருவுரு என்றமை உண்மையாகும். வரிப்புலியும் மானினமும் உணர் வுடன் துள்ளிவிளையாடும் கவின்பெறு காட்சிகள் எங்கள் இளைப்பை மாற்றின. ஆடும் மயிலும், பாடும் குயிலும், கவலை

யற்ற வாழ்விற்கு இலக்கியமாயின. நிலையிலாத அவலமே சிறிதுமின்றி இன்னலும் இன்பமும் ஒன்று என எண்ணி உவகைமீதிட ஓடைகளில் ஓடிநின்ற மந்தியொன்றினில் சிந்தனை யுற்றுள்போன்று திருமுருகாற்றுப்படையின் தூய்மையிலே தோய்ந்த என் தோழி "மந்தியும் அறியா மரம் பயில் அடுக்கத் தினைப்பார்," என்று எனது விருப்பினை ஆயலுற்றனள். என்னினும் ஆழ்ந்த கருத்தும், அகன்ற நிறையும், ஆன்றவர் புகன்ற பொறையும், நிறைந்த அறிவும் உடையாள அவளாகலின், அன்னுள் புன்முறுவலோடு கலந்த இன்னகையும், செந்தமிழும், என்னை எந்நாளும் செந்தமிழ்ச் செல்வியாக்க முனைந்தமைக்கு, யான் என்றும் கடப்பாடுடையேன்.

ஊர்தியும் செயற்கைப்பொருளாகலின் எங்கள் மனவேகத்தில் எவ்வாறு விரைவுறும்? எனினும் இயன்றவரை முயன்றோம். 'கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பி'னை இயற்கையினிற் கண்ட யாங்கள் அவன் தங்குமபதியை எட்டு மணியளவில் அடையலாமெனத் தோற்றியது. "ஆம்! அதோ தெரிகிறது," என்றாள். "என்னடி தோழி," என்றேன்.

நீண்டு பரந்த நீர்நிலை ஆண்டுக் காண்பது, என்ன வியப்பு! என்னே குளிர்மை! கண்ணிற்கெட்டாத தூரம் பரந்து கல்வியின் நிறைவால் கட்டுரைவரைந்துபெற்றார் புகழ்போலும், நீல வானத்திடை நிலவும் வெண்மதியின் தண்கதிர்போன்றும் பரந்துளது. அழகியது. அது பெருமானின் பெருமையின் சின்னம். பெரியார் என்றும் பெரியரன்றோ?

அவ்விடம் சிறு பட்டினமாம. மக்கள் பெறுதற்குரிய இடமும் உளது. எண்ணற்ற மக்களும் அங்குத்தான் தங்கிக் கதிர்காமம் செல்லுதல் வேண்டும் பாதையும் மாறவே எங்கள் சிறு வேதனையும் மாறுகிறது. சுமார் பதது மைல் வரையும் தனிக்காடுதான். மாடுகளும் தென்பட்டில எனில், வீடுகள் எவ்வாறு தோன்றும்? ஆண்டவன் நிழல்கண்டோரும், காண விழைவோருமே அவ்வழிச்சேறன்மாலையராயினர். "பக்தி, பரவசம்" எனும் பிறமொழிச் சொற்கள் என் காதிலே வேதங்கள் பேசின. விடியற்காலமாகலின், அடியார்கள் இறைவன் திருப்பெயர்கூறி விரைந்து அண்மினர். "கல்லும் முள்ளும் பாராமல் கால்வலியையும் பாராமல் 'கந்தா! கந்தா!,' என்று கதிர்காம வேலனைக்காணவாருமே" என்று பாடினாள் கலாவல்லி. எங்கேயம்மா "கல்" என்றேன். காவியம் வரைந்த கம்பனன்றோ கள்ளுடை மலர்களேபோல் என்றான், இராமன் கானகத்தே செல்லுகின்றபோது எனக் காவிய விருப்பினளாயினன். கவி

நயமும், கற்பனை நயமும், கலையும் கற்பும் செவ்விதின் அமையக் காவியம் இயற்றிய கம்பன்கருத்தோடு யான் வாழவிரும்பு பவள். உலகின் எப்பொருளும் எந்நிலையிலும் தமிழ் பேசுவது அன்னோர் பெருமையால்!

சென்ற சில யாண்டுகளின் முன்னர் இவ்வழிச் செல்லுதல் அரியவொன்றே. கற்களும், முட்களும் வழிச் செல்வாருக்கு இன்னல் விளைவிப்பன. அந்நிலையிலும் அடியார்கள் எண் குணத்தான்-தனக்குவமை இல்லாதான் எனும் பெரியானை நினைந்த வண்ணம் விரைந்து செல்ல முற்பட்டனர். ஆம்! அக் கூற்று உண்மையாக இலங்கலாம். நடுக்காட்டில் இறங்கினோம். அரசாங்கத்தினரின் முயற்சியால் ஓரளவு வழி தூய்மையாக்கப் பெற்றமையின் எங்கள் ஊர்தியை வழியில் நிறுத்திவிட்டுப் பொறுமையுடன் நடந்தோம். மக்கள் கூட்டம் அடியார்களின் ஆர்ப்பாட்டம் இவையெலாம் ஒருங்கு அமைந்தன. என்போன்ற சிலர் எவ்வாறு செல்கின்றார்கள்? எங்ஙனம் இன்புறுகின்றார்கள்? என்றே என்மனம் செல்லலுற்றது.

கண்டோம் மாணிக்கக் கங்கையை. அக்காட்சி மாணிக்க வாசகனையும், சைவத் திருமகன் இராவணனையும் நினைவூட்டி யது. காமர் சோலைவழிவரும் வைகையும், கோதாவரியும் என் மனக்கண்ணிற்கு விருந்தளித்தன. காவிரி, தென்பெண்ணை எனும் இவைகளிலேயே புண்ணிய நாட்களில் மக்கள் எண்ணி லாத அளவில் கூடி நீராடுதல் இயற்கை என என்தோழி கூறக் கேட்டுளேன். அவ்வுண்மைகளை நேரிலே மாணிக்கக் கங்கை யில் கண்டு செயலற்று, வியப்புற்று நின்றேன். சிறுமியர் முதல் வயதுசென்ற பெரியோர் ஈறாக. வறிஞர் செல்வர் என்ற வேற்றுமையின்றி ஆற்றிலே தோய்ந்தார்கள். கண்ணன் திருவிளையாடல்களும், யமுனாநதியும் உண்மையா இருக்கவேண் டும் என எண்ணினேன். ஆ! ஆ! என்ன அழகான பெண்கள்! அமிழ்தினுக்கு அணி செய்தன்ன அழகினுக்கு அழகு செய்த அம்மங்கையர் என்னுள்ளத்தைக் கவர்ந்தார்கள். யானும் ஓர் ஒண் ணுதலுடைய பெண்ணன்றோ! இத்தகைய அழகின் திருவுரு வங்களைப் படைக்கும் தன்மையுடைமையாலன்றோ இறைவன் இறையவனாயினன். அன்னானை வணங்கினேன். யான் கம்ப னாகவோ அன்றித் திருத்தக்க தேவனாகவோ திகழ்ந்திருப்பின், கதிர்காமக் காவியம் வரைந்திருப்பேன், என் விருப்பும் அதுவே!

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்"

என்பது பொய்ம் மொழியன்று.

"காவிய உள்ளம் உனக்கு இல்லை என்று இயம்பினவர் யார்?" என்றாள் கலாவல்லி. என்னை யறியாமலே விடையிறுத் தேன், "பெண் பிறந்தேனுக்கென்றால் என்படும் பிறர்க்கு என் றேன்". "நன்று, நன்று நான் சொன்னேனன்றோ," என நகைத் தாள் நாமகள் எனும் என்தோழி.

ஆற்றின் மறுகரை. ஆண்டவன் அருள் வெள்ளம்வேண்டி நின்றார் பின் வேறொன்று கொள்வாரோ? இல்லை என யான் விடையிறுத்தல் வேண்டுவது இன்று என் கண்ணிற்கு அங் குச் சிறிய உலகம் ஒன்று தென்பட்டது. செந்தமிழ்ப் பாமாலை கள் அணிவிக்கும் அருளாளர்களும் உற்றார் உறவினர் என வீதி வழி இறையோனின் இருப்பிடம் நோக்கி விரைவினில் அண மினர். இருமருங்கும் சிறிய கடைகள்; அவைகள் இடையே தோன்றியவைகளாக இருத்தல் வேண்டும். எத்தனை பத்தி! எத்தனை கூட்டம்!! எள் விழற்கு இடமில்லை. யான் போய்க் கண்டேன் எனும் இவைகளை இன்றும் கனவில் மற்றையாருக் கும் உரைக்கும் பெரும் விருப்பினள். இறைவனுக்கு அளிக்கும் நிலையில் நிறைந்த கூடைகளில் தென்னையின் கனிகளும், வாழை களின் கனிகளும் பத்திப் பிழம்பு எனும அன்னையின் நோக் கத்தை இழுத்தமை கண்டேன். எண்ணற்றவரும் இவ்வண்ணம் கண்ணுற்று மலர்மாலையும் அலர்மாலையும் பெற்றுச் சென்றனர்.

நள் காய்கதிர்ச் செல்வன் தன் செல்வத்திறனைக் காட்டுவான்போன்று மேலெழுந்தான் 'என்பில் அதனைக்' காயும் வெம்மைத் தன்மை மிக்கோன் மெல்லியலார் எனும் எம்மை ஓரளவு வாட்டி வதக்கினான் என்றால் மெய்ம்மையே.

அரைக்காத தூரம் இல்லை. மரக்கதவுடைய கோட்டை யொன்று தோற்றியது. மண்ணவரை ஆளும் கண்ணகன் ஞால மன்னவன் கோவிலன்று. அது, பொன்றாப் புகழுடைய எம் பெருமான் இணையடி நி-ல் உறையும் திரு இல்லம் என்று உணர்ந்தேன் நில்லாதவற்றை மறந்து எல்லார்க்கும் தலைவன் எனும் பெரியான்பால் என் எண்ணங்கள் பறந்துசென்றன. வாயிலைக் கடந்தோம் காண்பது என்ன? காணாத காட்சியன்றோ இது?

இரண்டு அறைகள் உடையன. உள்ளறையின் வாயில் பல திரைகளால் மறைக்கப் பெற்றுளது. நெய்யினால் பல விளக்குகள் சுடர் விட்டு இலங்கின.

ஒரு புறம் திருநீறு பெறுகின்றார்கள். முருகனின் திரு விளையாடல்களை விளக்கும் பல ஓவியங்கள், எனக்கு இலக்கியத்

ஒழுகும் காவிய இன்பத்தை அளித்தன. அவைகளைக் கண்ணுறும் யாரும் "மனிதப்பிறவியும் இம்மாநிலத்தே வேண்டுவதே," எனப் பெருமிதம் கொள்ளத்தான் வேண்டும். "இறைவா போற்றி! அருள் நிறைந்தாய் போற்றி!" என இன்னவாறே கூறி ஊன் மறந்து, உயிர் மறந்து தம் நிலை மறந்து கைகள் தூக்கி, பாடுவாராயினர் என் பொன்னுறு அன்னையார். அருகில் நின்ற யான் இளையோள் ஆகலின் விளையாட்டுடையாளாக இலங்கினேன். "அம்மா, முருகன் தமிழ்மக்களின் இறையோனன்றோ! எனில் அதற்குரியரல்லாத பிற மதத்தினர் அவன் பணியாற்றும் ஏவலாளராக அமைதற்குரிய காரணம் என்?" என வினவினேன். இவ்வளவில் என்னிழல் போன்று என் அண்மையில் 'ஓவியத்து எழுதவொண்ணு உருவத்தாளாகிய' கலாவல்லி விடையிறுத்தாள். "ஒருருவம் தனக்கு என இல்லாதான் எவ்வுயிர்க்கும் ஒரு ஈசன் அன்றோ? அங்ஙனமாயின் எம்மக்களும் தம்மக்கள் எனும் செவ்விய அருள் அன்றோ முருகன் கொள்கையாக அமைந்துள்ளது எனல் அறிதல் வேண்டாவோ செல்வி!," என்ற பரந்த கருத்துரைகள் அவள்பால் என் கலை விருப்பினை மிகைப்படுத்தின. இவ்வண்ணம் யானும் என் தோழியும் உரையாடுகையில் என் ஊனக்கண்கள் திரை மறைவில் அமையும் பெம்மானை நேரில் கண்டு களிக்க அவாவுற்றன போன்று திரைகளை நோக்கின. நோக்கின கண்கள் ஆக்கமிழந்தன. திரைகள் இறைவனை மறைத்த வண்ணமாகவே இலங்கின அன்றி உள்ளம் நிறையும் வண்ணம் வெளிப்படுத்தின அல்ல. என் உள்ளம் மருண்டது. நிலை தளர்ந்தது. தேசுற்ற என் முகம் மாசுற்றது. என்னே உலகம்! என்னே என் பிறவி? என வினவினேன். உலகம் துறந்த ஒண்மணி மணிமேகலை போன்று மனமாற்றம் அடைந்தேன்

"தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சிதன், மெய்வருத்தக் கூலிதரும்" என்னும் பொருளுரை கருதி அந்தத் தெய்வத்தைக் காணச் செய்த என் முயற்சி பயனளிக்கவில்லை. இடிவிழப் பெற்ற மரமும் "வன்பாற்கண் வற்றல் மரமும்" என் நிலைக்கு உவமையாகத் தோற்றின. "பற்றினை விட அருளும் பற்றற்றான் பற்றினைப் பற்ற" விரும்பினேன். ஆனால், மக்கள் எண்ணிய எல்லாம் அவரவர் எண்ணம் போல் கிடைக்குமாயின் மண்ணுடு விண்ணுடு ஆகிவிடுமன்றோ? இந்த மறைமுடிவாம் மெய்க்கருத்து என் இளையா இளமையுள்ளத்திற்கு ஆறுதல் அளித்தது என் விதியினைப் பழித்தேன்! என்னே விதி!!

உடைந்த உள்ளத்துடன் - உவகையிலா முகத்துடன் என் உறவினரோடு இறைவழிபாட்டில் ஈடு பட்டேன். மஞ்சள்

ஆடை அணிந்தோன், சிரத்தில் குல்லாய் (முடி) புனைந்தோன், அருள் வெள்ளம் நிறைந்தோன், ஆண்டவன் அடியோன். அவனே பூசைவழிபாடு இயற்றுவோன்! சாந்தமும் தயையும் தங்கிய பொறையும் நிறையப் பெற்றோன் எங்கள் முன்னிலையில் தோன்றினன். யாங்கள் அளித்த பொன்தட்டைப் பழம், தேங்காய் முதலியவற்றுடன் திரையின் உள்ளே எடுத்துச் சென்றான். என்னுள்ளம் அந்தத் தட்டுடன் சென்றது. கனு உலகில் உலவியது. நிலை மறந்தேன். உள்ளே மறைவில் அமையும் பெருமானின் மெய்யுருவினைக் காண விரைந்த உள்ள வேகம் ஒளிவேகமெனப் பாய்ந்தது. கட்டுரை மனத்துக் கொண்டேன் பொங்கா நிலையில் தங்கினேன். மங்கின மதியின் நிலைதான் இச் செம்மலர் பெற்ற பேறு கதிரவன் காயும் காலையில் நிலைதளரும் கமலமும் உண்டோ என்றால் அது யானாகவே திகழ்ந்தேன்.

சிறிது போழ்தில் உள்ளே சென்றோன் வெளியே தோன்றினன். சென்ற பொருட்களும் திரும்பி வந்தன. ஆனால் வருத்த முற்ற என்மனம் திரும்ப வில்லை தமிழ்மக்கள் தமிழ்நாட்டில் தமிழ்க் கடவுளைக் காண இயலாது எனின், மனிதப் பிறவியினால் என்ன பயன்? இல்லவே இல்லை. மக்கள் உலகம் இது என்றுதான் மனமாற்றமடைய வேண்டும்.

கோவிலினின்று விடைபெற நினைந்தோம். ஒருமுறை அதனைச் சுற்றி வரலாமன்றோ! ஆம், புறப்பட்டோம. படர்ந்த அழகிய ஆலமரம் ஒன்று, வெயிலால் உலருவோருக்கு நிழல் அளிக்கும பெற்றியுற்றது வேறு சிறப்பாக ஒன்றும் அவ்வெளியில் காண்டற்கு இல்லை. எனவே, கதிர்காமத்தினின்று விடைபெற்றோம்.

மாலை நேரம். ஊரினைக் கடந்தோம். உவகையுடன் ஆற்றைக் கடந்தோம். எங்கள் ஊர்தியில் ஏறினோம். இரவு பத்து மணியளவில் எங்கள் இல்லம் அடைந்தோம்.

'என்றினிக் கதிர்காமம் காண்பேன். எக்காலம் அவ்வழகன்தன் திருவடியைக் காண்பேன்', என்றென்றே ஏங்கு நின்றது என் உள்ளம்.

—

# சித்திரைப் பெண்

[முத்தமிழ்மணி]

"எத்தனையோ சித்திரைப்பெண் பிறந்தி றந்தாள்;
இதிலென்ன புதுமையைத்தான்," எனவி ளித்தே
மைத்தடங்க ணொண்டொடிஎன் மருங்கில் வந்து,
மடவன்ன நடைபயின்ற வண்ணம் மேலும்,
"சித்திரைப்பெண் பிறந்தாலென்? இறந்தால் தானென்?
தெளிவிப்பீர் அத்தான்,"என் றிசைத்து, வேடன்
வைத்தகுறி வாங்காத வாளி யன்ன
வாள்நுதலாள் வேல்விழியால் வாட்டி நின்றாள். 1

"உளங்கவரு முழைப்பிற்கும் அதைவ ளர்க்கும்
உழவிற்கும் சிறப்புசெயப் 'பொங்க' லென்று,
களங்கமிலாத் தமிழ்மக்கள் வரைய றுத்தே
கதிரொளியை வாழ்த்திவழி படுகின் றார்கள்.
'விளங்குதமிழ் மொழியுண்டு; மேவி வாழும்
மேதகுசேர் இனமுண்டு; அதற்க மைந்த
துளங்கலிலாப் பளிங்கனைய பண்பொன் றுண்டால்
தொல்லுலகில் சித்திரைப்பெண் மலர்வாள்," என்றேன். 2

தனித்திறமை ஆய்வுள்ளம் தகவோ டுற்ற
தையலவள் தன்முகத்தைத் தணிய வைத்து,
"இனத்திற்கும், இன்மொழிக்கும் இயைபு காட்டி
எடுத்துரைத்தீ ராயினுமக் கூற்று என்றன்
மனத்திற்குப் பொருந்தவில்லை, மதிந லத்தால்
மார்தட்டும் தமிழரிடைச் சித்தி ரைப்பெண்
நினைத்திடற்கு வேறேது உண்டோ? அத்தான்!
நீரறிந்தால் தெளிவிப்பீர் தெளிய," என்றாள். 3

"காலமெனும் பெருங்கடலைக் கட்டித் தேக்கிக்
கருதுசிறு நீரோடை பலவுண் டாக்கி,
ஞாலமதில் தமிழர்க்கு நல்லு ணர்வு
நல்கிடவே ஆண்டென்றும், திங்க ளென்றும்
கோலிவிட்டார்; குறித்தஅந்தச் சித்திரைப் பெண்
கொள்கையுடன் தான்பிறந்தாள்; குறியி ழந்து
ஓலமிடும் தமிழர்க்கிங் குறுதி கூட்டும்,
உளம்தளரா வளம்நல்கும் ஒருதாய்," என்றேன். 4

சிவமுருகன் தமிழ்

# தமிழ் நெடுங்கணக்கு - பெயரும் எண்ணும்

[இராவ்சாகிப், சைவப்புலவர்
டாக்டர். தி. இரா அண்ணுமலைப் பிள்ளை
L.C.P.S., L.M.S.S.A. Lond.]

(செந்தமிழ்ச்செல்வி—சிலம்பு உகு; பரல்-கூ: ப. உஅஎ தொடர்ச்சி)

## முப்பத்துமூன்று தனிப்பெருஞ்சிறப்புவாய்ந்த எண்

### விஞ்ஞானச் சான்றுகள்
### முதுகெலும்பு வரிசையும் முப்பத்துமூன்றும்

மருத்துவமே யாம்கற்ற கலையாகவும், எமது தொழிலாகவும் வாய்ந்ததுமன்றி, மருத்துவக் கல்லூரியில் மாணவர்களுக்குப் பாடங்கற்பிக்கும் ஆசிரியராக பல ஆண்டுகளாக உழைக்கத் திருவருள் கூட்டியது. இவ்வாசிரியத் தொழிலினும் பூதக் கண்ணடி (Microscope) கொண்டு அடிக்கடி யுற்று நோக்கி யறிந்து அறிவிக்கவேண்டிய பாத்தாலிஜி (Pathology) என்னும் பாடமே யாம் கற்பிக்கவேண்டிய பகுதியாயமைந்தது உடலின் பல அவயவங்களினும், நோய்க்குத் தக்கவாறு உண்டாகும் வேறுபாடுகளை நம் கண்களாலும், பூதக்கண்ணடி மூலமாயும் கூர்ந்து நோக்கியறிவதே இப் பாடத்தின் இயல்பாகும். அவ்வக் காலங்களில் உடற்கூறுகள் பலவற்றையும், இயைந்த அளவில் சமய உண்மைகளோடு (Religious Truths) பொருத்தி நோக்குவது எமது பேரவாவாக இருந்து வருகிறது.

சமய இலக்கியங்களிலடங்கிய புராணங்களை, வெறுங்கட்டுக்கதைகளாகப் புறக்கணிப்பது தற்காலப் போலி நாகரிகங்களுள் ஒன்று அதைப்பற்றி எமது சிற்றறிவிற் கெட்டிய கருத்தை வெளிப்படுததுவதற்குத் தக்க வாய்ப்பு இதுவே யாகும். தம் மாணவர்கள், உணர்வதற்கரிய சில் பொருட்களை எளிய முறையிற் கதைபோலக்கூறி, பின்னர் அதன் உட்கருத்தை ஊட்டுவது, ஆசிரியர்களது மரபு இதே முறையிற் ருன் புராணக்கதைகள் பெரும்பாலும் அமைந்துள்ளன. இதை நன்கறிந்த அறிஞர்கள் ஒவ்வொரு புராணத்திலும் உள்ளீடான பொருட்களைத் தேடிக் கண்டுகொள்வார்கள். இதற்கு ஒரு சான்ருக, திருவிளையாடற் புராணம் (பரஞ்சோதி முனிவர் அருளியது) இந்திரன் பழிதீர்த்த படலத்தைக் கூர்ந்து சிந்திப்பாம.

முன்னொரு காலத்தில் தேவேந்திரன் தையலார் மயலிற் பட்டோனய், வாழ்க்கையை வசைபட நடத்தியபொழுது, தங் குருவாகிய வியாழப்புத்தேளை இகழ, அவர் அவனை விட்டு

வேறுலகம்போயினர் அசுரர் குலத்திற் பிறந்தும் நல்லொழுக்க முடையவனும், மூன்று சிரசுகளையுடையவனுமாய விசுவரூபனை பிரமதேவர் அவனுக்குக் குருவாக அமைத்தனர். இந்திரன் இதை ஒரு சூழ்ச்சியென்று கண்டு, யாகஞ்செய்து விசுவரூபனைக் கொன்று, பின்னர் வைகுண்டத்திற்குச் சென்று மகாவிட்டுணுவையணுகி, வியாழ பகவானைக்காணாத குறையைக்கூறி வருந்தினன். அவர், இந்திரனைத் ததீசி முனிவரிடம் அனுப்பினர். தேவர், அசுரர் இருவர்களுடைய ஆயுதங்களனைத்தையும் ஒருங்கே விழுங்கிய ததீசி யடிகள், அவ் ஆயுதங்களை, ஒன்றாகத் திரண்டு பொருந்திய தமது முதுகந்தண்டை இந்திரனுக்கு அளித்து, பிரமநாடி வழிக்கொண்டு கபாலத்தைக் கிழித்துத் துறக்கம் (Heaven) புகுந்ததுமன்றி, தமக்கு அழியாப் புகழையும் நிலைநாட்டினர். இந்திரன் தனக்குக் கிடைத்த முதுகந்தண்டை (குலிசம்) வச்சிராயுதமாகக்கொண்டு, அருச்சனை செய்து, அகத்தியர் அருள் பெற்று, திருவைந்தெழுத்தோதி, இடைவிடாது தவங்கிடந்தான். இதன்பயனாய்த் திருநீறு தரித்து, உருத்திராக்க மாலையணிந்து பாம்பினைக்கட்டி, அருள்வடிவமாய்க் காட்சியளித்த முதல்வனைக்கண்டு, தொழுது மலபரிபாகம்பெற்றுத் துறக்கம் நண்ணினனென்பது புராண வரலாறு.

இவ்வரலாறு இங்ஙனமிருக்க, பகுத்தறிவு படைத்த நாம் இதில் அமைதியாய்ச் சிந்திக்கவேண்டிய குறிப்புக்கள் பல உள. தேவர்கள் அசுரர்கள் என்னும் பாகுபாடு என்னை? 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்,' என்றபடி, இப் பாகுபாடு பிறப்பினால் வந்ததல்ல; ஒழுக்கமுடையார் தேவர், அதுகெட்டவர் அசுரர். இவ் இரு திறத்தார்க்கும், இறைவன் முறையே, அறக்கருணையும் மறக்கருணையுமாகத் தமது அருளைப்பொழிகின்றான். அவ்வருளை இருபாலாய்ச் சொரிகின்றபடியால், அதற்குப் பயன்படும் ஆயுதங்களும் இருதிறத்தன என்பது விளங்கும்.

ததீசியடிகள் தமது முதுகெலும்பையே குலிசமாகக் கொடுத்துவிட்டாரென்றால், அவர் தமது உயிரையே பலிகொடுத்தாரென்பதுதானே யதன்பொருள்? தமது உயிரையே, அறத்தை நிலைநாட்டுவதற்காக, யாதாமொருவர் அளிப்பாராயின், அவருக்கு உடனே இறைவன்றிருவடி கிட்டுகின்றதென்பது இதினின்றும் வெளிப்படுகின்றது.

ஆசாரியனை இகழ்ந்தவன் தீர்மானமாய்த் தண்டிக்கப்படுவானென்பது மற்றொரு குறிப்பு. உடலில் உறுப்புக்கள் பல உளவாயினும், ததீசி அடிகளார் எலும்பை மாத்திரஞ் சுட்டிக்காட்டியதன் பொருள் என்னை? எலும்பினுள்ளும், முது

கெலும்பு வரிசையை, ஆயுதமாக ஈந்தருளிய உட்கருத்தை ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும்.

எலும்பு மனித உடலினது நிறை (ஏறக்குறைய 150 பவுண்டு) முழுவதையும் தாங்கும். மூளையையும், அதுபோன்ற மற்றைய சிறந்த அவயவங்களையும், எலும்பே பாதுகாக்கின்றது; இரத்தத்தை உண்டுபண்ணவும், விருத்திசெய்யவும், உடம்பில் தொற்றும் பல கிருமிப் புழுக்களைக் கொன்று தூய்மைப்படுத்துவதற்கும், ஒரு குளத்திலிருந்து பல ஓடைகள் மூலமாய்த் தண்ணீர் பாய்வதுபோல, எலும்புகள், உடலின் பல பாகங்களில் வேண்டிய அளவுக்குத் தகுந்ததாக இரத்தத்தைக் கூட்டுவதற்கும் குறைப்பதற்குந் துணையாய் ஊருணிபோல அமைந்துள்ளன. இன்னும், "அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு, என்புதோல் போர்த்த உடம்பு." (அன்புடைமை)— என்று செந்நாப் போதாரும்,

"அற்புத மான அமுத தாரைகள் எற்புத் துளைதொறும் ஏற்றினன்" (திருவண்டப்பகுதி) என்று மணிவாசகப் பெருமானும் திருவாய் மலர்ந்தருளியதும், இதே குறிப்பைத்தான் உணர்த்தும். தோலும் தசையும் நீங்கினதும், எலும்பினது வெண்மை வெளிப்படுவதுபோல மலங்களை இறைவனருளாற் களைந்ததும் மெய்ஞ்ஞானம் ஒளிரும் என்னும் விழுமிய தெய்வக் கலையை, எலும்புதான் மறைமுகமாய்ச் சுட்டிக் காட்டுகின்றது!

அடுத்தபடியாக நமது உடலில் ஏறக்குறைய இருநூற்றைம்பது (250) எலும்புகள் இருக்க, முதுகெலும்பு வரிசையையே அருள் முனிவர், குலிசாயுதமாகப் பயன்படுத்த வழிகாட்டிய தென்னே? உயிர்வளர்ச்சியில் (Evolution of Life), Vertebrates and Invertebrates என்னும் இரண்டு. தனிப்பட்ட பெரும் பிரிவையும் வேறுபடுத்திக் காட்டுவதற்கு ஏதுவாயுள்ளது இம்முதுகெலும்பு வரிசைதானே—(Vertebral column) இம் முதுகெலும்பு வரிசையினுள்ளேதான் முள்ளந்தண்டு (Spinal cord—பிரம்மதண்டம்—வீணாத்தண்டு) என்னும் நரம்புத் தொகுதி மேற்பாகத்தில் ஒரு அரசமரம் (Pipal Tree) போல விரிந்தும் (மூளை), இதன் தொடர்பாக ஒரு தாமரைத் தண்டுபோல் இறங்கி, வால் எலும்புக்கு (Coccyx) அருகாமையில் கூரிய முனையில் (Filum Terminale) முடிகின்றது. இந்நேர்மையுள்ள முள்ளந்தண்டுக் கொடியிலேதான் இடது பக்கத்தில் இடகலையும் வலது பக்கத்தில் பிங்கலையும் நடுவில் சுழுமுனை நாடியும் செல்வதாக பண்டைய சித்தர் நூல்கள் கூறும். இம் முள்ளந்தண்டின் அடிப்பாகமே மூலாதாரமென்றும், இங்

கிருந்து குண்டலிசத்தி உதித்து எழும்பி வீணாத்தண்டத்திற் சுழன்று செல்லுகிறதென்றும் சமய நூல்கள் கூறும். உடலின் இயக்கங்கள் பற்பலவற்றிற்கும், ஆதாரங்கள் (Nerveplexus-or centres) இந்நரம்புத் தண்டிலே தான் அமைந்துள்ளன. இப் பெற்றித்தாய நுணுக்கமும் தனிச் சிறப்பும் வாய்ந்துள்ள முள்ளந்தண்டைத்தான், திருமூலர், பின்வருமாறு குறிக்கின்றனர் :—

"கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணாத்தண் டூடே வெளியுறத் தாணோக்கிக்
காணாக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே"

—மூன்றும் தந்திரம்.

இம்முதுகந்தண்டு வரிசை முப்பத்துமூன்று (33) முள்ளெலும்புகளாலாயது (Vertebrae); கழுத்தெலும்பு (cervical)—7; நெஞ்செலும்பு (Thoracic)—12; இடுப்பெலும்பு—(Lumbar) 5; குண்டி யெலும்பு (Sacrum or Rump-Bone)—5; வால் எலும்பு (coccyx)—4; ஆக—33. இங்ஙனம், மனித உடம்புக்கு ஆதாரமான முள்ளந்தண்டு முப்பத்து மூன்று எலும்புகளாலாயதும் இத்தண்டுக் கொடியைக்கொண்டே இந்திரன் பழி தீர்ந்து வீடுபெற்றானென்பதும் 'முப்பத்து மூன்று' என்னும் எண் தனித்த தெய்வத்தன்மை வாய்ந்த எண் (Repre sentative Number) என்று கூறுவதற்கு சாலத்தகுதி யுடையதாகுமல்லவா! இது நிற்க.

மேற்கூறிய புராணத்தில், நமக்குப் படிப்பினையாயுள்ள சிறந்த கருத்துக்கள் இன்னும் பல உள. விரிவஞ்சி விடுத்துப் பிறண்டும் இடம் வாய்த்தவழிக் காட்டுதும். இத்தூய்மையான பாடங்களைக் கற்பதைவிட்டு, ததீசி முனிவர் ஆயுதங்களை விழுங்க முடியுமா? அவையெல்லாம் முதுகுப்பக்கத்தில் ஒதுங்குவானேன்? அவர் தன்னுயிரைத்தானே மாய்த்த பாவியல்லவா? விசுவரூபனைக் கொன்றது கொலைக்குற்றமாகாதா? இக்குலிசாயுதமில்லாமல் நேரே இந்திரன் கடவுளைக் காணமுடியாதா என்று பிதற்றும் பேதமையை என்னென்று கூறுவது? ஆறறிவுடைய மக்கள், மாக்களாகக் குறைவுபடாமல், அறிவு வளர்ச்சியில் ஓங்கியே நோக்கும்படி திருவருள் புரிக

ஆகமவ, புராணங்களை முற்றிலும் நம்புவது அறிவுக்குப் பொருத்தமல்ல; ஆயினும் அவைகளை முற்றிலும் புறக்கணிப்பது அறியாமையின்பாற் பட்டதேயாகும். (தொடரும்)

# குற்றாலக் கொழுந்தமிழ்

[செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி பிள்ளை.]

உலகத்திற் காணப்பெறும் எல்லாப் பொருள்களையும் உற்று நோக்கி ஆழ்ந்து எண்ணினால், இவை எவ்வாறு உண்டாயின என்னும் வியப்பு எழும். வானத்தை நோக்கினால் மேகங்கள், ஞாயிறு திங்கள் மண்டிலங்கள், விண்மீன்கள் ஒன்று சேர்ந்து சிரிக்கின்றன; மண்ணை நோக்கின் கடல் கதறுகின்றது; மலை வளர்கின்றது; மரங்கள் தலையை ஆட்டுகின்றன. வண்டும் தும்பியும் கிளியும் பூவையும் அன்றிலும் கொக்கும் நாரையும் மாடும் ஆடும் சிங்கமும் புலியும் யானையும் குதிரையும் குரங்கும் கரடியும் உடும்பும் ஓந்தியும் பல்லியும் பாம்பும் தேளும் செய்யானும் ஈயும் எறும்பும் இன்னும் கண்ணிற்குக் காணவொண்ணாத சிறு சிறு அணுத்திரள் உயிர்களும் கோடிக்கணக்காக விரிந்து இருப்பன அறியலாம்.

இவைகளுள் எத்தனை எத்தனை நிறங்கள்! எத்தனை எத்தனை வேறுபாடுகள்! எத்தனை எத்தனை குணங்கள்! இவைகள் எல்லாம் நம் எண்ண ஆற்றலையும் கடந்து நிற்கின்றன. நாம் ஒரு படம் எழுத முற்படுவோமானால் அப்படத்திற்குப் பொருத்தமான பலப்பல நிற வண்ணங்களைத் தீட்டுகின்றோம். அதற்கேற்ற பல்வகை வண்ணங்களைக் குழைத்துக் குழைத்துப் பார்த்துப் பார்த்து அவ்வவைக்கு ஏற்ற நிறங்களையே கொடுத்து வரைந்து அவ் அழகைக் காண்கின்றோம். ஆனால் இயற்கையான மயிலைக் காண்பாம். அதன் சிறகில் பொன்னிறம் ஒருபால், மின்னிறம் ஓர்பால், கருநிறம் ஓர்பால், பச்சைநிறம் ஒருபாலாகப் பளபளப்புடன் தோன்றி நம் கண்ணைப் பறித்துப் பகட்டுகின்றன; பச்சைக் காடைகள் பசுமை நிறத்துடன் பொன்னையுருக்கிப் பூசினாற்போற் புலனாகின்றன. அடுப்புக் கரியை அரைத்து வழித்துத் தடவிவைத்தாற்போன்று அண்டங் காக்கையும் கரிக்குருவி(கரிச்சான்)யும் அமைந்துள்ளன. செவ்வாடை வெள்ளாடைகளைச் சேர்த்துக் கட்டினாற்போல் கருடன் என்னும் பறவை காணப்படுகின்றது. தேன் சிட்டுகள் மீன் கொத்திகள் பன்னிறத்துடன் மின்னுகின்றன. இன்னும் பலப் பல உயிர்கள் இவ்வாறே நம் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றன. நாம் ஒரு வண்ணத்தை ஓர் ஓவியத்துக்குத் தீட்டினால் அது சின்னாளில் மழையில் கரைந்து மங்கிவிடுகின்றது; வெயிலில் இருந்து வெளிறிவிடுகின்றது. மேற்கூறிய உயிர்வகை

வண்ணங்கள் நீரிற் கரைவதில்லை; நிலையில் திரிவதில்லை. அதை எண்ணினால் எங்கெங்கோ எண்ண அலைகள் சுற்றுகின்றன; ஓடுகின்றன; அடங்கி ஒடுங்கிவிடுகின்றன.

பூக்களில் எத்தனை வகைகள்; எத்தனை நிறங்கள்; எத்தனை குணங்கள்; எத்தனை மணங்கள்; இவைகளையெல்லாம் இவ்வேறு பாட்டுடன் ஆக்கியோர் யாரென்றால் தோன்றவில்லை. ஒன்று காலையில் மலர்கின்றது; மாலையில் குவிகின்றது; ஒன்று இரவில் அலர்கின்றது; பகலில் தளர்கின்றது; ஒன்று அந்தியில் வெடிக்கின்றது; சந்தியில் உதிர்கின்றது; ஒன்று மலர்ந்தவாறே வாடுகின்றது; ஒன்று மலர்ந்து விழுகின்றது. இவைகளெல்லாம் என்னே! வேடிக்கையா! என்று எண்ணின் எல்லாவற்றையும் 'ஆட்டிவைக்கும் ஒன்று' ஏதோதான் இருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது. அதைச் சிலர் 'இயற்கை'யென்றனர்; சிலர் 'கடவுள்' என்றனர்; இன்னும் சிலர் 'இல்லை'யென்றனர்; 'அல்ல' என்றனர். இவ்வாறே இன்றும் என்றும் உலக மக்கள் ஆராய்வதும், அடிபிடி கொள்வதுமாக இருந்து வருகின்றனர். இதை நோக்கி 'உலகச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்,' என்று ஒரு பெரியார் வருந்திக் கூறுவாராயினர். இவ் இயற்கை வழியோடிப் படர்ந்து படிந்து கண்ட சமயமே 'சைவம்' என்னும் தனிநெறியாகும். அஃது இயற்கைநெறியே நெறியாகக் காட்டிச் செல்வது.

இச் சமய நெறியானது, ஆண்டவன் நிலனாக நின்றும், நீராக ஓடியும், தீயாகக் கனன்றும், காற்றாகச்சுற்றியும், வானாகக் கவிந்தும், உயிராக மிளிர்ந்தும், ஞாயிறாக எரிந்தும், திங்களாகக் குளிர்ந்தும், எண்வகையாய் இருக்கின்றான். அவ்வகையில் உயிர்களைப் படைத்துக் காத்து அழிக்கின்றான் என்று எடுத்துரைக்கின்றது. அவன் உருவை ஒரு பெரியார்,

> "மைப்படிந்த கண்ணாளும் தானுங் கச்சி மயானத்தான்
> வார்சடையான் என்னின் அல்லான்
> ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன் ஓரூரன்
> அல்லன் ஓருவமன் இல்லி
> அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவன் அருளே
> கண்ணாகக் காணின் அல்லால்
> இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன்
> என்றெழுதிக் காட்டொணாதே"

என அருளிக் காட்டுகின்றார். இத்தகைத்தாம் கட்டற்ற ஒன்றைப் பழங்காலத்தே 'கந்தழி' என்றனர்; 'கடவுள்' என்றனர்; 'இயவுள்' என்றனர்; 'இறை' என்றனர்; அது என்றும் மாறு

ஒரே பெற்றித்தாய் இருக்கும் நிலையை நுணுகி நுணுகி ஆராய்ந்து 'முருகு' என்றனர்; அதனையே 'சிவ' மென்னும் செம்பொருள் என்று தெளிந்து உலகிற்கு அந் நிலையை உணர்த்திவருவார் ஆயினர்.

அப் பெருநெறி பிடித்தொழுகிய பெரியோர்களில் ஒருவரே நம் திருஞானசம்பந்தர் என்னும் சீர்சால் பெரியார். அவர் இயற்கையிற் படிந்தாடி அவ் இயற்கைக்கு இடையே பொதுளி நிற்கும் இறையின் வடிவத்தைக் கண்டு கண்டு களிகூரும் தன்மையர். அவர் அதை உலக மக்கட்கு உய்யக்காட்டியருளினர்.

அவர் இறைவன் எழுந்தருளியிருக்கும் தலங்கள்தோறும் சென்று அருள்நெறி பரப்பி வருவாராயினர். அவ்வாறு சென்று சென்று வருங்காலத்து ஒருகால் பாண்டிநாட்டுக்குப் போந்தார். அடியார் குழாங்கள் பின்தொடர முத்துப் பல்லக்கில் வருங்கால் நெடுந் தொலைவிலேயே குற்றால மலையைக் கண்டார். கண்டதும் அவர் தோள்கள் மலைகள்போல் பூரிப்படைந்தன. நெருங்கிவந்தார். அம் மலை முகட்டிலிருந்து 'கடகட' வென்னும் பேரொலியுடன் பூவும் இலையும் சருகும கனியும் தேனும் கலந்து அருவிநீர் இழிதருதலைக் கண்டார். இவர் கண்மலரும் அன்பால் அருவியைப் பொழிந்தன. கைம்மலர்கள் குவிந்தன. அவைகளை உச்சிமேற் சூடினர்; கால்மலர்கள் பெயர்ந்தன; சேப்ப நடந்தன தம அடியார் குழாத்துடன் அம்மலையின் அண்மையை அண்மினர். அன்பு பெருக்கெடுப்ப இறும்பூதெய்தி அதன் இயற்கையழகில் ஈடுபாடுற்றார். இறையருளையும் இயற்கைச் செம்மையையும் நினைந்து நினைந்து அன்பருவியில் படிந்தாடினர். அந்நிலையில் வழிந்தொழுகியது தேவாரப் பண்ணிசை. அதை யாம் அருந்தி இன்புற அருளினர். இறையை வியந்தார். இயற்கையைப் பாராட்டினர் அப் பண்ணிசையில் இயற்கைக்குப பாதி இறைக்குப் பாதியாகப் பகுத்து ஓதி அருளினர். இத் தேவாரக் குழந்தையார், தாம் எங்குச் செல்லினும் அவர் கண்முன், இயற்கைக் காட்சிகளே முன்னிற்கும். அவைகளுள் தோய்ந்தே இறையருளின்பால் அவர்மனம் அமைதிபெறும். ஆங்காங்கே அவர் அருளிய தேவாரத் திருமுறை முழுதும் நோக்கின் இவை ஊடுருவி இயற்கைப் படமாகப் பொலிவுற்று விளங்குதலைக் காணலாம். இன்னிசைத் தேனோடு இயற்கைப் பாலும் கலந்து இறையருட்சுவை யின்பத்தை ஊட்டியருளும் அருட்கடலாம் பிள்ளையார்தம் பண்புதான் என்னே! என்னே! அக்குன்றை அடைந்தார். மலை அடிவாரத்தை உற்றுப்பார்த்தார்; அங்கு வேங்கை மரங்கள் நெருங்கி அடர்ந்து தளிர்த்து வளர்ந்திருந்தன. அவைகட்

இடையே இனிய மெல்லோசைகள் யாழ் ஒலிபோல் முழங்கின. உற்றுக்கேட்டார்; அவை வண்டின் இசை; அதில் அவர்மனம் ஒடுங்கிற்று; இறையன்புங் கலந்தது. எழுந்தது ஓர் பாட்டோவி யமாம் பண். அஃது,

“ வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண்டு யாழ்செய் குற்றாலம் ”

என மலர்ந்தது.

பின்னரும் போய் அதன் மற்றொரு பக்கத்தைப் பார்த்தார். வேறோர் காட்சி தோன்றிற்று அஃது அடியார் கூட்டம்; உடலெல்லாம் வெண்ணீறு; உளமெல்லாம் இறையன்பு; அன்பு கனிய இறைவன் புகழ்பாடுகின்றனர். அங்கு ஆண்டவன் திரு விழா; அவன் திருவுலாப் போதுகின்றான். முழவொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி எல்லாம் ஒன்றுகலந்து அவர் நெஞ்சத்தைப் பத்திப்பெருக்கில் ஈர்த்தன. அன்பு வெள்ளம் பொங்கி வழிந்தது. அவ் அலை,

“ பொடிகள் பூசித் தொண்டர்பின் செல்லப் புகழ்விம்மக்
கொடிக ளோடும் நாள்விழ மல்கும் குற்றாலம் ”

என மேலெழுந்து வந்தது.

இன்னும் அம் மலைப்பக்கலைச் சுற்ற எண்ணினார். ஏறிட்டுப் பார்த்தார். செண்பக மரங்கள் ஓர்பால், வேங்கை மரங்கள் மற்றோர்பால், அவை எக்கழுத்தமாக ஓங்கி வளர்ந்து நின்றன. அவைகள்மீது முல்லைக்கொடிகள் தாவிப் படர்ந்தேறி மெல்லிய அரும்பீன்று சிரித்துக்கொண்டிருந்தன. அவ் வெள்ளிய காட்சி இறைவன் திருக்கோலத்தைக் குழந்தையார்க்கு நினைப்பூட்டிற்று. சுரந்தது அன்பூற்று. அவ் வூற்றிலிருந்து இனிய நறுஞ்சுவைத் தண்ணீர் மேலெழுந்தது. அந் நீர்மை,

“ செல்வம் மல்கு செண்பகம் வேங்கை சென்றேறி
கொல்லை முல்லை மெல்லரும்பு ஈனும் குற்றாலம் ”

என வார்ந்தோடிற்று.

மேலும் நோக்கினார்; வாழைமரங்கள் வரிசை வரிசையாக வளமுற வளர்ந்தெழுந்திருந்தன. அவைகளில் கனிகள் சீப்புச் சீப்பாகக் கனிந்துநின்றன. பலாமரங்கள் கிளைவிரிந்து இலையடர்ந்து கிளைக்குக்கிளை பொன்குடம்போல் கனிகளைச் சுமந்துகொண்டு நின்றன. அவைகள் இன்தேன் தெளிவைப் பிழிந்து கீழே ஊற்றிக்கொண்டிருந்தன. மாமரங்கள் பந்தினைப் பசுங்கயிற்றிற்கட்டித் தொங்கவிட்டனபோல் கனிகள் தொங்கத்

தலையை அசைத்துக்கொண்டு இன்பத்துடன் நின்றன இவை களைக் கண்டார்; இறைவன் அன்புகசனிவில் மனநெகனிந்தார, அக் கனிவில் ஓர் கனி தோன்றிற்று; அதில் இறைநலத் திரு சுவைச்சாறு சொட்டிற்று; அது,

> " பக்கம் வாழைப் பாய்கனி யோடு பலவின்தேன்
> கொக்கின் கோட்டுப் பைங்கனி தூங்கும் குற்றாலம்"

என வார்ந்தது.

மற்றோர்பால் பார்த்தார் மலை அடிவாரப் பகுதி. அதில் ஓர் பெண் குரங்கு ஓடிவந்தது; அதன் முகத்தில் இளமை தவழ்ந்தது; அதனை ஓர் இளங் குட்டி பின்தொடர்ந்தது; வாழை மரங்களில் ஏறித் தாவிற்று: அது தன் குட்டியுடன் வாழைக் கனிகளைத் தின்று களித்தது தாமும் அக்காட்சியில் ஒன்று பட்டு மாந்தி அன்புமீதூரப் பெற்றார். எல்லாம் இறைசெயலே யெனக் கண்டார். அசசெயல் இன்பாவாக,

> " மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி
> குலையார் வாழைத் தீங்கனி மாந்தும் குற்றாலம்"

என நின்றது.

மற்றோர்புறம் போந்தார்; தினைப்புனம்; ஆங்காங்கே இளங் குறச் சிறுமியர்; அவர்கள், தினைக்கதிர்களைப் பறவைகள வந்து கொய்துகொண்டு செல்லாவாறு காக்கின்றனர்; அவைகளை ஒட்டுகின்றனர்; அவைகள் பறந்து பறந்து மீண்டும் மீண்டும் வருகின்றன கதிர்களைப் பறித்துச் செல்கின்றன. அவை களுள கிளிகளே பெருமபாலன. அவைகள் இச்சிறுமியா சொற்களைக் கற்றுக்கொள்ள வருவனபோல் ஓசச ஓச்ச வந்து கொண்டே இருந்தன சிறுமியர்க்குச் சினமிகுந்தது. கலலெ டுத்து எறிந்து எறிந்து வெருட்டித் துரத்தினவண்ணமாக இருந்தனர்; அவர்கட்கு அங்குக் கற்களாகக் கிடப்பனவெல லாம் மாணிக்கஙகளே இக் காட்சி நம் அடிகளார் கண்கட்கு பெருவியப்பு விருந்தளிததன. அவ் விருந்தையுண்டு நமமையும் உண்ண அழைககின்றார். அவ் அழைப்பு

> " மைம்மா நீலக் கண்ணியர் சாரல் மணிவாரிக்
> கொய்ம்மா ஏனல் உண்கிளி ஓப்பும் குற்றாலம்'

என்பதாகும்.

இவ்வாறே பலப்பல இயற்கைக் காட்சிகளின் ஊடே இறையன்பு ஊட்டிய தேவாரக் குழந்தையின் திருவடி என்றும நின்று நிலவி யொளிருக

# செய்திகளும் குறிப்புகளும்

## ஆள்வினை வெற்றி

திரு. மா. இராசமாணிக்கம்பிள்ளை M.A., L.T., M. O. L. அவர்கள் சென்னை விவேகானந்தர் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணி புரிந்து வருகின்றார்கள். ஓயா உழைப்பின் ஒருதனி உருவம் இவர் தம் அருமை எழிலுருவம் என்பது மிகையாகாது. இவர்கள் எல்லாரையும் போன்று புலவர் (வித்துவான்) பட்டம் பெற்றுத் தமிழாசிரியராகத் தொழிலாற்றினர் ஏனை ஆசிரியன்மார் அதுவே தம் இறுதி நிலையென்று அலுத்துச் சலித்து அமைவதுபோன்று அமைந்துவிடாது, 'வினையே, ஆடவர்க்கு உயிரே' என்னும் தனைநிகரில்லாத் தமிழ்ப் பண்பாட்டின்படி ஒல்லும் வகையாற் கல்வியினை ஓவாதே செல்லும் வாயெல்லாஞ் செய்துகற்றனர். 'கூட்டொருவரை வேண்டாக் கொற்றவராய்த்' தம் தனிப்பெரும் தாளாற்றலால் கற்று, பி. ஓ. எல். பட்டம், எம். ஓ. எல். பட்டங்கள் எளிமையாகப் பெற்றுத் திகழ்ந்தனர். அளவிடப்படாத பாட நூல்கள், ஆராய்ச்சி நூல்கள், கட்டுரைநூல்கள் இயற்றித் தமிழ்த்தாய்க்கு அணி செய்தனர். கல்வெட்டு ஆராய்ச்சியில் மிக்க திறலுற்றனர். ஆங்காங்கே பயனுடைச் சொற்பொழிவு பலவாற்றி மக்களைக் கிளர்ச்சியுற்று முயற்சி யுறச் செய்தனர், செய்தும் வருகின்றனா. இவர்கள் இயற்றிய நூல்களுட் சில—பல்லவர் வரலாறு, சோழர்வரலாறு, மொகஞ்சதரோ, பெரியபுராண ஆராய்ச்சி முதலியன; இவ்வாராய்ச்சிகள் எல்லாம் கோயில்கடோறும் சென்று நேரில்பார்த்துத் தெளிந்த வுண்மையோடு எழுதப்பட்டன.



இவர்கள் அரும்பெரும் திறல்கண்டு சென்னைப் பல்கலைக் கழகம் அக மிக வுவந்து 'டாக்டர்' (பி. எச். டி.) என்னும் உயர்ந்த பட்டம் வழங்கி யுள்ளது. தகுதியுடையாரை ஆய்ந்து தக்கபட்டம் வழங்கிய சால்புடைமை சாற்றற்கரியது. இப்பட்டத்தின் பொருட்டு இவர்கள் எழுதி யமைத்த எழில்நூல் '**கி. பி. 300 முதல் 1300 முடியத் தென்னிந்தியாவில் சைவசமய வளர்ச்சி**' என்பதாம்.

இப்பெரும் பேராசிரியராம் முதுபெரும் புலவரைப் பெரிதும் பாராட்டுகின்றேம். இவர்கள் திருவருள் வலத்தால் எல்லாவாய்ப்பும் பெற்று நீடுவாழ்ந்து மேன்மேலுயர்ந்து தமிழன்னையைத் தனிக்கொலு வீற் றிருக்கச் செய்வார்களாக. ஏனைப் புலவராம் வித்துவான்களும் ஆசிரியன் மார்களும் இவர்கள் தம் நன்முயற்சியைப் பின்பற்றிப் பல்லாற்றானும் மொழியையும் நாட்டையும் விழுப்பமுறச் செய்து தாங்களும் சிறந்து வாழ்வார்களாக.

"உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ" என்னும் உண்மை அருண மொழிக்கு இவர்களே அமைந்த சான்றாவார்.

மாறுண்டோ?' எனக் கருதிக் கூடுவாள் (கலி 62) இஃதும் அதனுள் ஒரு வகையாம்.

ஓர் அழகிய நங்கையைத் தனியிடத்தே கண்டு காதல் கொள்ளும் ஓர் ஆடவன் தன் கருத்தை வாய்விட்டுரைக்கான். எனினும், அவளுக்குக் குறிப்பால் உணர்த்திச் செல்கிறான். அக் குறிப்பினை உணர்ந்த தலைவியும் ஆற்றாமை கொள்ளுகிறாள். இரு வரும் ஒருவரையொருவர் கண்டின்புறுகிறார்களே யொழிய, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று இன்புறவில்லை. இவ்வாறு பல நாட்கள் கழிவது கண்ட தலைவி, யாதேனும் ஓர் காரணத் தைக் கற்பித்துக்கொண்டு, தானே தலைவனது மெய்தொட்டுப் பயிலமுயன்று, காமவின்பத்தை நுகர்வாள். (கலி - 37) இது வும் அதனுள் ஒருவகையாம்.

1. இவ்வாறு பிறர் அறியாமல் தாமே அன்பொடு கலந்த காதலர் யாவர்க்கும் இயற்கைப் புணர்ச்சி முட்டின்றிக் கூடுதல் அரிதாம். முட்டுண்டானபோது—ஆடவன் வேட்கை தணியான்; முன்னாள் கண்டாற்போலப் பின்னும் காணலா குமோ? எனக்கருதி அவ்விடத்தே செல்வான். அந்நங்கையும் அவனைப்போல் தனக்கு வேட்கை மிகுதலாலே அங்கே வரு வாள். ஆண்டு இருவர்க்கும் புணர்ச்சி நிகழும். அந்நிலையிலே யும் ஆயத்தாராலாவது பிறராலாவது கூட்டுறவிற்கு இடையூ றுண்டாதலியல்பே. அப்பொழுது அவ்விடையூற்றினை தன பாங்கனுக் குணர்த்துவான் அவ்வாடவன். அப்பாங்கன் அந்நங்கை யிருக்குமிடம் அறிந்துகூற, அங்கே செல்வான். இரு வர்க்கும் புணர்ச்சி நிகழும். அவ்விடத்தும் இடையூறுண்டா னல், அந்நங்கையினது தோழிவாயிலாக அவளைப்பெற முயல் வான்.

அவ்வாறு முயல்கையில் அவ்வாடவனது குறை யுணர்ந்து, அக்குறையைப் போக்கக் கருதிய தோழி, அந்நங்கையிடம் அவ னது கருத்தினைக் கூறி இணங்கும்படி செய்வாள். அவ்வாறு தோழி குறை நயப்பிக்கையில் பின்வருமாறு அவளிடம் கூறு வாள். அஃதாவது :—

"அம்மலைக் கிழவோன் நம்நயந் தென்றும்
வருந்தினன் என்பதோர் வாய்ச்சொல் தேறாய்,
நீயுங்கண்டு நுமரொடு மெண்ணி
அறிவறிந் தளவல் வேண்டும். மறுத்தற்கு
அரிய வாழி தோழி! பெரியோர்
நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் மொட்டியோர் திறத்தே." (நற்: 32)

என்பதாம். ஈண்டு, தலைவிதானே நன்கு ஆய்தல் வேண்டுமென்றும், தமரொடும் சூழ்ந்து தெளிதல் வேண்டுமென்றும், தோழி கூறுகிறாள். ஆய்ந்து தெளிந்த பின்னரே தன்னை நாடிய ஆடவனுக்குத் தன் கருத்தையறிவிக்க வேண்டுமென்றும் முதலில் காம நுகர்ச்சியொன்றைமாத்திரம் கருதிக் கூடிப் பின்னர் அவ் வாடவனுடைய இயல்புகளை ஆராயத் தொடங்குவது கூடாது என்றும் தோழி கூறுகிறாள். தன்னை விரும்புபவனும் தன்னால் விரும்பப்படுபவனும் ஆகிய ஆடவன் தன்னோடொத்த தன்மையுடையவனா? எனப் பெற்றோரொடு ஆய்ந்தறிந்துதான் அவனைத் தன் காதலனாக ஒருத்தி அடையவேண்டுமென்பதும், ஏற்றவனல்லன் எனத் தமர் கருதின் அவனைக் காதலனாகக் கொள்ளலாகாது என்பதும், அவர்தம் சொல்லைக் கேளாது தான் விரும்பியவனையே மணப்பின் பின்னர் ஒருகால் வாழ்க்கையில் வெறுப்புற்றுப் பிரிய (Divorce) நேரினும் நேரும் என்பதும், அவ்வாறு பிரியாது உடனுறை வாழ்வே விரும்பப்படுவது என்பதும் இதனால் நன்கு விளங்குகின்றனவன்றோ? எனவே, மகளுக்கேற்ற மணாளனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு தமருக்குண்டு தாய்தந்தையர்க்குண்டு என்பது வெளிப்படையாம். இதனைத் 'தெரிந்துடம்படுதல்' என்னும் அகப்பொருட்டுறை [illegible]

> "விரையக நாண்மலர் மெல்லியல் மாதை விரும்பினையேல்
> வரைய நாட வரைந்துகொள் நீதஞ்சை வாணன்முந்நீர்த்
> தரையக நான்மறைக் கேள்வியர் வேள்வியர் சான்றவர்தம்
> உரையக நாடிமுன் னிட்டன வாகு முலகியலே."

எனப் பாங்கி தன்னை யிரந்து நிற்கும் தலைவனுக்குக் கூறுதலையும் காண்க.

2. பாங்கியின் துணையால் முயலினும் ஒரோவொன்று இடையீடுபட்டு வருதலுமுண்டு. அவ்வாறு இடையீடுபட்டுழி வேட்கை நிறுத்தலாற்றாதார் புணர்ச்சி கருதி களவொழுக்கத் தாக்கே பின்னும் முயல்வர். அவ்வாறு முயலினும் தமரை— தாய்தந்தையராதியரை - மறைத்த நிலையிலேயே ஒழுகலாற்றாது தலைவி வருந்துவாள். களவொழுக்கம் பன்னாள் நீடிப்பது கண்டு பழிக்கஞ்சுவாள். அவ்வாறு அஞ்சுபவள் தன் தோழியை நோக்கி,

> "தோழிநாம், காணாமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
> நாணாது சென்று நடுங்கவுரைத் தாங்குக்
> கரந்ததூஉம் கையொடு கோட்பட்டாம் கண்டாய்நம்
> புல்லினத் தாயர் மகன்சூடி வந்ததோர்
> முல்லையொரு காழுங் கண்ணியும் மெல்லியால்
> கூந்தலுட் பெய்து முடித்தேன்மன், தோழியாய்

வெண்ணெ யுரை இ விரித்த கதுப்போடே
அன்னையு மத்தனு மில்லரா யாய்நாண
அன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ;
அன்னை வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யாள்
நெருப்புக் கைதொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினள், யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
பாங்கரும் கானத் தொளித்தேன்." (கலி. 115.)

என்றாள். அது கேட்ட தோழி அவனை அஞ்சலெனத் தேற்றி,

"சாரல், வாரற்க தில்ல தோழி கடுவன்
முறியார் பெருங்கிளை அறித லஞ்சிக்
கறிவளர் அடுக்கத்திற் களவினிற் புணர்ந்த
செம்முக மந்தி செல்குறி கருங்காற்
பொன்னிணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்
குண்டுநீர் நெடுஞ்சுனை நோக்கிக் கவிழ்ந்துதன்
புன்றலைப் பாறுமயிர் திருத்தும்
குன்ற நாடன் இரவி னானே." (நற்: 151.)

என்று தலைவனுக்குக் கூறுவாளாய் அவளுக்குரைப்பாள். இதனால், 'தலைவி மெய்யுறு புணர்ச்சியை இப்பொழுது விரும்ப வில்லை' என்பதைத் தலைவனுக்குணர்த்துகிறாள் தோழி. களவொழுக்கத்தி லீடுபட்ட மகளிர், குறியிடத் தெய்த இடையீடு பட்டுழி இக்களவொழுக்கத்தால் பயனில்லையென்று கருதியும், தாம் எவ்வளவு மறைப்பினும் பிறர் அறிவரோ என்னும் அச்சத்தினாலும், தமர் தம்மை வீட்டைவிட்டு வெளியேகலாகாதெனக் காத்த சமயத்தும், தம்மால் காதலிக்கப்பட்டாரை யன்றிப் பிறர் மணம் பேசவரின் அதனை மாற்றக் கருதும்போதும் குறியிடம் செல்லாது தம் காதலரொடு மெய்யுறு புணர்ச்சியை மறுப்பார். தலைவன் தம்மை விரைவில் வரைந்தெய்தவேண்டுமென்னும் விருப்புடையவர் மகளிர் ஆதலின், பகல் வருவானை இரவு வருக என்றும், இரவு வருவானைப் பகல் வருக என்றும், இரவும் பகலும் வாரற்க என்றும் கூறிக் களவொழுக்கம் நீடிக்கவிடார். தம் பெற்றோரிடம் தம் கருத்தையறிவித்துத் தம்மை வரைந்து கொள்ளவேண்டுமென்று தலைவனை வற்புறுத்துவார். தலைவன், தம் தமரிடத்து இரந்து குறையுற்றாவது தம்மை மணந்து செல்ல வேண்டும் என்று எண்ணுவார். (ஐங்: 228) "அவனை நீ ஆயர் மகளிர் இயல்புரைத் தெந்தையும், யாயும் அறிய உரைத்தியின் யானுற்ற, நோயும் களைகுவை மன்." (கலி: 111) என்றும், "உயர்மலை நாடற் குரைத்த லொன்றோ, துயர்மருங் கறியா அன்னைக் கிந்நோய், தணியுமா றிதுவென உரைத்த லொன்றோ செய்யா ...காதலிற் கொடியை தோழி. ...நெடுவரை

யணிபெற நிவந்த, செயலையந்தளி ரன்னவென், மதனின் மாமைப் பசலையுங் கண்டே.'' என்றும் தலைவி தோழிக்குக் கூறுவாள். "தாய்தந்தையர் நம் நிலையுணர்ந்து நம்மாற் காதலிக்கப் பட்டவருக்கே நம்மை மணம் புணர்த்தல் வேண்டும்,'' என்னும் எண்ணம் மகளிருக்குண்டு என்பது இச்செய்யுட்களால் விளங்கும். காதலனோடு உடனுறை வாழ்க்கைக் கிடையூறுண்மையால் தமர் அறியாது தலைவனோடு சென்றுவிடலாம் எனக்கருதி "உயர்மலை நாடற் குரைத்த லொன்றோ,'' எனக் கூறினும், 'அன்னைக்கு உரைத்தல்வேண்டும்,' எனத் தலைவி தோழியை வற்புறுத்துகின்றாள். அவள் இவ்வாறு கூறுவதால் தமர் அறியாது தலைவனொடு செல்ல விருப்பமில்லையென்பதும் தமர் மறுப்பின் உடன்போக்குக்குத் தலைவி உடன்படுவாள் என்பதும் புலனாம். காதலனோடு உடனுறைவை விரும்பும் தலைவி தாய்தந்தையர் தன்னை மணம்புணர்த்தல்வேண்டும் எனக் கருதுகின்றாள். ஆதலின் மகளுக்குரிய மணாளனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு தாய்தந்தையர்க்குண்டு என்பது வெள்ளிடைமலையாம.

3. களவொழுக்கத்துத் தலைவனொடு முயக்கம் உண்டாதலால் தலைவியது நெறித்த கூந்தல் பின்னுவிடப் பெறும; புது மணம் கமழப்பெறும்; மார்பில் சுணங்கரும்பும்; முலைக்கச்சுக் கடங்காது கண்ணுருத்தெழும். இவ்வேறுபாட்டினைக் கண்ட தாய் 'கட்டழகுடையாய்', எனக்கூறித் தன் மகளைத் தழுவுவாள். வேறுபாட்டினைப் பலமுறை நினைந்துநினைந்து மகளை இற்செறிப்பாள். இவ்வாறு இற்செறிக்குந் தாய் ஐம்பாற் சிறுபல் கூந்தற் போது பிடித்து அருளாது எறிகோல் சிதைய நூறுவதுமுண்டு. (நற்: 149) "சிலரும் பலரும் கட்கண் நோக்கி, மூக்கி னுச்சிச் சுட்டுவிரற் சேர்த்தி, மறுகிற்பெண்டிர் அம்பல் தூற்றச், சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப, அலந்தனென் வாழி தோழி'' எனத் தலைவி தோழிக்குக் கூறியதாகக் கூறும். (அகம் : 145) ஆம் செய்யுளும் இக்கருத்தினையே வலியுறுத்துகின்றது. "அன்னை யறியின் இவணுறை வாழ்க்கை எனக் கெளிதாக வில்லென.........இளையோன் முன்னுறப் பன்மலை யருஞ்சுரம் போகிய'' என்னும் (அகம்: 203) ஆம் செய்யுளும் இதனையே வலியுறுத்துதல் காண்க. 'தன்சொல்லைக் கேட்காது களவொழுக்கம் விரும்பும் மகளைத் தாய் கோல்கொண்டடித்தும் திருத்த முயல்வாள்,' என்பதால், தன் மகள் களவொழுக்கம் மேற்கொள்வதைத் தாய் என்றும் விரும்புவதில்லை என்பதும் மகளுக்குரிய மணாளனைத் தேர்வதில் தாய்க்குப் பொறுப்புண்டு என்பதும் வெள்ளிடைமலை யன்றோ!

(தொடரும்)

# அன்னையின் ஆணை

[முத்தமிழ்மணி]

1. தித்திக்கும் பாலொடுதேன் குழைத்து மற்றும்
   தீங்கரும்பின் நறுஞ்சாறு சேர்த்தளைந்த
   முத்தமிழின் சுவைமறந்தோம்; முனைந்து நாட்டில்
   முன்னுள்ள செயல்களெலாம் மறந்தோம்; என்றும்
   உத்தமர்கள் வாழவழி வகுத்தோ மில்லை;
   உயர்நீதி எந்நாளும் பேசிப் பேசி
   எத்தனையோ அந்நியர்க்கு இடமே தந்தோம்;
   இருளகற்ற உரிமைப்போர் தொடுப்ப தெந்நாள் ?

2. கோளரிகள் வாழ்ந்ததமிழ்க் குகையி லின்று
   குறுநரிகள் புகுந்தங்கே புரையுண் டாக்கி,
   ஏளனத்துக் கிடந்தந்த தாலே நாட்டில்
   இருபிளவா யிற்றந்தோ என்செய் வார்கொல் !
   ஆளவந்த பெருமக்கள் தாய்ப்பற் றில்லார்;
   ஆணவத்தால் மெய்மறந்தார்; அறிந்த சில்லோர்
   தோள்சேர்த்து வாள்தாங்கித் துடித்து நம்மின்
   துயர்தீர்க்க உரிமைப்போர் தொடுப்ப தெந்நாள் ?

3 காதலுக்கும் சாதலுக்கும் இடையில் நின்று
   கருத்தழிதல் மக்கள்நிலை ஆமோ?—வல்லார்
   மோதலுக்கும் முனுகலுக்கும் அடிமைப் பட்டே
   முத்தமிழின் சுவைமறத்தல் நன்றோ?—தீய
   சாதனைக ளால்தமிழர் நலிவ தற்கோ
   சாத்திரங்கள் பலப்பலவும் புனைந்தார் கீழோர்
   வேதனைதா னென்சொல்வேன் வீணர் நம்மின்
   வீறுகுறைத் திட்டார்கள்; வினைவி தைத்தார்.

4. விடவரவுக் கிடங்கொடுத்த தாலே நாட்டில்
   விளைந்தபிள வைச்சேர்த்து ஒன்று கூட்டும்
   மடங்கல்கள் நம்மிடையே இல்லை யந்தோ !
   மனந்தளரா மறத்தமிழர் முன்வந் தாலும்
   "உடன்பிறந்தோம் எல்லாம்;ஓ ரன்னை ஈன்றாள்
   உய்வதற்கே எல்லோரும் உள்ளோம்," என்றே
   கடன்பட்ட சூல்நெஞ்சக் கூட்டத் தார்கள்
   கரையாது உரைசெய்து வாழ்கின் றார்கள்.

5. என்றபல சிந்தனையில் மூழ்கி அன்று
   எழில்நிலவும் கவின்சோலை தனிற்பு குந்தேன்;
   குன்றனைய நெடுந்தோளான் ஒருவ னென்முன்
   குறைகழறு வான்போல உடல்த ளர்ந்து

நின்றிருகை கூப்பி, "உண்டு நெடுநா ளாச்சு;
நின்கையில் பணமிருந்தால் உதவி செய்வாய்,"
என்றுரைத்தான்; என்பையைத் தடவிப் பார்த்தேன்
இல்லையப்பா காசென்று கைவி ரித்தேன்.

6. "இல்லையென்றா சொல்லுகின்றாய்?" என்ற வண்ணம்
என்னிருகன் னம்அதிரப் புடைத்துச் சென்ற
ஒல்லையிலே ஆண்டிருந்தோர் பிடித்தன் னானை
ஓலமிடு மளவுக்குப் புடைத்து விட்டார்.
"வல்லைவல்லை இக்கொடுமை!" என்றி சைத்து
வானத்தைக் கிழித்துவரும் மதிமு கத்தாள்
"சொல்லியினிப் பயனில்லை; துடிக்கு துள்ளம்
சோதரனைப் புடைத்துவிட்டடா," என்றாள். மேலும்

7. "குருதியுடன் கலந்தஒரு தமிழர்க் கூட்டம்
கொண்டமனை யாள்பிள்ளைக் குழுவி னோடு
'உறுதியிலை இந்நாட்டில் வாழ்வ தற்கே
ஒண்டவந்த ஒருகூட்டம் நமது நாட்டில்,
கருதுசுய நலமென்னும் கற்க ளாலே
கருணையிலா நெஞ்சத்தோ டரண மைத்தார்;
இறுதியாய் நம்வாழ்க்கை அயல்நா,' டென்றே
ஏறிவிட்டார் நாவாய்கள்; இனிது வாழ்ந்தார்.

8. "உண்மையுட னுழைத்துயர்ந்த நமது மக்கள்
உயர்நிலையைக் கண்டபிற நாட்டா ரெல்லாம்
வண்மையுட னுரிமைப்போ ராற்றிப் பின்னர்
வழிகூட்டி யனுப்பிவிட்டார்; வளமி குந்த
தண்டமிழ்நா டாமவரின் தாய்நாட் டிற்கே
தளராது வந்தடைந்தார்; ஆனா லன்னோர்
எண்ணமெலா மீடேற வில்லை; வாழ்வும
எரிதழலா.யிற்றந்தோ என்செய் வார்கொல்?

9. "வாழ்விழந்த அவர்களெலாம் வழிகா ணாமல்
வழிப்பறியே தம்செல்வ மாகக் கொண்டால்,
ஊழ்வினையென் றேசாற்றி ஒறுத்தல் நன்றோ?
உயர்கொள்கை யாமோ? உம் நெஞ்சம் கல்லோ?
பாழ்பட்டுப் போயிற்றோ தமிழர் கொள்கை!
பரிந்தெழுவீர் தோள்புடைக்க! பகைவர் மாட்டு
ஆழ்ந்திட்ட உம்அன்பு அழிக! எந்தன்
அருமைமகார் வாழவழி அளிப்பீர்," என்றாள்.

# உடையார்கோவில் கல்வெட்டுக்கள்

[வித்துவான், வை. சுந்தரேச வாண்டையார், திருவையாறு.]

## முன்னுரை

உடையார்கோவில் என்பது ஒரு சிவத்தலமாகும். இது தஞ்சாவூரிலிருந்து திருவாரூர்க்குப்போகும் இருப்புப்பாதையில் உள்ள சாலியமங்கலம் என்னும் புகைவண்டி நிலயத்திற்குக் கிழக்கே சுமார் ஒன்றரைமைல் தூரத்தில் இருக்கிறது. தஞ்சாவூரிலிருந்து மன்னார்குடிக்குப்போகும் பஸ் மூலமாகவும் இவ்வூரை அடையலாம். இஃது இக்காலம் உடையார்கோயில் என்று பெயர்பெற்றிருப்பினும், இதன் பழம்பெயர் திருவிறையான்குடி ஆகும். இக்கோயிலில் முதலாம் இராசேந்திரன் (கங்கைகொண்ட சோழன்) முதலாம் குலோத்துங்கன் முதலான பல சோழமன்னர்களுடைய கல்வெட்டுக்களும், பாண்டியரில் குலசேகரனுடைய கல்வெட்டுக்களும் இருக்கின்றன. அவைகளை எல்லாம் கல்வெட்டுத்துறையாளர் படியெடுத்துச் சென்று அவைகளின் சுருக்கங்களை 1902-ஆம் ஆண்டு அறிக்கையில் வெளியிட்டுள்ளனர். அதன் பிறகு, இக்கோயிலின் பத்துக் கல்வெட்டுக்களின் மூலங்களைத் (Texts) தென் இந்தியக் கல்வெட்டுத் தொகுதியில வெளியிட்டிருக்கின்றனர்.

பல ஆண்டுகளுக்குமுன்னர், இவ் வுடையார்கோயிலில் இருந்தவரும், நிறைந்த கிழவுத்தன்மையும், பலமொழிப் புலமையும பெற்றிருந்தவருமாகிய திரு ம. அப்பாசாமி ஐயர் அவர்கள், இக்கோயில் கல்வெட்டுக்களை எல்லாம் ஆராய்ச்சிசெய்ய வேண்டுமென்று என்னை வேண்டினார்கள். அக்காலங்களில் இடைவிடாத அலுவல்களால் என்னால் முடியாதுபோயிற்று. ஐயர் அவர்களும் இறைவன் திருவடிநீழல் அடைந்தனர். இப்பால், ஐயர் அவர்களின் அருமைமகனும், தஞ்சையில் வழக்குரைஞராய் இருந்துவரும், திரு. C. A. நாராயணசாமி ஐயர் அவர்கள், உயர்திரு. வடிவேற்பிள்ளை B. A., L. T., (D. E. O. TanJore District Board) அவர்களால் என்னை அறிந்து அக் கல்வெட்டுத் தொண்டில் ஈடுபடுத்தினர். யானும் உடையார் கோயில் சென்று, இரண்டுநாட்கள் தங்கியிருந்து, தென் இந்திய கல்வெட்டுத் தொகுதிகளில் வெளிவராத கல்வெட்டுக்களையும் படித்து இச்சுருக்கத்தை எழுதினேன். எழுதுங்கால் உடனிருந்து எனக்கு வேண்டுவனவற்றைக் குறைவறச் செய்தருளிய இக்கோயில் பொறுப்பாளர் (Trustee) உயர்திரு. A. K. அண்ணாமலைத் தென்கொண்டார் அவர்களின் அன்புடைமையைப்

பெரிதும் பாராட்டுகின்றேன். இச்சுருக்கம் ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படுமென்று, நம் செல்வியில் வெளியிடலானேன். திரு. ம. அப்பாசாமி ஐயர் அவர்களின் விருப்பத்தை நிறைவேற்றிய திருவருளை வழுத்துகின்றேன்.

## ஊரின் பழைய பெயர்

இக்காலம் உடையார்கோயில் என்பது இவ்வூரின் பெயராய் இருப்பினும், பழங்காலத்தில் இவ்வூர், திருவிறையான்குடி என்றே வழங்கப்பட்டுள்ளது. இச் செய்தி, "நம்மூர் திரிபுவன மாதேவிப் பேரேரியுள் எழுந்தருளியிருக்கும் திருவிறையான்குடி திருக்கிளாவுடைய மகாதேவர் ஆதிசண்டேஸ்வர தேவர்க்கு நாங்கள் இறையிலி செய்துகொடுத்த நிலமாவது,"—என்னும் கோவிராஜகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலோத்துங்க சோழ தேவரின் நான்காம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுப் பகுதியால் அறியக்கிடக்கின்றது. ஈண்டுக் குறிக்கப்பெற்ற சோழமன்னன் "பூமன்னு பதுமம் பூத்த"—என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியை உடையவன் ஆவன்.

மேலும், இச்செய்தி கோவிராஜகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராஜாயிராஜ தேவரின் (மூன்றாம் இராஜராஜ.சோழமன்னனின்) பத்தாம் ஆண்டுக் கல்வெட்டாலும் உறுதி எய்துகின்றது.

## ஊரின் பழமையும் பெருமையும்

இக்காலம் கோனேரிராசபுரம் என்று வழங்கப்பெறும் திருநல்லம் என்னும் பதியிலுள்ள தேவாரம் பெற்ற கோயிலைக் கற்றளியால் எடுப்பித்தவர், கோயில் (சிதம்பரம்) திருவிசைப்பாப் பதிகம் பாடிய கண்டராதித்த சோழ தேவருடைய பிராட்டியார் செம்பியன்மாதேவியார் ஆவர்.

அக்கோயிலில் உள்ள உடையபிராட்டியார் செம்பியன் மாதேவியார் வெண்ணூட்டுத் திருநல்லத்து மகாதேவர் கோயில், "ஸ்ரீ கண்டராதித்தன என்னும் திருநாமத்தால் திருக்கற்றளியாகச் செய்வித் தருளுகின்றார்"—என்று தொடங்கும் கல்வெட்டில் காணப்பெறும் "புரவுவரி இறையான்குடித் தலைமகன் தண்டிபூதியான செம்பியன் உத்தர மந்திரியும்" என்னும் பகுதியில் [South Indian Inscription, Volume III, Part III, Inscription Number 151, line 15] இவ்வூர் குறிக்கப்பெற்றுள்ளது. ...க் கல்வெட்டின் காலம் மேற்குறித்த கண்டராதித்த சோழ ...ின் திருமகனார் மதுராந்தக தேவரான உத்தமசோழ

தேவர் காலத்தது ஆகும். எனவே உத்தமசோழன் காலத்துக்கு முன்னரே இவ்வூர் இருந்துள்ளதென்பதை அறிகின்றோம்.

மேல்குறித்த குலோத்துங்கசோழ தேவர், இராஜராஜ தேவர் காலங்களின் கல்வெட்டுக்களில் இவ்வூரின் பெயர்முன் திரு என்ற அடைமொழி கொடுக்கப்பட்டதிலிருந்து இவ்வூர் பெருமைவாய்ந்தது என்று பெறப்படுகின்றது.

## உடையார்கோயில் என்று பெயர் வழங்கப்பெறுவதன் காரணம்

இவ்வூர் உடையார்கோயில் என்று பெயர் வழங்கப்பெறுவதற்குக் கல்வெட்டுக்களில் ஆதாரம் இலது. எனினும் இக்கோயில் கல்வெட்டுக்களில் காணப்பெறும் "உடையார் திருக்கிளா உடையார்கோயில் ஆதிசண்டேஸ்வர தேவர்க்கு"—என்னும் இத்தொடரில், முதலில் காணப்பெறும் **உடையார்** என்னும் சொல் மரியாதை மொழியாகும். **திருக்கிளா உடையார்** என்பது சிவபெருமானின் திருப்பெயராகும. திருக்கிளா உடையார்கோயில்—என்பதில் உள்ள **உடையார்கோயில்** என்ற தொடரின் பெயராலேயே பிற்காலத்தில் இவ்வூரின் பெயர் ஏற்பட்டிருக்கவேண்டும்.

## கோயிலின் பழமை

சோழ மன்னர்களது புகழுக்கு நிலைக்களமாய் விளங்கும் தஞ்சைப் பெரியகோயிலாகிய இராசராசேச்சரத்தை எடுப்பித்த முதலாம் இராசராச மன்னனின் அருமை மகனாகிய முதலாம் இராசேந்திரன் அல்லது கங்கைகொண்ட சோழனின் முப்பத்தொன்றாம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டே, இக்கோயிலில் மிகப் பழமையானதாகும். அக்கல்வெட்டின் காலம் கி. பி. 1014+31=கி. பி. 1045 ஆகும். எனவே இற்றைக்கு 905 ஆண்டுகளுக்கு முன்னரே இக்கோயில் கற்றளியால் ஆக்கப்பட்ட பழமையானதாகும்.

## கோயில் நிலைபெற்றுள்ள இடம்

மேற்குறித்த கங்கைகொண்ட சோழனது கல்வெட்டில் காணப்பெறும் "நம்மூர் திரிபுவனமாதேவிப் பேரேரி உள்ளால் எழுந்தருளியிருந்த திருக்கிளாஉடையார் மகாதேவர் கோயில்,"—என்னும் தொடரால் இக்கோயில் ஏரியின் நடுவுள் இருந்தது என்றும், அவ்வேரியின் பெயர் **திரிபுவனமாதேவிப் பேரேரி** என்றும் பெறப்படுகின்றன. இன்றும் அந்நிலையில் கோயில் இருப்பதைக் காணலாம். ஆனால் போக்குவரவுக்குக் கோயில் வரை அதன் நடுப்பகுதியில் சிறிதுபாகம் தூர்க்கப்பட்டிருக்கின்றது.

## இறைவர் திருப்பெயர்

இக்கோயில் கல்வெட்டுக்களில் இறைவர் திருக்கிளாஉடையார், திருக்கிளாஉடைய நாயனார், நாயனார் திருக்கிளாஉடையார், உலகுடைய பெருமாள் என்னும் திருப்பெயர்களால் அழைக்கப்படுகின்றனர்.

## இறைவரின் திருந்திய பெயர்

இக்கோயில் கல்வெட்டுக்கள் எல்லாவற்றிலும் இறைவர் திருக்கிளாஉடையார் என்றே அழைக்கப்படுகின்றனர். இதில் கிளா என்பது தலத்துக்குரிய மரமாகும். இது களா என்றே இருக்கவேண்டும். ஏனெனில் தமிழுக்கும் சைவத்துக்கும் அருந்தொண்டாற்றிய யாழ்ப்பாணத்து நல்லூர், உயர்திரு. ஆறுமுக நாவலர் அவர்கள் தாம பதிப்பித்துள்ள நூல்களில், இம்மரத்தைப்பற்றிக் கூறவந்தகாலை களா என்றே குறித்துள்ளனர். எனவே திருக்களாஉடையார் என்பதே திருந்திய பெயராகும்.

## இறைவரைப்பற்றி வழங்கும் வரலாறு

"ஆதிசண்டேஸ்வரன் ஆதேசம். நாயனார் திருக்கிளாஉடையார் உலகுடையபெருமாளுக்கு நன்றாகப் பூசைகொண்டருளுகிற நாயனார் கதையாலே பிடமாயிருந்தமைல்"—என்னும் இக்கோயில் கல்வெட்டுப்பகுதியால் நாயனார் ஒருவர் இறைவனை நன்றாய்ப் பூசித்துவந்தார் என்று அறிகின்றோம்.

## எழுந்தருளுவிக்கப்பெற்ற பிரதிமங்கள்

கோவிராஜகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராசேந்திரசோழதேவர் காலத்தில் இத்திருக்கோயில், தேவர் அடியார்பூமி திருவுடையார் திருவேகம்படிநங்கையார் என்பார் ஆளுடைய பிள்ளையார், திருநாவுக்கரசு சுவாமிகள், ஆளுடைய நம்பியார், பரவைப் பிராட்டியார், இவர்களின் பிரதிமங்களை எழுந்தருளுவித்துள்ளார்.

## எழுந்தருளுவிக்கப்பெற்ற திருமேனிகள்

இவ்வம்மையாரே இக்கோயிலில் உள்ள பெரியதேவரையும் நாச்சியாரையும், உமாபரமேஸ்வர தேவரையும் அவரின் நாச்சியாரையும் எழுந்தருளுவித்துள்ளார்.

## திருவிழாக்கள்

முதலாம் இராசேந்திரன் அல்லது கங்கைகொண்ட சோழனின் முப்பத்தொன்றாம் ஆண்டுக் கல்வெட்டில் காணப்பெறும் "இத்தேவர்க்குத் திருவிழாப்புறத்து வரிவஸூல் செய்துகொடுத்

தோம்'' (வரி: 24) என்னும் தொடராலும், திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராசேந்திரசோழ தேவரின் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டில் காணப்பெறும் "திங்கள் திருநாள், ஆட்டைத் திருநாள்களுக்கு குடிமைக்கு மரத்தால் முக்குறுணியாக வந்த நெல்லு தரவிருநெல்லோடே கூட்டிச் சிலவாக்குவதாகவும்'' —(வரி: 19) என்னும் தொடராலும்,

"பூமருவிய திருமாதும் ஜயமாதும் நாமருவிய கலைமாதும் புகழ்மாதும் நயந்துபுல்க''—என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராஜராஜதேவரின் ஆறுவது ஆண்டுக் கல்வெட்டில் காணப்பெறும் "இத்தேவர் திருநாட்களில் யாகமண்டபத்துத் தேவர் எழுந்தருளியிருக்கப் பண்ணவும''—என்னும் தொடராலும் இக்கோயிலில் மாதந்தோறும விழாவும், ஆண்டுதோறும் பெருந்திருவிழாவும் நடைபெற்றுவந்தன என்று அறிகின்றோம்.　(தொடரும்)

## தமிழனும் நீகொலோ?

[நாஞ்சில், கா. கணபதி.]

அன்பும் அமைதியும் ஆக்கமும் பயின்ற
பண்பமை நீடிய தமிழனும் நீகொலோ?
எங்கண் செல்லினும் பெறுவது வெற்றியே
என்றிறு மாந்த தமிழனும் நீகொலோ?
பங்கயச் செல்வி பாண்டிமா தேவியின்
செஞ்சொ லாற்றியும் செவ்விய நோக்கமும்
பரவுமா றுதவிய தமிழனும் நீகொலோ?
உலவும் மயிலின் உறுதுயர் காணு
ஆடையொன் றீந்தப் பீடுறு வணமை
பின்னுள் மாந்தரும் அவ்வழி பற்ற
நன்னெறி காட்டிய தமிழனும் நீகொலோ?
செருக்கும் சினமும் அழுக்கென் றகற்றி
உலகமே யெதிரினும நிலைகெடு வழிவரு
பொருள்நீத் தெவர்க்கும் ஒப்புர வாற்றி
மன்பதை போற்றும் வாழ்க்கை வாழ்ந்து
முந்துறக் காட்டிய தமிழனும் நீகொலோ?
நீகொலோ? நிலைத்தசெந் தமிழனும் நீகொலோ?

# செய்திகளும் குறிப்புகளும்

## பேரிடர் நீங்கிப் பெருநலமுறல்

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், அப்பர் அச்சகம் முதலிய அரும் நிலையங்களின் ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையாபிள்ளையவர்கள் தமிழ் வளர்ச்சிக்கழக நான்காவது ஆண்டுவிழாக் காண்பதன்பொருட்டு யாழ்ப்பாணம் சென்றுள்ளார்கள். இயல்பாகவே அவர்கள் நொடிப் பொழுதும் தாம் மேற்கொண்டுள்ள பொறுப்புப்பணியை விட்டகலும் எண்ணம் இல்லாதவர்கள்; ஒருப்பாடும் இல்லா உரனுடையுள்ளத்தர். இன்றியமையாது செல்ல நேரிடும்பொழுதும் சுருங்கிய கால எல்லையில் சென்று மீளும் திறலினர். தமிழ் வளர்ச்சிக்கழகத்தலைவர் திரு. சு. அவிநாசி லிங்கம் செட்டியாரவர்களின் மறுக்கமுடியா வற்புறுத்தலினாலேயே போக ஒருப்பட்டனர்; போந்தனர்.

அவர்கட்கு எதிர்பாராத நிலையில் 3-5-51-இல் வெப்புநோயுற்றது. ஏறத்தாழ ஒரு திங்கள் காறும் பெரிதும் வருந்தினர். அறநிலை திறம்பா மெய்ம்மையாளரின் நிறமுறு நீர்மை பேரின்னலினின்றும் பெருமானருளால் பிழைத்துச் சீருறுவதாலேயே விளங்கும். அத்தகைய நிகழ்ச்சியே இவர்கள்பாலும் நிகழலாயிற்று. இவர்கள் செந்தமிழ்க்கும் செந்நெறிக்கும் சிறப்புறச் செய்துவரும் திருத்தொண்டே தலைகாத்தது என்க. எவரும் அஞ்சும் இந்நோய்க்கு யாழ்ப்பாணத்து இமையனைய நண்பர்கள் ஒரு சிறிதும அஞ்சாது வேண்டுவன உடனிருந்து செய்துபோந்த உரனுடைமை போற்றற்பாலதே. இஃது "இடுக்கண் களைவதாம் நட்பு" என்னும் இயன்மொழியின் ஏற்றம் தோற்றுவித்ததாகும். இப்பொழுது முற்றும் குணம் எய்தியுள்ளார்கள். 15-6-51-இல் திருநெல்வேலி திரும்புவார்கள். பண்டுபோல் எல்லா உரமும் நலமும் எய்த ஆண்டவனருளை வேண்டுவோமாக.

## தூத்துக்குடி சைவசித்தாந்த சபை 67-வது ஆண்டுவிழா

விழா நாளிது மே—12, 13-ஆம் நாட்களில் சிறப்புற நிகழ்ந்தது. ஈரோடு கலைமகள் கல்வி நிலைய ஆணையாளர் திரு. S. மீனாட்சிசுந்தர முதலியார் B.A., L.T. அவர்கள் விழாப் பேரவையின் தலைமை தாங்கினார்கள். திருமுறை ஓதலும், ஊர்வலமும், திருக்கோவில்வழிபாடும் சிறப்புற நிகழ்ந்தன. திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக உறுப்பினரும், சித்தாந்த சைவ புராணிகருமான குலசைத் திரு. ச. முத்துக் குமாரசாமியாபிள்ளை அவர்கள் பேரவையைத் தொடங்கி வைத்தார்கள். திரு. வெண்ணிமாலைப பிள்ளை (அட்வகேட்) அவர்கள் வரவேற்று அவைத் தலைவரவர்களைத் தலைமைதாங்க வேண்டிக்கொண்டனர். திரு. V. S. சண்முகம் பிள்ளையவர்கள் வரவேற்பு இதழ் படித்தளித்தார்கள்.

திருவாடுதுறை ஆதீன சொற்பொழிவாளர் அம்பாசமுத்திரம் திரு. ஆ. முத்துக்குமார சுவாமியா பிள்ளையவர்கள், கொடுமுடி 'முத்தமிழ் வித்தகி' திரு. K. A. முத்துலட்சுமியம்மையார், 'சித்தாந்த கலாநிதி' திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள், புரிசை திரு. சு. முருகேச முதலியாரவர்கள், அரும் பெரும் பொருள்கள் பலபற்றி விரிவுரையாற்றினார்கள்.

இரண்டாம்நாட் காலை புரிசை. திரு. சு. முருகேச முதலியாரவர்கள் 'சைவ இலக்கியங்கள்' என்பதுபற்றிப் பேசினார்கள். மாலையில் சென்னை திரு. C. திருநாவுக்கரசுப் பிள்ளையவர்கள், ஔவை. சு. து. அவர்கள், திரு. C. E. நாயகம் பி.எ. அவர்கள், 'சித்தாந்த வித்தகி' C. S. ஈசுரவடிவம் மாள் அவர்கள் முதலியோர் சொற்பொழிவாற்றினார்கள். 'முத்தமிழ் வித்தகி' திருமதி, கொ. அ. முத்துலட்சுமி அம்மையாரவர்கள் 'சிவநெறி யிற் சிலமகளிர்' என்னும பொருள்பற்றித் துணைக்கருவிகளுடன் தனிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அவைத்தலைவரவர்கள் தலைமையுரை, கருத்துரை, முடிப்புரை முதலியன அழகுறப் பேசி அவையை அணி செய் துள்ளார்கள். வாழ்த்தும் நன்றியும் வழங்க விழா இனிது நிறைவுற்றது. ஆயிரக்கணக்கான ஆடவரும் மகளிரும் விழாவிற் கலந்துகொண்டனர்.

### சேக்கிழார் திருநாள்—தேவகோட்டை

இத்திருநாள் 6, 7, 8-6-51 மூன்று நாட்களும் தேவகோட்டை நகரச் சிவன் திருக்கோவிலின்முன் அமைக்கப்பெற்றுள்ள முருகவேள் சதுக்கத் தில் சிறப்புற நிகழ்வதாயிற்று. திருவாளர் செ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தலைமை தாங்கினார். திரு. சு. ஆவுடையப்ப தேசிகர் அவர் கள், திருவண்ணாமலை ஆதீனம ஸ்ரீலஸ்ரீ தேயசிகாமணி அருணாசல தேசிக சுவாமிகள், வித்துவான் வை. சு. தண்டபாணி அவர்கள், கோதமங் கலம் M. SP. சண்முகம், M. A. அவர்கள், திருவையாறு க சேதுராமலிங் கன் அவர்கள், திருவையாறு அரசர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப்பேராசிரி யர் இராம. கோவிந்தசாமி பிள்ளை அவர்கள், பாலூர், ந. மு. சுப்பராய முதலியார், தமிழ்வேத தலயாத்திரைப் படஆசிரியர் அவர்கள், சென்னை கி. வா. ஜெகந்நாதன் அவர்கள், திருக்கோகர்ணம் சி. பிருந்தாதேவியார் அவர்கள், வயிநாகரம் இராம. மீனாட்சி அவர்கள், சென்னை அ. ச. ஞான சம்பந்தன் M. A. அவர்கள், திருப்பனந்தாள் கல்லூரி முதல்வர் K. M. வேங்கடராமையா B. O. L. அவர்கள், மதுரை ஆதீனம் திருப்புறம்பயம் மாணிக்கவாசகத் தம்பிரான் அவர்கள் முதலிய அனைவரும சேக்கிழார் நூலகத்துப் பொருள்களே பொருள்களாகப் பேசிய சீர்மை மிகவும் பாராட் டற்குரியது. இரவு சேக்கிழார் திருவுலாவும், யானைமீது திருமுறை ஊர்வலமும் மிக்க சிறப்பினவாய் நிகழ்ந்தன. இம்முறை சேக்கிழாரடிகளின் தெய்வநலம் தேயமெல்லாம் செழிக்கச் செய்து, நாடும் மொழியும் வளமுறச் செய்யும் நல்லதோர் முற்படியாகும்.

### திலகவதியார் மாதர் கழகம்—தூத்துக்குடி

இக்கழகத்தின் ஆறாவது ஆண்டு விழா 10-6-51 ஞாயிற்றுக்கிழமை யன்று நிகழும். 'சித்தாந்த கலாநிதி' திரு. ஔவை. சு. துரைசாமி பிள்ளை யவர்கள் தலைமை தாங்குவார்கள். காலையில் திருமடாலயத்தில் திலகவதி அம்மையார், திருநாவுக்கரசு நாயனார் இவர்களுக்கு வழிபாடு நிகழும். மாலை கழகச் சிறுமியர், அம்பலவாணர் வழிபாடு செய்வர். திருமதி அ. இசக்கியம்மாள், தாழையூத்து சங்கர், கணபதி மில்ஸ் லிமிடெட்., அவர்கள் பேரவையைத் தொடங்கிவைப்பார்கள். திருமதி. கு. மங்கையர்க்கரசி அம்மையார் வரவேற்பு வழங்குவர். 'கடவுள் ஒருவர் உண்டு' என்னும் பொருள்பற்றி வினாவிடை செல்வி. S. கோமதியும், P. சுப்புலட்சுமியும் நிகழ்த்துவர். காரைக்காலம்மையாரின் அருட்செல்வம் தலைவரவர்களால் பேசப்பெறும். 'சித்தாந்த வித்தகி' திருமதி C. E N ஈசுரவடிவம்மையா ரவர்கள், திருவாடுதுறை ஆதீன சொற்பொழிவாளர், தூத்துக்குடி, திரு

ஞானசம்பந்தர் உபநயனமும், திருஐந்தெழுத்துப் பதிகமும் பேசுவர். மங்கையர்க்கரசியார் என்னும் பொருள்பற்றிக் குடந்தை, திருமதி. கை. சிவானந்தவல்லி அம்மையாரவர்கள் B. A. (Hons) பேசுவார்கள். திருவருள் வலத்தால் அவைத்தலைவர் நீங்க ஏனையாரெவரும் பெண்பாலராகப் பங்கெடுத்துத் தொண்டுஞற்றுவது மிகமிகப் பாராட்டத்தக்கது. "திலக வதியார் திருவருளால் மேன்மேல், உலகுய்யத் தொண்டியற்றும் ஓர்ந்து."

## திருப்புகழ், திருமுறை மாநாடு—பழனி

ஒன்பதாவது மாநாடு மே 16, 17 ஆம் நாட்களில் மிகவுஞ் சிறப்பாக நடைபெற்றது. இடம் கணபதி இராமலிங்க நிலையம். பேரவையைத் திருப்புகழ்மணி குகத்திரு T. M. கிருட்டிணசாமி ஐயரவர்கள் திறந்து வைத்தார்கள். திரு. T. M. நாராயணசாமிப் பிள்ளையவர்கள் தலைமைதாங்கி னூர்கள். அறிஞர் பலர் சொற்பொழிவு செய்தனர். அவர்களுள் ஆசிரியை திரு. R. இராசரத்தின அம்மையார் எம். ஏ. எல். டி. 'சமகாலச் சைவம்' என்பதையும், குகத்திரு. கிருபானந்தவாரியார் 'திடமலி' என்பதுபற்றி யும் விரித்துரைத்தார்கள்.

இரண்டாம் நாள் திருமுறை மாநாடு. தலைவர், கோவை அரசியற் கல்லூரி முதல்வர் திரு. A. இராமநாத பிள்ளையவர்கள். சொற்பொழி வாளர், திரு. ஆசிரியர் இளவழகனார் அவர்கள், டாக்டர் M. இராசமாணிக் கம் பிள்ளையவர்கள், ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளையவர்கள், அ. மு. சரவண முதலியாரவர்கள், தொண்டன் ஆசிரியர் K. ஆறுமுக நாவலரவர் கள் முதலியோராவர்.

மே 18, இவ்விழாவையொட்டி இரண்டாவது திருக்குறள் மாநாட்டை கோவை பேராசிரியர் திரு. A. இராமநாத பிள்ளையவர்கள் திறந்து வைத் தார்கள். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர் R. P. சேதுப் பிள்ளையவர்கள் தலைமை தாங்கினூர்கள். திருக்குறளைப்பற்றிய சொற் பொழிவுகளும், டாக்டர் நாராயணசாமி நாயுடு அவர்களின் திருக்குறள் அட்டாவதானமும் நிகழ்ந்தன. திருமுறை, திருக்குறள் யானைமீது ஊர் வலம், விருந்து, பரிசு முதலிய பிறநிகழ்ச்சிகளும் சிறப்பாக நிகழ்ந்தன.

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு உரு } திருவள்ளுவர் ஆண்டு கசுஅஉ, ஆனி ஜூலை, 1951 { பரல் கக

# தமிழ் வளர்ச்சிக் கழக

# நான்காவதாண்டு விழா

[கழகப் புலவர், சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை]

(சிலம்பு உரு, பரல் கo, சுருகூ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பெரும்புலமைப் பேராசிரியர் திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை யவர்கள் அரியபெரிய தலைமையுரையைக் "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாம் சொல்." என்னும் தமிழ்மறையின் தனிமாண்பு பொதுள ஆற்றினார்கள். அவர்கட்கு இயற்கையே அமைந்த இன்சொல்லடுக்கும், நன் பொருள் மிடுக்கும், நாநயப்பயனும் அவ்வுரையின்கண் ஆங்காங் குக் கெழுமியிருந்தன.

கல்வி, வணிகம், கலையொழுக்கம் முதலிய பல்வேறு துறை களிலும் இலங்கைக்கும் இந்தியாவுக்கும் பிரிக்கவொண்ணு நிலைமையில் பிணைந்துள்ள உறவுநிலைகளைப்பற்றி உளங்கொள விரித்துரைத்தார்கள். இவற்றை வலியுறுத்தும் அகப்புறச் சான்றுகள் பல பண்டைச் சங்க மருவிய பொய்யாநாவின் மேலோர் அருளிய தண்டமிழ் நூல்களிலும், பிற்றைக்காலத்து நற்றிறம்படரும் நாவலர் பாவலர் நவின்ற நல்லுரை நூல்களிலும் காணக்கிடப்பனவற்றுளிருந்து ஆழ்கடல் முத்து வீழ்வார்க்கு நல்க ஆய்ந்தெடுத்து மேலுறக்கொணர்ந்து வேண்டியாங்கு வழங்கும் வினைவலார்போன்று வியத்தகுமுறையில் விளம்பினர். பேச்சழகும் சொல்லழகும் அவர்கட்கே அமைந்த பீடுறு தனி நடையிலிருந்தன.

புலவர் பொன்னுரை

இலக்கண இலக்கியப்புலமை நிறையப்பெற்றவர்களாய், பலநாளும் மாணவர் பலர்க்கும் பல ஆண்டுகளாகச் செந்தமிழ்த் திறனைச் சீருறப் பாடஞ்சொல்லும் திருவினராய்த்திகழும் மட்டக்களப்பு திரு. வித்துவான் பெரியதம்பிப்பிள்ளை அவர்கள் "கம்பன் காட்டிய தமிழ் நாகரிகம்" என்னும் பொருள்பற்றி விரிவுரையாற்றினார்கள்.

அருந்தமிழ்ப்பணியும் அன்பர் ஈட்டமும், பொருந்தும் புலமே பொன்னுடைதனினும், திருந்திய செல்வத் திருஇடமாக, அருந்தும்பொழுதும், அங்கண் பொருந்தும்பொழுதும் உள முறக்கொள்ளும் ஒண்மையராய், கல்லூரிகளிலும், கல்லூரி யனைய கவினுறு இல்லங்களிலும் மாணவர் பலர்க்கும் நாளும் மாண்புறச் செந்தமிழ் பயிற்றும் திருத்தொண்டே சிவத்தொண் டாய் வாழ்நாளெல்லாம் வனப்புற ஆற்றிவரும் வட்டுக்கோட்டை திரு. முதுதமிழ்ப்புலவர் மு. நல்லதம்பி அவர்கள் 'தண்டமிழ்க் கோர் ஒண்பொருளாய்த்திகழும் கண்டனைய கலித்தொகை'யி னின்றும் "கண்ணீர் பெருக்கிய கலித்தொகை" என்னும் தலைப் பிட்டு மணியனைய பெருங்குரலில் புன்முறுவல்பூத்த இன்முகத் தோடு வண்ணவண்ணப் பாக்களை எண்ணமுற எடுத்தியம்பி அரியதோர் விரிவுரையாற்றினார்கள்.

முத்திறப்பொருளும் எத்திறத்தார்க்கும் முறைமையின் உணர்த்தி, அறம் பொருள் இன்பம் ஆணையின் எய்தி வாழ் வித்து வாழ்தற்கு வழிகாட்டும் வண்டமிழ் வளநூல், மணிமுடி துறந்து அருளின் அணிமுடி சூடி, அரியணைவிடுத்து அறிஞர் செறிவுறுநெஞ்சாம் உரியணை இவர்ந்து, செங்கோலையும் திறம் பெற நடாத்தும் நூல்வரை பொன்கோல் தாங்கி, நாற்படை நலமுற நாற்பொருள் அமைத்து, எய்ப்பில்வைப்பாம் செந்தமிழ் இன்பப் பெரும்பொருள் இயல்பின் ஈட்டி, வரையாது வழங்கும் வண்மைசால் சேரர்குலச்செம்மல் ஆசிரியர் இளங்கோ அடிக ளால் அருளிச்செய்யப்பெற்றது சிலப்பதிகாரம். பன்னூற் பயிற்சியோடு அந் நூற்பயிற்சி மிக்குள்ள ஆற்றலும், அறிவும், தோற்றமும், மாற்றமும், தேற்றமும் ஒருங்கமை தமிழ்ச்செல்வர் திரு. ம. பொ. சிவஞான கிராமணியார் அவர்கள் சிலப்பதிகாரத் தின் அருமை பெருமைகளை விளக்கி விரிவுரையாற்றினார்கள்.

மேலும் பெண்களுக்குமட்டும் இயல்பாயமைந்த தனிப் பெருஞ்சிறப்பு, தாய்மையாகும். அது நன்மைபயக்கும் மென் மைக்கும் வன்மைக்கும் உறுதுணையாய் முன்னோடிநிற்கும். அவ்வுண்மையினையே வள்ளுவப் பெருந்தகையார்,

"அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை." —திருக்குறள்: எசு.

என வலியுறுத்தருளினர்.

காடு கெடுத்து நாடாக்கி, மலை அகழ்ந்து உலையா நிலை பொருள் விளைத்து, பொன் மலையெனப் பெருக்கி, இலங்கையைப் பீடுறச் செய்து ஈடும் எடுப்பும் இல்லா ஆண்மையராய் உள்ள இலங்கை இந்தியர் இந்நாள் வாழ்க்கைக்கும் வழியிலராய் விழி யிழந்து குழிவழிச் செல்வார் போன்று துன்புறுகின்றனர். அத்தகைய துன்பத்தைப் போக்குவதே அறிஞர் அருங்கடனும் எனக் கேட்போர் உள்ளங் குழைந்துருக மொழிந்தனர். அவை யினர் அனைவரும் நனிமிகப் பாராட்டினர்.

இரண்டாம்நாள்

30-4-51 திங்கட்கிழமை எண்ணியற் கலையாம் அறிவியற் (விஞ்ஞானம்) பகுதியின் பல்வேறு நிகழ்ச்சிகள் தொடங்கின. அரிய பெரிய அறிவியற்செய்திகளைக் கேட்போர் உளங்கொள 'எண்பொருள வாகச் செலச் சொல்ல' வேண்டுமுறைப்படி இனிமையும் தெளிவும் நனிமிகப் பெருக, திரு. டாக்டர் கிருட் டிணன் அவர்கள் பெரியதோர் விரிவுரை ஆற்றினார்கள்.

திருமதி. இராசேசுவரி அம்மையாரவர்கள் "காட்சிவாயி லாகக் கல்வி" என்பதை நகைச்சுவைமிக நவின்றார்கள்.

இலங்கைப் பல்கலைக்கழகக் கல்வி விரிவுரையாளர் திரு. க. ச. அருணந்தி அவர்கள் உளநூலைப்பற்றி மக்கள் உளங் கொண்டொழுகி, உய்யுமாறு விரிவுரையாற்றினார்கள்.

பிற்பகல்

திரு. நடேச பிள்ளையவர்கள் தலைமை பூண்டார்கள். வர லாற்றுப் பகுதி துவங்கப்பெற்றது. திரு. பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரவர்கள் தமிழர்வரலாற்றை (சரித்திரம்) எடுத்துரைத்தார்கள். இலங்கையின் சிலபகுதிகளைத் தமிழ்மன்னர்கள் அழித்தனர் என்று உண்மைக்கு மாறாகச் சிலர் கூறும் கூற்றுக் கலப்பற்ற பொய்யேயாகும் என வலிய சான்றுகள் பலகொண்டு வற்புறுத்துரைத்தார்கள்.

திரு. எஸ். எம். கமால்தீன் அவர்கள் "இஸ்லாமியரும் தமிழும்" என்னும் பொருள்பற்றி 'இழுமென இழிதரும் விழுமிய அருவிபோன்று' அமிழ்துறழ் மொழியால் விரிவுரை யாற்றினார்கள். இலங்கைவாழ் மகம்மதியர்களின் தாய்மொழி தேனினுமினிய செந்தமிழ்மொழியே என்று வரலாற்று முறை வழுவாது மறுக்கவொண்ணாத தக்க பல சான்றுகள் நிறுவி விளக்கினார்கள்.

பேராசிரியர் சீனிவாசாச்சாரியாரவர்கள் வரும் வாய்ப்புப் பெற்றிலர். அவர்கட்கு ஈடாக, திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் சொற்பொழிவாற்றினூர்கள்.

"சர்வோதயம்" என்னும் தனிப்பொருளை விளக்கிச் சர்தார் வேதரத்தினம் அவர்கள் விரிவாகப் பேசினூர்கள்.

இரவு நிகழ்ந்த எழிற்கூத்து

தொன்று தொட்டு நின்று நிலவும் பாவைக்கூத்து, சிறப்புற நிகழ்ந்தது. கண்ணுக்கினிய காட்சியாக இருந்தது. களிப்பு மிகுதியாக இருந்தது. இராமநாதன் கல்லூரி மாணவியர் நடனமும் நல்ல முறையாக அமைந்திருந்தது.*

மூன்றும்நாள்

1—5—51. செவ்வாய்க்கிழமை பேராசிரியர் அ. சீனிவாசராகவன் அவர்கள் தலைமை பூண்டார்கள். "இக்கால இலக்கியங்கள்" என்னும் பொருள்பற்றி விளக்கினூர்கள்.

திரு. பண்டிதர், கணபதிப் பிள்ளை அவர்கள் "தமிழ்" என்னும் பொருள்பற்றி விரிவாகவும் இனிமையுறவும் விரிவுரை ஆற்றினூர்கள்.

காந்தீயம்

திரு. டாக்டர் மு. வரதராசனூரவர்கள் திருக்குறள் என்னும் பொருள்பற்றிச் சீர்சால் விரிவுரையொன்று ஆற்றினூர்கள். உலகப்பொது நூலாய்ச் செந்தமிழ்த் திருமறையாய், நந்தமிழ் நாகரிகக் கருவூலமாய், நந்தாமணி விளக்காய் நலமுறத் தோன்றும் ஈடும் எடுப்புமில்லா வீடருள் திருக்குறள் இன்றைக்கு இரண்டாயிர யாண்டுகளுக்குமுன் திருவள்ளுவ நாயனூரால் தெய்வமுதனூலாய் இயற்றி அருளப்பெற்றது என்றனர்.

நாம் வாழுங்காலத்து நம்கண்முன்னர் நமக்கெல்லாம் உய்வழ---ரடித் தந்தருள்த் தமக்கென வாழாப் பிறர்க்குரியாள

* குறிப்பு: மாணவர்கட்கு உடற்பயிற்சி உரம் தருவதுபோன்று மாணவியர்க்கு நடனம் உரந்தருவதாகும். மேலும் நல்ல கருத்துக்களை வளர்ப்பிக்கவும் வளர்க்கவும் வழியாகும். இக்கலைகளெல்லாம் திருக்கோவிலின்கண் நிகழுமாறு நம்முன்னோர்கள் அமைத்ததும் அரசனையுள்ளிட்டு அனைவரும் வந்து கண்டு உண்மை கடைப்பிடித்து ஒழுகற்கும், ஆண்டவன் நினைவகலாது அறம் பொரு ளின்பங்களில் திரியாது செம்மையுற வாழ்தற்கும், நற்கலைகள் நாளும் வளர்ந்தோங்கி நாடும் மொழியும் பீடுறற்கும் தக்க வாயிலாக இருப்பது பற்றியேயாம். கலைவல்லார் மக்கள்பால் பொருளை விழையாது மாண்பமை மன்னர்பால் வேண்டி நின்றமையால் ஒழுக்கங்குன்று விழுத்தகு முறையில் நடித்தனர். அஃதக்.. லவமைவு.

ராய்ச் சிறந்திருந்த காந்தியடிகள் கைக்கொண்டொழுகிய கடவுள்நெறி காந்தீயம் என்ப. அது மெய்யான பொதுவான வாழ்க்கை வரலாற்று முறைநூலாகும். அதுவே சிறந்த இலக்கியமாகும். அவ் இலக்கியததிற்கு முற்றும் வாய்ந்த இலக்கணமாகவுள்ளது திருக்குறள் என்றனர். இவ்வுண்மையைப் பல்வேறு ஆராய்ச்சிகளால் நன்கு வலியுறுத்து நிறுவினர்.

திருமதி. மகேசுவரி மகாதேவா அவர்கள் "சமய இலக்கியங்கள்" என்னும் பொருள்பற்றி அரியதோர் அழகமை விரிவுரை ஆற்றினார்கள்.

பகலுணவின் பொருட்டுப் பேரவை கலைந்து மீண்டும் கூடுவதாயிற்று. அப்பொழுது ஐம்பதினாயிர மக்கள் குழுமியிருந்து பேரவையைச் சிறப்புறுத்தினர்.

பாராட்டல்

தமிழ்வளர்ச்சிக் கழகத்தலைவர் திரு. அவினாசிலிங்கம் செட்டியாரவர்கள் சுருக்கமும் பெருக்கமுமாகிய இனியதோர் சொற்பொழிவாற்றிப் பரிசுபெற்ற நூலாசிரியர்களைப் பாராட்டினார்கள். "நாம் பழம்பெருமை பேசி வாழமுடியாது; பண்டைக்காலத் தமிழ்மக்களைப் போன்று நாமும் சிறந்து உலகநாகரிகத்துக்கு உதவவேண்டுமானால் நம்முடைய முற்காலத்துப் பண்பாட்டையும் இக்காலத்து அறிவையும் பயன்படுத்தித் தலைசிறந்த அறிவும் நாகரிகமும் உடையவராய்த் திகழல்வேண்டும்," என வலியுறுத்துப் பேசினார்கள்.

பரிசுபெற்ற புலவர் தலைமணி ஐவருள் இருவரே விழாவுக்கு வந்து தத்தம் பரிசுகளை நேரில் பெற்றுக்கொண்டனர். பெருமக்கள் தாங்கள் படிக்கும் தகையமைநூலின் ஆசிரியச் செல்வர்களை நேரில் காணப் பெரிதும் விழைகின்றனர். ஏனைய எழுத்தாளர்களும் உடனொத்த ஒருதனிப் பெருந்தகையாருடன் ஒருங்கிணைந்து கூடி நகலினன் ஆம் விண்ணாட்டும் கிட்டாத இனிமைப் பண்பாம் விருந்தமிழ் துண்ண நனி விருப்புறுகின்றனர். இவ்விரு வேறு வாய்ப்புகளும் ஒருங்கே எய்துதற்கு வாயிலாகிய இத்தகைய விழாக்களுக்கு வரும் ஆண்டுகளிலேனும் பரிசுபெறும் எழுத்தாளர்கள் அனைவர்களும் வரல் வேண்டுமென்பது எனது பேரவா என்றனர்.

பொன்னுடை போர்த்தல்

ஈழத்துப் பேரறிஞராக விளங்கும் மகா வித்துவான் பிரம்மஸ்ரீ கணேசய்யர் அவர்களுக்கு விலையேறப்பெற்ற பொற்பட்டாடை புனையப்பெற்றது. ஒல்காப் பெரும்புகழ்த் தொல்

காப்பிய முதலாம் பெருநூல்களை விளக்கமுறக் குறிப்புரைக ளுடன் வெளிப்படுத்தி ஆசிரிய நிலைசேர் மாணவர்கட்கும் அனைத்து நூலும் அழகறிவன்புடன் பன்னாள் பயிற்றுவித்து வரும் பண்பை இவர்கட்குப் பட்டாடை சாத்திப் பாராட்டியது பாராட்டத்தக்கதேயாம்.

திரு. அனந்தவைத்தியநாதன் அவர்கள் இரசாயனமும் வாழ்க்கையும் என்பதுபற்றி மிக விரிவாகவும் தெளிவாகவும் பேசினார்கள். மேசை, நாற்காலி, தொலைபன்னி (Telephone) சீப்பு, கண்ணாடி முதலிய பல்வேறு பயனுடைப் பொருள்கள் உருவாந்தகைசேர் மண்ணனைய ஒன்றால் (Plastic) ஆக்கப்படும் முறையை அறிவுறுத்தினார்கள்.

உணவு முறை

திருமதி. புதுடில்லி மருந்துழைச் செல்வியர் (Nurse) கல் லூரிப் பேராசிரியர் டாக்டர் இராசாம்பாள் தேவதாஸ் அவர் கள் உணவு முறைகளைப்பற்றிப் பேசினார்கள். அரிசியைத் தீட்டி வெள்ளையாகவும், கோதுமையைத் தீட்டி மைதாமாவாக வும், வெல்லத்தை வெண்ணிறச் சர்க்கரையாகவும், உப்பைக் காய்ச்சி வெள்ளுப்பாகவும் உண்பதில் உடலுக்கு வேண்டும் உய் வுறை ஆற்றற்பொருள்கள் கழிந்து விடுகின்றன என்பதை யாவ ரும் ஒப்புக்கொள்ளுமுறையில் எளிதாகவும் இனிதாகவும் எடுத் துரைத்தார்கள். நெல்லிக்காயில் எல்லாவகை ஆற்றல்களும் நிரம்பியிருக்கும் வியத்தகுமுறையை விளக்கினார்கள். (ஒளவை யுண்ட நெல்லிக்கனியை நினைவுகூர்க.) "உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கழகு," என்னும் மூதுரையை விளக்கி மொழிந்தனர். மக்களுடைய பழக்க வழக்கங்கள் அவரவர்கள் உட்கொள்ளும் உணவுக்குத் தக்கவாறு மாறும் என்பதை உளங்கொள வுரைத் தார்கள். இவ்வுண்மையை நிலைநாட்டப் பல்வேறு கதைகள் பகர்ந்தனர். 'பொன்னாங்காணி,' என்னும் உயர்ந்த கீரை யுணவை ஒருவர் உண்டு வருவரேயாயின், புலமும் மேனியும் பொன்னாய்ப் பொலிவர். அவ்வுண்மை உய்த்துணர்வார்க்கு அச் சொல்லின்கண்ணே அமையப்பெற்றிருப்பது அருமை யன்றோ? என்னை, "பொன் + ஆனான் + காண் + நீ," = பொன் னாங்காணி என வழங்கி வருவதாலென்க. அம்மையாரவர்கள் உணவு முறைகளைப்பற்றிப்பேசிய ஒவ்வொரு சொல்லும் நகைச் சுவை நிரம்பியே இருந்தது.

வானவெளி மின்னியக்கம்

யாழ்ப்பாணம் அறிவியல் (விஞ்ஞானம்) விரிவுரையாளர் திரு. சிதம்பரம் பிள்ளையவர்கள், "வானவெளியில் மின்சாரமும்

வாழ்க்கையும்," என்னும் பொருள்கள்பற்றிப் பெரிதும் வியக்கச் சொற்பொழிவாற்றினார்கள். விண்மீன்களைப்பற்றிய புதுப் புதுச் செய்திகளைக் கோவைப்படுத்தி அழகுறப் பேசினார்கள்.

## திண்ணைப்பள்ளிச் சிறப்பு

திரு. E. W. அரியநாயகம் அவர்கள், "பண்டைக் கிராமங்களின் கல்விப் பயிற்சி," என்னும் பொருள்பற்றி விரிவுரையாற்றினார்கள். இவர்கள் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர்களாவர். வார்தா ஹிந்துஸ்தானி தாலிமி சங்கச் செயலாளரும் ஆவர். வாழ்க்கைக்கு வேண்டும் கல்வி இன்றியமையாததென்று காந்தியடிகள் பரப்பிய அரும் பெரும்கருத்தை விளக்கிக் கூறினார்கள். அக்கல்வி முறையைக்காண வருமாறு அனைவரையும் அன்புடன் அழைத்தார்கள்.

## வாழும் இலக்கியம்

பரமேசுரக்கல்வி விரிவுரையாளர் திரு. வித்துவான் சு. வேந்தனாரவர்கள், "வாழும் இலக்கியம்," என்னும் பொருள்பற்றி விரிவுரை யாற்றினார்கள். இவர்கள் தமிழிலக்கியத் துறையில் பெரிதும் உழைத்துப் பெயரும் பீடுமொன்றப் பெற்றுத் திகழும் பெரும்புலவர். இவர்கள் ஆற்றும் விரிவுரை சொன்னயம் பொருள்நயம் மிகப் பொலிவதுடன், குரல்நயமும் கூடுதலாகக் காணப்பெறுகின்றது. இவர்தம் உரத்தகுரல் எல்லார் செவிப் புலனிலும் இனிதாகச் சென்று இயையும் தன்மையது. இத்தகைய ஆண்மைக் குரலினர்க்கு ஒலிபெருக்கியும் வேண்டுவதின்று. இயல்பாகவே இச்சிறிய தலைப்புடைய பேச்சு இறுதியாக அமைந்தது சாலப் பொருத்தமேயாம். என்னை? இலக்கியம் வாழ்வதற்கு இயன்றவாறு இடையறு துழைத்துவரும் இக்கழக நோக்கம் இதுவே என்பதைப் புலப்படுத்தினமையான் என்க. இது, 'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்,' என்னும் புணர்ப்பினைப் புணர்ப்பதாகும்.

## நன்றி விளம்பல்

திரு. 'கல்கி' அவர்களும் கோவை டி. ஆர். சுந்தரம் அவர்களும் தமிழ்விழாவைச் சிறப்பாக நடத்தித் தந்த சொலற்கரும் பெற்றிமை வாய்ந்த யாழ்ப்பாணத்துத் தமிழ்மெய்யன்பர்களைப் பாராட்டி நன்றி கூறினர். அதன் வாயிலாக உளம் கனிந்த இனியதோர் சொற்பொழிவாற்றினர். நன்றியுரை முற்றும் உண்மையேயன்றி இம்மியும் முகமன் அன்று. பேரவைக்கண் குழுமியிருந்த இலட்சக் கணக்கான இருபால் எழிலுறு மக்களின் வழிமொழிதலாம் இந்நன்றியுரை பாராட்டத்தக்கது.

இசையரங்கு

திருமதி எம். எல். வசந்தகுமாரி அவர்களின் இசையரங்கு மூன்று மணி நேரம் ஆன்றபெரும் தமிழ்ச்சுவையுடன் நிகழ்ந்தது. சிறந்த பொருட்செறிவு நிரம்பிய பல பாடல்களைப் பாடி அவையினரைக் களிக்கச்செய்தனர். அவையினர் இன்னிசைச் செவிவிருந்துண்டு மன்னிய வண்டெனத் தம்மை மறந்து இன்பந் திளைத்து மகிழ்ந்தனர். "எல்லோரும் காந்தி சொல் கேட்க வேண்டு"மென்னும் நல்லுரையுடன் இசையரங்கு நிறைவுற்றது.

தாளாண்மையர்

தமிழ் நாட்டின்கண் நிகழ்ந்த சிறப்பினும் மிக்க சிறப்பாக யாழ்ப்பாண நாட்டின்கண் நிகழ்ந்தமை மிகமிகப் போற்றத் தக்கது. இச்சிறப்பிற்கு உறுதுணையா யுடனுழைந்துழைத்த மெய்யன்பர் பலராவர். அவர்தம்முள் சிலர் பெயர்களையேனும் கூறல் வேண்டுவது இன்றியமையாததாகின்றது. திரு. நடேச பிள்ளை, திரு. கனகரத்தினம் இவ்விரு பெருந்தகையாரையும் பற்றிய சிறு குறிப்பொன்று முன்வந்துள்ளது. திரு. ச. அம்பிகை பாகன் அவர்கள் முழுநேர ஊழியராய் முழுமனமுடன் உழைத்து வெற்றியுறச் செய்தனர். வரவேற்புக்குழுவின் செயலாளராக விளங்கியவர்கள் திரு. முதலியார் சின்னத்தம்பியவர்களும், திரு. நவரத்தினம் அவர்களும் ஆவர். பொருளாளர் டாக்டர் சி. குருசாமி அவர்களும் திரு. நடேசன் அவர்களும் ஆவர். விழாவின் போக்குவரத்துக்கு வேண்டும் துணை புரிநதவர் திரு. வழக்கறிஞர் அருளம்பலம் அவர்களாவர். உணவுப் பகுதிக்குத் தலைவராயிருந்தவர் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் முன்வேலை பார்த்துள்ள ஆசிரியர் திரு. இராசராசேசுவரன் அவர்கள். விரிவஞ்சி இத்துடன் அமைகின்றோம்.

பயனுறுத்தல்

விழா நிகழ்ச்சிகளை வீட்டிலிருந்தவாறு விழைந்தாங்கு கேட்கும் வாய்ப்பும், ஆங்காங்குள்ள அரிய திரைப்படக் காட்சி வழிக்காணும் அமைவும், வழிநடைகளில் பொறியூர்தி வாயிலாக அவ்வப்போது கேட்கும் செவ்வியும் அருமையுற இலங்கை அரசியற் செய்திப் பகுதியினரும், வானொலி நிலையத்தாரும் செய்தமைத்திருந்தனர். விழாவினுக்கு வந்துள்ளவர்களின் நலங்கருதி 'நோய்க்கிடங்கொடா' நிலையத்தார் நிலையமும், ஊர் காவலர் நிலையமும் விழாப்பந்தலையொட்டி அமைந்திருந்தன.

வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்ப்புலவர்
வாழ்க கழகவிழா மற்று.

# சங்க இலக்கியங்களில் இல்லையா ?

[சு. குமாரஸ்வாமி ஆச்சாரி B.O L. மயிலம்]

(சிலம்பு உகு, பரல் கo, சஅகூ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

4 இவ்வாறு களவொழுக்கம் நீடிக்கையில் ஊரவர் அலர் தூற்றுவர். அதனால் வருந்தும் தலைவியை நோக்கிய தோழி, தலைவிக்கும், தனக்கும், தலைவனுக்கும், குலத்திற்கும் குற்றம் வாராதமுறையில் தாய்க்கு எடுத்துரைப்பாள். தாய் அச் சொல்லுக்கிணங்காவிட்டால் தலைவன் நமக்கு எளியனென்றோ உயர்ந்தோனென்றோ கூறுவாள். ஏனெனில், மகளின் மணாளன் தம் வழியொழுகுபவன் ஆயினும் தம்மில் உயர்ந்தோனாயினும் மகளைத்தர இசைவர் அன்றோ! தலைவனிடத்துத் தலைவிக்குள்ள வேட்கையையும் தலைவியிடத்துத் தலைவனுக்குள்ள வேட்கையையும் கூறுவாள். தலைவியை அத்தலைவனுக்கே தரவேண்டு மென்று உறுதியாகக் கூறுவாள். வெறியாட்டும் கட்டும் கழங்கும் இட்டுரைத்தழி வேலனோடாவது பிறரோடாவது உசாவுவாள். பின்னர் 'நீரில் மூழ்கிய தலைவியைக் காப்பாற்றினான்,' என்றும் 'விலங்குகளால் துரத்தப்பட்டவளைக் காப்பாற்றினான்,' என்றும் யாதேனுமோர் ஏதுவை ஏறட்டுக்கொண்டு தலைவனும் தலைவியும் தலைப்பட்டமை கூறுவாள். இவ்வாறு பன்முறை முயன்று தலைவியின் விருப்புக்குத் தாய் இணங்கு மாறு செய்வாள். மகளின் உடல்வேறுபாடு கண்ட தாய் தானாக வினவியவிடத்துத்தான் தோழி இவ்வாறெல்லாம் கூறுவாள். தாய் கேளாதிருக்கும்போதே தோழி கூறுவதுமுண்டு. தலைவன் வந்து கேட்கத் தலைவியின் தமர் மறுப்பதும், தலைவனையன்றிப் பிறனொருவன் வரைவு வேண்டி வரத் தமர் உடன்படுவதும் தோழி தானே தாயர்க்கு உண்மையுணர்த்தும் காரணங்களாம். இவ்வாறு அறத்தொடு நிற்கும் பகுதி மகளுக்குரிய மணாளனைத் தாய்தந்தையர் தேர்ந்தெடுக்கும் வழக்கந்தான் அக் காலத்து மிகுதியாயிருந்தது என்பதை நன்கு விளக்குகின்றதன்றோ!

5. தமர் வரைவு உடன்படாத வழி, தோழி,—'நும் பிரிவு அன்னை யறுக்கும், நும்மோடு துன்பம் துணையாக உடனுறைவதைவிட எங்களுக்கு வேறு இன்பமுமுண்டோ ?' எனத் தலைவனுக்குக் கூறித் தலைவியை உடன்கொண்டு போகும்படி தூண்டுவாள். அவன் உடன்பட்ட பின்னர், 'தமர் அறியாது தலைவனுடன் அவனூர்க்குச் செல்க,' எனத் தலைவிக்குக் கூறுவாள். அதுகேட்ட தலைவி, "உயிரோம்பி யென்றும், துறவாத

நாணம் துறப்பது வேண்டலின் தொல்லுலகில், பிறவாதொழி தல் நன்றே ஒரு காலமும் பெண் பிறப்பே,'' என இரங்குவாள். அவளது கருத்துணர்ந்த தோழி, 'உயிரினும் சிறந்தது நாண், நாணினும் சிறந்தது மாசிலாக் கற்பு,' எனக்கூறத் தலைவி முன் னோர் மொழியைப் பொன்னேபோற் போற்றும் கருத்துடைய ளாதலின், 'நெஞ்சே, வளைநெகிழ அழுங்கண்ணோடு இரங்கித் தனித்து வாழும் வாழ்க்கையை இனி நாம் எய்தாதிருப்போம் ஆதலின், அவருடைய நாடுசெல்ல எழு,' என மனம் துணிந்து காமக் கிழவனுள்வழிச்செல்ல ஒருப்படுவாள். "நீயும் கலங்கா மனத்தையாகி என் சொல்நயந்தனை கேண்மோ......இன்னும தோய்க நின் முலையே,'' என விடுப்பாள். தலைவியும் வைகு புலர் விடியலில் தன் மெய்கரந்து தன் கால் அரியமை சிலம்பு கழற்றாது தலைவனோடு செல்வாள். சிலம்பைக் கழற்றி வைத்து விட்டுச் செல்வதும் உண்டு. காளையொடு அருஞ்சுரம் போகும் தலைவி கல்லென் சிறாரில் எல்லிடைத் தங்கிச்செல்ல, அவ்வூர்ப் புனையிழை மகளிரைப் பயந்த மனைகெழு பெண்டிர், இவர்கள் தமர் அறியாது செல்வதற்காக வருந்துவர். (ஐங்: 382) மகட் போக்கிய தாய் தன் மகள் மீண்டும் தன்னில்லுக்கு வரவேண் டும் எனத் தெய்வம் பராவுவாள்; "அஞ்சிலோதி வரக் கரைந் தீமே,'' எனக் காக்கையையும் இரப்பாள். அவ்வாறு அவள் அலைந்து கொண்டிருக்கையில் தலைவனது ஊரினின்றும் வருவா ரைக் காணின், "நும்மனைச் சிலம்பு கழீஇயயரினும் எம்மனை வதுவை நன்மணம் கழி,'' கெனக் காளையை யீன்ற தாய்க்குச் சொன்மின் என இரந்து கூறுவாள். மகள் தலைவனுடன் மீண்டு வந்தவிடத்துத் தாய் தன் சுற்றத்தாரை யழைத்துவந்து தன் மகளைக் காட்டிக்காட்டி மனமகிழ்வாள்.

களவொழுக்க மாகாது என மகளைக் கண்டித்த தாய், தன்னையறியாது தலைவனொடு சென்ற மகளை ஏற்றுக்கொண்ட னளே எனின், அவ்வாறு ஏற்றுக்கொண்டதற்குக் காரணம் மக்களிடத்து இயல்பாயுள்ள தாயன்பே தவிர வேறின்று. மக ளின் தாயொழிந்த ஏனைய பெண்டிர்—காதலொடு இல்லறம் நிகழ்த்துவோர், மகளிரைப் பயந்தவர்—இக்கள வொழுக்கத் தினை விரும்பவில்லை (ஐங்: 382) எனவே பெற்றோர் மணம் புணர்க்கக்கூடி வாழ்வதுதான் சிறந்தது என்பது வெளிப்படை யன்றோ!

6. "வெளிப்பட வரைதல் படாமை வரைதல்என் றாயிரண் டென்ப வரைத லாறே,'' என்பர் இலக்கண நூலோர். எனினும், "வெளிப்படை தானே கற்பினொ டொப்பினும்,'' (தொல்-களவு: 51) என்பதால் வெளிப்படாமை வரைதலே சிறந்

தது என்பது விளங்கும். களவு வெளிப்படத் தலைவன் தலைவியை உடன்கொண்டு தன்னூர்க்குச்செல்லினும் வரைவு இன்றியமையாது வேண்டப்படுவது என்பதை, "வரையாது பிரிதல் கிழவோற்கில்லை," (தொல்-களவு: 51) என்னும் சூத்திரத்தொடர் வலியுறுத்தும். இதனால், எங்ஙனமாயினும் தலைவன் தலைவியை வரைந்துகொள்ளல் வேண்டும் என்பதே தொல்லாசிரியர் கருத்தென்பது நன்கு புலனாகின்ற தன்றோ! வரைவு என்பது கரண நிகழ்ச்சியேயாம். சிலம்பு கழித்தலும் பின்னர் வதுவை மணம் நிகழ்த்தலும் உண்டு என்பதை இலக்கண இலக்கியங்கள், நன்கு உணர்த்துகின்றன. ஆதலின், திருமணச் சடங்கு முற்காலத்து முண்டு என்பது வெள்ளிடை மலையே. சடங்கு எவ்வெவ்வாறு நிகழ்ந்ததெனக் கூறுதற்குச் சான்றில்லையெனக் கூறலாமே யொழிய, மணச்சடங்கே நிகழ்ந்ததில்லையெனக் கூறுதற்கில்லை.

> "கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
> கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
> கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே,"

எனக் கற்பு என்னும் சொற்குப் பொருள் கூறுவர் தொல்காப்பியனார். "களவு வெளிப்பட்ட வழியும் வெளிப்படாத வழியும், மெய்யுறு புணர்ச்சியின்றி உள்ளப் புணர்ச்சியின் உரிமை பூண்ட வழியும், 'கொண்டானிற் சிறந்த தெய்வமில்லை, இவனை இன்னவாறு வழிபடுக,' எனக் கற்பித்து, தலைவியின் தந்தையும் தாயும தன்னையரும் மாதுலனும் சான்றோரும் தலைவியைக் கொடுக்க, ஒத்த குலத்தானாகிய தலைவன் வதுவைச் சடங்கொடு பொருந்திக் கொளவான்," என்பர் உரையாசிரியர்.

'களவின்கண் ஒழுகியவழி அவ்விருவரும் கரணத்தின் அமையாது இல்லறம் நிகழ்த்தலாகாதோ?' எனின்,—'அஃதாகாது,' என்பதற்காகக், "கரணமொடு புணர," என்றார் என்பர் உரையாசிரியர். 'வதுவைச் சடங்கு முற்காலத்து நிகழ்ந்ததுண்டோ?' என்பார்க்குத் தொல்காப்பியர், 'முன்னர் கரணம் இன்றியே இல்வாழ்க்கை நடந்தது. பொய்யும் வழுவும் தோன்றியபின்னர் வதுவைச் சடங்கு தோன்றியது. அச்சடங்கு முதன் முதல் மேலோர்களால் கையாளப்பட்டது. பின்னர் கீழோர் அதனை யேற்றனர்,' என்று கூறுகிறார். வதுவைச் சடங்கு இன்றியமையாதது என்னும் தொல்காப்பியர், 'தலைவியை அவளின் தாய் தந்தையர் தர மணம் புணரவேண்டும்,' எனக், "கொடைக்குரி மரபினோர் கொடுப்ப," என்னும் தொடரால் வற்புறுத்துகின்றார்.

"கொடுப்போரின்றியும் கரணம் உண்டே," எனத் தொல்காப்பியரே கூறுவதால் கொடுப்பாரின்றிக் கொள்ளலாகாதோ?

வதுவைச் சடங்கு தானே இன்றியமையாதது? எனின், முத லில் "கொடுப்பக் கொள்வதுவே," எனக்கூறி இரண்டாவதாகக் "கொடுப்போரின்றியும் கரண முண்டே," எனக் கூறுவதனால், முன்னர்க் கூறியதே சிறந்ததென்பதும், பின்னர்க் கூறியது அவ் வளவு சிறந்ததன்று என்பதும் தாமே போதரும். ஆதலின், மகளுக்குரிய மணாளனைத் தேர்வது பெற்றோர் கடன் என்பது வெளிப்படையாம்.

7. "நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி மகட் பாடஞ்சிய மகட்பால்," என மகட்பாற் காஞ்சிக்கு இலக்கணம் கூறுவர் தொல்காப்பியனார்.

> "கருங்கண் கொண்ட நெருங்கல் வெம்முலை
> மைய ணுக்கிற் றையலை நயந்தோர்
> அளியர்தாமே ; அவள் தன்னை மாரே
> செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
> நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்
> கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்
> குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
> கழாஅத தலையர் கருங்கடை நெடுவேல்
> இன்ன மறவர்த் தாயினு மன்றோ
> என்னா வதுகொல் தானே
> பன்னல் வேலியிப் பணைநல் லூரே." (புறம் : 345)

என்பர் அடைநெடுங்கல்வியார். இவற்றால் தம்மொடு சமமான வர்க்குத்தான் பெற்றோர் தம் மகளைத் தருவர் என்பதும் சம னல்லாதார்க்குத் தாரார் என்பதும் தலைவியின் பெற்றோரது விருப்பமின்றி மணம் நிகழ்த்தலாகாது என்பதும் போதரும். இதனானும் மகளுக்குரிய மணாளனைத் தேர்பவர் தாய் தந்தை முதலிய தமரே யென்பது வெளிப்படையாம்.

> 8. "ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்
> ஒன்றி யுயர்ந்த பால தாணையின்
> ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
> மிக்கோ னாயினும் கடிவரை யின்றே."

என்னும் சூத்திரத்தால் (தொல்-களவு : 2) 'கொடுப்பாரு மடுப் பாருமின்றி ஊழாற் கூட்டுவிக்கப்படுபவர் ஒத்த கிழவனும் கிழத்தியு மாவர்,' எனக் குறிக்கின்றார் தொல்காப்பியர். அவரே,

> "பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
> டுருவு நிறுத்த காம வாயில்
> நிறையே யருளே யுணர்வொடு திருவென
> முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே."

என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்தால் பத்துவகையில் ஒப்புமை வேண்டும் எனக்கூறுகின்றார். அவ்வொப்புமைகளுள் 'பிறப்பு எனப்படுவது அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், ஆயர், வேட்டுவர், நுளையர், குறவர் என்றாற்போல வருங்குலம்' என்பர் உரையாசிரியர்கள். எனவே, காதலர்கள் ஒத்த குலத்தில்—சாதியில் பிறந்தவராதல் வேண்டும். அக்குலத்திலுள்ளோரெல்லாம் சிறப்பாக ஒவ்வாமையான் அச்சிறப்பாகிய ஒழுக்கம் பற்றிய குடிவரவுடையராயிருத்தல் வேண்டும். அவ்விருவரும் சோம்பியிராமல் தத்தமக்குரிய இயல்பின் முயற்சி (ஆண்மை) யுடையராயிருத்தல் வேண்டும். ஒருவரினொருவர் முதியரன்றி ஒத்த பருவத்தினராதல் வேண்டும் வனப்பு, அன்பு, அடக்கம், அருள், அறிவு, செல்வம் ஆகியவைகளில் ஒத்தவராதல் வேண்டும்,' என்பது நம் முன்னோர் கொள்கையாம். இவ்வொப்புமை கூறிய தொல்காப்பியனார்,

> "நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
> வன்சொற் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
> யின்புற லேழைமை மறப்போ டொப்புமை
> யென்றிவை யின்மை யென்மனார் புலவர்."

எனக் கூறுகின்றார். இவை பத்தும் காதலரிடத்தே இல்லாதிருக்க வேண்டும் என்பதும் முன்னோர் கொள்கையாம். 'நிம்பிரி, கொடுமை, புறமொழி, வன்சொல், பொச்சாப்பு ஆகிய இவை விலக்கப்படவேண்டும்,' என்பதனால் இவைகளுக்கு மாறுபட்டனவாகிய அன்பும் அருளும் இருக்கவேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டது.' மடிமை கூடாது' என்பதனால் ஆண்மையுடையராதல் வேண்டும் என்பது பெறப்படும். 'குடிமையின்புறலும் வியப்பும் ஆகா என்பதனால் பிறப்பு, குடி, திரு இவை உடையராதல் வேண்டும் என்பது வலியுறும். 'ஏழைமையும் மறப்பும் கூடா' என்பதனால் உணர்வுடையராதல் வேண்டும் என்பது வலியுறும். 'வியப்பு, குடிமையின்புறல், ஒப்புமை ஆகியவை கூடா' என்பதனால் நிறையுடையராதல் வேண்டும் என்பதும், 'நிம்பிரி, கொடுமை, பொச்சாப்பு, மறத்தல் ஆகியவை கூடா' என்பதனால் நிறுத்தகாமவாயிலுக்குக் காரணமாகிய பருவமும் உருவமும் இருத்தல் வேண்டும் என்பதும் வலியுறும். பத்துவகையான பண்புகள்—ஆகா என்பதனால் பத்துவகையான ஒப்புமை இன்றியமையாதது என்பது வலியுறுத்தப்பட்டது.

"குன்ற நாடன் குடிநன்குடையன், கூடுநர்ப்பிரியலன், கெடுநாமொழியலன், அன்பினனென நீ, வல்லகூறி வாய்வதிற் புணர்த்தோய், நல்லைகாணில் காதலந்தோழி,.................பாண்

மகன், எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும், புதுவது புனைந்த திறத்தினும், வதுவை நாளினுமினியனுலெமக்கே."(அகம்: 352) எனத் தோழிக்குத் தலைமகள் கூறுகின்றாள். இதனால், தோழி தலைவனது பண்பினை ஆய்ந்து கூட்டினாள் என்பதும், காதலர் குடிமையும் அன்பும் அருளும் உணர்வும் உடையர் என்பதும் பெறப்படும். "அன்பும் மடனும் சாயலு மியல்பும் என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும் ஒன்றுபடு கொள்கையொடு ஓராங்கு முயங்கி" (அகம்: 225) என்பதனால் காதலர் அன்பு, நிறை, உரு, உணர்வு முதலியன பொருந்தப் பெற்றார் என்பது பெறப்படும். இப்பத்தினுள்ளும் உருவே பெண்களால் நோக்கப்பட்டது என்பது, "தண்ணந்துறைவன் இவட்கமைந்தனனற்றே தனக்கமைந்தின்றவள் மாமைக்கவினே."(ஐங்: 108) என்பதனால் பெறப்படும்.

"அவனைநீ, ஆயர்மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயும் அறிய உரைத்தீயின் யானுற்ற
நோயும் களைகுவை மன்" (கலி: 111)

"ஆயர் மகனையின் ஆயர்மகள் நீயாயின்
நின்வெய்யோ னையின் அவன் வெய்யை நீயாயின்
அன்னனோ தக்கதோ இல்லைமன் நின்னெஞ்சம்
அன்னை நெஞ்சாகப் பெறின்." (கலி: 107)

"விரிநீ ருடுக்கை யுலகம் பெறினும்
அருநெறி யாயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்லியல் பன்றே." (கலி: 114)

என்பனவற்றால் காதலரைத் தேர்வதில் பிறப்பு (சாதி) நோக்கப்பட்டது என்பது புலனாகும். இக்கருத்தையே, செவிலிக்குரிய துறைகளுள் ஒன்றான "இருபாற் குடிப்பொருளியல்பு" என்னும் துறை வலியுறுத்தும். இவ்வகையின் உரிய காதலரைத் தேர்ந்தெடுப்பது உலக அனுபவமுடையார்க்குத்தானே இயலும். ஆதலின் தாய்தந்தையர் முதலிய தமரே மகளுக்குரிய மணாளனைத் தேர்ந்தெடுத்தற்குரியவர் என்பது விசதமன்றோ!

9. "நடுவணைந்திணையாகிய ஒத்த காமத்தின் மிக்கும் குறைந்தும் வருதலானும், எண்வகை மணத்திலும் பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்பன அத்திணைப்பாற் படுதலானும், இந்நான்கு மணமும் மேன்மக்கள் மாட்டு நிகழ்தலானும், இவை உலகினுள் பெருவழக்கெனப் பயின்று வருதலானும் அது பெருந்திணையெனக் கூறப்பட்டது" எனவும், "நடுவணைந்திணையாகிய ஒத்த கூட்டம் பெருவழக்கிற்றன்றோ? எனின், அஃது அன்பும் குலனும் முதலாயின ஒத்து வருவது உலகினுள் அரிதாகலின் அருகியல்லது வாராதென்க. இந்

நூலகத்து ஒருவனும் ஒருத்தியும் நுகரும் காமத்திற்குக் குல னும் குணமும் செல்வமும் ஒழுக்கமும் இளமையும் அன்பும் ஒருங்குளவழி இன்பம் உளதாமெனவும், கைக்கிளை ஒருதலை வேட்கை யெனவும் பெருந்திணை ஒவ்வாக் கூட்டமாய் இன்பம் பயத்தல் அரிதெனவும் கூறுதலான் இந்நூலுடையார் காமத் துப் பயனின்மை உய்த்துணர வைத்தவாறு அறிந்து கொள்க," எனவும் உரையாசிரியர் இளம்பூரணர் கூறுவது, மேன்மக்கள் களவொழுக்கத்தைக் கைக்கொள்ளவில்லை யென்பதையும்—தாமே தமியராய்க்கூடி மணம் புணர்ந்து வாழும் வழக்கம் சிறு வரவிற்று என்பதையும் வலியுறுத்துகின்றதன்றோ! பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் நால்வகை மண முமே மேன்மக்கள்மாட்டு நிகழ்வன என்பதால் ஏனைய அசுர மும், இராக்கதமும், பைசாசமும் கீழ்மக்கள் மாட்டு நிகழ்வன என்பது தாமேபோதரும். பாரதம், இராமாயணம், சீவகசிந்தா மணி முதலிய இலக்கியங்கள், அசுர மணமும் மேன்மக்களால்—அரசரால்—கொள்ளப்பட்டதெனப் பகர்கின்றன. உலகினுள் பெருவழக்கினவாகிய நால்வகை மணங்களுள், பிரமம் என்பது, கன்னியை அணிகலனணிந்து பிரமசாரியா யிருப்பானுக்குத் தானமாகக் கொடுப்பதாம். பிரசாபத்தியமாவது, மகட்கோ டற்குரிய கோத்திரத்தார் மகள் வேண்டிய வழி இருமுது குரவ ரும் இயைந்து கொடுப்பதாம். ஆரிடமாவது, ஒன்றானும் இரண் டானும் ஆவும் ஆனேறும் வாங்கிக்கொண்டு கொடுப்பதாம். தெய்வமாவது, வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவற்கு வேள்வித்தீ முன்னர்த் தம் மகளைக்கொடுப்பதாம். இவற்றுள் பிரமத்தை அறன் நிலை யென்றும், பிரசாபத்தியத்தை ஒப்பு என்றும், ஆரிடத்தைப் பொருள்கோள் என்றும், செந் தமிழில் கூறுவர். அவ்வாறு கூறுதற்குரிய காரணத்தை அச் சொற்களே உணர்த்தும். இந்நால்வகை மணங்களினும் கொடுப் போரின்றிக் கரணமில்லையன்றோ! அசுர மணமும், வில்லேற்றி னலாவது, திரிபன்றி யெய்தலாலாவது கோடற்குரியனெனக் கூறியவழி, அது செய்தாற்குக் கொடுப்பதாதலால் ஆண்டும் கொடுப்போரின்றிக் கரணம் நிகழ்வதில்லையென உணர்க. எனவே தம் மக்கட்குரிய காதலரைத் தேர்ந்தெடுப்பது தாய் தந்தையராதியோர் கடமையாம் என்பது நன்கு புலனாகின்றது.

10. காதலராவா ரிருவர்க்கும் அன்பு (நிறுத்தகாம வாயில்) இன்றியமையாத தொன்றன்றோ! உலகில் பெருவழக் காகிய அறனிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம் ஆகிய நால் வகை மணத்தினும் மணம்புணர்க்கும் பெரியோர்க்கு மன இசைவு உண்டேயன்றி, மணம்புணரும் தலைவன் தலைவியாகிய

இருவர் மாட்டும் ஒத்த அன்பு இருக்குமெனக் கருதுவது இயலா
தாகலின், தாமே ஒத்துப் புணரும் காமக்கூட்டம் சிறந்ததன்றோ?
சிறந்த முறையைத்தானே பின்பற்றவேண்டும்? என்ற வினா
வெழலாம். காமக்கூட்டம்—களவின் வழிவந்து கற்பு நெறியில்
வாழ்வது—சிறந்த—தொன்றே என்பது யாவர்க்கும் உடன்
பாடே. "அகத்திணையாவது அறத்தின் வழாமலும் பொரு
ளின் வழாமலும் இன்பத்தின் வழாமலும் இயலல் வேண்டும்.
அவையெல்லாம் பிறர்க்குக் குற்றேவல் செய்வார்க்குச் செய்தல்
அரிதாகலானும், அவர் நாணுக்குறைபாடுடையராகலானும்,
குறிப்பறியாது வேட்கை வழியே சாரக்கருதுவராகலானும்,
இன்பம் இனிது நடத்துவார் பிறரேவல் செய்யாதார் என்பதனா
லும் இவர் புறப்பொருட் குரியராயினாரென்க," என "அடி
யோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்," என்னும் தொடர்க்கு
உரை கூறும் இளம்பூரணர் கூறுவர். இதனால் காமக்கூட்டம்
நன்னிலையில் அமைவது அரிது என்பது போதரும்.

இதுவரை கூறியவற்றால், களவொழுக்கம் சிறுவரவிற்று
என்பதும், அது நன்னிலையில் அமைவது அரிதென்பதும்,
மனைகெழுபெண்டிர் அவ்வொழுக்கத்தை விரும்பா என்பதும்,
ஈன்ற தாயும் களவொழுக்கம் மேற்கொள்ளும் மகளைக் கண்டிப்
பாள் என்பதும், உலக அனுபவமில்லாத ஆண்களும் பெண்
களும் தம் நல்வாழ்வுக்குரிய காதலரைத் தாமே தேர்ந்துகொள்
வது இயலாதென்பதும் நன்கு விளங்குகின்றன. ஆதலின் தம்
மக்களுக்குரிய காதலரைத் தேர்ந்தெடுப்பது தாய் தந்தையர்
கடமையேயாம் என்பதும் மக்கள் தம் கருத்தைப் பெற்றோர்க்
குணர்த்தவேண்டியவர் என்பதும் வெள்ளிடை மலையென
விளங்குகின்றதன்றோ!

(தொடரும்.)

## முது தமிழ்ப் புலவர்

# மு. நல்லதம்பி அவர்களின் பெரும்பிரிவு

[வீர. சோம. வீரப்ப செட்டியார்]

சுற்றமொடு சூழவிருந்து பொல்லாங்கின்றி எல்லோர்க்கும் நல்லோராய் வாழ்ந்து, அமிழ்தினுமினிய பழம்பெருந் தமிழைப் பாங்குடன் கற்று, ஆயிரமாயிர மாணவர்களுக்கு உளமறிந்து உண்மையோடு சீர்தூக்கித் திறனறிந்து செப்பி, அவர்கள் கற்று வல்லுநரென்னும் பெயர்கொள்ளத் தாமின்புற்று வாழ்ந்த பெருந்தகை, முதுபெரும் புலவர்மணி பண்டித, மு. நல்லதம்பி யார், இறைவன் திருவடியடைந்த செய்திகேட்டு ஆறாத்துயருறு கின்றோம். முத்தமிழ் வல்ல இத்தகையார் பிரிவு, ஈழநாட்டிற் கும் இந்தியத் தமிழ்நாட்டிற்கும் என் ! ஆர்கலியுலகத்துள்ள அருந்தமிழ்ப் புலவருலகிற்கும் அமைதிகொள்ள முடியாத பேரிழப்பாகும்.

> "அற்றாரைத் தாங்கிய ஐவே லசதி அணிவரைமேல்
> முற்றா முகிழ்முலை எவ்வாறு சென்றனள் முத்தமிழ்நூல்
> கற்றார்ப் பிரிவும கல்லா ரிணக்கமும் கைப்பொருளொன்
> றற்றா ரிளமையும் போலே கொதிக்கு மருஞ்சுரமே."

என்ற இப்பாட்டின் பொருள் எவ்வளவு உண்மையாக இருக் கின்றது. அந்தோ வாழ்க்கை கொடிது! கொடிது!

கண்டோருள்ளம் கனிவுறப்பேசும் கருத்துடைப் புலவரை இழந்தோம். பண்டைச் சிறப்பெலாம் பாங்குடன் தொகுத் துத் தண்டமிழிலக்கிய வடிவாய் யாத்த ஒப்புயர்விலா உண்மைப் புலவரை இழந்தோம். ஆணந்தநும்ப அருளுமார்வமும் மாணவருளங்கொள மாண்புடன் மொழிந்து வேணவா விஞ்ச விருப்பொடு எப்பொருளும் பேணுதற் றொழிலாக்கொண்ட பெரும்புலவரை இழந்தோம்.

சொல்லால் விளக்க எல்லோரும் மகிழ வல்லாரிவரென்று வாழ்த்திடக் கேட்ட வண்டமிழ்வல்லுநரை இனி என்று காண் போம். கல்வி வல்லார் காதலித்தளித்த முதுதமிழ்ப் புலவரென் றுரைபெரு சிறப்பினுக்குரிய அருளறநிரம்பிய ஆண்டகையை என்று காண்போம்.

கற்றார்க்குதவு நெறி காட்டு கருணையனார் பெற்றபெரு அன்பின் பெருஞ்சுடராம், உற்றவர்கள தமிழன்பர் எனக் கேட்டால் உவந்துரை பலவாற்றும் உத்தமர், செற்றமிலாப்

பெருங்குணத்துப் பீடுடைய நெறிசான்ற பெரும்புலவரை என்று காண்போம்.

ஆன்ற குடிப்பிறப்பானும் அன்புடைமையானும் அன்னார் பண்புடைமை வெளிப்படும். கற்றாரிடத்துக் காட்டும் கழி பேருவகை தனித்தமர்ந்த பெருஞ்சிறப்பியல்புகளிலொன்று கும். அழுக்காறற்றவர்; தண்ணளி நிரம்பியவர்; ஒருகாலைப் பழகினும் இவர்களிடத்து மறுகாலைச் செல்லவே உள்ளம் அவாவி நிற்கும்.

> "உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
> அனைத்தே புலவர் தொழில்."

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கு இவர் சிறந்த எடுத்துக்காட் டாவார்.

ஒரு நூலைச் செப்புமாற்றலில் அதனுட் கருத்துக்களையும் நுண்ணிய பொருள்களையும் திண்ணிதிணுய்ந்து எடுத்தியம்பி விளக்கம் தரும்பொழுது ஐயப்பாடே இல்லாதிருக்கும். பொரு ளியல்புகளை விரித்தெடுத்துரைக்கும்போழ்து சீரிய செந்தமிழ்ச் சுவை ததும்பும். அப்பொருள் எந்நலமும் குறையாது ஊன்றி யறிகின்ற உண்மைக் கருத்தினைத் தன்னகத்தே கொண்டதாக விருக்கும். கருத்தினை ஆராயும்போழ்து நல்லியல்பின் நாட் டத்திற்கே நம்மை ஈர்த்துச் செல்லும்.

யான் புலவர் பாண்டியனார் அவர்களிடத்துப் பாடங்கேட்ட ஞான்று, பண்டித நல்லதம்பியவர்களும் தமக்கொழிந்த நேரத் தில் யாப்பருங்கல விருத்தியும் கலித்தொகையும் பிற சங்கநூற் களும் பாடம் சொல்லப் பயனடைந்தனன். செய்யுளியல் பாட மோதும்பொழுது அன்னாருள்ளம் புதுச்செய்யுளொன்றைத் தமிழ்மொழிக்கு வழங்கியதாகவே இருக்கும். அவர்களுடைய செய்யுட் பகுதிகள், சீரும் சிறப்புமுடையன. உவமான உவ மேயக் கருத்தோடியைந்து விளங்குவன. ஓங்கிய ஓசை நய மும் விழுமிய பொருளாழமுங்கொண்டன. ஓசை யொழுங்கு கள் நன்கனம் அமைந்த இவர்களின் பாக்கள் இன்பம் பயப்பன வாகும். நுண்பொருளளவாய் இவர்கள் எடுத்துக் காட்டும் கற்பனைப் பகுதி கற்றோர் மகிழும் களஞ்சியமெனலாம். இவர் களது "மணித்தாய் நாடும மரதன் ஒட்டமும்". என்ற நூலிற்கு அரசினர் முதற்பரிசு வழங்கினார்கள். இவர்களது தமிழ்விடு தூது என்னும் அச்சிற்கு வராத நூல், சொன்னயம் பொருணயம் மிக்கதொன்று. அருட்டிரு விபுலாநந்த அடிகளது பேரன்பிற்கு உரித்தானதொரு நூலாகும். விபுலாநந்தர் இவர்க ளிடத்து மிக ஈடுபாடுடையவர்கள். அடிகள் 'பிரபுத்தபாரத்'

ஆசிரியராகச் சென்றபொழுது ஈழநாட்டை விட்டகன்றதி லிருந்து அங்குச் சேர்ந்தவரை நிகழ்ந்தனவற்றையும் தாம கண்டின்புற்றனவற்றையும் தொகுத்து பண்டித நல்லதம்பி யவர்களுக்கு வரைந்த முடங்கலின் வாயிலாக அடி களது அன்பு எத்தகைய தெனபது தெரியவரும். "மனக்கினிய பெருங்குணத்து நல்லதம்பிப் பாவலன்" என்றி யம்பினர். இன்னோரன்ன எத்தனை ஏற்றம் கற்பிக்கப்பட்டார் கள், அஃதனைத்தும் பொருந்துமுயர் மொழிகள். விபுலாநந் தரின் அன்பிற்கும் அருளுக்கும் கடமைப்பட்ட செந்நாப் புல வர் நல்லதம்பியவர்கள், அடிகளிடத்து முதன்முதலில் என்னை அழைத்துப்போய் அறிமுகப்படுத்திவைத்தார்கள். அன்றவர் கள் சொன்ன,

> "நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
> பண்புடை யாளர் தொடர்பு."

என்ற பொய்யாமொழி என்நெஞ்சில் ஆழப்பதிந்து கிடக்கின் றது. அடிகளைக் காரைக்குடியிற் கண்டு அளவளாவியபோது நல்ல தம்பியாரின் பெருந்தன்மையையும் புலமைத் திறத்தை யும் பெருமைப்படப் புகன்றவை, என்ஞான்றும் மறக்கமுடியாத தொன்றாகும்.

கொழும்பு சகிராக் கல்லூரியிற் றும் தலைமைத் தமிழாசிரிய ராக இருபது யாண்டுகளுக்குமேற் பணியாற்றியிருக்கிறார்கள். அஞ்ஞான்று சகிராக் கல்லூரியே தமிழ்மணம் கமழ்ந்தது. முகம்மதிய மாணவர் பலர், இன்று தனித்தமிழ்ப்பற்றுடையவர்க ளாக விளங்கும் பெருமையுடையவர்களெனின், அது நல்லதம் பிப் பாவலரின் அருந்தொண்டால் வந்ததேயாகும். தமக்கென வாழாப் பிறர்க்குரியாளரான இப்பெருஞ்சொல் விளக்கப் பெரி யார், மாணவரிடத்து ஏதமில் கல்வியை இனிமை ததும்பப் புகட்டி அழியாச் சிறப்பைப் பெற்றவர். பிரின்ஸிபாலாக விருந்த ஜனப் ஐயா அவர்கள், இவர்களிடத்துப் பெருநன்மதிப் புடையவர்.

எளிமையும், தூய உள்ளமும், பணிவான இன்சொல்லும், பிறர்க்குக் கொடுத்துதவும் பெற்றியும், கற்றாரிடத்துக் கருத் தமைந்த வார்த்தையும், ஐயப்பொருளை வினவி அரும்பொருள் கோடலும் இவர்களின் கொள்கை. எவர்க்கும் எள்ளளவேனும் தீது கனவிலுமெண்ணாத்தலைமையர். வல்லாங்கு வாழ்துமென் னாது எல்லார்க்கும் நல்கி இயல்புறும் பெற்றியர்.

இலங்கைப் பல்கலைக்கழகத்திலும் சிலகாலம் சிறந்த தமிழ்த்தொண்டு செய்ய நேர்ந்தது. ஆனல், கழக மாணவர்

களது நல்வினை இல்லாமையால் நீண்டநாள் அத்தொண்டினைத் தொடர்ந்து செய்ய முடியாது போயிற்று.

சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளையவர்கள் இவர்களின் ஆருயிர்ப் புலமை நண்பருட் சிறந்தவர். அப்பெருந் தகையாரது உள்ளம், இவர்களது பிரிவு கேட்டு என்படுங்கொல்?

"ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாமை
யறிவெனப் படுவது பேதையார் சொன்னோன் றல்."

என்ற மொழிக்கியைய வாழ்ந்த சீலர்.

அண்மையில் (29-4-51) யாழ்ப்பாணத்தில் நடந்த நான்காவது தமிழ்விழாவிற் றும் கண்ணீர் பெருக்கிய கலித்தொகை என்னும் பொருள் குறித்துச் சங்க மருவிய தங்கத்தமிழின் சிறப்பை எல்லாம் கேட்போருள்ளம் கனிவுறக் கிளர்ந்தெடுத்தியம்பினர். அகப்பொருட் சுவையின் பகுதிகளையும் அப்பொருளிற் றமிழர் கண்ட பேருண்மைகளையும் செவ்விதினாய்ந்து கூறினார்கள். என்னே! தலைவன் பொருள்வயிற் பிரிதலைச் செப்புனான்று கண்ணீர் பெருக்கிய தலைவியின் உள்ளமு முயிரும் கண்ணெதிரே காண்பித்த காட்சிநயம், என்றும் மறக்கற் பாலதொன்றன்றாகும். பிரிவையுணர்த்திப் பேசிய பெரும்புலவர், பத்துநாட்களிற் றம் பிரிவை யுணர்த்தியே பேசினார் போலும். வருங்கால நிகழ்ச்சியை உணர்த்த வல்லவர்கள் வண்டமிழ்வாணர் என்பதைப் பல்லாயிரக்கணக்கான மக்களிடை நின்று மெய்ப்பித்தார் போலும்.

முதுதமிழ்ப் புலவர் நல்லதம்பியவர்களது ஆவி தமிழ்த் தாய் மடியி லின்றுயில் கொள்க. அவர்களது குடும்பத்திற்குப் பேரருளுடைய பெருமான் தன் றிருவருளைச் சிறப்ப வழங்குக.

"புன்முறுவல் கொள்முகன்மன் பொய்யுரையா நாவினன்மன்
இன்பத் தமிழ்மொழியும் ஏந்தல்மன்—அன்புநிறை
உள்ளஞ்சேர் ஆண்மையன்மன் ஒண்மைநல்ல நம்பிமன்
வள்ளலடி சேர்ந்தனன்மன் வாழ்த்து."

# நாஞ்சில் வள்ளுவன்

[வித்துவான், கு. நாராயணன்]

மிகப்பழமையான பாக்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் புறநானூறு, நமக்குப் பல வள்ளல்களின் பெயரையும் அவர்களைப் பாடிய பழந்தமிழ்ச் செல்வர்களையும் அறிவிக்கின்றது. சங்கம் மருவிய காலத்தே வாழ்ந்த வள்ளல்கள் பலருள், ஈண்டாராய எடுத்துக்கொண்ட நாஞ்சில் வள்ளுவனும் ஒருவன். அவனைப்பற்றிய சில செய்திகளைக் கீழே ஆராய்வாம்.

நாஞ்சில் வள்ளுவனைப் பாடிய புலவர்கள் ஒரு சிறைப் பெரியனார், மருதனிள நாகனார், ஔவையார், கருவூர்க்கதப் பிள்ளை என்னும் நால்வரே. அவர்கள் பாடிய பாக்கள் ஐந்தே புறநானூற்றில் உள. அவை துணையாகக்கொண்டு சிலவற்றைத் தீர்மானிக்கலாம்.

அச்செந்நாப் புலவர்பெருமக்களுள் ஒருவராகிய மருதனிள நாகனார், நாஞ்சில் வள்ளுவனை நோக்கிப் பரிசில் தருக என்னும் பொருளமைந்த பரிசில் கடாநிலைத்துறையில் "சுவலழுந்தப் பலகாய," என்று பாடிய புறப்பாட்டின் திறத்தினைக் காண்க.

புலவர் கூறுகிறார்: "நாஞ்சில் பொருந! நான் இப்போது வந்துவிட்டேன். எனக்குப் பரிசில் தந்துதான் ஆகவேண்டும். நான் பொய்பேசமாட்டேன். மெய்யே பேசுவன்; கேள். நான் உனக்குப் பிடித்தமான மற்றொரு சமயம் வந்து பரிசில் பெற்றுப் போக இயலாது. ஏனெனின், போர்முனை எய்தும் வீரனின் வாழ்க்கை, புல்நுனைப் பனிநீரொக்கும். உன்னுடைய வேந்தன் நினக்கு விழுப்பொருளும் தண்ணடையும் எஞ்சாது கொடுத்தல் வல்லன். ஆதலின் நீயும்,

"புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்கா(டு)
இரந்துகோள் தக்க(து) உடைத்து."

என்ற வள்ளுவன் வாய்மொழிக்கிணங்கச் செஞ்சோற்றுக்கடன் கழித்தற் பொருட்டுப் போர்க்களத்து உயிர்நீத்தற்கஞ்சாய்; அங்ஙனம் ஏதேனும் பெரும்போர் வந்துறின் நின்னைக் காண்டல் இயலாது. அதனால் போர் வருவதன் முன்னை பரிசில் தந்து விடுவாயாக," என்று.

புறநானூற்றில் முதல் 266 பாட்டுக்களுக்குப் பழைய உரை, விழையும் முறையில் எழுதப்பட்டுள்ளது. அவ்வுரையை எழுதியவர் பெயர் இன்றுகாறும் அறியப்படவில்லை. நேரிய உரை வகுத்தருளிய அப்புறநானூற்றுரையாசிரியர் ஏனைப் பாட்டுக்களுக்கும் உரைவகுத்திருப்பாரேல் அல்லது உரை கிடைத்திருக்குமேல், யான் ஈண்டு ஆராய்ச்சி செய்யவேண்டிய இன்றியமையாமை இராது என்றே நினைக்கின்றேன்.

இனி மேலைப்புறப்பாட்டிற்கு உரை எழுதிய பழைய உரையாசிரியர், உரையின் இறுதியில் "ஈதலானுன் வேந்தே" என்னும் பகுதியிலுள்ள "வேந்து" என்ற சொல் யாரைக் குறிக்கும் என்பதை விளக்குவான் வேண்டி, "வேந்து என்றது சேரனை," என்று குறித்துள்ளார். இது பொருந்துமா என்பதே ஈண்டு ஆராயப்படும். இங்ஙனம் உரையாசிரியர் கூறியவதனால் இவன் சேரனிடம் அன்புற்று அவனுக்கு அடங்கிய ஓர் படைத்தலைவனாய் இருந்தான் என்பது வெளியாகின்றது. இதனையே தழுவி, டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்களும் புறநானூற்று முக வுரைக்குப்பின் பாடப்பட்டோர் வரலாற்றிற் குறித்துப் போந் தார்.

இஃதிவ்வாறாக நாஞ்சில் வள்ளுவனைக் கருவூர்க்கதப்பிள்ளை என்பவர் பாடிய "தென்பவ் வத்து முத்துப் பூண்டு" என்னும் 380-ஆம் புறப்பாட்டில்,

> "இன்னிசைய விறல் வென்றித்
> தென்னவர் வயமறவன்."

என வரும் அடிகள் முற்கூறிய புறநானூற்று உரையாசிரியர் கருத்தோடு முரணுதல் காண்க. இக்கூறிய புறப்பாட்டடிகளான், நாஞ்சில் வள்ளுவன் ஓர் மறச்சாதியினன் என்பதுவும், பாண் டியர்க்கு அடங்கிய ஓர் போர்வீரன் என்பதுவும், அறியக் கிடக்கின்றன. இதனையே இதற்குக் குறிப்புரை எழுதிய ஐயரவர்களும் "நாஞ்சில் வள்ளுவன் மறச்சாதியினன் என்றும் பாண்டியர்க்குரிய படைவீரன் என்றும் தெரிகிறது," எனக் குறித்துப் போந்தார். எனவே புறநானூற்றுரையாசிரியர், நாஞ் சில் வள்ளுவனைச் சேரனுக்கு அடங்கிய ஓர் வீரன் என்று தாம் கூறுவதினும், கருவூர்க்கதப்பிள்ளை என்னும் சங்ககாலப்புலவரே தம்முடைய பாட்டில், பாண்டியர்க்கடங்கிய ஓர் வீரன் என்னும் கருத்துப்படக்கூறும் கூற்று, வலியுடைத்தன்றோ.

இனி நாஞ்சில் வள்ளுவன், ஒரு ஞான்று சேரனுக்கு அடங்கிய ஓர் போர்வீரனாகவும், மற்றொரு ஞான்று பாண்டியர்க் கடங்கிய ஓர் போர்வீரனாகவும் இருந்தான் எனக்கொள்ளின்,

புறநானூற்று உரையாசிரியர் "சேரான்" என்று கூறியதில் பிழையின்று என்பர் ஒருசாரார். அங்ஙனம் கொள்ளுதற்கு யாதேனும் ஓர் சான்று வேண்டாவோ? நாஞ்சில் வள்ளுவனைப் பற்றிய பாக்கள் இத்துணையே பிறிதில்லை. அகப்பட்டவற்றுள் ஒருபாட்டேனும் அவன் சேரற்கு உரியவன் என்பதைக் கூற வில்லை. அதற்கு மாறாகப் பாண்டியர்க்குரியவன் என்று சான்று பகர்கின்றது, "தென்னவர்வயமறவன்" என்னும் புறப் பாட்டடி.

அன்றியும் பண்டைக்காலத்தில் நாஞ்சில்நாடு பாண்டிய நாட்டின் ஒருபகுதியாகத்தான் இருந்தது. அஃது ஒவ்வொரு கற்றோர் மனத்திலும் தெற்றெனத் தோன்றியது. அவ்வாறே பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் எழுதிய "மனோன் மணீயம்" என்னும் நாடக நூலில் குடிலன் வாய்ச்சொல் மூலமாக நாஞ்சில்நாடு பாண்டியர்க்கு உரியது என்பது புலப் படுத்தப்பட்டுள்ளமை காண்க. இதனாலும் நாஞ்சில்நாட்டை யாண்ட வள்ளல், பாண்டியர்க்கு அடங்கிய ஓர்வீரன் என்பது பெறுதும்.

எனவே 139-ம் புறப்பாட்டு உரையில் "வேந்து என்றது சேரனை," என்று கூறியுள்ளது, பழைய உரையாசிரியர் உரை யன்று எனவும், அது பிற்காலத்தில் ஏடு பெயர்த்து எழுதுவோ ராலோ அல்லது பயின்றவர்களாலோ சேர்க்கப்பட்டதாதல் வேண்டும் எனவும் கூறத்தகும்.

ஆனால் இங்ஙனம் "சேரன்" என்று கூறியதற்கு ஒரு காரணம் இருக்கலாம் என்று தோன்றுகின்றது. "ஏற்றுக உலையே" என்னும் 172-ஆம் புறப்பாட்டிற்குக் குறிப்புரை எழுதிய ஐயரவர்கள், பிட்டங்கொற்றன் சேரனுடைய வீரன் என்பதற்குப் பல சான்றுகள் எடுத்துக் காட்டினர். அவற்றுள் "மரைபிரித்துண்ட" என்னும் 170-ஆம் புறப்பாட்டின் 8-ஆம் அடியும் ஒன்று. அவ்வடி,

"மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டன்," என்பது. இதற்கு "மலைபொருந்திய நாட்டை உடையவனாகிய கூரியவேலை உடைய பிட்டன்," என்பது பழைய உரை. இவ்வடியில் மலைநாடு என்பது குறிப்பிடப்பட்டமையின் இவன் சேரர்க்கு உரியன் என்பதற்கு இதுவும் ஒருசான்று என்று ஐயரவர்கள் கொண் டிருத்தல்வேண்டும். இங்ஙனமே "உயர்சிமைய உழாஅ நாஞ்சிற் பொருந," என்னும் 139-ஆம் புறப்பாட்டடியில் மலைநாடு என்பது கூறப்பட்டுள்ளமையின் அதனை உடையவன், மலைநாட் டரசனாகிய சேரனுக்கு உரியவன் என்று கொண்டார் போலும்.

இனித் "தென்னவர் வயமறவன்" என்பதற்குத் தென்னவரை எதிர்த்து வென்றிகொண்ட சோர்க்குரிய மறவன் என்று பொருள் கோடுமோ எனின், சொற்புணர்த்தார்க்கு அது கருத்தாக இருந்தல் இயலாது; அது கருத்தாயின் விளங்கச் சொற்புணர்ப்பர்மன். அன்றியும் "திருவீழ் நுண்பூண் பாண்டியன் மறவன்," என்னும் 179-ஆம் புறப்பாட்டடிக்குப், "பாண்டியர்க்குரிய மறவன்," எனப் பொருள் விரித்தவாறு காண்க. எனவே நாஞ்சில் வள்ளுவன் பாண்டியர்க்கடங்கிய ஓர் போர் வீரன் என்பது முடிவு.

இனி நாஞ்சில் வள்ளுவன் இயற்பெயர் யாது என்பதை ஆய்வாம். இதனையறிய நுட்பமான ஆராய்ச்சி யாதொன்றும் வேண்டுவதில்லை. மேல் எடுத்தாளப்பட்ட 380-ஆம் புறப்பாட்டிலேயே,

"வல்வேற் கந்தன் நல்லிசை யல்லது" என்னும் அடியை நோக்குக. அவ்வடிக்குக் குறிப்புரை வரையும் ஐயரவர்கள் "கந்தன் என்பது நாஞ்சில் மலைத்தலைவர் பரம்பரையில் உள்ளாரும் இப்பாட்டுடைத்தலைவனுமாகிய ஒருவன் பெயர்," என்று குறித்துள்ளார். இதிலிருந்து ஒரு சிறைப்பெரியனார், மருதனிள நாகனார், ஔவையார், கருவூர்க்கதப்பிள்ளை முதலிய புலவர்கள் காலத்தில் இருந்த நாஞ்சில் வள்ளுவனுக்கு உரிய இயற்பெயர் "கந்தன்" என்பது போதரும்.

இதுகாறும் கூறியவாற்றால் நாஞ்சில் வள்ளுவன் பாண்டியர்க்கடங்கிய ஓர் வீரன் என்பதும், அவன் பெயர் கந்தன் என்பதும், போதரும். இதனைத் தமிழுலகம் ஆராய்ந்து கொள்வதாகுக.

# நெருஞ்சி

[செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமிபிள்ளை]

(சிலம்பு ௨௫, பரல் ௧௦, ௪௨௩-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இதுகாறும் ஆய்ந்தவாற்றால் அந் நெருஞ்சி பாழிடங்களி லேயே பற்றிப் படருமென்பதும், அது மிக நெருக்கமாக அடர்ந்து படருமென்பதும் கண்டாம்.

## பூக்களின் இயற்கை

இனி, அவைகளின் பூக்களின் தன்மையைக் குறித்து ஆய்வாம்.

மோசிகீரனார் என்னும் புலவர் பெருமான், கொண்கானங் கிழான் என்னும் குறுநில மன்னன் புகழைக் கூறுங்கால்,

> " பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ
> ஏர்தரு சுடரின் எதிர்கண் டாஅங்கு
> இலம்படு புலவர் மண்டை விளங்குபுகழ்க்
> கொண்பெருங் கானத்துக் கிழவன்
> தண்டார் அகலம் நோக்கின மலர்ந்தே." (புறம் : ௧௫௫)

'பாழ்பட்ட ஊரில் படர்ந்துள்ள நெருஞ்சியின் பொன்னிற முள்ள சிறந்த பூக்களானவை, எழுந்து வருகின்ற ஞாயிற்றை நேர்கண்டவாறு போல, வறுமையுற்ற புலவர்தம் உண்கல மானவை, புகழ் விளங்குகின்ற கொண்பெருங்கானத்துக்குத் தலைவனுடைய குளிர்ந்த மாலையை அணிந்த திருமார்பை நோக்கி மலர்ந்தன,' என்பதாம்.

இதில், 'ஞாயிற்றைக்கண்ட நெருஞ்சிப் பூக்கள், ஞாயிற் றையே நோக்கி நின்றதுபோல, புலவர்தம் உண்கலங்களும் (முகங்களும்) கொண்கானத்துக் கிழான் மார்பையே நோக்கி மலர்ந்து நின்றன,' என்னும் உவமையால் நெருஞ்சிப்பூக்கள் ஞாயிற்றை நோக்கி நின்றமை உணர்த்தப்படுகின்றது.

இனி, கொங்குவேள் தந்த கொழுந்தமிழ்ச் செல்வமாகிய பெருங்கதையுள்ளும்,

> " செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப்
> பொன்புனை மலரின் புகற்சி போல
> வெறுத்த வேட்கைத் தாமுளம் சிறப்பக்
> காதலற்கு அவாஅம் காம நோக்கம்."
> (பெருங். இலாவாண, ௪ : ௧௭ - ௧௮.)

'செங்கதிராகிய ஞாயிற்றை விரும்பும் பசிய கொடியை யுடைய நெருஞ்சிப் பூக்கள்போல, மிக்க விருப்பத்தையுடைய காதலர்களின் காதல் வேட்கை, காதலனையே விரும்புகின்றது,' என நெருஞ்சி மலர்கள் ஞாயிற்றை நோக்கி நின்ற தன்மையை உணர்த்துவதால் அறியலாம்.

ஒரு தலைவி காதலனோடு கூடிக்களித்து மகிழ்ந்திருந்தாள். இடையில் தலைவன் வரைவிடைவைத்துப் பிரிய எண்ணினான். அதையறிந்த தோழி, நீ தலைவனைப் பிரிந்து வாழும் ஆற்றலுடை யையோ என வினவி நின்றாள். அதற்கு அவள்,

> "......................ஓங்குமலை நாடன்
> ஞாயிறு அனையன் என்தோழி
> நெருஞ்சி அனையஎன் பெரும்பணைத் தோளே." (குறுக் : நகக)

என, 'என் தோழியே! என் காதலர் ஞாயிற்றை ஒத்தவர்; என் தோள்கள் ஞாயிற்றை நோக்கியே செல்லும் நெருஞ்சிப் பூக்கள்போல, எம் தலைவர் சென்ற நெறியையே நோக்கியிருக் கும். அதனால் நான் மகிழ்ந்து அவர் வருங்காறும் ஆற்றி யிருப்பே,'னென்று பேசுகின்றவள், தன் தோளினை நெருஞ்சி மலருக்கே ஒப்பிட்டுக் கூறினாள்.

மற்றொரு தலைவன் காதற் பரத்தை இல்லிற்குச் சென்றான்; இப்பரத்தை அறிந்தாள்; அவளுக்குச் சினம் பொங்கிற்று; வஞ்சினங் கூறினாள். அவள் இந்நெருஞ்சிப் பூக்களையே எடுத் துக் கூறுகின்றாள்; அது:

> "வானிடைச் சுடரொடு திரிதரு நெருஞ்சிபோல
> என்னொடு திரியேன் ஆயின்." (அகம் : நகூ)

எனவும்,

> "வெஞ்சுடர் நோக்கும் நெருஞ்சியில் ஊரனை வெண்முறுவல்
> செஞ்சுடர் வாள்முகத் தான்முன்னை என்பால் திரியலனேல்"
> (இறையனார் அகப். சஎ. மேற் : உகூ.)

எனவும்,

> "எழுஉளப் புரவியொ டெழுகதிர் நோக்கிய
> சிற்றிலை நெருஞ்சிப் பொற்பூ என்ன." (கல்லாடம் : கச—கரு.)

எனவும், வருவனகொண்டு அறியக்கிடக்கின்றது.

சீவகசிந்தாமணிப் பெருங்காப்பியத்தில், சீவக மன்னன் உலாப்போந்தான். அவ்வுலாக் காட்சியை அவன் செல்லும் வீதிதோறும் இள நங்கையர் கூடிக் காதல்கொண்டு பார்த்த வண்ணமாக இருந்தனர். அவர் கண்கள் அவன் போகும இடங்களெல்லாம் திரிந்தன என்பதை விளக்குங்கால், அந்நூலா சிரியர் திருத்தக்கதேவர்,

“..................அவ்வரிமலர்த் தடங்கண் எல்லாம்
மின்சுடர் நெறியை நோக்கும் நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போல்
காளைதன் தேர்செல்வீதி கலந்துடன் மொய்த்த தன்றே.”
(சீவகசிந்தாமணி : ௬௬௧.)

எனவும்,

திருவெங்கைப் பெருமான் (சிவபெருமான்) தம் அடியவர்கட்குக் காட்சி தந்தருள உலாப்போந்தான். அப்பெருமானை அவன் செல்லும் தெருக்கள்தோறும் பள்ளங்கண்ட வழிப் பாய்ந்தோடும் நீர்போல், பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் எழுவகைப் பருவப் பெண்களும் காதலித்துத் தொடர்ந்து சென்றனர். அதிற் பெண்ணழகெல்லாம் திரண்ட பிறங்கொளிசேர் நல்லாள் ஒருத்தி, இறைவனைக் காதலித்து மயங்கிச் சென்றனளாக, அவள் சென்ற வழியெல்லாம் அவள் தன் தோழியரும் சென்றனர் என்பதைக் குறிப்பிடுங்கால், அதன் ஆசிரியர் சிவப்பிரகாச அடிகளார்,

“நிரம்பு கதிர்நேர் நெருஞ்சியெனத் தன்பால்
திரும்புவிழி ஆயமொடு சென்றாள்.” (திருவெங்கை உலா: ௩௨௨.)

எனவும் வருவன காண்க.

இளஞ்சிறார்கள் ஒருவகை ஒட்டுப்புல்கதிரை, வட்டவடிவ ஒருவகைத் தலையணி (சூடாமணி) போல் செய்து அதன்மேல் இப் பூக்களை ஒவ்வொன்றாக மேன்மேல் இணைத்து அதனைத் தம் தலையில் சூடி அணிசெய்து விளையாடுதல் உண்டு.

எனவே, இதுகாறும் ஆய்ந்தவற்றால் நெருஞ்சிமலர் ஞாயிறு செல்லும் வழியே சாயுமென்பதை அறிந்தாம்.

## முட்களின் கடுமை

இனி, நெருஞ்சி முட்கள் எவ்வளவு கொடியன என்பதையும், அது காலில் தைத்தால் எவ்வாறு வருந்தச் செய்யுமென்பதையும் ஒரு சில எடுத்துக்காட்டுகளால் காண்பாம்.

இம் முட்கள், மூன்று கவடுகள் உள்ளனவாய்க் கூர்மை கொண்டிருக்கும்; அவைகளுள் ஒன்று, மிக நீளமாக இருக்கும். மற்ற இரண்டு, அதற்குச் சிற்றளவினவாக உள்ளடங்கி இருக்கும்; இதனை வேதாந்த நூலார் முக்குண வேறுபாட்டைக் குறிக்குங்கால் எக்குணம் மிகுதிப்பட்டு நிற்கின்றதோ, அக்குணத்துக்குக் கீழ்ப்பட்டே மற்றிரு குணங்களும் இருக்குமென்பதற்கு, இந்நெருஞ்சிமுள்ளையே உவமை காட்டுவர். அந்நீட்சியுடைய முள்ளே உள்பதிந்து [illegible] வருத்தும்.

சீவகசிந்தாமணிக் கதைத்தலைவனின் அன்னையாகிய 'விசயை' என்பாள், அவள் கணவன் 'சச்சந்த' னென்பான் 'கட்டியங்காரன்' என்னும் தன் அமைச்சன் கரவால் கொல்ல நேர்ந்த காலத்து, மயிற்பொறிவானூர்தியிற் பறந்துசென்று கீழிறங்கி அங்குள்ள ஓர் சுடுகாட்டில் சீவகனைப் பெற்றெடுத்து, அக்காட்டிலேயே போட்டுவிட்டு நடந்து செல்கின்றாள். அக் காடு, முள்ளும் கல்லும் காரை சூரை முதலிய முட்புதர்களும் மிகுந்த கொடுங்காடு. அதில் அவளின் மெல்லிய சிற்றடிகள் கொண்டு நடந்து சென்ற நெஞ்சம் நோஅ அஞ்சும் காட்சியை வருணிக்கப்போந்த ஆசிரியர்,

"பஞ்சியடர் அனிச்சம் நெருஞ்சி ஈன்ற பழமாவென்று
அஞ்சும் மலரடிகள் அரங்கண் டன்ன அருங்காட்டுள்
குஞ்சித்து அசைந்து அசைந்து குருதிகான்று வெய்துயிரா
வஞ்சி இடைநுடங்க மயில்கை வீசி நடந்ததே."

(சீவகசிந்தாமணி : ௩௨௧.)

இதில் 'பஞ்சையும் அனிச்ச மலரையும் விரித்து அவைகளின்மீது மிதித்து நடக்குங்கால் நெருஞ்சிப்பழம்போல் வருத்துமென்று கூசுகின்ற மலரினும் மெல்லிய அடிகள், கொடுங் காட்டுள் நடந்தபோது, தரையில் கால் பாவாமல் அசைந்து அசைந்து செந்நீர் காலப் பெருமூச்செறிந்து நடந்தாள்,' என்று அதன் ஆசிரியர் நெருஞ்சி முள்ளையே உவமை காட்டியது அறிந்து அறிந்து மகிழற்குரித்து.

ஒரு தலைவன், ஒரு தலைவியை ஒரு பொழிலகத்துக் கண்டான்; காதல் கொண்டான்; புணர்ந்தான்; இல்வாழ்க்கை மேற்கொண்டான்; பரத்தையிற் பிரிந்தான்; தலைவி அவன் பிரிவு பொறுக்கலாற்றாது வருந்தியிருந்தாள்; பின் வந்தான்; அவளின் வெறுப்பைத் தீர்க்க அவளுடைய தோழியைத் தூதா (வாயிலா)க அனுப்பினான்; அவள் வந்து தலைவன் செயலை எடுத்துரைத்துச் சினம் தீருமாறு வேண்டினாள். அதற்கு அவள்,

"நோமென் னெஞ்சே! நோமென் னெஞ்சே!
புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு
இனிய செய்தநம் காதலர்
இன்னா செய்தல் நோமென் னெஞ்சே."

(குறுந் : உ0உ.)

'சிறிய இலையையுடைய நெருஞ்சியின் வான்பூ கண்ணைக் கவர, அதன் அழகுக் காட்சியில் இன்புற்று நெருங்கிச்செல்ல, சென்றவுடன் அது, தன் முள்ளால் துன்புறுத்தியதுபோலக் காதலரின் அழகில் ஈடுபாடுற்று அவர் இன்பத்தில் திளைத்திருக்கும்போது, அவர் பிரிவு துன்புறுத்துகின்றது. அதனால் என்

தோழியே! என் நெஞ்சம் நோகின்றது; என் நெஞ்சம் நோகின்றது!' என்று கூறும்போது தலைவன் அழகுநலத்தில் இன்புற்றுப் பின் பிரிவால் துன்புற்ற நிலைக்கு நெருஞ்சிமுள் ளையே ஒப்பிட்டுக் கூறுவதுகொண்டு தெளிக.

இனி, திருவள்ளுவர் தந்த செவ்விய காதலன், தன் காதலி யின் மென்மைத் திறத்தை வியந்து வியந்து பாராட்டிப் பேசு கின்றான். அவன் பேசும்போது 'என் காதலியின் மெல்லிய அடிகட்கு அனிச்சமலரும் அன்னத்தின் மெல்லிய மயிரும் நெருஞ்சிமுட்போல் துன்புறுத்தி வருத்துமே,' என்று உளம் நைகின்றான். அது:

> " அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
> அடிக்கு நெருஞ்சிப் பழம்."　　　(திருக்குறள் : ககஉ0.)

என்பது. இதில் மெல்லிய அடியை வருத்தும் தன்மைக்கு நெருஞ்சிப்பழத்தையே உவமை காட்டி விளக்கியிருப்பது பேரின்பிற் குரியதாகும்.

## தொகுப்புரை

ஏன, இதுகாறும் ஆய்ந்தவாற்றால் நெருஞ்சி மூவகைப்படு மென்பதும், அவை மருந்துப் பொருளாகவும், இலைக்கறி உண வாகவும் மக்கட்குப் பயன்படுமென்பதும், அவைகளுள் சிறு நெருஞ்சி ஒன்றென்பதும், அது, ஆள் வழக்கற்ற பாழ்நிலங் களிலே பற்றிப்படர்ந்து மண்டிக்கிடக்குமென்பதும், அதன் பூக்கள் பகலவன் செல்லும் திசையையே நோக்கித் திரும்பித் திரியுமென்பதும், அதன் முட்கள் (பழங்கள்) காலில் தைத்து முறியாது வருத்துமென்பதாவும் அறிந்தாம். அதனால், அதன் இயற்கைத்தன்மைகளை ஒருவாறு தெளிந்தாம். ஆகவே, நெருஞ்சியின் பயனும் பண்பும் எவ்வளவு வியக்கத்தக்கனவாய் இருக்கின்றன.

இதுபோன்றே பழந்தமிழ்க் கருவூலங்களில் புகுந்து புகுந்து தேடி ஆய்வார்க்கு, ஒவ்வொரு இயற்கைப்பொருள் களின் பயனும் குணனும் நலனும் நன்கு தெரிவிப்பனவாம். ஆகவே, அறிவுத் துறையிற் சிறந்த இந்நூல்கள், ஆரா அயராப் பேரின்பூட்டி நமக்கு நலம்பல பயப்பதாகும்.

அந்நூற் செல்வத்தை ஈந்த நம் புலவர் பெருமக்கட்கு நாம் ஆற்றவேண்டிய கடமையும், தமிழ்மொழி சிறப்பச் செய்யுந் தொண்டும், இந்நூல்களை ஆய்ந்துபயன்கண்டு இன்புறுவதேயாம் எனக்கூறி வேண்டி, இக்கட்டுரையை முற்றுவிக்கின்றோம்.

வாழ்க இயற்கை !　　　　வாழ்க தமிழ்மொழி !

# கலைத் தாய்

[ புதுவை முருகண்ணன் ]

கங்குலிலே காணுகின்ற வானின் மீனில்
கருக்கொண்டி ருப்பாளெங் கலைத்தாய் நல்ல
மங்காத மதியொளியில் இருப்பாள் விண்ணில்
மாண்புடைய கவின்கலைத்தாய் கதிர்க்கை பாய்ச்சும்
செங்கதிரோன் தோற்றத்தில் கலந்தெம் உள்ளங்
கொள்ளை கொள்ள எத்தனிப்பாள் செப்புங் காலைப்
பங்கயத்தில் சிரித்திடுவாள் தனது மக்கள்
பண்புகெட்டுப் போனதெண்ணிச் சோர்வாள் பின்னர்ச்,

சோலையிலே கூவுகின்ற குயிலின் பண்ணில்
தோகைவிரித் தாடுகின்ற மயிலின் ஆடல்
சாலையிலே மரந்தன்னைக் கொத்தும் புள்ளின்
தாளத்தில் இதழ்விரித்துச் சிரிக்கும் முல்லை
வேலையிலே அலைகின்ற அலைக்கூட் டத்தில்
வேடிக்கை காட்டிநிற்பாள் இயற்கைக் காட்சி
சாலையெலாம் அவள்தோற்றம் இருக்கும் இன்னும்
ஓவியன்றன் கலையுருக்கொண் டிருப்பாள் தாயே. (௨)

கற்சிலையை வடிக்கின்ற கலைஞன் கையில்
கலைவடிவாய் நின்றுநடஞ் செய்வாள் நாளும்
கற்றவர்கள் நெஞ்சிலவள் இன்பம் சேர்ப்பாள்
கலக்கமுறும் தொழிலாளர் உழைப்பில் தோய்ந்து
பொற்புடைய கோயிலெல்லாம் தோற்றி வைப்பாள்
பொன்னுருக்கி நகைசெய்யும் தட்டான் கண்ணே
நற்கலைத்தாய் நகைசெய்வாள் கொல்லன் வேகும்
கூடத்தில் நண்ணிடுவாள் வையம் வாழ, (௩)

சொல்லாலே இவையெல்லாம் தீட்டிக் காட்டும்
சோர்வற்ற செம்புலவன் உள்ளந் தன்னில்
கல்லாரின் நெஞ்சையுந்தான் உருக்கும் வண்ணம்
கவிதைதந்து கவின்சேர்ப்பாள் காதல் பேசும்
வில்லார்க்கும் நுதல்மாதர் முகத்தில் நின்று
விளையாடல் புரிந்திடுவாள் விள்ளுங் காலை
இல்லாத பொருளில்லை அன்னோள் என்றும்
எங்கணுமே இருந்திடுவாள் ! எந்தாய் வாழ்க ! (௪)

# பரிமேலழகர் உரை

[செல்வி. எஸ். கமலாதேவி, இரத்தினபுரி]

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டது தமிழ்நாடு," என, கற்றவர் விழைந்திடும் கற்பகக்கனி எனும் தமிழ் உள்ளத்து அரும்பிய பொன்றாப் புகழ்மிகு புலவன் வள்ளுவன் எனும் தெள்ளிய புலவன் ஆக்கியதென மிளிரும் திருக்குறள் எனும் இருமை சான்ற இயல்நூல் இலக்கணப் பண்பும் இலக்கியச்செறிவும் ஒருங்கே நிலவும்வண்ணம் கற்றோரகத்தும் மற்றோரகத்தும் இலங்குகின்றமை மறுத்தலொண்ணா உண்மையாகும். அவ்வரிய இலக்கியத்தின் நுண்பொருளை எந்நிலத்தவரும், எம்மதத்தினரும் செவ்விதின் உணரும்பெற்றி மேற்கொண்டு, நயமிகு உரைவளம் வகுத்துச்சென்றோர் எண்ணிலர் எனினும், பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார் எனப் பெரிய தமிழ் மூதறிஞர்போன்ற பதின்மரே என்பதை,

> "தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
> பரிமே லழகர் பரிதி—திருமலையர்
> மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்
> செல்லையுரை கண்டா ரிவர்."

என்னும் வெண்பா ஒன்று வெளியிடும்வண்ணம், திருக்குறளின் நிறைசான்ற உரையாசியன்மார் என்று சிலர் இக்காலத்துக் கூறுவதை இலக்கியச் சிந்தனையாளர் யாவரும் அறிவர் என்னலாம். அன்னார் போற்றும் வண்ணம் திகழ்ந்த பரிமேலழகர் போன்ற சிலரே தம் சொல்லோவியங்களைத் திருக்குறளினுக்கு விடுத்துச் சென்றனராயினும், திருக்குறள் தோன்றிய இதுகாறும் அப்பொன்னுறு நூலினுக்கு உரையியற்றிய உள்ளங்கள் அக்குழுவினரன்றிப் பிறிதிலர் என்று அறுதியிட்டு உறுதிகூறுவது, ஆண்மை நிலவும் அறிவுடையார் செயலன்று.

பரிமேலழகர் தீட்டிய கைவண்ணம் பசுந்தமிழ் நூலினுக்கு உரையெனத் தோற்றுகின்றது. 'பால் எல்லாம் நல்லாவின் பால் அல்ல,' என்ற பழமை நிறையும் சொற்றொடரில் அமையும் உவமை நயம், பாரிலமைந்த உரை எல்லாம் பரிமேலழகன் உரையாமோ என்றபோது மறைகின்றது. நன்மையும், தூய்மையும், வெண்மையும் அன்றும் இன்றும் என்றும் பொழிவது நல்லாவின் பால். ஆனால் உரையாசிரியன் பரிமேலழகன் விடுத்த உரைவளம், அவன் வாழ்ந்த அக்காலத்துக்குக் கனிவுற்று மற்றவர் அறியா மாணிக்கமாக அமைந்ததுபோலும்! அற்றேல் அப் பெருமான் உரையினில் பல, நயமற்றுப் பொய்ம்மை

கொண்ட கருத்துகள் செறிந்து தோன்றுவன்றோ? அழகர் எழுதிய குறள் உரை, பல்லாற்றானும் அறிவு நிலவும் தமிழ் உள்ளத்தினுக்குப் பொருந்தாது போயினும், சில பாக்களுக்காயினும் அவர் வரைந்த நயங்கள் போற்றற்குரியன என்னல் மிகையன்று. அந்நிலையில் மணக்குடவர் ஏனும் தமிழ்மறை தந்த தவமிகு செல்வர் தோன்றாதுபோயின், அழகரின் உரையின் நயமும் நயமின்மையும் ஒருகால் மங்கலாமன்றோ?

இத்தகைய பரிமேலழகர் எழுதிய உரையொன்றே காய்தல் உவத்தலின்றி ஏற்றுக்கோடல் சாலவும் நன்று என எண்ணி அவ்வுரையை மேற்கோடல் மேன்மையளிப்பதன்று. அஃது அறிவினது வளர்ச்சியின் தளர்ச்சியைப் பறைசாற்றுவதன்றி ஒழுக்கத்தின் ஊற்றாம் துணையன்று. அன்றியும் பரிமேலழகருக்கே, திருக்குறளைப்பற்றிய உரிமையுண்டெனவும், அவர் கூறும் உரையினிலேயே உண்மை ஊறுகின்றது எனவும் கூறி, வெண்மையராதல் ஒண்மையதாமோ? இன்று என இயம்பச் சான்றுகள் பலவுள.

அழகியாருக்குத் திருக்குறளில் எத்தகைய இலக்கிய உரிமை உளதோ, அவ்வுரிமை அறிவுச் [illegible] என இலங்கும் எத் தமிழ் உள்ளத்தினுக்கும் உளது என்பது மறுத்தல் ஒண்ணா மாற்றமாகும். எனவே, சீர்மையும் நேர்மையும், அறிவின் ஆழமும், தமிழ்ப் பண்பும் ததும்புவண்ணம் ஆன்றவிந்தடங்கிய சான்றாண்மைத்திறனால் சிலர், அழகியார் மேற்கொண்ட பிழைகளையும் கழுவாய் அற்ற வரைவுகளையும் ஆங்காங்கே வெளியிட்டுள்ளமை, செந்தமிழ்ச்செல்விபோன்ற இலக்கியச்செறிவு சான்ற தமிழ்ப்பத்திரிகைகளில் யான் கண்ட நாட்கள் பல. ஆகலின், திருக்குறளுக்குச் சிறந்த முறையில் அறிஞர் உள்ளம் ஏற்கும்வண்ணம் நல்ல கருத்துக்கள் நிலவ, தெள்ளிய உரை வளம் வகுத்தால் அதைத் தடையின்றி ஏற்றுக்கோடல் சாலுமேயன்றி அவ்வாசிரியர்மீது தோன்றிய வெறுப்பினால் உரையைப் பழித்தல் செவ்விதன்று.

"ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்."

என்பது, அழகு நிறையும் திருக்குறள். இவண் கேட்டதாய் எனும் சொற்றொடருக்குப் பரிமேலழகர் என்ன நயம் வரைகின்றார் எனக் கருணைகொண்டு நினைவுகூருமாறு வேண்டுகின்றேன். —"பெண்ணியல்பாற் றானாக வறியாமையிற் கேட்ட தாய்," என்றார்—இது பால் போன்ற பரிமேலழகர் உரைவளம். உண்மையில் அறிவுசான்ற எந்தத் தமிழ் அன்னையும், தாய்மை

தங்கிய தமிழ் உள்ளமும் வெறுக்கும் விரிவுரை என்று தயங்காது கூறுவேன். பெண்கள் ஆண்களைவிட உடலமைப்பில் மென்மைபெற்று மெல்லியலார் எனப் புலவர் புனையலாமன்றி, அறிவினிற் குறைந்தார் என்றல் ஏற்றுக்கோடற்குரியதன்று. "அறிவுடைப் பல நூல் அமைவுறக் கற்பினும் பெண்மை என்பது பெரும் பேதைமை யுடைத்," தெனவரைந்த மாண்பற்றோர் மறைந்தனர். மறைந்திலர் எனினும், ஈண்டுப் பேதைமை என்பது, அறிவின்மையை ஒருபொழுதும் குறிப்பதல்ல. கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை பெண்தன்மை யாகலாமேயன்றி அறிவின் நிறைவு குறைதலைக் குறிப்பதன்று.

எனவே, மாதவம்செய்து மங்கையராகத் தோன்றிய பெண்பாலாரை இழிவுபடுத்தும் இவ்வுரையினைத் தவறுடைத்து என்றெண்ணிக், 'கேட்டதாய்,' என்ற செவ்விய தொடரினுக்குப் புத்துரை வரைந்தால் அது சிறுமையின்பாற்படுதல் ஒல்லுமோ? கேட்டதாய்—இயற்கையறிவு சிறிதேனும் நிரம்பிய தாய் எவளும் தன் குழந்தையின் கல்விவளத்தினை அறிந்து இன்புறும் பெற்றியுற்றவளே. ஆண்டவன் அருளிய செவியும் உள்ளமும் வினவிக் கேட்கலாம். ஆனால் அதில் இன்பம் இல்லை. "உங்கள் மகள் இவ்வாண்டுத் தேர்வில் எவ்வளவு திறமையான புலமைகொண்டு முதன்மை பெற்றுவிட்டாள்; யாங்கள் யாவரும் உள்ளமார உவகைக் கடலில் மூழ்குகின்றோம்," என்று அயல் இல்லாள் ஒருத்தி கூறக்கேட்பின், அத்தாய் உண்மையில் பெருமிதம் கொள்வாளா இல்லையா? என்று தமிழ்நாட்டுத் தாய்மாரிடமன்றி எந்நாட்டாரிடமும் என்றும் கேட்கலாம். ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மை அவளது புன்முறுவலிற் காணலாமன்றோ?

> "தக்கார் தகவில ரென்ப தவரவர்
> எச்சத்தாற் காணப் படும்."

இக் குறளினைக் கற்று, பரிமேலழகர் உரையினைப் பாடம் பண்ணிய பாதிரியார் ஒருவர், 'எச்சம்' எனும் சொல்லினுக்கு மக்கள் என்றமை நினைவுகொண்டு, செய்யுளை மாற்றிய ஆற்றலைப்பற்றிய வரலாறு, வித்வான், தியாகராசச் செட்டியார் வாழ்வில் அமையும். எச்சம் என்ற தூய தமிழ்ச்சொல், எஞ்சி நிற்பதைக் குறிப்பது என்பதை, அறிவு கனிந்த உள்ளமே அறியவேண்டும். பரிமேலழகர்—"இவர் நடுவுநிலைமை யுடையர் இவர் நடுநிலைமை இலர் என்னும் விசேடம், அவரவருடைய நன்மக்களது உண்மையானும் இன்மையானும் அறியப்படும்,"—என்கிறார். ஒருவ

ருக்கு மக்கள் இல்லாமற்போயின், அவரைத் தக்கார் என்றோ
தகவிலர் என்றோ அறிவது யாங்ஙனம்? எல்லாருக்கும் மக்கட்
பேறு உண்டு என வள்ளுவர் கூறுவதாகப் பரிமேலழகர் எண்
ணினால் அவருக்குப் பரியும் அழகும் பொருந்தாவன்றோ?
எனவே, ஒருவர் இம்மண்ணுலக வாழ்வைவிட்டு நீங்கும்போது
விடுத்துச்செல்வது அவருடைய செயல்களால் அமைந்த நன்
மையும் தீமையும்; மற்றையன நில்லாத தன்மையன. எச்சம்
என்பதற்கு எஞ்சிநிற்கும் புகழ் அல்லது பழி என்னலே சிறந்த
பொருளாகும்.

> "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே
> உடம்பொ டுயிரிடை நட்பு."

எனும் குறளினுக்குப் பலவகையான பொருள் கூறப்படுகின்
றது. தண்டபாணி என்ற பெரியார் எழுதிய அறத்துப்பால்
உரையினைச் சிறிது நோக்கின் இப்பாட்டின் உரைநயம் தெள்ளி
தின் புலப்படும். குடம்பை என்பதை முட்டை என்றும், பற
வையின் கூடு என்றும் பொருள் வரையப்படுதல் காண்கிறோம்.
இருவிதப் பொருளும் மறுக்கப்பெறும் நிலையில் அமைதல் கண்
கூடு. —"முன் தனியாத முட்டை தனித்துக்கிடப்ப அத
னுளிருந்த புள்ளுப் பருவம் வந்துழிப் பறந்துபோன தன்
மைத்து,"—என்கிறார் அழகியார். அவ்வாறுரைப்பின் சில
ஐயங்கள் எழலாம். சிறுபறவை முட்டையினைவிட்டு நீங்கு
கின்றபோது அம்முட்டை உடைந்து விடுகிறது. ஆனால் மக்கள்
உயிர் பிரிந்து செல்லுங்கால் அத்தகைய வெளிப்படையான
உடைதல் எங்கே நேரிடுகிறது? ஆனால் பறவையின் கூடு
என்று பொருள் உரைத்தால், கூட்டை ஒருகால் பிரிந்த பறவை
மீண்டும் அதனை அடைதல் கூடும். எனவே, குடம்பை என்ற
சொல்லினுக்கு முட்டை தான் பரிமேலழகர் விடுக்கும்வண்ணம்
உண்மைப்பொருள் என்பதினும், மேற்கூறிய இருவழியானும்
பொருள் உரைக்கலாம் என்றல், இலக்கியச் சிந்தனையாளர் இயம்
புவதாகும்.

மேற்கூறியாங்கு, சிந்தனை செய்வார்க்கு, பரிமேலழகர்
உரை, பல பிழைகள் நிறைந்த உரையவாம் என்று திண்மை
யுடன் கூறுதல் இயலும். பரிமேலழகரது உரையின் திறமின்
மையை அறிந்துகோடற்கு அவருரையை மாத்திரம் படித்துப்
புலமை பெற்றுப் பெருமை சாற்றுதல் சான்றாண்மை அன்று.
திரு. தாமரைக்கண்ணியம்மையார் போன்ற மாதர் திலகங்கள்
தீட்டிய இலக்கியக் கட்டுரைகளைக் காணவேண்டும். அண்மை
யில் வெளியான "திருக்குறள் ஆராய்ச்சி" மறுமலர்ச்சி என
மலருகிறது. அதனை, அறிஞர்கள் நன்முறையில் அங்கி

அகன்ற அறிவொடு கற்றுத் தெளிந்தபின்னரோ, அறிஞர் குழாத்துக்குச் சாற்றுவதை விடுத்தல் நலம்.

மேலும், இவ் இருபதாம் நூற்றாண்டு சிந்தனையிற் றிளைக்கும் திண்மையாளர் விரும்பியது. சிலப்பதிகாரம் சங்க இலக்கியமா? அதன் ஆசிரியர் எனப்பெறும் இளங்கோவடிகள் சேரமன்னன் இளவலோ? இறையனார் களவியலின் உரையிடத்துத் தோன்றும் மேற்கோட் செய்யுட்கள், களவியல் நூற்கு முற்காலத்தனவாயின், தஞ்சைவாணன் கோவைதோன்றிய காலமும் சங்ககாலமல்லவே; இறையனார் களவியல் தோன்றுங்கால் தொல்காப்பியப் பொருளிலக்கணம் எங்கு ஒளிந்தது? என இவை போன்ற எண்ணங்கள் நிகழ்கின்றன என்பதை நாம் செவ்விதின் உணருவோம். பழையன கழியாது போயினும் புதியன புகுந்துதான் ஆகவேண்டும்!

சுருங்கக் கூறின் திருக்குறளினுக்குப் பலர் உரைவகுத்தாலும், அது பரிமேலழகர் உரையோடுமாறுபடுகிற ஒரு காரணத்தினால் அதனைக் கிழித்துவிட வேண்டுமென்றெண்ணாது, அப்புத்துரையில் உண்மை நிலவுகின்றதா என்றெண்ணி நடுநிலைமையுடன் காண்டல் பண்புடைத்தாகும்.

## பண்பு

பண்பு என்பது, நாம் நல்லொழுக்கத்தினின்றும் வழுவாமல் இருந்து, மக்கள்நிலையைக் கண்டறிந்து அவ்வவர்க்கேற்ப ஒத்திருந்து வாழ்வது. இஃது, 'உலகியல் ஒழுக்கம்' எனலாம். இத் தன்மையறிந்து நடவாதவர் வாழ்க்கை, செம்மையுற நடவாது. அவர்கள் துன்பச் சூழலென்னும் கொடிபடர, தாம் கொழுகொம்பாக இருந்து தாழ்வுறுவர். அதனால் "பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்" என நல்லந்துவனாரும் கூறுவாராயினர். இத் தன்மையில்லாது வாழ்வாரை,

> "அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
> மக்கட்பண் பில்லா தவர்."

என்று பெருநாவலரும் அருள்வாராயினர்.

—செல்லூர்க்கிழார்

# எந்நாளோ?

[நாஞ்சில், கா. கணபதி]

தமிழ்ப்புலவர் அமிழ்தூறும் நடையால் ஈண்டு
தமிழ்ப்பொழிலை ஆக்கிடுதல் காண்பான் வந்தேன்
தமிழ்ப்புலவர் தமிழ்வளத்தால் வையம் காக்கும்
தமிழ்ப்பண்பால் தமிழுள்ளம் செழிக்க வாழ்ந்தேன்
தமிழ்ப்புலமை பெறவிழைந்தேன் தமிழைக் கற்றேன்
தமிழ்நாட்டில் தமிழ்க்கழகம் சிலவே கண்டேன்
தமிழ்க்கழகம் பலகாணும் நாளெந் நாளோ?
தமிழ்ப்புலவர் செழித்தோங்கு நாளெந் நாளோ?

செந்தமிழால் சீர்வளர்க்கும் செந்நாப் போதார்
செழுமையினால் அறம்வளர்க்கும் பாரி வள்ளல்
பைந்தமிழால் பாவளர்க்கும் இளங்கோ வீரன்
பார்முழுதும் திறலோச்சும் கரிகாற் சோழன்
நொந்தவர்க் கருள்மணிமே கலைதன் பண்பார்
நூல்கள்பல தருநீர்த்தொல் காப்பி யர்கள்
வந்திங்கே மகிழ்வூட்டும் நாளெந் நாளோ?
வண்டமிழில் வண்மைதரும் நாளெந் நாளோ?

சென்றவர்கள் மீளுவது இயற்கை யில்லை
திண்மையுளார் வீரத்தில் குறைவ தில்லை
இன்றுள்ள அறிஞர்களை ஏற்றந் தந்து
இறுமாப்புப் பெற்றிடவே நல்லோ ராறு
நன்றுள்ளம் வந்திடுமோ நலமார் பண்பும்
நசையற்ற வசையற்ற உறுதி மிக்க
குன்றுள்ளம் குலையாமல் தகுதி நல்கும்
கூரறிவு பெற்றுவரு நாளெந் நாளோ?

# மேற்புலந்தறிஞர் கண்ட தமிழகம்

[புதுவை, வரத. வீரப்பன்]

அ. எல்லைகள்

1

டாலமி காலத்தில், இந்தியாவின் ஒவ்வொரு பகுதியும் நெடுங்காலமாகவே நிலையாகக் குடியேறப்பெற்றுச் சீர்திருந்தி விளங்கியது. அந்ஞான்று தென்கிழக்குக் கரையோரமே யன்றிச் சற்றேறக்குறையக் கங்கையாற்றின் கழிமுகம் வரையாக வுள்ள தீவக்குறை முழுவதையும் தமிழர் உறைவிடமாகக்கொண்டு அமைதியாக வாழ்ந்து வந்தனர்.

—கால்டுவெல்.

2

ஒரிசாக் கடற்கரையினின்று குமரிமுனைவரையும், இம் முனையினின்று மலையாளக் கடற்கரையூடே மேல் நோக்கிக் கொச்சிவரையும் தமிழ்மொழி பேசப்படுகிறது. இந்நிலப் பகுதியில் உள்ள புலவர்கள் செய்யுள்வடிவில் நூல்கள் இயற்றுகின்றனர். இதனால் பெரும்பாலோர்க்குச் செவ்வை யாகப் படிக்கத் தெரிந்திருந்தும் அவற்றின் பொருள் விளக்க மாவதில்லை.

—சோன்னேரா.

3

வடபாலில், கோதாவிரியாறு பிறப்பூர் எல்லைதொட்டுக் குமரிமுனைப் பகுதியின்கண் உள்ள தொடர்மலைகளுள், மிகப் பெரிய தொன்றின் (ஆனை முடி 8850 அடி) சீழ்ச்சாரல் வரை யும், தெற்கிலும் கிழக்கிலும் கடற்கரைகளால் சூழப்பெற்றும் பரந்து விளங்கும் மாபெரும் நாடொன்றுளது. இதனுள் ஒரு பகுதி "பாண்டியோன்" நாடாகும். இதனை ஆராபியர் கரு நாடகம் எனப்பெயர் வழங்கினர். இம்மாநிலத்தின் கடற் கரைப் பாங்கரிலும் உட்புறத்தேயும் அரசுகள் பல நிறுவப்பெற் றிருந்தன. அவற்றின் பெயர்கள் இன்றளவும் நிலவுகின்றன. அரியணைகளோவெனில் அடியோடு அழிந்துபோயின.

—தெமர்லே

4

நள்ளிகைக்கு 16 ஆம் பாதையில் உள்ள திருட்டினையாற் றின் ஊற்றுக்கண் தொடங்கி அவ்யாறு கடலொடு கலக்கும் இடம் முடிய நீண்டு விளங்கும் நிலப்பகுதியைப் பாண்டிய மக் கட் தொகுதியின் வாழிடத்து வடவெல்லையாகக் குறிக்கின்றார்

பினினி. அம்மக்கள் மிகுந்த வல்லமையுடையாராய்த் திகழ்ந்தனர்; மூந்நூறு நகரங்களில் வாழ்ந்தனர். 1,50,000 போர் மறவர்கள் அடங்கிய படையைத் திரட்டும் ஆற்றல் மிக்கவராய் மிளிர்ந்தனர். இவர்கள் உறைவிடம் குமரிமுனைவரை நீண்டு "பாண்டி மண்டல"மெனப் பினினி கூறும் அரசியலாக உருவாகியது. இந்தப் பண்டைக்காலத்துப் பாண்டிய அரசர் கால் வழியினரே, இந்திய வரலாற்றின்படி, 362 தலைமுறைகளாக மதுரையில் செங்கோலோச்சியவர்.

—கோலேன்தேபார்.

5

தமிழ்மண்டலத்தின் நிலப்பரப்பு, வங்காளக் குடாக்கடலின் கரையோரத்திருந்து தொடர்மலைகளின் கிழக்குக் கரையினது அடிவாரம் வரை ஒரு புறமும், நள்ளிகைக்கு மேற்பாலில் 13° 54′ ஆம் குறியீட்டுக்கும் உச்சத்திற்கு 78° 3′ ஆம் குறியீட்டுக்கும் இடையேயுள்ள பெண்ணையாறு முதல் சோழமண்டலம் என்று அழைக்கப்பெறும் கடற்கரையின் எல்லையிறுதியாகும் கள்ளிமேட்டு (கலிமீர்) முனையிருக்க அகன்றுள்ளது.

—லேகூதேப்ளேக்ச்.

6

விந்தியமலை என்றென்றும் ஆரியநாட்டிற்கும் தமிழ்நாட்டிற்கும் இடையே இயற்கையால் எழுந்த எல்லையாக அமைந்துள்ளது. தொடர்நிலைச்செய்யுட் புலவர்கள் (பெருங்காப்பியப் புலவர்கள்) தமிழகத்துப் பேரரசுகளைக் குறிப்பிட்டிருக்கின்றனரேனும், அவைகளைப்பற்றி மிகச் சிறிதளவே அவர்கள் அறிந்தனர் ஆதல் வேண்டும். அவைகளைச் சேர சோழ பாண்டிய அரசுகள் என்பர். இக்காலத்து மதுரை திருநெல்வேலி மாவட்டங்களின் பெரும்பகுதி அடங்கிய பாண்டியநாட்டின் மிகப் பழமையான தலைநகர், திருநெல்வேலியில் தாம்பிரபரணி யாற்றங்கரையில் அமைந்த கொற்கையாகும். இத்தலைமைப் பேற்றைப், பிற்றை நாளில் மதுரைமா நகரம் பறித்துக்கொண்டது. சோழநாடு ஒருகால் "கொரமாண்டல்" கரையில், நெல்லூரிலிருந்து புதுக்கோட்டைவரை நீண்டும், அதன் மேற்கெல்லை கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் இக்காலத்தைக் கடப்பை மாவட்ட வரம்பு மட்டும் சுருங்கியதென்றாலும், முன்னர்க் குடகு (Kurg) நாட்டு எல்லைப்புறம் வரையும் அகன்றிருந்தது. உறையூர் (பழைய திருச்சிராப்பள்ளி) சோழநாட்டின் தலைநகராகவும் காவிரிப்பூம்பட்டினம் இதன் துறைமுகப்பட்டினமாகவும் விளங்கின திருவாங்கூர். மலையாளமாவட்டம் கொச்சி இவ்

விடங்களிலும் சுற்றுப்புறங்களிலும் சேரர் அல்லது கேரளர் தங்கி வாழ்ந்தனர். கொச்சியின் அருகே பெரியாற்றங்கரையிலே உள்ளதும், பின்னை நாளில் திருவஞ்சிக் களத்திற்குத் தோற்றுவாயாக விருந்ததும், இன்று திருக்கரூர் என்று பெயரிட்டழைக்கப் பெறுவதுமான வஞ்சியே, சேரநாட்டின் பழைய தலைநகராகும். கொங்குநாடு (கோயம்புத்தூரும் தென் சேலமும்) பிந்திய காலத்தில் "சேரளா" என்னும் பெயர் ஏற்றிருந்ததாயினும் இதனினின்று தனித்தே விளங்கியது.

—பார்னெட்.

அசோகரின் நேர் ஆட்சிக்குட்பட்ட நாடுகளிலும், நன்கு வரையறுக்கப்பெறாத பாதுகாப்பின் கீழ் இவர்தம் தலைமை ஆட்சியோடு இணைந்திருந்த நாடுகளுடன் சேர்ந்து, தெற்கே நலமுற நிறுவப்பெற்ற பழந்தமிழ் நாடுகளின் எல்லைகளைத் தொடுமாறு பரந்து விளங்கின.........

நெல்லூருக்கு அணித்தேயுள்ள வடபெண்ணையினின்று மேற்குக் கடற்கரையில் உள்ள கலியாணபுரியாற்றுக்கும் (கடப்பையினூடே சித்தல் துர்க்கத்திற்குத் தெற்காக) சிவக் குறையின் கடைப்பிற்றுக்கும் பரந்திருந்த தமிழ்நாடுகள் தென்புறத்தில், அல்லது மலையாளக் கடற்கரையில் பிறங்கிய கேரளபுத்திர, சத்தியபுத்திர நாடுகளைப்போலவே தன்னரசு உரிமையுடையனவாக மிளிர்ந்தன என்பதில் ஐயுறவில்லை.

— ஸ்மித்.

8

தென்னாட்டின் அகன்ற நிலத்தை இன்று வழக்கிலுள்ள சொல்லாட்சித் துணைகொண்டு விரித்துரைப்பின், "வட சர்க்கார்" மாவட்டங்கள், விசாகப்பட்டினம் கஞ்சம் மாவட்டங்கள் இவையிற்றினைச் சென்னை (இராசதானி) வளநாட்டினின்று கழித்துத், தன்னரசு ஆட்சிக்குட்பட்ட மைசூர், கொச்சி, திருவிதாங்கூர் குறுநிலங்களை அதனோடு கூட்டினால் உளதாகும் நிலப்பரப்புக்கு நேர் என்னலாம். தமிழர் இனமும் தமிழ்மொழியும் இயல்பாகவே நிலவும் நல்லுலகம் இதுவாகும். இதற்கிசைந்தவாறு, பண்டைநாளில் அதன் பெரும்பகுதிக்குத் தமிழகம் அல்லது தமிழ்நாடு என்றே பெயர் வழங்கியது. கிழக்குக் கடற்கரையில் சென்னைக்குச் சிறிது மேற்புறத்தில் உள்ள புலிக்கட்டை (பழவேற்காடு)த் தமிழகத்து வடவெல்லையின் ஓர் இடமாகவும், மேற்குக் கடற்கரையில், மாகிக்கு (Mahe)த் தென்புறத்துப், படகரா (Badagara) விற்கு

அணித்தேயும் உள்ள வெண்கல் மலையைப் பிறிதோர் இடமாக வும், இவ் இருமுனைகளையும் ஒன்று சேர்க்கும் எல்லைக்கோடு, சென்னைக்கு வடமேற்கில் நூறுவது மைலில் இலங்கும் திரு வேங்கடம் அல்லது திருப்பதிமலையைச் சுற்றிக்கொண்டு பாதகாராவிற்குத் தென்பாலில் சாய்ந்து செல்லுவதுமாகக் கொள்ளுவது தொல் வழக்கு. தமிழகத்தின் வடகிழக்கு எல்லையை வடபெண்ணைக்கு அண்மையிலுள்ள நெல்லூர் வரை யும், வடமேற்கெல்லையை மங்களூருக்குத் தென்புறத்தில், சந்திர கிரியாறு வரையும் பெருக்கிக் கூறுவது பின்னையோர் வழக்கு.

—ஸ்மித்

9

பிளினி வாழ்ந்த நாளிலும், செங்கடற் செலவு நிகழ்ந்த காலத்தும், மலையாளக் கடற்கரையின் ஒருபகுதி, பாண்டியர் ஆட்சிக் குட்பட்டிருந்ததென்பது திண்ணம். இப் பாண்டியர் செங்கோலாழி இவர் தம் தலைக்காலத்து அரசியற் பொறுப்பி லிருந்த நாடுகளிலேமட்டும் அன்றிப் புறத்தேயும் நீண்டதொலைவு பரந்திருந்ததென்பதை விளக்க இஃது ஓர் எடுத்துக்காட் டாகும்... ...

“நடுநிலத்ததும், வாணிபத் தலைநகருமான மதுரைக்கு நெடுந்தொலைவில் உள்ள மேற்குக் கடற்கரையின் ஒரு பகுதி, பாண்டியமன்னன் அரசாட்சியின்கீழ் விளங்கிய,” தெனப் பிளினி தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

—கால்டுவெல்.

ஆ. நிலப்பரப்பு

10

பண்டைத் தமிழகம் இன்று தமிழ்கூறும் நல் உலகினும் மிக வகன்றிருந்தது. துளு மலையாளம் கன்னடம் வழங்கும் நாடுகள் இதனுள் அடங்கியிருந்தன. இலங்கைத்தீவும் தமிழ் மொழி பேசும் மக்கள் உறையும் பெருநிலத்தோடு நெருங்கிய உறவு பூண்டிருந்தது.

—ஸ்மித்

இ. இயற்கையமைப்பும் நிலவளமும்

11

குமரிமுனை முதல் கள்ளிமேட்டுமுனையீறாகப் பரந்துபட்ட கடற்கரையை முத்துக் குளிக்கும்துறை எனப் பெயரிட்டழைப் பர். இதனை இலங்கைத் தீவினின்று பிரிப்பது மன்னார் வளை குடா. இப்பகுதியிற்றான் முத்துக்குளியல் மிகுதியாக இடம்

பெறுகிறது. கடல்சார்ந்த அந்நிலத்திற்கு அந்நாட்டவர் மறவ நாடு எனப் பெயர் வழங்குவர்.......

இலங்கைத் தீவைப்போன்றே இராமேசுவரம் என்னும் திட்டும் முற்காலத்தில் இந்தியப் பெருநிலத்தோடு இரண்டற இணைந்திருந்ததென்றும், நிலநடுக்கத்தின் விளைவாக அது இங்ஙனம் பிளவுபட நேர்ந்ததென்றும் முடிபு கட்டுகின்றனர் சில நூலாசிரியர்கள். இஃதன்றியும், இந்தியாவில் இக்கரைப் பாங்கரில்தான் எரிமலை அனல் உமிழும் காட்சி புலனானது.......

கள்ளிமேட்டு முனைக்கு மேற்பாலில், "கொரமாண்டல்," கடற்கரை தொடங்குகிறது. இன்று தஞ்சை மாவட்டம் என்னும் சோழமண்டலத்தைக், "கொரமாண்டல்," என்று பெயர் திரித்து வழங்கினர் போர்த்துக்கேசியர். அந்நாட்டவர் அதனைத் தமிழ்மண்டலம் என்றே அழைப்பர். ஆங்கு மிகுதியாக வாழ்பவர் தமிழர் ஆதலின், மார்க்கோபோலோ காலத்தில், இதனை "மகா பார்," பெரிய நாடு (பார்-உலகு) எனப் பெயரிட்டழைத்தனர். "அக்கரை நெடுகவும் ஒரே மணற்காடு. மூன்று மைல் அளவு அகன்று தோன்றும் அம்மணற் பரப்பில் புதர்களும் காட்டுக் கள்ளிகளும் அடர்ந்துள்ளன. அம் மணல் வெளிக்கப்பால், மிகுந்த செழுமை நலம்வாய்ந்த நிலமாக மிளிர்கிறது. ஆண்டுமுழுதும் வளம் குன்றாது பயன் ஊட்டும் விளைநிலங்களே எங்கணும் காட்சியளிப்பன......"

தஞ்சைமாவட்டம் ஒரு பொழுதாயினும் **மொகலியர்** (மொகலாயர்) அரசியற்றலைமைக்கு அடங்கியிருந்ததில்லை.......

ஆங்கு வாழ்வோர் கைவினைகளிலும் உழவுத் தொழிலினும் சிறந்தோர் ஆவர். இவர்தம் வளம் மிகுந்த நாட்டில் தென்னை மரங்கள் வரைஇகந்து உள்ளன. அந்நாட்டில் தொண்டைமான் என்னும் பெயருடைய சிறு கோட்டம் ஒன்றுளது. உறையுளாகவும், கடக்க ஏலாத அரணாகவும் அமைந்த மலைகளின் உதவியால், அக்கோட்டத்து மக்கள் அயலார் ஆட்சியினின்று தற்காத்துக் கொண்டனர்.

—தெமர்லே

12

தொடர்மலைகள் தென்பாலில் கூர்ந்து சென்று ஒன்றுகூடும் நடுவிடத்தே அமைந்த குமரிமுனை, தீவக் குறையின் இருபக்கங்களையும் பிரிக்கிறது. மேற்புறம் மலையாளக் கடற்கரை யென்றும், கீழ்ப்புறம் சோழமண்டலக் கடற்கரை யென்றும் பெயர் பெறும். தாழ்நிலத்தில் உறையும் மறவரும் பரத

வரும் நம்மனோர்க்கு நன்கு விளங்காத உருவவழிபாடு புரிகின்றனர். இவ்வொருவகைத்தான கடலிணைக்கால் (சலசந்தி) முத்துக்குளியலுக்குப் பரந்த புகழ் வாய்ந்துள்ளது. இந்தியாவிலே காணக்கிடைக்கும் மிகச் சிறந்த முத்துக்கள் குமரி முனையிலும், தூத்துக்குடியிலும் எடுக்கப் பெறுவதால் இதனை, முத்துக் குளிக்குந்துறை என்று பெயரிடுவாராயினர். ஆங்கே நீரின் அடிப்புறத்தில் உள்ள கற்பாறைகளின்மீது சாம்பல் வண்ண அம்பரும் அகப்படுகிறது. இதன் தூயதன்மை மல்டீவ் (மலைத்தீவு) களிலும் மடகாஸ்கரிலும் எடுக்கப்பெறுவதற்கு இணையானது.

—அபே குய்யோன்

13

சோழமண்டலக் கடற்கரை, நள்ளிகைக்கு மேற்பாலில் எட்டிலிருந்து பதினெட்டாம் பாகைக்கு நடுவேயும், குமரி முனையினின்று ஒரிசாக் கடற்கரைவரையும் பரந்துள்ளது. மேலும், இந்தியத் தீவக்குறையின் கிழக்குக் கடலோரத்தும், கங்கைக்கு இப்பாலும் நிலவும் நிலப்பரப்பை அது தன்னுள் அடக்கியுள்ளது. ஆசியாவின் இப்பகுதி எழிலாலும் வளத்தாலும் தலைசிறந்து மிளிர்வதைப்போலவே, நெடுங்காலந்தொட்டுப் பயன் ஊட்டுவதிலும் இணையற்று விளங்குகிறது......

வானத்தின் வனப்பும், காலநிலையின் இனிமையும், சிறப்பாக வளம் கொழிக்கும் விளைபொருள்களும் பிறவிடங்களினும் இப் பகுதியைத் தகுந்த உறைவிடமாகத் தேர்ந்தெடுக்குமாறு போர்த்துக்கேசியர்க்குத் துணைசெய்தன.

—தேலாப்ளோத்

14

உலகத்தோர் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட பொன், முத்து, மிளகு, கடல் வன்னக்கல் (கோமேதகம்), ஆய்ந்தெடுத்த பஞ்சு இவையன்ன பிற விளைபொருள்களைத் தமிழகம் பெற்ற நற்பேற்றின் பயனும், பண்டைக்காலந்தொட்டே அயல்நாட்டு வணிகர்கள் ஆங்குவர விரைந்தனர். தமிழர்கள் நாகரிகமுறையில் வாழ்க்கை நடத்துதற்கு இன்றியமையாத செல்வப்பொருள்களை வாணிபம் குறைவின்றி வழங்கியது; மேலும், அவர்கள் கடல்கடந்து செல்லவும் அஞ்சினர் அல்லர்.

—ஸ்மித்

15

வேறெங்கணும் பெறற்கேலா மூன்று அரிய விலைப் பொருள்களைத் தன்னகத்தே பெற்றிருக்கும் நற்பேறு வாய்ந்

துள்ளது தமிழ்நாடு. அம்மூப் பொருள்களாவன: மிளகு, முத்து, கடல் வண்ணக்கல். ஐரோப்பாவின் வாணிப வட்டாரங்களிலிருந்து அளவு கடந்த விலை கொடுத்து மிளகு தருவிக்கப்பட்டது. மேலும், அத்தகைய விலையேற்றமுடையதாக அது மதிக்கப் பெற்றதென்றால், கோத் அலாரிக் (Alaric the Goth) என்பவர் கி. பி. 409-இல், போரினால் விளைந்த அழிவுக்கு ஈடு தருமாறு உரோமையரை நெருக்கியபோது, 3,000 இராத்தல் மிளகு ஒப்படைக்கப் படவேண்டுமென்பதும் அவர் விடுத்த கட்டளையில் ஒரு கூறாக இடம் பெற்றது. இன்றளவும் பயன் தருவதாகவும், சிறப்புடையதாகவும் விளங்கும் தென் கடற்புறத்து முத்துக்குளிக்கும் துறையில் எண்ணிறந்த காலமாகத் தொழில் நடைபெற்று வந்ததோடு, அத்துறையை நாடி எல்லாக் காலத்தும் அயல்நாட்டு வணிகர்கள் குழுவாக வந்த வண்ணமிருந்தனர். பிளினி நன்கு ஆய்ந்து குறிப்பிடுவது போல், கோமேதகம் அல்லது கடல்வண்ணக்கல், பச்சைக்கல்லோடு (மரகதம்) நெருங்கிய தொடர்புடையதாகும். இஃது, இந்தியர் உரோமையர் இவரிருவராலும் சிறந்ததொன்றாக மதிக்கப்பெற்றது. செதுக்கு வேலையாளரின் அருமைப் பாடமைந்த கலைநிறைவேற்றத்திற்குத் தேவையான மூலப்பொருள்களாக அது அடுத்தடுத்துப் பயன்பட்டு வந்தது. இந்தியாவேயன்றிப் பிறவிடங்களில் இது அருகித் தோன்றுவதால் திறமை வாய்ந்த போலிப்பொருள் செய்வினைஞர், பளிங்குக் கற்களைக்கொண்டு இதனைப்போலவே சமைத்துத் தருவதில் பேராவக்கங் காட்டினர். இந்தியாவின் மணிதரு கனிகள் (சுரங்கங்கள்) மூன்றாகக் குறிப்பு வரையப்பெற்றுள்ளது. அவையாவன: 1. கடல் வண்ணக்கல் காணக் கிடைப்பதாக டாலமி குறிப்பிட்ட புன்னாட (Punnata) புனாடு அல்லது புன்னாடு. இஃது மைசூருக்குத் தென் மேற்கிலே, காவிரியோடு கலக்கும் கபாணி (Kabban) யாற்றங்கரையிலே அமைந்த கிட்டூருக்கு அணித்தேயுள்ளது. 2. படியூர் அல்லது பட்டியாலி. இது கோயம்புத்தூருக்கு 40-வது மைலில், கிழக்கிற்கும் தென்கிழக்கிற்கும் நடுவிடத்தேயுள்ளது. இவண் விளங்கிய கனியில் கடந்த 1820-ஆம் ஆண்டு வரையுங்கூடத் தொழில் இனிது நடைபெற்று வந்தது. 3. சேலம் மாவட்டத்தின் வடகிழக்கு மூலையிலும், கோலார் தங்க வயலுக்கு அண்மையிலும் உள்ள வாணியம்பாடி, இக்கனிகளுக்கு நிலைக்களன்களாக இருந்த மாவட்டங்களில் ஏராளமாக அகப்பட்ட பல்வகை உரோமைய பொற்காசுகள் நிறைந்த புதையல்கள், பழங்காலத்திலே தென்னிந்தியாவில் செம்மணி (இரத்தினம்) விற்பனை பெருக்கமுற்றிருந்தமைக்குச் சான்று பகர்வனவாகும். சிவப்புக்கல் (செம்பு) நீலக்கல் (இந்திரநீலம்)

இவற்றின் இனத்தைச் சார்ந்ததும், சேலத்திலும் கோயம்புத்தூரிலும் மிகுதியாகக் கிடைத்ததுமான கனிப்பொருளாம் குருந்தக்கல். தூய தமிழ்ப்பெயர் (குருந்தம்) ஏற்றிருப்பதொன்றே, இந்தியாவின் அருமணிக் கனிகள் தரும் பொருள்களைப் பொறுத்தமட்டில், முந்தைய ஐரோப்பா எத்துணை நெருங்கிய தொடர்பு பூண்டிருந்தது என்னும் வேறொரு குறிப்புக்கும் இடந்தருகிறது.

—ஸ்மித்

ஈ. காலத்தின் தட்ப வெப்பநிலை

16

இந்தியாவின் தட்ப வெப்பநிலை உள்ளத்திற்கு இன்பமும், உடலுக்கு நலமும் பயப்பதில், இவ்வுலகத்து நாற்பெரு நிலப் பிரிவுகளிலேயே தனி சிறந்து விளங்கும் காலநிலையோடு ஒத்த தொன்றாக வைத்து மதிக்கத் தகுவதாகும். ஆங்கு இருபெரும் பொழுதுகளாக ஆண்டு பகுக்கப்படுகிறது. அவ்விரண்டும் ஒன்றனையொன்று ஒழுங்குமுறை பிறழாது தொடர்ந்து வருகின்றன. ஏறக்குறைய ஐப்பசி முதல் பங்குனியீறாகக், காற்று வடபாலிலிருந்து இடைவிடாமல் வீசும். ஆண்டின் எஞ்சிய காலத்தில் அது தெற்குப் பக்கத்தில் நிலைப்படும். கப்பலோட்டிகள் இவ்விரு நிகழ்ச்சிகட்குப் பருவக் காற்றுகளெனப் பெயர் வழங்குவர். முன்னது சோழமண்டலக் கடற்கரைப் பாங்கரில் சுழல்காற்றை அடுத்தடுத்து உடன் அழைத்து வந்துவிடும்........

இடையிடையே சுழல்காற்றைத் தொடர்ந்துதோன்றி விளைநிலத்தை வளம்படுத்த வரையாது பெய்யும் சோனைமாரி பெரும்பாலும் மார்கழி இறுதியில்தான் ஓய்வு அடையும்.

(தொடரும்.)

## அறிவு

அறிவாவது, ஒன்றை உண்மையாகக் கண்டு உணரும் இயற்கை. இவ் அறிவினாலேயே உலகம் இயங்குகின்றது. அறிவுத் திறம் குன்றாது செய்யப்படுவனவே, சிறந்தனவாக—உயரியனவாகக் கொள்ளப்படுகின்றன ; போற்றப் பெறுகின்றன—ஆகவே, உலகிடைக் காட்சி தரும் செயற்கைப் பொருள்களெல்லாம் அறிவால் ஆக்கப் பெற்றனவே. அவ் வறிவாற் படைத்தனவே சிற்பமும் ஓவியமும் காவியமும்பிறவும். அக் காவிய ஓவிய நுண்மையிற் றிளைத்துத் திளைத்து மகிழ மகிழ இறவாத இன்பம் மிக்காராய் இலங்குவர். அவ்வறிவிற் பயின்று மெய்ம்மை காண முயல்வதே மக்கட் பிறப்பின் மாண்பும் காண்பும் ஆகும்.

'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்பது பொய்யில் புலவர் பொருளுரை.

செல்லூர்க்கிழார்.

# வசந்த குசுமாகர மாத்திரை

[மயிலை, சீனி. வேங்கடசாமி.]

[நெடுநாளைக்குமுன் இப்பாட்டை ஓர் ஓலைச்சுவடியிற் கண்டேன். தாளில் படிஎடுத்தெழுதினேன். அதில் இம்மருந்து செய்யும்முறையும், நோய்களும், அனுபானமும் காணப்படுகின்றன. மருத்துவ அன்பர்கள் கையாண்டு மக்களுக்கு நலம் செய்வார்களாக.]

## கலி வெண்பா

அத்திமுக வைங்கரனை அடிபணிந்து தெண்டனிட்டுப்
பத்தியுடன் அர்ச்சித்துப் பாங்குடனே—சித்தி
வசந்தகுசு மாகர மாத்திரையின் மாமுறையை
இசைந்த உலாவான் இயம்பினேன்—உசந்தநல்ல
அக்கரா காரம் அதிமதுரம் கோஷ்டமுடன்
தக்கவெண் காரந் தனிலவங்கம்—மிக்க துணைத்
திப்பிலியும் இந்தத் தினுசுக்குக் கால்பலமாய்ச்
செப்பமுடன் ஒன்றாகச் சேர்த்திட்டு—ஒப்பமிடும்
அன்பான (சாதி)லிங்கம் அரைப்பலமுந் தான்வாங்கி
இன்பமாங் குங்குமப்பூ இன்னங்கேள்—சொம்பனையே!
பச்சைக் கருப்பூரம் பாங்குளகோ ரோசனையும்
கச்ச விராகனெடை காணவிட்டு—இச்சையுடன்
சொன்னசரக் கெல்லாம் சுபமாகத் தான்சேர்த்து
நன்னிக் கலுவத்தில் நாடவிட்டு—பின்னவொளி
வஞ்சிமுலைப் பாலில் வளர்பூ ணைச்சாமம்
இஞ்சிரசந் தன்னில்இரண் டாஞ்சாமம்—எஞ்சாமுடன்
நன்றாக வேயரைத்து நல்லசிறு பயறளவு
குன்றாமல் மாத்திரையாய்க் கொண்டுருட்டி—நன்றாக
வண்குறிப்பும் பார்த்து இயல்பான சாத்தியமாய்
திண்குறிப்பைக் கண்டால் திரம்பேசும்—நன்குறிப்பாம்
நாட்டுத்தேன் இஞ்சிரசம் நங்கைமுலைப் பாலதனைக்
கூட்டிக் குழப்பியுட் கொண்டக்கால்—வாட்டமிடும்
பித்தசுரம் வாதசுரம் போரான சேத்துமசுரம்
சத்திசன்னி தோசம் தலைவலியும்—முத்தியிடும்
கையசதி காலசதி கடுமுறைப்பு முப்பிரமும்
மெய்கடுப்பும் இத்தனையும் ஏகுமே—மைக்குழலே
பத்தியத்துக் கேற்ற பதார்த்தவகை யின்னதென்று
சித்தமுடன் செப்புகிறேன் சீராய்க்கேள்—முத்தியிடாக்
கத்தரிக்காய்ப் பிஞ்சு கலுமுருங்கோ...........
உத்த பொரிச்சாறும் ஒக்குமே—முத்தியிட்ட
வல்ல பிணிமாறி வாழ்ந்திருப்பார் தாரணியில்
வல்லவனாய் மெய்யில் வழுவுண்டாம்—தொல்லுலகில்
வாலுலகத் தன்வந்திரி வாகடத்தின் நூன்முறையால்
மானிடர்க்குச் சொன்னேன் மகிழ்ந்து.

# மதிப்புரை

**ஸ்ரீ சிவநாம அஷ்டோத்தர சதம்**

[வெளியிடுவோர்: N. இராஜம் & கோ., வேப்பேரி, மதராஸ்-7.]

இதன் ஆசிரியர் ஸாஹித்திய வியாகரண பூஷணம் பிரம்மஸ்ரீ ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா அவர்கள் ஆவர். இவர்கள் இயற்றியது தமிழுரையே ஆகும். மூலம் ஸ்காந்த புராணத்திலுள்ளது. வடமொழியைத் தாய்மொழியாகப் பெற்றார்க்கே மூலம் பயன்பெறும். செந்தமிழைத் தாய்மொழியாகப் பெற்றார்க்குச் சிறிதும் பயன்பெறாமை கண்டே ஆசிரியரவர்கள் அரும்பாடுபட்டு மொழிபெயர்த்துள்ளார்கள். அவர்கள் தொண்டு போற்றற்குரியது. பல ஆகம புராணமேற்கோள்கள் காணப்படுகின்றன. பல ஐதிகக் கதைகளும் காணப்பெறுகின்றன. புத்தகம் நல்ல தாளில் செவ்வையான தோற்றத்தில் அச்சிடப்பட்டுள்ளது. விலை அணா 0 15

**புலவர் உலகம்**

[திருவள்ளுவர் நிலையம்: 127, மேலமாசி வீதி, மதுரை.]

இதன் ஆசிரியர் பெரும்புலவர் ஜெகவீரபாண்டியனாரவர்களாவர். இவர்கள் கம்பராமாயணத்தில் ஆழ்ந்த பற்றும் நுண்ணறிவும் படைத்தவர்கள். அவர்கள் ஆய்வுரை புலவர் உலகத்துக்குப் பொன்போல் மிளிரும். உண்மை விழைவார்க்குத் தூண்டாவிளக்காய்த் துலங்கும். பல தொகுதிகளாக வெளியிடும் நிலையில் இது பத்தாவது தொகுதி முதலாவது புத்தகமாகும். தமிழுலகம் பெற்றுச சால் பெய்துமாக.

**தமிழலங்காரம், தமிழ்த் துதிப்பதிகம்**

இந்நூற்களை அருளிய ஆசிரியர் வண்ணச்சரபம் திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ. தண்டபாணி சுவாமிகள் ஆவர். சீரிய செந்தமிழே ஆரியத்திலும் உயர்ந்ததென்று தமிழ்த்தெய்வமாம் திருமுருகன் திருமுன் திருவருளால் சீட்டொன்று பெற்ற செம்மைத் திறத்தால் உலகோர்க்கு உண்மை செப்ப உரைத்தருளியதாகும். 'தமிழினும் உயர்ந்தமொழி ஒன்று உண்டென உண்மைக்கு மாறாக உரைப்பவர்முன் ஆண்மையற்றுக் கேட்டுக்கொண்டிருப்பவனும் உண்மைத் தமிழனாகான்', என அடிகளே உள நைந்து உரைத்துள்ளார்கள்.

கொலை புலை உயர்வெனக் கூசாது கூறும் ஆரிய வேதத்திலும் அவற்றைப் பாவமெனக் கூறும் ஔவை, வள்ளுவனார் அருள்மொழியே சாலச் சிறந்ததெனச் சாற்றுகின்றார்கள். அது வருமாறு:

"நான்முகன் றக்கன் முதலோ ரனேகர் நவின்றவட
நூன்முழு துங்கொலை வேள்வியைப் போற்றும் நுடங்கரிய
வேன்முனைக் கண்ணௌவை வள்ளுவ னாதியர் விண்டதென்னூல்
ஊன்முழுப் பாவ மெனவே யடிக்கடி யோதிடுமே."

இப்படியே நூன்முழுதும் வலிய சான்றுகள் பல கொண்டு தமிழே உயர்வென நிறுவப்பெற்றுள்ளது. மேலும், சிவபெருமான், திருமால், திருமுருகன் முதலிய முழுமுதல் தெய்வங்களைப் பாடி மெய்யடியார்கள் அருட்செயல் பல புரிந்ததும், அத்தெய்வங்கள் அருந்தமிழ் வேட்கையால் ஆக்கிய வியத்தகு அருட்செயல்களும் போல வடமொழிக்கண் ஏதும் இன்மையையும் விளக்கியுள்ளார்கள். உண்மையான் நோக்குவார்க்கு இந்நூல் தமிழ் வரலாறேயாகும். ஆயின், நூற்றுக்குமேற்பட்ட வரலாறுணரலாம். ஒவ்வொரு தமிழன்பர்களும் பெற்று உண்மையுணர்ந்துய்வார்களாக.

தமிழ்த் துதிப்பதிகத்தின்கண் இயல்பாகவே தமிழ் பன்னிரண்டுயிரும், மூப்பாற்புள்ளி ஆய்தமும், பதினெண் மெய்யும் அமைந்துள்ளமைக்குப் பொருந்திய தக்க சான்றுகள் காட்டியுள்ளார்கள்.

# செய்திகளும் குறிப்புகளும்

## பண்டைத்திறலுறப் பராவுதல்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம் முதலிய அரும் பெரும் நிலையங்களின் ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை யவர்கள், மூண் பரவில் குறித்தாங்கு 15-6-'51-இல் திருவருளால் நல்ல நலத்துடன் திருநெல்வேலி வந்து சேர்ந்துள்ளார்கள். நலமும் உரமும் ஒருங்கெய்தி முன்னைத் திறலினராய்ச் சென்னை வந்தெய்தித் தொழி லினைக் கண்காணித்துச் சிறப்புறத் தென்றலும் தமிழும் நின்றிலங்கும் திருக்குற்றாலத்துத் தங்கியிருக்கின்றார்கள். அவ்வாறே விரைந்துவர அருளுமாறு ஆண்டவன் அடியிணையைப் பராவுவோமாக.

## சிலப்பதிகார மாநாடு

"கற்புக் கடம்பூண்ட பொற்புடைத் தெய்வமாம்" கண்ணகியாரும் அவர்தம் காதற் கொழுநராம் கோவலனாரும் பிறந்து வளர்ந்து சிறந்த திருநகர், காவிரிப்பூம்பட்டினமாகும். அவ்வூர், சோழர் தலைநகராகவும் தமிழகத் தனிப்பெருந் துறைமுகமாகவும் அந்நாளில் இருந்தது. இந் நாளிலோ கடலாலும் காலத்தாலும் கொள்ளப்பட்டுப் பெயர் மட்டும் நிலைத்த சிற்றூராகக் காவிரி கடலொடு கலக்கும் இடத்தில் 'காவேரிப்பட் டினம்' என மரூஉ வழக்காக வழங்க இருக்கின்றது.

அவ்வூரின்கண் 15, 16, 17-6-'51 ஆகிய மூன்று நாட்களிலும் சிலப்பதி கார மாநாடு சிறப்புற நிகழ்ந்தது. சர். ஆர். கே. சண்முகஞ் செட்டியா ரவர்கள் தலைமைபூண்டார்கள். பெரும்புலமை வாய்ந்த செந்தமிழ்ச் சீரி யோர் பலர், சிலப்பதிகாரத்தைப் பற்றித் திறம்பட விரிவுரையாற்றினார்கள்.

இம்மாநாட்டைப் பெருநிலக்கிழார்களும் தமிழன்பர்களும் அரிதின் முயன்று கூட்டுவித்தார்கள். மூன்று நாட்களும் சிலப்பதிகாரச் செந்தமிழ் முழக்கமே செறிந்தோங்கியிருந்தது. சிறந்த சிலப்பதிகாரத் தமிழர் பண்பாடு பண்டுபோல் மிளிர்ந்து விளங்குமேல் தமிழகம் தனிப்பெரும் தன்மை எய்தும். தமிழுண்ணை தனித்துணை புரிவானாக.

## திருநெல்வேலி மாவட்டச் சைவ வேளாளர் மாநாடு

உடலுறுப்புப் போன்று உலக மாந்தர் கூட்டமும் உடங்கியைந்து வாழ்ந்து உய்திபெறப் பல்வேறு பண்பாடுகள் இயல்பாகவே அமைந்த மக்கட் குழுவினர் ஆங்காங்குக் காணப்படுகின்றனர். அக்குழுவினரைக் குலமெனவும், இனமெனவும், சமூகம் எனவும் அழைப்பர். ஒவ்வொரு குழுவினரும் கல்வி, பொருள்நிலை, உழவு, வாணிகம், கைத்தொழில், அரசியல் முதலிய பல துறைகளிலும் முன்னேறுதல் முறைமையாகும். உறுப்புகளுள் ஏதேனும் ஒன்று நலிவுறநேரின் ஏனைய வலிவுற்ற உறுப்பு களும் நலிவுற்ற நிலைமையையே எய்திப் பயன்பெற வழியின்றி வாளா இருப்பனவே.

ஆகவே, பொதுநல வாழ்வின் பொருட்டேனும் குழுநல வாழ்வு செழுமையுறல்வேண்டும். அக்குறிக்கோளுடன் தொடங்கப்பெறும் இம் மாநாடு வெற்றியுடன் விளங்கித் தொடர்ந்து பணியாற்றிப் பயன்பெறச் செய்து வாழ்விக்குமாக.

இம்மாநாடு 7, 8-7-'51 (சனி, ஞாயிறு) இரண்டு நாட்களிலும் தூத்துக்குடியில் நடைபெறும். திரு. சர். பி. டி. இராஜன் அவர்கள் தலைமை பூண்பார்கள். இராசபாளையம் பண்ணையார் இராஜபகதூர் R. V. இராமசுந்தரம் பிள்ளையவர்கள் மாநாட்டைத் திறந்துவைப்பார்கள்.

கும்பகோணம் நகரமன்றத் தலைவர் M. C. S. இரத்தினசபாபதிச் செட்டியாரவர்கள் கொடியேற்றி வைப்பார்கள்.

திரு. R. P. சேதுப்பிள்ளையவர்கள், திரு. G. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், திரு. A. முத்துசிவன் அவர்கள் முதலான பல பெரும்புலவர்கள் விரிவுரையாற்றுவார்கள். இனநலம் கருதும் யாவர்களும் கலந்து வேண்டுவன செய்வார்களாக. இஃது ஒவ்வொருவரின் பிறப்புரிமையும் இன்றியமையாப் பெருங்கடமையும் ஆகும். இறவாப் பிறவாச் செந்தமிழ்ப் பெருந்தெய்வம் திருவருள் புரிவதாக!

**ஈடில் இழப்பு**

ஈழநாட்டுச் செந்தமிழ்ப் புலவரும், புலவர் நற்றுணைவரும், புரவலரும், பொதுநலத்தொண்டரும், கரவிலுளஞ்சேர் உரவரும், கடவுட் பற்றினரும், காந்தியக் கடைப்பிடியாளரும், ஈழகேசரி ஆசிரியரும், வள்ளலுமாகிய திரு. நா. பொன்னையா அவர்கள் 29-3-'51 வியாழன் இரவு வாராவுலக நெறிஏறி மறைந்தனர். அவர்கள் பிரிவால் பொதுவாகத் தமிழ்நாடும், சிறப்பாக ஈழநாடும் கண்ணிலான் பெற்றிழந்த கதையாய்க் கடத்தற்கரிய பெருந்துன்பக் கடலுள் ஆழ்ந்து கரைகாணாது கலங்குவவாயின. என் செய்வாம்! "மருந்தில் கூற்றத்து அருந்திறல் கடந்து" இவ்வுலகில் தோன்றுதொட்டு இன்றுகாறும் பொருந்தி இருந்தார் எவரும் இலர். இதுவே உலகியற்கை; இதுவே உலகின் உண்மை உயர்வு.

இதனாலன்றே! திருவள்ளுவநாயனாரும்,

> "நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
> பெருமை யுடைத்திவ் வுலகு." ---திருக்குறள்: ௩௩௬.

என்று அருளுவாராயினர்.

திரு. பொன்னையா அவர்கள் யாழ்ப்பாணத்தைச் சார்ந்த நாட்டுப்புறச் சிற்றூராகிய குரும்பசிட்டியில் விரும்பிய நலமெலாம் வாய்ந்த பெருங்குடியிற் பிறந்தனர். தெருளாலும் ஆள்வினையாலும் வறுமையை வென்றனர்.

இளமையில் பர்மா, மலேயா முதலிய வெளிநாடுகளிற் சென்று ஆள்வினைத் திறத்தால் மேன்மையுற்றனர். பின் தாய்நாடு திரும்பினர். செந்தமிழ்ப் புலவர் மறைத்திரு. கணேசய்யர் மாணவராய்ப் புலமையுற்றனர். சுன்னாகத்தில் தனலக்குமி புத்தகசாலையொன்று நிறுவினர். திருமகள் அழுத்தகமும் அமைத்தனர். சர். பொன்னம்பல இராமநாதர் பெயர் நினைவாய் ஈழகேசரி என்னும் தண்டமிழ்க்கிழமைத்தாள் சிறப்புற நடத்தினர். திரு. சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் நினைவுக்குறியாய்த் தொல்காப்பியத்தை அழகுறப் பதித்து வெளியிட்டனர். பல தமிழ் நூல்கள் வெளிவருவதற்கு இவர்களே பெருங்காரணர். பல்லாற்றானும் தமிழ்ப்பணியே புரிந்து தம் ஐம்பத்தொன்பதாம் அகவையில் பூதவுடம்பை விடுத்துப் புகழுடம்பை நிறுவினர்.

இவர்தம் ஆவி, ஆண்டான் அடியிணைக்கீழ் இன்புற்று அமைதியுறுவதாக. இவர்தம் அரிய மனைவியார்க்கும், அன்பும் அருமையும் ஒருங்கமைந்த ஒரே ஒரு மகளார்க்கும் எங்கள் பரிவு உரிமையாகுக.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு ௨௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௨, ஆடி | பரல் ௧௨
ஆகஸ்ட், 1951

# தமிழ் எழுத்து மாற்றம்

தமிழெழுத்துச் சீர்திருத்தம் என ஒரு பொருந்தாக் கொள்கையை அரசியலார் மக்கள்மேல் திணித்துள்ளனர். பன்னூறாண்டுகளாகத் தன்னிற் செம்மையுற்று உலக வழக்கினும் நூல் வழக்கினும் ஒப்ப உலவிவரும் தமிழெழுத்துக்களை வரிவடிவில் மாற்றம் செய்யவேண்டிய இன்றியமையாமை என்னென வுன்னவு முடியவில்லை. செய்தித்தாள்களுக்கும் கைப்பொறி எழுத்திற்கும் சிறிது வாய்ப்பு ஏற்படலாம் என்னும் ஒருசிறு நோக்கங்கொண்டு செய்வதாயின் பரந்துபட்ட தமிழகத்தும் தமிழ்மக்கள் குடியேறி வாழும் இலங்கை, பர்மா, சயாம், மலாயா முதலிய வெளியுலகத்து நிறுவி உள்ள அச்சுக்கூடங்களுக்கும், ஆங்காங்கு உருவாகி அமைந்து பயன்பெற்று வரும் அச்செழுத்துக்களுக்கும், அவ்வெழுத்துக்களைக் கோக்கப் பயின்று வழிவழியாக அச்சியற்றிவரும் அலுவலாளர்கட்கும் எத்துணை அல்லல் ஏற்படும் என்று ஒருசிறிதும் உன்னியதாகத் தெரியவில்லை. மேலும்,

பள்ளிக்கூடங்களில் பயிற்றுவிக்கும் பல்லாயிரக்கணக்கான ஆசிரியன்மார், பயின்ற மாணவர்கள், உலகத்து மக்கள் சீர்திருத்த முறைப்படியுள்ள வெளியீடு முதலியவற்றை யாங்ஙனம் புரிந்துகொள்வர்? அவர்கள் எல்லாரும் துவக்கமுதல் படித்துணர்வதா? அந்தோ! ஏழைத் தமிழகத்து ஆர்வமேலீட்டால் தத்தம் சிறு வருவாயில் மிகநெருக்கிப் பல்லாண்டுகளாகத் தொகுத்த கோடிக்கணக்கான பொருள்மதிப்புள்ள நூல்நிலையங்களில் இருக்கும் நூல்களும், தனிப்பட்டவர்கள் இல்லங்களில் விளங்கும் நூல்நிலையச் சுவடிகளும் பின்னுள்ளார் பயன்பெற வாய்ப்பின்மையால் கொன்னே கழிந்தொழிவனவா? நூல்

களைப் பதிப்பித்து விற்பனையாக்கும் வெளியீட்டாளர்கள் கையிருப்பில் விலைப்படாமலிருக்கும் நூற்களை என்செய்வது? திருத்த முறைப்படி நூற்கள் வெளிவருமேல், பழைய நூற்களை எவர்தாம் வாங்க விரும்புவர்?

தொழில் துறைகளில் அமைத்திருக்கும் விளம்பரப் பலகைகள், நிலையங்கள், இல்லங்கள் முதலியவற்றில் பொறித்திருக்கும் பெயர் வரிசைகள் இவற்றையெல்லாம் மாற்றுவதா? அன்றேல் இருவகை வடிவும் ஒருங்கமைப்பதா? மாற்றுவமேல் பழைமை வரிவடிவு கற்றார்க்குப் புரியாது. ஒருங்கமைப்பதேல் இரட்டிப்புச் செலவாகும். இம்முறையே அழைப்பிதழ், வரவேற்பு முதலியன இருவேறு வடிவிலும் இயங்குதல் இன்றியமையாதன வாகும். இவற்றானெல்லாம் எத்துணை இடர்ப்பாடு வந்து எய்துகின்றதென்பதை மக்களால் ஏற்படுத்தப்பட்டு மக்கட் பொறுப்பினராய் மக்கட்கெனவே மாநிலங்காக்கும் அரசியலார் மனங்கொண்டு ஆழ்ந்து எண்ணுதல் வேண்டும்.

எவ்வகைத் திருத்தமும் பெருமக்களை மேவி அவர் தம் அருங்கருத் தொருப்பாட்டுடன் அமைப்பதே அறிவும் அறமுறையும் ஆக்கமு மாகும். நாட்டுக்கு உயிர்நாடி போன்ற மொழிபற்றிய எனைத்துத் திருத்தத்தும் மொழித்தொடர்புடையார் எல்லாரிணக்கத்தையும் பெற்றிருக்கவேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்.

கல்லூரிகள், பள்ளிக்கூடங்கள், கணக்காயன்மார், எழுத்தாளர்கள், விழுத்தகு புலவன்மார், அச்சகத்தார், அச்செழுத்துருவாக்குபவர், புத்தக வெளியீட்டாளர், விற்பனையாளர் முதலிய அனைவர்களையும் ஆங்காங்கு உசாவுதற்பொருட்டுத் தக்கார் வாயிலாகப் பெருங்கூட்டங்கள் கூட்டுவித்துத் திருத்தத்தால் வரும் நன்மை தீமைகளை நன்றாகநாடுவித்து அதன்மேல் அன்னவர் தம் ஒருங்கியைந்த உளக்கருத்தை ஒன்றுதிரட்டி, பின்னர் அமைதியா யாராய்ந்து வாய்ப்பன செய்தலன்றோ நேர்மையாம்.

மேலும், உண்மையாகவே தமிழர்க்கெனவே தொண்டாற்றி வரும் "தென்னிந்திய தமிழ்ச்சங்கம்," "தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்," "கரந்தைத் தமிழ்ச்சங்கம்," "சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்," போன்ற பல்வேறு சங்கங்களின் கருத்துக்களையும் கால வாய்ப்புக்கொடுத்துத் தெரிந்து தெளிதல்வேண்டும். வணிகத்துறையில்வணிகத்துக்கெனவே அச்சியற்றப்பட்டு உலவிவரும் சுவடிகள், அட்டைகள், மேற்பொதியும் தாள்களில் விளக்கம் பொறித்துள்ள சுற்றுக் கடிதங்கள், மருத்துவர்கள் மருந்துக் குப்பி முதலியவற்றில் ஒட்டும் சீட்டுக்கள், விளக்கங்கள்,

நாட்டாண்மை, நகராண்மை, ஊர்மன்றம் முதலியவற்றில் வழங்கிவரும் ஊர்ப்பெயர் தெருப்பெயர் பொறித்த பலகைகள், செயன்முறைத் தாள்கள், போக்குவரத்துக்கு வாய்ப்பாகிய பொறியூர்திகளில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள், அவர்கள் பெறும் கட்டணங்களுக்காகக் கொடுக்கப்படும் பற்றுச் சீட்டுக்கள், அட்டைத் துண்டுகள் இவைகள் எல்லாம் மாற்றப்படுவதாயின், அத்துணைப் பொருளிழப்பும் காலக்கழிவும் வீண் இடர்ப்பாடுகளும் நேரும் என்பதை நினைத்தல்வேண்டும்.

பண்டையோர் கைச்சாத்திடும் எழுத்துக்களின் மாறுதல்களினால் ஆவணம் முதலியன பதியும் பதிப்பகங்களிலும், கொடுக்கல் வாங்கல் செய்யும் வட்டிக்கடை முதலிய நிலையங்களிலும், புதிதாக வரும் எழுத்தாளர்களும் அலுவலாளர்களும் எங்ஙனம் கண்டு தெளிந்து வல்விரைந்து தொழிலாற்றுவர். மேலும் அரசியல் முறைகள் நாட்டு மொழியாகிய தாய் மொழியிலேயே நடக்கவேண்டியது கடமையும் முறைமையுமாக விருப்பதால் சீர்திருத்தப்படிக்குள்ள கட்டளைகளை முதியவர்கள் எப்படி உணர்ந்துகொள்வார்கள். ஒலிவடிவுக்கேயன்றி வரிவடிவுக்கும் இலக்கணமுண்டு. அஃதென்னைவது?

சித்திரகவிப் புலவர்கள் வரிவடிவுகளையே பொருளாக வமைத்துப் பல செய்யுட்கள் பாடியுள்ளார்கள். இப்பொழுது சிலர் கருதுவதுபோன்று வரிவடிவுமாற்றமுறுமேல் அச் செய்யுள்களுக்கெல்லாம் பொருள் காண்பது எங்ஙனம்?

இப்பொழுது சென்னைமாகாண அரசியல் தனித்தமிழர் அரசியலாக இல்லையென்பது வெளிப்படை. தெலுங்கர், மலையாளர், கன்னடர் முதலியோர் சேர்ந்த மொழிக்கூட்டு அரசியல். இந்நான்மை மொழிக்கூட்டில் ஏனைமொழியாளர்கள் கொள்ளாத, ஏனைமொழிகளைச் சீர்திருத்தவுன்னாத நிலையில் தமிழ்ச் சீர்திருத்தத்திற்குமட்டும் இத்துணை விரைவு ஏனோ? மக்களை மதித்துமக்கள் மதிப்பைப் பெறுவதன்றோ மாண்பாகும்.

அஃதன்றி இவ்வாறு எண்ணாது செய்யுஞ் சீர்திருத்தங்கள் மொழிவளர்ச்சிக்கு நன்மை தருவதற்கு மாறாக அத்துறையிற் பெரியதோர் குழப்பமான சூழ்நிலையையே தோற்றுவித்துத் தீமையே விளைவிக்குமன்றோ? எனவே, அரசினர் மீண்டும் நன்கு சிந்தித்து இத்தகைய அரைகுறைத் திருத்தங்களால் தமிழ்மொழி வளர்ச்சியினை மேலுந் தடை செய்யாதிருத்தலே நேர்மையாகும்.

தமிழன்பர்களனைவரும் இதனை வலியுறுத்தித் தங்கள் கருத்தினை அரசினர்க்கறிவித்து ஆவனசெய்ய வேண்டுகின்றோம்.

**கழகப் புலவர், ப. இராமநாத பிள்ளை,**

தமிழ் வாழ்க

# தமிழ் எழுத்துச் சீர்திருத்தம்

[கா. அப்பாத்துரை, எம். ஏ. எல். டி., விசாரத்.]

தமிழ் எழுத்தைச் சீர்திருத்த வேண்டும் என்று சிலநாளாக இரண்டு மூன்று பத்திரிகைகளும் அவற்றின் ஆதரவாளரும் பிரசாரம் செய்து வந்துள்ளனர். இவற்றுள் திராவிட கழகப் பத்திரிகையாகிய 'விடுதலை' குறிப்பான சில திருத்தங்களைச் செயல் முறையில் கையாண்டு காட்டி வருகிறது. மற்றொரு பத்திரிகை. ஆங்கிலப் பத்திரிகையாகிய 'மதராஸ் மெயில்.' இதன் குறிக்கோள் தமிழ் எழுத்தைச் சீர்திருத்துவதன்று. ஆங்கில எழுத்து என்று கூறப்பட்டுவரும் உரோம எழுத்தைத் தமிழில் மேற்கொள்வது. மூன்றாவது பத்திரிகை சுதேசமித்திரன். இது சில எழுத்துமாறுபாடுகளுடைய ஒரு புது இயந்திரத்தை வரவழைத்துக்கொண்டு, அதன் எழுத்தைப் பரப்புவதன்மூலம் தன் தொழிலாதிக்கத்தை நாட்ட எண்ணுகிறது. அதோடு அப்பத்திரிகையைச் சார்ந்த குழுவே அந்த இயந்திரத்தின் இறக்குமதி உரிமையை வைத்துக்கொண்டிருப்பதால், இச்சீர் திருத்தத்தின்மூலம் தமிழக வாழ்வின்மீது புறத்துறைகளிலும் ஏகபோக உரிமைபெற அக்குழு திட்டமிடுகிறது.

அரசியலார் புதிய சீர்திருத்தமொன்றை நடப்புக்குக் கொண்டுவந்து வலியுறுத்தப்போவதாகவும், அதில் 91 எழுத்தே இருக்கும் என்றும் அறிவித்துள்ளனர். இச்சீர்திருத்தம் உண்மையில் மேற்கூறிய மூன்றில் சுதேசமித்திரன் நாடித்துடிப்புடன் எதிர்பார்த்திருக்கும் சீர்திருத்தமே. அது தமிழர் எழுத்துமுறையை மட்டும் சீர்திருத்துவதல்ல. தமிழர் வாழ்விலேயே ஒரு சிறு முதலாளித்துவக் குழுவுக்கு ஏகபோக உரிமை வாங்கிக் கொடுத்து, அவர்கள் கையில் தமிழகத்தின் கழுத்தை ஒப்படைக்கும் திட்டம் என்று கூறத்தேவையில்லை.

மற்ற இரண்டு பத்திரிகைகளும், நோக்க வேறுபாடு உடையவையாயினும் பொதுமக்கள் மனத்தைக் குழப்பிச் சுதேசமித்திரன் சுரண்டல் ஏகபோகக் கொள்கைக்குத் தெரிந்தோ தெரியாமலோ, தன்னலம் பேணியோ, பேணாமலோ மக்களைத் தூண்டுபவையாக உள்ளன. எனவே, தமிழ்மக்கள் முன்னிலையில் இதுபற்றித் தமிழ்ப்புலவர் சார்பிலும் தமிழன்பர் சார்பிலும் எம் எச்சரிக்கையைத் தெரிவிக்க விரும்புகிறோம்.

## தமிழ் எழுத்தைச் சீர்திருத்த வேண்டுமா ?

உலகில் எழுத்துமுறை உடைய மொழிகள் மிகமிகச் சில. மேனாட்டு மொழிகள் முழுவதற்கும் பெரும்பாலும் ஒரேபொது எழுத்து முறைதான் உண்டு. அது இலத்தீன் எழுத்து முறை. வட இந்திய மொழிகள் அனைத்துக்கும் ஒரே பொது எழுத்து முறைதான் உண்டு. இதுவும் தமிழைப் பின்பற்றிக் கிரந்தம் என்ற வழியில் அதன் திரிபாகிய நாகரி வடிவில் திகழ்கிறது. எனவே, உலகில் தமிழ்மொழி ஒன்றுக்குத்தான் இன்று தனக்கெனத் தனி எழுத்துமுறை உண்டு. இம்முறை ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முற்பட்டதானாலும், இன்றும் உலகின் தலைசிறந்த எழுத்துமுறை ஆகவே கருதத் தகுதி உடையதாயிருக்கிறது. மெயில் பத்திரிகை குழுவப்பார்க்கும் மேனாட்டு (ஆங்கில) எழுத்துமுறை இதற்கு ஒருசிறிதுகூட ஈடல்ல. ஏனெனில் அது தமிழைப்போல ஒரு எழுத்துக்கு ஒரு ஒலி, ஒரு ஒலிக்கு ஒரு எழுத்து என்ற திட்டமோ, எழுத்து ஒழுங்குமுறையோ உடையதல்ல. உண்மையில் உலக எழுத்து முறைகளில் கடைகெட்ட காட்டுமிராண்டி எழுத்துமுறை ஆங்கில எழுத்துமுறையே என்பது உலக மொழி அறிஞர்கள் திரண்டகருத்து.

இவ் வெட்கங்கெட்ட நிலையை மாற்றும் எண்ணத்துடனேயே காலஞ்சென்ற அறிஞர் பெர்னார்ட்ஷா, ஆங்கில எழுத்துச் சீர்திருத்தத்துக்கு என நூறாயிரம் பொன்னுக்குமேல் வைத்துச் சென்றிருக்கிறார்.

தமிழ் எழுத்துமுறை வடநாட்டின் மொழிகளுக்குப் பொது எழுத்து முறையான வடஎழுத்து முறையைவிட எல்லா வகையிலும் மேம்பட்டது. தமிழில் தனி எழுத்துக்கள் 31. கூட்டெழுத்துக்களைக் கணக்கிட்டு உட்படுத்தினால் இத்தொகை 247. ஆனால் அச்சுக்கான உருவங்கள் இவற்றுக்கு 127 போதும்.* இதற்கு நேர்மாறாக வடமொழி, இந்தி, வங்காளி, ஆகிய வடபால் மொழிகளிலும், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய தென்பால் தமிழின மொழிகளிலும் இத்தொகை ஆயிரத்துக்கு மேற்படுகின்றன.† ஆங்கிலத்தில் கூட அச்சு பெரிது 26, அச்சு சிறிது 26, இத்தாலியக் கையெழுத்து பெரிது 26, கை சிறிது 26 என 104 எழுத்துக்கள் உள்ளன. அச்சிலும் இவை தேவைப் ப...

* உயிர் 12. மெய்ஒற்று 18. ஆய்தம் 1. ஒற்று நீங்கிய மெய் அச்சு வடிவம் 18; ா, ெ, ே, ை ஆகிய உருக்கள் 4; உயிர்மெய் ி, ீ, ு, ூ வடிவங்கள் 72; ணா, றா, னா, ணை, லை, ளை, னை ஆன 7—ஆக 127.

† உயிர் 16, மெய் 53, உயிர்மெய் 548, கூட்டெழுத்து ஆயிரக் கணக்கில்.

எனவே, தமிழ் எழுத்துமுறை சீர்திருத்தக்கூடியதாயிருக்கலாமாலும், பிற எந்த மொழியின் சீர்திருத்த அவசியத்தையும்விடக் குறைந்த சீர்திருத்த அவசியம் உடையதேயாகும் என்பது ஒருதலை. இன்று வட இந்திய மொழிகளின் சீர்திருத்தத்தை எந்த அரசாங்கமும் மேற்கொள்ளவில்லை. சென்னை அரசாங்கம்கூட, தன் ஆட்சியில் உள்ள பிற தென்பாலைய மொழிகளைத் தமிழினும் சீர்கேடுடைய நிலையில் வைத்துக் கொண்டே தமிழை மட்டும் சீர்திருத்த விரைகின்றது என்பது காணத்தக்கது. இதுவரை மொழிவாரி மாகாணம், கல்விக் கொள்கை, ஆகிய எதிலும் தமிழகத்தின் பெயரைக்கூடத் தீண்ட முடியாத ஆட்சியாளர், இந்த ஒரு துறையில் மட்டும் தமிழகத்தைத் திருத்தக் கச்சைகட்டி விரைவானேன்? இதில் ஏதோ 'சோழியன் குடுமி'யின் சூழ்ச்சி இருக்கிறது எனத் தமிழர் எண்ணாமலிருக்க முடியுமா?

## உண்மைச் சீர்திருத்தம் யாது?

தமிழின் தனி எழுத்துக்கள் 31 மட்டுமே. இவற்றுக்குத் தமிழ்ப் பண்பை ஒட்டித் தனி வடிவு வகையறுத்துவிட்டால், அச்சீர்திருத்தம் சீர்திருத்தம் மட்டும் அல்ல, பழந்தமிழ்ப் பண்புமாகும். உலக மொழிகளில் தமிழ் இருப்பதைவிடச் சிறப்புப்பெறும்.

அத்துடன் காலஞ்சென்ற பா. வே. மாணிக்க நாயக்கர் சுட்டியபடி குறுகிய உ, குறுகிய மகரம் ஆகியவற்றைச் சேர்த்தால் தமிழுக்கு மட்டுமன்றி உலக மொழிகளனைத்துக்குமாகிய தலைசிறந்த எழுத்துமுறை அமையும்.

தமிழ்ப்பற்றுடைய, தமிழறிவும், வரலாற்று மொழியாராய்ச்சியறிவும் உடைய தமிழர் முனைந்தால் இத்தகு சீர்திருத்தம் நிறைவேறலாம். அத்தகையோர் பக்கம் அரசியலின் பாசம் திரும்புமா?

## சீர்திருத்தம் செய்யும் தகுதியுடையவர் யார்?

தமிழ் சார்ந்த எந்தச் சீர்திருத்தத்திலும் முதல் தகுதியும் முதல் உரிமையும் உடையவர் தமிழ்ப் புலவர்களே யாவார்கள். தமிழ்ப் புலவர் மாநாடு கூட்டி, தலை சிறந்த தமிழ்ப்புலவர் தலைவரும் தமிழகத் தலைவருமான (காலஞ்சென்ற) மறைமலை யடிகளார், உயர்திரு. சோமசுந்தர பாரதியார், தமிழ்ப் பெரியார் திரு வி. க. ஆகியவர்கள் தலைமை அல்லது முகமையில் இது நடத்தப்பட்டிருக்கவேண்டும். ஆனால், இச் சீர்திருத்தத்தில் முனைந்த

வர்களில் தமிழ்ப்புலவர் மருந்துக்குக்கூடக் கிடையாது. தமிழறிவிலும் தமிழ்ப் பற்றிலும் பிற்பட்டவரோ இதனைத் தூண்டினர் என்றால் தவறாகாது. ஏனெனில் தமிழகத்தின் தலைசிறந்த புலவரேறு மறைத்திரு. மறைமலையடிகளார் உயிருடன் இருக்கும்போதே அவர் தலைமையின்றியும் அவருடன் கலவாமலும், அவர் கருத்துரை கோராமலும் அவர் சீடர்கள் எவரின் ஒத்துழைப்பு மில்லாமலும் செய்யப்பட்ட சீர்திருத்தமே இது

அதுமட்டுமா? நாவலர் சோமசுந்தர பாரதியாரால் கண்டிக்கப்பட்ட சீர்திருத்தம்—தமிழ்ப்பற்றிலும் தமிழகப்பற்றிலும் தலைசிறந்த கட்சித் தலைவருள் ஒருவரான கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் வன்மையாக எதிர்த்துவரும் சீர்திருத்தம் இது.

தமிழுக்காக உழைத்த, உழைத்துவரும் தலைசிறந்த சங்கங்களுள் ஒன்றேனும் இதில் கலந்து கொள்ளாதது குறிப்பிடத்தக்கது. கரந்தைத் தமிழ்ச் சங்கம், தென்இந்திய தமிழ்ச்சங்கம், தமிழ்ப் பாதுகாப்புச் சங்கம் முதலியவற்றின் பெயரில்லாத தமிழ் இயக்கம் தமிழர்களின் இயக்கம் அல்ல என்று கூற வேண்டுமா? இவையன்றி மதுரைத் தமிழ்ச்சங்கம், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேராசிரியர் ஆகியவர்கள் கருத்துரைகளும் கோரவே படவில்லை.

எழுத்துச் சீர்திருத்தத்துக்கென்று தனிமாநாடு கூட்டி, அதன் உட்கூறாகப் புலவர் மாநாடுகள், தமிழர் மாநாடுகள், அச்சக உரிமையாளர், தொழிலாளர் மாநாடுகள் முதலியவற்றின் கருத்தறிந்தும், தமிழ்ச்சங்கங்களின் பேராட்கள் கலந்தும் செய்யப்படும் சீர்திருத்தந்தான் தமிழகத்தால் வரவேற்கத் தக்கது.

இறுதியாகத் தமிழொடு பிறமொழி நாடுகளடங்கிய சென்னை அரசியல் தமிழ்மீதுமட்டும் இத்தாக்குதல் 'ஏன்? ஏன்? ஏன்?' என்று தமிழகம் கேள்விக்குரல் முழக்கக் கடமைப் பட்டுள்ளது.

# வளமிகு செல்வம்

[நாஞ்சில், கா. கணபதி.]

(1) அன்பினைக் குழைத்துச் சேர்த்து
அறிவினைத் தேக்கி நாளும்
துன்பினை வராமல் இன்சொல்
தோய்ந்திடு மழலைப் பேச்சால்
இன்பமே துளித்துச் சேர்க்கும்
எழில்மிகு குழந்தைச் செல்வம்
மன்பதைச் செல்வம் என்றால்
மற்றுமொன் றுண்டோ வம்ம !

(2) காகத்தை அழைக்கும் போதிற்
கரும்பென உருக்கும் தேறல்
ஆகத்தை நனைக்கும்; அங்கை
அலகிட்டு அடித்துக் கொஞ்சி,
ஊகத்தைத் திகைக்க வைத்து
ஒருதனி அழகாய் நின்று
மாகத்து மதிகைக் கேட்கும்
மகிழ்வினை ஒப்ப துண்டோ !

(3) வாழ்க்கையில் வரையாச் செல்வம்
வருந்தைதந் தினிக்கும் செல்வம்
வாழ்வுக்கோர் வரையாச் செல்வம்
வறுமையு மறியாச் செல்வம்
வாழ்க்கையே மணக்கும் செல்வம்
வளரொளி பரப்பும் செல்வம்
வாழ்க்கையை உணர்த்தும் செல்வம்
வரவென வாராச் செல்வம்.

(4) வாழ்வினை வளர்க்கும் செல்வம்
வையகம் போற்றும் செல்வம்
ஆழியிற் பெரிய செல்வம்
அன்புசேர் பண்புச் செல்வம்
வாழியென் றேத்தும் செல்வம்
வாளொளி வார்க்கும் செல்வம்
வாழியின் அமுதச் செல்வம்
"வளமிகு குழந்தைச் செல்வம்."

# பாண்டியன் சடில பராந்தகன்

[சித்தாந்த கலாநிதி, ஔவை சு. துரைசாமிப் பிள்ளை]

சங்க இலக்கிய காலத்துக்குப்பின் பாண்டிநாட்டில் களப்பிரர் என்றொரு கூட்டத்தார் வடநாட்டிலிருந்து கங்கநாடு கொங்கு நாடுகளின் வழியாகப் பாண்டி நாட்டிற் புகுந்து பாண்டி நாட்டின் தமிழ்ப் பண்பாட்டைச் சீர்குலைத்தனர். பண்டு தொட்டே சிவநெறியில் சிறந்து நின்ற பாண்டிவேந்தர் குடிமரபில் வேற்று நெறிகள் புகுந்தன; தமிழ் நூல்கள் பல அழிந்தன; தமிழியலும், தமிழ் இசையும் தமிழ் நாடகமும் தலைதடுமாறின; தமிழ் வல்ல சான்றோர் மறைந்தனர்; இந்நிலையைக் கூற வந்த **பாண்டியர் வரலாறு** என்னும் நூலுடையார், "இக்களப்பிரரது படையெழுச்சியினால் மதுரைமாநகரில் தமிழாராய்ச்சி செய்துகொண்டிருந்த கடைச்சங்கமும் அழிந்துபோய்விட்டமை அறியத்தக்கது; களப்பிரர் ஆட்சியால் ஏற்பட்ட தீமைகளுள் இதனினும் கொடியது வேறில்லையென்று கூறலாம்; எனவே, இவர்களது ஆட்சிக்காலம் ஓர் இருண்ட காலமாகும்," (பக். 37) என்று மனங்கரைந்து கூறுவது அறிஞர்கள் அறியவேண்டியதொன்று.

செந்தமிழ்ப் பாண்டி வானத்தில் புதிது பரவிய களப்பிர இருளைக் கிழித்துக்கொண்டு பலர் புகழ் தமிழ் ஞாயிறு தோன்றுங் காலத்தைத் தமிழகம் எதிர் நோக்கித் தவங்கிடந்தது. கி.பி. நான்காம் நூற்றாண்டில், பண்டைத் தமிழகத்தின் இருள் கடிந்து எழுதரும் ஞாயிறுபோலப் பாண்டி வேந்தர் சிலர் தோன்றிப் பாண்டியரது பண்டைப் புகழை நிலைநாட்டுவாராயினர். இறைவன் விழி மூன்றினுள் பாண்டியர் நெற்றி விழி போலும் மேன்மையுடையரென்ற கருத்துப்படக், "கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப் பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல, வேந்து மேம்பட்ட பூந்தார் மாற," (புறம்: 55) என்று சங்ககாலச் சான்றோர் கூறுவது காணலாம்.

களப்பிரர்க்குப் பின்பு தோன்றிய பாண்டி வேந்தருள் கடுங்கோன் என்பவன் தலைசிறந்தவனாவன். மதுரையிலிருந்து முதற்சங்கத்தைப் புரந்த பாண்டி வேந்தருள் கடுங்கோன் என்பான் ஒருவன் உண்டு. அவன் கிறித்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டு முன்பிருந்தவன். இக்கடுங்கோன் கிறித்து பிறந்தபின் நான்கு நூற்றாண்டு கழிந்து தோன்றியவன். சிலர் இருவரையும் ஒருவனாகக்கொண்டு தடுமாறுவர்; உண்மையறிவாராய்ச்சியுடையோர் அவர் கூற்றைக்கொள்ளமாட்டார்கள்.

களப்பிரரது கலியிருள் கடிந்த கடுங்கோன் மிக்க சிறப்புடையவன்; அவனை வேள்விக்குடிச் செப்பேடுகள்,

> "களப்பிர னென்னும் கலியரசன்
> கைக்கொண் டதனை இறக்கியபின்
> படுகடல் முளைத்த பருதி போல்
> பாண்டி யாதிராசன் வெளிப்பட்டு
> விடுகதிர் அவிரொளி விலக வீற்றிருந்து
> வேலை சூழ்ந்த வியலிடத்துக்
> கோவும் குறும்பும் பாவுடன் முருக்கிச்
> செங்கோ லோச்சி வெண்குடை நீழல்
> தங்கொளி நிறைந்த தாரணி மங்கையைப்
> பிறர்பா லுரிமை திறவிதி னீக்கித்
> தன்பா லுரிமை நன்கனம் அமைத்த
> மானம் போர்த்த தானை வேந்தன்
> ஒடுங்கா மன்னர் ஒளிநகரழித்த
> கடுங்கோன் என்னும் கதிர்வேல் தென்னன்,"

என்று சிறப்பித்துக் கூறுகின்றன.

இக்கடுங்கோவின் வழிவந்த வேந்தருள் அரிகேசரி பராங்குசவன்மன் என்பவன் ஒருவனாகும். அவன் அக்காலத்தே கங்கநாட்டை யாண்ட வேந்தன்மகள் பூசுந்தரி என்பவளை மணந்துகொண்டான். அவனுக்கு அவள் வயிற்றிற் பிறந்தவன் நம் சடில பராந்தகன். இவனுக்கு நெடுஞ்சடையன் பராந்தகன் என்றும் பெயர் வழங்குவதுண்டு. இவன் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மதுரையில் இருந்து ஆட்சி செய்தான்.

இப் பராந்தகனுக்கு முன்னும் பின்னும் வந்த பாண்டி வேந்தர் பலரும் சைவராக இருப்ப, இவன்மட்டும் திருமால்பால் பேரன்பு பூண்டொழுகினான். அந்நாளில் ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழ்ந்த வைஷ்ணவப் பெரியாரான பெரியாழ்வார் இப்பாண்டியனுக்கு ஞானாசிரியராக விளங்கினார். சீவரமங்கலத்துச் செப்பேடுகள் இவனை, "பரம வைஷ்ணவன்" என்று பாராட்டுகின்றன. பெரியாழ்வாரும் திருமாலிருஞ்சோலைப் பதிகத்தில் இப்பாண்டியனைப் பாராட்டிச் சிறப்பித்திருக்கின்றார்.

இவ்வாறு "பரம வைஷ்ணவ"னாக இவ்வேந்தன் விளங்கிய போதும் சைவ சமயத்தின்பால் காழ்ப்பின்றி ஒத்த மதிப்பளித்தொழுகினான். கோயன்புத்தூருக் கண்மையிலுள்ள பேரூருக்குக் காஞ்சிவாய்ப் பேரூர் என்றும் பெயருண்டு. அங்கே சிவபெருமானுக்குக் 'குன்றமன்னதோர்' கோயில் கட்டினான். திருச்சிராப்பள்ளி அம்பாசமுத்திரம் திருச்செந்தூர் முதலிய இடங்களிற் காணப்படும் இவனுடைய கல்வெட்டுக்கள் இவன் அவ்

விடங்களில் சிவபெருமான் திருக்கோயில்கட்கு நிலங்களும் பிற நிவந்தங்களும் விட்டிருப்பதை எடுத்தோதுகின்றன.

ஏனாதி சாத்தஞ் சாத்தனார் என்பவர் இப்பாண்டியற்குத் தானைத் தலைவருள் ஒருவர். அவர் சிறந்த புலமையும் உடையவர். இந்நாளைத் தமிழ்நாட்டு அரசியற் சுற்றத்தாரை நோக்குவோர்க்கு இது புதுமையாகத் தோன்றும். இன்றைய தமிழ்நாட்டரசியல் தமிழைக் கொள்ளாது வேற்று மொழிகளை அரசியல் மொழியாகக் கொண்டுளது. இதனால் தமிழ் தெரியாதவர்கள் தமிழ் மக்களது கல்வியமைச்சராக வர இயலுகிறது; தமது பெயரைத் தமிழில் பிழையற எழுதும் பயிற்சியில்லாதவர்களும் அரசியற் பெருந்தலைவராய் விளங்க இடந்தருகிறது; தமிழ்ப் பயிற்சி மிகவுடையவர்களைத் தாழ்ந்த வாய்ப்புடையவராகவும் இந்நிலை உண்டுபண்ணியிருக்கிறது. முன்னாளைத் தமிழ்நாட்டரசியல் தமிழிலேயே நடந்தமையின் மிக்க தமிழ்ப்பயிற்சி யுடையோர் அமைச்சராகவும் அரசர்களாகவும் இருந்து தமிழ்நாட்டைச் சிறப்பித்தனர். திருவாதவூரர் பாண்டி வேந்தர்க்கு அமைச்சராயிருந்தவர்; சேக்கிழார் சோழவேந்தர்க்கு அமைச்சுக் கடம்பூண்டிருந்தவர். வேந்தர்கள் புலமை மிகவுடையராயிருந்த செய்தியைச் சங்க இலக்கியங்களும் பிற்கால நைடதம் முதலிய நூல்களும் தெரிவிக்கின்றன. ஆகவே நெடுஞ்சடையன் ஆட்சியில் தானைத் தலைவருள் ஒருவராயிருந்த ஏனாதி சாத்தஞ் சாத்தனார், நல்ல தமிழ்ப்புலமையும் பாவன்மையும் பெற்றிருந்தாரென்பது வியப்புக்குரியதொன்றன்று.

ஏனாதி சாத்தஞ் சாத்தனார் பாண்டியன் நெடுஞ்சடையன் ஆட்சிநலத்தைக் கூறவேண்டிய விடத்து,

" அறைகடல் வளாகம் பொதுமொழி யகற்றிச்
சிலையும் புலியும் கயலும் சென்று
நிலையமை நெடுவரை யிடவயிற் கிடாய்
மண்ணளி தாண்ட தண்ணளிச் செங்கோல்
தென்னவன்......
கொன்றவென்றி நெடுஞ்சுடர்வேல்
கொங்கர் கோமான் கோச்சடையன்"

என்றும், இவனுடைய தனிப் பண்புகளை,

" ஸ்ரீவரன் ஸ்ரீமனோகரன் சினச்சோழியன் புனப்பூழியன்,
வீதகன்மஷன் விநயவிச்ருதன் விக்கிரமபாரகன் வீரபுரோகன்
மருத்பலன் மான்யசாசனன் மனுபமன் மர்த்திதவீரன்
கிரிஸ்திரன் கீதிகிந்நரன் கிருபாலயன் கிருதாபதானன்
கலிப்பகை கண்டகநிஷ்டூரன் கார்யதக்ஷிணன்
பராந்தகன் பண்டிதவத்சலன் பரிபூரணன் பாபபீரு
குரையுறு கடற்படைத்தானைக் குணக்கிராகியன் கூடநிர்ணயன்"

என்றும் வரைந்திருக்கின்றார்.

இப்பாண்டியன் ஆட்சியில் பாண்டிநாடு இப்போது மதுரை இராமநாதபுரம் திருநெல்வேலி யென்ற ஜில்லாக்களாகவும் அவையே பின்பு தாலூகாக்களாகவும் பிரிந்திருப்பதுபோல, அரசியல் ஆட்சி இனிது நடத்தற்கேற்ப, இரணிய முட்டநாடு புறப்பறளைநாடு என்பன முதல் தடக்குளநாடு கோட்டூர்நாடு என்பன ஈறாகப் பல நாடுகளாகப் பிரிந்திருந்தது. அவற்றுள் பாகனூர்க் கூற்றம் என்பது ஒன்று. இப்போது அது சோழ வந்தான் பகுதியாக இருக்கிறது. அது மிக்க நீர்வளமும் நிலவளமும் சிறந்தது; வையையாறு பாயும் வளம் படைத்தது. இன்றைக்கும் அப்பகுதி பசுங் கம்பளம் விரித்ததுபோலப் பச்சென்று பயிர் செறிந்து இனிய காட்சி வழங்குகிறது. அப் பகுதியில் வேள்விக்குடி யென்பது ஓர் ஊர். அங்கே வேதியர் குடிகள் நிரம்ப இருக்கும் என்பதை நேரிற் சென்று காணாமலே அறிந்துகொள்ளுமாறு அவ்வூர்ப்பெயரே காட்டி விடுகிறது.

அவ்வூரில் காமக்காணி நற்சிங்கன் என்றொரு வேதியன் வாழ்ந்தான். காமக்காணி என்பது அவன் குடியிற் பிறந் தார்க்கு வழிவழியாகவரும் சிறப்புப் பெயராகும். இதன்மேல் கொற்கை கிழான் என்றொரு பட்டமும் இவன் குடிப்பிறந் தாருக்கு உண்டு. ஒரு நாள் நற்சிங்கன் தன்குடிக்கு வழங்கி வரும் கொற்கை கிழான் காமக்காணி என்ற சிறப்புக்கள் உண் டானதற்குக் காரணம் அறியவேண்டுமென விரும்பித் தன் மனையிலுள்ள பழஞ் சுவடிகளை ஆராய்ந்தான். கொற்கை கிழான் என்பதும் காமக்காணி என்பதும் பண்டை நாளில் அரசர்கள் தந்த சிறப்பு என்றும், வேந்தர்க்கு வேள்விமுடித்துத் தந்தது பற்றிக் காமக்காணி யென்ற சிறப்பும் தொடக்கத்தில் தன்முன்னோர் கொற்கைப் பகுதியில் வாழ்ந்திருந்து பின்பு இப் பகுதியிற் குடியேறினர் என்றும், நாட்டு மக்களின் நலங்குறித் துச் செய்த நற்பணி கண்டு வியந்த பண்டை வேந்தர் தன் முன் னோர்க்குக் கொற்கை கிழான் என்ற சிறப்பை நல்கினரென்றும் அறிந்தான். இவ்வாறு ஒவ்வொன்றாய்ப் பார்த்து வருகையில் வேள்விக்குடி யென்ற ஊர் தனக்கு உரியதென்றும், இடைக் காலத்தே களப்பிரர்களால் அவ்வுரிமை இழக்கப்பட்டதென் றும் கண்டான். 'பண்டொரு புடையில் வைத்த பழம்பொருள் கிடைத்தவர்போல்' பெருமகிழ்வு கொண்டான். அவ்வூரில் வாழ்ந்த முதியவரைக் கண்டு அவர்களோடு அளவளாவி உண்மையை உறுதிசெய்து கொண்டான்.

ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவுமா? உதவாதே; இதற்கு என் செய்வது என்று பலபட எண்ணினான். வேறு சில ரியர்களைக் கலந்து செய்யவேண்டிய செயல்வகைகளை

யாராய்ந்தான். இறுதியாக, வேந்தன்பால் இச் செய்தியை முறையிடுவதெனத் துணிந்தான்.

பின்பொரு நாள், நற்சிங்கன் கூடல்நகர்க்குச் சென்று வேந்தன் கோயில் வாயிலில் நின்று முறையிட்டான். காவலர் சென்று வேந்தனுக்குத் தெரிவித்து நற்சிங்கனையும் மன்னன் திருமுன் கொண்டுசென்று நிறுத்தினர். நெடுஞ்சடையன் நற்சிங்கனை நோக்கி 'என்னை நின்குறை?' எனப் பணித்தான்.

"வேந்தே, நின் முன்னோருள் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி யென்றொரு பாண்டி வேந்தனார் ஆட்சி செய்தார். அவர்வெற்றி மிகுதியும் வேள்வி மிகுதியும் உடையர்; அவர் தன்னை எதிர்த்த மறவரை வென்று கழுதையேர் பூட்டிப் பாழ் செய்த பகைவர் எயில்கள் பல; விளை புலங்களில் தேரைச் செலுத்தி யழித்த பகைவர் நாடுகளும் பல; பகைப் புலத்தில் களிறுகளைப் பாய்ச்சிப் பாழ்செய்த நீருண் கயங்கள் பல; வெற்றிவேட்கையால் விழுங்கப்பட்டுப் போர் குறித்து வந்து அவர்க்குத் தோற்றுப் பழிபூண்ட பகை வேந்தரும் பலர்.

'நெய்ம்மலி ஆவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பல.'

அதனால் நெட்டிமையார் முதலிய சான்றோர் களவேள்வி யும் நான்மறை வேள்வியும் பெருக நடத்துவது கண்டு 'யாபல கொல்லோ பெரும' என்று அவரைப் பாராட்டியுள்ளனர். வெல்போர் வேந்தர்களில் செருக்கள வேள்வி செய்வோர் பல ராயினும், முதுகுடுமிப் பெருவழுதிபோல மறைவேள்வி பல செய்தோர் இலராதலால் அவரைப் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி யெனச் சான்றோர் சிறப்பித்து வழங்கினர். அவ் வேந்தர் பெருமானார் பாகனூர்க் கூற்றத்தில் வேள்விக்குடி யென்னும் ஊர் இருக்குமிடத்தே பெரிய வேள்வி யொன்றைச் செய்தார். அக்காலை எம் முன்னோருள் கொற்கை கிழான் நற் கொற்றன் என்பார் அவ் வேள்வியை முடித்துத் தந்தார். அத னால் பெருமகிழ்வு கொண்ட வேந்தர் பெருமான் வேள்வி நிகழ்ந்த விடத்தை வேள்விக்குடி யென்று பெயரிட்டு வழங்கி யருளினார். அன்றுமுதல் அவ்வூர் எங்கள் முன்னோர்க் குரிய தாகவே இருந்து வந்தது," என்றான்.

இதனை,

"கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந் தவிர்த்துப்
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி யென்னும் பாண்டியாதி ராசன்
நாகமாமலர்ச் சோலை நளிர்சினை மிசை வண்டலம்பும்
பாகனூர்க் கூற்றமென்னும் பழனக் கிடக்கை நீர்நாட்டுச்

சொற்கணுளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம் பிழையாத
கொற்கை கிழான் நற்கொற்றன் கொண்ட வேள்வி முற்றுவிக்கக்
கேள்வி யந்தணுளர் முன்பு கேட்க என்றெடுத்துரைத்து
வேள்விச்சாலை முன்புநின்று வேள்விக்குடியென்ற பதியைச்
சீரொடு திருவளரச் செய்தார், வேந்தன் அப்பொழுதே
நீரோட்டிக் கொடுத்தான்,''

என்று வேள்விக்குடிச் செப்பேடு கூறுகிறது.

இவ்வாறு நற்சிங்கன் கூறக் கேட்ட நெடுஞ்சடையன் அவனை நோக்கி, 'பின்பு அது என்னாயிற்று?' என்று வினவினான்.

"வேந்தே, நற் கொற்றனுர் பெற்ற வேள்விக்குடி அவர்க்குரியதாகவே நெடுங்காலம் இருந்து வந்தது. பின்னர் இந்த நாட்டில் களப்பிரர் என்னும் கொடுங்கோன் மன்னர் புகுந்து பாண்டிநாட்டை அலைத்தனர்; பாண்டி மன்னர்களையும் நாட்டினின்றும் ஓடுமாறு துரத்தினர்; நாட்டைத் தாம் கைக்கொண்டு நாட்டு மக்கட்குப் பேரின்னலை விளைத்தனர். பேரூர்களையும் சீறூர்களையும் தீக்கிரையாக்கினர். மற மிக்க மக்கள் பலர் மாண்டனர்; மறக்குடி மகளிர் தீப்புகுந்தனர். கடவுள் நிலையங்களும் கல்வி நிலையங்களும் சீரழிந்தன. வெளிநாட்டார் புகழும் வீறுபெற்றிருந்த தமிழ்மக்கள் ஒளியிழந்து குன்றினர். பண்டை வேந்தர்கள் பாணர் கூத்தர் புலவர் அந்தணர் என்ற இவர்கட்கு நல்கியிருந்த ஊர்களை அரசியலிற் சேர்த்துக் கொண்டு, அவ்வேந்தர் பெற்றிருந்த புகழ் விளக்கத்தை மங்குவித்தனர். தத்தம் மனைகளிலிருந்து மானமுடன் வாழ்க்கை நடத்திய மக்கள் மானமிழந்து மனைதோறும் இரந்துண்டு வாழும் வறுமைநிலை எய்தப் பண்ணினர். அதனால் என் முன்னோனை நற்கொற்றன் பெற்ற வேள்விக்குடி அரசியலில் சேர்ந்துவிட்டது,'' என்று நற்சிங்கன் எடுத்துரைத்தான். சடில பராந்தகன் உள்ளத்தில் களப்பிரர்பால் பெருவெறுப்பும் ஏனை அந்தணர் முதலியோர்பால் கழிபேரிரக்கமும் பெருகின. பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து தான் காக்கும் பாண்டி நாட்டிற்குப் பகைவர் செய்த தீங்கினைக் கேட்க உள்ளம் பதறிற்று. உடனே 'மறையோய் நீ உனக்கு உற்றதைச் சுருங்கச் சொல்லுக,' என்றான். நற்சிங்கன், அஞ்சி,

" ஒல்காத வேற்றானையோடு ஓதவேலியுடன் காத்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி யெனும் பரமேசுரனால்
வேள்விக்குடி யெனப்பட்டது கேள்வியிற் றரப்பட்டதனைத்
துளக்கமில்லாக் கடற்றானையாய், களப்பிரரால் இழக்கப்பட்டது,''

என்று விண்ணப்பஞ் செய்தான்.

கேட்ட நெடுஞ் சடையன் முறுவலித்து, 'நன்று நன்று' எனத் தலையசைத்து 'நீ சென்று பாகனூர்க் கூற்றத்து நாட்டவர் கூடிய மாநாட்டில் நினக்குரிய கிழமையைக் காட்டுக,' என்று கட்டளையிட்டுப் பாகனூர்க் கூற்றத்து நாட்டவரை மாநாடு கூடுமாறு பணித்தான். நற்சிங்கனும் நாடு கூடுமாறு விண்ணப்பஞ் செய்து கொண்டான்.

பாண்டி நாட்டுப் பாகனூர்க் கூற்றத்து நாட்டவர் சின்னாட்குப் பின் கூடினர். கூடின மாநாட்டுப் பேரவையில் காமக்காணி நற்சிங்கன் பழம் பொத்தகங்களையும் சான்று கூறும் முதுவர்களையும் கொணர்ந்து காட்டினன். நாட்டவர் ஆராய்ந்து நற்சிங்கன் கூறியது உண்மையெனத் தேர்ந்து வேந்தனுக்குத் தெரிவித்தனர். வேந்தன் ஏனாதிச் சாத்தஞ் சாத்தனார் முதலிய தானைத் தலைவர்களைக் கூட்டி ஆராய்ந்து முடிபு செய்து, 'மேனாள் எம் குரவரால் தரப்பட்டதனை எம்மாலும் தரப்பட்டது,' என்று செம்மாந்து எடுத்துரைத்துக் கொற்கை கிழான் காமக்காணி நற்சிங்கற்கு நீரோட்டிக் கொடுத்தான்.

இச் செயல் பின்னர்ச் செப்பேட்டில் வரையப்பட்டது. அக்காலப் பாண்டியருடைய மெய்க்கீர்த்தியை வடமொழியில் சருவகிருது யாஜ்யாகிய வரோதய பட்டரும் எஞ்சிய பகுதிகளைத் தமிழில் ஏனாதி சாத்தஞ் சாத்தனாரும் எழுதித்தந்தனர். இஃது இப்போது வேள்விக்குடிச் செப்பேடு என வழங்கு

வேள்விக்குடிச் செப்பேடு பெற்று அதன் வழியாகத் தன் முன்னோர் பெற்ற செல்வத்தை மீட்பித்த சுவரன்சிங்கன் தான் பெற்றதனைத் தானே மேற்கொள்ளாது தன் உடன் பிறந்தார்க்கும் பிறர்க்கும் பகுத்தளித்தான். பெற்றதனை முதலில் அவன் மூன்று கூறு செய்து ஒரு கூற்றைத் தனக்கு வைத்துக் கொண்டு ஏனை இரு கூறுகளை ஐம்பது வேதியர்க்கு நீரோட்டிக் கொடுத்தான். தனக்காக வைத்த ஒரு கூற்றிலும் தம்பிமார்க்கு நான்கும் தன் சிற்றப்பனார் மக்களுக்கு ஆறுமாகப் பங்கு செய்துதந்தான். இறுதியிலும் மூன்று கூற்றுரும் ஒன்று கூடி இச் செப்பேட்டு வக்கணையைச் செவ்வையாய்ப் பாடித் தந்த ஏனாதி சாத்தஞ் சாத்தனார்க்கு நான்கு படாகாரம் (நில வளவு வகை) நிலம் கொடுத்துச் சிறப்பித்தனர். இச்செய்தி முற்றும் வேள்விக்குடிச் செப்பேட்டில் நன்கு தெளியக் காணப்படுகின்றன. (Epigraphica Indica. Vol. XVII. No. 16. pp 291—309.)

# கவிமணி கண்ட பண்டிதமணி

## உண்மைப் புலவரின் உயர்வு

முதுபெரும் புலவர் பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்களைக் கவிமணி திரு. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் உளமுவந்து பாராட்டிய ஒண்மையுரை. அஃது, உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாய்த் திகழ்கின்றது. பாக்கள் வெண்பா ஒன்பதும், விருத்தப்பா ஆறுமாக விளங்குகின்றன. அவற்றுள் சில காண்க.

"எனக்கு வயது எழுபத்தாறு (76) ஆகிறது. பூரண ஓய்வெடுக்க வேண்டும் என்று மருத்துவர் கூறியுள்ளார். நீத்தல் விண்ணப்ப உரையைப் படிக்கச்சொல்லிக் கேட்டேன். பல தடவையாகக் கேட்க நேர்ந்தது. அவ்வப்போது சிலசில பாடல்கள் தோன்றின. அவற்றை அப்படியே எழுதியனுப்பி யிருக்கின்றேன். தாங்கள் இப்பணியில் ஈடுபட்டிருப்பது தமிழ்நாட்டின் பாக்கியமேயாகும். இம்மாதிரியான விளக்கவுரை எழுதுவதற்குத் தங்களைத் தவிர வேறொருவர் இக்காலத்தில் இல்லையென்பது என் உண்மையான அபிப்பிராயம்."

## ஒண்மைப் பாக்கள்

க. பண்டிதர் போற்றுமகா பண்டிதா! நின்னையெதிர்
கண்டதுபோ லுள்ளம் களிப்படைந்தேன் - தண்டமிழ்
வித்தகர்க்கு வாய்த்த விருந்தாம் மணிவிளக்கப்
புத்தகமென் கைவந்த போது.

உ. வாசக மெல்லாம் மணிவா சகமாமோ?
காசெல்லாம் காணும்பொற் காசாமோ?—பேசுலகில்
மன்னுமுரை யெல்லாம் மகிபால மாநகரான்
சொன்னவுரைக் கீடாமோ? சொல்.

ங. வண்டமிழ் நாட்டுக்கு வாய்த்த மணிவிளக்கம்
கண்ட கதிரேசன் கண்டதுபோல்—மண்டுபுகழ்
வாதவூர் அண்ணல் மனங்கண்ட மாதவரிப்
பூதலத் துண்டோ புகல்

ச. வித்தகர்க் கமுதாம் நீத்தல் விண்ணப்ப உரையின் பாலுன்
பத்தியின் ஆழம் கண்டேன் பசுந்தமிழ் இனிமை கண்டேன்
புத்தியின் நுட்பங் கண்டேன் புலமையின் வளமுங் கண்டேன்
உத்தம உரைநீ தந்த உரையெனற் கையமுண்டோ.

குறிப்பு: அழுக்காறின்மை அவாவின்மை முதலிய விழுப்பே ரொழுக்கம் பூண்டு உள்ளது உள்ளவாறுரைக்கும் பொய்யாநாவின் மேலோராம் தொன்மைச் சங்க மருவிய சான்றோர் போலவும், அணிமணி மதிக்கும் துணிநாவுடைத் தூயோர்போலவும், 'கவிமணி' யவர்கள் உரைத்த கட்டுரை எல்லாராலும் மகிழ்ந்து பாராட்டி மனங்கொளற்பாலவாம் முழுமணி என்க.—ஆசிரியர்.

# படர்க்கை 'இ' விகுதி

[பண்டித புலவ, வித்துவான், ஞா. தேவநேயன், எம். ஏ.]

தமிழிலுள்ள பெண்பால் விகுதிகளுள் ஒன்றான 'இ' என்பது 'ஸ்திரி' என்னும் வடசொற் சிதைவென்று, 1951 மார்ச்சில் வெளிவந்த மதுரைக் கல்லூரி ஆண்டு மலரில், அக்கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் ரா. கிருஷ்ணமூர்த்தி (B. A., B. O. L., L. T.) அவர்கள் வரைந்துள்ளார்கள் என ஒரு தமிழன்பர் எழுதியுள்ளார். அது "புல்லாவெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" யாயினும், அதனால் பலர் மயக்குண்டிருப்பதாகத் தெரிகின்றதனால், அதற்கு உடனே மறுப்பெழுதாவிடின்,

"பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால்
மெய்போ லும்மே மெய்போ லும்மே"

என்பதற்கிணங்க, அது ஒருகால் எதிர்கால இலக்கண நூலிலும் இடம் பெறலாமென்று கண்டு, இம்மறுப்பை எழுதலானேன்.

மதுரைக் கல்லூரி யிதழில் இகர விகுதியைப் பற்றி வரையப்பட்டுள்ள பகுதி வருமாறு :

"தமிழில் பெண்பால் விகுதி"

"'இ' என்பது தமிழில் பெண்பால் விகுதி என்று கூறப்படுகிறது. உண்மையில் பெண்பால் விகுதி 'இ' அல்ல. அது பெண்பால் விகுதியாயின் 'வில்லி' 'நாற்காலி' முதலியவற்றில் அப்பொருளில் வராதிருப்பதேன்? உண்மை என்னவென்றால், 'இ' என்பது 'ஸ்திரி' என்பதன் சிதைவு. பெரும்பாலும், 'த்தி,' 'ச்சி,' 'ட்டி' என்பவையே பெண்பால் விகுதிகளாக வருகின்றன. இவை 'ஸ்திரி' என்பதன் மாறுபட்ட உருவங்கள் என்பது தெளிவு. முதலில் 'ஸ்திரி' என்பதே பெண்பால் விகுதியாக இருந்து பிறகு அது சிதைந்து 'த்தி' 'ச்சி' 'ட்டி' என்று மாறியிருக்கவேண்டும்.

உ - ம் :

குற + ஸ்திரி = குறத்தி. புலை + ஸ்திரி = புலைச்சி. வெள்ளாள் + ஸ்திரி = வெள்ளாட்டி. வலை + ஸ்திரி = வலைச்சி. வண்ணான் + ஸ்திரி = வண்ணாத்தி. ஆய் + ஸ்திரி = ஆய்ச்சி. பார்ப்பான் + ஸ்திரி = பார்ப்பாத்தி. பிராமண + ஸ்திரி = பிராமணத்தி. ராஜா + ஸ்திரி = ராஜாத்தி. பறை + ஸ்திரி = பறைச்சி. பெண்டு + ஆம் + ஸ்திரி = பெண்டாட்டி. கண் + ஆம் + ஸ்திரி =

சண்ணுட்டி, பொம்மனுட்டி, கம்மனுட்டி என்பவையும் இவ் வாறே வந்திருக்கவேண்டும்.''

இனி இதன் மறுப்பு விளக்கம் வருமாறு :—

தமிழில், ஆண்பால் பெண்பால் விகுதியேற்படாத முது காலத்தில், அதாவது உயர்திணை அஃறிணை என்னும் திணை வேறுபாடு தோன்றாத பழங்காலத்தில், ஒருமைப்பால் பன்மைப் பால் என்னும் இருபால்களே இரு திணைக்கும் பொதுவாக வழங்கி வந்தன. முதற்காலத்திலேயே பகுத்தறிவுள்ளதும் இல்லதும் எனப் பொருள்களைத் தமிழர் இரு பகுப்பாகப் பகுத் திருக்கமுடியாது. நாகரிகமும் அறிவு வளர்ச்சியுமாகிய பண்பா டடைந்த பின்னரே, அவர் அவ்வாறு செய்திருத்தல்வேண்டும். இன்றும், இருதிணைக்கும் பொதுவாகப் பல சொற்களும் விகுதி களும் வழங்கக் காண்கின்றோம். அவை முந்துகால மொழி நிலையைக் காட்டும் எஞ்சு குறிகளாகும்.

எடுத்துக்காட்டு :

சொற்கள்

ஆண், பெண், தாய், தந்தை, பிள்ளை, குட்டி, தான், தாம்.

விகுதிகள்

கத்தரிப்பான்=கத்தரிக்கின்றவன் (உயர்திணை ஆண்பால்)
,, =கத்தரிக்கோல் (அஃறிணை ஒன்றன்பால்)
கண்ணி=கண்ணையுடையவள் (உயர்திணைப் பெண்பால்)
,, =கண்ணையுடையது (அஃறிணை ஒன்றன்பால்)
கொல்லி=கொல்கின்றவன் (உயர்திணை ஆண்பால்)
,, =கொல்கின்றவள் (உயர்திணைப் பெண்பால்)
,, =கொல்கின்றது (அஃறிணை ஒன்றன்பால்)

"இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்
திரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தத்தம் மரபின்
வினையோ டல்லது பால்தெரி பிலவே."

"இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
எல்லாம் நீயிர் நீஎனக் கிளந்து
சொல்லிய அல்ல பிறவும் ஆஅங்கு
அன்னவை தோன்றின் அவற்றொடுங் கொளலே."

என்னும் தொல்காப்பியச் சூத்திரங்கள் (657, 659) இங்குக் கவனிக்கத் தக்கன.

பால் காட்டும் விகுதிகள், இன்று எங்ஙனம் பெரும்பாலும் சுட்டுப்பெயர்களும் அவற்றின் குறுக்கமுங் குறையுமாயிருக் கின்றனவோ, அங்ஙனமே முற்காலத்தும் இருந்தன.

எ - டு : அது - வலது, தனது, உளது, நல்லது.
இது - வெளிது, வலிது, கரிது, புதிது.
உது - விழுது, பழுது, எருது (எருது). மருது.
அவன் - ஆன் - அன் : நல்லவன் - நல்லான் - நல்லன்.
அவர் - ஆர் - அர் : வல்லவர் - வல்லார் - வல்லர்.
இவர் - ஈர் - இர் : (மகளிவர்) - (மகளீர்) - மகளிர்.

இகர உகரவடி விகுதிகள் இக்காலத்துப் பெரும்பாலும் வ[illegible].

தமிழின் அசைநிலைக்காலத்தில் (Monosyllabic or Isolating Stage), சுட்டுச்சொற்கள் விகுதி பெறாமல் சுட்டடியாகவே வழங்கி வந்தன. இன்று வழங்கும் பலவின்பால் அகர விகுதி முந்துநிலையை யுணர்த்தும் அடையாளமாம்.

எ - டு : நல்ல = நல்லவை (பெயர்)
வந்த = வந்தன (வினைமுற்று)

"ஒப்ப நாடி அத்தக வொறுத்தி"

என்னும் புறநானூற்று (10) அடியில், 'அத்தக' என்பது 'அதற்குத்தக' என்று பொருள்படுதலால், அசைநிலைக்காலத் துவக்கத்தில், சுட்டசைச்சொற்கள் எண்ணுணர்த்தாது சுட்டுப் பொருளொன்றே யுணர்த்தி வந்தன என ஊகிக்க இடமுண்டு.

சேய்மை அண்மை முன்மை ஆகிய மூவகையிடங்களையும் முறையே சுட்டும் அ, இ, உ (அல்லது ஆ, ஈ, ஊ) என்பன, அசைநிலைக்காலத்தில் தனிச்சொல்லேயாகவும், அதற்கடுத்த புணர்நிலைக்காலத்தில் (Compounding Stage) தனிச்சொல்லும் கூட்டுச் சொல்லுமாகவும், அதற்கடுத்த விகுதிநிலைக்காலத்தில் (Inflexional Stage) தனிச்சொல்லும் கூட்டுச்சொல்லும் விகுதியுமாகவும், வழங்கி வந்து, இன்று நாலாங்காலமாகிய கொளுவுநிலைக்காலத்தின் (Agglutinative Stage) பிற்பகுதியில், தனிச்சொல்லாய் வழங்குவதொழிந்து ஏனையிருவகையாகவே வ[illegible]ன.

எச்சொல்லும் வேறொரு சொல்லின் விகுதியாக அமைந்தவுடன், தன் சிறப்புப் பொருளை இழந்துவிடும். ஆகவே, சுட்டுச்சொற்களும் விகுதியாயமைந்தபின் தம் சுட்டுப்பொருளை யிழந்து பால்மட்டும் உணர்த்தி நிற்கும்.

ஒருமைக்கும் பன்மைக்கும் வெவ்வேறு விகுதிகள் வகுக்கப்பட்ட காலத்தில், இகரச்சுட்டு ஒருமை விகுதிகளுள் ஒன்றாகக் கொள்ளப்பெற்றது. அன்று ஆண் பெண்பால் வேறுபாடு குறிக்கப்பெறாத காலமாதலால், ஆண்பால் பெண்பால் ஒன்றன்[illegible]ால் ஆகிய மு[illegible]ாலுக்கும் பொதுவாகவே இகரச்சுட்டு

வழங்கத் தலைப்பட்டு, அன்றிருந்து அம்முறையே தொடர்ந்து வருகின்றது. (பெண்மகள் என்னும் மாமூலக்கத்து வழக்கும் பெட்டைப்பையன் என்னும் வடார்க்காட்டு வழக்கும், ஆண் பால் பெண்பால் விகுதியேற்படாத முந்துகால மொழிநிலையை ஊகித்துணர உதவும்.)

எ - டு : விறகுவெட்டி (ஆண்பால்)
மண்வெட்டி (ஒன்றன்பால்)
கயற்கண்ணி (பெண்பால்)
காடைக்கண்ணி (ஒன்றன்பால்)

ஆகவே, இகர விகுதி ஒருமை விகுதியேயன்றிப் பெண் பால் விகுதியன்று. அது ஒரு குறித்த சொல்லில் மேற்கூறிய முப்பாலுள் ஒன்றை உணர்த்துமே யன்றித் தனித்த நிலையில் உணர்த்தாது. கண்ணன் என்னும் ஆண்பாற் சொற்கு நேரான பெண்பாற் சொல், கண்ணள் என்பதே யன்றிக் கண்ணி என்பதன்று. கண்ணுன் என்பது கண்ணன் என்று குறுகு வதுபோலக் கண்ணுள் என்பதும் கண்ணள் என்று குறுகும். வந்தான் என்பதற்கு வந்தாள் என்பது எங்ஙனம் பெண்பாலோ, அங்ஙனமே கண்ணன் என்பதற்கும் கண்ணள் என்பதே நேரான பெண்பாலாம். கண்ணுள் அல்லது கண்ணள் என்று சொல்வதற்குப் பதிலாகக் கண்ணி என்று சொல்வது வழக் கூன்றிவிட்டதனால், இகர விகுதியைப் பெண்பாற் சிறப்பு விகுதி யென்று பலர் மயங்க நேர்ந்துவிட்டது. அவ்விகுதி பெண்பால் விகுதியாயிருக்கக் கூடியதே யன்றிப் பெண்பாலுக்கே யுரிய விகுதியன்று.

'இ'வ் விகுதி 'அள்' விகுதியைவிடப் பலுக்குவதற்கு (உச்சரிப்பதற்கு) எளிதாயும் இன்னிசையுள்ளதாயுமிருத்தலே, அது பெருவழக்காய் வழங்குவதற்குக் காரணமாகும். கண்ணள் கண்ணி என்னும் இரு சொற்களையும் பலுக்கிக் காண்க. இக் காரணம் பற்றியே, தாயைக் குறிக்கும் சொற்களுட் சில 'அள்' விகுதியைவிட்டு 'இ'வ் விகுதியை ஏற்றுள்ளன.

எ - டு : ஆண்பால் (தந்தை)	பெண்பால் (தாய்)
அத்தன்	அத்தி
அச்சன்	அச்சி

அத்தி என்பதொடு தொடர்புள்ள அத்தை என்னும் பெயர், அத்தனின் (தந்தையின்) உடன்பிறந்தாளைக் குறிக்கும். அத்தன் என்பதன் திரிபே அச்சன் என்பது. அச்சன் என்னும் ஆண்பாற்பெயர் சேரநாடான மலையாள நாட்டிலும், அச்சி என்னும் பெண்பாற்பெயர் பாண்டிநாட்டிலும், வழங்கி வரு கின்றன.

அச்சி = அக்கை (பாண்டிநாட்டு வழக்கு)

அக்கை தாய்போன்றவளாதலால் அச்சி எனப்பட்டாள்.

ஒப்பு நோக்க : தம் + அவ்வை (தாய்) = தவ்வை = தமக்கை

அச்சு (அச்சன்) அச்சி என்னும் பெயர்கள், தொடர் மொழியுறுப்பாக, முறையே தாய்தந்தைப் பொருளில் வழங்கி கின்றன.

அப்பச்சு = அப்பனின் தந்தை = பாட்டன் (பாண்டிநாட்டு வழக்கு)
அம்மாச்சி = அம்மையின் தாய் = பாட்டி (சோழநாட்டு வழக்கு)

அப்பச்சு என்பது அப்பச்சி எனத் திரிந்து வழங்கு கின்றது.

அருமையும் பெருமையும் பற்றி, பருவமடைந்துள்ள ஆடவரையும் பெண்டிரையும் 'தாய்தந்தையரைக் குறிக்கும் முறைப்பெயரால் அழைக்கும் வழக்கம், நம்நாட்டில் தொன்று தொட்டு இருந்து வருவதால், அப்பெயர்கள் ஆண்பாற் பெண் பாற் பெயர்ற்றுத் தன்மையடைந்துள்ளன. ஓர் ஆடவரை ஐயா என்றும், ஒரு பெண்டை அம்மா என்றும் அழைத்தல் காண்க. அம்மை அல்லது அம்மா என்னும் பெயர், இயற்பெயரும் தொழில்பற்றிய பொதுப் பெயருமான பெண்பாற் பெயர் களின் ஈறாகப் பெருவழக்காய் வழங்கி வருகின்றது.

எ - டு : பொன்னம்மை, பொன்னம்மா } இயற்பெயர்.
தாயம்மை, தாயம்மா
வாத்தியாரம்மா, டாக்டர் அம்மா - தொழில் பற்றிய பெண் பாற் பொதுப் பெயர்

இங்ஙனமே, அத்தி அச்சி என்னும் தாய்முறைப் பெயர் களும், குலமும் தொழிலும் குணமும் நிறமும் நிலைமையும் பிறவும் பற்றிய பெண்பாற் பொதுப்பெயர்களின் ஈறாக வழங்கி வருகின்றன.

எ - டு : குற + அத்தி = குறத்தி
தட்டா(ன்) + அத்தி = தட்டாத்தி
பறை + அச்சி = பறைச்சி
வலை + அச்சி = வலைச்சி } குலம்.
உபாத்தி + அச்சி = உபாத்திச்சி
மருத்துவ + அச்சி = மருத்துவச்சி } தொழில்.
மடை + அச்சி = மடைச்சி - தன்மை
வெள்ளை + அச்சி = வெள்ளைச்சி - நிறம்
மூண்டை + அச்சி = மூண்டைச்சி
ஆண்டி + அச்சி = ஆண்டிச்சி
பேய் + அச்சி = பேய்ச்சி } நிலைமை
கெட்டை + அச்சி = கெட்டைச்சி
குள்ள + அச்சி = குள்ளச்சி } அளவு.
குப்ப + அச்சி = குப்பச்சி இடம்

சடை + அச்சி = சடைச்சி
சிற்றிடை + அச்சி = சிற்றிடைச்சி } உறுப்பு.

வெள்ளைச்சி, பேய்ச்சி, குப்பச்சி, சடைச்சி முதலிய பெண்பாற் பெயர்கள், நாட்டுப்புறங்களில் இயற்பெயராக இடப்பட்டு வருகின்றன.

அத்தி அச்சி என்னும் பெயர்கள் ஈறாக நின்று புணரும்போது, அவற்றின் அகர முதல் கெட்டுவிடுகின்றது. கெடாது நிற்பதும் உண்டு.

எ - டு: கள்ளவத்தி

வெள்ளைச்சி குப்பச்சி என்னும் பெயர்களை வெள்ளையம்மா குப்பம்மா என்பவற்றுடன் ஒப்பு நோக்குக.

அத்தி என்னும் சொல்லின் குறையான 'தி' ஈறு, நிலைமொழியீற்று ளகர மெய்யோடு புணரும்போது, அவ்விரண்டும் 'ட்டி' எனத் திரியும். அது என்னும் சொல்லின் குறையான 'து'வ் வீறும், இங்ஙனமே 'டு'வ் வீறாகத் திரிதல் காண்க. (தாள் + து = தாட்டு.)

ஆளன் (ஆள் + அன்) என்னும் ஆண்பாலீற்றிற்கு எதிராக ஆட்டி (ஆள் + தி) என்பது பெண்பாலீறாய் வரும்.

எ - டு: வெள்ளாளன்—வெள்ளாட்டி
கண்ணாளன்—கண்ணாட்டி
மணவாளன்—மணவாட்டி
திருவாளன்—திருவாட்டி
குணவாளன்—குணவாட்டி
குணாளன்—குணாட்டி

வெள்ளாளன் என்பதை வெள்ளான் என்பது தவறு.

மகன் என்னும் ஆண்பாலீறு மான் என்று மருவுவது போல், மகள் என்னும் பெண்பாலீறு மாள் என்று மருவும்.

எ - டு: பெருமகன் - பெருமான், குறுமகன்-குறுமான், மருமகன் - மருமான், திருமகன் - திருமான், வெளிமகன் - வெளிமான்.

பெருமகள் - பெருமாள், வேண்மகள் - வேண்மாள், திருமகள் - திருமாள்.

'மாள்' என்னும் பெண்பாலீற்றொடு மேற்காட்டிய 'தி' என்னும் ஈறும் சேரும்போது, அவ்விரண்டும் 'மாட்டி' எனத் திரியும்.

எ - டு:

| ஆண்பால் | பெண்பால் |
| --- | --- |
| பெருமான் | பெருமாட்டி |
| திருமான் | திருமாட்டி |
| சீமான் | சீமாட்டி |

பெருமான் என்பது பிரான் என்று மருவும்போது, பெருமாட்டி என்பது பிராட்டி என மருவும். பெருமாள் திருமாள் என்னும் ஒற்றைமிகுதிப் பெண்பாற் பெயர்கள் இன்று வழக்கிறந்தன. விகுதிமேல் விகுதி வந்து இரட்டைப்பன்மைப் பெயர்கள் வழங்குவது போன்றே, ஈற்றின்மேல் ஈறு வந்து இரட்டைப்பெண்மைப் பெயர்களும் வழங்கும்.

எ - டு. வெள்ளாட்டி + அச்சி = வெள்ளாட்டிச்சி

பெண்டாட்டி (பெண்டு + ஆட்டி) என்பதிலுள்ள 'ஆட்டி' ஈறு மனைவிப்பொருள் குறிக்க வந்ததாகும். 'பெண்' 'பெண்டு' என்பன இடம்நோக்கி மனைவிப் பொருளுணர்த்தும் பெண்பாற் பொதுப் பெயராம்.

கை + பெண் = கைம்பெண்
,, + பெண்டு = கைம்பெண்டு
,, + பெண்டாட்டி = கைம்பெண்டாட்டி

பெண்பெண்டாட்டி என்பது, ஆண்பிள்ளைப் பிள்ளைகாரன்பசு அரைஞாண்கயிறு என்பன போன்ற மிகைபடு சொற்றொடர்.

"ஒரு பெண்பெண்டாட்டி ஆணுடையுடுத்து." (ஈடு. 6, 2)

கைம்பெண்டாட்டி பெண்பெண்டாட்டி என்பன, முறையே, கம்மனாட்டி பொம்மனாட்டி எனக் கொச்சை வழக்கில் மருவி வழங்குகின்றன.

அத்தி அச்சி என்னும் ஈறுகள் பெண்பால்மட்டும் உணர்த்தி உயர்வு குறிக்காமையால், தட்டாத்தியம்மா, உபாத்திச்சியம்மா முதலிய பெயர்கள் உயர்வு குறிக்க வந்த இரட்டைப் பெண்பாற் பெயராகும்.

அப்பன், ஐயன் என்னும் தந்தைமுறைப் பெயர்கள், அருளப்பன், சண்ணப்பன், செல்லப்பன், நாகப்பன், அருளையன், கண்ணையன், செல்லையன், நாகையன் என எவ்வாறு ஆண்பாற் பெயரீறுகளாய் ஆளப்பெறுகின்றனவோ; அவ்வாறே, அம்மை, அத்தி, அச்சி என்னும் தாய்முறைப் பெயர்களும் பெண்பாற் பெயரீறுகளாய் ஆளப்பெறும் என்க.

இதுகாறுங் கூறியவற்றால், தமிழில் பெண்பால் குறித்து வரும் 'த்தி' 'ச்சி' 'டி' ('ட்டி') என்னும் ஈறுகளெல்லாம், அத்தி அச்சி என்னும் தென்சொற்களின் குறையும் திரிபுமேயன்றி, 'ஸ்திரி' என்னும் வடசொற் சிதைவல்ல என்று தெற்றெனக் கண்டுகொள்க.

# கலையின் வைப்பே!

[புதுவை, முதுகண்ணன்]

கன்னலினுங் கனிந்த சுவைச் செந்தமிழே!
 காணுமின்பம் விளைக்கும் அன்பே!
உன்னஉன்ன நெஞ்சத்தில் ஊற்றெடுக்கும்
 உயர்தமிழே! தமிழர் பேறே!
மின்னொளியைப் பாய்ச்சுகின்ற வியன்றமிழே!
 விளக்கமுற்ற புலவர் வாழ்வே!
வன்மையெலாம் தந்துநனி வாழ்விக்கும்
 வண்டமிழே! வாழ்க! வாழ்க!

என்னுயிரிற் கலந்தியங்கி ஏற்றஞ்செய்
 எழிற்றமிழே! கலையின் வைப்பே!
மன்னுநிலை பெற்றொளிரும் வையத்துள்
 வளர்ந்துள்ள மொழிகட் கெல்லாம்
முன்னுதித்த மொய்ம்பமரும் முதற்பொருளே!
 முழங்கிடுஞ்சீர் வழங்குளத்தில்
நின்றபுகழ் நிலவிடவே நீள்கதைசொல்
 நேரிசையாம் தமிழே வாழ்க!

அலைகின்ற கருங்கடற்கும் அனலுக்கும்
 அழியாத கன்னித் தன்மை
குலையாமல் குலவுகின்ற குளிர்தமிழே!
 குறிக்குமியல் நெறியில் மன்னி
மலைமலையாய் நெஞ்சத்திற் கருத்தூட்டி
 வளஞ்சான்று கிளைக்கும் வாழ்வில்
நிலைசெய்யும் நீர்மையினில் தோலாது
 நெடிதுவளர் தமிழே வாழ்க!

இயற்கையினிற் கலந்தினிமை கனிந்துண்மை
 இலங்கிடச்செய் உணர்வில் தோய்ந்து
மயங்கிடுஞ்சீர் கவிதைவளர் கவிஞன்றன்
 வாழ்வியலைக் காட்டும் தண்மைப்
பயன்விளைக்கும் பண்பமரும் பைந்தமிழே!
 பாட்டளிசெய் பாங்கி னுள்ள
நயன்விளைக்கும் நாடகத்துள் இன்பளிக்கும்
 நல்லிசையாம் தமிழே வாழ்க!

சிவமுருகன் தமிழ்

# தமிழ் நெடுங்கணக்கு-பெயரும் எண்ணும்

[இராவ்சாகிப், சைவப்புலவர்,
டாக்டர், தி. இரா. அண்ணாமலைப்பிள்ளை,
L.C P.S., L.M.S S.A. (Lond).]

(செந்தமிழ்ச் செல்வி—சிலம்பு ௨௫ பரல்-௧, பக்கம் ௪௧௪ தொடர்ச்சி)

## முப்பத்துமூன்று தனிச் சிறப்புவாய்ந்த எண்

### விஞ்ஞானச் சான்றுகள்—உருத்திராக்கமும் முப்பத்துமூன்றும்

**உருத்திராக்கம்**

பழங்காலத்தில், நம்முன்னோர் உருத்திராக்கம் என்னும் அக்கமணியை தெய்வச்சின்னமாக அணிந்து வந்தனர்; இதை நம்நாட்டுச் சித்தர்கள் அனைவரும் தாம் வணங்கும் கடவுளே போன்றதென்றும், தமது தவவேடத்தின் அடையாளமாகவும் கருதிவந்தனர். இவ்வுலகிற் பல சமயத்தவரும், உருத்திராக்க மணிகளையாவது, அவை போன்ற துளசிமாலை அல்லது செபமணிகளையாவது, அணிந்தும் பூசித்தும் வணங்கியும் போற்றி வருவது யாவரும் அறிந்ததே. "மாலற நேயமலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" (சிவஞானபோதம்—12-ம் சூத்திரம்) என்றபடி, உருத்திராக்கமும் விபூதியும் மெய்ஞ்ஞானிகளுடைய திருவேடமாகும்; இத்தகைய விழுப்பொருள்களையும் திருக்கோயில்களையும், இறைவன் எனவே கண்டு வழிபடுவதுதான் நமது ஒழுக்கம். ஆதலின் அக்கமணியைப்பற்றிய குறிப்புக்களை ஆழ்ந்து சிந்திப்பது தகுதியேயாகும்.

**உருத்திராக்கம்—சொல்லாக்கம்**

உருத்திராக்கமானது, கடவுள் மணி, தெய்வமணி, கண்மணி, கண்டிகைமணி, நாயகமணி, முள்மணி, அக்கமணி, இறைவன்கண், அக்கு, ஆக்கம் என்னும் பல பெயர்களால் அழைக்கப்படும். இவை ஒவ்வொன்றும் காரணப்பெயர்கள் என்பது எளிதில் விளங்கும்.

உரு + திரம் + ஆக்கம் = உருத்திராக்கம் என்று பிரித்து உருப்பெற்ற உயிர்களுக்கு என்றும் நிலைத்துள்ள இறைவன் திருவடியை அருளும் பேராற்றலடங்கிய மெய்ப்பொருள் என்று

ஒரு சிலர் பொருள் கூறுவர். இன்னும் உருத்திரன் + அக்கம் அல்லது ஆக்கம் = உருத்திராக்கம் என்று கூறுவாருமுளர்.

உருத்திரன் என்னும் சொல், நமது சமயநூல்களிற் பல இடங்களில் வழங்கப்படுகின்றது. சிவகணங்களுக்கு உருத்திர கணம் என்றும், மயானத்திற்கு உருத்திரபூமி என்றும், இறைய னார் அகப்பொருளின் தனிச்சிறப்பை மதுரையில் மறைமுகமாய் விளக்கியருளிய தெய்வீக ஊமைப் புலவர் பெயர் உருத்திர சன்மர் என்றுங் கூறுப. தேவர்கள் முப்பத்துமூவரில், உருத் திரர் பதினொருவர் (ஏகாதச ருத்திரர்) என்றும் பற்பல நூல்கள் கூறும். "விதியின் மக்களும், மாசில் எண்மரும், பதினொரு கபிலரும், தாமா இருவரும்," என்பது பரிபாடல்—ந. (பதி னொரு கபிலர்—11 உருத்திரர்) "இன்னலங் கடலுட்பட்டோர் யாரையும் எடுக்கு மாற்றால், உன்னரும் பரமமூர்த்தி உருத்திரன் எனும் பேர் பெற்றான்," என்பது கந்தபுராணம். இப்புராணத் தில் இன்னும் பல இடங்களில், உருத்திரன் என்னும் சொல் காணப்படுகின்றது. பகவத்கீதை, மகாபாரதம், உபநிடத்து, சிவாகமங்கள், இன்னும் பல நூல்களில் இச்சொல் வழங்கப்பட் டுள்ளது. திருக்குற்றாலக் குறவஞ்சியில், தற்சிறப்புப்பாயிரத் தில் முருகக்கடவுள் துதியில்,

"பன்னிருகை வேல் வாங்க, பதினொருவர் படை தாங்கப் பத்துத் திக்கும்" என்று கூறியிடத்து, பதினொருவர், உருத்திர ரையே குறிக்கும். உருத்திராக்கம், சிவபிரானது திருக்கண்களி னின்று தோன்றியவை யென்றும், வலது கண்ணினின்று பன் னிரண்டு கபில மணிகளும், இடது கண்ணினின்று பதினாறு வெண்ணிற மணிகளும், நெற்றிக் கண்ணினின்று பத்துக் கருநிற மணிகளும் தோன்றியவை என்றும் பழங்கதைகள் கூறும். ஆகவே, உருத்திரன் என்னும் சொல்லுக்கு, பகைவரை ஒடுக்கி நலஞ்செய்பவன் என்றும் பொருள் கூறலாமா? உருத்திரனது அக்கத்தினின்றும் (அக்கம் = கண்) தோன்றிய பொருள் உருத் திராக்கம் என்றும் கூறுவர்.

### உருத்திராக்கத்தின் தோற்றம்

அக்கமணி, நமது பூமியைப்போல, அண்டம் அல்லது முட்டை வடிவத்தில் (Oval shape) இருக்கும். தற்காலத்தில், இம்மணிகள், இமயமலைச் சாரலில் நேபாள தேசத்தில் ஒருவகை மரத்திலிருந்து விளைகிறதாக சொல்லப்படுகிறது. இம்மணி களின் வெளிப்பக்கத்தில் பலாப்பழத்திலுள்ள முட்கள்போல, பல முட்கள் (Spike) பொருந்தியிருக்கும். இன்னும் இம்மணி கள், ஆரஞ்சுப்பழச் சுளைகள்போல, பலபாகங்களாகப் பிரிக்கப்

பட்டிருக்கும். இப்பாகங்களை முகங்களென்று கூறுவர். இம் முகங்கள் பொதுவாய் நாலைந்து இருக்கும்; குறைந்தும் கூடியு மிருக்கலாம்.

## உருத்திராக்கம் அணிவதன் பயன்

அக்கமணிகளில், மின்சாரசக்தி போன்ற, ஒருவகைத் தனிச்சக்தியிருப்பதாக நம்முன்னோர் கண்டுள்ளார்கள். ஆதலின் அதைத் தரிப்பதனால், உடல்நலம் ஏற்படுகின்றதென்று கண்டனர். இரத்தம், எலும்பு, மூளை, நரம்பு முதலிய எழுவகைத் தாதுக்களுக்கும் உறுதி கொடுப்பதாகக் கூறுவர். உருத்திராக்கத்தை, சன்னி, விக்கல், பித்தம், நாவறட்சி, சளிக்கட்டு, காமாலை, குக்கிருமல் முதலிய நோய்களில், உரைத்துக்கொடுத்து குணங்கண்டனர். உருத்திராக்கத்தை நீற்றிப் பல நோய்களுக்கு மருந்தாகக் கொடுக்கலாமென்று சித்தர் நூல்கள் கூறும்.

## உருத்திராக்கம் அணிவதெப்படி?

குழந்தைகள், பெண்கள், ஆடவர்கள் எல்லாரும் அணிய லாம். அதில் ஒரு நுண்ணிய சக்தியிருப்பதால், அதைப் பட்டுக்கயிறு, செம்பு, தங்கம் முதலியவைகளால், கொடி செய்து கோத்து அணிவது வழக்கம். பொன், வெள்ளி, வில்வ ஓடு, [illegible] இவைகளினாற் செய்த வளையங்களை, மணிகளுக்கு இடையிற் கோத்துத்தான் உருத்திராக்கமாலை யணியப்பட வேண்டும்; அப்பொழுதுதான், அம்மணிகளிலுள்ள மின்சார சக்தி, உடலில் ஏறுவதற்கு இசைவாயிருக்கின்றது. பல அக்க மணிகளை (இடையில் மேற்கூறிய வளையங்களில்லாமல்) ஒன்று சேர்த்து அணிவதின் பயன் மிகக் குறைவு என்பதை அறியா தார் பலர் உளர். உருத்திராக்கத்தைப்பற்றி விஞ்ஞான முறை யில் ஆராய்ச்சி செய்வது மிக்க பயன் தருமென்பதில் ஐயமில்லை.

## உருத்திராக்கத்தை அணியும் இடங்கள்

நம் முன்னோர் அக்கமணியை, உடலின் இன்னின்ன பாகங்களில் இத்தனை யித்தனை தரித்தல் வேண்டுமென்று வரை யறுத்துள்ளார்கள். இவை பல புராணங்களிற் கூறப்பட் டுள்ளன. சிவாகம, சித்தாந்த நூல்களிலும், இக்குறிப்பு காணக்கிடக்கின்றது. ஸ்கந்த புராணத்தின் சிறந்த பாகமாகிய உபதேச காண்டத்தில் உருத்திராக்கம் அணியவேண்டிய இடங் கள் குறிக்கப்பட்டுள்ளன. இவ்வுபதேச காண்டமே, சிவ ரகசிய காண்டத்தின் சாரம் என்பதை இங்கு நினைப்பூட்டிக் கொள்ளல்வேண்டும். அதில், உருத்திராக்கம் தரிக்கவேண்டிய இடங்கள் பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளன ... :—

சிரசு—40; காது—12; கழுத்து—32; மார்பு—108; தோள் (புயம்)—32; முழங்கை—24 ஆக மொத்தம் 249. இதே கணக்கு ஆதீனங்களிலிருந்து வெளியிடப்பட்ட சித்தாந்த சைவ வினு விடையிலும் (ப. 126) கூறப்பட்டுள்ளது. காது, தோள், முழங்கை இவைகளில் குறிக்கப்பட்ட எண்களில் பாதி வலப் பக்கமும், பாதி இடப்பக்கமும் தரித்தல்வேண்டும்.

உருத்திராக்கம் அணிவதில் சில தவறுகள்

1. உருத்திராக்கம் உடம்போடு ஒட்டியணியப்பட வேண்டும்.

2. தலையில், மயிர் வளர்ந்துள்ள இடத்தின்மேல் அணிவது பயனில்லை.

3. ஒவ்வொரு காதிலும் முன்பக்கம் மூன்றும் பின்பக்கம் மூன்றுமாக அணிதல்வேண்டும்.

4. பணக்காரர்கள், பொன்னாலேயே அக்கமணி செய்து அணிகிறார்கள். இயற்கை உருத்திராக்கத்தாலுண்டான பலன், இதற்குக் கிடையாதென்பதை அறியார்கள் போலும்.

5. உடலில் சட்டை அணிந்து அதன்மேல் உருத்தி ராக்கம் தரித்தலில் யாதொரு பயனுமில்லை.

6. உடம்பு தூய்மையில்லாத காலங்களில் உருத்திராக்கம் தரிப்பது பயன் தராது. (பூசை காலங்களிற்றான் மிகுந்த பலனைத் தரும்.) அங்ஙனம் தரிப்பதால் உருத்திராக்கத்தின் தூயசத்தி குன்றும்.

உருத்திராக்கத்தைப்பற்றிய சில ஆராய்ச்சிக் குறிப்புக்கள்

உரு—தூய தமிழ்ச்சொல்;

> உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
> அற்றே தவத்திற்கு உரு. —திருவள்ளுவர்.
>
> உட்பெறு புள்ளி உருவா கும்மே. —தொல்காப்பியம்.

'உரு' என்னும் சொல் வடிவு, உடல், நிறம், தாலி, கரு, சிற்ப வேலை, விக்கிரகம் முதலிய பல பொருட்களில் வழங்கப்படும். உருத்தல் என்பது வடிவங்கொள்ளுதல், சினங்கொள்ளுதல், தோன்றுதல், முளைத்தல், மிகுதல் முதலிய பொருட்களில்வரும். தமிழ்நாட்டில், இன்றும், வாழ்வரசிகள், திருமணத்தாலியை யும் மற்றும் உருக்களையும் கயிற்றில் கோத்து, கழுத்தைச் சுற்றி அணிவதும், இதைக் கூத்தாரு என்றழைப்பதும் நமது மரபே

யாகும். இவர்கள் அணியும், உருக்கள் ஒவ்வொன்றுக்கும் தத்துவப்பொருள் உண்டென்பது எமது கருத்து. 'ர' என்னும் ஓசைக்கும், அங்கி, தீ, ஒளி, ஒலி என்னும் பொருட்களுக்கும் தொடர்பு உண்டென்று கூறுவர். உருத்தல் என்னும் சொல் கடுஞ்சினங்கொள்ளுதல் என்னும் பொருளில் வரும்பொழுது, அது இயற்கைக்கு ஒத்தேயுள்ளது. கோபங்கொள்ளும் ஒருவனது முகம் சிவந்து விடுகிறது (Congestion): 'முகம் நெருப்புப்போல் செக்கச்செவேல் ஆய்விட்டது' என்றுரைப்பது சாதாரண வழக்கிலும் உண்டு. ரகர ஓசையினின்றே, (Rubor) என்னும் இலத்தின் மொழிச்சொல், (Redness)—சிவப்பு என்னும் பொருளைத் தருகிறது. (Amen-Ra) அமென்-ரா என்பது எகிப்தியர் வணங்கிய தீக்கடவுளின் பெயர். உருத்திரனது நெற்றிக்கண்ணினின்றும் நெருப்புப் பறப்பதாகச் சமய நூல்கள் கூறும். உருத்திராக்கமும், இறைவனுடைய கண்களிலிருந்து தோன்றியதாகப் புராணங் கூறும். அதனாலேயே உருத்திராக்கத்துக்கு 'இறைக்கண்' என்ற பெயரும் உண்டு. இங்ஙனமாக, உரு, உருத்தல், உருத்திரன், உருத்திராக்கம் என்னும் சொற்களெல்லாம், ஒரே வேரினின்று எழுந்தனவோ என்று நினைப்பதற்கு இடந்தருகிறது.

### உருத்திராக்கமணியும் மனித உடம்பிலுள்ள எலும்புகளும்

நமது முதுகெலும்பு (முள்ளந்தண்டு) வரிசை முப்பத்து மூன்று எலும்புகளாலாயது என்பது முன்னமே விளக்கப்பட்டுள்ளது. அக்கமணிகள் கழுத்தைச் சுற்றி யணியப்படவேண்டியவை முப்பத்திரண்டு என்பது மேலே கூறியுள்ளோம். 32 மணிகளுக்கும் நடுநாயகமாக ஒன்று இணைக்கப்பட்டுத்தான் அக்கமணி கழுத்தில் அணியப்படும். ஆகவே அதுவும் சேர்ந்து முப்பத்துமூன்றை நினைப்பூட்டும். மற்றொரு வியப்பான குறிப்பை இங்கு தனிப்படக் குறிக்க விரும்புகின்றோம்.

முதுகெலும்பு வரிசை எங்ஙனம் முப்பத்துமூன்று எலும்புகளாலாயதோ, அம்மாதிரியே தமிழ் நெடுங்கணக்கு எழுத்துக்களும் முப்பத்துமூன்றேயாகும். திருக்கோயில்களில், கொடிமரம் (துவஸ்தம்பம்), பூமியில் பதித்துக்கொண்டு ஆகாயத்தை நோக்கி வணங்கும் தொண்டனது முதுகெலும்பு வரிசையைக் குறிக்குமென்பது ஆலய விளக்க நூல்களிலிருந்து அறிகின்றோம். இக்கொடிமரத்திலுள்ள வளையங்களும் முப்பத்து மூன்றேயாகும். கழுத்தைச்சுற்றி அணியவேண்டிய உருத்திராக்கமணிகளும் (32+1 நாயகமணி) ஆக முப்பத்துமூன்றேயாகும்.

தமிழ் எழுத்துக்கள் மொத்தம் 33+216 (உயிர்மெய் யெழுத்துக்கள்) ஆக 249 மனித உடலில் உள்ள எலும்புகளும் ஏறக்குறைய இருநூற்றைம்பதே யாகும். சமய விதிப்படி, ஒருவன் உடம்பு முழுவதிலும் தரிக்கவேண்டிய உருத்திராக்கமணிகளும் 249. இது எமக்கு ஒரு அதிசயமான ஒற்றுமையாகக் காணப்படுகின்றது. 'காக்கையும் உட்காரத்தது பனம்பழமும் விழுந்தது' என்னும் பழமொழி போலிருக்குமோ அறியோம். இத்தகைய ஒற்றுமை ஆராயத்தக்கது என்பதை மாத்திரம் இங்கு எடுத்துரைப்பாம்.

இறுதியாக, உருத்திராக்கங்களுக்கு முகங்கள் உண்டென்று மேலே கூறியுள்ளோம். இதிலும் ஒரு வியப்பான குறிப்பு ஒன்றுள்ளது. சாத்திர நூல்களின்படி, உடலின் இன்னின்ன பாகங்களில இன்னின்ன முகங்களுள்ள உருத்திராக்கம் அணியப்படவேண்டுமென்று அறிகிறோம். இதற்குச் சான்றாக உச்சியில் (சிகையில்) அணியவேண்டிய உருத்திராக்கம், ஒரே முகமுள்ளதாயிருக்கவேண்டுமாம். தலையில் அணியும் அக்கமணி பதினொரு முகங்கொண்டதாகயிருக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ளது. நம் முன்னோர் காரணமில்லாமல் எதையும் செய்வதில்லை என்பது திண்ணம். ஆதலின் ஆராய்ச்சியாளர் உடலின் பல பாகங்களுக்குத் தகுந்தாற்போல், அவைகளில் தரிக்கவேண்டிய உருத்திராக்க மணிகளும், இத்தனை முகங்களுடையனவாக இருக்கவேண்டுமென்னும் பழங்கருத்துக்கு மூலகாரணமுண்டா என்பதை ஆராயவேண்டியது அவரது கடமையாகும். அக்கமணியை உடலில் அணிவதின் பெருமையையும் அதிலுள்ள விஞ்ஞானக் கருத்துக்களையும், விரிவான முறையில் எழுதுவது எமது எண்ணமாகும்; இங்கு விரிப்பின் பெருகும். யாழின் தத்துவத்தை, அடுத்து நோக்குவாம்.

# மேற்புலந்தறிஞர் கண்ட தமிழகம்

[புதுவை, வரத. வீரப்பன்]

(சிலம்பு உகூ, பரல் கக, நிசo-ஆம் பக்கத் தொடர்ச்சி)

16

வளம்பெருக்கும் பருவக்காற்றால் விளையும் வெப்பம் நண்பகலில் பொறுத்தற்கரிதாயிருக்கும்; ஆயினும், கடலிடைத் தோன்றும் இளங்காற்றால் அது மாலைப்போதில் மட்டுப்படும்; இரவில் துளித்து உடலுக்கு நலம்புரியும் பனிநீர்த்துளிகளால் அது காலைப்போதில் தணிந்துவிடும். பொதுவாக, இந்தியாவில், உதிக்கின்ற ஞாயிறும் படுகின்ற ஞாயிறும் நாடோறும் புலனாகும். ஆண்டிற்கு எட்டுத்திங்கள்களில் வானம் எப்பொழுதும் தூய்மையாகவும் மாசற்றும் விளங்கும்.

—தெலாப்ளோத்

17

இந்துஸ்தான் என்னும் பெயர் சிறப்பாகப் பொருந்தப் பெற்ற பகுதிகளில் வாழும் மக்களின் தோல் நிறத்திலும் தென்னாட்டவர் நிறம் மங்கித் தோன்றச் செய்வது, அந்நாட்டை வருத்தும் மிகு வெப்பமாகும். ஆயினும், நிலவளத்தாலும் செல்வப் பெருக்காலும் தென்னாடும் வடநாடும் சற்றேறக் குறைய ஒத்ததன்மையன; எனினும், ஏராளமான கப்பற்றுறை முகங்களுக்கும், ஐரோப்பிய நாடுகளோடு மிக விரிந்த அளவில் நடைபெறும் வாணிபத்திற்கும் வடநாட்டினும் தென்னாடே பரந்த புகழ் வாய்ந்துளது.

—அபே துய்யோன்

18

பருவகாலங்கள் ஆட்சி செலுத்தும் நிலத்தினைத் தொடர் மலைகள் எல்லைப்படுத்துகின்றன வென்றும் இயம்பலாம். மேலும், ஒத்த இடையீட்டிலும் மிகக்குறுகிய தொலைவிலும் அமைந்துள்ள நாடுகளிலேயே, குறித்த ஒரேகாலப் பகுதியில், வேறுபட்டும் மாறுபட்டும் தோன்றும் காலத் தட்ப வெப்ப நிலைக்கு அத்தொடர்மலைகள் வரைகோலுகின்றன. குமரிமுனை முகட்டில் நிற்கும் ஒரு தமிழ்மகன் தனது வலப்புறத்தே விளங்கும் மாவட்டங்களில் வெங்கதிர் பரப்பி வெய்யோன் காய்வதையும், தனது இடப்புறத்தே உள்ளவற்றுள் வெள்ளம் பெருக்கெடுத்தோடுமாறு மழை பெய்வதையும் ஒரேகாலத்தில் காண்கிறான். இவ்வண்ணமாகக், கீழ்த்திசையில் வேனிற்காலத்தால் நுகரலாகும்

இன்பங்களை ஒருவன் துய்க்கவும், அதே வேளையில், மேற்றிசை
யில் கூதிர்க்காலமும் சனிஷ்டையோடு வீசும் குளிர்வாடையும்
அமைதி விழையும் மீகாமனை வெருவியோடச் செய்கின்றன.

—லெகூ தேப்ளேக்ச்

உ. முப்பேரரசுகள்

19

கல்வெட்டுகளால் துலக்கமுறும் தமிழ் அரசர்களின் பெயர்
அட்டவணைகளும், அவர்கள் வெற்றிவாகை சூடிய போர்
விளக்கங்களும், இயேசு பிறப்பதற்கு மூன்று நூற்றாண்டுகட்கு
முன்னரே அசோகர் அரசியற் சட்டங்களில் காணப்பெறும்
தென்னாட்டு அரசுகளைப்பற்றிய குறிப்புகளும், பண்டைக்காலத்
துச் செம்மொழிப் புலவர்கள் தமிழ்நாட்டு நகரங்கள் சிலவற்றின்
பெயர்களை எடுத்தாண்டிருப்பதும், நாம் காலத்தொடக்கமாக
வகுத்துக்கொண்ட காலப்பகுதிக்கு ஐந்து ஆறு நூற்றாண்டுகட்கு
முன்பே தமிழகத்து அரசுகள் நிலவியுள்ளனவாகக் கொள்ளத்
துணை புரிகின்றன......

நமது காலத் தொடக்கத்திற்கு முன்னர்த் தமிழகம் சேர
சோழ பாண்டியர் கோலோச்சிய முப்பெரும் நாடுகளாகப்
பிரிவுற்றிருந்தது.

—குமஸ்தாவ் லெபோன்

20

வடபுலத்தவரையும் தங்கள் ஒன்னலர்—ஆரியருக்கு இணை
யான கலைப்பயிற்சி உடைய தமிழ் இனத்தவர் வாழிடங்களாய்,
மக்கள் நெருக்கமும் செழுமை நலமும் பொருந்தியனவாய்த்
தென்புறத்துக் கடையிற்றில் அமைந்து பழந்தமிழ் நாடுகள்
பிறங்கினவாயினும், வட இந்தியா உள்ளிட்ட ஏனைய நாகரிக
உலகோடு தொடர்பொன்றுமின்றித் தனித்தே நின்றன.
இதனால், இவைகளைப்பற்றிய செய்திகள் பிறநாடுகளுக்கு எட்டா
மற்போயின. ஆங்கே நிகழ்ச்சிகளை நிரலாகத் தொகுத்து வைப்
போர் இல்லாக்குறையால், கி. பி. 900 ஆண்டுகட்கு முற்பட்
டுள்ள அந்நாடுகளின் வரலாறுகள் ஒருசில நீங்கலாக, முழுமை
யுமே அழிய நேர்ந்தது. வியத்தகு விடாமுயற்சியுடைய வட
புலத்து மன்னன் ஒருவன், அரிதாக ஓரொருகால் தடைபுரியும்
நெடுங்காட்டை ஊடுருவிச் சென்றாயினும், அன்றி, அதனைப்
புறந்தள்ளி வலம்வந்தாயினும், தென்னாட்டுத் தார்வேந்தர்
தம்மை மறைத்துக்கொண்டிருக்கும் 'தனிமை' என்னும் திரைச்
சீலையைச் சிறிதுபோது விலக்கின், அவ் அமயம்மட்டும், கி. மு.
600-இல் இருந்து கி. பி. 900 ஆண்டுகட்கு இடையேயுள்ள

நீண்ட காலப்பகுதியில், தென்புறத்துக் கடையிற்றில் இடம் பெற்ற அரசியல் நிகழ்ச்சிகள் மிகக்குறைந்த அளவில் புலனாகின்றன.

—ஸ்மித்

21

அசோகர் காலத்தில் தமிழ் இனத்தவர் வாழ்ந்த நிலம் தனித் தனியே நான்கு அரசியல்களாகப் பிரிந்திருந்தன. அவை சோழ, பாண்டிய, கேரளபுத்திர, சத்தியபுத்திர நாடுகளெனப் பெயர்பெறும். உறையூர் அல்லது பழைய திருச்சிராப்பள்ளி, சோழநாட்டின் தலைநகராக விளங்கியது எனக் கொள்ளலாம். பாண்டிய நாட்டின் தலைநகரம் மதுரையினில், திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த கொற்கையே என்பதில் ஐயுறவில்லை. துளுவ நாட்டின் தென்புறத்துள்ள மலையாளக் கடற்கரையேயன்றிச் சேரநாட்டைச் சார்ந்தனவாக இன்று கருதப்படும் உண்ணுட்டு மாவட்டங்களும், கேரளபுத்திர நாட்டின் அடங்கியிருந்தன. துளுவமொழி பேசப் பெறுவதும், மங்களூரை நகரிடமாகப் பெற்றதுமான குறுநிலத்திற்கே சத்தியபுத்திரநாடு எனப் பெயர் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். மேற்கூறிய எல்லா நாடுகளுடனும் அசோகர் ஒத்தகைய நட்பியைந்த தொடர்பு பூண்டிருந்தனர் என்றால், அவர் தம் சமயநெறிகளை மக்கட்கு எடுத்தியம்ப விரிவுரையாளர்களை ஆங்குத் தம் விருப்பம்போல் அனுப்பவும், பற்பல இடங்களில் புத்தப் பள்ளிகள் எடுப்பித்தற்கும் உரிமை பெற்றிருந்தார்.

—ஸ்மித்

22

மூப்பெரும் வேந்தர்களாகிய சேர சோழ பாண்டியர் முறையே தமிழகத்து மேற்கும் கிழக்கும் தெற்கும் ஆகிய பகுதிகளைப் பங்கிட்டுக்கொண்டாரெனப் பண்டுதொட்டு வழங்கிவரும் நாட்டுக் கதையை, ஆய்ந்து கண்ட முடிபுக்கு முரணாக வரலாறும் உறுதிப்படுத்துகிறது. கி. மு. 3-ம் நூற்றாண்டின் கடைப்பகுதியில் அசோகர் விடுத்த விளம்பரங்களில் இம்மூன்று நாடுகளின் பெயர்கள், கேரளா, பண்டா, சோடா என்ற எழுத்துருவங்களில் பொறிக்கப் பெற்றுள்ளன. கி. மு. 302-இல், மெகாஸ்தெனஸ் பாண்டியநாட்டினைப்பற்றிக் கூறிப் போந்தார். பின்னை நாளில், கிரேக்கிய உலக நூலாசிரியர்கள் இம்மூன்று நாடுகளைப்பற்றி நாம் மேற்கண்டவாறு புனைந்துரைப்பர். பாண்டிய மன்னர்களுள் ஒருவர் அகஸ்டஸின் அரசவைக்குத் தமது அயல்நாட்டரசியலேவலாளரை அனுப்பி வைத்த செய்தியை ஸ்ட்ராபோன் (XV-1-4) குறிப்பிடுகிறார்.

இன்று மலையாள மொழி வழங்கும் நிலம் சேரநாட்டினைச் சேர்ந்திருந்தது. கரூர் சேரநாட்டின் தலைநகராயும், மதுரை பாண்டிய நாட்டின் தலைநகராயும், உறையூரும், பின்னர் மலைக்கோட்டமும், இதன்பின்னர்த் தஞ்சையும் சோழநாட்டின் தலைநகராயும் விளங்கின........

ஆராய்ச்சிக் கெட்டிய அளவில், இம்முடிவேந்தர் மூவரும் ஒருவர்மீதொருவர் இடையீடின்றிப் போர் தொடுத்தவண்ணம் காலங்கடத்தினர் என்று கருத இடமுண்டு. சேரநாடு பிளவுற்றுத் தன்னிலையிற் சுருங்கிய பின்பு கொங்குநாடெனப் பெயரேற்றதோடு முதன்முறையாகச் சோழர்களால் வெல்லப்பெற்று, 1080-இல் முடிவாக மைசூர் ஒய்சால வல்லாளர் ஆட்சியுட்புகுந்து ஒன்றுபட்டது. முகமதிய படையெழுச்சிக்குப்பின், சேர சோழ பாண்டிய நாடுகள் பல்வேறு சிற்றரசுகளாகச் சிதைவுற்றன.

—மூய்லியேன் வென்சோன்

௨௩. பண்டைத்தமிழகத்துத் தலைநகர்கள்

23

தாம்பிரபரணியாற்றுக்கு அருகமைந்த கொற்கை முத்து வாணிபத்திற்கு முதன்மையானவிடமாக விளங்கியது. காவிரியாற்றின் தமிழகத்தின்கண், இடம்பெற்ற புகார் அல்லது காவிரிப்பூம்பட்டினம், ஒருகாலத்தில் செல்வச் சிறப்பும் செழுமை நலமும் வாய்ந்த துறைமுகமாகத் துலங்கியது.......

இந்தியாவின் தென்கடையீற்றில் வீற்றிருந்த தமிழ் அரசுகள், சீர்சிறக்க நடைபெற்ற வெளிநாட்டு வாணிபத்தால் விளைந்த பொருள் வளமும், நிலவளமும் பல்கிப் பெருக விளங்கலுற்றதோடு இம்மை நலங்கள் மல்கும் உயர்வாழ்வின் மேன்முகட்டை அவை தலைநகரிலேயே எய்தப்பெற்றன......

சோழர்கள் நிகழ்த்திய நீர்வாணிகத்தில், பருத்தி நூலாடை முதற்பொருளாக மிளிர்ந்தது. இதற்கென இவர்கள் வைத்து நடாத்திய சுறுசுறுப்புள்ள கடற்படை, ஐராவதி கங்கைக் கழிமுகங்கள் மட்டுமேயன்றி மலேயத்தீவத் தொகுதிவரை பாய் விரித்தேகவும் அஞ்சிற்றில்லை.

—ஸ்மித்

24

பிளினி உயிர் வாழ்ந்த காலத்தில், கி. பி. முதலாம் நூற்றூண்டில், மதுரை அல்லது கூடல் தலைநகராக விளங்கியது.

ஆயினும், இன்னும் முன்னைய நாட்களிலே கொற்கை முதன்மையான அரசிருக்கையாகப் பிறங்கியது என்று நம்புதற்கு இடம் உண்டு. வரலாற்றுக் காலத்திற்கு முன்னர், மதுரைமாவட்டத்தின் கிழக்குக் கடற்கரையில் அமைந்த தென்மணலூர் என்னும் ஓரிடம் பாண்டிய மன்னர்களின் தலைநகராக இருந்ததெனக் கொள்ளுதற்குச் சான்றுளது. கொற்கை அல்லது கொல்கை (கிரேக்கிய மொழியில் காணப்படுவதுபோல்) மாநகரைத் தமிழர் நாகரிகம் வளர்ந்த தொட்டிலாகவும், சேரசோழ பாண்டிய அரசுகளை நிறுவினோராகக் கருதப்படுபவரும், புராணத் தொடர்புடையருமான உடன் பிறப்பாளரின் பிறப்பகமாகவும் பிறங்கியதெனத் தொன்று தொட்டு வழங்கும் நாட்டு வரலாறுகள் யாவும் குறிப்பிடுகின்றன. திருநெல்வேலியிலே, தாம்பிரபரணி யாற்றங்கரையிலே, இன்று எதும் அற்ற சிற்றூராகக் காட்சி நல்கும் அம்மாநகர், தனது ஓங்குபுகழ் உயர்வாழ்வில் திளைத்தொளிர்ந்த நாளிலே சிறந்தவொரு துறைமுகமாகத் துலங்கியதோடு, பாண்டிய அரசர்கள் நலமுற ஈட்டிய பொருட்செல்வத்திற்குத் தனிப்பட்ட வருவாயாக இருந்த முத்துவாணிபத்திற்குத் தலைமைப் பதியாகவும் திகழ்ந்தது. மிகுந்த அளவில் வந்து குவிந்த அரசிறைப் பொருள்களையும், பண்டமாற்று ஊதியங்களையும் கண்காணித்தற் பொருட்டுப் பட்டத்திளவரசர், மதுரையில் அரசவை நிறுவப் பெற்ற காலத்தும், கொற்கையிலேயே தங்கியிருந்தார். கொற்கைமாநகரின் துறைமுகம் நாளடைவில் மண் மண்டியதால் கப்பல்களை வரவேற்கும் வசதியை இழந்து இங்கிலாந்தின் செய்ங்க்துறை முகங்களைப் போல் படிப்படியாக அழிவடைந்தது.

கொற்கை, துறைமுகமாகப் பயன்படுவதொழிந்து கைந்நெகிழ விடப்பெற்றது எந்நாள் தொட்டு என்பது வரையறுக்க இயலவில்லையாயினும், அந்நாட்டு நாணயவெளியீட்டுக் கூடத்தினின்று வெளிப்போந்துலவிய காசுகள் ஏறக்குறைய கி. பி-700 ஆம் ஆண்டிற்கு மேற்பட்டவை யென்பது உணரக் கிடக்கிறது.

—ஸ்மித்

25

கொற்கையில் நிகழ்ந்த வாணிபத் தொடர்புடைய வினைகள் அனைத்தும், ஆற்றுமுக்குக் கீழ்பாலில், மூன்றும் மைலில் அமைந்த காயலில் புதுவதாக நிறுவப்பட்ட துறைமுகத்திற்கு மாற்றப்பெற்றன. காயல் பலநூற்றாண்டுகள்வரைக் கீழ்நாட்டு மாபெருந் வாணிகத் தலைமைப் பதிகளுள் ஒன்றாக விளங்கிவந்தது பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில்

மார்க்கோ போலோ இங்கே தான் வந்திறங்கினார். அவர் இங்குவந்தமை ஒருமுறை மட்டும் அன்று என்று கோடல் பொருத்தமுடையதாகும். முடிமன்னனே யன்றிக் குடிமக்களும் எய்தப் பெற்றிருந்த செல்வச்சிறப்பையும் புறக்கோல மேன்மையையும் வந்தவர் கண்கண்டு வியந்தார். கொற்கையைப் பாழாக்கிய அதே நிகழ்ச்சி காயல் கைவிடப்பட்டதற்கும் காரணமாக நின்றது.

மீன் பிடித்துப் பிழைக்கும் ஒருசில முகமதியர், கிறித்துவ சமயம் தழுவியோர் வாழும், பாழும் குடிசைகளே காயல் விளங்கிய இடத்தில் இன்று காட்சியளிக்கின்றன.

—ஸ்மித்

26

காவிரியாற்றின் வடபுறத்துக் கழிமுகத்தை யடுத்தமைந்திருந்த காவிரிப்பூம்பட்டினம், சோழரின் தலைமைத் துறைமுகமாகத் திகழ்ந்தது. இதன்கண் அழகிற் சிறந்த மாளிகையொன்றை அரசர் எடுப்பித்துக் காத்துவந்தனர்: மேலும், அயல்நாட்டு வணிகர் இதனை இனிமையும் பயனும் அளிக்கும் உறைவிடமாகக் கருதுவாராயினர். ஒருகால், செல்வச் சிறப்புடையதாய் மிளிர்ந்த இந்நகர் அழிந்தொழியவும், அவ்விடம் இன்று உயர்ந்த மணற்குவியலின் கீழ்ப் புதைந்து கிடக்கிறது.

—ஸ்மித்

27

சென்னைப்பட்டினம் மிகவும் பழைமையான நகராகும். பென்னண்ட் கூறுவதுண்மையாயின், உரோமையர் ஆங்கு அடுத்தடுத்து வருவதும் போவதுமாயிருந்தனர் என்பதை அறியலாம். போஸ்தின் (உரோமைய அரசி. கி. பி. 125-176), அத்ரியேன் (உரோமைய மன்னர் மன்னன். கி. பி. 117-138), இவர்களின் உருவங்கள் பொறிக்கப் பெற்றனவும், நகரின் சுற்றுப் புறங்களில் காணக்கிடந்தவையுமான சில செம்பொற் காசுகளையும் வெண்பொற் காசுகளையும் இவர் தமது கூற்றுக்குச் சான்றாகக் கொள்ளுகிறார்.

—டெமர்லே

## 2. மக்கள்

### அ. தமிழர் நாகரிகம்

28

ஆரியர் திராவிடரோடு போரிடநேர்ந்த காலத்து, இராமாயணக் கதையின்படி, பின்னவர் ஓர் உயரிய நாகரிகமுடை-

யராய்த் திகழ்ந்தனர். உலோகங்களைப் பண்படுத்தவும் ஆடைகள் செய்யவும் மட்கலங்கள் வனையவும் அவர்கள் அறிந்திருந்ததோடு, எழுத்துக்கலையிலும் தேர்ச்சியுடையராய் விளங்கினர். அவர்கள் பேசிய மொழிகள் வடமொழியுடன் இனைத்துணையும் தொடர்பு இல்லாதவை. சமஸ்கிருதம் என்ற ஒருமொழியும் இருப்பதாக வெளியாவதற்கு முன்னரே அம்மொழிகள் மேற்புலத்து அறிஞர் ஆராய்ச்சிக்கு இலக்காயிருந்தன.

—குய்ஸ்தாவ் லெபோன்

29

மிகப்பழைய காலத்தே தமிழ்நாட்டு அரசுகள் தங்கட்கே உரிய நாகரிகத்தில் திளைத்தொளிர்ந்தன; மேலும், மேற்புலத்தோடு வளர்ந்தோங்கும் வாணிபம் நிகழ்த்தின. தமிழ் நாட்டினின்று ஏற்றுமதியாகிய மிக்க பயன்தரும் சரக்குப்பொருள்கள், முத்து, கடல்வள்ளைக்கல், மிளகு ஆகியவைகளாகும். தென்னாட்டிலிருந்தே இந்தியத் தேக்குமரம், மஸ்லின் ஆடை இவையிற்றினைப் பாபிலோனியர் தங்கள் நாட்டிற்கு எடுத்தேகினர் என்பது தெளிவாகிறது. பின்னாளில், கிரேக்கிய உரோமைய பேராட்சிகளின் கீழ் நடுநிலக்கடல் துறைமுகங்கள் தென்னிந்தியாவுடன் விரிந்த அளவில் வாணிபம் நடாத்திவந்தன. அவண் உரோமைய நாணயங்கள் வழங்கலுற்றன. தமிழ்நாட்டுத் தார்வேந்தர் தமது போர்ப்படைகளில் ஐரோப்பியப் போர் மறவர்களைச் சேர்த்துக் கொண்டனர். உரோமையர் ஆங்கே குடியேறித் தங்கிய உறைவிடங்களின் சுவடுகள் இருத்தல் கூடும்.

—பர்னேட்

30

தமிழர் நாகரிகம், வடநாட்டு இந்திய ஆரியப்பார்ப்பன நாகரிகத்திற்கு ஒத்த காலத்தது; அன்றேல் அதனினும் பழமையானது என்பதில் ஐயுறவில்லை. தமிழ்நாட்டிலே நெடுநாட்கள்வரை பார்ப்பன நாகரிகம் உறுதியுடன் எதிர்க்கப்படவேண்டியதாகவும், வரவேற்கப்படாமலே வலியவந்து நுழைந்த தொன்றாகவும் கருதப்பெற்றது.

—ஸ்மித்

(தொடரும்)

# அறன் வலியுறுத்தல்!

[தி. ச. வாசுதேவன்]

இராகம் : பூர்விகல்யாணி. தாளம் : ஆதி.

### எடுப்பு

அகத்தினில் அறநெறி இருத்து—தமிழா
அருங்குறள் கூறிடும் திருவுடைக்—கருத்து (௧)

### தொடுப்பு

இகத்தினில் ஈடிலா இன்பமே வேண்டும்
என்றுநீ விரும்பிடில் நன்றே யாண்டும் (௨)

### முடிப்பு

சிறப்புடன் செல்வமும் செறிந்திட வகையாய்
தெரிந்தே அறந்தனைச் செய்திடு தகையாய்
விறப்பும்[1] வாழ்விலே மிகவும் [2]நகையாய்
விளங்கிடக் களங்கம் வீழ்த்தியே மிகையாய் (௩)

1. விறப்பு=வெற்றி.
2. நகை=மலர்ச்சி.

# அருள்பத்து

[சித்தாந்த பண்டிதர், கழகப்புலவர், ப. இராமநாத பிள்ளை]

(செல்வி சிலம்பு-௨௰, பரல்-௯, பக்கம் ௧௮௪-ன் தொடர்ச்சி)

"நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே உன்னை ஓலமிட் டலறி
உலகெலாம் தேடியுங் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந்
துறையிற் செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே."

(ஆளுடைய அடிகள் திருவாசகம் : 2)

ஆண்டவன் அருளால் ஐந்தொழில் கூத்து அருளுகின்றான். இயல்பாகவே கட்டற்றவனாகவும், (ஊழிமுடிவில் உலகுடல்களை ஒருத்தனாய் நின்று ஒடுக்குவன்; ஒடுக்கிய காலத்து எல்லாப் பருப்பொருள்களும் வெந்து நீறாய் நுண்பொருளாய் ஒடுங்கும்; அவ்வொடுக்க வுருவகமே திருநீற்று உருவகமாகும்; அத்)திருநீற்றை அணிபவனாகவும், அறிவுடையாளமாகிய நெற்றிக் கண்ணை உடையவனாகவும், விண்ணுள்ளோர் தலைவனாகவும் விளங்குகின்ற விழுத்தவ முழுமுதலே! ஒப்பில்லாத ஒரு தனிச் செம்பொருளே! உன்னை ஓலமிட்டு உரக்கக்கூவி உலகெலாம் தேடியும் காணேன். திருந்திய பெருந்துறையில் பொருந்திய குருந்தமர நீழலில் ஆசிரிய அருட்கோலத்துடன் விளங்கிய அழிவில் செல்வமே! நின்னால் ஆட்கொள்ளப்பட்டு மீளா அடிமையாம் அடியேன் பெருவிருப்புடன் அழைத்தால் அஞ்சலென்று அருள்செய்யவேண்டுவது நின் அருட்கடைமையன்றோ?

நிருத்தன் - கூத்தியற்றுபவன். கூத்து, ஓரிடத்துப் பலர் ஒருங்குகூடி காண்டற்கரிய கனிவுறு காட்சிகண்டு கண்ணும் மனமும் ஒண்மை அறிவும் ஒருங்கிணைந்து நண்ணரிய இன்பமுற்று வாழ்வதற்கு என்றும் இடம் தருவது. 'கூத்தாட்டவைக்குழாம்' என்னும் திருமறையும் காண்க. உலக மக்கள் செய்யுங் கூத்துக்குக் காலமும் இடமும் வரையறையுண்டு. ஆண்டவன் செய்யும் அருட்கூத்துக்கு அவையின்று.

ஆண்டவன் அருளம்மைகாணத் திருச்சிற்றம்பலத்தின்கண் பல்லுயிரும் சொல்லரிய இன்பெய்த ஐம்பெருங் கூத்தியற்றுகின்றான். ஐம்பெருங் கூத்தென்பது படைப்பு, காப்பு, துடைப்பு, மறைப்பு, அடிச்சேர்ப்பு (அருளல்) என ஆகும்.

இவை முறையே நிலம், நீர், தீ, வளி, வான் என்னும் ஐம்பூதக் குறிப்பும் ஆகும். இவ்வைம் பெருந்தொழிலின் அடையாளங்களே தில்லைப் பெருங்கூத்தனார் திருமேனித் திருவுருவமாகும்.

கூத்தனார் திருவுருவை மனக்கண்ணின்முன் நிறுத்திக் காண்மின்; நீட்டிய வலக்கையில் உடுக்கும், இடக்கையில் தீயும், ஆர்ந்த வலக்கையில் அமையும், சார்ந்த இடக்கையில் சுட்டும், அழுத்திய வலத்தாளில் மறைப்பும், எழுப்பிய இடத்தாளில் அருளலும் குறிக்கப் பெறுகின்றன. படைத்தல், காத்தல், துடைத்தல் மூன்றும் பெரும்பாலும் உடலின்கண் நிகழ்த்துவிக்கும் ஒழுகலாறாகும். அக்குறிப்புத் தோன்றவே ஒழுகலாற்றை உணர்த்தும் கை என்னும் சொல்லுக்குரிய திருவுறுப்பில் அமைத்துக் காட்டியருளுகின்றனன். மறைத்தலும் அருளலும் உயிரின்கண் நிகழ்வன. உயிரை வழி நடத்துவதே உடையானின் திருவருள். வழி நடத்துவது என்னும் வாய்மை தெற்றெனப் புலனாகத் திருத்தாளின்கண் வைத்தருளுகின்றான். கைப்பெருக்கம்போல் கால்பெருக்கம் எத்திருவுருவிலும் காண்டலின்று, என்னை? வழி இரண்டேயாகலின். அவை, மருளியல் வழியும் அருளியல் வழியும் என்ப. மருளியல் வழியென்பது உலகியலாகும். அருளியல் வழியென்பது வீட்டியலாகும். இருவேறு வழிகளையும் உடங்கியைந்து இயக்குவது இருவேறு வடிவின் ஒருபேர் யாக்கை எம்மான் திருவருளேயாகும். அதனால் இவ்வருப்பெருந் தொழிலிரண்டையும் தம் திருவடியுறுப்பு இரண்டினும் விளக்கியருளினன். அம்மட்டோ மேற்குறித்த அழிவுபாடுடைய யாக்கையின்கண் நிகழும் முத்தொழிலையும் முக்குணவயப்பட்ட மூத்தேவர் வேட்கைதீர அத்தேவர்மாட்டு அருளால் ஆக்கி அமைகின்றனன். ஏனை இரு தொழில்களையும் எண்குணம் கைவரப்பெற்றுத் தன்னேர் நிலைக்களத்துள்ள வேட்கைசேர் உயிர்கள்மாட்டு விடுத்தருள்கின்றனன்.

வீடுபேற்றின் கண்ணும் உயிர்களுக்கு 'உண்டியும் வினையும்' உண்டென்பதை உணர்த்தவே திருவடியும் திருக்கையும் ஆகிய இரண்டு திருவுறுப்புக்கள் ஒருங்கமைத்துக் காட்டியருளுகின்றனன். திருவடியே பேரின்பமாகிய உண்டி; திருக்கையே அப்பேரின்பத்தை நுகர்விப்பதாகிய திருவினை. இவ்வுண்மைகளை நினைவிலிருத்திக்கொள்ளச் செழும்பொருள் நூல் பதினான்கனுள் ஒன்றாகிய உண்மை விளக்கத்தின்கண்:

> "தோற்றந் துடியதனிற் றோயும் திதியமைப்பிற்
> சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமா
> ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
> நான்ற மலர்ப்பதத்தே நாடு." —உண்மை விளக்கம், ௩௫.

என்னும் திருப்பாட்டு நன்கு தெளிபுரியும்.

நிமலன் - மலமில்லாதவன். கடவுள் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன். உயிர்கள் இயல்பாகவே பாசங்களோடு தூங்கியவை. இதற்கு எடுத்துக்காட்டாக 'நெல்லிற்குமியும் நிகழ்செம்பினிற் களிம்பும்' சொல்லுவர். அம்மலம் ஆண்டவனைப் பற்றாமைக்கு எடுத்துக்காட்டாகக் கடல்வெளியைச் சொல்லுவர் கற்றறிந்தோர். கடல்வெளி என்பது கடலுக்கு இடங் கொடுத்துக்கொண்டிருக்கும் வெளியை. வெளி யென்பது ஆகாயம். கடல் என்பது நீரும் நிலமும். இவ்வுண்மை:

> "மெய்ஞ்ஞானந் தன்னில் வினையா தசத்தாதல்
> அஞ்ஞான முள்ள மணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
> தானே யுளவன்றே தண்கடனீ ருப்புப்போற்
> றானே யுளமுளவாய்த் தான்."
>
> —சிவஞானபோதம், எ: ௫. - ௬.

என்னும் திருப்பாட்டானுணரலாம்.

நீற்றனே - என்பது திருவெண்ணீ றணிந்த திருமேனியை உடைய சிவபெருமா னென்பதாகும். பருப்பொருளெல்லாம் தீயால் நீற்றப்பட்டுப் பண்டையவுருவும் நிறமும் மணமும் பிறவும் மாற்றப்பட்டு எல்லாம் ஒருருவாய் ஒருநிறமாய்க் காணப்படுவது திருவெண்ணீறு ஒன்றில் மட்டும்தான். எனவே, அஃதொன்றே நிலையாமை உணர்வை எழுப்பி அதன் வழியாக உண்மை உணர்த்தும் வண்மையுடையதாகும். இதுவே தொன்மைத் தமிழகச் செந்நெறித் திருவடையாளமாக என்றும் நின்று நிலவிவருகின்றது.

வினைமாசுடன் கூடிய வாலாமாயை (அசுத்தமாயை) திருவருள் ஞானத்தீயால் நெறப்பட்டுத் தூமாயைவண்ணமாம் நிலையே திருவெண்ணீற்றின் உருவகமாகும். நிலையாமை உணர்ச்சி கைவந்தாரே மெய்யுணர்வுநெறியிற் சென்று சிறப்பென்னும் செம்பொருளை மணந்து பிறப்பென்னும் பேதைமை நீங்கப்பெற்று என்றும் ஒரு தன்மையராய்ப் பேரின்பம் உற்றுப் பெருவாழ்வு பெறுவர். இவ்வுண்மைகள்:

> "நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
> புல்லறி வாண்மை கடை."
> —திருக்குறள்: ௩௩௧.
>
> "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
> மருளானாம் மாணாப் பிறப்பு."
> —திருக்குறள்: ௩௫௧.
>
> "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
> செம்பொருள் காண்ப தறிவு."
> —திருக்குறள்: ௩௫௮.

என்னும் தெய்வப் பொதுமறைத் திருப்பாட்டுக்களால் தெளியலாம். மேலும்,

"பூச இனியதும் நீறு புண்ணிய மாவதும் நீறு
பேச இனியதும் நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பதும் நீறு அந்தம தாவதும் நீறு
தேசம் புகழ்வதும் நீறு திருஆலவா யான்திரு நீறே."
—ஆளுடையபிள்ளையார் தேவாரம்: ௫.

என்னும் திருநெறித்தமிழாம் சிறப்புத் திருமறைத் திருப்பாட்டானும் உணரலாம்.

நெற்றிக்கண்ணனே - என்பது அறிவுடையாளமாம் நெற்றிக்கண் உடைய பற்றற்ற பழம்பொருளே என்பதாகும். "நுதலது இமையா நாட்டம்" என்னும் சான்றோர் திருமொழியும் வலியுறுத்தும். 'பிறவாயாக்கைப் பெரியோனு'கிய சிவபெருமானுக்கு 'முக்கட் செல்வர்' என்னும் முதுமறையும் உண்டு. மூன்று கண்ணென்னும் உருவகம் ஆற்றல், அறிவு, அன்பு என்னும் முப்பண்புகளையும் குறிப்பதாகும். ஆற்றல் காப்பினையும், அறிவு துடைப்பினையும், அன்பு படைப்பினையும் குறிப்பனவாகும். துடைப்பென்பது பற்றறுதியேயாகும். பற்றே காமமென்ப. இவ்வுண்மையே நெற்றிக்கண்ணால் காமன் காயப்பட்டான் என்னும் உருவகம் உணர்த்துவதாகும்.

ஒருத்தனே - என்பது ஒப்பில்லாத ஒரு முழுமுதலே என்பதாகும். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், நன்றே நினைமின்" என்பதே செந்தமிழ்ப் பெரியோர் முந்துறக்கண்ட முழுவுண்மையாகும். கடவுள் ஒன்றேயாயினும் ஆற்றல், அறிவு, அன்பென்னும் மூவா முப்பண்புகள் பேசப்படுகின்றமையால் திருக்கோவில்களில் திருவுருவங்கள் பலவாக அமைக்கப்படுவவாயின. ஆற்றலே அம்மையாகும்; அறிவே அப்பனாகும்; அன்பே பிள்ளையாகும். இவ்வுண்மை தெரிப்பான் எல்லாத் திருக்கோவில்களிலும் அம்மையப்பபிள்ளை (சோமாஸ்கந்தர்) திருவுருவமே திருவிழாவின்போது திருவுலாக்காட்சி யளிப்பதாகும்.

அறிவு ஆற்றலை மணக்கும்; ஆற்றல் அறிவினை நோக்கும்; அறிவு ஆற்றலை மலர்விக்கும். இவ்வுண்மை புலப்படவே திருக்கோவில்களில் ஆண்பால் திருவுருவங்களைப் பெண்பால் திருவுருவங்கள் நோக்கி நிற்றலும், ஆண்பால் திருவுருவங்கள் பெண்பால் திருவுருவங்களை நோக்கிமுற்றலும் ஆக முன்னோர்கள் அமைத்துள்ளனர். அறிவும் ஆற்றலும் செறிந்தநிலையே அன்பாகும். அன்பு சென்றவிடத்தே அறிவும் ஆற்றலும் சென்று தொழிற்படும். அன்பு என்றும் ஒருபடித்தாகவிருக்கும். 'அறிவும் ஆற்றலும் ஒன்றனுள் ஒன்றடங்கி அகம் புறமாய் ஏறியும்

இறங்கியும் இருக்கும். அன்பு செல்லுமிடம் உயிர்களின்பாலாகும். உயிர்கள் பலவாதல் நோக்கிப் பிள்ளைகளையும் பலவாக வுருவகஞ் செய்தனர். அவ்வுண்மை மூத்த பிள்ளையார் இளைய பிள்ளையார் என்னும் இருவேறு நிலையின் திருவுருவால் உணரலாம்.

ஆற்றலின்வழி, அறிவு செல்லுதல் அன்பு நெறியாகும்; இதுவே இல்லறம். அறிவின் வழி, ஆற்றல் செல்வது அருள் நெறியாகும்; இதுவே துறவறம். இல்லறத்தாரைத் துறவறத்தில் புகுத்துவதும், துறவறத்தாரைத் திருவடியிற் புகுத்துவதும் சிவபெருமானின் திருவருட் செயலாகும். இவ்வுண்மை தேற்றவே அன்புநிலையாம் இளைய பிள்ளையார் (திருமுருகன்) ஐம்புல வேடருட்பட்ட வள்ளிநாச்சியாரையும், ஐம்புலச் சூழலகன்று செம்புலச் செல்வியாய்த் திகழும் தெய்வநாச்சியாரையும் திருமணஞ்செய்து திகழும் சிறப்பினைச் சித்திரிப்பாராயினர். இவ்வுண்மை யுணராப் பொருவில் மாக்கள் இருமனைவியர் கொண்டனன் எம்மானென இசைப்பர். அஃது, உயர்ந்த உலகவழக்கொடும் நூல்வழக்கொடும் மாறுபட்டார் கூற்றேயாம் என்க.

ஏனைய திருப்பாட்டுக்களையும் இவ்வாறு உய்த்துணர்ந்து கொள்க. இதுகாறும் கூறியவாற்றால் கடவுள் ஒருவனே எனவும், உயிர்கள் பல எனவும், கடவுள் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியிருந்தானெனவும், உயிர்கள் இயல்பாகவே பாசங்களோடு தூங்கியிருந்தன வெனவும், பாசங்களினின்றும் விடுவிக்கக் கடவுள் உயிர்களுக்கு உலகுடல் உண்பொருள்களை உள்ளதாகிய மாயையினின்றும் படைத்துக் கொடுத்தனன் எனவும், உடலுடன் பொருந்திய வுயிர்கள், யான் எனது என முனைத்து இருவினையும் செய்து இன்பதுன்பங்களை நுகரும் எனவும், அது மெய்யுணர்வு கைவந்தபொழுது அகலும் எனவும், பின் அருள் முனைப்பால் ஆண்டாற் கடிமைபூண்டு இறைபணியியற்றி நிறைவாழ்வு எய்துமெனவும் விளக்கியதாகும்.

பாடிப் பலநாள் பயின்றதற்பின் மூவரடி
நாடினரே நம்மடிகள் நாயனருள்—கூடியதும்
வீடே விழைந்துள்ளார் வேண்ட இருந்தவவர்
ஏடே முழுக்கனிவாம் இங்கு.

ஒன்றால் உயிர்கள் உலகம் உணர்ந்தியங்கும்
நன்றாக ஈரிடத்தும் நாமடிமை—பொன்றாவே
தோன்றுமொடுங் கும்மாயை சொல்லைந்தால் வீடுண்டாம்
தோன்றுமிடம் மூன்றிற் றொழு.

## "ஓடங்கள் ஆற்றில் ஓடுகின் றனவே!"*

[வித்துவான், கோ. வே. பெருமாள், கோபால சமுத்திரம்]

ஓடங்க ளாற்றில் ஓடுகின் றனவே !
நாவாய்கள் கடலில் மேவுகின் றனவே !!
ஆயினும் இவற்றின் அழகாய் இயங்கும்,
மேகங்கள் வானில் ஏகுகின் றனவே !!!
பாலங்கள் ஆற்றில் கோலங்கொள் காட்சி, ௫
மாவின்பம் யாவினும் மேலாம் மாட்சி !
ஆயினும், இவற்றின் அழகாய்—வானில்
மரங்களின் மேலாய்ப் பிறங்கிடும் பாலம்
மண்ணி லிருந்து விண்ணி லேறும்
பண்ணிய வழியாம் கண்ணெழில் வானவில் !! ௰
வயங்கித் தோன்றி மகிழ்ச்சியூட் டுவதே !!!
எனவே,
செயற்பொருள் யாவினும், இயற்கை எழில்கள்
கவர்ச்சிப் பொருளாய்க் காணுகின் றனவே !

## "அன்புச் செயல்கள்"†

இனிய நிலப்பரப்பும், எல்லையிலாப் பெருங்கடலும்,
சிறிய மணன்மணியால், நீர்த்துளியா லானதன்றோ ?
என்றுமே அழியாத எல்லையிலாப் பேர்யுகங்கள்,
சின்னஞ் சிறுநேர மாத்திரையா லானதன்றோ ?
இவைபோன்றே,
அன்புச் சிலமொழிகள், அருளார்ந்த சிறுசெயல்கள்,
இன்பத் திருவுலகை எழில்பூக்க வாக்காதோ ?

---

* திரு. 'கிருசிடின உரோசட்டி'—என்னும் ஆங்கிலப் பெண் கவிஞரின், 'Boats sail on the rivers'—என்னும் ஆங்கிலச் செய்யுளின் மொழி பெயர்ப்பு.

† இது, திரு. 'ஈசாக் வாட்சு' என்னும் ஆங்கிலக் கவிஞரின் 'Kind deeds'—மொழிபெயர்ப்பு.

# செய்திகளும் குறிப்புக்களும்

### மறைமலையடிகளார் திருநாள்

கோவை அருட்கலைக் கழகச் சார்பில் 15—7—'51. ஞாயிற்றுக்கிழமை மாலை 'யூனியன் உயர்நிலைப்பள்ளிக் கலைமண்டபத்தில்,' அடிகளார் விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. அறநிலைய உதவி ஆணையாளர், உயர் திருவாளர், ம. ரா. சண்முகசுந்தரம், பி. ஏ., பி. எல். அவர்கள் தலைமை பூண்டுள்ளார்கள். 'அடிகளாரின் படைத்திறப்பு,' உயர்திரு. ஆசிரியர், ச. அய்யாசாமிப் பிள்ளையவர்கள், 'அடிகளின் அருங்குணங்கள்,' கோவை கூட்டுப் பதிவாளர் உயர்திரு. I. G. இராமநாதன் அவர்கள், 'அடிகளார் மாட்சி,' உயர்திரு. J. S. கண்ணப்பர் அவர்கள், 'அடிகளாரும் தமிழும்' என்பனபற்றி, கோவை அரசியலார் கல்லூரி உயர்திரு. புலவர் ப. சுப்பிர மணியம் அவர்கள் ஆகிய செந்தமிழ்ச் சான்றோர்களாலும் செவ்வனே விரிவுரை நிகழ்த்தப்பெற்றன.

### திருமுறைப் பெருவிழா

திருநெறியின் உயிராய்ச் செந்தமிழின் உளமாய்த் திகழும் திருமுறைகள் பன்னிரண்டு. அம்முறைகளை நாளும் போற்றி ஓதியுய்ய வேண்டுவது செந்நெறிச் செல்வாரின் சீரியகடன். அம்முறையைப் பெருமக்கள் உளங்கொள இத்தகைய திருவிழாக்கள் எங்கும் என்றும் நிகழ்வன. 6, 7, 8-7-'51-மூன்று நாட்களும் இவ்விழா திருக்கழுக்குன்றத்தில் சிறப்புற நிகழ்ந்தது. இரண்டு நாட்களும் விழாவில் கலந்துகொண்ட ஆயிரக் கணக்கான மெய்யன்பர்களுக்கு வண்ணை வள்ளியம்மையாரவர்கள் திருவமுதளித்து நல்விருந்து பேணினர்.

விழாநிகழ்ச்சி :—மூன்று நாளும் முறையே திருப்புகழ்மணி T. M. கிருட்டிணசாமி ஐயரவர்கள், திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள், திரு. ஜே. எம். நல்லசாமிப் பிள்ளையவர்கள் தலைமை தாங்கினார்கள். தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள், வித்துவான். திரு. கி. வா. ஜகந்நாத ஐயரவர்கள், திருமுருக, கிருபானந்தவாரியாரவர்கள், புலவர், திரு. முருகவேளவர்கள், தேனூர் வரகவி, சொக்கலிங்கம் பிள்ளையவர்கள், இராசகோபால் பிள்ளையவர்கள், கயப்பாக்கம், திரு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் ஆகிய அறிவுடைச் சான்றோரும் பிறரும் விரிவுரையாற்றினார்கள்.

முதல்நாள் அம்மை திருக்கோலக் காட்சி, இரண்டாம் நாள் திருமுறை ஓதித் திருப்படிவிழா, மூன்றாம் நாள் திருநெறித் தலைவர் நால்வர் திருவுருவங்களோடு திருமுறைகளையும் யானைமேல் அணிபெற ஏற்றுவித்து, ஆயிரக் கணக்கான மெய்யன்பர்களும் தாய்மார்களும் நீற்றுப் பொலிவும் வேற்றுரைவிரவாத் திருமுறை முழக்கமும் போற்றிப் புடைசூழ்ந்து வர, மலை வலம்வரும் உலாக்காட்சிகள் செவ்வனே நிகழ்ந்தன.

பல ஊர்களினின்றும் வந்துள்ள திருமுறைக்கழகத் திருக்குழுவினரின் திருமுறை ஓதுதலும், புதுவை திரு. விநாயகமுதலியாரவர்கள், திரு. C. சங்கரலிங்கம் பிள்ளையவர்கள் நிகழ்த்திய இசையரங்குகளும் பாராட்டத் தக்க முறையில் நிகழ்ந்தன.

திருக்கோவி லெல்லாம் திருமுறைகள் ஓத
வருநாளே நன்னாளாம் வாழ்த்து.

## அமெரிக்கக் கல்வி நன்கொடை

அமெரிக்க அரசியலார் தம் நாட்டுக் கல்வியை அளவிறப்ப வளர்த்துவருவதில் தலைசிறந்துள்ளார். வெளிநாட்டவர்கட்கும் தங்கள் அரும்பெருங்கல்வியை நன்கொடையாக வழங்குகின்றனர். 1951-52-க்கு நம் இந்தியாவுக்கு நாற்பது மாணவர்கட்கு நன்கொடைப் படிப்புக்கு ஏற்பாடு செய்துள்ளார்கள். அதில், நம் சென்னை மாகாணத்துக்கு வரையறுக்கப்பட்டவர் நால்வர். அவர்களின் பெயர்கள் வருமாறு :

க. திரு. கே. இராமச்சந்திரன், சென்னை பிரசிடென்சிக் கல்லூரி அரசியல்நூற் பேராசிரியர்.

உ. திரு. எம். என். வெங்கடரமணி, இந்து பத்திரிகை நிருபர்.

ங. திரு. கே. என். நாராயணன், அரசியல் தொழில்துறை முதன்மையர்.

ச. திரு. ஆர். கோபாலகிருட்டிணன், மைசூர் உயர்மன்ற வழக்கறிஞர்.

இவர்கள் அமெரிக்கப் பல்கலைக்கழகத்து ஓராண்டு மேற்படிப்புப் படிக்க முழு ஊதிய நன்கொடை பெற்றுள்ளனர்.

## எழுபத்தொன்பான் ஆண்டுப் பிறப்புநாள் பாராட்டு

சித்தாந்தப் பேராசிரியர் உயர்திரு. ந. சிவநாத பிள்ளையவர்களின் எழுபத்தொன்பான் ஆண்டுப் பிறப்புநாள் வள்ளுவர் யாண்டு ௧௯௮௨ ஆடித் திங்கள், ௨0-ஆம் நாள் (5 8-51) துவங்குகின்றது; அதுவும் அவர்கள் பன்னெடுங்காலம் பல நன்மாணவர்கட்குப் பலமுறை பாடம் போதித்துவருவதில் அண்மையில் தொடங்கிய "நெஞ்சுவிடு தூது" என்னும் சித்தாந்தப் பொருள்நூல் நிறைவுறும் நாளும் ஒத்துவருகின்றது. இவ்விரண்டையும் கொண்டாடும்பொருட்டுத் தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபையின் சார்பில் ஒரு பேரவை 5-8-51 மாலை கூட்டப்பெறுகின்றது. அப்பேரவைக்குச் சாத்தூர் வழக்கறிஞர் 'சித்தாந்த சிரோன்மணி' திரு. T. S. கந்தசாமி முதலியாரவர்கள் தலைமை பூண்பார்கள்.

பல மெய்யன்பர்களின் பாராட்டும் வாழ்த்தும் பராவுதலும் நிகழும்; யாமும் அவர்கள் நெடுநாள் குறைவின்றி நிறையகவை எய்தி, சைவசித்தாந்தச் செஞ்ஞாயிறெனத் திகழ்ந்து, அச் செம்பொருட்டுணிவை வையமெலாம் பரப்பி உய்யச்செய்துவாழ அருள்புரியுமாறு அம்மையப்பர் திருவடியைச் செம்மை மனத்தால் தொழுவோமாக.

## பிறர்க்கென வாழும் பெருந்தகையார்

பாரசீக முதலமைச்சர் திரு. டாக்டர் முஸாதீக் அவர்கள் உடல்நலம் இல்லாமல் படுக்கையிலிருந்தும் நாட்டு நலங்கருதி எல்லா அலுவல்களையும் நன்கு உன்னித்து வருகின்றனர். நெருக்கடியான நிலையில் தம்மாலான தொண்டை அரும்பாடுபட்டேனும் செய்வது கடமையும் உரிமையும் எனக் கருதுகின்றனர். மேலும் அவர்தம் சால்பு, சம்பள உம்பளங்கள்பெறுத் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். அம்மட்டோ, அரசியலார் அளித்துள்ள பொறியூர்தியையும் பயன் படுத்திக்கொள்வதில்லை. தம்முடைய பொறியூர்தியில் தம் செலவிலேயே போக்குவரவு புரிகின்றனர். இவர் உலகினுக்கோர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றனர்.

**சென்னை யானை**

மத்திய அரசியலார் வேண்டுகோளின்படி சென்னை அரசியலார் சப்பான் பொருட்காட்சிச்சாலையில் வைப்பதற்கு அனுப்பும்பொருட்டு ஓர் ஆண் யானையைத் தெரிந்தெடுத்துள்ளார்கள். அதன் அகவை பதினைந்து. அது வாழ்ந்த இடம் நீலகிரி முதுமலைக் காடு.

**எழுத்துச் சீர்திருத்தம்**

தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் அரசியலாரால் ஒப்புக்கொள்ளப்பட்டுக் கையாளுமாறு கட்டளையிடப் பெற்றுளதாம். எதிர்காலம் புதுவிதியில் அச்சாகும் புத்தகங்கள்தான் பள்ளிக்கூடங்களில் வைக்கப்படுமாம். ஸ்ரீ. டி. எஸ். சொக்கலிங்கம் அமைப்பாளர் (Convenor). முதன்மைக் குறிப்பு :

க. உயிர் எழுத்துக்கள் அப்படியே இருக்குமாம். ஐ மட்டும் இ என்ற வடிவில் எழுதிச் சுழித்து எழுதப்படுமாம்.

உ. உயிர்மெய் யெழுத்துக்களில் உகரம் ஊகாரம் தவிர மற்றக் குறில் நெடில்களுக்கு ஒரேவிதமான எழுத்தமைப்புப் பொதுவாகப் பின்பற்றப்படுமாம். அந்த உயிர்க்குறியானது மெய்யெழுத்துடன் இணைக்கப்படாமல் தனியாக அதை எடுத்து எழுதப்படுமாம். இதனால் பாதிக்கப்படுபவை இ, ஈ என்ற உயிர் சேர்ந்த மெய் எழுத்துக்களும் லை, ளை, னை, ணை, ணா, னா ஆகியவைகளுமாகுமாம். இவை லை, ளை, னை, ணை, ணா, னா என்று எழுதப்படுமாம். சீர்திருத்தப்பட்ட முறைப்படி 91 (தொண்ணூற்றொன்று) தமிழ் எழுத்துக்களிருக்குமாம்.

**வ. உ. சி. கல்லூரி நன்கொடை**

வ. உ. சி. கல்லூரி நன்கொடை, பெருமக்களிடமிருந்து வந்ததொகை ரூ. 1,10,000 திருவாவடுதுறை 25,000; ஸ்ரீ. ராமச்சந்திரன் 10,000; டாக்டர். அழகப்ப செட்டியார் 5,000; பெயர் வெளியிட விரும்பாத நண்பர் 10,000; விந்தியா 25,000. அரசியலார் 60 ஏக்கர் நிலம், நன்கொடையாக உதவியுள்ளனர். அதில், 2½ லட்சம் செலவில கட்டடம் திறவப்பெற்றுள்ளது.

**பிரிவு**

அம்பாலா—நாயக் கரய்சிங் தாயார் தன் மகன் செர்மன்போகச்சென்று காணமற்போய்விட்ட செய்திக்குப்பின் மகனிடமிருந்து எகிப்து மனைவியுடன் வருவதாக வந்த கடிதம் கண்டு அளவிலா மகிழ்ச்சி கொண்டதால் மூச்சு நின்றுவிட்டது, இறந்தாள்.

**மலேயாவில் இந்தியமொழி**

மலேயா—இந்தியமொழித் தொடக்கப் பள்ளிக்கூடம் சற்றேறத்தாழ தொள்ளாயிரம் இருக்கின்றன. தொடக்கப் பள்ளியில் தாய்மொழிக் கல்வியே சிறந்ததென்பது அடிப்படை உண்மை. அதை இப்பொழுது அரசு மறுப்பது தவறு என்று பல கழகங்கள் வற்புறுத்துகின்றன.

**மாஸ்கோ ரேடியோ கூறுவது**

மாஸ்கோ ரேடியோ கூறுவது ஓர் இரசிய இளைய விஞ்ஞானி, நாயின் இருதயத்தை எடுத்துவிட்டு மாற்றிருதயம் வைத்துத் தைக்க அது பிழைத்து இரண்டாம் நாளே நடக்கத் துவங்கியது. வெற்றியடைந்தவர் டெமிக்கோலாவர்.

# மதிப்புரை

**பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி 1.**

[ஆக்கியோர் : அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறை விரிவுரையாளர் திரு. T. V. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள். கிடைக்குமிடம் : அண்ணாமலைப் பல்கலைக் கழகம்; அண்ணாமலை நகர் : விலை. ரூ. 5 8 0]

இந்நூல் ஆராய்ச்சியாளர்கட்கும், கல்லூரி மாணவர்கட்கும், ஆசிரியன்மார்கட்கும் பெரிதும் பயன் பெறக்கூடிய பெருநூலாகும். இதன்கண், கி பி. 846 முதல் கி. பி. 1070 வரை முடியுடை வேந்தராய் மூன்நாடும், வடநாடும், பிறநாடும், கடல்கடந்த ஈழம், கடாரம் முதலிய பன்னாடும் பன்முறை போர்செய்து தோலா மேலோராய் வென்று பெரும் புகழுடன், ஆண்மையும், ஆற்றலும், அறமுறையும், நெறிப்பொறை நீர்மையும், பணிந்த பகைமன்னர்க்கு வேண்டுவன நல்கி வாழ்விக்கும் நேர்மையும், மக்களைத் தன்னுயிர் எனக் கருதி இமையிற்காக்கும் பண்பமை மாண்பும் ஒருங்கமைந்த சோழர் மரபின் பதின்மூன்று தலைமுறையினர் வரலாறு தரப் பெற்றுள்ளது.

இதன் ஆசிரியர் அரும்பெரும் முயற்சியும் ஆர்வமுங்கொண்டு கல்வெட்டுக்கள், மெய்க்கீர்த்திகள், சங்கச் சான்றோர், பிற்காலச் சான்றோர் தம்பொய்யா நாவால் மெய்யாகக் கூறியருளிய விழுத்தகு நூல்கள், மேற்புல அறிஞர்களின் மெய்யுரைகள் அனைத்தையும் ஆய்ந்து தம் நுண்மாண் நுழை புலத்தாற் கண்ட உண்மைகளை நடுநிலை திறம்பாமல் நாட்டியுள்ளார்கள்.

பிற் சேர்க்கையாக, மெய்க்கீர்த்திகள், சரித்திரங்கள், பழைய பாடல்கள், மரபு அட்டவணை, பொருட்குறிப்பு அகராதி முதலியவும் சேர்க்கப் பெற்றுள்ளன. இடையிடையே சிறந்த சிற்ப அமைதிவாய்ந்த ஓவியங்கள், அவ்வவ் வேந்தர்கால ஆட்சி நிலப்பரப்புப்படம் முதலியவும் நூலை அணி செய்கின்றன. எளிய இனிய நடையும், செந்தமிழ்ச் சீர்மையும் கற்பார் கருத்தையீர்க்கும் கட்டுரைவன்மையும் காணக்கிடக்கின்றன. பெருமக்கள் மொழிவளமும் நாட்டுப் பற்றும், நல்லாண்மையும் பெறுதற் பொருட்டு இந்நூலை இன்றியமையாது கற்கவேண்டும்.

இந் நூலாசிரியரவர்கள் முதற்குலோத்துங்க சோழன் வரலாறு, பாண்டியர் வரலாறு முதலிய நூற்களையும் வெளியிட்டுள்ளார்கள். தமிழகம் இந்நூலையும் வாங்கிப் பயனெய்தி இவ்வாசிரியரவர்களை மேன்மேலும் ஒல்லும் வகை ஊக்குவார்களாக.

இல்லறவொழுக்கம் [ஆக்கியோர்: யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள். விலை: அணா நான்கு. கிடைக்குமிடம்: சுத்தானந்த நிலையம், புதுக்கோட்டை.]

இது, முந்நூற்றறுபத்தைந்தடிகள் கொண்ட அகவற்பாவால் யாக்கப் பெற்றது. குடும்பவாழ்வுக்கும், நாட்டு நலனுக்கும், நல்லுயிர் வீட்டுக்கும் வழி காட்டியாக அமைந்துள்ளது. அழகிய பதிப்பு. அனைவர்க்கும் இன்றியமையாத தொன்று.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.